MADRAS UNIVERSITY TAMIL DEPARTMENT

PUBLICATION No. 18 - 6.

*General Editor* :

R. P. SETHU PILLAI, B.A., B.L.,
*Professor of Tamil*
UNIVERSITY OF MADRAS.

# TIRUVĀYMOḶI

## IṬṬIṈ TAMIḶAKKAM

### VOLUME - VI (Hymns 553 - 662

Sri:

Srīmatē Rāmānujāya namaha

# Bagavat Vishayam

# TIRUVĀYMOḺI

## ĪṬṬIṈ TAMIḺĀKKAM

VOLUME - VI (Hymns 553 - 662)

by

VIDWAN

B. R. PURUSHOTHAMA NAIDU

*Junior Lecturer in Tamil*

UNIVERSITY OF MADRAS.




UNIVERSITY OF MADRAS

1955.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பகவத் விஷயம்

# திருவாய்மொழி

## பகுதி - 6. (ஆறும் பத்து)

ஈட்டின் தமிழாக்கம்

சென்னை

சருவகலாசாலைத் தமிழ் ஜூனியர் லெக்சரர்

வித்வான்

பு. ரா. புருஷோத்தம நாயடு

ஆக்கியது.




சென்னைச் சருவகலாசாலை

1955

ஸ்ரீ:

மாறன் மலரடி வாழ்க.

# இப்புத்தகத்தில் அடங்கியவை

—:o:—

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

# முகவுரை

உரிக்கின்ற கோடலின் உந்துகந் தம்மென ஒன்றுமின்றி
விரிக்குந் தொறும்வெறும் பாழாய் விடும்பிறர் புன்கவிமெய்
தெரிக்கின்ற கோச்சட கோபன்தன் தெய்வக் கவிபுவியில்
சுரிக்கின்ற நுண்மணல் ஊற்றொக்கும் தோண்டச் சுரத்தலினே.

(கம்பநாடர்.)

திருமகள்கேள்வனான சர்வேசுவரனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வாருடைய அருளிச்செயலாகிய திருவாய் மொழியின் ஆறும்பத்திற்கு 'ஈட்டின் தமிழாக்கம்' என்னும் பெயரிய உரை எம் குலக்கொழுந்தாகிய ஆழ்வாருடைய திரு வருளால் வெளிவருகின்றது. முன் வெளிவந்த ஐந்து பத்துக் களையும் ஏற்ற தமிழ் உலகம் இதனையும் ஏற்று அடியேற்கு ஊக்கம் அளிக்கும் என்பது அடியேன் எண்ணம்.

இவ்வுரையை எழுதி வந்த காலத்தும் பதிப்பித்த காலத் தும் வேண்டிய உதவிகளைச் செய்த பெரியார்கட்கும் நண்பர் கட்கும் நன்றி செலுத்துகிறேன்.

இவ்வுரையை, சென்னைப் பல்கலைக் கழகத்தார் அச்சிடு தற்குக் காரணராயிருந்த சொல்லின்செல்வர் தமிழ்ப்பேரா சிரியர் உயர்திரு. ரா. பி. சேதுப் பிள்ளை, B.A., B.L., அவர்கட் கும், தொடர்ச்சியாக வெளியிட்டு உதவிவரும் சென்னைப் பல் கலைக் கழக அதிகாரிகட்கும் நன்றி செலுத்துங் கடப்பாடுடை யேன்.

குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்,

சென்னை, 22-9-1955.

பு. ரா. புருஷோத்தம நாயுடு.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
மாறன் மலரடி வாழ்க.

—(0)—

# திருவாய்மொழி

## ஆறும் பத்து

### முதல் திருவாய்மொழி—" வைகல் "

### முன்னுரை

ஈடு:—முதற்பத்தால், பகவத் கைங்கர்யம் புருஷார்த்தம் என்று அறுதியிட்டார்; இரண்டாம்பத்தால், அந்தக் கைங்கர்யத்தில் களையறுத்தார்; மூன்றாம்பத்தால், களையறுக்கப்பட்ட அந்தக் கைங்கர்யமானது பாகவதசேஷத்வ பர்யந்தமான பகவத் கைங்கர்யம் என்றார்; நான்காம்பத்தால், இப்படிப்பட்ட கைங்கர்யத்திற்கு விரோதிகள் ஐசுவர்ய கைவல்யங்கள் என்றார்; ஐந்தாம்பத்தால், அந்த விரோதிகளைப் போக்குவானும் அவனே என்றார்; விரோதிகளை அழிக்கும் இயல்பினனை சர்வேசுவரன் திருவடிகளிலே சரணம்புகுகிறார் இந்த ஆறும் பத்தால்.

[1]மேல் "நோற்றநோன்பு" என்ற திருவாய்மொழி தொடங்கி நான்குமுறை சரணம்புக்க இடத்திலும் தம் அபேக்ஷிதம் பெற்றிலர். பலத்தோடு சம்பந்திப்பிக்கிறதாய் விரைவில் பலத்தைக் கொடுக்கக்கூடியதான உபாயத்தைப் பற்றியிருக்கச் செய்தேயும் அபேக்ஷிதம் கிட்டாது ஒழிவான் என்? என்னில்,

---

1. மேல் திருவாய்மொழிகளிற் கூறிய பொருள்களோடு இத்திருவாய்மொழியிற் கூறும் பொருளினைத் தொடர்பு படுத்திக் காட்டுகிறார் 'மேல் "நோற்ற நோன்பு"' என்று தொடங்கி.

'நான்குமுறை' என்றது, "நோற்றநோன்பு", "ஆராவமுதே", "மானேய்நோக்கு", "பிறந்தவாறும்" என்ற நான்கு திருவாய்மொழிகளிலும் சரணம் புக்கதைக் குறித்தபடி. 'உபாயம்' என்றது, பிரபத்தி உபாயத்தினை.

ஆழ்வாருடைய ஹிதத்தைப்போன்று உலகத்தினுடைய ஹிதத்துக்கும் கடவனுகையாலே [1]ஈசுவரபுத்தியாலே தலைக் கட்டிற்று இல்லை.

[2]உகந்தருளின நிலங்கள்தோறும் புக்குத் தட்டித் திரிந்தார், அங்குத் தாம் நினைத்தபடி பரிமாறப் பெற்றிலர், நினைத்த படி பரிமாறக்கூடிய அவதாரத்து ஏறப்போனர், அது சென்ற காலமாகையாலே கிட்டப்பெற்றிலர்; அதுதானே தளர்த்திக்குக் காரணமாயிற்று. [3]இனி, எப்பொழுதும் அண்மையிலிருப்பதாய், மூகப்பழக்கத்தாலும் குறையற்று, சக்தி குறைவுமின்றிக்கே இருக்கிற இவ்விடமே அமையும் என்று மீண்டார்; [4]அந்த அநுசந்தானந்தான் கால்நடை தந்து போகாதபடி ஈடுபடுத்திற்று, கால்நடைதருவார் காலிலே விழுந்து தூதுவிடுகிறார். [5]தாம் மேலே அநுசந்தித்த அவதாரம் தூதுவர்க்குச் சென்று அறிவிக்க ஒண்ணாதபடியாயிருந்தது; 'இனி அறிவிக்கலாம்படி அண்மையில் நின்றருளுகில் திருவண்வண்டூரிலே அறிவிப்போம்' என்று அங்கே ஆள்விடுகிறார். [6]இவர்க்குப்

1. 'ஈசுவரபுத்தியாலே' என்றது, இவருடைய பிரபந்தத்தைக் கொண்டு உலகத்தினைத் திருத்தவேண்டும் என்கிற ஈசுவரனுடைய நினைவினை.

2. மேல், பிராசங்கிகமாக வினாவை எழுப்பிக்கொண்டு அதற்கு விடையும் அருளிச்செய்தார். இனி, 'மேல் நோற்ற நோன்பு' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரியா நின்றுகொண்டு இத்திருவாய்மொழிக்குச் சங்கதி அருளிச்செய்கிறார் 'உகந்தருளின' என்று தொடங்கி. 'தட்டித் திரிந்தார்' என்றது, 'இந்தச் சரீரத்தோடு இருக்கச்செய்தே, குளிர நோக்குதல் அணைத்தல் வினவுதல் செய்யவேண்டும்' என்று திருப்பதிகள் தோறும் தடுமாறித் திரிந்தார் என்றபடி.

3. அர்ச்சாவதாரத்திலே மீளுகைக்கு மூன்று காரணங்களை அருளிச் செய்கிறார் 'இனி, எப்பொழுதும்' என்று தொடங்கி.

4. ஆயின், தாம் போகாமல் தூதுவிடுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்த அநுசந்தானம்தான்' என்று தொடங்கி. 'அந்த அநுசந்தானம்' என்றது, 'எப்பொழுதும் அண்மையிலிருப்பதாய்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த திருவண்வண்டூரில் எம்பெருமானுடைய குணாநுசந்தானம்.

5. அவதாரத்தில் தூதுவிடாதே அர்ச்சாவதாரத்தில் தூதுவிடுவான் என்? என்ன, 'தாம் மேலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

6. நினைத்த பரிமாற்றம் கிடையாவிட்டால் தூதுவிடவேண்டுமோ? 'தலைவன் செய்தபோது கண்டிருக்கிறோம்' என்று ஆறி இருக்க ஒண்ணாதோ? என்ன, விடை அருளிச்செய்கிறார் 'இவர்க்கு' என்று தொடங்கி,

பிறந்தது ஞானத்தாலும் கர்மத்தாலும் உண்டான பக்தி அன்றே! ஒருவன் திருவருள் அடியாக வந்ததன்றே. [1]தம்தலையிலேயும் ஒன்று உண்டாய் 'அது நிரம்பிப் பெறவேணும்' என்று இருக்கிலன்றே விளம்பம் பொறுக்கலாவது, அங்ஙன் சொல்லலாவது ஒன்று இன்றிக்கே இருந்தது. இவர்தாம் பற்றின சாதனந்தான் காலதாமதத்தைச் சகிக்கக்கூடியதன்றே! [2]வேறு உபாயங்களைக் காட்டிலும் கால்வாசி ஏற்றம் உண்டே! இங்ஙனே அடிப்பட்ட உபாயத்தைப் பற்றினவர் ஆறியிருக்கமாட்டார் அன்றே. ஆகையாலே, ஆற்றாமை கரை புரண்டு ஆள் இட்டு அறிவிக்கிறார்.

[3]'சரணம் புக்கோமாகில் அத்தலையாலே பேறு ஆகுமளவும் ஆறியிருப்போம்' என்று தரித்திருக்கவல்ல தன்மையரன்றே. [4]பிரஹ்மாஸ்திரம் வாய்மடியச் செய்தேயும் இவர் தூதுவிடுகிற இது, ஞானகாரியமோ சாபலகாரியமோ தெரிகிறது இல்லை,

---

1. ஞானத்தாலும் கர்மத்தாலும் உண்டான பக்தியாலே ஆறியிருத்தற்கும், பகவானுடைய திருவருள் அடியாக உண்டானதாலே ஆறியிருக்க ஒண்ணாமைக்கும் காரணத்தை அருளிச்செய்கிறார் 'தம் தலையிலேயும்' என்று தொடங்கி.

2. மற்றைய உபாயங்களைக் காட்டிலும், பிரபத்தியானது விரைவில் பலன் கொடுக்கக்கூடியது என்னும் ஏற்றத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, இப்படிப்பட்ட உபாயத்தைப் பற்றியவராகையாலும் ஆறியிருக்கமாட்டார் என்கிறார் 'வேறு உபாயங்களைக் காட்டிலும்' என்று தொடங்கி. 'கால்வாசி' என்றதற்கு, "சரணௌ" என்றதிலே நோக்கு. 'ஆகையாலே' என்றது, பக்திக்குப் பரவசப்பட்டவராய், சித்தோபாயத்தைப் பற்றினவரும் ஆகையாலே என்றபடி.

3. தமது தன்மையாலும் ஆறியிருக்கமாட்டார் என்று, மூன்றாவதாக வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'சரணம் புக்கோமாகில்' என்று தொடங்கி.

4. நான்குமுறை பிரபத்திசெய்தும் பெறாதவர், தூதுவிடுகிறது என்? என்ன, 'பிரஹ்மாஸ்திரம்' என்று தொடங்கி விடை அருளிச்செய்கிறார். 'பிரஹ்மாஸ்திரம்' என்றது, பிரபத்தியை. 'ஞானகாரியமோ சாபலகாரியமோ தெரிகிறது இல்லை' என்றது, 'பிரபத்திசெய்தும் வாராதவன், தூதுவிட்டால் வாரான்' என்ற விவேகம் இன்றிக்கே, மீளவும் தூதுவிடுகையாலே ஞானகாரியம் என்று நிச்சயிக்கப்போகாது; அவன் வருகைக்குக் காரணமான குணங்களிலே உண்டான அத்யவசாயம் நெஞ்சிலே கிடக்கையாலே சாபலகார்யம் என்றும் நிச்சயிக்கப்போகிறது இல்லை என்றபடி.

[1] சுருதிகளும்கூட "அந்த ஆனந்த குணத்தினின்றும் வேத வாக்குக்கள் மீண்டன" என்று பேச்சுக்கு நிலம்அன்று என்று மீண்ட விஷயத்தை மறுபாடு உருவப் பாசுரமிட்டுச் சொல்லவல்ல இவர்க்கு '**அறிவில்லை**' என்ன ஒண்ணாது; [2] பறவைகளின் காலிலே விழுகிற இவர்க்கு '**அறிவுண்டு**' என்னவும் ஒண்ணாது. ஆனால் என்னுவது? ஏது என்னில், ஞானகாரியமான சாபலமன்றோ இவரது. [3] இதர விஷயங்களில் விரக்தியன்றோ ஞானத்திற்குப் பிரயோஜனமாகச் சொல்லுகிறது, சாபலம் ஞானகாரியம் என்று சொல்லுகிறபடி யாங்ஙனம்? எனின், அந்த ஞானபலமாயன்றோ இவ்விஷயத்தில் சாபலம் இருப்பது. ஞானத்துக்கும் வைராக்கியத்துக்கும் சேர்விடமாய் இருப்பவர் அன்றோ இவர். [4] இனி, தூது விடப் பார்த்தால் ஒரு ஐந்திரவியாகரண பண்டிதனைத் தூது விடுகிறது மன்றே. இத்தால் சொல்லுகிறது, பிராட்டியில் உண்டான ஏற்றமோ? என்னில், அதுவும் உண்டு அன்றோ, [5] அவர் ஒருவரையும் அநுபவிக்கையால் வந்ததன்றோ அவளுக்கு உள்ளது, இருவரையும்கூட அநுபவிக்கக் கோலுகிற ஏற்றம் உண்டன்றோ இவளுக்கு. விஷயத்துக்குத் தகுதியாக

---

1. இரண்டு காரியமும் இன்றிக்கே, அஜ்ஞானத்தின் காரியம் என்றாலோ? எனின், அதுவும் ஒண்ணாது என்று அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'சுருதிகளும்' என்று தொடங்கி.

"யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ"

என்பது, தைத்திரீய ஆன. 9 : 1.

2. ஞானகாரியம் என்ன ஒண்ணாமைக்கு, வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'பறவைகளின்' என்று தொடங்கி.

3. 'இதர விஷயங்களில்' என்று தொடங்கும் வாக்கியம் வினா. இந்த வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்த ஞானபலமாயன்றோ' என்று தொடங்கி. என்றது, விரக்தியைப்போன்று பகவத் விஷயத்தில் சாபலமும் ஞானபலம் என்றபடி. 'அந்த ஞானபலம்' என்றது, விரக்தி ஹேதுவான ஞானபலம் என்றபடி.

4. பறவைகளின் காலிலே விழுகிறது அஜ்ஞானத்தின் காரியம் என்னுமதனை நியாயங்காட்டி விவரிக்கிறார் 'இனி, தூதுவிட' என்று தொடங்கி. 'இத்தால்' என்றது, ஐந்திர வியாகரண பண்டிதனை விடாமல், பறவைகளைத் தூது விடுகிற இதனால் என்றபடி. ஏற்றம் - அன்பின்மிகுதி.

5. 'அவர் ஒருவரையும்' என்றது, ஸ்ரீராமபிரானை. 'இருவரையும்' என்றது, பெருமாளையும் பிராட்டியையும். இவளுக்கு - ஆழ்வார் நாயகிக்கு

வன்றோ கலக்கம் இருப்பது. [1]இனித்தான், அத்தலையில் நின்றும் வந்தார்க்கே வார்த்தை சொல்லிவிடவேண்டும் என்னும் நிர்ப்பந்தம் இல்லையே இவளுக்கு, இராவணசங்கை இல்லாமையாலே; ஆகையாலே,கண்களால் கண்டாரையடங்கலும் போக விடுகிறாள்.

[2]பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலேயன்றோ; திருவல்லவாழ், திருவண்வண்டூர் என்பவை எல்லாம் அந்நிலங்கள் அலவோ. தூதுவிடுவார், நாயகன்பக்கலிலே சிலகுணங்கள் கண்டன்றோ விடுவது; என்றது, இத்தலையில் துயரத்தையறியுந்துணை அறிவையுமுடையனாய், அறிந்தால் வருகைக்குத் தகுதியான நீர்மையுடையனாய், வருகைக்குத் தகுதியான சக்தியுமுடையனா யிருக்கவேண்டுமன்றோ என்றபடி. அவையெல்லாம் இவள் தூதுவிடுகிற விஷயத்திற் குறைஇல்லை; அறிவில்வந்தால் [3]"ஞானசம்பந்ந:" என்கிறபடியே, அறிவு கொடுத்த வசிஷ்டர் முதலானோர்கட்கும் கொடுக்கவல்லனும்படி இருப்பான் ஒருவன்; நீர்மையில் வந்தால் [4]"பகைவர்களிடத்தும் அன்புள்ளவன்" என்றால் [5]"கண்ணீரோடு கூடின

1. பிராட்டியில் ஏற்றம் உண்டு என்கைக்குக் காரணத்தை அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, இருவருடைய எண்ணங்களையும் அருளிச்செய்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி. அத்தலை - தலைவன்.

2. போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கம்சேர் ஊடல் அணிமருதம் - நோக்குங்கால்
இல்லிருக்கை முல்லை இரங்கல் நறுநெய்தல்
சொல் விரிந்த நூலின் தொகை.

என்னும் பழம்பாடல் இங்கு நினைவு கூர்க.

'திருவல்லவாழை' இங்கு எடுத்தது, அங்குப்போலே திருவண் வண்டூரிலும் புறச்சோலையளவும்போய் அங்கே விழுந்து கிடந்து தூது விடுகிறாள் என்கைக்காக.

3. "யஶஸ்வீ ஜ்ஞாநஸம்பந்ந: ஶுசிர் வஶ்ய: ஸமாதிமாந்" என்பது, ஸ்ரீராமா. பால. 1: 12.

4. "தேவகல்பம் ருஜும் தாந்தம் ரிபூணமபிவத்ஸலம்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 21 : 6.

5. '"கண்ணீரோடு கூடினவர்" என்னும்படியன்றோ அது இருப்பது' என்றது, அநுஷ்டான பர்யந்தமாம்படியன்றோ அது இருப்பது என்றபடி.

"ஸம்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம்
விமநா பபூவ"

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 23 : 24.

வர்'' என்னும்படியன்றே அது இருப்பது, சக்தியில் வந்தால் [1]''பராக்கிரமத்தாலே மகிழச்செய்கின்றவனுக்கு'' என்று எதிரிகள்பக்கலிலே கேட்கவேண்டுமத்தனை. [2] இனித்தான், நாயகனுவான் அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னு மிக் குணங்களையுடையவன் அன்றே. இத்தகைய குணங்களை யுடையவன் வாராமைக்குக் காரணம், அவ்விடங்களிலே துன் புறுவார் பலர் உளராகையாலே அவர்கள் ரக்ஷணத்திலே ஒருப்பட்டு இத்தலையை மறந்தானித்தனை; [3]காத்தலைச்செய்ய ஒருப்பட்டால் ''மறைந்துபோன மற்றை எண்ணங்களையுடைய தாய்'' என்னும்படியன்றே இருப்பது, ஆனபின்பு துயரத்தை அறிவிக்க வருவான் என்று பார்த்தாள். [4] இனி, அறிவித் தால் ஆர்த்திக்கு இத்தலையில் மேற்பட்டார் இன்றிக்கே இருக்குமன்றே. [5]அறிவிக்குமிடத்தில், தான் கால்நடை தந்து

---

1. '' ஶத்ரோঃ ப்ரக்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமைঃ என்பது, ஸ்ரீராமா. யுத். 106 : 6.

'எதிரிகள் பக்கலிலே கேட்கவேண்டுமத்தனை' என்றதனை, கம்ப ராமாயணம் முதற்போர் படலம், 203, 204, ஆம் செய்யுட்களிலும், கும்ப கர்ணன் வதைப்படலம், 15-முதல் 31-முடியவுள்ள செய்யுட்களிலும், நாக பாசப் படலம், 120-ஆம் செய்யுளிலும், இந்திரஜித்து வதைப்படலம், 4-ஆம் செய்யுளிலும் கண்டு தெளிதல் தகும்.

'எதிரிகள் பக்கலிலே' என்றது, தன் வீரம் ஒழியப் பிறர் வீரத்தைச் சஹியாத இராவணன் பக்கலிலே என்றபடி.

தலைவன் இலக்கணம் சொல்லும் இவ்விடத்தில் ஸ்ரீராமபிரான் விஷய மான பிரமாணங்களைக் காட்டியது, ''ஏறு சேவகனூர்க்கு'' (செய். 10.) என்று தூதுக்கு விஷயம் ஸ்ரீராமபிரான் ஆகையாலே.

2. நூல்களில் சொல்லப்படுகின்ற தலைவன் இலக்கணமும் இந்தத் தலைவனுக்கு உண்டு என்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி.

3. ரக்ஷணத்திலே ஒருப்பட்டால் இத் தலையை மறக்கவேண்டுமோ? என்ன, 'காத்தலைச் செய்ய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

'' யத்விஸ்மயஸ்திமிதம் அஸ்தமிதாந்யபாவம்
ஆநந்தமந்தம் அமிருதா ப்லவநாதிவ அபூத் ''
என்பது, மாலதீ மாதவ நாடகம்.

4. அங்கும் ஆர்த்தர் உளரே? என்ன, 'இனி, அறிவித்தால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ஆர்த்தி - துன்பம்.

5. தான் போகுதல், தோழிமாரைப் போகவிடுதல் செய்யாதே, பறவை களைத் தூதுவிடுவான் என்? என்ன, 'அறிவிக்குமிடத்தில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

போகமாட்டாள், தன் பந்துவர்க்கம் [1]தனக்குமுன்னே நோவு பட்டாரன்றே; இனி, கால்நடை தந்து போகவல்லார்வேண்டுமே; [2]தன்பக்கத்தில் வாழ்கிற பறவைகளை, 'ஒரே இடத்தில் வசிப்பதால் வந்த சம்பந்தமே நம்காரியம்செய்து தலைக் கட்டுகைக்கு உறுப்பு' என்று பார்த்து அவற்றின் கால்களிலே விழுந்து போகவிடுகிறாள்.

[3]சீயர், இத்திருவாய்மொழி அருளிச்செய்யப் புக்கவாறே, உருத்தோறும் அருளிச்செய்யும் வார்த்தை: 'பாண்டவர்கள் காரியத்துக்காகத் தன்னை ஒக்கி அவர்கள்கழுத்தைக் கட்டிக்கொண்டு கூடத் திரியச்செய்தேயும் அவர்கள் பட்ட வியசனமெல்லாம் படுகிறார்காணும் இவரும்; [4]அவர்கள்தாம் ஒருதர்ம ஆபாசம் உண்டு என்று இருக்கையாலே வியசனப்பட்டார்கள்; இவர்க்கு அதுவுமின்றிக்கே இருக்க என்செய்யப்படுகிறார்' என்று அருளிச்செய்வர். [5]"ஏ பிரபுவான கிருஷ்ணனே! நீர் ஜீவித்திருக்கும்போதும் அத்தகைய நான் ஒருவனால் மயிர் பிடித்து இழுக்கப்பட்டவளாய், பெருந்துன்பத்தை அடைந்து பாண்டு புத்திரர்கள் இருக்கும் சபையை அடைந்தேனே!"

---

1. "யாமுடைத் துணையென்னும் தோழி மாரும்
எம்மின்முன் அவனுக்கு மாய்வ ராலோ"
என்பது, ஈண்டு அநுசந்தேயம். (9. 9: 5.)

2. உறவு இல்லாத பறவைகள் தன் காரியம் செய்யக்கூடுமோ? என்ன, 'தன் பக்கத்தில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, ஒரே இடத்தில் வசிக்கும் தன்மையால் வந்த சம்பந்தம் காரியம் செய்கைக்கு உறுப்பு என்றபடி.

3. சர்வேசுவரன் இவரிடத்தில் மிகுந்த பிரீதியுள்ளவனாயிருக்கச் செய்தேயும், இவர் இடைவிடாது நோவுபடுகிறபடியை அநுசந்தித்து நஞ்சீயர் ஈடுபட்டருளுகிற விதத்தை அருளிச்செய்கிறார் 'சீயர்' என்று தொடங்கி. 'தன்னை' என்றது, கண்ணபிரானை.

4. பாண்டவர்களோடு ஒப்பார் ஒருவரோ இவரும்? என்ன, 'அவர்கள் தாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். தர்மாபாசம்-போலிதர்மம்; தர்மம்போலி.

5. போலி தர்மங்களைவிட்டு, அவன் கையைப் பார்த்திருக்கச்செய்தேயும், இவள் படுகிற நிலை யாருடைய நிலையைப்போலே இருக்கிறது? என்ன, 'ஏ பிரபுவே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"ஸாஹம் கேசக்ரஹம் ப்ராப்தா பரிக்லிஷ்டா ஸபாம்கதா
பச்யதாம் பாண்டுபுத்ராணாம் த்வயிஜீவத்யபி ப்ரபோ!"
என்பது, பாரதம் உத்யோகபர்வம்.

என்றவள் நிலையன்றோ இவளது. [1] "பெரிய ஆபத்து நேர்ந்த காலத்தில் பகவானாகிய ஹரி நினைக்கத் தகுந்தவர் என்று மஹாத்மாவான வசிஷ்டர் கூறியது என்னால் அறியப்பட்டது" போலி ரக்ஷகரான கணவன்மார்களாலும் தன்னாலும் நோக்கிக்கொள்ள ஒண்ணாதபடி அவ்வருகுபட்ட ஆபத்துஅன்றோ. பகவான் - பூர்ணரன்றோ! அபூர்ணர் காரியம் செய்யவல்லார் என்று காணும் அவன் நினைவு. ஹரிঃ-அடியார்களுடைய பகைவர்களை அழித்தலையே இயல்பாகவுடையவனைப் பற்றினாள். [2] ஞானம் முதலான குணங்களால் சொன்ன பூர்த்தியிலே சக்தியுமுண்டாயிருக்கச்செய்தே 'ஹரிঃ' என்று விசேடிக்க வேண்டிற்று, அல்லாதார்க்கும் இக்குணம் ஓர் ஒருகால் உண்டாகையாலே; இவனுக்கு அங்ஙன் அன்று, இது இயல்பு என்கைக்காக எடுத்தது.

---

## 553.

**வைகல் பூங்கழிவாய் வந்து மேயும் குருகினங்காள்!**
**செய்கொள் செந்நெலுயர் திருவண் வண்டூ ருறையும்**
**கைகொள் சக்கரத்தென் கனிவாய்ப்பெரு மானைக் கண்டு**
**கைகள் கூப்பிச் சொல்லீர் வினையாட்டியேன் காதன்மையே.**

**பொழிப்புரை :—** அழகிய உப்பங்கழிகளிலே நாடோறும் வந்து மேய்கின்ற கூட்டமான குருகுகளே! வயல்களிலே நிறைந்திருக்கின்ற செந்நெற்பயிர்கள் ஓங்கி வளர்கின்ற திருவண்வண்டூர் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற, திருக்கரத்திலே கொண்டிருக்கின்ற சக்கரத்தையும் கோவைக்கனிபோன்ற வாயினையுமுடைய எம்பெருமானைக் கண்டு வினையேனுடைய காதலின் தன்மையைக் கைகளைக் கூப்பி வணங்கிச் சொல்லுங்கோள்.

---

1. திரௌபதி எல்லாவற்றையும் விட்டு 'அவனே ரக்ஷகன்' என்று இருந்தாளோ? என்ன, 'பெரிய ஆபத்து' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"ஜ்ஞாதம் மயா வஸிஷ்டேந புரா கீதம் மஹாத்மநா
மஹதி ஆபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யঃ பகவாந் ஹரிঃ"

என்பது, பாரதம் உத்யோகபர்வம்.

சுலோகத்திலேயுள்ள "மஹதி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'போலி ரக்ஷகரான' என்று தொடங்கி. 'அவன்' என்றது, முனிவரை.

2. "ஹரிঃ" என்றால், பகைவர்களை அழிக்கின்றவன் என்பதனை மாத்திரம் காட்டுமே ஒழிய, அதன் தன்மையைக் காட்டுமோ? என்ன, 'ஞானம் முதலான' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

**விசேடக்குறிப்பு :**—குருகினங்காள்! திருவண்வண்டூர் உறையும் பெருமானைக் கண்டு கைகூப்பி வினையாட்டியேன் காதன்மை சொல்லீர் என்க. வைகல் - நாள். செய் - வயல்.

இத்திருவாய்மொழி, கலிநிலைத்துறை.

ஈடு :—முதற்பாட்டு. [1] சில குருகுகளை நோக்கி, திருவண் வண்டூரிலே சென்று எம்பெருமானுக்கு என் நிலையை அறிவி யுங்கோள் என்கிறாள்.

வைகல் - நாடோறும். [2] உங்கள் அளவு நீர்மையுடையார் சிலரோடே கலக்கப்பெறுமையன்றோ எனக்கு இப் பிரிவு விளைந்தது; அவ் விழவு எல்லாம் உங்களைக் கொண்டு தீரலாம் படியாயன்றோ எனக்கு இருக்கிறது. [3] ஒருகால் கலந்து பொகட்டுப் போன அவனைப்போல் அன்றிக்கே நீங்கள் எப் போதும் இங்கே வசிக்கும்படியாகப் பெற்றேனே! உங்கள் நீர் மையில் ஏற்றம் இருந்தபடி என். பூங் கழிவாய்-அழகிய கழியி டத்துஅன்றிக்கே, பூத்த கழியிடத்து என்னவுமாம். [4] ரக்ஷக னைவன் கைவிடுவது, பாதகக்கூட்டங்களானவை மிகைக் கின்றஇவ்வளவிலே நீங்கள் முகங்காட்டுவதே! அழகியசோலை, குளிர்ந்த தென்றல், இனியவாசனை தொடக்கமான இவையு முளவன்றோ. [5] பிரிந்தவனே பாதகனுகை அன்றிக்கே இருந்த

1. "குருகு இனங்காள்! திருவண்வண்டூர் உறையும் பெருமானைக் கண்டு வினையாட்டியேன் காதன்மை சொல்லீர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "வந்து" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'உங்கள் அளவு' என்று தொடங்கி.

3. "வைகல் வந்து" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒரு கால்' என்று தொடங்கி.

4. 'பூத்த கழியிடத்து' என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ரக்ஷக னைவன்' என்று தொடங்கி. 'பாதகக் கூட்டங்கள்' எவை? என்ன, 'அழகிய சோலை' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. இவற்றால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'பிரிந்தவனே' என்று தொடங்கி.

தேசமும் பாதகமாகை. வந்து - "[1]பம்பையின் கரையிலே அநுமானோடு கூடினர்"என்பதுபோலே, ஆள் இட்டு அறிவிக்க வேண்டிய நிலையிலே நீங்களேவந்து.[2]வழி பறி உண்டவிடத்தே தாய் முகம் காட்டினாற்போலேகாணும் பிராட்டியைப் பிரிந்து நோவுபடுகிற சமயத்திலே திருவடி வந்து முகங்காட்டினபடி. ஹநுமதா - தளர்ந்து [3]"ஆவாரார்துணை" என்று தடுமாறுகிற சமயத்திலே, [4]வெற்றித்தழும்பு சுமந்த ஆண்பிள்ளையோடே கூடப்பெற்றது என்கிறது. வாநரேண - சந்நியாசி வேடம்கொண்டுவந்து பிரிவை விளைத்து நலிவுபண்ணுமவனைப் போலன்றிக்கே, செவ்வியான் ஒருவனோடே சேரப்பெறுவதே. ஹ - [5]ருஷி கொண்டாடுகிறான். போகத்துக்குச் சேர்த்துக்கொள்ளுகிறோம், சத்தைநோக்குவாரைப் பெற்றோமன்றோ! என்று உவகைகொண்டவனாகிறான். [6]அவனைப் போலே தூதர்க்கும் ஆள் இட்டு அழைக்கவேண்டாதொழியப் பெற்றோமே, ஆள் இட்டு அழைக்கவேண்டுகிறதன்றோ அவனை.

---

1. பாதகக் கூட்டங்கள் மிகைக்கின்ற இந்நிலையிலே முகங்காட்டினதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் "பம்பையின் கரையிலே" என்று தொடங்கி.

"பம்பாதீரே ஹநூமதா ஸங்கதஃ வாநரேண ஹ"
என்பது, ஸ்ரீராமா. பால. 1: 8.

2. "பம்பாதீரே ஸங்கதஃ"என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வழி பறி உண்டவிடத்தே' என்று தொடங்கி.

3. திருவாய். 5. 1: 9.

4. "ஹநூமதா" என்ற பெயரின் பொருளைக் கடாக்ஷித்து 'வெற்றித் தழும்பு சுமந்த' என்கிறார்.

சீர்பெற் றொளிர்பூண் அஞ்சனைதன் சிறுவன் தன்னை முகநோக்கிக்
கூர்பற் றியஎன் குலிசத்தால் கூறு படுபுண் வடுத்தீர்க
ஆர்பெற் றார் நீ பெற்றதுநின் அநுவற் றிடலால் அநுமனெனும்
பேர்பெற் றுலக முள்ளளவும் பெறுதி பெயராப் புகழ்என்றான்.

என்ற செய்யுள் இங்கு நினைவுகூர்தல் தகும். (கம். உத்தரகாண். அநுமப் படலம். 34.)

5. ருஷி - வான்மீகிபகவான். கொண்டாடுவதற்குக் காரணம் யாது? என்ன, 'போகத்துக்கு' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

6. 'ஆள் இட்டு அறிவிக்கவேண்டிய' என்று தொடங்கி அருளிச் செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'அவனைப்போலே' என்று தொடங்கி. 'அவனைப்போலே' என்றது, நாயகனை உங்களை இட்டு அழைக்குமாறு போலே என்றபடி. தூதர்க்கும் - தூதராகிய உங்களுக்கும்.

[1] ஒருகலத்திலே ஒக்க உண்டு ஒருபடுக்கையிலே கிடந்து தூது போவாரைப்போலே காணும் இவற்றின்படி.

மேயும் - [2] "வீட்டில் கூசுதல் இன்றி உணவு உண்ணப் பட்டது" என்னும்படி இருக்கை. குருகு இனங்காள்-"மனைவிகள் காண்பிக்கப்பட்டார்கள்" என்கிறபடியே, இது ஒரு சேர்த்தி இருந்தபடி என். வந்து மேயும் இனங்காள் - [3]நிருபாதிக பாந்தவமுடையார்பக்கலிலே மனைவி மக்களோடே சென்று 'சோறு இடும்' என்று உண்பாரைப்போலேகாணும் இவற்றின்படி. குருகினங்காள்! கைகள் கூப்பிச் சொல்லீர் என்று கூட்டுக. **பண்டை முதலிகள்**, 'பத்தாம் பாசுரத்திலே, பிரணயரோஷம் தோற்றச் சொல்லுகிறாள்' என்று நிர்வஹிப்பர்கள். [4] 'பாசுரந்தோறும், கிலாம்தோற்றச் சொல்லுகிறாள்' என்று **பட்டர்** அருளிச்செய்யும்படி. வந்து மேயும் குருகினங்காள்! கைகள் கூப்பிச் சொல்லீர் - [5] என்றும் பிறர்க்கு உதவிசெய்யவே தேடித் திரியுமித்தனையோ,உங்கள் காரியமும்

---

1. "மேயும்" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒரு கலத்திலே' என்று தொடங்கி. என்றது, அருச்சுனனும் கிருஷ்ணனும் ஒரு கலத்திலே உண்டும், ஒரு படுக்கையிலே படுத்தும், பின், கிருஷ்ணன் தூது போனாற் போலே என்றபடி.

2. கதிதாநி ரஹஸ்யாநி க்ருஹேபுக்தம் அசங்கிதம்
தர்சிதாநி களத்ராணி ஸௌஹார்தம் கிமத꞉ பரம்"

என்பது, பாரதம் உத்யோகபர். இது, கிருஷ்ணனைப் பார்த்துக் கர்ணன் கூறியது.

3. "வந்து மேயும் குருகு இனங்காள்" என்ற பதச் சேர்த்திக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நிருபாதிக பாந்தவம்' என்று தொடங்கி. நிருபாதிகம் - காரணம்பற்றாமல் வருதல். பாந்தவமுடையார் - தருமபுத்திராதிகள். பாந்தவம்-உறவு. 'உண்பாரைப் போலே' என்றது, உண்ட கிருஷ்ணனைப் போலே என்றபடி.

4. பட்டர் நிர்வாகத்துக்குக் காரணம், "உணர்த்தல் ஊடல் உணர்ந்து" (பா. 5.) என்று பிரணய ரோஷத்தைக் கூறுகிற பாசுரம். கிலாம் - பிரணய ரோஷம்.

5. "வந்து மேயும் குருகினங்காள், கைகள் கூப்பிச் சொல்லீர்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'என்றும் பிறர்க்கு' என்று தொடங்கி. பிறர்க்கு உதவி செய்தலாவது, வந்து மேய்தல். 'பிறர்க்கு' என்றது, தனக்கு என்றபடி. 'உங்கள் காரியம்' என்றது, தூதுசென்று இருவரையும் சேர்ப்பித்தல்.

செய்யவேண்டாவோ. உபவாசத்தினுல் மெலிந்திருக்கிற என் காரியத்தை நிறைவுற்றிருக்கிற உங்களுக்குச் செய்யவேண்டாவோ. செய்கொள் செந்நெல்-[1]ஒருமுதலே செய்யை விழுங்கும்படியாயிருக்கை. இதனுல், இத்தலையை நினைக்கலாம்படியோ அங்குத்தை இனிமை இருக்கிறபடி என்பதனைத் தெரிவித்தபடி. "கண்ணன் மதுரையை அடைந்து கோகுலத்திற்கு எப்படி வருவார், மதுரையிலுள்ள பெண்களின் இனிமை பொருந்திய பாட்டுக்களாகிய தேனைக் காதுகளாலே பருகுவார்" என்பதன்றே அவன்படி. [2]அந்தத் தேசத்தின் இனிமையில் அகப்பட்டிருக்குமவன் நம்மை நினைக்கப் புகாநின்றனே. உயர் - [3]அங்கு வரம்பு இல்லாமையாலே முடிய உயராநிற்குமத்தனை. "அஹமந்நம் - நான் உணவாக இருக்கிறேன்" [4]என்பாரளவும் செல்லத் தான் உயராநிற்குமத்தனை. திருவண்வண்டூர் உறையும்-[5]"செய்துபோன மாயங்களும்" என்று கூப்பிட வேண்டாதபடியாயிருக்கை. என்றது, அவதாரத்தினின்றும் வேறு படுத்தியபடி. கைகொள் சக்கரத்து - செந்நெலின் படியாயிருக்கை. [6]கைக்கெல்லாம் தானே ஆபரணமாயிருக்கை. என் கனிவாய் - முறுவலை எனக்கு முற்றாட்டு ஆக்கின

---

1. "செந்நெல்" என்ற ஒருமைப் பிரயோஜனத்துக்குப் பயன் அருளிச் செய்கிறார் 'ஒரு முதலே' என்று தொடங்கி.

தேசத்தை வர்ணிப்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இத் தலையை' என்று தொடங்கி. அங்குத்தை இனிமையிலே மனம் பொருந்தியவனாய் இத் தலையை நினையாதிருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'கண்ணன்' என்று தொடங்கி.

"மதுராம் ப்ராப்ய கோவிந்தஃ கதம் கோகுலம் ஏஷ்யதி
நகரஸ்திரீ கலாலாபமது ச்ரோத்ரேண பாஸ்யதி"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 18 : 15.

2. திருஷ்டாந்தத்திலே சொன்னதனைத் தார்ஷ்டாந்திகத்திலேயும் காட்டுகிறார் 'அந்தத் தேசத்தின்' என்று தொடங்கி.

3. 'அங்கு' என்றது, ஆகாசத்தினை.

4. என்பார் - நித்தியசூரிகள்.

5. "உறையும்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் "செய்து போன" என்று தொடங்கி. இது, திருவாய். 5. 10 : 1.

6. செந்நெலைப் போன்று கையை மறைத்துக்கொண்டு இருக்கிறதோ? என்ன, 'கைக்கெல்லாம்' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

வன். பெருமான் - [1]வாய்க்கரையிலே எனக்கு ஜீவனத்தை இட்டு என்னை எழுதிக்கொண்டவன். கைகொள் சக்கரத்து என் கனிவாய்ப் பெருமான் - இராஜபுத்திரர்கள்கையில் [2]இடைச்செறி கடைச்செறிகட்குத் தோற்றிருக்குமாறு போலே, திருவதரத்தில் பழுப்புக்கும் கையும் திருவாழியுமான சேர்த்திக்குமாயிற்று இவள் எழுதிக்கொடுத்தது.

கண்டு - நான் அநுபவிக்கப் பாரித்த துறைகள் எல்லாம் நீங்கள் காணவன்றோ புகுகிறது. [3]இவளைப் பற்றினார்க்கு இவளைக்காட்டிலும் பேறு முற்பட்டிருக்குமன்றோ. ஸ்ரீவிபீஷணாழ்வான் முதலியோர்பக்கலிலே கண்டுகொள்வது. கைகள் கூப்பி-இத்தலையில் இராஜகுலங்கொண்டு மேன்மையடித்திராதீர்கள்; அவர் பழையர் அல்லர், பெருமதிப்பர் கண்டீர், தொழுதுகொடு நில்லுங்கோள். [4]"தலையில் வணங்கவுமாங்கொலோ" என்றுஇருக்குமவளன்றோ இவள்தான், இவள் பரிகரமும் அப்படியே அன்றோ. சொல்லீர் - தொழுத பின்னர் முகம் பார்த்துக்கொடு நிற்பர், பின்னர் உங்களுக்கு வேண்டினபடி சொல்லுங்கோள். [5]காதல் குணத்திலே கொத்தை சிறிது உண்டானாலும்,தானான தன்மைபோகாதே. ஒரு பாசுரமிட்டுச் சொல்லவேண்டாவோ? என்னில், காதன்மை சொல்லீர்-இத்தலையில் பசலைநிறம் தொடக்கமான ஆற்றாமையடங்கலும் உங்கள் பாசுரத்தில் அவன் அறியும்படி சொல்லுங்கோள். காதன்மை என்றவாறே, தம்மளவிலே இத்தலைக்கும்

---

1. "கனிவாய்ப் பெருமான்" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'வாய்க்கரையிலே' என்று தொடங்கி. வாய்க்கரை - திரு அதரம்.

2. இடைச்செறி கடைச்செறிகளாவன: ஒரு விரலிலே கீழும் மேலும் இடுகிற மோதிரங்கள்.

3. இவள் விரும்பியதைப் பெறுமலே நோவுபடாநிற்க, இவளைப் பற்றினார்க்குப் பேறு முற்படக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவளைப் பற்றினார்க்கு' என்று தொடங்கி.

4. இவளுடைய பரிகரங்களுக்குக் கைகள் கூப்பவேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தலையில்' என்று தொடங்கி. இது, திருவாய். 5. 3 : 7.

5. உன்னை உபேக்ஷித்தவன், நாங்கள் தொழுதவாறே முகம் காட்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'காதல் குணத்திலே' என்று தொடங்கி. 'தானான தன்மை' என்றது, அஞ்சலிக்குக் கட்டுப்பட்டவனாதல், கிருபைக்குப் பாரதந்திரியம்பட்டிருப்பவனாதல்.

உள்ளது என்று இருப்பர்; [1] "ஒத்த விஷயமானல், விளையுமது வும் ஒத்ததாய் இருப்பது" என்றன்றே அவர் இருப்பது. அல்லாத ஏற்றங்களைப் போன்றதே அன்றே ஆற்றாமையில் வந்தால் இருக்கும்படியும் இத்தலைக்கு. வினையாட்டியேன் காதன்மை சொல்லீர் - அவர் 'இவ்வூர்க்கு அவ்வூர்காதம்' என்றிருந்தால், அப்படியே, 'இவ்வூர்க்கு அவ்வூர் காதம்' என்றிருக்கமாட்டாத பாபத்தைச்செய்த என்னுடைய காதல். தமக்கு இத்தலையை ஒழியச் செல்லும்படியாயிருந்தாலும், எனக்கு அத்தலையை ஒழியச் செல்லாதபடியான பாபத்தைச் செய்தேன். [2] வன்னெஞ்சர் காதல்போன்றதன்றே மென்னெஞ்சர் காதல்; மெல்லியலார் காதல் அளவல்லாத என் காதல் சொல்லீர். [3] அங்கு நின்றும் வந்தார்க்கு வார்த்தை சொல்லிவிடவும் பெற்றிலேன். சொல்லுவார் தாழ்வே; வரவு தப்பாது என்று இருக்கிறாள். (1)

## 554.

**காதல் மென்பெடை யோடுஉடன் மேயுங் கருநாராய்!**
**வேத வேள்வி ஒலிமுழங் கும்தண் திருவண்வண்டூர்**
**நாதன் ஞாலமெலாம் உண்டநம்பெரு மானைக் கண்டு**
**பாதம் கைதொழுது பணியீர் அடியேன் திறமே.**

**பொ - ரை:**—காதலுக்குரிய மெல்லிய பேடையோடு உடன் சேர்ந்து மேய்கின்ற அழகிய நாரையே! வேதவேள்விகளின் ஒலி மாறாமல் முழங்கிக்கொண்டிருக்கின்ற குளிர்ந்த திருவண்வண்டூரில் எழுந்தருளியிருக்கின்ற நாதனும் உலகத்தை எல்லாம் புசித்த நம்பெருமானுமான சர்வேசுவரனைக் கண்டு திருவடிகளைக் கைகளால் தொழுது, அடியேனுடைய தன்மையைச் சொல்லியருளாய் என்கிறாள்.

---

1. அப்படி இருத்தற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒத்த விஷயமானல்' என்று தொடங்கி. 'அவர் இருப்பது' என்கிறது, என்? பொருளின் தன்மையும் அப்படி அன்றே? என்ன, 'அல்லாத ஏற்றங்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'அல்லாத ஏற்றங்கள்' என்றது, "அஸிதேக்ஷணா - கறுத்த கண்களை யுடையவள்" என்றது முதலானவற்றை.

2. அவ் விருபொருள்களையும் விவரணம் செய்கிறார் 'வன்னெஞ்சர்' என்று தொடங்கி.

3. "வினையாட்டியேன்" என்பதற்கு, பிராட்டியினின்றும் வேறுபடுத்தி வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அங்கு நின்றும்' என்று தொடங்கி.

**வி - ரு :**—நாராய்! பெருமானைக் கண்டு தொழுது அடியேன் திறம் பணியீர் என்க. பெடை - பெண்நாரை. கரு - என்றது, புணர்ச்சியால் உண்டாகும் அழகினை.

**ஈடு :**— இரண்டாம்பாட்டு. [1] துயர்உறுகின்றவர்களைப் பாதுகாப்பதில் உறுதி பூண்டிருப்பவனுக்கு என் ஆற்றாமையை அறிவி என்று ஒரு நாரையை இரக்கிறாள். 'முன்பு போகவிட்டவர்கள் கொண்டு வருவார்கள்' என்று கொண்டு ஆறியிருக்கலாம் விஷயமன்றே; அங்ஙனேயாகுமன்று முன்பு செய்த பிரபத்தியே அமையுமே.

காதல் மென் பெடையோடு உடன் மேயும் கரு நாராய் - [2] "நான் ஒருமாதத்திற்குமேல் ஜீவித்திருக்கமாட்டேன்" என்றால், [3] "கணநேரத்திற்குமேல் நான் ஜீவித்திருக்கமாட்டேன்" என்பாரும் உண்டு ஆகாதே. [4] கடக்க நின்று சொல்லளவேயாய்ப்போகாமல், அது தன்னை அநுஷ்டான பர்யந்தமாக்கித்

---

1. "கருநாராய்! ஞாலம் எல்லாம் உண்ட நம்பெருமானைக் கண்டு பணியீர் அடியேன் திறமே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். மேல்பாசுரத்தில் விட்ட தூது மீண்டு வருவதற்கு முன்னே, பின்னையும் தூது விடுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முன்பு போகவிட்டவர்கள்' என்று தொடங்கி.

2. "காதல்மென்பெடை" என்றதனையும், "உடன்மேயும்" என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'நான் ஒரு மாதத்திற்கு' என்று தொடங்கி.

"ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ
ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே ஸத்யேந அஹம் ப்ரவீமி தே"

என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 68.

இன்னம் ஈண்டொரு திங்கள் இருப்பல்யான்
நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்!
பின்னை ஆவி பிடிக்கின் றிலேன்அந்த
மன்னன் ஆணை இதனை மனக்கொள்நீ.

என்பது, கம்பராமாயணம்.

3. "ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்"
என்பது, ஸ்ரீராமா. சுந். 66 : 10. 'என்பார்' என்றது, ஸ்ரீராமபிரானை.

4. தலைவன் 'ஒரு கணநேரத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன்' என்னவில்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கடக்க நின்று' என்று தொடங்கி. 'சொல்லளவேயாய்ப் போகாமல்' என்றது, 'கணநேரத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன்' என்ற சொல்லளவேயாய்ப் போகாமல் என்றபடி.

தலைக்கட்டுவாரையும் கிடைப்பதே. [1] முற்றறிவினர்களோடு கலவாதொழியும்படியான புண்ணியத்தைச்செய்வதே நீங்கள் முன்னம். [2] "பின்பு கூடுதல் தவிராதாகில் இப்போது பிரிந்தால் என்செய்யவேணும்' என்று இருப்பர்கள் அன்றோ அவர்கள்; அத்தனை காரியப்பாடு இல்லையன்றோ இவற்றுக்கு. நிரூபித்துப் பார்த்தால் [3] காதலுக்கு அவ்வருகு ஒன்று இன்றிக்கேயிருத்தலின் 'காதல்பெடை' என்கிறாள். என்றது, காதலை வடிவாகவுடைத்தாயிருக்கை. [4] கலக்கவும் கூடப் பொறாதமிருதுத் தன்மையையுடைத்தாயிருத்தலின் 'மென்பெடை' என்கிறாள். கலக்கவும் பொறாதார்க்குப் பிரியப் பொறாது என்னுமிடம் சொல்லவேண்டாவே; அத்தாலே கூடத்திரியாநின்றது என்பாள் 'உடன்மேயும்' என்கிறாள். [5] பேடையின் காதல் அறிந்து கூடத் திரியும் சேவலும் உண்டாகாதே. அன்றிக்கே, [6] "இது பரிசுத்தமானது, இது ருசியுள்ளது, இது நன்றாக அலர்ந்திருக்கிறது" என்கிறபடியே காணும் இது திரிகிறது.

---

1. "நாராய்!" என்ற அஃறிணைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'முற்றறிவினர்களோடு' என்று தொடங்கி.

2. முற்றறிவினர்களோடு கலந்தால் தோஷம் ஏது? இதற்குக் குறை இல்லாமை ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பின்பு கூடுதல்' என்று தொடங்கி.

3. 'காதலுக்கு அவ்வருகு ஒன்று இன்றிக்கே இருத்தலின்' என்றது, காதலுக்கு அப்பால் ஓர் ஆஶ்ரயம் இன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி.

4. 'கலக்கவும் கூடப் பொறாத' என்றது, புணர்ச்சிக்காலத்தில் விட்டு அணைக்கவும் பொறாத என்றபடி.

"புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு"

என்ற திருக்குறள் நினைவு கூர்தல் தகும்.

5. பேடையினுடைய காதலைச் சொன்னபின்பு "உடன்மேயும்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பேடையின்' என்று தொடங்கி.

6. "உடன்மேயும்" என்பதற்கு, ஒருசேர வசிக்கும் என்ற பொருளை இதுகாறும் அருளிச்செய்து, இனி, ஒருசேர உண்கின்ற என்ற பொருளை அருளிச்செய்கிறார் 'இது பரிசுத்தமானது' என்று தொடங்கி.

"இதம் மேத்யம் இதம் ஸ்வாது ப்ரபுல்லம் இதம் இத்யபி
மதுலுப்த: மதுகர: பம்பாதீரத்ருமேஷ்வஸௌ"

என்பது. ஸ்ரீராமா. கிஷ்கிந். 1; 88.

[1] அது வாய் அலகாலே கோத்து எடுத்துக்கொடுத்தால், பின்பு ஆராயவேண்டாதே மிடற்றுக்குக்கீழே இழித்துமித்தனை இது செய்வது. பேடையின்நினைவு அறிந்து உண்பிக்கும் சேவலும் உண்டாகாதே. உடன்மேயும் கருநாராய் - [2] அதற்கு ஒரு குற்றம் தேடிச் சொல்லுவாரைப்போலே சொல்லுகிறாள் தன் காரியம் செய்கைக்காக. [3] அடுகு வளத்தைத் தடுப்பாரைப்போலே. [4] தன் துயர் ஒலி செவிப்பட்டால் அவற்றுக்கு மிடற்றுக்குக் கீழ் இழியாது என்று இருக்கிறாள்காணும். கூடத் திரிகையாலே நரை திரை நீங்கி வடிவு புகர் பெற்றிருத்தலின் 'கருநாராய்' என்கிறாள். [5] பிரியாதார்க்கு உடம்பு வெளாதாகாதே. தான் உடம்பு வெளுத்துக்கிடக்கிறாள் அன்றோ.

வேதம் வேள்வி ஒலி முழங்கும் தண் திருவண்வண்டூர் - இவற்றின் அறிவுகேடு [6] பலித்தபடி சொல்லுகிறது. அங்கு உண்டான வேத ஒலி, வைதிகக்கிரியை, இவற்றைக் கண்டு கால்தாழவேண்டாவேயன்றோ இவற்றுக்கு. தன் நாயகன்

---

1. "பெடையோடு" என்ற மூன்றும் வேற்றுமை உருபிற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'அது வாயலகாலே' என்று தொடங்கி. அவ்வுருபிற்கே வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'பேடையின் நினைவு' என்று தொடங்கி. இப்பொருள் உயர்பின் வழித்து.

2. "உடன்மேயும் கருநாராய்" என்று விளிக்கிறவளுடைய வெறுப்பால் உண்டான மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அதற்கு ஒரு குற்றம்' என்று தொடங்கி. குற்றமாவது, நான் உபவாசத்தால் இளைத்திருக்க, உங்களுக்கு ஆகாரம் மிடற்றுக்குக்கீழ் இழிவதே என்பது.

3. இப்படிச் சொன்னால் காரியம் செய்யுமோ? என்ன, 'அடுகு வளத்தை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அடுகு வளம் - போனகப் பெட்டி.

4. அடுகுவளத்தைத் தடுப்பதுபோன்று, தடுக்கிறாளோ? என்ன, 'தன் துயர் ஒலி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. இப்படிச் சொல்லுகிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பிரியாதார்க்கு' என்று தொடங்கி.

6. 'பலித்தபடி' என்றது, தனக்குப் பலித்தபடியைத் தெரிவித்தபடி. அதனை விவரணம் செய்கிறார் 'அங்கு உண்டான' என்று தொடங்கி. என்றது, பறவைகள் ஆகையாலே, அவற்றுக்கு ஈடுபடுகைக்குத் தகுதி இல்லை என்றபடி.

அவைகண்டன்றோ வரமாட்டாதே நிற்கிறது. [1] " தாநயஜ்ஞ - தானங்கள் செய்யுமிடத்தே எழுந்தருளியிருப்பாராயிற்று; தேசத்திலே காலத்திலே பிராப்த விஷயங்களிலே இடுவிக்கைக்காக யாகங்களிலே எழுந்தருளியிருப்பாராயிற்று. நியாயமாக ஈட்டிய பொருள்கொண்டு செய்விக்கைக்காகவும், சடங்குகளில் தப்பினவை உண்டாகில் அவற்றை எடுத்துக்கொடுக்கைக்காகவும். விவாஹேஷு - இரண்டு தலையையும் பொருந்தவிட்டு, பொருந்தாதார்க்கு வேண்டுவன செய்து, ஹோமம் பண்ணுவித்துத் தலைக்கட்டிக் கொடுக்கைக்காக, விவாகம் செய்யுமிடங்களில் எழுந்தருளியிருப்பர். ஸமாஜேஷு மஹத்ஸுச-[2] தீர்க்கசத்திரங்களிலேயாதல், உத்ஸவங்களிலேயாதல். ச -[3] யாவன் ஒருவன் ஓர் இடத்தே அத்ருஷ்ட காரியங்கள் செய்யும் அங்கே இருப்பர் என்கிறது. நத்ரக்ஷ்யாமঃ புனர் ஜாது - அவரை அவ்வவ்விடங்களிலே இருக்கக் காண்கின்றிலோம். தார்மிகம் ராமமந்தரா - என் தான்? இவர் இவ்விடங்களில் இருப்பது என்? என்னில், தர்மங்களிலே வருகிற ஐயங்களை அறுத்துக்கொடுக்கைக்கும், அவை தப்பாதே அநுஷ்டிப்பிக்கைக்குமாக. இப்படியேயன்றோ அவன்படிகள். திருவண்வண்டூர்நாதன் - '**ஸ்ரீவைகுண்டநாதன்**' என்னுமதிற் காட்டில் உண்டான ஏற்றம் சொல்லுகிறது. [4] எளியாரை வலியார் பறிக்க, அங்கே கோயிற்சாந்து பூசியிருக்குமது ஓர் ஏற்

---

1. தன் நாயகன் வைதிகக் கிரியைகளில் ஈடுபட்டிருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தாந யஜ்ஞ' என்று தொடங்கி.

" தாந யஜ்ஞ விவாஹேஷு ஸமாஜேஷு மஹத்ஸுச
ந த்ரக்ஷ்யாமঃ புநர்ஜாது தார்மிகம் ராமமந்தரா "

என்பது, ஸ்ரீராமா. அயோத். இச் சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய் செய்கிறார் 'தானங்கள் செய்யுமிடத்தே' என்று தொடங்கி. சடங்குகள் - கிரியைகள்.

2. " மஹத்ஸு ஸமாஜேஷு " என்பதற்கு, தீர்க்க சத்ரம் என்றும், மஹாசங்கம் என்றும் இரண்டு யோஜனைகள் சொல்லலாயிருக்கையாலே அவற்றை அருளிச்செய்கிறார் 'தீர்க்க சத்திரங்களிலே' என்று தொடங்கி. தீர்க்கசத்திரம் - ஒரு யாக விசேடம்.

3. " சகாரம் " இங்குச் சொல்லப்படாதனவற்றை எல்லாம் தழுவுகின்றது என்று கொண்டு, அதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'யாவன் ஒருவன்' என்று தொடங்கி.

4. ஏற்றம் ஏது? என்ன, அதனை அருளிச்செய்கிறார் 'எளியாரை' என்று தொடங்கி. அங்கே - பரமபதத்தே. கோயிற்சாந்து - சிலாக்கியமான சாந்து.

றம் அன்று. வேத ஒலியும் யாகங்களில் சாஸ்திரங்களைப் பேசுகின்ற ஒலியும் கடல் ஒலி போலே இருக்கிற, சிரமத்தைப் போக்குகிற ஊர். ஞாலம் எல்லாம் உண்ட நம்பெருமானைக் கண்டு - அம் முதன்மையோடேகூட வந்தானாகில் அங்குத்தை உதவாமையும் கிடக்குமோ? என்னில், அங்ஙனன்று, [1] தளர்ந்தார் தாவளம் என்கிறது. ஆபத்திற்குத் துணைவன் அன்றோ. ஆபத்ரக்ஷகனை செயலைக்காட்டி என்னைத் தனக்கே உரியவனாக எழுதிக்கொண்டவன் என்பாள் '**ஞாலம் எல்லாம் உண்ட நம்பெருமான்**' என்கிறாள்.

பாதம் கைதொழுது - கண்டு, திருவடிகளிலே தண்டன் இட்டு. [2] "'கைகள் கூப்பி' என்றதே; தொழுதார்க்கு நிற்க ஒண்ணாதேயன்றோ. உண்ணாநிற்க, மிடற்றைப் பிடித்தாற் போலே இருப்பது ஒன்று அன்றோ தொழுதுவைத்து விழாதே ஒழியுமது" என்று **பூர்வர்கள்** நிர்வஹிப்பர்கள். [3] "மதித்தான் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் ஸ்ரீபாதத்தே தலைபடத் தண்டன் இட்ட அன்று எனக்கு உண்டு பசிகெட்டாற் போலே இருக்கும்" என்று அருளிச்செய்வர் **சீயர்**. அன்றிக்கே, கிலாம்தோற்றும் படி அவர் திருவடிகளிலே கைசென்று தாக்கும்படி விழுந்து கிடவுங்கோள் என்னுதல்; என்றது, தீர்க்கப் பிரணாமம் பண்ணுங்கோள் என்றபடி. பணியீர் - [4] அவனைக் கிட்டிநின்று, பிரணயரோஷத்தாலே 'நீ, நான்' என்று சொல்லுமவையெல்

---

1. தளர்ந்தார் தாவளம் - தளர்ந்தவர்கட்கு ரக்ஷகம். தளர்ந்தார்கட்குத் தாவளமாயிருப்பவன் என்பதற்கு மேற்கோள் காட்டுகிறார் "ஆபத்திற்குத் துணைவன்" என்று.

2. "கைகள் கூப்பி" என்றது, மேல் திருப்பாசுரத்தில்.

3. திருவடிகளிலே தண்டன் இடுவது, உண்டதுபோலே தாரகமாயிருக்கும் என்னுமதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'மதித்தான்' என்று தொடங்கி.

4. சொல்லீர் என்னாமல், "பணியீர்" என்றதன் பாவத்தை அருளிச்செய்கிறார் 'அவனைக்கிட்டி' என்று தொடங்கி. என்றது, நாயகனைப் பிரணய ரோஷத்தாலே 'நீ, நான்' என்று சொல்லுவது போன்று, உத்தேசியரான ததீயரைச் சொல்லலாகாது என்றபடி.

"மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய"

என்பது, இலக்கணம். தொல். பொருள் - 227.

லாம் சொல்ல ஒண்ணாதன்றோ இவர்கள் முன்பு. இவர்கள்பக்கல் உபசாரத்தில் குறையாமற்சொல்லுகிறபடி. அடியேன் - உங்களைக் கொண்டு அழைப்பித்துக் கொள்ள இருக்கிறவனுக்கு அன்று; அத்தலையால் வந்த இழவு நீக்கி அவனோடே சேர்க்க இருக்கிற உங்களுக்கு அடியேன் என்கிறாள். [1]"எந்த நாதமுனிகளுடைய திருவடிகளானவை இம்மை மறுமை இரண்டிலும் எப்போதும் என்னைக் காப்பாற்றும் பொருளாக இருக்கின்றனவோ" என்கிறபடியே. அடியேன் திறமே - [2]அவன் திறம்போல் அன்று. என் இடையாட்டத்தைச் சொல்லுங்கோள், சொல்லில் ஒரு மஹாபாரதத்துக்குப் போருமாகாதே. (2)

## 555.

திறங்களாகி எங்கும் செய்க ளூடுழல் புள்ளினங்காள்!
சிறந்த செல்வ மல்கு திருவண்வண் டூருறையும்
கறங்கு சக்கரக்கைக் கனிவாய்ப்பெரு மானைக் கண்டு
இறங்கிநீர் தொழுது பணியீர் அடியேன் இடரே.

**பொ - ரை :**—திறம் திறமாக எல்லா இடங்களிலும் வயல்களின் மத்தியிலே சஞ்சரிக்கின்ற கூட்டமான பறவைகளே! சிறந்த செல்வம் மிகுந்திருக்கின்ற திருவண்வண்டூரிலே எழுந்தருளியிருக்கின்ற, சுழலுகின்ற சக்கரத்தைத் தரித்த திருக்கரத்தையும் கோவைக்கனி போன்ற திருவாயினையுமுடைய பெருமானைக் கண்டு தாழ்ந்து தொழுது அடியேனுடைய துன்பத்தைச் சொல்லுங்கோள்.

**வி - கு :**—செயல்கள் ஊடு எங்கும் திறங்களாகி உழல் புள் என்க. புள்ளினங்காள் : திருவண்வண்டூர் உறையும் பெருமானைக் கண்டு இறங்கித் தொழுது அடியேன் இடரைப் பணியீர் என்க. ஊடு - உள்ளுமாம். கறங்கு - சுழலுகின்ற. இறங்கி - தாழ்ந்து.

---

1. ததீயருக்குச் சேஷம் என்னுமதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எந்த நாதமுனிகளுடைய' என்று தொடங்கி.

" நாதாய நாதமுநயே அத்ர பரத்ரசாபி
நித்யம் யதீய சரணௌ சரணம் மதீயம் "

என்பது, ஸ்தோத்திர ரத்நம். 2.

2. " அடியேன் " என்பதனைத் திருவுள்ளம்பற்றி, 'அவன் திறம் போல் அன்று' என்கிறார். திறம் - செயலும், வியசனங்களும். இடையாட்டம் - செயல்.

ஈடு :—மூன்ரும்பாட்டு. [1] திறம் திறமாகச் சஞ்சரிக்கின்ற புள்ளினங்களைக் கண்டு, என் வியசனத்தை அறிவியுங்கோள் என்கிருள்.

திறங்களாகி - கூட்டம் கூட்டமாக. இவை, திரள் திரளாகத் திரிதல் நம் காரியம் செய்து தலைக்கட்ட என்றிருக்கிருள். [2] "வாயுந் திரையுகளும்" என்ற திருவாய்மொழியில் வாசனையாலே, தன் துன்பம் கண்டு பொறுக்கமாட்டாமல் படுகின்றனவாகக்கொண்டு நினைத்திருக்கிருள். [3] அங்கு, தாம்தாம் விரும்பிய பொருள் பெருமையாலே நோவுபடுகின்றன என்று இருந்தாள்; இங்கு, தன் இழவு கண்டு பொறுக்கமாட்டாமையாலே நோவுபடுகின்றன என்று இருக்கிருள். இங்ஙன் கூடுமோ? என்னில், "இவை பறவைகள், நம் காரியம் செய்து தலைக்கட்டமாட்டா" என்னும் அறிவு இன்றிக்கே ஒழிந்த பின்பு, இதுவும் கூடத் தட்டு இல்லை. திறங்களாகி எங்கும் - [4] பிராட்டியைப் பிரிந்து பெருமாள் நோவுபடுகிற சமயத்திலே முதலிகள் அடங்கலும் நாலு திக்குக்களிலும் புகுந்து அங்கும் இங்கும் திரிந்தாற்போலே காணும் இவையும் திரிகிறபடி. [5]தேடினல் காண்கைக்குச் சம்பாவனை இல்லாத இடமெங்கும்

---

1. "திறங்களாகி உழல் புள்ளினங்காள்! அடியேன் இடரைப் பணியீர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. இரைதேடித் திரிகின்றனவற்றைத் 'தன்காரியம் செய்து முடிப்பதற்காகத் திரள இருக்கின்றன' என்று நினைத்திருப்பதற்குக் காரணம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் "வாயும் திரையுகளும்" என்று தொடங்கி.

3. ஆயின், அதற்கும் இதற்கும் வாசி இல்லையோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அங்கு' என்று தொடங்கி. இதனுல், இரண்டு இடங்களிலும் வாசி உண்டேயாகிலும், பிரமிக்கின்ற தன்மை ஒக்கும் என்றபடி. 'இங்ஙன் கூடுமோ?' என்றது, தன்காரியம் செய்யச் சஞ்சரிக்கின்றனவாக நினைக்கக்கூடுமோ? என்னில் என்றபடி.

"நோயும் இன்பமும் இருவகை நிலையும்"

என்னும் தொல்காப்பியச் சூத்திரம் இங்கு நோக்கல் தகும். (பொருளதி. 196. சூ.)

4. "திறம்", "எங்கும்" என்ற பதங்களின் பொருளினைத் திருஷ்டாந்தம் காட்டி விளக்குகிருர் 'பிராட்டியை' என்று தொடங்கி.

5. "எங்கும்" என்ற சொல்லின் பொருள் முடிவின் எல்லையைக் காட்டுகிருர் 'தேடினல்' என்று தொடங்கி. இப்படித் தேடின பேர் உளரோ? என்ன, 'சுயம்பிரபை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். முதலிகள் - வானரவீரர்கள். சுயம்பிரபை - மேரு சாவர்ணியினுடைய பெண்.

புக்குத் தேடாநின்றனவாதலின் 'எங்கும்' என்கிறாள். சுயம் பிரபையுடைய பிலம் அகப்படப் புக்குத்தேடினார்கள் அன்றோ முதலிகள். உழல் புள் இனங்காள்-[1]காணுவதற்குச் சம்பாவனை இல்லாத இடம் எங்கும் புக்குத் தேடுவது, காணப்பெறுதொழி வது, உண்ணாவிரதத்தை மேற்கொள்வதாய்க்கொண்டு பட்ட பாடு எல்லாம் படுகின்றன வாயிற்று. [2]இராமாவதாரத்துக்குப் பின்பு பிரிந்தாரைச் சேரவிடுகை திரியக்குகளுக்குப் பணி என்று காணும் வாசனை. சிறந்த செல்வம் மல்கு திருவண் வண்டூர் உறையும் - [3]வாராமை அவன் குற்றம் அன்று கண்டீர், அவ்வூரின் நிறைவு வேறேயும் சிலரை நினைக்க ஒட்டுமோ. [4]"முக்தன் ஜனங்களுடன் கூடியுள்ள இந்தச் சரீரத்தை நினைப்பதில்லை" என்னுமாறுபோலே, இங்குத்தை ஐசுவரிய மும் இவனை மறக்கப் பண்ணிற்று அன்றோ. மிக்க ஐசுவரியம் கரைபுரளும்படியான ஊர். அன்றிக்கே, சிறந்த செல்வம் - தகுதியான ஐசுவரியம் என்னுதல். [5]கலந்து கூட இருக்கிற போது 'நீயே எனக்கு எல்லாச் செல்வங்களும்' என்று சொல்லிவைத்து, இப்போது தனக்கு என்ன ஒரு சம்பத்து உண்டாயிருக்கிறபடி எங்ஙனே என்று இருக்கிறாள். '**திருவண் வண்டூர்**' என்கையாலே, பரமபதத்தில் வேறுபாடு. '**உறை யும்**' என்கையாலே, அவதாரத்தில் வேறுபாடு.

---

1. "உழல்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'காணுவதற்கு' என்று தொடங்கி.

2. பறவை முதலானவற்றிற்குத் தன் காரியத்தைச் செய்யத் தகுதி உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இராமாவதாரத் துக்கு' என்று தொடங்கி.

3. உன்னைவிட்டுப் போனவன் நாங்கள் சொன்னமாத்திரத்தில் வரு வானோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வாராமை' என்று தொடங்கி.

4. மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'முக்தன்' என்று தொடங்கி.

"ந உபஜனம் ஸ்மரந் இதம் சரீரம்"

என்பது, சாந்தோக்யம். 8. 12: 3.

5. பட்டர் நிர்வாகத்துக்குச் சேர, கூறுகின்றவளுடைய மனோ பாவத்தை அருளிச்செய்கிறார் 'கலந்து' என்று தொடங்கி.

கறங்கு சக்கரம் கை - [1]பகைவர்களை அழிக்கும் விரைவாலே சுழன்று வாராநின்றுள்ள திருவாழியைக் கையிலே யுடையனை சர்வேசுவரனை. அன்றிக்கே, இத்தலையைத் தோற்பித்துக் கொண்டோம் என்னும் மேன்மை தோற்ற, ஆயுதத்தைச் சுழற்றிப் புன்முறுவல்செய்து இருக்கிறபடியாகவுமாம். கனி வாய்ப் பெருமானைக் கண்டு - அகவாயில் உவகைதோன்றப் புன்முறுவல்செய்து அதனாலே என்னை எழுதிக்கொண்டவனைக் கண்டு. [2]அவர்க்குப் புறம்பே ஐசுவரியம் உண்டானாலும் எங்களுக்குத் தம்மை ஒழிந்த ஐசுவரியம் இல்லைகாணும். திருவுக்கும் திருவாகிய செல்வன்அன்றோ. இறங்கி நீர் தொழுது பணியீர் - [3]தொழுங்கோள் என்கிறாள்; தொழுத அளவிலே நில்லாதே; முதலியார் கண்டீர்கோள், பிரம்புகள் படாமே கடுக விழுந்துகொடு நில்லுங்கோள் என்கிறாள்; விழாநின்றாலும் அகவாயைச் சோதியாநிற்பர், அபிமானத்தைப் பொகட்டுக்கொண்டு விழுங்கோள் என்கிறாள். [4]"அந்த அநுமான் கைகூப்பினவராய்ச் சாஷ்டாங்க பிரணாமமுடையவராய் மானச பிரணாமமுடையவராய் அருகில்சென்று

---

1. பண்டைய முதலிகள் நிர்வாஹத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'பகைவர்களை' என்று தொடங்கி. பட்டர் நிர்வாகத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

2. "பெருமான்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவர்க்குப் புறம்பே' என்று தொடங்கி. இவளுக்குச் செல்வம் அவனே என்பதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'திருவுக்கும்' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 7. 7 : 1.

3. மேற்பாசுரங்களில், "கைகள் கூப்பி", "பாதம் கைதொழுது" என்றதற்கும், இங்கு "இறங்கி நீர் தொழுது" என்றதற்கும் வேற்றுமை ஏது? என்ன, 'தொழுங்கோள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "இறங்கி" என்றது, மனவணக்கத்தைச் சொல்லுகிறது. மேல் திருப்பாசுரங்களில் கூறிய இரண்டும் வாக்கு, காயம் இவற்றின் வணக்கத்தைக் கூறுகின்றன.

4. தாம் அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அந்த அநுமான்' என்று தொடங்கி.

"நிப்ருதঃ ப்ரணதঃ ப்ரஹ்வঃ ஸঃ அபிகம்ய அபிவாத்யச"

என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 3. இச்சுலோகத்திலுள்ள நிப்ருதঃ என்பது, ஒடுக்கமாய், அஞ்சலியையும், ப்ரணதঃ என்பது, சாஷ்டாங்க பிரணாமத்தையும், ப்ரஹ்வঃ என்பது, மானச பிரணாமத்தையும் சொல்லுகின்றன.

வணங்கினர்" என்னுமாறுபோலே. பணியீர் - [1] இத்தலையில் நின்றும் சென்றாரை அவன் சொல்லும்படியேயாகிலும் சொல்லவேண்டுமே. [2] தன்னை ஒழிந்தார் அடங்கலும் தன்னைச் சொல்லும்படியை, இத்தலையில் நின்றும் சென்றாரைச் சொல்லாநிற்கும் அவன். [3] சொரூபத்தால் சொல்லுமவை இவையானல், காதலால் வருமவை சொல்லவேண்டா அன்றே. அடியேன் இடர் பணியீர்-[4] அவன் அறியாதனவற்றைச் சொல்லிக் கொடுக்கவேண்டுமே. [5] அறிந்தானாகில், ஆள் விடப் பார்த்திருப்பானே.[6] இரண்டுதலைக்கும் கலவி ஒத்திருக்க, இத்தலைக்கு வந்த இடரை அறிவியுங்கோள் என்பாள் '**அடியேன் இடர் பணியீர்**' என்கிறாள். (3)

## 556.

**இடரில் போகம்மூழ்கி இணைந்தாடும்மட அன்னங்காள்!**
**விடலில் வேதஒலி முழங்கும் தண்திரு வண்வண்டூர்**
**கடலின் மேனிப்பிரான் கண்ணனைநெடு மாலைக் கண்டு**
**உடலம் நைந்துஒருத்தி உருகும் என்று உணர்த்துமினே.**

**பொ - ரை:**—பிரிவுஇல்லாத போகத்திலே மூழ்கிச் சேர்ந்து அநுபவிக்கின்ற இளமை பொருந்திய அன்னங்களே! பிரிதல் இல்லாத வேதத்தின் ஒலியானது ஒலித்துக்கொண்டிருக்கின்ற குளிர்ந்த திருவண்வண்டூரில் எழுந்தருளியிருக்கின்ற கடல்போன்ற நிறத்தையுடைய உபகாரகனும் கண்ணபிரானுமான நெடிய திருமாலைக் கண்டு, ஒருபெண்ணானவள் சரீரம் நிலைகுலைந்து உருகுகின்றாள் என்று உணர்த்துங்கோள்.

---

1. ஜனக குல சுந்தரியான தான் பறவைகளைப் பார்த்துப் "பணியீர்" என்னலாமோ? என்ன, 'இத்தலையில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. அவன் சொல்லும்படி ஏது? என்ன, 'தன்னை ஒழிந்தார் அடங்கலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. தன்னினின்றும் வேறுபட்டவர் தன்னைச் சொல்லும் வார்த்தையை, சர்வாதிகனான தான், தூது வந்தவர்களைச் சொல்லக் கூடுமோ? என்ன, 'சொரூபத்தால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. "பணியீர்" என்கிறது என்? அவன் அறியானோ? என்ன, 'அவன் அறியாதனவற்றை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. முற்றறிவினனுக்கு அறிவின்மை உண்டோ? என்ன, 'அறிந்தானாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. "அடியேன் இடர்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இரண்டு தலைக்கும்' என்று தொடங்கி.

**வி - கு :**—அன்னங்காள்! திருவண்வண்டூர் நெடுமாலைக் கண்டு ஒருத்தி நைந்து உருகும் என்று உணர்த்துமின் என்க. மூழ்கி ஆடும் அன்னம் என்க. கடலின் - கடலைப்போன்ற.

**ஈடு :**—நான்காம்பாட்டு. [1] சில அன்னங்களைக் குறித்துச் சரீரம் கட்டுக் குலைந்து உருகாநின்றாள் என்று சொல்லுங்கோள் என்கிறாள்.

இடர் இல் போகம் மூழ்கி-பிரிவு சிறிதும் இல்லாத கலவி இன்பத்திலே மூழ்கி. [2] நான் செய்தபடி செய்ய, இப்படியே இருப்பாரையும் காணப்பெற்றோம் அன்றோ உலகத்திலே. [3]போகத்தின் தொடக்கத்திலே பிரிவு பிறந்ததேயன்றோ தனக்கு. [4] வீட்டில் ஆய்ச்சிக்கும் ஐயர்க்கும் பரதந்திரராக வேணும், நாடு கேட்கவேணும் என்கிற அந்யபரதை எல்லாம் தீரும்படி தனிஇடம் தேடி அநுபவிக்கப்போக, அங்கே இராவணன் வந்து தோற்றினன் அன்றோ தனக்கு; அது இல்லையன்றோ இவற்றுக்கு. இடர்இல் போகம் மூழ்கி - [5] புணர்ச்சிக்குப் பாரித்துக்கொண்டிருந்து பிரிவோடே தலைக்கட்டும் என்னைப் போலே ஆகாது ஒழியப் பெறுவதே! இன்னம் தறை

---

1. "அன்னங்காள்! உடலம் நைந்து ஒருத்தி" என்பன போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "இடர் இல் போகம் மூழ்கி" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'நான் செய்தபடி' என்று தொடங்கி. என்றது, பிரிந்திருக்கின்ற உங்களைக் கூட்டுவித்துப் பின், என்காரியம் பார்க்கவேண்டியிராதே, முன்னரே கூடியிருக்கப் பெற்றீர்களே என்றபடி. முதல் பத்து ஈட்டின் தமிழாக்கம். பக். 137-பார்க்கவும்.

3. தனக்கு அப்படி இல்லையோ? என்ன, 'போகத்தின் தொடக்கத்திலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. போகத்தின் தொடக்கத்திலே பிரிவு எங்கு உண்டாயிற்று? என்ன, 'வீட்டில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ஆய்ச்சி - கௌசல்யாதேவி. 'நாடு கேட்கவேணும்' என்றது, நாட்டின் நலன்களைக் கேட்கவேணும் என்றபடி. 'அந்யபரதை' என்றது, வேறு காரியங்களிலே நோக்குடைமை என்றபடி.

5. மேலே கூறிய 'நான் செய்தபடி செய்ய' என்ற வாக்கியத்தின் விவரணம், 'புணர்ச்சிக்கு' என்று தொடங்கும் வாக்கியம்.

காண்கின்றன இல்லை என்பாள் 'மூழ்கி' என்கிறாள். இணைந்து ஆடும் மடம் அன்னங்காள் -[1]ஒருதலை களிக்க, ஒருதலை துடிக்க வேண்டாதபடி இருக்கை. [2] அன்றிக்கே, ஒன்றன் நினைவுக்கு ஒன்று கால்எடுக்க அமைந்திருக்கை என்னுதல். ஒன்றற்குச் சொல்லுகிற தன்மை இரண்டற்கும் உண்டாயிருத்தலின் 'மட அன்னங்காள்' என்கிறாள். [3] மடப்பம் உள்ளது பேடைக்கேயாயிருக்க, இரண்டற்கும் ஒக்கச் சொல்லுகிறது, கலவியால் வந்த துவட்சி இரண்டற்கும் ஒத்திருத்தல்பற்றி.

விடல் இல் வேத ஒலி முழங்கும் - [4] அத்யயனம் மறுத்தன்றோ இவ்வூர் கிடக்கிறது. [5] ஜனககுலம் அன்றோ ஓதுவார் இன்றிக்கே கிடக்கிறது. [6] "கர்மத்தால் சித்திபெற்றவர்கள்

---

1. "இணைந்தாடும்" என்பதற்கு, மெய்யுறு புணர்ச்சியாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஒரு தலை களிக்க' என்று தொடங்கி. என்றது, பிரியாதே வாழ்கின்றன என்றபடி.

2. இரண்டும் ஒரே மனமுடையனவாய், ஒன்றற்கொன்று முன்கோலி நினைவு அறிந்து கலக்கின்றன என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. கால் எடுத்தல் - அநுமதி பண்ணுதல்.

3. துவட்சி பேடைக்கு ஒழிய, சேவலுக்கு உண்டோ? என்ன, 'மடப்பம் உள்ளது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். துவட்சி பெண்களுக்கே இயல்பாக இருப்பினும், கலவியாலே ஆடவர்களுக்கும் உண்டு என்றபடி.

4. 'அங்கு விடாமல் வேத ஒலி முழங்கும்' என்றதனால், வேத ஒலி இங்குத் தடைபட்டு இருக்கிறது என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அதனை அருளிச்செய்கிறார் 'அத்யயனம்' என்று தொடங்கி. இவ்வூர் - தலைமகள் இருக்கிற ஊர்.

5. 'மறுத்தன்றோ இவ்வூர் கிடக்கிறது' என்கையாலே, இவ்வூர்தான் எப்பொழுதும் வேத அத்யயனத்தோடே கூடியே இருக்கும் என்னுமதனைத் திருவுளத்தே கொண்டு, இப்படி இருக்கிற இவ்வூர் இவளுடைய துன்பம் கண்டு பொறுக்கமாட்டாமல் அன்றோ அத்யயனம் இன்றிக்கே இருக்கிறது என்று ஈடுபடுகிறார் 'ஜனககுலம்' என்று தொடங்கி.

6. ஜனக குலத்துக்கு ஏற்றம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'கர்மத்தால்' என்று தொடங்கி.

"கர்மணைவஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜனகாதய:
லோக ஸங்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்தும் அர்ஹஸி,

என்பது, ஸ்ரீ கீதை, 3; 20.

ஜனக குலத்திலுள்ளவர்கள்" என்கிறதன்றோ. [1]மற்றோர் அடையாளம் சொல்லவேண்டுமோ, புறப்பட்டவாறே வேத ஒலி வழிகாட்டுகிறதன்றோ என்பாள் 'முழங்கும்' என்கிறாள். என்றது, வேதமார்க்க அநுசாரிகள் அன்றோ நீங்கள் என்றபடி. கடலின் மேனிப்பிரான் கண்ணனை நெடுமாலை - [2]கடல் போலே சிரமத்தைப் போக்கக் கூடியதான வடிவையுடையவனாய், அவ் வடிவைத் தாழ நின்று இத்தலைக்கு முற்றூட்டாக உண்பித்து, பின்னையும் 'ஒன்றும் செய்யப் பெற்றிலோம்' என்னும் வியாமோகத்தையுடையவன். அன்றிக்கே, குளிர்ந்த வடிவை பவ்யரைப் போலே நின்று உண்பித்து, இப்போது எட்டாதபடி இருக்கிறவன் என்னுதல். [3]அன்று தானும் தனக்கு வேண்டுவதாகச் செய்தானல்லன், இத்தலையை அழிக்கைக்காகச் செய்தானித்தனை; அன்று வேண்டியிருந்தானாகில் இன்றும் வேண்டி இரானோ. உடலம் நைந்து - 'நெஞ்சிலே சிறிது நோவு பிறந்த அளவேயாகில், சரீரத்தே ஒருவாட்டம் வருவதற்கு முன்னே சென்று கைக்கொள்ளுகிறோம்' என்று இருக்கவேண்டா. [4]தனித்தனியே அறிவுபெற்று அழியவல்ல உடம்பே அன்றோ. [5]அவ் வுடம்போடே அணைந்து பிரிந்த இவ்

---

1. நாங்கள் செல்லுகிற ஊருக்கு அடையாளம் ஏது? என்ன, 'மற்றோர்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'வேத மார்க்க அநுசாரிகள் அன்றோ நீங்கள்' என்றது, வேதத்துக்காக மதுகைடபர்களைத் தேடித் திரிந்த அன்னத்தின் உருவமான சர்வேசுவரனோடு ஒத்த சாதியினரன்றோ நீங்கள் என்றபடி.

2. "கடலின் மேனிப்பிரான் கண்ணனை நெடுமாலை" என்பதற்கு, இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'கடல்போலே' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும். முதற் பொருளுக்கு, "கடலின்மேனி கண்ணபிரான் நெடுமாலை" என்று சொற்களைப் பிரித்துக் கூட்டிக் கொள்க. இரண்டாவது பொருளில், "நெடுமால்" என்றது, பெரியோன் என்றபடி.

3. இன்று எட்டாதபடி இருக்கிறவன் அன்று எளியனாய் வந்து கலக்கக் கூடுமோ? என்ன, 'அன்று தானும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. அறிவு இல்லாத சரீரம் நையக் கூடுமோ? என்ன, "முடியானே" என்ற திருவாய்மொழியிற் கூறப்பட்ட காரணங்கள் ஆகையாலே, கூடும் என்கிறார் 'தனித்தனியே' என்று தொடங்கி.

5. உடலம் நைவான் என்? தரித்திருந்தால் ஆகாதோ? என்ன 'அவ்வுடம்போடே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

வுடம்புகொண்டு பிழைக்க ஒண்ணாது என்னுமிடம் தாமேஅறிவாரே அன்றோ. ஒருத்தி -[1] 'இன்ன காட்டிலே மான்பேடை கிடந்து உழற்றாநின்றது' என்றால், எய்தவன் கை உணருமன்றோ. ஒருத்தி உருகும்-[2]எதிர்த்தலைக்கு இது இல்லை என்னுமிடம் அறிவியுங்கோள். உணர்த்துமினே-[3] தாம் இத் தலையை மறந்தமையை நினைவூட்டுங்கோள். உணர்த்தி அற்றாரை உணர்த்தவேணுமே. [4]அறியாதாரை அறிவித்தல் அன்னத்துக்கே பணியன்றோ; பண்டும் பிறங்கு இருள் நிறம் கெட அன்னமாயன்றோ அருமறை பயந்தது. அன்றிக்கே, [5]ஒருத்தி படும்பாடே என்று சொல்லுங்கோள் என்பாள் '**ஒருத்தி உருகும் என்று உணர்த்துமின்**'என்கிறாள் என்னுதல்.

## 557.

**உணர்த்தல் ஊடல் உணர்ந்துஉடன்** மேயும்மட வன்னங்காள்!
**திணர்த்தவண் டல்கள்மேல் சங்குசேரும் திருவண் வண்டூர்**
**புணர்த்த பூந்தண் துழாய்முடி நம்பெரு மானைக்கண்டு**
**புணர்த்த கையின ராய் அடியே னுக்கும் போற்றுமினே.**

**பொ - ரை :**—உணர்த்தலின் அருமையையும் ஊடலின் அருமையையும் உணர்ந்து பிரியாமல் சேர்ந்தே மேய்கின்ற இளமைபொருந்திய அன்னங்காள்! திணுங்கின வண்டல்களிலே மேலே சங்குகள் சேர்ந்திருக்கின்ற திருவண்வண்டூரிலே எழுந்தருளியிருக்கின்ற, தொடுக்கப்

---

1. "ஒருத்தி" என்றால், தெரியுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இன்னகாட்டிலே' என்று தொடங்கி. முதற்பத்து ஈட்டின் தமிழாக்கம், பக். 140. காண்க.

2. "ஒருத்தி உருகும்" என்பதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'எதிர்த்தலைக்கு' என்று தொடங்கி.

3. முற்றறிவினனுக்கு உணர்த்தவேண்டுமோ? என்ன, 'தாம் இத் தலையை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதனை விவரணம் செய்கிறார் 'உணர்த்தி அற்றாரை' என்று தொடங்கி.

4. எங்களுக்குத் தொழில் இதுவேயோ? என்ன, 'அறியாதாரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அறிவித்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பண்டும்' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 5. 7: 3.

5. "ஒருத்தி" என்பதற்கு, மூன்றாவதாக வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'ஒருத்தி' என்று தொடங்கி.

பட்ட பூக்களையுடைய குளிர்ந்த திருத்துழாயைத் தரித்த திருமுடியை யுடைய நம்பெருமானைக் கண்டு குவித்த கைகளையுடையீராகி அடியே னுக்கும் துதியுங்கோள்.

**வி - கு:**—அன்னங்காள்! திருவண்வண்டூர் நம்பெருமானைக் கண்டு புணர்த்த கையினராய் அடியேனுக்கும் போற்றுமின் என்க. திணர்த்த - கனமாகப் படிந்திருக்கின்ற.

**ஈடு:**—ஐந்தாம்பாட்டு. [1] திரியவும் சில அன்னங்களைக் குறித்து, அந்தத் தேசம் புக்காரை மறப்பிக்கும், நீங்கள் புக்கால் என்னையும் நினையுங்கோள் என்கிறாள்.

உணர்த்தல் ஊடல் உணர்ந்து உடன்மேயும் மட அன்னங்காள் - ஊடலையும் உணர்த்தலையும் உணர்ந்து உடனே திரிகிற அன்னங்காள்! [2] பிரிந்தால் பின்பு வரும் துக்கங்கள் எல்லாவற்றையும் நினைத்துக் கூடத் திரிகின்றன வாதலின், '**உடன்மேயும்**' என்கிறாள். [3] என்றது, பிரியவல்லார் ஆர், பின்பு நோவுபடவல்லார் ஆர், பின்பு நெய்யிலே கையிட வல்லார் ஆர் என்று கூடத் திரியாநிற்கும் என்றபடி. [4] 'குற்றவாள ராகிலன்றோ பின்பு பொறுப்பித்துக்கொள்ள வேண்டுவது' என்று காணும் இவற்றினுடைய சித்தாந்தம். [5] ஊடல் உணர்தல் புணர்தல் என்கிற மூன்றிலும், இவற்றுக்குப் புணர்தலே யாய்ச் செல்லுகிறபடி. ஒரு கலத்திலே ஒக்க உண்டு திரிவாரைப்போலே. [6] இனித்தான் போகப்பிரகாரந்தான் மூன்று வகைப்பட்டாயிற்று இருப்பது. அவை: ஊடல், உணர்தல், புணர்தல், என்பனவாம். "ஊடல் உணர்தல் புணர்தல் இவை

---

1. "அன்னங்காள்! அடியேனுக்கும் போற்றுமினே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "உணர்ந்து உடன்மேயும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பிரிந்தால்' என்று தொடங்கி.

3. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'என்றது' என்று தொடங்கி. 'நோவுபடவல்லார் ஆர்' என்றது, பிரிவினாலே பேடையானது ஊடுதல் செய்யப் பின் நோவுபடவல்லார் ஆர்? என்றபடி.

4. உடன் திரிந்தால் ஊடல் வாராதோ? என்ன, 'குற்றவாளராகி லன்றோ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. "மேயும்" என்ற நிகழ்காலத்தின் பொருளை விவரிக்கின்றார் 'ஊடல் உணர்தல்' என்று தொடங்கி.

6. ஊடலுக்கும் உணர்த்தலுக்கும் பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி அதனை அருளிச்செய்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி. "ஊடல்

மூன்றும், காமத்தாற் பெற்ற பயன்" என்று மூன்றனையும் பிரயோஜனமாகச் சொன்னார்கள் தமிழர்கள். இவற்றுள், [1] ஊடலாவது, எதிர்த்தலையோடு கூடினால் காரணமில்லாமல் வருவது ஒன்று. அதுதான், 'என்னை ஒழியக் குளித்தாய், என்னை ஒழியப் பூவைப் பார்த்தாய், உன் உடம்பு பூ நாறிற்று' என்றாற்போலே கூறுமவை. உணர்த்தலாவது, 'உனக்கு என்று குளித்தேன்', 'உனக்கு ஆம்' என்று பார்த்தேன், 'உன்வரவுக்கு ஒப்பித்தேன்' என்றாற் போலே கூறுமவை. இவை இரண்டற்கும் பின்னே நிகழ்வது கலவி. [2] இவை எல்லாமுண்டன்றோ இவனை உடையவனுக்கும்.

[3] அன்றிக்கே, உடன்மேயும் என்பதற்கு, "இது பரிசுத்தமானது, இது ருசியுள்ளது, இது நெருப்பினால் நன்றாகப் பக்குவப் படுத்தப்பட்டது" என்னாநின்றன என்னுதல். என்றது, ஒன்றை ஒன்று அகன்று இரண்டுங்கூடப் பட்டினி கிடக்கையன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி. [4] விழுக்காட்டில் உணரப்பெறாமை கெட்டோம் என்கிறாள். என்றது, 'கலவியை

---

உணர்தல்" என்பது, திருக்குறள். 1109. இதனால், ஊடல் உணர்த்தல் என்ற இரண்டும், புணர்ச்சியை வளர்ப்பனவாதலின், புணர்தலைப்போன்று போகப் பிரகாரமாய் இருக்கும் அவையும் என்றபடி.

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று.
உணலினும் உண்டல் அறல் இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது.

என்ற திருக்குறள்கள் ஈண்டுக் கருதத்தகும்.

1. இங்கு, திருக்குறளில் 'புலவி நுணுக்கம்' என்ற அதிகாரத்தையும், கம்பராமாயணம் பாலகாண்டம் பூக்கொய்படலம் 13-முதல், 22-முடியவுள்ள செய்யுட்களையும் ஒப்புநோக்கல் தகும்.

2. 'இவையெல்லாம்...உடையவனுக்கும்' என்றது, அன்னங்களைப் போன்று, இவனையுடையவனுக்கும், தாம் பலமாகச் சொன்ன மூன்றும் உண்டு என்றபடி.

3. "உடன்மேயும்" என்பதற்கு, மேல், கலந்து வசிக்கின்ற என்ற பொருளை அருளிச்செய்து, சேர்ந்து உண்கின்ற என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

"இதம் மேத்யம் இதம் ஸ்வாது நிஷ்டப்தம் இதம் அக்நிநா
ஏவம் ஆஸ்தே ஸதர்மாத்மா ஸீதயா ஸஹராகவ:"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 96 : 2.

4. "உணர்த்தல் ஊடல்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'விழுக்காட்டில்' என்று தொடங்கி. விழுக்காட்டில் - மேல் வரும் காரியத்தில்.

அதிகரிக்கச் செய்வதுகாண் இந்தப் பிரிவு' என்றால், 'அவ்வளவும் ஆறியிருக்கவல்லார்க்குஅன்றோ பின்பு போகத்தின் நிறைவுவேண்டுவது' என்னப் பெற்றிலேன் என்கிறாள் என்றபடி. அறிவில்லாத இவை அறிவின் பலத்தை அடைந்தன, அதனையுடைய நான் பெற்றிலேன் என்பாள் '**அன்னங்காள்!**' என்கிறாள். போகத்தால் வந்த துவட்சியடங்கலும் வடிவிலே தோற்ற இருக்கின்றனவாதலின் '**மட அன்னங்காள்**' என்கிறாள். வருவனவற்றை அறிந்து நீக்கிக்கொண்டிருப்பவர்கள், விழுக்காடு அறியாதே அகப்பட்டாருடைய காரியத்தைச் செய்து தலைக்கட்டவேண்டாவோ என்பாள் '**உணர்த்தல் ஊடல் உணர்ந்து உடன்மேயும் அன்னங்காள்**' என்கிறாள். [1]இந்நிர்த்தேசத்தாலும் இத்திருவாய்மொழியடங்கலும் ஊடல் அடங்கியிருத்தல் தோற்றுகிறது. திணர்த்த வண்டல்கள்மேல் சங்கு சேரும் திருவண்வண்டூர் - அழுக்குக்கு இறாய்க்கக் கடவ சங்குகளானவை நீர் உறுத்தினவாறே கொழுத்த வண்டல்களிலே சேராநிற்கும் திருவண்வண்டூர். திணர்த்த வண்டல் - செருமின வண்டல்கள். அறிவில்லாத பொருள்களுங்கூடக் கால்வாங்கமாட்டாத தேசங் கண்டீர் என்பாள் '**சங்குசேரும்**' என்கிறாள். இதனால், பிரமாணங்கட்குக் கட்டுப்பட்டவர் அல்லாதாரையும் மீள ஒட்டாத தேசங் கண்டீர் என்பதனைத் தெரிவித்தபடி. வேறு போக்கிடம் இன்றிக்கேயிருத்தலின் '**சேரும்**' என்கிறாள். என்றது, "மீண்டு வருதல் இல்லாதது" என்னும்படியே, மீட்சியின்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி. [2]மிருதுத்தன்மையாலும் குளிர்ச்சியாலும் வேறு ஒன்றனை நினைக்க ஒட்டாதிருக்கை. [3]வெள்ளைகளையும்கூடக் காற்

---

1. 'இந் நிர்த்தேசத்தாலும்' என்றது, "உணர்த்தல் ஊடல் உணர்ந்து" என்கிற நிர்த்தேசத்தாலும் என்றபடி. என்றது, "கைகள் கூப்பி", "பாதம் கைதொழுது" என்கிற இடங்களிலே பிரணயரோஷம் தோன்றுவது போன்று, "உணர்த்தல் ஊடல் உணர்ந்து" என்கிற இங்கும் பிரணய ரோஷம் தோன்றுகிறது என்றபடி. 'நிர்த்தேசத்தாலும்' என்ற உம்மை, "கைகள் கூப்பி", "பாதம் கைதொழுது" என்பனவற்றைத் தழுவுகிறது. நிர்த்தேசம் - குறித்துக் காட்டுதல்.

2. மீட்சி இல்லாமைக்குக் காரணம் யாது? என்ன, 'மிருதுத்தன்மையாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'அழுக்குக்கு இறாய்க்கக் கடவ' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தின் விவரணம் 'வெள்ளைகளையும்' என்று தொடங்கும் வாக்கியம். 'வெள்ளை' என்றது, விரக்தனையும், சங்கினையும் காட்டும்.

கட்டுகிறதன்றே மண்பாடு. ஆக, இரண்டாம் அடியால் வாராது ஒழிந்த இடம் அவன் குற்றம் அன்று கண்டீர் என்பதனைத் தெரிவித்தபடி.

புணர்த்த பூந்தண் துழாய் முடி நம்பெருமானைக் கண்டு - தொடுக்கப்பட்டு அழகியதாய்ச் சிரமத்தைப் போக்கக்கூடியதான திருத்துழாயினைத் திருமுடியிலேயுடையவனாய், அதனாலே என்னைத் தனக்கே உரிமையாக்கினவனைக் கண்டு. என்றது, [1] நீங்கள் சென்று அறிவிக்குமித்தனையே வேண்டுவது, இங்குத்தைக்கு வருகைக்கு ஒப்பித்தபடியே இருக்கிறவன் என்பதனைத்தெரிவித்தபடி. அன்றிக்கே, இத்தலையைத் தோற்பித்த வேண்டப்பாடு தோற்றும்படி வளையம் வைத்து முதன்மை கொண்டாடி இருக்கின்றவனைக் கண்டு என்று பணிப்பர் **பட்டர்**. என்றது, தம் ஒப்பனையையும் முதன்மையையும் நம்மோடே காட்டியிருக்கிறவனைக் கண்டு என்றபடி. புணர்த்த கையினராய் - [2] அங்கே சென்றால் தொழப் பார்த்திராமல், கைஒத்துச் செல்லுங்கோள் கண்டீர். என்றது, [3] வழியே பிடித்துத் தொழுதுகொடு போங்கோள்; [4] இல்லையாகில், [5] "பரவசப்பட்டவர்களாய் நமஸ்காரம் முதலான காரியங்களைச்

1. "புணர்த்த" என்றதற்கு, பூர்வர்கள் நிர்வாஹத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'நீங்கள் சென்று' என்று தொடங்கி.

2. பட்டர் நிர்வாஹத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'அங்கே சென்றால்' என்று தொடங்கி. கை ஒத்து - அஞ்சலி செய்துகொண்டு.

3. "துன்பமொரு முடிவில்லை; திசைநோக்கித் தொழுகின்றான்;
எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்றான்"

என்பது, கம்பராமாயணம். (குகப். 30.)

4. அங்கே சென்ற பின்பு தொழுதால் வரும் குற்றம் யாது? என்ன, 'இல்லையாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'இல்லையாகில்' என்றது, வழியே பிடித்துத் தொழுதுகொண்டு போகாமல், அங்கே சென்ற பின்பு தொழுதீர்களாகில் என்றபடி.

5. "த்ருஷ்டாக்ருஷ்ணம் ததாயாந்தம் ப்ரதபந்தமிவ ஓஜஸா
யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவஸா: ப்ரதிபேதிரே"

என்பது, பாரதம் சபாபர்வம்.

'பரவசப்பட்டவர்களாய்' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, நம்மழகு தொழுவிக்கத் தொழுதீர்கோளித்தனை; "நநமேயம்" என்பதே உங்களுக்கு நினைவு என்பது.

செய்தார்கள்" என்கிற கண்ணழிவிலே செலவு எழுதுவர்கண்டீர் என்றபடி. அடியேனுக்கும் போற்றுமினே - [1]நீங்களும் அவனைப் போலே செய்யாதீர்கள், அங்கே புக்கால் என்னையும் நினைக்கவேண்டும். [2]அதாவது, புக்காரை எல்லாம் தத்தமது பிரயோஜனத்திலே மூளப் பண்ணவல்ல தேசமாகையாலே, இத் தலையை நினைக்க விரகு இல்லையன்றோ; [3]"முக்தன் இச் சரீரத்தை நினைப்பதில்லை" என்னும்படியன்றோ இருப்பது. அடியேனுக்கும் போற்றுமின் - அடியேன் இடையாட்டத்தையும் அத்தலைக்கு அறிவிக்கவேண்டும். (5)

## 558.

போற்றி யானிரந்தேன் புன்னை மேலுறை பூங்குயில்காள்!
சேற்றில் வாளை துள்ளும் திருவண்வண் டூருறையும்
ஆற்றல் ஆழி யங்கை அமரர்பெரு மானைக்கண்டு
மாற்றம் கொண்டருளீர் மையல் தீர்வதொரு வண்ணமே.

**பொ - ரை :**—புன்னைமரத்தின் மேல் தங்கியிருக்கின்ற அழகிய குயில்களே! யான் போற்றி இரந்தேன்; சேற்றிலே வாளைமீன்கள் துள்ளி விளையாடுகின்ற திருவண்வண்டூர் என்னும் திவ்விய தேசத்தில் நித்தியவாசம் செய்கின்ற பெருமிடுக்கினையுடைய சக்கரத்தை அழகிய கையிலே தரித்திருக்கின்ற நித்தியசூரிகளுக்குத் தலைவனை, எம்பெருமானைக் கண்டு, என் மயக்கம் நீங்குவதற்கு உரியது ஒருதன்மையாக மறுமாற்றத்தைக் கொண்டு வாருங்கோள்.

---

1. "அடியேனுக்கும்" என்ற உம்மையால் உங்கள் போகத்தைப் பார்த்து, நீங்களும் ஈசுவரனைப்போலே அங்கே கால் தாழாதே, என்காரியத்தையும் அறிவிக்கவேண்டும் என்று தோற்றுகிறதே அன்றோ; அதனை அருளிச்செய்கிறார் 'நீங்களும்' என்று தொடங்கி.

2. உன் காரியத்துக்காகப் போகிற நாங்கள் உன்னை நினையாதிருப்பேமோ? 'என்னையும் நினைக்கவேண்டும்' என்றது, என்கொண்டு? என்ன, 'அதாவது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இங்கே, "நீரிருக்க மடமங்கைமீர்!" என்னும் திருவரங்கக் கலம்பகச் செய்யுள் அநுசந்தேயம்.

3. அங்கே போனால் நினையாததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'முக்தன்' என்று தொடங்கி.

"நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம்"

என்பது, சாந்தோக்யம். 8. 12 : 3.

இடையாட்டம் - காரியம்.

**வி - கு :**— பூங்குயில்காள்! யான் போற்றி இரந்தேன், உறையும் பெருமானைக் கண்டு மையல் தீர்வதொரு வண்ணம் மாற்றம் கொண்டருளீர் என்க. 'ஆற்றல்' என்பதனை, பெருமானுக்கு விசேடணமாக்கலுமாம். மையல் - மயக்கம்.

**ஈடு :**—ஆறும்பாட்டு. [1]சிலகுயில்களைக் குறித்து என் நிலையை அவனுக்கு அறிவித்து அங்குநின்றும் ஒரு மறுமாற்றம் கொண்டுவந்து அருளிச்செய்யவேண்டும் என்கிறாள்.

போற்றி - [2]சம்சார வெக்காயம் தட்டாதபடி, வைமாநிகர் விமானங்களிலே உயர இருக்குமாறு போலே, புன்னைமரத்திலே உயர இருந்தன சிலகுயில்கள்; அவற்றின் செவிகளிலே தன் துயரத்தைக் காட்டுகின்ற ஒலி படும்படி உயர '**போற்றி**' என்கிறாள். [3]முகம் பார்க்கைக்குச் சொல்லுகிற பாசுரம் இது போலே காணும். [4] இந்த ஒலி செவிப்பட்டால் காரியம் செய்தல்லது நிற்கவொண்ணாது என்றிருக்கிறாள் காணும். யான் இரந்தேன் - அவன்தான் இரக்க இருக்கக்கடவ வேண்டப்பாடுடைய நான் இரந்தேன்; [5] ஆள்விடுவானும் இரப்பானும் எல்லாம் தானேஅன்றோ. [6] அன்றிக்கே, "இரகுவம்சத்தை மகிழச்

---

1. "பூங்குயில்காள்! மாற்றம் கொண்டருளீர்" என்பன போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "போற்றி" என்னும் எடுத்தல் ஓசைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சம்சார வெக்காயம்' என்று தொடங்கி. இதனால், நீங்கள் உங்கள் பேடைகளோடே கூடப் புன்னைமேலே ஏகாந்தமாக அநுபவிக்கிற இன்பம் நித்தியமாகச் செல்லவேணும் என்று மங்களாசாசனம் செய்கிறாள் என்றபடி.

3. மங்களாசாசனம் செய்வது எதற்காக? என்ன, 'முகம் பார்க்கைக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இதனால், தன் முகம் பார்த்துக் காரியம் செய்கைக்கு மங்களாசாசனம் செய்கிறாள் என்றபடி.

4. மங்களாசாசனம் செய்தால் காரியம் செய்யவேண்டி இருக்குமோ? என்ன, 'இந்த ஒலி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இதனால், தன் தன்மையைக் கொண்டு நினைக்கிறாள் என்றபடி.

5. அவன் அப்படி இரக்குமோ? என்ன, 'ஆள்விடுவானும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. "யான் இரந்தேன்" என்பதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

ஸ ப்ராஞ்ஜ: சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:
ஸீதாம் உவாச அதியஶா: ராகவஞ்ச மஹாவிரதம்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 31 : 12.

செய்கின்ற இளையபெருமாள், தமையனுடைய இரண்டு திருவடிகளையும் நெருங்கப் பிடித்துக்கொண்டு **பிராட்டியைக் குறித்துச்** சொன்னார், சத்தியவிரதரான பெருமாளைப் பார்த்தும் சொன்னார்" என்கிறபடியே, புருஷகாரத்திற்கு வழியாக எல்லாராலும் இரக்கப்படும் யான் இரந்தேன் என்னுதல். இரந்தேன் - நியமிக்கிறேன் அல்லேன், இரக்கின்றேன். இரப்பார் காரியம் செய்தறவேணும் என்னும் நினைவாலே, '**இரந்தேன்**' என்கிறாள். **இரந்தேன்** என்று அவற்றின் நெஞ்சிலே புண் படுத்துகிறாள். புன்னைமேல் உறை பூங்குயில்காள் - வைமாநிகரைப் போலே மனிதர்களுடைய வாசனை நடையாடாதபடி உயர்ந்த இடத்தில் வாழ்கின்ற, கலவியினாலே விளங்குகின்ற குயில்காள்! உங்களைப் போகவிடுதல் தரும ஹாநியாய் இருக்கின்றது! ஆகிலும், என்செல்லாமையாலே செய்கிறேன் என்பாள் '**உறை**' என்கிறாள். போற்றி -[1] பெருமாளும் பிராட்டியுமாகக் காட்டிற்கு ஏகாந்த போகத்துக்குப் போகாநிற்கச் செய்தே நடுவே இராவணன் வந்தாற்போலே, உங்கள் போகத்துக்குப் பிரிவுஉண்டாக்க நான் தோன்றினேன் போலே இருந்தது; இத்தால் ஒருவியசனம் இன்றிக்கே ஒழிந்திடுக உங்கள் போகத்துக்கு என்கிறாள் என்றபடி. [2]**பிள்ளையமுதனார், திருவிருந்தவரைமார்வனை**, 'புன்னைமேல் என்னும் இப் பதங்கட்குப் **பட்டர்** அருளிச்செய்தது என்?' என்ன, 'தன் துன்பஒலி அவற்றின் செவியிலே படும்படி உயரச் சொல்லுகிறாள் என்று அருளிச்செய்தார்' என்ன, 'நெய்தல் நிலத்திலே [3]புன்னை படர்ந்தன்றோ கிடப்பது, இங்ஙனே சொல்லக் கூடுமோ?' என்ன, அவன் பட்டர்பாடே வந்து, 'இங்ஙனே

---

1. "போற்றி" என்பதற்கு, வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'பெருமாளும்' என்று தொடங்கி.

2. 'உயர "போற்றி" என்கிறாள்' என்று, தாம் மேலே அருளிச் செய்ததற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'பிள்ளையமுதனார்' என்று தொடங்கி. என்றது, "போற்றி" என்றது, எடுத்தல் ஓசையாகையாலே, "வானோர்வண் கமுகு", "சேண்சினை ஓங்குமரச் செழுங்கானல்" என்றபடியே, அங்குள்ள புன்னைகளும் உயர்ந்து ஓங்கி இருக்கும் என்கிறபடி.

3. "பருவத் தேனசைஇப் பல்பறைத் தொழுதி
உரவத் திரைபொருத திணிமண லடைகரை
நனைந்த புன்னை மாச்சினை"

என்பது, குறுந்தொகை, 175.

பணித்தார்' என்ன, [1] 'இவ்வர்த்தத்துக்கு நிர்ணயகம், இசையாயிற்று; அது, '**போற்றி**'என்று, உயரச்சொல்லியிருக்குமோ? தாழச்சொல்லி இருக்குமோ' என்று அருளிச்செய்தார்.

சேற்றில் வாளை துள்ளும்- [2] பிரளயத்திலே கொண்டுபோய் விட்டாலும் யானைக்கன்று போலே செருக்கிச் சேறு ஆக்குமாயிற்று வாளைகள். 'அலைகடல் நீர்குழம்ப அகடுஆட ஓடி அகல் வான் உரிஞ்ச முதுகில், மலைகளை மீது கொண்டு வரு மீனை' என்னுமாறுபோலே. [3] சேதனம் அசேதனம் என்னும் வேறுபாடு இல்லாமல் களித்து வாழ்கின்ற தேசமாயிற்று. அவ்வூரில் பொருள்கள் செருக்கி வாழாநிற்கச்செய்தே கண்டீர் நான் பிரிந்திருந்து தூது விடுகிறது. ஆற்றல் ஆழி அம் கை அமரர் பெருமானைக் கண்டு - [4] அடியார்கள் விஷயத்தில் எல்லாம்செய்தாலும் 'ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்று நோவுபட்டு இருப்பான் ஒருவனுமாய், அவர்கள் ரக்ஷணத்துக்குக் கருவியான திருவாழியைக் கையிலேயுடையனாய்,நான் காண ஆசைப்பட்ட கையும் திருவாழியுமான அழகை விருப்பமில்லாதார்க்குக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்குமவனை. அன்றிக்கே, 'ஆற்றல்' என்பதனைத் திருவாழிக்கு அடைமொழியாகக் கொண்டு, அடியார்களைக் காப்பாற்றுவதில் அவனைக்காட்டிலும் கிருபையையுடைய திருவாழியைக் கையிலேயுடையவனை என்னுதல். [5] அன்றியே, 'ஆற்றல்' என்பதனை, அவன்

---

1. "புன்னை ஓங்கிய புலாலஞ் சேரி
இன்னகை யாயத் தாரோடு
இன்னுமற் றோவிவ் வழுங்க லூரே"

என்பது, குறுந்தொகை. 351.

2. "தேறு நீர்ப் பம்பை" என்று, தண்ணீர் நிறைவுற்றிருப்பதாகச் சொல்லியிருக்க, "சேற்றில் வாளை துள்ளும்" என்கிறது என்? என்ன, 'பிரளயத்திலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். பிரளய சலத்தையும் சேறு ஆக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அலைகடல்' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 11. 4: 1.

3. "வாளை துள்ளும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சேதனம்' என்று தொடங்கி. இதனால் பலித்த மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவ்வூரில்' என்று தொடங்கி.

4. பூர்வர்கள் நிர்வாஹத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'அடியார்கள் விஷயத்தில்' என்று தொடங்கி. இங்கு, "ஆற்றல்" என்பதற்கு, அருள் என்பது பொருள்.

5. பட்டர் நிர்வாஹத்திலே பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றியே' என்று தொடங்கி. இங்கு, "ஆற்றல்" என்பதற்கு, '**பொறை**' என்பது பொ

தனக்கே அடையாகக்கொண்டு, பிரிவுக்குச் சிளையாதே ஆறி யிருப்பானுய்க் கையும் திருவாழியுமான சர்வேசுவரனை என்று **பட்டர்** அருளிச்செய்வர். மாற்றம் கொண்டருளீர் - ஒரு வார்த்தை கொண்டு வந்தருள வேண்டும். எப்படிப்பட்ட வார்த்தை கொண்டுவர எனின், என்நிலை இருந்தபடி கண்டீர் கோளே, இது தீர்வது ஒருவழி நீங்களே தேடிக்கொண்டு வந்து சொல்லுங்கோள். [1] "காணப்பட்டாள் சீதை" என்றாற் போலே. மையல் தீர்வது ஒருவண்ணம் மாற்றம் கொண்டரு ளீர் - என்கிலேசம் தீர்வது ஒருபிரகாரம் வார்த்தைகொண்டு வந்தருளிச்செய்யவேண்டும்.[2] தூதுவிடுகிற தான் ஜனகராஜன் திருமகளாகவுமாம், விடப்படுகிறவை திர்யக்குக்களையாகவு மாம், பகவத் விஷயத்தில் சேர்க்கின்றவர்களாயிருப்பாரை இங்ஙன் அல்லது சொல்லவொண்ணுது காணும். (6)

## 559.

**ஒருவண்ணம் சென்று புக்கு எனக்கொன்றுரை ஒண்கிளியே!**
**செருஒண் பூம்பொழில்சூழ் செக்கர் வேலைத் திருவண்வண்டூர்**
[3] **கருவண்ணம் செயயவாய் செய்யகண் செய்யகை செய்யகால்**
**செருஒண் சக்கரம் சங்குஅடை யாளம் திருந்தக்கண்டே.**

---

1. இது தீர்வது ஒரு வழி தேடிக்கொண்டு வந்து சொல்லுகையாவது என்? என்ன, 'காணப்பட்டாள்' என்று தொடங்கி விடை அருளிச்செய்கிருர்.

"ஸஃ அபிகம்யமஹாத்மாநம் க்ருத்வா ராமம் ப்ரதக்ஷிணம்
ந்யவேதயத் அமேயாத்மா த்ருஷ்டா ஸீதேதி தத்வதஃ"

என்பது, ஸ்ரீராமா. பால. 1 : 78.

கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்
தெண்டிரை யலைகடல் இலங்கைத் தென்னகர்
அண்டர் நாயக! இனித் துறத்தி ஐயமும்
பண்டுள துயரும் என்று அநுமன் பன்னுவான்

என்பது, கம்பராமாயணம்.

2. 'சொல்லீர்' என்னுதே, "அருளீர்" என்றதற்கு, பாவம் அருளிச் செய்கிருர் 'தூதுவிடுகிற' என்று தொடங்கி. முதற்பத்து ஈட்டின் தமிழாக்கம். 148-ஆம் பக். பார்க்கத்தகும்.

3. பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணுத கண்ணென்ன கண்ணே!
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே!

என்பது, சிலப்பதிகாரம்.

**பொ - ரை :**—ஒண்கிளியே! ஒன்ரோடு ஒன்று மாறுபட்டுப் பூக்களைச் சொரிகின்ற அழகிய சோலைகளாற் சூழப்பட்ட செந்நிறம் பொருந்திய கடற்கரையிலுள்ள திருவண்வண்டூர் என்னும் திவ்விய தேசத்திலே ஒருவகையாகச் சென்று புக்கு, கரியநிறத்தையும் சிவந்த திருவாயினையும் சிவந்த திருக்கண்களையும் சிவந்த திருக்கைகளையும் சிவந்த திருவடிகளையும் போரைச் செய்கின்ற ஒளிபொருந்திய சக்கரத்தையும் பாஞ்சஜன்யம் என்னும் சங்கையும் அடையாளமாக நன்கு பார்த்து, நான் சொல்லும் ஒருவார்த்தையைச் சொல்லுவாய் என்கிருள்.

**வி - கு :**—கிளியே! திருவண்வண்டூர் சென்று புக்குத் திருந்தக் கண்டு எனக்கு ஒன்று உரை எனக. செரு - போர்; இங்கே, மாறுபாடு. செக்கர் - செந்நிறம். வேலை - கரை. திருவண்வண்டூர், மேலைக் கடற்கரையிலே உள்ளது.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [1] கிளிகள் சிலவற்றைப் பார்த்து, அவன் அடையாளங்களைச் சொல்லி, இவ் வடையாளங்களின் படியே கண்டு எனக்காக ஒருவார்த்தை சொல்லுங்கோள் என்கிருள்.

ஒரு வண்ணம் சென்று புக்கு - இதற்கு இரண்டுபடியாக அருளிச்செய்வர்கள். இத்தலையில் தனிமை நினையாதே போய் நிற்கையாலே, போர முதலிகளாய் இருப்பர்; மேன்மேலெனப் பிரம்புகள் விழும், அதனைப் பொறுத்துப் போய்ப் புகுங்கோள் என்று அருளிச்செய்வர் **பட்டர்**. அன்றிக்கே, செல்லும் வழி, நெஞ்சினைக் கொள்ளை கொள்ளும்படியான இனிமை நிறைந்திருக்கும்; அதிலே கால்தாழாதே வருந்தி ஒருபடி சென்று புகுங்கோள் என்பது முன்புள்ள முதலிகள் நிர்வாஹம். [2] "பழைய தன்மைகளை அறிந்த சுமந்திரன் ஜனங்கள் நிறைந்திருக்கின்ற அந்தப்புர வழியைக் கடந்து" என்றும், "பொன்னியலு மாடக் கவாடம் கடந்து புக்கு" என்றும் கூறுமாறு

---

1. "ஒண்கிளியே! கருவண்ணம் செய்யவாய் செய்யகண்" என்பன போன்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. இனிமையாலே கடந்து போக ஒண்ணுமைக்குப் பிரமாணங்கள் மூன்று காட்டுகிருர் 'பழைய தன்மைகளை' என்று தொடங்கி.

"ஸ: ததந்த:புரத்வாரம் ஸமதீத்ய ஜநாகுலம்
ப்ரவிவிக்தாம் தத: கக்ஷ்யாம் ஆஜகாம புராணவித்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 19 : 1.

"பொன்னியலும்" என்பது, பெரிய திருமடல்.

சுலோகத்தில் "அதீத்ய" என்னுமல், "ஸமதீத்ய" என்கையாலும்,

போலே. [1]"நன்றாக மலர்ந்த மலர்களையுடைய தடாகங்களையும் தெள்ளிய தண்ணீர் நிறைந்த ஆறுகளையும் பார்த்துக் கொண்டு காரியத்திலே நோக்குடையவராய் விரைந்து போனார்கள்." என்றது, வழியின் அழகில் கண்வைக்காமல் போனார்கள் என்கை. என்றது, "கார்யவஸாத்...ஜக்முः—காரியத்திற்கு வசப்பட்டவராய்க் கொண்டு போனார்கள்" என்றபடி. அப்படியே, இனிமை அளவிறந்திருக்கையாலே, இவற்றிலே கால் தாழாமல் போய்ப் புகுகை [2]சாலப் பணியாயிருக்கும். எனக்கு-[3]பரிபவத்துக்காக உங்களுக்கு இராய்க்கலாம்படியோ! நான் இருக்கிறது. [4]"காட்டில் அரக்கர்களால் துன்புறுத்தப்பட்ட முனிவர்கள் பலரும், ஸ்ரீ ராமபிரானைப் பார்த்து எங்கள் சரீரங்களைப் பார்க்கவேண்டும், எழுந்தருளவேண்டும்" என்றது போன்றும், விபீஷணன் [5]"என்னைப் பெருமாளுக்கு அறிவியுங்கோள்" என்றது போன்றும், விரஹநோயால் தின்னப்பட்ட தன்வடிவினைக் காட்டுகிறாள். [6]என்னைக் கண்ட உங்களுக்கு இனிமையிலே நெஞ்சு செல்லுதல், பரிபவம் கண்டு இராய்த்தல்

---

பாசுரத்தில் "கடந்து" என்கையாலும், இனிமையாலே, கடந்துபோகையில் உண்டான அருமை தோற்றுகிறது.

1. ஸராம்ஸி ச ஸ்புல்லாநி நதீஶ்ச விமலோதகாः
நிரீக்ஷமாணா ஜக்முः தே தூதாः கார்யவஸாத் த்ருதம் "
என்பது, ஸ்ரீராமா. அயோத். 68 : 14.

2. சாலப் பணியாயிருக்கும் - மிகவும் கஷ்டமாயிருக்கும்.

3. பிரம்புகள் விழாநிற்கப் போகப் போமோ? என்ன, பட்டர் நிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார் 'பரிபவத்துக்காக' என்று தொடங்கி. என்றது, என் துன்பத்தைக் கண்டால், அவன் செய்கிற பரிபவம் கண்டு உங்களுக்குப் பிற்காலிக்கலா யிருக்கிறதோ? என்றபடி.

4. "எனக்கு" என்ற அளவில், துன்பம் தோற்றுமோ? என்ன, வேஷத்தைக் கண்டபோதே துன்பமும் தெரியுமென்று அதனைப் பிரமாண மூலமாகக் காட்டுகிறார் 'காட்டில்' என்று தொடங்கி.

"ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம்
ஹதாநாம் ராக்ஷஸைः கோரைः பஹூநாம் பஹுதா வநே"
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 6 : 16.

5. "ஸர்வலோக ஶரண்யாய ராகவாய மஹாத்மநே
நிவேதயத மாம்க்ஷிப்ரம் விபீஷணம் உபஸ்திதம்"
என்பது, ஸ்ரீராமா. யுத். 17.

6. பட்டர், முன்புள்ள முதலிகள், இவர்களுடைய நிர்வாஹங்களை விவரணம் செய்கிறார் 'என்னைக் கண்ட' என்று தொடங்கி,

செய்யலாம்படியோ இருக்கிறது. [1]பிறர்காரியம் செய்வார்க்கு அவை பார்க்க ஒண்ணுமோ? [2]ஒன்று உரை - ஒருவார்த்தை சொல்வாய். அன்றியே, என்னுற்றாமையாலே சொல்லுகிறே னித்தனை, இருகால் மட்டுச் சொல்லுகை மிகையாம்படியன்றோ அவன் இருப்பது என்றுமாம். [3] இனிமையாலே கால் கட்டுப் பட்டு நின்றானத்தனை. துன்புறுகின்றவர்கள் ஒருதலையானல், இனிமையிலே நெஞ்சு செல்லுதல், மறுத்துச் சொல்லப் பொறுத்தல் செய்யும் விஷய மன்று கண்டாய். எனக்கு ஒன்று உரை-[4]என் இடையாட்டம் ஒன்று சொல்லுங்கோள். ஒண்கிளியே - [5] இளமையும் பேச்சும் வாயில்பழுப்பும் வடிவில் பசுமையும் அவனோடே போலியாயிருக்கையாலே உன்னைக் கண்டு கொண்டிருக்க அமைந்திருக்க, கைப்புகுந்த உன்னையும் இழக்கப்புகுகின்றேனித்தனையன்றோ.

செரு ஒண் பூம்பொழில் சூழ் - செருவினை விளைவிப்பதாய் அழகிதான பூம்பொழிலாலே சூழப்பட்டிருக்கை. [6] அங்கு இருவராய் வாழ்கின்றவர்க்கெல்லாம் எப்பொழுதும் மாறுபட்ட எண்ணங்களாய்ச் செல்லாநிற்குமத்தனை. என்றது, **'என்னைப் பாராதே பூவை அமைந்திருக்கப் பார்த்தாய், நான் பறிக்க நினைத்த பூவைப் பறித்தாய், அணைப்பதற்கு முன்னே**

1. பரிபவம் முதலியவற்றைப் பாராமல் உன்காரியம் செய்யவேண்டுகிறது என்? என்ன, 'பிறர் காரியம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். பிறர் காரியம் செய்வார் - பரோபகார சீலர்கள்.

2. "ஒன்று உரை" என்பதற்கு, முதற்பொருள், ஒருவார்த்தை மாத்திரம் சொல் என்பது. இரண்டாவது பொருள், ஒருகால் சொல்ல அமையும் என்பது.

3. இப்படிச் சுலபனுனல், இத்தனை நாளாக உன்னை உபேக்ஷித்து வாராமல் இருப்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனிமையாலே' என்று தொடங்கி.

4. "எனக்கு" என்பதற்கு, 'எனக்காக' என்று, மேலே ஒரு பொருள் அருளிச்செய்து, 'இடையாட்டம்' என்று வேறும் ஒரு பொருள் அருளிச் செய்கிறார் 'என் இடையாட்டம்' என்று தொடங்கி. இடையாட்டம் - தன்மை.

5. ஒண்மைக்கு அர்த்தம் அருளிச்செய்து கொண்டு, அதில் இவளுக்கு உண்டான மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இளமையும்' என்று தொடங்கி.

6. யாருக்குச் செருவினை விளைவிக்கும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அங்கு' என்று தொடங்கி. என்றது, ஊடுதலைக் குறித்தபடி.

**உன்உடம்பு பூநாறிற்று**' என்று இப்படிச் சீறுபாறு என்று சொல்லாநிற்குமத்தனை. அன்றிக்கே, [1]'சலங்கொண்டு மலர் சொரியும்' என்கிறபடியே, இசலிப் பூக்கும் என்றுமாம். செக்கர்வேலைத் திருவண்வண்டூர்-இளமணல் எக்கர்களிலே விழுந்த மலர்களின் தாதுக்களாலும் சுண்ணங்களாலும் சிவந்த இடங்களையுடைத்தாயிருக்கை. அன்றிக்கே, கடற்கரையாகையாலே சிவந்த மணலீட்டையுடைத்தாயிருக்கும் என்னுதல். இவை எல்லாவற்றாலும் போகத்திற்குத் தகுதியான தேசம் என்பதனைத் தெரிவித்தபடி.

கருவண்ணம்-இத்தலையைத் தனக்கே உரியதாக எழுதிக்கொண்ட வடிவு இருக்கிறபடி. செய்ய வாய்-அதுதான் மிகையாம்படி, '**நான் உனக்கு**' என்றாற் போலே சொல்லப் புக்கு விக்கின திருப்பவளம். செய்ய கண் - 'அது சொல்லளவே அன்று, அகவாயிலும் உண்டு' என்று தோற்றுகிற திருக்கண்கள்.[2] அகவாயில் உள்ளனவற்றிற்கெல்லாம் ஆனைத்தாள் அன்றோ திருக்கண்கள். செய்ய கை - அகவாயில் உண்டான சிநேகத்தினைச் [3]செயல் அளவாகச் செய்து காட்டுகின்ற திருக்கைகள். செய்ய கால் - அவை யனைத்திற்கும் தோற்று விழும் துறை, திருவடிகள். செரு ஒண் சக்கரம் சங்கு-இவ்வடிவழகையெல்லாம்[4] காத்து ஊட்டவற்றனவுமாய், அஸ்தாநேபயசங்கை பண்ணியுத்தோந்முகமாய், கைகழியப் போய் நின்று ரக்ஷிப்பதும், கைவிடாதே வாய்க்கரையிலே நின்று ரக்ஷிப்பதுமான

---

1. "சலங்கொண்டு" என்பது, பெரியதிருமொழி. 3: 9: 1. இசலி - மாறுபட்டு.

2. அப்படி அகவாயில் உள்ளனவற்றிற்கெல்லாம் பிரகாசகமாய் இருக்குமோ? என்ன, 'அகவாயில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ஆனைத்தாள் - துவாரம்.

3. 'செயல் அளவாக' என்றது, எடுத்து அணைத்தலைக் குறித்தபடி.

4. காத்து ஊட்டுகைக்காகவும், அஸ்தாநே பயசங்கையாலும் யுத்தோந்முகமாய் என்றபடி. காத்தூட்டுகையாவது, அநுபவிக்கின்றவர்களுக்கு விரோதியைப் போக்கி அநுபவிப்பித்தல். அஸ்தாநே பயசங்கையாவது, இடமல்லாதவிடத்திலும் (பரமபதத்திலும்) பயத்தாலே ஐயம் கொள்ளுதல். கை கழியப் போய் நின்று ரக்ஷிப்பது, திருவாழி. கைவிடாதே வாய்க்கரையிலே நின்று ரக்ஷிப்பது, திருச்சங்கு. வாய்க்கரை என்பதற்கு, மேலெழ என்றும், வாய் அருகில் என்றும் இருபொருள் கொள்க.

திவ்விய ஆயுதங்கள். கிட்டினாரை [1]"இன்னார் என்று அறியேன்" என்று மதிமயங்கப் பண்ணுவிக்கும் திவ்விய ஆயுதங்கள் ஆதலின் 'ஒண்' என்கிறாள். அடையாளம் - [2]திவ்விய அவயவங்களைப் போன்று திவ்விய ஆயுதங்களும் அவனுக்கேயுரிய அடையாளமாயிருக்கை. [3]"பெருமாளுடையவும் இளையபெருமாளுடையவுமான அடையாளங்கள் எவையோ அவை என்னால் நன்றாகப் பார்க்கப்பட்டன அவற்றைக் கேட்பாயாக" என்றான் திருவடி. திருந்தக் கண்டு - என்னைப்போன்று மனத்தால் அன்றிக்கே வெளிப்படையாகப் புறக்கண்களால் கண்டு. இவ் விஷயத்தில் காட்சியன்றோ பிரயோஜனம், அது உங்களுக்கு முற்படப் பெற்றதே என்பாள் 'கண்டு' என்கிறாள். [4]பிராட்டியினுடைய காரியம் செய்தால், அவளுக்கு முன்னே பேறு இவனுக்கு முற்பட்டிருக்குமன்றோ. "திருவடியை ஆலிங்கனம் செய்து கொண்டார்" என்பது ஸ்ரீராமாயணம். அன்றிக்கே, திருந்தக் கண்டே - [5]இத் தலையில் பசலை நிறத்தைக் கண்ட நெஞ்சாறல் எல்லாம் தீரும்படி, கலவியிலும் பிரிவிலும் ஒருபடியாயிருக்கும் வடிவைக்காணப்போகிறாய் அன்றோ என்

---

1. இன்னார் என்றறியேன்
அன்னே! ஆழியொடும்
பொன்னார் சார்ங்கமுடைய அடிகளை
இன்னார் என்றறியேன்.

என்பது, பெரிய திருமொழி. 10. 10 : 9.

2. திவ்ய அவயவங்களோடு திவ்ய ஆயுதங்களையும் சேர்த்துக் கூறியது எதற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திவ்ய அவயவங்களைப் போன்று' என்று தொடங்கி.

3. திவ்ய அவயவங்களை அடையாளமாகச் சொன்ன இடம் உண்டோ? என்ன, 'பெருமாளுடையவும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

"யாநி ராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச வாநர"

என்பது, ஸ்ரீராமா. சுந். 34 : 3.

4. முற்பட்டது எங்கே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிராட்டியினுடைய' என்று தொடங்கி.

"பரிஷ்வங்கோ ஹநூமத:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 1 : 13.

5. "திருந்தக் கண்டே" என்பதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச் செய்கிறார் 'இத்தலையில்' என்று தொடங்கி. என்றது, கண்கூடாக என்னைக் கண்ட இழவு எல்லாம் தீரும்படி, பிரிவின் துன்பம் இல்லாதவனாயிருக்கிறவனை நன்றாகக் கண்டு என்றபடி.

னுதல். [1]" எப்பொழுதும் ஒருபடிப்பட்டதான திவ்வியமங்கள விக்கிரஹத்தையுடையவன்" என்று சொல்லளவேயாய்ப் போகையன்றிக்கே, அதனை அநுஷ்டான பர்யந்தமாக்கிக் கொண்டிருக்கிற வடிவைக் காண்பாய் என்றபடி. (7)

560.

**திருந்தக் கண்டுஎனக்கு ஒன்றுரை யாய்ஒண் சிறுபூவாய்!**
**செருந்தி ஞாழல் மகிழ்புன்னை சூழ்தண் திரு வண்வண்டூர்**
**பெருந்தண் தாமரைக் கண்பெரு நீண்முடி நாற்றடந்தோள்**
**கருந்திண் மாமுகில் போல்திரு மேனி அடிகளையே.**

**பொ - ரை :**—அழகிய சிறிய பூவையே! செருந்தி ஞாழல் மகிழ் புன்னை இவைகளால் சூழப்பட்டுக் குளிர்ந்திருக்கின்ற திருவண்வண்டூர் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற, பெரிய குளிர்ந்த தாமரைபோன்ற திருக்கண்களையும், பெரிய நீண்ட திருமுடியினையும், விசாலமான நான்கு திருத்தோள்களையும், திண்ணிய கரிய பெரிய மேகம்போன்ற திருமேனியினையுமுடைய சுவாமிகளை நன்றாகக் கண்டு மீண்டு வந்து எனக்கு ஒருவார்த்தை சொல்லவேண்டும்.

**வி - கு :**—பூவாய்! அடிகளைத் திருந்தக் கண்டு எனக்கு ஒன்று உரையாய் என்க. செருந்தி - வாட்கோரை. ஞாழல் - புலிநகக் கொன்றை. மகிழ் - வகுளம். திண்ணிய கரிய முகில் என்க.

**ஈடு :**—எட்டாம்பாட்டு. [2] பூவைகள் சிலவற்றைக் குறித்து, மீண்டு வந்து எனக்குச் சொல்லலாம்படி நன்றாகக் கண்டு, ஒரு மறுமாற்றம் கேட்டு வந்து சொல்லவேண்டும் என்கிறாள். காணஒண்ணாமைக்கு வேண்டும் காரணங்களைத் திரியவும் சொல்லிவைத்துத் திருந்தக் காணுங்கோள் என்கிறாள் அன்றே.

---

1. அதனை விவரணம் செய்கிறார் 'எப்பொழுதும்' என்று தொடங்கி. " ஸதைகரூப ரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே "
என்பது, ஸ்ரீ விஷ்ணுபு. 1. 2 : 1.

2. " திருந்தக் கண்டு எனக்கு ஒன்று உரையாய் ஒண் சிறு பூவாய்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். " திருந்தக் கண்டு " என்பதற்கு, மேற் பாசுரத்திற் கூறிய பொருளை இங்கும் கூறுது, 'மீண்டு வந்து எனக்குச் சொல்லலாம்படி நன்றாகக் கண்டு' என்று கூறுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'காண ஒண்ணாமைக்கு' என்று தொடங்கி. காண ஒண்ணாமைக்குரிய காரணங்கள், " பெருந்தண் தாமரைக் கண் " என்பது போன்றவைகள். " திருமேனி அடிகளைத் திருந்தக் கண்டு " என்று கூட்டுக.

திருந்தக் கண்டு - [1]நான்சொன்ன அடையாளத்தில் ஒன்றும் குறையாமல் காணுங்கோள், உங்களுக்கு என்றுகாணுதே, பிறர்க்குச் சொல்லலாம்படி காணுங்கோள். எனக்கு - [2] உங்கள் சொற்கேட்டுத் தரிக்க இருக்கிற எனக்கு. ஒன்று உரையாய் - எனக்கு அவன்படிகள் எல்லாம் சொல்லவேண்டா, ஒன்று சொல்ல அமையும். [3]போகத்துக்கு அன்று இவள்தேடுகிறது, சத்தையை நோக்குகைக்கன்றே பார்க்கிறது. ஒண் - [4] "எவை பெருமாளுடைய அடையாளங்கள்" என்றால், உள்ளபடியெல்லாம் சொல்லவற்றாயிருக்கை. [5] அத்தலையைத் திருந்தக் கண்டு எனக்கு ஒன்று சொல் என்னவுமாம். எனக்காக ஒன்று சொல் என்னவுமாம். [6] ஆக, இந்த இரண்டாலும் ஆசாரியன் வார்த்தை கேட்டுத் தரித்தல், அவன் அபிமானத்தாலே தரித்தல் ஒழிய, வேறு ஒன்று இல்லை என்றபடி. ஒண் சிறு பூவாய் - [7]உங்கள் ஒருப்பாடு கண்டேனுக்கு நான் அபேக்ஷிப்பது மிகையாயிருந்ததே! பிறர்காரியம் செய்ய வடிவு

---

1. காண்பதிலே திருத்தம் ஏது? என்ன, 'நான் சொன்ன' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதனை விவரணம் செய்கிறார் 'உங்களுக்கு' என்று தொடங்கி.

2. "ஒன்று உரையாய்" என்றதனைக் கடாக்ஷித்து "எனக்கு" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'உங்கள்' என்று தொடங்கி.

3. ஒன்று சொன்னால் போருமோ? என்ன, 'போகத்துக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. "யாநி ராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச வாநர"
என்பது, ஸ்ரீராமா. சுந். 34: 3. என்றது, "பெருமாளுடைய அடையாளங்கள் எவை?" என்று கேட்டால், "ராமஃ கமலபத்ராக்ஷஃ" என்று தொடங்கித் திருவடி சொன்னாற் போன்று, இதுவும் சொல்லவற்றாயிருக்கையைத் தெரிவித்தபடி.

5. 'எனக்கு அவன் படிகள்' என்று தொடங்கி மேலே கூறிய வாக்கியத்தை முடிக்கிறார் 'அத்தலையை' என்று தொடங்கி. ஆக, "எனக்கு ஒன்று உரையாய்" என்றதற்கு, அவதாரிகையிலே ஒரு பொருளும், இங்கே இரண்டு பொருளும் ஆக, மூன்று பொருள்கள் அருளிச்செய்தபடி. என்றது, எனக்கு ஒரு மறுமாற்றம் கொண்டு வந்து சொல் என்றும், அடையாளங்களிலே ஒன்று சொல் என்றும், எனக்காக அவனோடே ஒன்று சொல் என்றும் மூன்று வகையாக அருளிச்செய்தபடி.

6. "எனக்கு ஒன்று உரையாய்" என்பதற்கு, சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஆக, இந்த இரண்டாலும்' என்று தொடங்கி.

7. ஒண்மைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உங்கள் ஒருப்பாடு' என்று தொடங்கி. ஒருப்பாடு - முயற்சி. அதனை விவரணம் செய்கிறார் 'பிறர் காரியம்' என்று தொடங்கி.

கொண்டாற்போலே இராநின்றதே! உங்கள் முயற்சி. [1]கடல் கடக்கும்போது ஒருவடிவாய், எதிரிகள் படை வீட்டில் புகும் போது ஒருவடிவாய், இருக்கவேண்டாதபடி காணும் இதனுடைய வடிவின் சிறுமை இருக்கிறபடி என்பாள் '**சிறுபூவாய்**' என்கிருள். ஒண்மை - கண்டு கொண்டிருக்கவேண்டும் அழகு.

செருந்தி ஞாழல் மகிழ் புன்னை சூழ் தண் திருவண்வண்டூர்- [2]அவன்பாடு செல்லவேண்டாதே,போகஸ்த்தானமே அமைந்திருக்கை. அன்றிக்கே, வாராமை அவன் குற்றம் அன்று, நிலப்பண்பு கண்டீர்கோள்என்னுதல். என்றது, காற்காட்டு ஒன்று இரண்டாகில் அன்றோ வரலாவது, அவை நாலுபாடும் சூழ்ந்து நிற்க அவனாலே வரப்போமோ என்றபடி. [3]ஒரு திக்குக்கு ஒன்றே அமைந்திருக்கிறது காணும். பெருந் தண் தாமரைக் கண் - அநுபவிக்கின்றவர்கள் அளவல்லாதபடி பெருத்துச் சிரமஹரமாய்; மலர்த்தி, செவ்வி, குளிர்த்தி, வாசனை தொடக்கமானவற்றை யுடைத்தாயிருக்கை. பெரு நீண் முடி - உபயவிபூதிகட்கும் கவித்த முடியையுடையவன் என்னுதல். அன்றிக்கே, உபய விபூதிகட்கு முடையவனு யிருத்தலுக்கு மேலே அன்றோ, அவ் வூர்க்குக் கடவனாயிருத்தல் என்னுதல். அன்றிக்கே, [4]"எந்த இராமனுக்கு அந்த ஜானகி மனைவியாக இருக்கிருளோ அந்த இராமன் பெருமை அளவிட இயலாது" என்று கொண்டு இவள் தன்னைத் தோற்பித்துச் சூடின முடி என்னுதல். பெரு நீள் - பெரிய வளர்த்தி. நால் தடம் தோள்- அவளை அணைந்து அத்தாலே கல்பகதரு பணைத்தாற்போலே இருக்கிற திருத்தோள்கள். அன்றிக்கே, நாலாய்ச் சுற்றுடைத்தாயிருக்கிற திருத்தோள்கள் என்னலுமாம். கரும் திண் மா முகில் போல் திருமேனி - கறுத்துத் திண்ணியதாயிருப்பதொரு மஹாமேகம்போலேயாயிற்று வடிவு இருப்பது.

---

1. 'கடல் கடக்கும்' என்று தொடங்கும் வாக்கியம், திருவடிக்கும் இதற்குமுள்ள வேறுபாட்டினைக் காட்ட வந்தது.

2. 'அவன்பாடு செல்ல வேண்டாதே' என்றது, அவன் அவயவங்கள் அளவும் போக வேண்டாதே என்றபடி.

3. "செருந்தி ஞாழல் மகிழ் புன்னை" என்ற ஒருமைக்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'ஒரு திக்குக்கு' என்று தொடங்கி.

4. " அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா
ந த்வம் ஸமர்தஸ்தாம் ஹர்த்தும் ராம சாபாஸ்ரயாம் வநே "

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 37 : 108.

அன்றிக்கே, சிரமத்தைப் போக்கக் கூடிய நிறத்தையுடைத்தாய், நிலத்திருப்பதாய் அளவிடற் கரியதான மேகம்போலே இருக்கும் வடிவு என்னுதல். அன்றிக்கே. நிறமித்தனையும் கண்டீர் மேகத்துக்கு ஒப்பு, அகவாயில் திண்மை இவர்க்குத் தன்னேற்றம். கறுத்து அகவாய் திண்ணியதாயிருப்பதொரு மேகம் பெறிலாயிற்று இவர்க்கு நேரே ஒப்பாவது என்று அருளிச்செய்வர் **பட்டர்**. திருமேனி அடிகளையே - [1] வேறு ஒன்று சொல்லவேண்டாதபடி வடிவு கண்டபோதே '**இவனே இவற்றிற்கெல்லாம் கடவன்**' என்று தோற்றும்படி இருக்கை. அன்றிக்கே, அவ் வடிவினைப் படைத்துத் தமக்கு என்றிருக்கிற ஸ்வாமிகளை என்று **பட்டர்** அருளிச்செய்வர். (8)

561.

**அடிகள் கைதொழுது அலர்மேல் அசையும் அன்னங்காள்!**
**விடிவை சங்கொலிக் கும்திரு வண்வண் டூருறையும்**
**கடிய மாயன்தனைக் கண்ணனை நெடுமாலைக் கண்டு**
**கொடிய வல்வினை யேன்திறம் கூறுமின் வேறுகொண்டே.**

**பொ - ரை:**—தாமரைப்பூவின்மேல் தங்கியிருக்கின்ற அன்னங்களே! விடியலைக் குறிக்கின்ற சங்குகள் ஒலிக்கின்ற திருவண்வண்டூர் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற கடிய மாயனைக் கண்ணனை நெடிய திருமாலைக் கண்டு, அவன் திருவடிகளைக் கைகூப்பி வணங்கிக் கொடிய வல்வினையேனாகிய என்னுடைய தன்மையைத் தனியே இருந்துகொண்டு கூறுங்கோள்.

**வி - கு:**—அன்னங்காள்! உறையும் மாலைக் கண்டு அடிகள் கை தொழுது வினையேன் திறத்தை வேறுகொண்டு கூறுமின் என்க. விடிவை சங்கு ஒலிக்கும் - விடியற்காலத்தைக் குறிப்பதற்காகச் சங்குகள் ஒலிக்கின்ற. அடிகள் - திருவடிகளை.

**ஈடு:**—ஒன்பதாம்பாட்டு. [2] அன்னங்கள் சிலவற்றைக் குறித்து, "குற்றம் செய்யாதார் யாவர்" என்பார் முன்பாகத் தனியிடத்திலே என் இடையாட்டத்தை அறிவியுங்கோள் என்கிறாள்.

---

1. "திருமேனி" என்றதன்பின் "அடிகள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வேறு ஒன்று' என்று தொடங்கி.

2. "அன்னங்காள்! திறம் கூறுமின் வேறுகொண்டு" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "வேறுகொண்டு" என்கிறதிலே நோக்காகத் 'தனியிடத்திலே' என்கிறார்.

**அடிகள்கைதொழுது**-திருவடிகளைக் கையாலே தொழுது. என்றது, அவனுக்கு மறுக்கவொண்ணாத செயலைச்செய்து என்றபடி. அடிகள் கைதொழுது கூறுமின் - [1]நீங்களும் பரக்கச் சொன்னீர்கோளாய் அவனும் பராக்கடித்து இருந்தானாகை யன்றிக்கே, செவிப்படும்படிசெய்து சொல்லுங்கோள். [2]வரவு தாழ்த்தது என்னா, பொருள் வேறு ஒருபொருள் ஆகாதே யன்றோ. வந்தேறியான காதல் குணத்திலேயன்றோ சிறிது நழுவ நிற்கலாவது,ஸ்வரூபத்தோடு சேர்ந்திருக்கிற கிருபைக்கு அழிவில்லையன்றோ. அது சத்தையுள்ளதனையும் விலைசெல்லுமன்றோ. அலர்மேல் அசையும் அன்னங்காள் - கலவியினாலே பூவிலே அசையாநின்றுள்ள அன்னங்களே! [3]நான் பூவினைக் காண இரயக்கும்படியாயிருக்க, உங்களுக்குப் பூவிலே கால் பொருந்துகை போருமோ? நான் தறைக்கிடை கிடக்க, உங்களுக்கு இது போகமாய்த் தலைக்கட்டுமோ? என்னையும் மென்மலர்ப்பள்ளி பொறுப்பித்தாலன்றோ உங்களுக்கு இதுபோகமாவது என்பாள் '**அலர்மேல் அசையும்**' என்கிறாள். [4]உங்கள் செயலுக்கு அவனால் வாராதொழியவொண்ணாது. [5]உங்களுக்குச் சேர்த்தல்லது ஸ்வரூப சித்தியில்லை. ஆனபின்பு, நான் இக்கிடை கிடக்கப் பிராப்தி உண்டோ? என்பாள் '**அன்னங்காள்**' என்கிறாள்.

---

1. "அடிகள் கைதொழுது கூறுமின்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நீங்களும்' என்று தொடங்கி.

2. உன்னை உபேக்ஷித்துப் போனவன், தொழுதால் வருமோ? என்ன, 'வரவு தாழ்த்தது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதனை விவரணம் செய்கிறார் 'வந்தேறியான' என்று தொடங்கி. கிருபைக்கு அழிவில்லாமையைக் காட்டுகிறார் 'அது சத்தையுள்ளதனையும்' என்று தொடங்கி.

3. "அலர்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நான் பூவினைக் காண' என்று தொடங்கி. "மேல்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நான் தறைக் கிடை' என்று தொடங்கி. "அசையும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'என்னையும்' என்று தொடங்கி.

4. "அசையும்" என்பதற்கு, நடை என்று பொருள்கூறத் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் 'உங்கள் செயலுக்கு' என்று தொடங்கி. செயலுக்கு-நடைக்கு.

5. "அன்னங்காள்!" என்று விளிக்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'உங்களுக்கு' என்று தொடங்கி. என்றது, துன்புறுகின்ற நான் இருக்கிற இடத்திலே வந்திருக்கிற உங்களுக்கு என்னை அவனோடே சேர்த்தால் ஒழியச் சொரூப சித்தி இல்லை என்றபடி.

**விடிவை சங்கு ஒலிக்கும் திருவண்வண்டூர்** - [1] புறப்பட்டவாறே சங்கின்ஒலி செவிப்படுகிறது அன்றோ. இங்குப்போலே கிடக்கிறது அன்றே அங்கு; [2] அங்கும் இங்குப் போலேயாகில் வாராளே. விடிவை - விடிவுகள்தோறும். [3] பகலும் இரவுமாய்க் காணும் அவ்வூர் செல்லுகிறது என்பாள் '**விடிவை சங்கு ஒலிக்கும் திருவண்வண்டூர்**' என்கிறாள். [3] "ருதூந் பஹூந் - பல ருதுக்களை" என்கிறபடியே, காலம் கூறிட்டு அவ்வக்காலத்துக்கு அடைத்த உபகரணங்களைக்கொண்டு காணும் அவன் அநுபவிக்கிறது; [4] இல்லையாகில் "ருதுக்களை" என்னவேண்டாவன்றோ, "வத்ஸராந் - வருடங்களை" என்ன அமையுமன்றோ. விடிவை சங்கு ஒலிக்கும் - [5] விடியாத இரவு அன்றோ இவள் இருக்கிற இடம். திருவண்வண்டூர் உறையும் - விடியாத ஊரிலே என்னை வைத்தான், விடியும் ஊரிலே தான் இருந்தான். [6] அவன் எந்தவிடத்தில் நின்றாலும் அவ்விடம் விடியுமத்தனை அன்றோ. பகற்கண்டேன் நாரணனைக் கண்டேன்

---

1. அவ்வூர்க்கு வழி அறியும்படி என்? என்ன, 'புறப்பட்டவாறே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அவ்வூரில் சங்கு ஒலிக்கும் என்றவாறே, இவ்வூரில் இல்லை என்னுமது தானே போதருமாதலின் அதனை அருளிச்செய்கிறார் 'இங்குப்போலே' என்று தொடங்கி. 'இங்குப்போலே' என்றது, நீள் இரவாய் சங்கு ஓசை இல்லாமல் கிடக்கும் இவ்விடத்தைப்போலே என்றபடி.

2. 'இங்குப் போலே கிடக்கிறது அன்று' என்று கூறுதற்குக் காரணம் யாது? என்ன, 'அங்கும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. "விடிவை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பகலும் இரவுமாய்' என்று தொடங்கி. இதனால், காலத்திற்குத் தகுதியாகப் போக உபகரணங்கொண்டு அநுபவிக்கிறார் என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "ருதூந்" என்று தொடங்கி.

> "ராமஸ்து ஸீதயா ஸார்தம் விஜஹார பஹூந் ருதூந்
> மநஸ்வீ தத் கதஸ் தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பிதஃ"

என்பது, ஸ்ரீராமா. பால. 77 : 26.

4. இங்ஙனம் கூறுதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இல்லையாகில்' என்று தொடங்கி. 'இல்லையாகில்' என்றது, காலத்துக்கு அடைத்த போக உபகரணங்களைக்கொண்டு அநுபவித்தார் என்னுமது இல்லையாகில் என்றபடி.

5. 'அவ்வூரிலே விடிவை' என்கையாலே, இவள் இருக்கிற இடத்திலே 'விடிவு இல்லை' என்கிறார் 'விடியாத' என்று தொடங்கி.

6. இது விடியாத ஊராகைக்கும், அது விடியும் ஊராகைக்கும் காரணத்தை அருளிச்செய்கிறார் 'அவன்' என்று தொடங்கி. அவன் இருந்த இடம் விடிந்தது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "பகற்கண்டேன்" என்று தொடங்கி. இது, இரண்டாந்திருவந். 81.

அன்றோ. கடிய மாயன்தன்னை - அடியார்கட்கு விரோதிகளை அழியச் செய்யுமிடத்தில் கண்பாராத ஆச்சரியத்தையுடையவனை. கண்ணனை - அடியார்கட்குத் தான் கையாளாக நின்று தன்னைக் கொடுக்குமவனை. நெடுமாலை - இத்தனையும் செய்தாலும் 'ஒன்றும் செய்யப் பெற்றிலோம்' என்னும் வியாமோகத்தையுடையவனை. அன்றிக்கே, கடிய மாயன் - தன்னைப் பிரிந்தார் படும் நோவறியாத கொடுமையையுடையவனை. கண்ணனை நெடுமாலை - எளிமை ஒரு காலவிசேஷத்தில் உள்ளது, முதன்மையே கண்டீர் பெருத்திருப்பது. [1]இனி, எளியனானதுவும் வேண்டிச் செய்தான் அல்லன், இத்தலையை நலிகைக்காகச் செய்த செயல் கண்டீர் என்று அருளிச்செய்வர் பட்டர்.

கொடிய வல்வினையேன் - [2]நாட்டார் படி அல்லாத பாபத்தைச் செய்தேன். அல்லாதாருடைய பாபங்கள் பகவானை அடைதலாலே போமன்றோ, அடைதல்தான் பாதகமாம்படியான பாவத்தைச் செய்தேன். திறம் - [3]ஒரு மஹாபாரதம் அன்றோ. வேறுகொண்டு கூறுமின் - செவிப்படாதபடி ஓலக்கத்திலே சொல்லாமல் ஏகாந்தத்திலே சொல்லுங்கோள். அதாவது, அவனும் அவளுமாயிருந்த இடத்திலே சொல்லுங்கோள் என்றபடி. என்றது, [4]'என் திருமார்வற்கு என்னை' என்றும், 'திருமாலார்க்கு என்பிழைத்தாள்' என்றும், 'மாதரைத் தம்

---

1. ஒரு கால விசேடத்திலேயானாலும் பவ்யதை உண்டே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனி எளியனானதுவும்' என்று தொடங்கி.

2. "கொடிய வல்வினையேன்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நாட்டார்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அல்லாதாருடைய' என்று தொடங்கி.

3. "திறம்" என்பதற்கு, அவதாரிகையில் அருளிச்செய்த பொருளைத் தவிர, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'ஒரு மஹா பாரதமன்றோ' என்று. திறம் - (வியசனங்களின்) கூட்டம்.

4. 'ஏகாந்தமான இடம்' என்றால், பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருக்கும் சேர்த்தி இடத்திலே என்று பொருள்படுமோ? என்ன, தூது விடுகின்ற மூன்று திருப்பதிகங்களிலும் பிராட்டியினுடைய சேர்த்தியை வெளிப்படையாகச் சொல்லுகையாலே இங்கும் அப்பொருள் தன்னையே கோடல் வேண்டும் என்கிறார் 'என் திருமார்வற்கு' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி. 6. 8 : 10. "திருமாலார்க்கு என் பிழைத்தாள்" என்பது, திருவாய். 1. 4 : 7. "மாதரைத் தம்" என்பது, திருவாய். 9. 7 ; 6,

மார்வகத்தே வைத்தார்க்கு' என்றும்அன்றோ இவர் தமக்குப் பாசுரம். வேறு கொண்டே கூறுமின் - [1] " இளையபெருமாள், கைகூப்பினவராய்ப் பிராட்டியின் முன்னிலையில் பெருமாளைப் பார்த்து இந்த வார்த்தையைச் சொன்னார் " என்கிறபடியே அதனைப் பயனுடையதாகச் செய்கின்ற அவள் சந்நிதியிலே சொல்லுங்கோள். [2] நல்வார்த்தை சொல்லுவாரும் அவனுமான இடத்தே சொல்லுங்கோள். (9)

562.

வேறுகொண் டும்மை யான்இரந் தேன்வெறி வண்டினங்காள்!
தேறு நீர்ப் பம்பை வடபா லைத்திரு வண்வண்டூர்
மாறில் போர்அரக் கன்மதிள் நீறுஎழச் செற்றுகந்த
ஏறுசே வகனார்க்கு என்னை யும்உளள் என்மின்களே.

**பொ - ரை :**—வாசனை மிக்க கூட்டமான வண்டுகளே! உங்களைத் தனியாக அழைத்து யான்இரக்கின்றேன்; தெளிந்த தண்ணீரையுடைய பம்பை நதியின் வடகரையிலேயுள்ள திருவண்வண்டூர் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற, போரைச் செய்கின்ற எதிர்இல்லாத அரக்கனாகிய இராவணனுடைய மதிள்கள் தூசி பரக்கும்படியாக அழித்து மனமகிழ்ந்த ஏறுசேவகனார்க்கு 'யானும் இருக்கின்றேன்' என்றாள் என்று சொல்லுங்கோள்.

**வி - கு :**—வண்டினங்காள்! யான் உம்மை வேறுகொண்டு இரந்தேன், செற்று உகந்த திருவண்வண்டூர் ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்கள் என்க. வெறி - வாசனை. சேவகன் - வீரன்.

---

1. பிராட்டியினுடைய சேர்த்தியிலே சொன்னால் காரியம் அறுதியாகப் பலிக்கும் என்னுமதனைத் திருஷ்டாந்தமூலம் காட்டுகிறார் 'இளைய பெருமாள்' என்று தொடங்கி.

" ஏவம் உக்தஸ்து ராமேண லக்ஷ்மணஃ ஸம்யதாஞ்ஜலிஃ
ஸீதா ஸமக்ஷம் காகுத்ஸ்தம் இதம் வசநம் அப்ரவீத் "

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 6.

2. வார்த்தை பயனுடையதாகச் செய்யும் பிரகாரத்தைக் காட்டுகிறார் 'நல்வார்த்தை' என்று தொடங்கி. 'நல்வார்த்தை' என்றது, " நகஶ்சிந் நாபராத்யதி - குற்றம் செய்யாதார் ஒருவருமிலர் " என்ற வார்த்தையினை,

ஈடு :—பத்தாம்பாட்டு. [1] "சிலவண்டுகளைக் குறித்து, அவர் இத்தலையில் சத்தையும் இல்லை என்று இருப்பர், அவளும் உளள் என்று சொல்லுங்கோள் என்று சொல்லுகிருள்" என்று ஆளவந்தார் அருளிச்செய்வர். "இத்தலை இல்லையாகில் அத்தலை உண்டாகக்கூடாது; 'பெண்பிறந்தார் காரியம் எல்லாம் செய்தோம்' என்று கிருதக்கிருத்யராயிருக்குமவர்க்கு, ரக்ஷ்யவர்க்கத்திலே நானும் ஒருத்தி உண்டு என்று சொல்லுங்கோள்" என்று எம்பெருமானர் அருளிச்செய்வர்.

வேறுகொண்டு - [2] திக்குக்கள்தோறும் முதலிகளைப் போக விடாநிற்கச்செய்தே திருவடி கையில் திருவாழிமோதிரம் கொடுத்துவிட்டதுபோலே காணும். [3] "சுக்கிரீவ மஹாராஜர்

---

1. "வண்டினங்காள்! என்னையும் உளள் என்மின்கள்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர். தலைவி, தன்னை "உளள்" என்று தலைவனுக்கு உணர்த்துங்கோள் என்கையாலே, தலைவன் 'தலைவி இலள்' என்று நினைத்திருந்தானுக வேண்டுமன்ருே? அதனைத் திருவுள்ளம் பற்றிச் 'சத்தை இல்லை என்றிருப்பர்' என்கிருர். அப்போது, "என்னையும்" என்ற உம்மைக்கு, நிறம் தொடக்கமானவை அழிந்துபோயினமை போன்று, சத்தையும் அழிந்தது என்று பொருளாகவேண்டும் என்று திருவுள்ளம் பற்றிச் 'சத்தையும் இல்லை என்றிருப்பர்' என்கிருர். கிருதக்கிருத்யர் - செய்யவேண்டிய காரியங்கள் எல்லாவற்றையும் செய்து முடித்தவர்.

2. வேறுகொண்டு—வேருகக்கொண்டு. அதாவது, மற்றைய பறவைகளைக் காட்டிலும், வண்டுகள் காரியம் செய்து முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவை என்று நிச்சயித்து என்றபடி. அதனைத் திருஷ்டாந்த மூலம் அருளிச்செய்கிருர் 'திக்குக்கள் தோறும்' என்று தொடங்கி.

ஆண்டுகடந் தப்புறத்து மெப்புறத்து மொருதிங்கள் அவதி யாகத்
தேண்டிஇவண் வந்தடைதிர் விடைகோடிர் கடிதென்னச் செப்பும் வேலை
நீண்டவனு மாருதியை நிறையருளால் முகநோக்கி நீதி வல்லோய்!
காண்டிஎனிற் குறிகேட்டி என**வேறு கோண்டிருந்து** கழற லுற்ருன்.

இனையவா றுரைசெயா இனிதின்ஒ குதி எனு
வனையுமா மணிநன்மோ திரமளித் தறிஞ!நின்
வினையெலா முடிகெனு விடைகொடுத் துதவலும்
புனையும்வார் கழலினுன் அருளொடும் போயினுன்.

என்பன, கம். கிட். நாட. 32. 71.

3. வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிருர் 'சுக்கிரீவ மஹாராஜர்' என்று தொடங்கி.

"விசேஷேண து ஸுக்ரீவோ ஹநூமதி அர்த்தம் உக்தவாந்"
என்பது, ஸ்ரீராமா. கிஷ். 44 : 1.

கம்பராமாயணம் நாடவிட்ட படலம், 5-முதல் 8-முடியவுள்ள செய்யுட்களை ஈண்டுக் காணல் தகும்.

அநுமாரிடத்தில் விசேஷமாகச் சமாசாரத்தைச் சொன்னர்" என்றாற்போலே. உம்மை - இரந்தார்களுடைய காரியங்களைச் செய்தன்றி நிற்கமாட்டாத உங்களை. யான் - [1] அவனுடைய முதல் இரப்புப்போலே காணும் இவளதும். அன்றிக்கே, யான் இரந்தேன் - [2] அவன்தான் இரக்க இருக்குமவளன்றோ இரக்கிருள் என்னுதல். [3] இவள்பக்கலிலே தாழ நிற்பான் அவனையிற்று. நன்று; இவற்றை வேறுகொண்டு இரக்கவேண்டுவான் என்? என்னில், [4] அவற்றிலும் இவை பலகால்களையுடையன ஆகையாலே. இன்னம் ஒன்று, சபைக்கு அஞ்சவேண்டாதே வளையத்தே இருந்து வார்த்தை சொல்லவும் வல்லனவேயன்றோ. அன்றிக்கே, "தேன்உண்ணும் வண்டேபோல் பங்கிகள்" என்றும், அவனுக்குத் தலையான திருஷ்டாந்தமாகவும் சொல்லுவது இவற்றைஅன்றோ. வேறுகொண்டு உம்மை யான் இரந்தேன் - [5] நம் ஆசாரியர்கள் வியாபக மந்திரங்கள் மூன்றிலும் த்வயத்தையே ஆதரிக்குமாறுபோலே.

---

1. 'அவனுடைய முதல் இரப்புப்போலே காணும் இவளதும்' என்றது, சுக்கிரீவமஹாராஜரிடத்தில் அவன் இரந்தது போன்று, எல்லாராலும் அடையப்படும் பெருமையையுடைய இவளும் பறவைகளை இரக்கிற இதுவும் என்றபடி.

2. "யான் இரந்தேன்" என்பதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிருர் 'அவன் தான்' என்று தொடங்கி.

3. இவள் அவனை இரத்தல் பொருத்தமாயிருக்க, அவன் இவளை இரக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவள் பக்கலிலே' என்று தொடங்கி.

4. வேறுகொண்டு இரத்தலுக்கு மூன்று வகையாகக் காரணங்களை அருளிச்செய்கிருர் 'அவற்றிலும்' என்று தொடங்கி. 'தேன் உண்ணும்' என்று தொடங்குவது மூன்ருவது காரணம். இது, பெரியாழ்வார் திருமொழி. 1. 8: 2. 'தலையான திருஷ்டாந்தம்' என்பதற்கு, சிறந்த திருஷ்டாந்தம் என்றும், தலைமயிருக்குத் திருஷ்டாந்தம் என்றும் இருவகைப் பொருள்.

5. மேலே கூறிய மூன்று காரணங்களுடன், முதலாவதாகக் கூறிய பொருளிற்குச் சுவாபதேசம் அருளிச்செய்கிருர் 'நம் ஆசாரியர்கள்' என்று தொடங்கி. 'வியாபக மந்திரங்கள் மூன்றிலும்' என்றது, வாசுதேவன், விஷ்ணு, நாராயணன் என்னும் வியாபக மந்திரங்கள் மூன்றிலும் என்றபடி. "பகவந் மந்திரங்கள்தாம் அநேகங்கள்", "அவைதாம், வியாபகங்கள் என்றும் அவ்யாபகங்கள் என்றும் இரண்டு வர்க்கம்", "அவ்யாபகங்களில் வியாபகங்கள் மூன்றும் சிரேஷ்டங்கள்", "இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்திரம் பிரதாநம்." என்பது முமுக்ஷுப்படி. 'மூன்றிலும் திருமந்திரத்தை ஆதரிக்குமாறுபோலே' என்றது, 'த்வயத்தை' என்றது, த்வயம், திருமந்திரத்தின் விவரணம் ஆகையாலே என்க.

[1] இவைதாம் ஆறுபதங்களையுடையனவன்றோ. வெறி வண்டு இனங்காள் - [2] உங்களுக்கு என்காரியம் செய்தல்லது நிற்க ஒண்ணுதாயிருந்தது. [3] கலவியால் உண்டான வேறுபாடு அடங்கலும் வடிவிலே தோன்றும்படியாயிருந்தது. வெறி - வாசனை. வாசனையை யுடைத்தாயிருக்கை. [4] தனித்துப் போனு லும் வழிக்குப் பாதேயம் போந்திருந்ததே! என்றது, உடம்பை மோந்துகொண்டு போக அமைந்து காணும் இருக் கிறது என்றபடி. இவைதமக்குப் பிரிவு இல்லை என்பாள் '**இனங்காள்**' என்கிறுள். [5] "ஸர்வகந்தஃ" என்ற விஷயத் தோடே அணைந்த இவளுக்கு இவற்றின் பரிமளம் கண்டு ஆச் சரியப்படும்படி காணும்வாசனையும் கூட மறந்தபடி.

---

1. வண்டுகளுக்கு, துவயத்தோடு எவ்வகையாலே ஒப்பு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'இவைதாம்' என்று தொடங்கி. 'இவை தாம்' என்றது, வண்டுகளையும், துவயம் என்னும் மந்திரத்தையும். வண்டு களுக்கு '**அறுபதம்**' என்னும் பெயர் உண்மை ஈண்டு நினைவுகூர்தல் தகும்.

துவயம் என்னும் மந்திரம்,

ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே
ஸ்ரீமதே நாராயணுய நமஃ என்பது.

இதுவும், 'ஸ்ரீமந் நாராயண சரணௌ' என்றும், 'சரணம்' என்றும், 'பிரபத்யே' என்றும், 'ஸ்ரீமதே' என்றும், 'நாராயணுய' என்றும், 'நமஃ' என்றும் ஆறுபதங்களையுடையது. வண்டுகளும் ஆறு கால்களை யுடையன வாதலின் 'அறுபதம்' என்ற பெயரால் குறிக்கப்பெறும் என்க.

2. "இனங்காள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'உங்களுக்கு' என்று தொடங்கி. என்றது, நான் தனித்துத் துன்புற்றவளாயிருக்கும்போது, உங்களுக்குப் போகம் ரசிக்காமையாலே, என்காரியம் செய்தல்லது நிற்க ஒண்ணுது என்றபடி.

3. "வெறி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'கலவியால் உண்டான' என்று தொடங்கி.

4. "வெறி" என்றதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறுர் 'தனித்துப் போனுலும்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறுர் 'உடம்பை' என்று தொடங்கி. பாதேயம் - தோட்கோப்பு.

5. "சர்வகந்தஃ" என்கிற தலைவனோடே கலந்ததனுலுண்டான வாசனை உளதே இவளுக்கு, அதனை மோந்துகொண்டு தரித்திருக்கலாகாதோ இவள்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'சர்வகந்தஃ' என்று தொடங்கி. கந்தம் - வாசனை.

தேறு நீர்ப் பம்பை-[1]இவ்வூரின் எல்லையைக் கழிந்தவாறே தெளிந்த பொருள்களையும் காண்கின்றீர்கோள் அன்றோ. [2]இவள் இருந்த இடத்தில் அடையக் கலங்கியன்றோ கிடக்கிறது. "உபதப்தோதகாநத்ய: - மிகுந்த கொதிப்பை யடைந்தன நதிகள்" 'தாபார்த்தனுக்கு நீரிலே விழுந்தால் தாபம் ஆறும்' என்னும் இவ் வாசனையைக் கொண்டு, 'இராமனைப் பிரிந்த பிரிவிற்கும் இது பரிஹாரமாமோ' என்று தண்ணீரிலே விழுவதாகக் கொண்டு செல்ல, கரையிலுங்கூடக் கிட்ட அரிதாயிருந்தது. [3]'நிலைநீர்கள் தாம் குளிரவற்றோ' என்று பார்த்தார்கள், அவையும் அப்படியே இருந்தன. "பல்வலாநி ஸாரம்ஸிச - சிறு குழிகளோடு பெருங்குளங்களும்" [4]மரங்களோடு வசிஷ்டர் முதலானவர்களோடு வாசியற அழியுமாறு போலே. இப்படியேயன்றோ இவள் இருக்கிற இடம். வட

---

1. 'தெளிந்த நீரையுடைய பம்பை' என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவ்வூரின்' என்று தொடங்கி.

2. 'இவ்வூரின் எல்லையைக் கழிந்தவாறே' என்கைக்குத் தான் இருந்த ஊர் அப்படி இருக்க இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் இருந்த' என்று தொடங்கி. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'உபதப்த' என்று தொடங்கி.

> "உபதப்தோதகா: நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச
> பரிஶுஷ்க பலாஶாநி வநாநி உபவநாநி ச"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 59 : 5.

3. 'நிலைநீர்கள்தாம் குளிரவற்றோ என்று பார்த்தார்கள்' என்றது, ஆற்றுநீர் ஓடுகிற நீராகையாலே சுடக் கூடும், நிலைநீர்கள் மேலே சுட்டாலும் உள் குளிர்ந்திருக்கும் ஆகையாலே தாபம் ஆறும் என்று பார்த்தார்கள் என்றபடி. 'அவையும் அப்படியே இருந்தன' என்றது, சூரிய வெப்பத்தால் அன்றிக்கே, இராம விரஹத்தாலே வந்த தாபம் ஆகையாலே எங்கும் ஒருசேர கொதித்துக்கொண்டிருந்தன என்றபடி.

"பல்வலாநி ஸராம்ஸிச உபதப்தோதகாநி" என்று கூட்டுக.

4. "ஸராம்ஸி - பெருங்குளங்கள்" என்றது, "பல்வலாநி - சிறு குழிகள்" என்று சிறுகுளங்களையும் கூறியதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மரங்களோடு' என்று தொடங்கி. என்றது, உயர்ந்தவர்களான வசிஷ்டர் முதலானவர்களோடு தாழ்ந்தவைகளான மரங்களோடு வாசி அற, இராம விரஹத்தால் வந்த தாபம் சமமாயிருக்குமாறுபோலே, சிறு குழிகளோடு பெரிய குளங்களோடு வாசியற, இராமனுடைய பிரிவினாலே அழிந்தன என்றபடி.

பாலைத் திருவண்வண்டூர் - [1] ஊரும் ஆறும் இன்ன இடத்திலே என்னுமிடம் நெஞ்சிலே பட்டுக்கிடக்கிறது காணும் இவளுக்கு. வடபால் - வடதிசை. கடலுக்குத் தென்பால் இருக்கிற பிராட்டியைப்போலேயாயிற்று இவள் இருக்கிற இருப்பு.

மாறு இல் போர் அரக்கன் மதிள் நீறு எழச் செற்று உகந்த-[2] அறிவிப்பார் தாழ்வே; பின்பு விரோதி என்று கிடப்பது ஒன்று இல்லை. வீரப்பாட்டுக்குத் தலையான சக்கரவர்த்தி திருமகனார் '**நமக்கு இவன் எதிரியாகப் போரும்**' என்று மதிக்கும்படியாகப் பிறந்த பையல். வரத்தின்வலிமை தோள் வலிமை இவைகளாலே எதிர் இல்லாத போரையுடைய இராவணனையும், அவனுக்கு அரணாக இட்ட மதிளையும் துகளாம்படி அழியச்செய்து மகிழ்ச்சிகொண்டவராய் இருக்கிற. ஏறு சேவகனார்க்கு - [3] வரவு சிறிது தாழ்த்தது என்னு, எதிரிகள் மதித்து மேலெழுத்திட்ட வீரப்பாட்டுக்குக் குறைசொல்ல ஒண்ணாதே அன்றோ. [4]"தேரிலிருந்து அதனை ஓட்டுவதிலும் பகைவர்கள் புகழும்படியான வீரத்தையுடையவர்" என்று வீரர்கள் கொண்டாடின வீரம் அன்றோ. என்னையும் உளள் என்மின்கள் - இன்னமும் நோவுபடுகிறாள் உண்டு என்று சொல்லுங்கோள். இதற்கு, "'இத்தலையைப் பிரிந்தாரில் இருப்பார் இல்லை' என்று இருக்கையாலே வாராது ஒழிந்தார் அத்தனை,

1. ஆழ்வாருடைய முற்றறிவு விஷயமாக வியாக்யாதாவின் ஈடுபாடு, 'ஊரும் ஆறும்' என்று தொடங்குவது.

2. ஸ்ரீ ஆளவந்தார் நிர்வாஹத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'அறிவிப்பார்' என்று தொடங்கி. "மாறில் போர்அரக்கன்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வீரப்பாட்டுக்கு' என்று தொடங்கி. "மாறில்போர் அரக்கன்........உகந்த" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'வரத்தின் வலிமை' என்று தொடங்கி. "உகந்த" என்றது, 'இருடிகள் குடி இருக்கப் பெற்றோம், பிராட்டியோடு கூடப் பெற்றோம், இலங்கை விபீஷணனுக்கு உரிமையாக்கப் பெற்றது' என்றதனால் உகந்த என்றபடி. ஏறு சேவகனார்க்கு - பகைவர்கள் கூட்டத்திலும் ஏறும்படியான ஆண்பிள்ளைத் தனத்தை யுடையவர்க்கு.

3. "கடியன் கொடியன்" என்று அவனை வெறுக்கிற இவள், இங்கு "ஏறுசேவகனார்க்கு" என்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வரவு சிறிது' என்று தொடங்கி.

4. அப்படி மேல் எழுத்திட்டார்களோ? என்ன, 'தேரிலிருந்து' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"கஜஸ்கந்தே அஶ்வப்ருஷ்டே ச ரதசர்யாஸு ஸம்மதஃ
தநுர்வேதே ச நிரதஃ பித்ருஶுச்ரூஷணே ரதஃ"

என்பது, ஸ்ரீராமா. பால. 18 : 26.

இத்தலையில் சத்தை உள்ளமையை அறிவியுங்கோள்" என்று ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிப்பர். இதனை, எம்பெருமானர் கேட்டருளி, "அழகிது" ஆகிலும், 'இன்றியமையாமை' என்று தமிழாது ஒரு [1]பிரவாதம் உண்டு; அதாகிறது, ஒருதலை உண்டானால் ஒருதலை இன்றிக்கே இராது; இரண்டு தலையும் உண்டாதல், இரண்டு தலையும் இன்றிக்கே ஒழிதல் இத்தனையாயிற்று. அதில், தாம் உளராகையாலே இத்தலையும் உண்டு என்கை நிச்சிதம்; ஆனபின்பு, பிரதிகூலித்தாரைக் கிழங்கு எடுத்துப் பொகட்டு அநுகூலித்தார் தலையிலே முடியை வைத்துக் கிருதக்கிருத்யராய், 'இனிச் செய்ய வேண்டிய குறை ஒன்றும்இல்லை' என்றிருக்கிறவர்க்கு, இன்னமும் ரக்ஷ்யவர்க்கம் ஒன்று உண்டு என்று சொல்லுங்கோள் என்கிறாள் என்று அருளிச்செய்தார். (10)

563.

**மின்கொள் சேர்புரி நூல்குற ளாய்அகல் ஞாலம்கொண்ட**
**வன்கள் வனடி மேல்குரு கூர்ச்சட கோபன்சொன்ன**
**பண்கொள் ஆயிரத் துள்இவை பத்தும் திருவண்வண்டூர்க்கு**
**இன்கொள் பாடல் வல்லார் மதனர் மின் னிடையவர்க்கே.**

---

1. இங்கு,

"இன்னுயிர் அன்னாற்கு எனைத்தொன்றும் தீதின்மை
என்னுயிர் காட்டாதோ மற்று" (கலித். நெய்தற்கலி. 26.)

என்ற பகுதியையும், "என் இனிய உயிரை ஒப்பானுக்கு யாதொன்றும் தீதின்றி அவனுளனுயிருக்கின்றமையை, அவன் உயிரோடு ஒன்றாகிய என்னுயிர் ஈண்டுக் காட்டாதொழியுமோ? அது, தான் இறந்துபடாது அவன் இருந்தமை காட்டிற்றில்லையோ?" என்ற அதனுரையையும்,

காத லாள்உட லுள்உயிர் கைவிடின்
ஏத மென்னுயிர் எய்திஇ றக்குமற்று
ஆத லால்அழி வொன்றிலள் அல்லதூஉம்
மாதர் விஞ்சையும் வல்லளும் அல்லளோ

என்ற சிந்தாமணிச் செய்யுளையும் நோக்கல் தகும். (கனகமாலை. செய். 1631.

நையா நின்றனென் நாணிருந் திங்கள்
மெய்வா னோர் திரு நாடு மேவினாய்
ஐயா! நீ என தாவி யென்றதும்
பொய்யோ! பொய்யுரை யாத புண்ணியா!

என்ற கம்பராமாயணச் செய்யுளும் இக் கருத்தேபற்றி வந்தது. (கிட்கிந், அரசியற். 9.)

பிரவாதம் - பொதுவான வார்த்தை.

பொ - ரை :—ஒளிபொருந்திய பூணுநூல் சேர்ந்த வாமனனாகி, அகன்ற உலகத்தையெல்லாம் கொண்ட கொடிய கள்வனாகிய சர்வேசுவரனுடைய திருவடிகளின்மேலே, திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபராலே அருளிச்செய்யப்பட்ட பண்களோடு கூடிய ஆயிரம் திருப்பாசுரங்களுள், இனிமையைக் கொண்ட பாசுரங்களாகிய இவைபத்தும் திருவண்வண்டூர்க்கு ஆம்; இவற்றை வல்லார் மின்னல்போன்ற இடையையுடைய பெண்களுக்கு மன்மதனைப் போன்றவர் ஆவர்.

வி - கு :—சடகோபன் சொன்ன இன்கொள் பாடல் இவை பத்தும் திருவண்வண்டூர்க்கு; (இவை) வல்லார் மின்னிடை மடவார்க்கு மதனர் என்க. குறளாய் ஞாலம் கொண்ட கள்வன் என்க.

ஈடு:—முடிவில், [1] இத் திருவாய்மொழி வல்லவர்கள், காமினிகளுக்குக் காமுகர் இனிய பொருளாயிருக்குமாறுபோலே, சர்வேசுவரனுக்கு விரும்பத் தக்க பொருளாவர் என்கிறார்.

மின்கொள் சேர் புரிநூல் குறளாய்-மின்னையென்று, நீல நிறம்பொருந்திய திருமேனிக்குப் [2] பரபாகமான சேர்த்தியையுடைய பூணுநூலைத் தரித்த ஸ்ரீவாமனனாய். [3] இப்போது இது சொல்லுகிறது, மஹாபலி எல்லாச் செல்வத்தையும் கொடுக்கும்படி பணிவுள்ள வேஷத்தோடே போய்ப் புக்க படியைத் தெரிவிப்பதற்கு. [4] "பகற்கண்டேன்" என்கிற தோற்றரவுக்குக் கிழக்கு வெளுக்கிறபடி. [5] தூது விடுகைக்குங்கூடச் சக்தன்

1. "இவை பத்தும் வல்லார் மதனர் மின்னிடையவர்க்கு" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. பரபாகம் - பலநிறங்கள் கலக்கும்போது உண்டாகும் நிறவேறுபாடு.

3. மஹாபலி பக்கலிலே அகல் ஞாலம் கொள்ளச் செல்லும் இடத்தில் பூணுநூலை அருளிச்செய்வதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இப்போது' என்று தொடங்கி. என்றது, மஹாபலியினுடைய சர்வசொத்தையும் கவர்ந்தது போன்று, இவளுடைய சர்வசொத்தையும் கவர்தற்கு அவன் புக்க படி என்பதனைத் தெரிவித்தற்கு என்றபடி.

4. அடுத்த திருவாய்மொழி "மின்னிடை மடவாராக" இருக்க, இங்கே, வாமனனைச் சொல்லுவதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பகற்கண்டேன்' என்று தொடங்கி. என்றது, "மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழியில் தோற்றரவுக்குத் தொடங்கிய படியைச் சொல்லுகிறது என்றபடி.

5. "மின்கொள் சேர் புரி நூல் குறளாய்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'தூதுவிடுகைக்கும்' என்று தொடங்கி. சிறும்புதல் - சங்கோசம்.

அல்லாமை தோற்ற இரப்பாளனாய், இத்தலையைப் பிரிந்து வந்த சிறும்புதல் எல்லாம் வடிவிலே தோற்ற நின்றபடி. அகல் ஞாலம் கொண்ட வன் கள்வன் அடிமேல்-பூமிப்பரப்பு அடங்கலும் அவனுக்கு ஒன்றும் தொங்காதபடி அபஹரித்த மஹாவஞ்சகன் திருவடிகளிலே. [1]மின்னிடை மடவார்க்குக் கிழக்கு வெளுக்கிறபடி. [2]அதாவது, மஹாபலியினுடைய செருக்கினைப் போக்கி ஒன்று ஒழியாமல் கைக்கொண்டாற் போலே, பிரணயரோஷத்தாலே வந்த இவளுடைய அபிமானத்தைப் போக்கிச் சேரவிட்டுக் கொண்டபடி. [3]எதிரியாய் வந்தவனுடைய செருக்கினைப் போக்கினாற்போலே அன்று, காதலியுடைய மானம். [4]அது அழிக்கலாம், இது அழிக்க ஒண்ணாதே. [5]விஷயமில்லாமலே கோபிக்கின்றவர்கள் இலக்குப் பெற்றால் மிகைப்பர்களத்தனையன்றே. அவன் சந்நிதியிலும் அழியாதது ஒன்றேயன்றோ இது.

பண்கொள் ஆயிரத்துள் இவை பத்தும் திருவண்வண் டூர்க்கு - [6]'**ஈழம் பிரம்புகொண்டது**' என்னுமாறுபோலே பண்ணே மிக்கிருத்தலின் '**பண்கொள் ஆயிரம்**' என்கிறது. இன்கொள் பாடல் வல்லார் - இனிதான பாடலை வல்லார். இதற்குப் பலம் சொல்லவேண்டாகாணும்; இதனையே இனிதாகச் சொல்ல அமையும். மின்னிடை மடவார்க்கு மதனர் -

---

1. அடுத்தது "மின்னிடைமடவார்" என்ற திருவாய்மொழியாக இருக்க, இங்கு "வன்கள்வன்" என்கிறதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'மின்னிடை மடவார்க்கு' என்று தொடங்கி.

2. "அகல் ஞாலம் கொண்ட" என்கிற இது, இவளுடைய துர்மானத்தைப் போக்கி இவளோடே கலந்தமைக்கு ஓர் அடையாளம் என்கிறார் 'அதாவது' என்று தொடங்கி.

3. ஒரு பெண்ணினுடைய துர்மானத்தைப் போக்கினதற்கு, எதிரியினுடைய அபிமானத்தைப் போக்கினது திருஷ்டாந்தம் ஆகமாட்டாதே? என்ன, 'அதிலும் அதிகம்' என்கிறார் 'எதிரியாய்' என்று தொடங்கி.

4. இது அதிகமானபடி எங்ஙனே? என்ன, 'அது அழிக்கலாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. அழிக்க ஒண்ணாது என்கிறது என்? முகம் காட்டினால் அபிமானம் அழியாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விஷயமில்லாமலே' என்று தொடங்கி. என்றது, பிரணய ரோஷத்தினுடைய ஆரம்ப நிலையிலேயே அதனைப் போக்கினால் போக்கலாம்; அது முற்றமேயாயின், முகம் காட்டினாலும் போகாது அதிகரிக்கும் என்றபடி. அதனை விவரணம் செய்கிறார் 'அவன் சந்நிதியிலும்' என்று தொடங்கி.

6. ஈழம் - ஈழதேசம். பிரம்பு கொண்டது - பிரம்பு மிகுந்தது.

[1]காமினிகளுக்குக் காமுகர் எவ்வளவு, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவ்வளவு ஆவர் இதனைக் கற்கவல்லவர்கள்; [2] இங்ஙன் அன்றாகில், "பல நீ காட்டிப் படுப்பாயோ", "புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ" என்று சொல்லுகிற இவர், பெண்களுக்கு இனியராவர் என்கிறாரன்றே; ஆதலால், காமினிகளுக்குக் காமுகரைப் போலே [3]அபிமதவிஷயத்திற்கு இனியராவர் என்கிறார். [4]திருவடியைச் சொல்லப்புக்குத் தாமரையைச்சொல்லா நின்றதன்றோ. எல்லாவகையிலும் ஒத்திருப்பனவற்றிற்கு உபமானத்தையே சொல்லக்கடவது; 'அதுபோல' என்றும், 'அதுதான்' என்றும் சொல்லக்கடவதாயிருக்கும். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

[5]வைகல்திரு வண்வண்டூர் வைகு மிராமனுக்கென்
செய்கைதனைப் புள்ளினங்காள் செப்புமெனக்—கைகழிந்த
காதலுடன் தூதுவிடும் காரிமா றன்கழலே
மேதினியீர்! நீர்வணங்கு மின். (51)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. அவதாரிகையில் அருளிச்செய்ததற்குத் தகுதியாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'காமினிகளுக்கு' என்று தொடங்கி.

2. இருந்தபடியே பொருள் கூறினாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்ஙன் அன்றாகில்' என்று தொடங்கி. 'என்கிறார் அன்றே' என்றது, பெண்களுக்கு இனியராவர் என்கிறார் என்னக்கூடா தன்றோ என்றபடி. "பல நீ காட்டி" இது, திருவாய். 6. 9: 9.

"புறத்திட்டு' இது, திருவாய். 6. 9: 8.

3. 'அபிமத விஷயத்திற்கு' என்றது, சர்வேசுவரனுக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் என்றபடி.

4. 'திருவடியைச் சொல்லப் புக்குத் தாமரையைச் சொல்லாநின்றது' என்றது, "தாவி வையம்கொண்ட தடம் தாமரைகட்கே" (6. 9: 9,) என்றதனைத் திருவுள்ளம்பற்றி. இதனை, உருவகம் என்பர் பிற்காலத்தார். ஆசிரியர் தொல்காப்பியனார் உவமை என்றே கூறுவர்.

5. இங்கு, "வைகல் திரு" என்ற சீரில் இரண்டாமசையிலுள்ள ஒற்றெழுத்தினை நீக்கி, அதனைக் கூவிளங்காய்ச் சீராகக் கொள்க. ஒற்றெழுத்தினை நீக்காவிடின், கனிச் சீராகும். வெண்பாவினுள் கனிச் சீர் வாராது.

செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரில் ஈண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து. (நளவெண்பா.)

என்னும் செய்யுளின் மூன்றாமடியில் இரண்டாம் சீர் இங்ஙனமே வந்திருத்தல் காண்க.

# இரண்டாந் திருவாய்மொழி—"மின்னிடை மடவார்"

## முன்னுரை

இவ் வாழ்வார்[1] ஆகிறார், சம்சார பயத்தாலும் பகவானிடத்துள்ள ஈடுபாட்டினாலும் கைங்கர்ய ருசியாலும் பிரிவில் தரியாமையாலும், பகவத் விஷயத்தில் கைவைத்தார் எல்லாருடைய படிகளையுமுடையராயிருப்பர். [2]"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாஒழுக்கும் அழுக்குடம்பும்" என்கையாலே, பத்தர்படி உண்டு என்னவுமாயிருந்தது; [3]"இந் நின்ற நீர்மை இனி யாம் உறாமை" என்று கொண்டு, அது பொருந்தாதபடி இருக்கையாலே, முமுக்ஷுக்கள் படியுமாயிருந்தது; [4]"வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்று, கைங்கர்யத்தால் அல்லது தேகயாத்திரை செல்லாமையாலே, முத்தர்படி

---

1. மேல் திருவாய்மொழியில் விடுத்த தூதர் சென்று அவனுக்கு அறிவித்து அவனும் வாராநிற்க, வருமளவும் பற்றாமல் ஆற்றாமை முறுகி பிரணயரோஷம் தலையெடுத்து, அதனாலே, 'இனி அவன் வந்தாலும் அவனோடே கலப்போம் அல்லோம்' என்று இருக்கிற இவளை, அவனும் வந்து, தன் அழகு முதலியவைகளால் இவளுடைய ஊடலைத் தீர்த்துக் கலந்த படியைச் சொல்லுகிறது என்று, மேல் சொல்லப் போகிற சங்கதியைத் திருவுள்ளம்பற்றி, பிரணயரோஷத்தாலே ஊடுகின்றவர்கள் பிராட்டிமார் அலரோ, ஆழ்வார்க்கு இது கூடுமோ? என்ன, 'இவர்க்கு எல்லார்படிகளும் உண்டு, ஆகையாலே கூடும்' என்கிறார் 'இவ்வாழ்வார் ஆகிறார்' என்று தொடங்கி. 'எல்லாருடைய' என்றது, முமுக்ஷுக்கள் முத்தர் நித்தியர் பிராட்டிமார் எல்லாரையும் குறித்தது.

2. சம்சாரபயம் தொடக்கமான தன்மைகளை, முமுக்ஷுக்கள் முதலானார் பக்கலிலே இவர் பாசுரங்களாலே காட்டுவதாகத் திருவுள்ளம்பற்றி, சம்சார பயம் பிறப்பது, பண்டு சம்சாரியாக இருந்து பகவானை அடைந்தவனுக்கே ஆகையாலே, பிராசங்கிகமாக, பத்தர்படியும் உண்டு என்னுமதனை இவர் பாசுரத்தாலே காட்டுகிறார் 'பொய்ந்நின்ற' என்று தொடங்கி. பத்தர் - சம்சாரத்திலே கட்டுப்பட்டவர்கள். 'பொய்ந்நின்ற' என்றது, திருவிருத்தம். பா. 1.

3. முமுக்ஷுக்களுடைய சம்சார பயம் இவர்க்கு உண்டு என்கிறார் 'இந்நின்ற' என்று தொடங்கி.

4. முக்தர்களுடைய கைங்கர்ய ருசியும் உண்டு என்பதனைக் காட்டுகிறார் 'வழுவிலா' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 3: 1.

உண்டு என்னலாயிருந்தது; [1] "நின்னலால் இலேன்காண்" என்று, அதுதான் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி வந்ததாயிருக்கையாலே, நித்தியரோடு ஒக்கச் சொல்லலாயிருந்தது; [2] பிரணய ரோஷத்தாலே ஊடுகையாலே, பிராட்டிமாரோடு ஒக்கச் சொல்லலாயிருந்தது. [3] "ஆற்றலில் விஷ்ணுவை ஒத்தவர், பிரியமாகப் பார்க்கப்படுவதில் சந்திரனை ஒத்தவர்" என்று, பெருமாளுடைய ஒவ்வொரு தன்மைக்கு ஒவ்வொரு பொருளை ஒப்பாகச் சொல்லுமாறு போலே, அல்லாதார்படி அடங்கலும் இவருடைய ஒவ்வொரு நிலைக்கு ஒப்பாமத்தனை. [4] இதுதான் இவர்க்கு இளமை தொடங்கியே இருப்பது ஒன்றே யன்றோ. "மூலையோ முழுமுற்றும் போந்தில......பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே" என்றும், "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து" என்றும் சொல்லுகிறபடியே யன்றோ இவர் பருவம் நிரம்புவதற்கு முன்னும் இருக்கிறபடி.

[5] இனி, "ஏறாளும் இறையோனும்" என்ற திருவாய்மொழியிலே, அவன் வேண்டாத நானும் என்னுடைமையும் வேண்டா என்றார்; "மாசறு சோதி" என்ற திருவாய்மொழியிலே, எனக்கு உறுப்பு அல்லாத அவனும் அவன் விபூதியும்

---

1. பிரிவில், நித்தியருடைய தரியாமையும் உண்டு என்னுமதனைக் காட்டுகிறார் 'நின்னலால்' என்று தொடங்கி. இது, திருவாய். 2 3: 7.

2. பிராட்டிமாருடைய பகவத் பிராவண்யமும் இவர்க்கு உண்டு என்னுமதனைக் காட்டுகிறார் 'பிரணயரோஷத்தாலே' என்று தொடங்கி.

3. ஒருவருக்கே பலருடைய தன்மைகள் உண்டாகக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆற்றலில்' என்று தொடங்கி.

"விஷ்ணுநா ஸத்ருஸோ வீர்யே ஸோமவத் ப்ரியதர்ஸந:"

என்பது, ஸ்ரீராமா. பால. 1: 18.

4. மேலே கூறப்பட்ட தன்மைகள் மற்றை ஆழ்வார்களுக்கும் உண்டே? இவர்க்கு வாசி ஏது? என்ன, 'இதுதான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "மூலையோ" திருவிருத்தம். பா. 60. "அறியாக் காலம்" திருவாய். 2. 3: 3.

5. இப்படி, ஊடுகைக்கு யோக்கியதையை உறுதிசெய்து, பிராசங்கிகமாக வந்த வினாக்களுக்கு விடைகளும் அருளிச்செய்தார் இதுகாறும். இனி, "ஏறாளுமிறையோனும்" என்ற திருவாய்மொழி தொடங்கிப் பிரிவின் வியசனம் ஆகையாலே ஊடுகிறாள் என்று, மேல் திருவாய்மொழியோடு இத் திருவாய்மொழிக்குச் சங்கதி அருளிச்செய்கிறார் 'இனி ஏறாளும்' என்று தொடங்கி.

வேண்டா என்று அழிக்கப் பார்த்தார்; "பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழியிலே, தரித்து நின்று குறைநுசந்தானம் பண்ணவல்லேனும்படி செய்தருளவேண்டும் என்று சரணம் புக்கார்; "வைகல் பூங்கழிவாய்" என்ற திருவாய்மொழியிலே, அப் பெரிய துயரத்தோடே கூடத் தூதுவிட்டார்; விட்ட ஆள் சென்று அத் தலைப்பட்டு அவனுக்கு அறிவிக்க, அவனும் இழவாளனாய் யானைக்கு அருள்செய்ய வந்து தோற்றினாற்போலே பதறி நடந்து வாராநிற்க, அவ்வளவு பற்றாமே கிடந்து துடித்து அலமந்து, 'இனி இவ்வளவில் நாம் செய்ய அடுப்பது என்?' என்று பார்த்து, "**முடிந்து போவதற்கு மேற்பட்ட பரிஹாரம் இல்லை**"என்று அறுதியிட்டு முடியப் பார்க்கிறாள். [1]அது இவள் நினைத்த போதாக முடியும்படி இராதே யன்றோ; அங்ஙன் செய்யலாமன்று, இவள் "ஏராளுமிறையோனும்" என்ற திருவாய்மொழியில் '**வேண்டா**' என்றபோதே போமேயன்றோ. [2] இனி, போகத்துக்கு அவன் வரவு வேண்டினதைப்போன்று முடிவுக்கும் அவன் வரவு வேண்டியிருந்தது. [3]பிரிவில் குறைநுசந்தானம் பண்ணித் தரிக்கலாம்; அவன் சந்நிதியில் அவனை ஒழிய அரைக்கணம் முகம் மாறியிருக்குமதற்கு மேற்பட முடிவு உண்டோ. [4] அன்றிக்கே, அவன் பெயரநின்று இத்தலையைப் பண்ணின மிறுக்கு அடங்கலும், அவன் சந்நிதியிலே தான் முடிந்து அவனையே நோவுபடுத்தப் பார்க்கிறாள் என்னுதல்.

[5] அவன், வரவிலே சிறிது தாழ்க்க, பிரணயரோஷம் தலையெடுத்து, 'இனி இருந்து ஜீவிக்கும் ஜீவனம்வேண்டா' என்று முடியப் பார்க்கிறாள் பிரிவு பொறுக்க மாட்டாமையா

---

1. முடியப் பார்க்கிறது என்? முடிந்துவிடல் ஆகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அது இவள்' என்று தொடங்கி.

2. ஆனபின்பு, அவன் வந்தே முடியவேண்டும் என்கிறார் 'இனி, போகத்துக்கு' என்று தொடங்கி.

3. பிரிவு அன்றோ முடிகைக்கு உறுப்பு ஆம், அவன் வரவு முடிகைக்கு உறுப்பு ஆமோ? என்ன, 'பிரிவில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. இதுகாறும், தான் முடியப் பார்க்கிறாள் என்றார். இனி, அவன் தன்னையே முடிக்கப் பார்க்கிறாள் என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

5. ஆயின், அவனிடத்தில் த்வேஷத்தாலே செய்கிறாளோ? என்ன, 'அவன் வரவிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

லே. [1]" மிக்க அன்பினலுண்டாகிய கலவியாலும் என்னுடையவன் என்ற அபிமானத்தாலும்" என்கிறபடியே, அவரோடு உண்டான பலநாள் பழக்கத்தாலும், கலவியாலும், "**என்னுடையவரன்றே**" என்கிற வேண்டற்பாட்டாலும், பெருமாளை மேலிட்டு வார்த்தை சொன்னள் அன்றே பிராட்டி. என் சொன்னள்? என்னில், [2] 'வாரீர்! ஒருவனுக்கு ஆற்ற ஒருத்தி உண்டோ? என் ஒருத்தியையும் நோக்கமாட்டாமையே வைத்துப் போகப் புகுகிறது! இதுதன்னை எங்கள் ஐயர் கேட்டால் போரவெறுப்பர்;' "ஒருபெண்பெண்டாட்டி ஆண் உடை உடுத்து என்மகளைக் கைப்பிடித்துக் கொண்டுபோன இத்தனையாகாதே என்று இராமே கடுகக் கொண்டு போகப் பாரும்."

[3]" ஈர்ஷ்யா ரோஷௌ பஹிஷ்கிருத்ய - பிறர் உயர்த்தி கண்டால் பொறுக்கவேண்டாவோ? நான் 'உம்மோடு கூடப்

---

1. இப்படிப் பிரணயரோஷத்தாலே ஊடின பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மிக்க அன்பினல்' என்று தொடங்கி.

" ப்ரணயாச்ச அபிமாநாச்ச பரிசிக்ஷேப ராகவம் "

என்பது, ஸ்ரீராமா. அயோத். 30: 2. எடுத்த சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'அவரோடு உண்டான' என்று தொடங்கி. வேண்டற்பாடு - பெருமை. பலகாலம் பழகினவன் விட்டுப் போகப் புக்கால் கோபமாமேயன்றே; மேலும், ஒரேபொருள் என்னலாம்படி கலந்தவன் விட்டுப் போகப் புக்கால் கோபமாமேயன்றே; ஆதலால், பலகாலம், பழகுதலும், கலவியும் மேலிட்டு வார்த்தை சொல்லுகைக்குக் காரணங்களாம் என்க. தனக்குப் பரதந்திரராயிருந்தவர் விட்டுப் போகப் புக்கால் கோபமாம் ஆதலாலும், 'என்னுடையவரன்றே? என்கிற வேண்டற்பாடும்' மேலிட்டு வார்த்தை சொல்லுகைக்குக் காரணமாகும் என்க. மேலிட்டு வார்த்தை சொல்லுகையாவது, வீரனனவனை வீரன் அல்லாதவனுக்கி வார்த்தை சொல்லுதல்.

2. 'வாரீர்' என்றது முதல் 'போரவெறுப்பர்' என்றது முடிய, "கிம்த்வா" என்ற சுலோகத்துக்கு அவதாரிகை. 'ஒருபெண்பெண்டாட்டி' என்று தொடங்கிச் சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார்.

" கிம்த்வாம் அந்யத வைதேஹஃ பிதா மே மிதிலாதிபஃ
ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்திரியம் புருஷவிக்ரஹம் "

என்பது, ஸ்ரீராமா. அயோத். 30: 3.

3. ஊடலால் வெறுத்து வார்த்தை சொல்லுவதற்கு, வேறும் ஒரு பிரமாணமும் அதற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் "ஈர்ஷ்யாரோஷௌ" என்று தொடங்கி.

போர' என்று புறப்பட்டு நாலடி இட்டால், எனக்கு அதனுல் வரும் ஏற்றம் கண்டு பொறுக்கமாட்டாமையால் உண்டான கோபம் பொறுமை இவற்றைப் பொகடும். புக்த ஶேஷம் இவ உதகம்-குடித்த பிறகு எஞ்சியுள்ள தண்ணீரைப் போன்று; [1] இவையும் அப்படி யாகாதேதான். [2] பிரணயிகள் கோஷ்டியில் இங்ஙனே காணும் பரிமாற்றம், காதலிக்கு உண்டான தன்னேற்றம் தன்னதாயிருக்க வேண்டாவோ? நய மாம் வீர - [3] என்னை அறியாதது போன்று உம்மையும் அறிந்திலீராகில், நான் சொல்லக் கேளும். உமக்கு ஒரு குறையும் இல்லைகாணும்; **என்னைக் கொடுபோகப் பாரும்.** விஸ்ரப்தః—தங்கள் தங்களை அறியாவிட்டால் ஆப்தர் வாயிலே கேட்டு அறியவேண்டும் காணும். பாபம் மயி ந வித்யதே - [4]பொகடும்; இங்ஙன் அன்றாகில், நீர் என்னை இங்கே நிறுத்திப் போனுல், நீர் மீண்டு வருந்தனையும் தரித்திருக்கைக்கு வேண்டும் காரணம் எனக்குஇல்லை

---

"ஈர்ஷ்யா ரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தஶேஷம் இவோதகம்
நயமாம் வீர விஸ்ரப்தః பாபம் மயி நவித்யதே"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 27 : 6.

"பொறுமை கோபம் இவற்றைத் தள்ளிப் பொகடும்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பிறர் உயர்த்தி' என்று தொடங்கி. 'உனக்கு உயர்வு எது? அது கண்டு நாம் என்செய்கிறோம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நான் உம்மோடு' என்று தொடங்கி.

1. 'இவையும்' என்றது, பொறுமை கோபம் இவற்றை. 'அப்படியாகாதே' என்றது, குடித்து எஞ்சியுள்ள தண்ணீரைப் போன்று தள்ளத்தக்கவை ஆகாவோ என்றபடி.

2. உன் உயர்த்தி கண்டால் பொறுக்க வேண்டுவான் என்? என்ன, 'உம்முடைய காதல் சித்திக்காக' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரணயிகள்' என்று தொடங்கி. 'இங்ஙனே காணும்' என்றது, மேல் வாக்கியத்தில் கூறிய பொருளைச் சுட்டுகிறது.

3. "வீர மாம் நய - வீர என்னை அழைத்துக்கொண்டு போம்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'என்னை அறியாதது' என்று தொடங்கி. 'என்னை அறியாதது போன்று உம்மையும் அறிந்திலீராகில்' என்றது, "அகலகில்லேன் இறையும்" என்கிற என் சொரூபத்தை அறியாதது போன்று, "பகைவர்களாலும் துதித்துப் பேசப்படுகின்ற வீரத்தையுடையவர்" என்கிற உம்முடைய தன்மையையும் அறிந்திலீராகில் என்றபடி.

4. பிரிவில் தரித்திருக்கைக்குக் காரணம், பாபம் என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் 'பொகடும்' என்று தொடங்கி, பொகடும் - விடும் என்றபடி.

காணும்."[1] இப்படியே யன்றோ பிரணய ரோஷம் தலை எடுத்தால் இருக்கும்படி.

[2] இவ்வளவேயோ? இன்னம், இவர்தாம் இலக்காகச் சொன்னவையன்றோ, இவை! இவர் வரவிட்ட ஆளின்முன்பேயும், "ககுத்ஸ்த வம்சத்தியில் பிறந்த பெருமாள், க்ஷேமத்துடன் இருந்தால் கோபத்தால் பிரளய காலத் தீயினைப் போன்று புறப்பட்டவராய், கடலை மேகலாபரணமாகவுடைய பூமியை ஏன் கொளுத்தவில்லை" என்னுமவள் அன்றோ. [3] காகுத்ஸ்த:- பரிபவம் பொறுத குடியிலேயன்றோ தாம் பிறந்தது; 'பிறர்க்கு வந்தவை போக்குமத்தனையல்லது, தமக்கு வந்தனவற்றைப் போக்கலாகாது' என்று இருக்கிறாரோ? கிம் நு ஸாகரமேகலாம் மஹீம் தஹதி - 'நீர்ப்பண்டத்திற்கு ஓர் அம்பும் கடினப் பொருளுக்கு ஓர் அம்பும் வேண்டும்' என்று இருக்கிறாரோ? கடலில் நீரே நெய்யாக எரிக்கவல்ல அம்பையுடையவரன்றோ. [4] ஒக்கக் கைப்பிடித்தவளாகிலும் பரிவட்டம் பேணியிருக்கும்படி வைத்தாரேயன்றோ; இராஜாக்களுக்கு பூமியும் பெண் போலேயன்றோ; ஈசுவரரர்கள் படைத்தபடி கிடப்பது இவர்

---

1. இதுகாறும் சொல்லிய பொருளை இவ்விடத்திலே ஏறிடுகிறார் 'இப்படியே' என்று தொடங்கி.

2. ஊடல் காரணமாக வெறுத்து வார்த்தை சொன்னதற்கு, வேறும் ஒரு பிரமாணம் காட்டுகிறார் 'இவ்வளவேயோ' என்று. இவர் தாம் இலக்காக - ஸ்ரீராமபிரான் முன்னிலையாக. 'இவர் வரவிட்ட ஆளின் முன்பேயும்' என்னுமதனை, பின்னே வருகின்ற 'என்னுமவளன்றோ' என்னுமதனோடு கூட்டிப் பொருள் காண்க. வரவிட்ட ஆள் - திருவடி.

"குஸலீ யதி காகுத்ஸ்த: கிம்நு ஸாகரமேகலாம்
மஹீம் தஹதி கோபேந யுகாந்தாக்நிரிவ உத்தித:"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36 : 14.

3. எடுத்த சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'காகுத்ஸ்த:' என்று தொடங்கி. "காகுத்ஸ்த:" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பரிபவம்' என்று தொடங்கி. எரிக்காததற்குக் காரணம், நம்பக்கல் உபேக்ஷை ஒழிய, தம்முடைய அம்பு இரண்டனையும் எரிக்கமாட்டாமை இல்லை என்கிறார் 'நீர்ப்பண்டத்திற்கு' என்று தொடங்கி. இரண்டற்கும் வெவ்வேறு அம்புகள் வேண்டாவோ? என்ன, 'கடலில் நீரே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, தாம் எரிக்காதிருந்தது, என்பக்கல் அன்பு இல்லாமை அன்றோ என்றபடி.

4. "மேகலாம்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'ஒக்கக் கைப்பிடித்தவளாகிலும்' என்று தொடங்கி. பிரமனாலே படைக்கப்பட்டதனை இவராலே அழிக்கப்போமோ? என்ன, 'ஈசுவரர்கள்'

கண்சிவக்குமளவுமாகாதே என்றும்; [1] "பித்ரு வசன பரி பாலநம் என்கிற வியாஜத்தாலே ராஜ்யத்தைவிட்டவரும், என்னையும் கால்நடையாகக் காட்டில் அழைத்து வந்தவருமான எந்த ஸ்ரீராமபிரானுக்கு" என்கிறபடியே, பித்ருவசனபரிபாலனம் செய்யப் போந்தாரோ? என்னை நலிகைக்காகப் போந்தாரத்தனையன்றோ என்றும் இப்புடைகளிலே சொன்னவை பலவே யன்றோ.

[2] இவளும் "மாசறுசோதி" என்னும் திருவாய்மொழி தொடங்கிப் போர நோவுபட்டு, அது தன்னை "வைகல் பூங்கழி வாய்" என்னும் திருவாய்மொழியளவும் வரப் பாடு ஆற்றி, அவ்வளவிலும் வரக் காணாமையாலே தூது விட்டு, தூதுவர்களுடைய வார்த்தை அத்தலைப் பட்டு மீளுவதற்கு முன்னே பற்றாதபடி பதறி, 'இனி, அவன்தான் வந்தாலும் கலவியாய் அது பிரிவினை முடிவாகவுடைத்தாயல்லது இராது; ஆனபின்பு, அவன் வந்து கலந்து பிரிந்த கோள்வாய் பொறுக்க அரிதாயிருக்கும்; பின்பு, பிரிவாகிற புதுக்கோமுற்றவன் வந்து முதன்மை கொண்டாடுமதில், முகம் பழகின துன்பமே அமையும்' என்று ஆற்றாமைதோற்ற இருந்தாள். எங்ஙனே இருந்தாளோ? என்னில், [3] "ஹிம ஹத நளிநீவ நஷ்ட ஶோபா -

என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, சுலோகத்திலேயுள்ள "கோபேந" என்றதற்கு, பாவம்.

1. ஊடல் காரணமாக வெறுத்து வார்த்தை சொன்னதற்கு வேறும் ஒரு பிரமாணம் காட்டுகிறார் 'பித்ருவசன' என்று தொடங்கி.

"தர்மாபதேஶாத் த்யஜ்தஃ ச ராஜ்யம்
மாம் ச அபி அரண்யம் நயதஃ பதாதிம்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36 : 29.

2. நன்று, பிராட்டி பலநாள் பிரிந்து நோவுபட்ட காரணத்தால் ஊடினாள்; இவள் அப்படிப் பலநாள் பிரிந்து நோவுபட்டாளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவளும்' என்று தொடங்கி. கோள்வாய் - புதுப் புண். புதுக்கோமுற்றவன்-புத்ததிகாரி. 'எங்ஙனே இருந்தாளோ? என்னில்,' என்றது, இவள் ஆற்றாமை தோற்ற இருந்த தன்மை யாருடைய தன்மையைப் போலே இருந்தது என்றால் என்றபடி.

3. "ஹிமஹத நளிநீவ நஷ்டஶோபா
வ்யஸநபரம்பரயா அதிபீட்யமாநா
ஸஹசர ரஹிதேவ சக்ரவாகீ
ஜநகஸுதா க்ருபணாம் தஶாம் ப்ரபந்நா"

என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 30.

[1] பன்னிரண்டு ஆண்டு தண்ணீர்த் துரும்பு அறக் கலந்து போந்த இவளுக்கு வந்தேறியான பிரிவு அன்றோ; அதனாலே அழகு அழிந்திருந்தாள். வ்யஸந பரம்பரயா - [2] பிரிவினைப் போன்று கலவியும் வந்து கழியப் பெற்றதில்லை. அதிபீட்ய மாநா-இடத்தின் அளவல்லாதபடியாயிருக்கை. ஸஹசரரஹி தேவ சக்ரவாகீ - [3] வருமளவும் உணர்ந்து பொறுக்க மாட்டா திருக்கை. அவற்றின்படி அங்ஙனே அன்றோ; ஜனகஸுதா - 'இவைவரும்' என்று வளரப் பெற்றது இல்லை. க்ருபணும் தஸாம் ப்ரபந்நா - [4] மேலே கூறியவை ஒன்றும் ஒப்பாகமாட்டாது, சில சொல்லப்பட்டவாம் இத்தனை. இவளும் அப்படியே, 'முகம்பழகின ஆற்றாமையோடே இருந்து முடிய அமையும்; இனி அவன் வரவு நமக்கு வேண்டா' என்று இருக்கிறாள்.

இவள்தான் இப்படிப் பாரிக்கைக்கு அவன்தான் வாரா நின்றானோ? என்னில், [5] அவன் வரவுக்குச் சூசகமான நன்னி

---

1. பனியினாலே வாட்டப் படுவதற்கு முன்பு தாமரை ஓடை பொலிவோடு தோன்றியது போன்று, பிராட்டியும் திருவயோத்யையில் இருந்தி பன்னிரண்டு வருடங்களும் ஒரு தடையும் இன்றிக் கலந்திருந்தாள் என்று, "நஷ்டஸோபா" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பன்னிரண்டு' என்றுதொடங்கி. தண்ணீர்த்துரும்பு - தடை.

2. "பரம்பரயா" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பிரிவினைப் போன்று' என்று தொடங்கி.

3. "சக்ரவாகீ" என்றதற்கு, பாவம், 'வருமளவும்' என்று தொடங்கும் வாக்கியம்.

4. 'மேலே கூறியவை' என்றது, தாமரையோடையினையும், சக்கரவாகப் பறவையினையும்.

5. அவன்தான் வாராநின்றானோ? என்கிற ஐயத்துக்கு, ஐந்து வகையாக விடை அருளிச்செய்கிறார் 'அவன் வரவுக்கு' என்று தொடங்கி.

இங்கே,

"பிரிவெண்ணிப் பொருள்வயின் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாய் வலிப்பல்யான் கேளினி;
.........................................................
இணைநல முடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயின்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழில் உண்கணும் ஆடுமா லிடனே" (பாலிக்கலி. 10.)

என்னும் கலித்தொகைப் பகுதியும், கம்பராமாயணம் சுந்தரகாண்டம் காட்சிப் படலம், 32-முதல் 35-முடிய உள்ள செய்யுட்களையும் ஒப்புநோக்கல் தகும்.

மித்தங்கள் பல உளவாயிருந்தன: [1]"பக்ஷீச - பறவையானது சிறகினை விரித்தது. ஶாகா நிலய: - உலர்ந்த கொம்பிலன்றிக்கே, பசுமையையுடைத்தான பணையிலே இருந்தது. மரத்தை வலமாக வந்து, தழைத்த பணையிலே நற்றரிக்க இருந்தது என்றபடி. ப்ரஹ்ருஷ்ட: - [2] அங்குள்ள பழம் முதலானவற்றை உண்பதனால் உண்டான உவகை வடிவிலே தோற்றும்படி இருந்தது. புந: புந: ச உத்தமஸாந்த்வ வாதீ - மேன்மேலென நல்வார்த்தைகள் சொல்லத் தொடங்கிற்று. அதற்குமேலே, ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந: - இவ்வளவு அல்ல கண்டீர் அத்தலைப்பட்டது என்று சொல்லுமாறுபோலே இருந்தது. புநபுந: சோத யதீவ-வரவு நிச்சயமான பின்பு, குளித்தல் ஒப்பித்தல் செய்யாதிருக்கிறது என்? என்று சொல்லுமாறு போலே இருந்தது. ஹ்ருஷ்ட: - [3] வந்தால் பிறக்கும் வேறுபாடு தோற்ற உடம்பு மயிர் எறிந்திருந்தது. [4] ததாகதாம்-"ரஹஸ்யஞ்ச பிரகாஶஞ்ச-இரகசியச் செயல்களும் வெளிப்படைச் செயல்களும்" என்று கொண்டு பிரஹ்மாவின் திருவருளாலே உள்ளபடி எல்லாம் தோற்றக்கடவதாகப் பெற்றுடையனை

---

1. "பக்ஷீச ஶாகாநிலய: ப்ரஹ்ருஷ்ட:
புந:புநஶ்சோத்தம ஸாந்த்வ வாதீ
ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந:
புந:புந: சோதயதீவ ஹ்ருஷ்ட:"

என்பது, ஸ்ரீராமா. சுந். 27: 51.

'அண்டஜம்' என்னுமல், "பக்ஷீ" என்றதற்கு, பாவம், 'பறவையானது' என்று தொடங்கும் வாக்கியம். 'காஷ்டநிலய:' என்னுமல், "ஶாகாநிலய:" என்றதற்கு, பாவம் 'உலர்ந்த' என்று தொடங்கும் வாக்கியம். "நிலய:" என்றதற்கு, பாவம் 'மரத்தை' என்று தொடங்கும் வாக்கியம்.

2. பறவைகள் இரை எடுத்தால் நல்ல சகுனமாகையாலே, அதனை அருளிச்செய்கிறார் 'அங்குள்ள' என்று தொடங்கி.

3. 'வந்தால் பிறக்கும் வேறுபாடு' என்றது, பெருமாள் வந்தால் பிராட்டிக்குப் பிறக்கும் சந்தோஷம் என்றபடி.

4. ததாகதாம் - வாக்கினாலே சொல்லுதற்கு முடியாத நிலையினையடைந்தவள். இப்பொருளையே விளக்குகிறார் 'ரஹஸ்யஞ்ச' என்று தொடங்கி.

"ததாகதாம் தாம்வ்யதிதாம் அநிந்திதாம் வ்யபேதஹர்ஷாம் பரிதீநமாநஸாம்
சுபாம் நிமித்தாநி சுபாநி பேஜிரே நரம் ஶ்ரியாஜுஷ்டமிவ உபஜீவிந:"

என்பது, ஸ்ரீராமா. சுந். 29: 1.

"ரஹஸ்யஞ்ச பிரகாஶஞ்ச யத்வ்ருத்தம் தஸ்ய தீமத:
ராமஸ்ய ஸஹ ஸௌமித்ரே ராக்ஷஸாநாம் ச ஸர்வஶ:"

என்பது, ஸ்ரீராமா. பால. 2: 33.

வால்மீகி மஹருஷிக்கும் பாசுரமிட்டுச் சொல்ல ஒண்ணுதபடி இருக்கிறபடி. தாம்-[1] தர்மிக்கு மேற்பட அவ்வருகு ஒன்று இன்றிக்கே இருக்கை. வ்யதிதாம் - முற்கூறியவை எல்லாம் இயற்கையாய், வியசனமுள்ளது மேலே என்று தோற்றும்படியாயிருந்தாள். [2]ஸமா த்வாதஶ தத்ராஹம்-என்று பன்னிரண்டு ஆண்டு கலந்து பிரிந்த இவளுக்கு அது ஒன்றும் தோற்றுதே துக்கத்தை இட்டு நிருபிக்கவேண்டும்படியா யிருந்தாள். அநிந்திதாம்-[3]அத்தலையைப் பிரிந்தால் இருக்கக்கடவபடியே இருந்தாள். இப்படி இராத அன்று பழிக்கத் தக்கவள் ஆவளே. வ்யபேத ஹர்ஷாம்-'உவகை குடிபுகுந்து போயிற்று' என்று தெரியாதாய் இருக்கை. பரிதீந மாநஸாம்-உவகை வந்தாலும் தங்கும் இடமும் இன்றிக்கே இருக்கை. ஶுபாம் - [4] மண் தின்று வந்த நகடுபோல் அன்றே குணுதிகவிஷயத்தைப் பிரிந்தால் இருக்கும்படி; கடலேறி வடிந்தாற்போலே இருக்கிற அவ் விருப்புதனக்கே ஆலத்தி வழிக்கவேண்டும்படி இருக்கை. ஶுபாநி நிமித்தாநி பேஜிரே - நிமித்தங்களானவை இத் தலைக்கு நன்மை சொல்லித் தாம்தாம் சொரூபம் பெற்றன. என்றது, சாக்ஷாத் லக்ஷ்மிக்குக் கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெற்றன என்றபடி.என்போலே என்னில்,நரம் ஶ்ரியாஜுஷ்டம் இவ உபஜீவிநः-அர்த்திகளாயிருப்பார் உதாரர்பக்கலிலே சென்று தங்கள்தங்கள் பிரயோஜனம்பெற்று உவகையினராமாறுபோலே. இப்படியாயிருந்தன நிமித்தங்களின் அளவு.

---

1. "தாம்" என்பது, சொரூபத்தை மாத்திரம் சொல்லுகிற சொல். இதனையே, அருளிச்செய்கிருர் 'தர்மிக்கு' என்று தொடங்கி.

2. ஸ்ரீராமா. சுந். 33 : 17.

3. 'அத்தலையைப் பிரிந்தால் இருக்கக்கடவபடியே இருந்தாள்' என்றது, உத்தமநாயகனைப் பிரிந்தால் இருக்கக் கூடிய படியே இருந்தாள் என்றபடி.

அருந்தும் மெல்லடகு ஆரிட அருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோஎன்று விம்மும்
மருந்து முண்டுகொல் யான்கொண்ட நோய்க்கென்று மயங்கும்
இருந்த மாநிலம் செல்லரித் திடவுமாண் டெழாதாள்.

என்ற பாசுரம் நினைவுகூர்தல் தகும். கம். சுந்.

4. "சுபாம்" என்கைக்கு, இந்த நிலையில் அழகு உண்டோ? என்ன, 'மண் தின்று' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். இதனை விவரணம் செய்கிருர் 'கடலேறி வடிந்தாற்போலே' என்று தொடங்கி. 'ஆலத்தி வழிக்க வேண்டும்படி' என்னுமிவ்விடத்தில் "செழுநீர்த் தடத்துக் கயல் மிளிர்ந்தால் ஒப்பச் சேயரிக்கண், அழுநீர் துளும்ப அலமருகின்றன வாழியரோ" என்ற திருப்பாசுரப் பகுதி அநுசந்தேயம். நகடு-பசலை நிறமும், சோர்வையும், வியாதியும்.

[1]இனி, அவன் அளவு பார்த்தால், ஆர்த்தோவா யதிவா திருப்தஃ - ஆர்த்தனைச் சரணம் புகவுமாம்; அன்றிக்கே, நாம் திருநாமங்களைச் சொன்னால் சேவகர் நம்மைப் பரிகசித்துச் சொல்லுமாறுபோலே செருக்காலே சொல்லவுமாம். [2] இங்ஙனம் விகல்பிப்பான் என்? [3]ஆர்த்தனுக்கு அன்றோ பலத்தை அடைதல் உள்ளது? மற்றையோனுக்கு உண்டாகச் சொல்லுகிறஇடம் பிரசித்தம்அன்றோஎன்னில்,[4]இந்தச் சுலோகம் சரணாகதத்தின் லக்ஷணம் சொல்லுகிறதன்று; சரண்யனுடைய

---

1. நிமித்தங்கள் மாத்திரமே யல்லாமல், 'அவன்தான் பேரருட்கடல் ஆகையாலும், அவனுடைய வரவு தப்பாது என்றுகொண்டு இருந்தான்' என்று, இரண்டாவது பரிஹாரம் அருளிச்செய்கிறார் 'இனி, அவன் அளவு' என்று தொடங்கி, 'என்றிருக்கும் என்றிருக்கையாலும்' என்றது முடிய.

" ஆர்த்தோவா யதிவா த்ருப்தஃ பரேஷாம் ஶரணாகதஃ
அரிஃ ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்யஃ க்ருதாத்மநா "

என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 28.

'ஆர்த்தனைச் சரணம் புகவுமாம்' என்றது முதல், 'இத்தனையும் செய்தல்லது நிற்க ஒண்ணாது என்றபடி' என்றது முடிய, "ஆர்த்தோவா" என்ற சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார். சுலோகத்திலுள்ள "த்ருப்தஃ" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'நாம் திருநாமங்களை' என்று தொடங்கி. திருப்தனாவான், சம்சாரதோஷ ஞானமும் பகவத்வைலக்ஷண்ய ஞானமுமுடையவனாய், நல்லாசிரியனை அடைதலை முன்னாகக்கொண்டு ஈசுவரனே உபாயோபேயம் என்று அறுதியிட்டு இனி வரும் பிறவியினைப் பொறுக்காதவனாய், இப்பிறவி முடியுமளவும் ஆறியிருக்குமவனாய் இருக்க, 'சேவகர் நம்மைப் பரிகசித்துச் சொல்லுமாறுபோலே' என்று, அவனை எளிமைப் படுத்துதல் என்? எனின், சரண்யனுடைய வைபவத்தைச் சொல்லும் இடமாகையாலே நஹிநிந்தா நியாயத்தாலே எளிமைப்படுத்துகிறார் என்று அருளிச்செய்வர்.

2. 'இங்ஙனம் விகல்பிப்பான் என்?' என்றதற்குக் கருத்து, ஆர்த்தன் திருப்தன் என்னும் இவ்விருவருடைய பிரபத்திகள் ஒன்றற்கொன்று நெடுவாசி பட்டிருக்க, "ரக்ஷிதவ்யஃ - ரக்ஷிக்கத் தக்கவர்கள்" என்று, இருவர்க்கும் பலன் ஒன்றாக விகல்பித்தல் கூடுமோ? என்னில் என்பது.

3. விகல்பித்தால் வரும் குறை ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆர்த்தனுக்கன்றோ' என்று தொடங்கி. மற்றையோனுக்கு - திருப்தனுக்கு.

4. 'இந்தச் சுலோகம்' என்றது, "ஆர்த்தோவா" என்ற சுலோகத்தினை என்றபடி.

லக்ஷணம் சொல்லுகிறது. [1] இவனுடைய ஆர்த்திதானும் உபாயத்தில் சேராதேயன்றே; ஆனபின்பு, அவனோடு இவனோடு வாசி இல்லை. அன்றிக்கே, [2]"தன்நிலை அறிந்து, 'நமக்கு ஒரு கைம்முதல் இல்லையாய் இருந்தது' என்று தன்குறையை அறிவிக்கவும் மாட்டாதபடியாயிருந்தான்; ஆனபின்பு, இவனுக்கு நாமேயன்றோ உளோம்" என்று திருவுள்ளம் இவன்பக்கல் ஊன்றியிருக்கும். பரேஷாம் சரணாகதஃ அரிஃ - பகைவர்களில் வைத்துக்கொண்டு சரணம் அடைந்தவனான பகைவனாயிற்று [3] இவன். அது என்? என்னில், "சரணம்" என்ற வார்த்தையைச் சொல்லுகையாலே, '**சரணாகதன்**' என்னவுமாய், அகவாயில் இல்லாமையாலே '**பகைவன்**' என்னவுமாயிருக்கை. [4] அன்றிக்கே, முன்பு செய்தனவற்றிற்கு அநுதாபம் இல்லாமையாலும், இப்போது '**சரணம்**' என்கிற சொல்லைச் சொல்லுகையாலும், இரண்டும் சொல்லலாயிருக்கை. அன்றிக்கே, [5]"கொன்றேன்,...அன்றே வந்தடைந்தேன்" என்னு

1. சரண்யனுடைய இலக்ஷணம் சொல்லுகிறது கொண்டு ஆர்த்தனையும் திருப்தனையும் ஒக்கச் சொல்லலாமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவனுடைய' என்று தொடங்கி.

2. மேல் ஆர்த்தனோடு ஒப்புமைசொல்லி, ஆர்த்தனைக்காட்டிலும் த்ருப்தனுக்கு உயர்வு சொல்லுகிறார் 'தன் நிலையறிந்து' என்று தொடங்கி. இவன் பக்கல் - திருப்தன் பக்கல்.

3. 'இவன்' என்றது, திருப்தனை. 'அது என்? என்னில்' என்றது, சரணை அடையும் தன்மையும் பகைத்தன்மையும் தம்முள் முரண்பட்டனவேயன்றோ என்னில் என்றபடி.

4. மேல் உலக மரியாதையிலே அருளிச்செய்து, சாஸ்திர மரியாதையிலே அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

5. கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோள் ஒன்றிலாமையினால்
என்றேனு மிரந்தார்க் கினிதாக உரைத்தறியேன்
குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா!
அன்றே வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே.

என்பது, பெரிய திருமொழி. 1. 9 : 3. என்றது, "பரேஷாம் அரிஸ்ஸம் ஶரணாகதஃ" என்று கூட்டி, பிறர்க்கும் பகைவனாய்க்கொண்டு பிராயச்சித்தம் முதலியன செய்யாது சரணம் அடைந்தவன் என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்தபடி. உதிரக் கை கழுவாமல் உடனே வந்து அடைந்தேன் என்பது பொருள்.

ஆக, 'பகைவர்களில் வைத்துக்கொண்டு சரணம் அடைந்தவனான பகைவன்' என்று மேலே கூறியதனை, மூன்று காரணங்களால் விளக்கியபடி.

மாறுபோலே என்னுதல். பிராணாந் பரித்யஜ்ய - பிராணன்களை ஒருதலையாக விட்டு. [1] 'பிராணாநபி - பிராணன்களையும்' என்னவேண்டாவோ? என்னில், அவன்சொன்ன சொலவுக்கு இது ஒன்றும் போராமையாலே அதுவேண்டாவாயிற்று. ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா-திருந்திய மனத்தையுடையவனாயிருக்குமவனால் இத்தனையும் செய்யப்படும். என்றது, அறிவுடையார்க்கு இத்தனையும் செய்தல்லது நிற்க ஒண்ணாது என்றபடி. இதுவன்றோ அவன்படி. [2]"இப்படி, களித்துச் '**சரணம்**' என்றாலும் பொறுக்கமாட்டாதவன், 'மாசறுசோதி' என்ற திருவாய்மொழி தொடங்கிப் போர மிறுக்குப்பட்டு நான்கு முறைகள் அடுத்துச் சரணம் புக்கு, அவ்வளவிலும் முகம்காட்டாதொழியச்செய்தேயும் தூதுவிட்டு, 'இப்படி இம் மிறுக்குக்கள் எல்லாம் பட்டது நம்மை எண்ணிஅன்றோ' என்றிருப்பான்" என்று இருக்கையாலும்;

[3]இவ்வளவும் வர இவள்தான் முடியாதே கிடக்கையாலும், அவன் இயல்பினை நம்பியிருக்கையினாலும், அவன் வரவுக்கு அறிகுறியான நன்னிமித்தங்கள் பல உண்டாகையினாலும்; [4]இவையெல்லாம் கிடக்க, 'நம்முடைய பாக்கியஹாநிதான் அவனை நம்முன்னே கொண்டுவந்து நிறுத்தும்' என்று இருக்

---

1. இவனைக் காட்டிலும் பிராணன்கள் சிறந்தனவன்றோ என்று சங்கித்து, இவன் கூறிய சரணம் என்ற வார்த்தைக்குப் பிராணன்கள் ஒப்பாகாமையாலே சிறந்தனவல்ல என்று பரிஹரிக்கிறார் 'பிராணாநபி' என்று தொடங்கி. 'அவன் சொன்ன சொலவு' என்றது, 'சரணம்' என்று சொன்ன சொல்லை.

2. மேல் சுலோகத்தாற் சொன்ன குணாதிக்யத்தைக் கிம்புனர் நியாயத்தாலே ஸ்ரீராமபிரான் பக்கலிலே ஏறிட்டுக் காட்டுகிறார் 'இப்படி' என்று தொடங்கி. 'களித்து' என்றது, திருப்தனாய் என்றபடி.

3. மூன்றாவது காரணத்தை 'இவ்வளவும் வர' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். மேலே கூறிய நன்னிமித்தங்களையும், "ஆர்த்தோவா" என்ற சுலோகத்தாற் கூறிய அவன் குணாதிக்யத்தையும் எதிர் நிரல் நிறையாக அநுவதிக்கிறார் 'அவன் இயல்பினை' என்று தொடங்கி. 'அவன் இயல்பினை' என்றது, அவன் கிருபையுள்ளவனாயிருக்கும் தன்மையை.

4. நான்காவது காரணம், 'இவையெல்லாம் கிடக்க' என்று தொடங்கும் வாக்கியம்.

கையினுலும்; [1]"பிரிவு விரும்பப்படாத நிலையிலே போகவல்ல நாணமற்றவன் வரவு விரும்பப்படாத நிலையிலே முன்னே வந்து நிற்கவும் வல்லன்' என்று இருக்கையினுலும், 'இன்னமும் ஒருகால் கலந்து பிரிந்து நம்மை முடிக்கவேண்டும்' என்று இருப்பவனுதலானும், 'வரவுதப்பாது' என்று அவன் வரவை நிச்சயித்தாள்.

அங்ஙனம் நிச்சயித்தவள், தானும் தோழிமாருமாக 'இனி, அவன் [2]வந்தாலும் அவனுக்கு முகங்கொடுத்தல், அவனேடு வார்த்தை சொல்லுதல் செய்யக்கடவோமல்லோம்' என்று அறுதியிட்டுக்கொண்டு, 'அவன் அறியாதது ஓர் இடத்தே போய் இருக்கவேண்டும்' என்று பார்த்து; காயாம்பொழிலாய் அதிலே விளையாடு சூழலாய் அதன்நடுவே அதிமனோகரமாய் இருப்பதொரு மண்டபமாய், அம்மண்டபத்திலே [3]கழகமாக இருந்து, வந்தாலும் அவனுக்கு இட்டீடுகொள்ளுகைக்குப் பற்ருசு இல்லாதபடி பூவை கிளி பந்து தொடக்கமான சேதனமாயும் அசேதனமாயுமுள்ள விளையாட்டுக் கருவிகளை ஊரழி பூசலில் அரண் உள்ள கோட்டைகளிலே சரக்கு வாங்குவாரைப் போலே ஓரிடத்தே திரள வாங்கி, [4]"இனி, இவர்கள் மறந்தவை எவையேனும் உளவாகில் அவைபெற்று அவனுக்குச் சத்தை உண்டாகவேண்டும்படியாய், இப்படிச் சமயமிட்டு, வந்தாலும் அவனுக்குப் புகுர ஒண்ணுதபடி ஆதரம் இன்மையாகிற கன்மதிலை உரக்கவிட்டு, அவனுடைய [5]முற்றறிவினைக்கொண்டு காரியங்கொள்ளுகைக்கு ஒருவழி இல்

---

1. ஐந்தாவது காரணம், 'பிரிவு விரும்பப்படாத' என்று தொடங்கும் வாக்கியம். முன்னேவந்து நிற்றல் எதற்கு? என்ன, 'இன்னமும் ஒருகால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

2. மேலே கூறிய காரணங்கள் ஐந்தும் தன்தீவினை காரணமாகப் பயன் அற்றவைகளாய், வாராதிருக்கையே நிச்சயம் என்னுமதனைக் காட்டுகிறது 'வந்தாலும்' என்ற உம்மை.

3. கழகம் - கூட்டம். இட்டீடு கொள்ளுகை - வார்த்தையீட்டு வார்த்தை கொள்ளுதல். ஊரழிபூசல் - ஊர் அழியும்படியான சண்டை.

4. ஆயின், "என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பி" என்று அவன் கையிலே இருப்பனவாகச் சொல்லாநின்றதே? என்ன, 'இனி, இவர்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

5. 'முற்றறிவினைக்கொண்டு' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, அவனுக்கு முன்னே ஏலக் கோலிச்செய்கிருளாகையாலே, அவன் தன் முற்றறிவினைக்கொண்டு காரியம் கொள்ள வழியில்லை; அந்தப்புரமாகையாலே, வரம்பில் ஆற்றலைக் கொண்டும் காரியமில்லை என்றபடி.

லாதபடியாகவும் வரம்பில் ஆற்றலைக் கொண்டு காரியம் செய்ய ஒண்ணுதபடியாகவும் அறுதியிட்டிருந்து, [1]"கிருஷ்ணன் சுகமாக இருக்கிருரா? என்று கிருஷ்ண விருத்தாந்தம் சொல்லுவார், அவ்வார்த்தைகளால் பயன் என்" என்று இப்பிதற்றுத்தான் என் என்பாராய் அசுரத்தன்மை வாய்ந்தவர்களாய் உகவாத இரணியன் முதலானேர் கோஷ்டிகளில் [2] திருநாமம் சொல்லுகை பொறுக்க முடியாதவாறு இருப்பது போன்று, இவர்கள்கோஷ்டியிலும் உகவைதலைமண்டையிட்டு, திருநாமம் சொல்லில் நெஞ்சு சிவிட்கு என்னும்படியாய்க் கொண்டு இருந்தார்கள் இவர்கள். இது இத்தலை இருந்தபடி.

[3] இனி, அத்தலை இருந்தபடி என்? என்றல்; "வேறு கொண்டு உம்மை யான் இரந்தேன்" என்கிற துயர ஒலி செவிப்பட்டது. [4]"நல்லது செவிப்படுமவன்" அன்றே.

---

1. "கச்சித் ஸுகுஶலீ க்ருஷ்ணஃ சல ப்ரேம லவாத்மகஃ" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 24: 12.

2. அரசன் அன்னவை உரைசெய மறையவன் அஞ்சிச்
சிரதலம்கரம் சேர்த்திடச் செவித்தொளை சேர்ந்த
உரக மன்னசொல் யானுனக் குரைசெயி னுரவோய்!
நரக மெய்துவன் நாவும்வெந் துகுமென நவின்றன்.

என்பது, முதலாக வருகின்ற செய்யுட்களால் காணல் தகும். கம்ப. இரணியன் வதை. 37. சிவிட்கு - பொருமை.

3. இவர்கள் இப்படி இருந்தார்களாகில் அவன் செய்தது என்? என்னும் வினவை அநுவதிக்கிருர் 'இனி அத்தலை' என்று தொடங்கி. மேலே, விட்ட தூதுவர் சென்று அவனுக்கு அறிவிக்க, அவனும் இழவாளனுய் வருகிருன் என்ருர். இங்கே, தூதரைக் குறித்துச் சொன்ன துயர ஒலி செவிப்பட்டு வருகிருன் என்கிருர். இவை இரண்டற்கும் சேர்த்தி என்? என்னில், தூதர் சென்று அறிவிக்க வருகிருன் என்றும், இவள் ஆர்த்தநாதம் கேட்டு வருகிருன் என்றும் இரண்டனையும் சங்கதியாக யோஜித்துக் கொள்வது.

4. இங்கே இருந்து கூப்பிட்டால் கேட்குமோ? என்ன, 'நல்லது செவிப்படுமவன்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

"ருத்ரோ பஹுஶிரா பப்ருஃ விஶ்வயோநிஃ ஶுசிஶ்ரவாஃ" என்பது, ஸஹஸ்ரநாமம்.

இவ்வளவில் ஆறியிருக்குமவன் அன்றே; [2] "பெரிய ஆபத்தை அடைந்தது" என்று கொண்டு ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய துயரஒலி செவிப்பட்டபோது, திருவடிநிலை கோத்து எழுந்தருளப்பற்றாமை வெறும் தரையிலே பத்து எட்டு அடி இட்டும் உலகத்தைச் சிருஷ்டித்தல் முதலான செயல்களினும் நினைவுக்கு மேற்பட ஒன்றும் காணாமையாலே, இப்பதற்றம் இருந்தபடியால் 'இது இவ்வளவுகளில் அன்று, இதற்கு அடி என்?' என்று திவ்ய அந்தப்புரம் கைநெருக்கும்படியாய், கருத்து அறிந்து நடப்பவனான பெரியதிருவடியைப் பண் செய்து ஏறப் பெறாதே வெறும்புறத்தே மேற்கொண்டு "பகவானுடைய விரைவுக்கு வணக்கம்" என்று அறிவுடையார் ஈடுபடும்படி வந்து தோற்றினாற்போலேயும்; [3] திரௌபதியைத் துச்சாதனன் நலிகிறபோது ரக்ஷகராகப் பிரசித்தரான கணவன்மார் ஐவர் இருக்க, "கோவிந்தா! என்று அழைத்தாள் என்பது யாது ஒன்று உண்டோ?" என்கிறபடியே, நம்மை ரக்ஷகராக நினைத்துக் கூப்பிட, "வெகு தூரத்தில் வசிக்கிற என்னை" என்கிறபடியே, 'நான் அண்மையில் இருப்பவனாய் உதவப் பெற்றிலேன் அவள் ஆபத்துக்கு' என்று நொந்து 'அவள் தனக்கு அடுக்கும்படி செய்தாள், நான் அவதரித்தே அவதாரப் பிரயோஜனம் ஒன்றும் பெற்றிலேன்' என்று இழவாளனாய், தர்மபுத்திரன் தலையிலே முடியையும் வைத்து

---

1. செவிப்பட்டால் மெள்ள வரலாகாதோ? என்ன, 'இவ்வளவில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. துயர ஒலி கேட்டு விரைந்து வந்ததற்கும், ஆறி இராமைக்கும் மூன்று திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'பெரிய ஆபத்தை' என்று தொடங்கி.

"பரமாபதம் ஆபந்நः மநஸா சிந்தயத்தரிம்
ஸது நாகவரः ஸ்ரீமான் நாராயண பராயணः"

என்பது, மஹாபாரதம்.

"அதந்த்ரித சமூபதி ப்ரஹித ஹஸ்தம் அஸ்வீக்ருத
ப்ரணீத மணிபாதுகம் கிமிதிச ஆகுலாந்தःபுரம்,
அவாஹந பரிஷ்க்ரியம் பதகராஜம் ஆரோஹதः
கரிப்ரவர ப்ரும்ஹிதே பகவதः த்வராயை நமः"

என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர சதகம், 57.

3. "கோவிந்தேதி யதா க்ரந்தத் க்ருஷ்ணாமாம் தூரவாஸிநம்
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந் ந அபஸர்பதி"

என்பது, பாரதம் உத். 58 : 22.

இவள் குழலையும் முடிப்பித்துப் பகைவர்கள் கூட்டத்தைக் கிழங்கு எடுத்துப் பொகட்டுத் தன்னுடைச்சோதி ஏற எழுந் தருளும்போதும் [1]"மிக்க வருத்தத்தை யடைந்த மனத்தின ஞய்" என்கிறபடியே, திருவுள்ளம் புண்பட்டாற் போலேயும்;

[2]" ஆடவர்களில் ஏறுபோன்றவரான வீடுமர் அம்புகளாகிய படுக்கையில் படுத்தவராய்க்கொண்டு அணையும் நெருப்புப் போன்றவராய் என்னைத் தியானித்தார், பின்னர் என் மனம் அவரிடம் சென்றது" என்கிறபடியே, அம்புப் படுக்கையில் படுத்திருப்பவரான ஸ்ரீவீடுமர்க்கு முற்பாடராய் உதவவேண்டியிருக்கப் பிற்பாடரானேம் என்று நோவுபட்டாற்போலேயும்; பிற்பாட்டுக்கு நோவுபடுமவன் அன்றே. [3]"[4]தர்ம ஸ்வரூபியான பெருமாள் எல்லா மக்களுக்கும் கருணையைச் செய்கிறார்; அதனால், அம்மக்கள் பெருமாளைப் பின் தொடர்ந்தார்கள்" என்று [5]என்முற்பாடு கண்டு பின்தொடர வேண்டியவர்கள் முற்பாடராம்படி நாம் பிற்படுவதே! என்று இருக்கும் அவன் அன்றே. [6]"நானே வந்து அடையத்தக்க இப்படிப்பட்ட பிராஹ்மணர்களாகிற உங்களால் கிட்டப்பெற்றேன், இது எனக்கு மிக்க நாணத்தைத் தருகின்றது, நீங்கள் என் குற்றத்தைப் பொறுக்கவேண்டும்" என்கிறபடியே, தண்ட காரண்யத்தில் வசிக்கின்ற இருடிகளுடைய துன்பத்திற்கு முற்பாடராய் உதவப் பெற்றிலோம் என்னும் இழவாலே நாணங்கொண்டு,

---

1. "நாதிஸ்வஸ்த மநா:"

2. "ஶரதல்பகதோ பீஷ்ம: ஶாம்யந் இவ ஹுதாஶந:
மாம் த்யாதி புருஷ வ்யாக்ர: தத: மே தத்கதம் மந:"

என்பது, பாரதம் சாந்திபர்.

3. பிற்பாட்டுக்கு நோவுபடுமவன் என்பதற்குப் பிரமாணங்கள் இரண்டு காட்டுகிறார் 'தர்மஸ்வரூபியான' என்று தொடங்கியும், 'நானே வந்து அடையத்தக்க' என்று தொடங்கியும்.

4. "ஸர்வேஷாம் ஹி ஸதர்மாத்மா வர்ணாநாம் குருதே தயாம்
சதுர்ணாம் ஸமயஸ்தாநாம் தேநதே தமநுவ்ரதா:"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 17 : 15.

5. திருவயோத்தியிலுள்ளவர்கட்கு முதலில் கிருபைசெய்த பின்பே யன்றே, அவர்கள் இவரிடத்திலே அன்பு செலுத்தியது; அதனை உட்கொண்டு, இவன் பிற்பாட்டுக்கு நோவுபடும் பிரகாரத்தை அருளிச்செய்கிறார் 'என் முற்பாடு' என்று தொடங்கி.

6. "ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா
யத் ஈத்ருஶை: அஹம் விப்ரை: உபஸ்தேயை: உபஸ்தித:"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 10 : 9.

[1]அவர்கள் கால்களைக் கட்டிப் பொறுப்பித்துக் கொள்ளுமவன் அலனே. இனி, [2]"மனிதர்களுக்குத் துக்கம் வருகின்ற காலத்தில் அவர்கள் துக்கத்தைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமான துக்கத்தைத் தான் அடைகின்றான்" என்று பொதுவிலே இருக்கும்படி கண்டால், காதலி ஒருதலையானால் சொல்லவேண்டா அன்றே.

[3]இப்படிகளாலே திருவுள்ளம் போர இரங்கி, [4]'நாம் கிட்டி நின்று கையைக் காலைப் பிடிக்க வேண்டும்படியான விஷயம் பறவைகளின் கால்களிலேவிழும்படி நாம் பிறப்புவதே! நமக்கு இனி ஒரு ஆண்தன்மையாவது என்? அங்கு நாம் இனிப் போய்ச் செய்வது என்? இங்கிருந்து செய்வது என்?' என்று கொண்டு தடுமாறி, இத் தலையோடே கலந்தல்லது தரிக்கமாட்டாதானாய், இவர்கள் இருந்த இடத்துக்கு அண்மையில் வந்து, பிரணயகோபத்தாலே அணுக ஒண்ணாதபடி இருக்கிற இருப்பைக் கண்டு, 'இத் தலையில் எண்ணத்தைக் குலைத்து நாம் கூடினோம் ஆம் படி என்?' என்று சிந்தித்தான்; சிந்தித்து 'அழகு கொண்டு வெல்வோம்' என்று பார்க்கில், அழகினைக் கொண்டு தண்ணீர் வார்ப்பார் இலர் இக் கோஷ்டியில்; [5]"கருமை நிறம் பொருந்திய கண்களையுடையவள்" என்கிற தன்னேற்றம் உண்டேயன்றே இத் தலைக்கு. இனி, 'மேன்மைகொண்டு வெல்வோம்' என்று பார்க்கில், அந்தப்புரத்தை [6]யானைக் கால்இட்டுத் துகைப்பித்து உண்ண ஒண்ணாதே. இனி, இவ்

---

1. மேலேகாட்டியுள்ள சுலோகத்தில் "பிரஸீதந்து" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவர்கள் கால்களை' என்று தொடங்கி.

2. இவள் துன்பம் கண்டு அவன் நோவுபடும் பிரகாரத்தை அருளிச்செய்கிறார் 'மனிதர்களுக்கு' என்று தொடங்கி.

"வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 2 : 40.

3. 'இப்படிகளாலே' என்றது, முன் கூறிய திருஷ்டாந்தங்களில் கூறிய படிகளாலே என்றபடி.

4. சர்வேசுவரன் செய்யும் பிரகாரங்களை விரிவாக அருளிச்செய்கிறார் 'நாம் கிட்டி நின்று' என்று தொடங்கி. வேண்டும்படியான விஷயம் - தலைவி.

5. "ராகவோர்ஹதி வைதேஹீம் தம் ச இயம் அஸிதேக்ஷணா" என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 5.

6. 'யானைக்காலிட்டுத் துகைப்பித்து உண்ண ஒண்ணாதே' என்றது, பலாத்காரம் பண்ணலாகாது என்றபடி. ரசிகத்வத்திற்குப் பங்கம் வரும் என்பது கருத்து.

விஷயத்தைப் பெறுகைக்குத் தாழ்ச்சியேயன்றோ பரிகரம்; [1] அது இத் தலையின் கடாக்ஷம் பெறுதிருக்கச் செய்வதற்குத் தொடங்கும்போது பயன் அற்றதாய் விடு மன்றோ. [2] இனி இத்தனையும் செய்தால், ஆசையற்றுப் போகைக்குத் திருவடிகள் பெயராவே. [3] இசைவின்றிக்கே இருக்க மேல் விழ மாட்டானே; இனி விழுக்காடு பாராதே மேல் விழுமன்று, மிருதுத் தன்மையளாகையாலே இழக்க வரிலும் வருமே. [4] இனி, சேர்ந்து குளிர்ந்த தண்ணீர் அண்மையிலிருக்க, பெருவிடாயனவன் அழிஞ்சுக்காடு ஏறப் போகமாட்டானே; என்றது, 'இவன் சிறிது தாழ்த்தான்' என்று வெறுத்து, 'புகுருவான் அல்லன் நம் கோஷ்டியில்' என்று இருக்கிற இவர்களைவிட்டு நாட்டாரோடு உறவு செய்யப் போவான் அல்லனே என்றபடி.

இனி, 'ஒருபடி பொருந்தினோமாம் விரகு என்?' என்று, கடல் கடந்த திருவடி பட்டன எல்லாம் பட்டு [5] "தசரதன் என்ற பெயரையுடைய சக்கரவர்த்தி" என்னும் அளவு

---

1. ஆயின், தாழ்ச்சி செய்து விடலாமே? எனின், 'அது இத்தலையின்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அது - தாழ்ச்சி.

2. ஆயின், சாதிக்க முடியாதது என்று நினைத்து நீங்கிச் செல்லலாமே? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனி இத்தனையும்' என்று தொடங்கி. 'இத்தனையும் செய்தால்' என்றது, இப்படியானால் என்றபடி.

3. பலாத்காரத்தாலே மேல் விழ ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இசைவின்றிக்கே' என்று தொடங்கி. 'மிருதுத் தன்மையள்' என்றது, மானமுடையவள் என்றபடி.

4. இவர்கள் இசையாவிட்டால் விருப்பத்திற்கிசைந்த வேறு பெண்கள் இலரோ? அங்கே போக ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனி, சேர்ந்து' என்று தொடங்கி. அழிஞ்சுக்காடு - பாலை நிலம்.

5. திருவடியைப்போலே திருநாம சங்கீர்த்தனம் செய்தாலோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தசரதன்' என்று தொடங்கி.

"ராஜா தசரதோ நாம ரத குஞ்சர வாஜிமாந்
புண்ய ஶீலோ மஹாகீர்த்தி: ருஜு: ஆஸீத் மஹாயஶா:"

என்பது, ஸ்ரீராமா. சுந். 31 : 2.

'"தசரதன் என்ற பெயரையுடைய சக்கரவர்த்தி" என்னுமளவன்றே' என்றது, பிராட்டியைப்போலே திருநாமம் கேட்டு மீளும் அளவு அன்று என்றபடி.

அன்றே. இனிச் செய்ய அடுப்பது என்? என்று, [1]"இப்படிப் பலவகையாக எண்ணி" என்கிறபடியே எண்ணி, 'நந் தலையும் அவள் காலும் கிடந்ததாகில் காலைக் கட்டிப் பொருத்திக் கொள்ளுகிறோம்' என்று அறுதியிட்டான். [2]தலையான உபாயம் இதனைக் காட்டிலும் இல்லையே. [3]இதுதான் அடியிலே கண்டது ஒன்றே யன்றோ.

ஆக, இப்படி அறுதி யிட்டு, தன்நிறத்தோடு ஒக்க விகல்பிக்கலாவது ஒரு சோலை உள்ளிட்டு அவளுக்கும் தோழிமார்க்கும் தெரியாதபடி கிட்டச் சென்று, அவர்களைக் காணப் பெறாதே விடாய்த்தவன் கண்கள் ஆரளவும் நின்று [4]'விளைநீர் அடைத்துக்கொண்டு கிருதார்த்தனாய் நின்றான். ஆலோகத்தின்பின் ஆலாபம் முதலியவைகளிலே சிரத்தை இருக்குமன்றோ, அதுவும் பெற்றிலன். அவ்வளவிலும் தன்னுடைய பிராணனுக்குத் தாரகமாக இருக்கின்ற இவர்களுடைய பூவை, கிளி தொடக்கமானவற்றினுடைய இனிய பேச்சுக்களைக் கேட்கப் பெறாமையாலும் மிகவும் தளர்ந்து, [5]'தானும் அவளுமாகச் சேர்ந்திருக்கும்போது அவளிடத்திற் காட்டிலும் தன் பக்கல் அன்பு இரட்டித்தன்றோ தோழிமார்களுக்கு இருப்பது. பிரிவிலும் அப்படியே' என்று இருந்தான். அவர்கள் [6]அங்ஙனம் அன்றிக்கே அவளைக் காட்டிலும் கோபம் மிக்கு இருந்

1. "ஏவம் பஹுவிதாம் சிந்தாம் சிந்தயித்வா மஹாகபி:
ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம் வைதேஹ்யா வ்யாஜஹார ஹ"

என்பது, ஸ்ரீராமா. சுந். 31 : 1.

2. இதனால் கோபம் தீருமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தலையான' என்று தொடங்கி. 'தலையான' என்றது, சிலேடை.

3. இதனை அறிந்தபடி எங்ஙனே? என்ன, 'இதுதான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "தமேவ சரணம் கத:" என்ற காகத்தைக் கிருபையாலே ரக்ஷிக்கையாலே அடியிலே கண்டது ஒன்று என்றபடி.

4. 'விளைநீர் அடைத்து' என்றது, வயல் விளையும் அளவுக்கு ஒரு காலே நீர்கட்டுதல். ஆலோகம் - பார்த்தல். ஆலாபம் - வார்த்தை பேசுதல்.

5. சமாதானம் செய்கைக்குத் தோழிமார் இலரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தானும் அவளுமாக' என்று தொடங்கி.

6. 'அங்ஙனம் அன்றிக்கே' என்றது, தான் நினைத்தபடி யன்றிக்கே என்றபடி.

தார்கள். [1] "இளையபெருமாள் தமையனுருடைய இரண்டு திருவடிகளையும் நெருங்கப் பிடித்து" என்று புருஷகாரம் முன்னுகத் தன்பக்கல் புகுந்தார்க்குத் தன் திருவுள்ளம் இரங்கும்படி தான் அறிவான் அன்றோ, இங்கு அப்படியே அவர்கள் புருஷகாரமாகவும் பெற்றது இல்லை ; [2] இனி, இத் தலையில் இசைவு உண்டானாலும் அவர்கள் இசையாத அன்று அழைக்கவும் போகாதே ; [3] "இவனுக்கு அபயம் கொடுக்கப்பட்டது" என்றாலும், "கொல்லத் தக்கவன்" என்றவர் தம்மையிட்டே "அழைத்துக் கொண்டு வா" என்ன வேண்டிற்று அன்றோ. [4] அவ் வழிகளாலும் ஒரு முகம் பெற்றிலன். [5] "கணநேரமும் உயிர்பிழைத்திருக்கக் கூடியவனல்லேன்" என்றும், "உனக்கும் கணநேரமும் பிரிவின் துன்பம் பொறுக்கமுடியாததாக

1. புருஷகாரம் முன்னுகப் பற்றினுல் காரியம் சித்தியாகும் என்பதனைத் தான் அறிந்தபடி யாங்ஙனம்? என்ன, 'இளையபெருமாள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிருர்.

"ஸப்ராதுஃ சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தநஃ
ஸீதாம் உவாச அதியஶாஃ ராகவஞ்ச மஹாவ்ரதம்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 31: 2. என்றது, இளையபெருமாள், தம்மைப் பின்செல்லுகைக்கு உறுப்பாகப் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட, தான் இரங்கி அவரை அழைத்துக்கொண்டு போனதை அறிந்திருக்குமவனுகையாலே என்றபடி.

2. காரணம் இல்லாமல் தலைவிக்கே இசைவு உண்டானுலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இனி, இத்தலையில்' என்று தொடங்கி. இத்தலை - தலைவி. அவர்கள் - தோழிமார்கள்.

3. தோழிமார்கள் இசையாத அன்று அழைக்கப் போகாதோ? என்ன அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவனுக்கு' என்று தொடங்கி.

"ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தம் அஸ்யாபயம் மயா
விபீஷ்ணோவா ஸுக்ரீவ யதிவா ராவணஃ ஸ்வயம்"

என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 34.

4. 'அவ்வழிகளாலும்' என்றது, பூவை கிளி தொடக்கமானவற்றினுடைய பேச்சு, தோழிமாருடைய புருஷகாரம், தலைவியினுடைய இசைவு ஆகிற வழிகளாலும் என்றபடி.

5. ஆயின், 'பின்பு பெறுகிறோம்' என்று ஆறி இருந்தாலோ? என்ன, 'கணநேரமும்' என்றும், 'உனக்கும்' என்றும் தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

"ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 66 : 10.

"க்ஷணேபி தே யத்விரஹஃ அதிதுஸ் ஸஹஃ"

என்பது, ஸ்தோத்திர ரத்நம். 56.

இருக்கிறதோ"என்றும் சொல்லுகிறபடியே ஒருகணமும் பிரிவினைப் பொறுக்கமாட்டாதவன், அவர்கள் அண்மையில் பெறாமலே நின்று முகம் பிழைக்கமாட்டானே.

[1]இனி, இவன் அங்கு வந்து சேர்ந்த காரணத்தாலே அவ்விடம் அடங்கலும் "தண்டகாரண்யமுழுதும் நீல நிறமாக ஆக்கிக்கொண்டு" என்கிறபடியே மயிற்கழுத்துச் சாயலாக, இவனுடைய நிரந்தரமான கடாக்ஷத்தாலே புளகாங்கிதம்கொண்ட சரீரத்தையுடையவர்களாக, இவனுடைய கடாக்ஷத்தாலுண்டான குளிர்ச்சி இவர்களுடைய பிரணயரோஷத்தால் வந்த கோபாக்நியும் விரஹாக்நியும் அன்றாகில் பொறுப்பதற்கும் அரிதாம்படியாய்க் [2]கோபந்தான் அவன் சந்நிதியில் மிகைத்து வாராநிற்க, இவ்வகைப்பட்ட தன்மைகளைக்கொண்டு இவன் வந்தமையை நிச்சயித்துத் தங்களிலே ஒருமித்து முகம் மாறியிருந்தார்கள். [3]இவனும் அந்த இருப்பைக் கண்டு எதிரிகள் இட்ட மதிள் ஆகிலன்றோ முறித்துப் புகலாவது. கிட்டப்பெறாமையாலும் அண்மையிலிருப்பதாலும் ஆற்றாமை கரைபுரண்டு கால் தரையில் பாவாத படியாய்க்கொண்டு தடுமாறி வருகிற சமயத்திலே, இவனுடைய ஜீவன அதிருஷ்டத்தாலே இவர்கள் மறந்து போன பந்தும் கழலும் இவன் காலிலே தாக்கின. தாக்கவே, இருட்டு அறைகளிலே தடவிக்கொண்டு வாராநின்

---

1. இவன் இப்படித் தடுமாறுகிற இடத்தில் அவர்கள் செய்தது என்? என்ன, 'இனி, அவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, இவன் வந்ததனை மூன்று வழிகளாலே அறிந்து உறுதியான எண்ணமுடையவர்களாய் முகம் மாறி இருந்தார்கள் என்றபடி.

"ஸோபயன் தண்டகாரண்யம் தீப்தேந ஸ்வேந தேஜஸா"
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 38 : 14.

2. அகன்று இருந்தால் அன்றோ கோபம் மிகுதல் வேண்டும்; அண்மையிலிருக்கும்போது கோபம் தணிய வேண்டியதுதானே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கோபந்தான்' என்று தொடங்கி.

'இவ்வகைப்பட்ட தன்மைகளைக்கொண்டு' என்றது, தாங்கள் இருந்த இடம் மயிற்கழுத்துச் சாயலாகையும், தாங்கள் புளகாங்கிதம்கொண்ட சரீரத்தையுடையவர்களாகையும், மிகைத்து வருகிற கோபத்தையுடையவர்களாகையுமான தன்மைகளைக் கொண்டு என்றபடி.

3. இவ்வளவில் அவன் செய்தது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவனும் அந்த இருப்பைக் கண்டு' என்று தொடங்கி. 'கிட்டப் பெறாமையாலும்' என்றது, கலக்கப் பெறாமையாலும் என்றபடி.

றால் உறியும் வெண்ணெயும் கையிலே தாக்கினால் உவகைய னுமாறுபோலே, பெரிய உவகையோடு விழுந்து அவற்றை எடுத்துக்கொண்டான். எடுத்துக்கொண்டு, அத்தலையில் செய்த வியாமோகம் அடங்கலும் அவற்றிலே தோற்றும்படி கண் களிலே ஒற்றிக்கொள்வது தலையிலே வைத்துக்கொள்வதாய், பிராட்டி திருவாழி மோதிரங் கண்டு பட்டனவெல்லாம் பட் டான்.

[1]"க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா - 'இராவணன் மாயை யாலே வந்ததோ' என்னும் பயத்தாலே முற்படக் கண்வைக்க மாட்டாதே இருந்தாள்; 'அத் தலையாலே வந்தது' என்று தெளிந்த பின்பு கண் மாற வைக்க அரிதாம்படி இருந்தாள். ஸா - ப்ரேக்ஷமாணா - [2]"பஶ்யதேவி - தேவியே! பார்க்க" என்றுகொண்டு முன்பு பார்வைக்குக் கிருஷி பண்ணவேண் டும்படி இருந்தவள் தானே, கண் மாற வைக்கைக்குக் கிருஷி பண்ணவேண்டும்படியாய் இருந்தாள். பர்த்து: கர விபூஷ ணம் - முதல் கைப்பிடிக்கிறபோது உறுத்தினபடியை நினைத் தாள். கரவிபூஷணம்-அணி மிகு தாமரைக்கை யன்றோ. ஆப ரணத்துக்கு ஆபரணங் காணும். பர்த்தாரம் இவ - [3] இவன் இத்தைத் திருக்கையில் கொடுத்தவாறே, இதனோடே சேர்ந்த விரலையும் தோளையும் நினைத்தாள்; அந் நினைவுதான், தான் இக்கரையில் ஆளாகவும் அவர் அக்கரையில் ஆளாகவும், கடல் இடையிலே கிடக்கிறதாகவும் அறிந்திலள்; ஒருபடுக்கையிலே

---

1. திருவாழி மோதிரத்தைக் கண்ட பிராட்டி பட்ட பாட்டினை அருளிச் செய்கிறார் 'க்ருஹீத்வா' என்று தொடங்கி.

"க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்துஃ கர விபூஷணம்
பர்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாபவத்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 4.

கம்பராமாயணம் சுந்தரகாண்டம் உருக்காட்டுப்படலம், 3-முதல் 70-முடிய வுள்ள செய்யுட்களை ஈண்டு நினைவுகூர்தல் தகும்.

2. "சுலோகத்திலேயுள்ள "ஸா" என்றதிலே நோக்காக, பாவம் அருளிச்செய்கிறார் 'பஶ்யதேவி' என்று தொடங்கி.

"வாநரோஹம் மஹாபாகே தூதோ ராமஸ்ய தீமதஃ
ராம நாமாங்கிதம் சேதம் பஶ்யதேவி அங்குளீயகம்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 2.

3 'இவன் இத்தைத் திருக்கையில்' என்று தொடங்கும் வாக்கியத் துக்குக் கருத்து, பாவனையின் மிகுதியாலே கணவனோடு கலந்ததாக நினைத் தாள் என்பது.

கூட இருந்ததாக நினைத்தாள்; ஒரு [1] சூது சதுரங்கங்களிலே தோற்றுத் தன்கையில் இருந்ததாக நினைத்தாள். [2]"இவ" என்கிறான் இருடி, [3] உலக மாதா என்ற கருத்தாலே. இவள் உணர்ந்தால் என்படக் கடவள் என்று. ஜாநகீ-இன்ப துன்பங்களுக்கு இளையாத குடியிலே பிறந்தவள். முதிதாபவத்-உவகையளானாள். அப்படியேயாயிற்று இவனும் இவைபெற்ற பின்பு. [4]சம்சாரி முக்தனானால் அவனுடைய லீலோபகரணமும் போகோபகரணமும் சமமாகத் தோற்றக் கடவது. வேறு ஆகாரமான நினைவு இல்லையே. ததீயத்வ ஆகாரத்தாலே நித்தியவிபூதியோடு ஒக்கத் தோற்றுமித்தனை. அப்படியே இவளுடைய லீலோபகரணமும் போகோபகரணமுமாகத் தோற்றக் கடவது.

[5] அவற்றிலே அவன்செய்யும் வியாமோகத்தைக் கண்டார்கள். 'நம்மைப் பிரிந்த பின்பு சத்தையோடே குறியழியாதிருக்கக்கடவ இவன், இவையெல்லாம் நம்மை உத்தேசித்துச் செய்கிறானாகக் கூடாவாம்; இங்ஙனேயாகவேணும்: நம்மைப்

---

1. கூட இருந்ததாக நினைத்தால், அவன் திருக்கையில் மோதிரம் தன் கையில் வருவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சூது சதுரங்கம்' என்று தொடங்கி.

2. "பர்த்தாரமேவ ஸம்ப்ராப்தா" என்ன வேண்டியிருக்க, "இவ" என்று சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் '"இவ" என்கிறான்' என்று தொடங்கி.

3. "இவ" என்பதற்கு, இரண்டு கருத்து அருளிச்செய்கிறார் முதலது, தாயாருடைய கலவியின் வகையைச் சொல்ல ஒண்ணாமையாலே "இவ" என்கிறான் என்பது. இதனை அருளிச்செய்கிறார் 'உலகமாதா என்ற கருத்தாலே' என்று. இரண்டாவது, 'இவள் உணர்ந்தால்' என்று தொடங்கும் வாக்கியம். என்றது, இந்தப் பாவனை குலைந்தால், 'இவர்கள் அறியும்படி இருந்தேமோ?' என்று நாணங் கொண்டு நோவுபடப் புகுகிறாளோ என்கிறார் என்றபடி. 'இவள் உணர்ந்தால்' என்று தொடங்கும் வாக்கியம் வியாக்யாதாவின் ஈடுபாடு.

4. பிராட்டி, போகோபகரணமான திருவாழிமோதிரத்தை ஆதரித்தாள். இவன், லீலோபகரணங்களை போகோபகரணங்களாக ஆதரிக்கிறது என்? என்ன, 'இவளுடையது' என்கிற தன்மையாலே, போகோபகரணம் போன்று அவனுக்கு உத்தேசியமாயிருக்கும் என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் 'சம்சாரி' என்று தொடங்கி. 'வேறு ஆகாரம்' என்றது, கர்மங் காரணமாக வருகிற தன்மை என்றபடி.

5. தங்களுடைய பந்து முதலானவற்றிலே காதல் செலுத்துகிற இவனைக் கண்டு இவர்கள் செய்தது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவற்றிலே' என்று தொடங்கி.

பிரிந்த பின்பு சென்று சிலரோடே கலந்தான்; அவர்களையும் பிரிந்தான்; அவ் வாற்றாமையோடே இங்கு வந்தான்; இவற்றை அவர்களுடைய விளையாட்டுப் பொருள்களாக மயங்கினைத்தனை; இது நம்பக்கல் ஆசையுடையனய்ச் செய்கிருனல்லன்' என்று கொண்டு இவர்கள் இருக்க, அவனும் [1]தன்னழகாலும் குணங்களாலும் தன்செல்லாமையாலும் தாழ்ச்சிகளாலும் இத்தலையில் ஊடலைத் தீர்த்துக் கலந்தபடி சொல்லுகிறது இத்திருவாய்மொழி.

[2]இனி, இத்திருவாய்மொழி தன்னை, பூர்வாசாரியர்கள், 'பகவத்விஷயத்தில் பிரணயரோஷம் தோற்ற வார்த்தை சொல்லுகை சேஷத்வ லக்ஷணமன்று, "வளவேழ் உலகு" என்ற திருவாய்மொழியைப் போன்று தம் தாழ்ச்சியை அருளிச்செய்கிருர்' என்று நிர்வஹிப்பர்கள். இதனைப் பட்டர் கேட்டு 'என் சொன்னூரானூர்கள்! இவர்க்குப் பகவத்விஷ

---

1. இத் திருவாய்மொழியில் வருகின்ற "தாமரை புரை கண்ணிணை" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றித் 'தன்னழகாலும்' என்றும், "நம்பி" என்றதனைத் திருவுள்ளம்பற்றிக் 'குணங்களாலும்' என்றும், "எம் குழறு பூவையொடும்", "கையிற்பாவை பறிப்பது" என்பவைகளைத் திருவுள்ளம்பற்றித் 'தன் செல்லாமையாலும்' என்றும், "உணக்கி நீ வளைத்தால்" என்றதனைத் திருவுள்ளம்பற்றித் 'தாழ்ச்சிகளாலும்' என்றும் அருளிச்செய்கிருர்.

"புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு"

"ஊடற்கட் சென்றேன்மன் தோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு"

என்ற குறட்பாக்களும்,

"புலப்பேன்யான் என்பேன்மன் அந்நிலையே அவர்காணின்
கலப்பேன் என்னுமிக் கையறு நெஞ்சே"

"ஊடுவேன் என்பேன்மன் அந்நிலையே அவர்காணின்
கூடுவேன் என்னுமிக் கொள்கையில் நெஞ்சே!"

என்ற கலித்தொகைப் பகுதியும் இத்திருவாய்மொழியின் முன்னுரையின் கருத்தோடு ஒருபுடை ஒப்பு நோக்கத்தக்கன.

2. இத் திருவாய்மொழிக்கு, இரண்டு வகையாகச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிருர் 'இனி, இத்திருவாய்மொழி தன்னை' என்று தொடங்கி. 'சேஷத்வ லக்ஷணம் அன்று' என்றதற்குக் கருத்து, "உன்தன் திருவுள்ளம் இடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும்" என்று இருக்கிற இவர், ஸ்ரீ வைஷ்ணவர்களோடே கலத்தலைத் தமக்கு அஸஹ்யமாகச் சொல்லுதல் சேஷத்வத்திற்கு விரோதம் என்பது. 'இதுவே பொருளாயித்தனை' என்றது, இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற பிராவண்ய காரியமான பிரணயரோஷமே சுவாபதேசத்திலும் பொருளாம் என்றபடி.

யத்தில் உண்டான ருசிக்குப் பிரகாசம் இத்திருவாய்மொழியா யிருக்கும்; இதற்கு வேறே ஒருவழி இடுவதே! ஆனபின்பு இதுவே பொருளாமித்தனை' என்று அருளிச்செய்தார். [1]"சத்தியத்தினின்றும் பிறழ்ந்த உன்னையோ உறவினர்களுடன் கொன்றுவிடுவேன்" என்று மஹாராஜரோடே பெருமாளுக்குக் கிலாய்க்கைக்கும் உறவு உண்டாயிற்று அன்றோ.

---

## 564.

மின்னிடைமட வார்கள் நின்னருள் சூடு வார்முன்பு நான தஞ்சுவன்
**மன்னுடை இலங்கை அரண்காய்ந்த மாயவனே!**
உன்னுடைய சுண்டா யம்நா னறிவன் இனிய துகொண்டு செய்வதென்?
**என்னுடைய பந்தும்கழ லும்தந்து போகுநம்பி!**

**பொ - ரை:**—உன்னுடைய அருளைப் பெறுதற்குரியவர்களான மின்னல் போன்ற இடையையுடைய பெண்களுக்கு முன்னே நீ படுகின்ற துன்பத்திற்கு நான் அஞ்சுவேன்; இராவணனுடைய காவல் அமைந்த இலங்கையை நீறாகச் செய்த மாயவனே! உன்னுடைய சுண்டாயத்தை நான் அறிவேன்; இனி, அதனால் பெறக்கூடிய பயன் யாது? நம்பீ! என்னுடைய பந்தினையும் கழலையும் கொடுத்துவிட்டுச் செல்வாய் என்கிறாள்.

**வி - கு:**—அம்மானே! நம்பி! மடவார்கள் முன்பு நான் அது அஞ்சுவன், சுண்டாயம் நான் அறிவன், அதுகொண்டு செய்வது என்? என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு என்க. சுண்டாயம் - தன் காரியத்திலே நோக்குடைமை. விளையாட்டுமாம். கழல் - அம்மானை ஆடும் காய். போகு - போவாய்.

இத்திருவாய்மொழி, ஆசிரியத்துறை.

---

1. பிராவண்யத்தின் மிகுதியாலே பிரணயரோஷமாகச் சொன்ன இடம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சத்தியத்தினின்றும்' என்று தொடங்கி.

"ஏக ஏவ ரணே வாலீ ஶரேண நிஹதோ மயா
த்வாம் து ஸத்யாத் அதிக்ராந்தம் ஹநிஷ்யாமி ஸபாந்தவம்"

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 30. 82.

கிலாய்த்தல் - பிரணயரோஷத்தைச் செய்தல்.

ஈடு:—முதற்பாட்டு.[1] இப்படி வரவு தாழ்த்ததும் இத்தலையை ஒழியச் செல்லுவதாய்அன்று, ஈடுபாட்டினை விளைக்கைக்காக. அது விளைந்தவாறே, கடுக வந்து கொண்டு நின்றான். வந்து பந்தையும் கழலையும் எடுத்துக்கொண்டான். பெரும்பேறு என்று தோன்றும்படி நின்றான். இத்தலையில் செய்யக்கடவ காதல் அடங்கலும் இவற்றின்பக்கலிலே பண்ணினான். இவன் படுகிற அலமாப்பைக் கண்டு, 'இவையெல்லாம் நம்மைக் குறித்துச் செய்கிறான் அல்லன், தான் கலந்து பிரிந்தவர்களுடைய உபகரணங்களாகக் கொண்டு செய்கிறானித்தனை. இவனுடன் வார்த்தை சொல்லாதே இருக்கிறது என்?' என்று 'வாராய்! நீ நினைக்கின்றவர்களுடைய பொருள்கள் அல்லகாண் இவை; உனக்கு உபேக்ஷாவிஷயமான எங்களுடைய பொருள்கள் காண் இவை. இவற்றைத் தந்து அவர்கள்பக்கலில் ஏறப் போ" என்ன, [2]'ஓம், அது செய்கிறேன்; இங்ஙனே, காரைச் சுமந்தது ஒரு மின் நிற்கின்றதே!' என்ன, '**மின்னிடை மடவார்கள்**' என்கிறார்கள். [3]'அவர்கள்பாடு ஏறப்போகிறவன் இடையிலே இது ஒன்றைச் சொன்னான், அதுதான் நிலைநில்லாது' என்று பார்த்து 'வாராய்! நீ உபேக்ஷித்தவர்களிடத்திலே

---

1. இத்துணைக் காதல் செய்யுமவன் வாராதிருப்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி. 'இப்படி வரவு' என்றது முதல் 'காரைச் சுமந்தது ஒருமின் நிற்கின்றதே!' என்றது முடிய, பாசுரத்தின் கருத்தினையும், "மின்னிடைமடவார்" என்ற தொடர்மொழிக்கு அவதாரிகையையும் அருளிச்செய்தபடி.

2. 'ஓம்' என்றது, உடன்பாட்டினைக் காட்டும் ஓர் இடைச்சொல்.

> என்றென் றிறைஞ்சி இருதா மரைத்தாளில்
> ஒன்றும் கதிர்முடியாற்கு ஓம்என் றுரைத்தருளி
> இன்றிங் கிருவேமும் இப்போ துரைத்தமொழி
> ஒன்றும் பிறர்அறிய ஓதாது ஒழிகென்றான்.

என்பது, வில்லிபாரதம். கிருஷ்ணன் தூது. 40.

3. அவன் தங்களை வர்ணித்ததற்கு, இவர்கள் மறுமாற்றம் கூறுவாராக "மின்னிடை மடவார்" என்றார்கள். என்ற அதற்கு இரண்டு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார். அவற்றுள், முதலது, நீ கூறிய வார்த்தை நிலை நில்லாதது ஆகையாலே, உன்னுடைய மின்னிடை மடவார்கள் அல்லோம் நாங்கள் என்பது. அதனை அருளிச்செய்கிறார் 'அவர்கள்பாடு' என்று தொடங்கி. 'இடையிலே' என்பதற்கு, நடுவே என்றும், இடையிலே என்றும் இருபொருள். கால் தாழ்தல் - தாமதித்தல்.

இத்துணை கால்தாழ்ந்தால், உன்னை விரும்பியிருப்பார் பலராகையாலே போர நெருக்குண்புதி க்ண்டாய். [1]அவர்கள் தம்படி இருந்தபடி என் தான்? இது ஒரு தேஹகுணமும் ஆத்மகுணமும் இருக்கும்படியே! 'மின்னிடை,' என்றது, மற்றைய தேககுணங்கட்கும் உபலக்ஷணம். மடம் - என்றது, நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலான ஆத்துமகுணங்களுக்கும் உபலக்ஷணம். 'மடவார்' என்ற பன்மையாலே, ஒருவர்க்கும் உற்றுணயிராமை சொல்லுகிறது.

[2]நீ ஒன்றை ஒன்றாக நினைக்கும்படி பண்ணுவிப்பதே அவர்கள் சிலர்.[3]இவனுடைய அலமாப்பைக் கொண்டே அவர்களுடைய வைலக்ஷண்யத்தை அநுமிக்கிறார்கள் அன்றோ. [4]'பாவியேன், உன்னை இங்ஙனே இடையிலே பிச்சுஏறித் துடிக்கப்பண்ணினார் யாரோ?[5]'மின்னிடை மடவார்கள்' என்று இவனோடு சம்பந்தமுடையாருடைய தேக குணங்களையும் ஆத்மகுணங்களையும் சிறந்த பற்றுக்கோடாக நினைத்திருந்தபடி தோற்ற வார்த்தை சொன்னபடி என் தான்! [6]பிரணயரோஷம் புறவாயிலே செல்லாநிற்கச் செய்தேயும், அகவாயில்

1. "மின்னிடை மடவார்" என்று வர்ணித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவர்கள் தம்படி' என்று தொடங்கி. படி - வடிவு. அதனை விவரணம் செய்கிறார் 'இது ஒரு தேக குணமும்' என்று தொடங்கி.

2. "மின்னிடை மடவார்" என்றதற்கு, இவன் காதலித்தவர்களோடே கலந்து பிரிந்து வந்து தங்களைக் கண்டு அவர்களாக மயங்கிச் சொல்லுகிறான் என்பது இரண்டாவது கருத்து. அதனை அருளிச்செய்கிறார் 'நீ ஒன்றை' என்று தொடங்கி.

3. "மின்னிடை மடவார்" என்பதற்கு, அவர்களுடைய வைலக்ஷண்யத்தை இவர்கள் அறிந்தபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவனுடைய' என்று தொடங்கி.

4. 'ஒன்றை ஒன்றாக நினைக்கும்படி பண்ணுவிப்பதே!' என்று மேலே கூறிய வாக்கியத்தை ரசோக்தியாக விவரணம் செய்கிறார் 'பாவியேன்' என்று தொடங்கி. 'இடையிலே' என்பதற்கு, நடுவே என்றும், பெண்களின் இடையில் என்றும் இருபொருள்.

5. "மின்னிடை மடவார்" என்பதற்குச் சுவாபதேசம் அருளிச்செய்கிறார் 'மின்னிடை மடவார்கள்' என்று தொடங்கி. நினைத்திருந்தபடி - ஆழ்வார் நினைத்திருந்தமை என்றபடி.

6. பிரணயரோஷம் செல்லாநிற்க, பற்றுக்கோடாக நினைக்கக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரணயரோஷம் என்று தொடங்கி.

நினைவு இதுவன்றோ. [1] அகவாயிலும் துவேஷமேயானாலும் வஸ்து இருந்தபடி சொல்லவேணுமே. துவேஷத்தாலே சொல்லுமன்றும் "யௌவனப் பருவமுள்ளவர்கள், மிக்க வனப்புள்ளவர்கள், மிருதுத்தன்மை வாய்ந்தவர்கள், நல்ல பலமுள்ளவர்கள், தாமரைபோன்ற அகன்ற திருக்கண்களை யுடையவர்கள்" என்று அல்லது சொல்ல ஒண்ணாதே. மின்னிடை மடவார்கள் - [2] தங்கள்பாடு கிட்டினால், "இது ஓர் இடையே! இது ஒரு குணமே!" என்று அவன் ஆழங்கால் படும் துறை அறிவார்களே யன்றோ; "அப்படியே யன்றோ இவன் போன இடத்திலும்" என்று இருக்கிறார்கள். [3] இங்ஙன் அன்றாகில், எதிர்த்தலையைக் கண்டு சொல்லுகிறார்கள் அன்றே.

இப்படி இருப்பாரும் உண்டோ புறம்பே? என்ன, நின் அருள் சூடுவார் - உன்னுடைய திருவருளைப் பெறுதற்கு உரியவர்களாய் இருப்பவர்கள். இவ்வளவிலே '**உன்தலையிலே கால் வைக்கப் பிறந்தார்**' என்று சொல்ல அன்றோ அடுப்பது;

---

1. பட்டர் நிர்வாஹத்தைத் திருவுளத்தே கொண்டு, பிரணயரோஷம் அன்றோ, சிலாகிக்கலாமோ? என்னும் வினாவை எழுப்பிக்கொண்டு அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அகவாயிலும்' என்று தொடங்கி. அதனை, ஒத்த திருஷ்டாந்த மூலம் விவரணம் செய்கிறார் 'யௌவனப் பருவமுள்ளவர்கள்' என்று தொடங்கி.

"தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ
புண்டரீக விஶாலாக்ஷௌ சீர க்ருஷ்ணாஜிநாம்பரௌ"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 19 : 14. இது, கரனைப் பார்த்துச் சூர்ப்பணகை கூறியது.

இருவர் மானுடர் தாபதர் ஏந்திய
வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர்
தரும நீரர் தயரதன் காதலர்
செருவின் நேரு நிருதரைத் தேடுவார்.

என்பது, கம்பராமாயணம் கரன் வதைப்படலம், செய். 4.

2. அவர்கள் வைலக்ஷண்யத்தை இவர்கள் அறிந்தமை யாங்ஙனம்? என்ற வினாவிற்கு, வேறும் ஒரு வகையாக விடை அருளிச்செய்கிறார் 'தங்கள் பாடு' என்று தொடங்கி.

3. 'அநுமிக்கிறார்கள்' என்று கொள்ளாதுபோனால், வருகின்ற முரண்பாட்டினைக் காட்டுகிறார் 'இங்ஙன் அன்றாகில்' என்று தொடங்கி.

[1]உறவு தோற்றுமல் இருக்கிறவள் அங்ஙனம் சொல்லாளே அன்றே; அங்ஙன் சொல்லுமன்று, அது அவனுக்கு இடமாமே; அதாவது, இவள்காலைத் தன் தலையிலே எடுத்துவைத்துக்கொள்ளும் என்கை. பாவபந்தம் அடியாக வந்த கலவியாகையாலும், நினைவும் அத் தலையாலே வந்ததாகையாலும், அவன் வார்த்தையாக நடுவில் ஒன்று இல்லையேயாகிலும் இடையீடு பொறுக்கக் கடவது. ஆனல், என்? அவர்கள் இங்கு இல்லையே? என்றான். முன்பு - எங்களை அவர்களாக நினை. என்றது, [2] நாங்கள்காண் அவர்கள் என்கிறார்கள் என்றபடி. [3]'அவையெல்லாம் இங்கேயன்றே' என்னவேண்டி யிருக்க, தனக்கு வேறே சிலர் உளராகச் சொல்லுவான் என்? என்னில், [4]பல வார்த்தைகளைக் கேட்க நினைத்திருக்கிறவன் ஒரு வார்த்தையோடே தலைக்கட்டானே; இட்டீடு கொள்ளுகையன்றே இவன் தனக்குத் தாரகம். முன்பு - [5]நீ செய்யுமவையெல்லாம் மறைக்கப் போகாதுகாண். நீ அங்குச் செய்தவை

---

1. மறுமாற்றமாக அவன் வார்த்தை இல்லாமல் இருக்க, பரிஹரிக்கக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உறவு தோற்றுமல்' என்று தொடங்கி. என்றது, காதல் முன்னுகக் கலந்த கலவியாகையாலே, ஒரு கருத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கிற வார்த்தையாக இருக்கும் என்றபடி. 'நினைவும் அத்தலையாலே வந்ததாகையாலும்' என்றது, இவர்கள் சொல்லுகிற சொற்களும் அவன் வார்த்தைக்கு மறுமாற்றம் ஆகையாலும் என்றபடி. நினைவு - சொல். 'இடையீடு பொறுக்கக் கடவது' என்றது, நடுவில் அவன் வார்த்தையைக் கூட்டிக் கோடல் வேண்டும் என்றபடி.

2. 'நாங்கள்காண் அவர்கள்' என்றது, உன்னுடைய செயல்களையெல்லாம் நாங்கள் அறிந்தாற் போன்று, நீ இங்குச் செய்கின்றவற்றையும் அவர்கள் அறிவார்கள் என்றபடி.

3. 'அவையெல்லாம் இங்கேயன்றே' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து என்? என்னில், வேறே சிலர் உளராகச் சொல்லுதல் காதலுக்குச் சேராது என்பது.

4. ஆக, இது வார்த்தை இட்டு வார்த்தை கொள்ளுகைக்காகச் சொன்னதே ஒழிய, தனக்கு வேறே சிலர் உளர் என்று சொன்ன வார்த்தையன்று என்று பரிஹரிக்கிறார் 'பல வார்த்தைகளை' என்று தொடங்கி.

5. நான், அவர்கள் காணுமல் செய்கின்றவற்றை அவர்கள் அறிவார்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீ செய்யுமவையெல்லாம்' என்று தொடங்கி. 'எங்களை அவர்களாக நினை' என்று மேலே கூறிய வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'நீ அங்கு' என்று தொடங்கி.

யெல்லாம் கண்டாயே நாங்கள் அறிந்தபடி; இப்படியே, நீ இங்குச் செய்யுமவையெல்லாம் அவர்கள் அறிவர்கள்காண். [1]உன்னைப்போலே அவர்களுக்கு வேறு பொருள்களில் நோக்கு இல்லைகாண். உன்னைப்போலே நினையாதேகொள் அவர்களை. [2]உன்னைக் கலந்து பிரிந்தார் உன்னை அறிந்தபடியே இருப்பர் கள்காண்; "பிரிந்து ஒன்று நோக்காது தம்முடைய பின்னே திரிந்துழலும் சிந்தனையார்" என்றே யன்றோ இருப்பது. [3]அவர்களுக்கு வேறு விஷயம் இல்லாமையாலே எல்லாக் காலத்திலும் நினைவிற்கு விஷயம் நீயேகாண்.

[4] ஆனால், என்? உங்களுக்கு என்னோடு ஒருசம்பந்தம் இல்லை; ஆனபின்னர், அத்தால் வருவது ஒன்று இல்லையே? என் றான். நான் அது அஞ்சுவன் - நீ இங்கே சிறிதுபோழ்து கால் தாழ்த்துப் போனால், அவர்கள் உன்னை அரைக்கணம் முகம் மாறினால், நீ பொறுக்கமாட்டாமல் கிடந்து துடிக்கும் துடிப்பு நாங்கள் காணமாட்டோம்; உன்னைப்போல் அல்லோம் காண் நாங்கள். [5]கலந்து பிரியவல்லாயும் துடிப்பக் காணவல்லாயும்

---

1. அவர்களுக்கு வேறு நோக்கு இல்லையோ? என்ன, 'உன்னைப் போலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. வேறு ஒன்றிலே நோக்கு இல்லாமைக்குக் காரணம் உன் வைலக்ஷண்யம் என்கிறார்கள் 'உன்னைக் கலந்து' என்று தொடங்கி.

பிரிந்தொன்று நோக்காது தம்முடைய பின்னே
திரிந்துழலும் சிந்தனையார் தம்மை—புரிந்தொருகால்
ஆ ஆ! என இரங்கார் அந்தோ! வலிதே கொல்?
மாவாய் பிளந்தார் மனம்.

என்பது, பெரிய திருவந். 50.

3. நம்மைக் கலந்து பிரிந்தார் நம்மையே நோக்கிக் கொண்டிருப்ப தற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவர் களுக்கு' என்று தொடங்கி.

4. மேலே போந்த பதங்களையும் கடாக்ஷித்து "நான் அது அஞ்சுவன்" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஆனால், என்?' என்று தொடங்கி. ஆனால் - அவர்கள் அறிந்ததனால். 'அத்தால் வருவது ஒன்று இல்லையே' என்றது, அவர்கள் முகம் பாராமையால் வரும் வியசனம் உங்க ளுக்கு இல்லையே என்றபடி.

5. 'உன்னைப் போல் அல்லோம்காண் நாங்கள்' என்று மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'கலந்து பிரியவல்லாயும்' என்று தொடங்கி. 'கலந்து பிரிய' என்று தொடங்கும் வாக்கியத்தால் "நான் அது அஞ்சு வன்" என்றதற்கு, எதிர்மறை முகத்தால் கருத்து அருளிச் செய்தபடி. பாசு ரத்திலே "அது" என்றதனை நோக்கித் 'துடிப்பு' என்கிறார்.

நீயேகாண்; பிறர் துன்பம் கண்டால் பொறுக்கமாட்டோம் நாங்கள். [1] உன்னோடு உறவு இல்லையேயாகிலும் நீ படும் அலமாப்புக் கண்டால் பொறுக்கமாட்டோம்; [2] சிலர் கிணற்றில் விழுந்தால் ஒருகுரல் கூப்பிடும்போது உறவுவேணுமோ? அவர்கள் பக்கல் முகம்பெறாதே நிற்கும் தடுமாற்றத்தை 'ஆற்றோம்' என்கிறார்கள்.

[3]அரைக்கணம் இத் தலையை ஒழிய ஜீவிக்கமாட்டாதே செல்லாமையையுடைய என்னைப் பொய்யனாக்கிப் புறம்பாக்கி வார்த்தை சொல்லுவதே! என்றான். மன்னுடை இலங்கை அரண் காய்ந்த மாயவனே - 'என்தான்? நீ பொய்யன் அல்லையோ?' என்றார்கள். 'நான் என்னோடு கலந்துபழகினவர்களில் இதற்கு முன்பு யார்க்குப் பொய்செய்தேன்?' என்றான். 'நீ யார்க்குத்தான் மெய்செய்தாய்' என்றார்கள். [4] 'என்தான்? "உண்ணாது உறங்காது ஒலிகடலையூடு அறுத்து" என்று ஏக தாரவிரதனாய்க்கொண்டு நான் பட்டனஎல்லாம் பொய்யோ?' என்றான். 'அதுதான் நீ வேண்டிச் செய்தாயோ? ஒருதுறையிலே ஒருமெய் பரிமாறாவிடில் மேல் உள்ளன எல்லாம் நமக்கு ஒரு தொகையில் அகப்படா என்று செய்தாய் அத்தனையன்றோ? அபலைகளை அகப்படுத்திக் கொள்ளுகைக்கு இட்ட

---

1. 'ஆனால், என்? உன்னோடு எங்களுக்கு ஒரு சம்பந்தம் இல்லையான பின்பு' என்று மேலே கூறிய சங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார் 'உன்னோடு உறவு' என்று தொடங்கி. இந்த வாக்கியம், 'நீ இங்கே சிறிது போழ்து' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்திற்கு விவரணமாக இருக்கிறது.

2. நன்று; உறவு இல்லாத இடத்தில் அருள் சுரக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சிலர் கிணற்றிலே' என்று தொடங்கி. ஆக, முதல் அடிக்கு நேர் பொருள் வருமாறு: மின்போலே நுடங்கும் இடையையும் ஆத்ம குணங்களையுமுடையவராய், உன்னருளைத் தலைமேல் தாங்கும் அவர்கள் சந்நிதியில் நீ செய்த செயல்களை அறிந்திருக்கிற நான், நீ இங்குச் செய்யும் செயல்களை அவர்கள் அறிந்து, நீ நிலைகுலையும்படி உனக்கு முகங்கொடாதே வெறுப்பர் என்னுமதனை நினைத்து அஞ்சாநின்றேன் என்பது.

3. இரண்டாமடிக்கு, அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அரைக்கணம்' என்று தொடங்கி. 'என்னைப் பொய்யனாக்கி' என்றது, "மின்னிடை மடவார்" என்று எங்களை அவர்களாக மயங்கினாய் என்றதனை நோக்கி. 'புறம்பாக்கி' என்றது, "நின்னருள் சூடுவார்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

4. "மாயவனே" என்ற சொல்லைத் திருவுள்ளம்பற்றி அதற்குத் தக அருளிச்செய்கிறார் 'என்தான்?' என்று தொடங்கி. அபலைகள் - பலம் இல்லாத பெண்கள்.

வழியன்றோ?' மன்னுடை இலங்கை அரண் காய்ந்த - [1]நில மிதிதான் எதிரிகள் மண்ணுண்ணும்படியாய், அதற்குமேலே "இராவணனாலே காப்பற்றப்படுகின்ற இலங்கை" என்று கொண்டு, சிங்கம் கிடந்த முழஞ்சுபோலே பையல் உணர்ந்து நோக்குகிற ஊரை அழியச்செய்த. மாயவன்-வஞ்சனைபொருந்திய செயல்களையுடையவன். 'மன்னுடை' என்றது, மன்னனையுடைய என்றபடி. [2]'அழகிது; ஒருமெய்யும் உண்டாகச் சொன்னீர்களே; அதனை இங்கே செய்தேனாலோ? மேலுள்ளன வெல்லாம் ஆகைக்காக' என்றான்.

உன்னுடைய சுண்டாயம் நான்அறிவன்-அது உனக்குச் செய்யலாவது செவ்வே பரிமாறும் அவர்களோடு காண்; நீ செய்கிறவையெல்லாம் பண்டே எங்களால் அறியப்பட்டவை காண்; நீ செய்கிறவையெல்லாம் '**மெய்**'என்று இருப்பாள் ஸ்ரீஜனகராஜன் திருமகள்காண்; [3]உன்னுடைய கிரித்ரிம விளையாட்டுக்களெல்லாம் நாங்கள் அறிவோம். சுண்டாயம் - தன் காரியத்தில் நோக்குடைமை. 'அறிந்து என்? அறியாவிடில் என்? [4]பிரவிருத்தமாயிற்றே' என்றான். என்றது, 'சாத்தியமாயிற்று அதுவன்றோ' என்றான் என்றபடி. இனி அது கொண்டு செய்வது என் - 'சாத்தியாம்சத்துக்கு [5]ஒரு பிரயோஜனம் கண்டிலோமே' என்றார்கள். அவனும் ஒன்றை நினைத்து, 'ஆகில் எனக்குச் சாத்தியாம்சம்தான் இல்லையோ?'

---

1. நிலமிதி - நிலத்தின் தன்மை. மண்ணுண்ணல் - தோற்றுப் போதல்.
"லங்காம் ராவண பாலிதாம்"
என்பது, ஸ்ரீராமா. சுந். 1: 39.

2. "உன்னுடைய சுண்டாயம்" என்றதற்கு, அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அழகிது' என்று தொடங்கி.

3. "சுண்டாயம் நான் அறிவன்" என்பதற்கு, பொருள் அருளிச்செய்கிறார் 'உன்னுடைய' என்று தொடங்கி.

4. 'பிரவிருத்தமாயிற்றே' என்றது, பார்த்தலும் பார்த்துப்பேசுதலும் முதலானவைகள் என்னைத் தொடர்ந்தனவே என்றபடி.

5. 'ஒரு பிரயோஜனம் கண்டிலோமே' என்றது, சம்பாஷணைகளால் பெற்ற பிரயோஜனம் ஒன்றும் கண்டிலோமே என்றபடி. அதாவது, புணர்ச்சி நடவாது என்றபடி. 'ஒன்றை நினைத்து' என்றது, கையில் அகப்பட்ட பந்தையும் கழலையும் நினைத்து என்றபடி.

என்று கைப்பட்ட பந்தையும் கழலையும் போர விரும்பப் புக்கான். என்னுடைய பந்தும் கழலும் - 'பாவியேன், நீ எங்கே செய்யவேண்டியனவற்றை எங்கே செய்கிறாய்? அவை நீ நினைக்கின்றவர்களுடைய பொருள்கள் அல்லகாண்; அவை எங்களுடைமைகாண்' என்றார்கள். 'அதுதான் [1] மெய்யே' என்றான். இவன் விருப்பத்துக்கு அதுதானேயன்றோ வேண்டுவது; [2] 'அரசனே! மனைவி வேலைக்காரன் மகன் ஆகிய இவர்கள் ஒருவனுக்கு அடிமைப்பட்டவர்களே; இவர்கள் எவருக்கு அடிமைப் பட்டவர்களோ அவருக்கு இவர்களுடைய பொருள்களும் அடிமைப்பட்டனவாம்" என்கிறபடியே, மற்றையது உடனே வரும் அன்றோ.

இனி, இத் திருவாய்மொழியினுடைய முன்னுரையிலே, '**முடியப்பார்க்கிறாள்**' என்று சொல்லிற்று ஒன்று உண்டு: அது, [3] இப் பதத்திலே தோற்றுகிறது. அவன் சந்நிதியிலே '**என்னது**' என்று சொல்லுகைக்கு மேற்பட்டது ஒரு முடிவு இல்லை அன்றோ. [4] "மம என்ற இரண்டு எழுத்துக்கள் நாசத்

---

1. 'மெய்யே' என்றது, மெய்யோ என்றபடி. மெய்யானால் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவன் விருப்பத்துக்கு' என்று தொடங்கி.

2. அது எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அரசனே!' என்று தொடங்கி.

"த்ரய ஏவாதநா ராஜந் பார்யா தாஸஃததா ஸுதஃ
யத்தே ஸமதிகச்சந்தி யஸ்யை தே தஸ்ய தத்தநம்"

என்பது, பாரதம் உத்யோகபர். திருதராட்டிரனைப் பார்த்து விதுரன் கூறியது. என்றது, இவர்கள், அவன் உடையவர்கள்; இவர்களுடைய செல்வமும் அவனுடைமை என்றபடி. 'மற்றையது' என்றது, அடியவனுடைய செல்வம் ஆண்டான் உடைமையாகையைக் குறித்தபடி.

'அதுதான் மெய்யே' என்று தொடங்கி அருளிச்செய்த வாக்கியங்கள், "தந்துபோகு" என்றதற்கு அவதாரிகை.

3. 'இப்பதத்திலே' என்றது, "என்னுடைய" என்ற பதத்திலே என்றபடி. அது எப்படி? என்ன, 'அவன் சந்நிதியிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. 'என்னது' என்றால், முடிவு ஆம்படி எங்ஙனே? என்ன, அகங்கார மமகாரங்கள் அழிவிற்குக் காரணங்கள் என்று சாஸ்திரம் சொல்லுகையாலே என்று அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மம என்ற இரண்டு' என்று தொடங்கி.

"த்வ்யக்ஷரஸ்து பவேத் ம்ருத்யுஃ த்ர்யக்ஷரம் ப்ரஹ்மணஃ பதம்
மமேதி த்வ்யக்ஷரஃ ம்ருத்யுஃ நமமேதி ச சாஶ்வதம்"

என்பது, பாஞ்சராத்திரம்.

துக்குக் காரணமாகின்றன" என்பது அன்றே சாஸ்திரம். [1]"என்னுடைய புத்திரர்களான துரியோதனன் முதலியோர் களும், பாண்டவர்களும்" என்கிறவிடத்துச் **சிறியாத்தான்** சொல்லும்படி: "என்னுடையவர்கள் என்றும், பாண்டவர்கள் என்றும் பிரித்தான், அதுவன்றே விநாசபர்யந்தம் ஆகி விட்டது" என்று. [2]இதுதான் உண்மை நிலையை மாத்திரம் பற்றிய வார்த்தை அன்று, பிரணய கோஷ்டியிலும் கலவியிலே வந்தால் '**உன்னது, என்னது**' என்கையன்றே? உறவு அறுகையாவது. என்னுடைய பந்தும் கழலும் - [3]"தான் என்றே பரமாத்வாவை தியாநிக்கக் கடவன்" என்கிறபடியே, ஒன்றை ஒன்று உபாசியாநிற்கச்செய்தே, தன்னை உபாசித்தது என்று சொல்லலாம்படி அன்றே இரண்டு வஸ்துக்களுக்கும் தொடர்பு இருக்கிறபடி. [4]சொரூபம் தெளிவானால் '**நான்**' என்னவுமாய், **அடியேன்**' என்னவுமாய்க் காணும் இருப்பது.

---

யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

என்பது, திருக்குறள்.

1. அகங்கார மமகாரங்கள் அழிவிற்குக் காரணமாம் என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'என்னுடைய' என்று தொடங்கி.

"தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவஃ
மாமகாஃ பாண்டவாஶ்சைவ கிம் அகுர்வத ஸஞ்ஜய"

என்பது, ஸ்ரீ கீதை. 1 : 1.

2. இது தான், சுவாபதேசத்தில் அன்றிக்கே, அந்யாபதேசத்திலும் அழிவிற்குக் காரணம் என்கிறார் 'இதுதான்' என்று தொடங்கி.

3. உண்மை நிலையில் 'என்னது' என்கை உறவு அறுகையானால், உறவு அறுத பிரகாரம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தான் என்றே' என்று தொடங்கி.

"ஆத்மேத்யேவது க்ருஹ்ணீயாத் ஸர்வஸ்ய தந் நிஷ்பத்தேஃ"

என்பது, வாக்யகாரர் வசனம். என்றது, இவ்வுயிரானது சர்வேசுவரனை வழிபடாநிற்கச்செய்தே தன்னையே வழிபட்டது என்னலாம்படியன்றே சரீர சரீரி பாவத்தால் வந்த சம்பந்தம் இருக்கிறபடி. இப்படிச் சரீர பூதனாய் அவனுடைய அபிமானத்திலே அடங்கியவனாயிருக்கை உறவு அறுமையாம் என்றபடி.

4. ஆயினும், அவனுடைய அபிமானத்திலே அந்தர்ப்பூதனாயிருக்கும் ஆகாரம் தோற்றுவது, 'அடியேன்' என்றால் அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சொரூபம்' என்று தொடங்கி.

தந்துபோகு நம்பி-[1]நீ இங்கே கால்தாழாநின்றாய்; இதற்கு ஒரு கருத்து அறியாதே உன்னை உபேக்ஷிக்கத் தொடங்குவர்கள்; அதற்கு முன்னே போ. முகப்பழக்கமும் இன்றிக்கே இருந்தது; முதலியாருமாய் இராநின்றீர்; கடுகப் போகப் பாரும் என்பாள் '**நம்பி**' என்கிறாள். [2] "கண்ட காட்சி புல்லெழுந்து போனபடியன்றோ இவள் இங்ஙன் சொல்லுகிறது" என்று **பெரியமுதலியார்** பணிப்பர். [3] '**என்னுடைய பந்தும் கழலும்**' என்ற இடம், அவன் பொகடுகைக்குச் சொன்ன வார்த்தை. '**தந்துபோகு**' என்றதனால், அவன் விரும்பினவை ஒழியத் தனக்குச் செல்லாது என்னுமிடம் தோற்றுகிறது. நம்பி - [4] "பதினாறாயிரம் பெண்களையும் அதற்குமேலே ஒரு நூறு பெண்களையும் ஸ்ரீகிருஷ்ணபகவான் விவாகம்செய்து கொண்டார்" என்கிறபடியே, உமக்குப் போனவிடம் எங்கும் கொண்டாட்டத்தால் குறை இல்லை; எங்களுக்கு உம்மை ஒழிய வேறு கதி இல்லை; இனி, உம்முடைய திருக்கரங்களின் சம்பந்தமுண்டாய்ப் பொகட்டவை கொண்டாகிலும் எங்களுக்கு ஜீவித்துக் கிடக்கவேணும்; ஆனபின்னர், அவற்றை எங்களுக்குத் தந்து போம். அன்றிக்கே, [5]'**உயிரை வைத்துப் போம்**' என்பாரைப்போலே '**தந்துபோகு**' என்கிறாள் என்னுதல். என்றது, இவன் இவற்றைக் கைவிட்டுப் போகமாட்

---

1. "போகு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நீ இங்கே' என்று தொடங்கி.

2. முன்பு முகப் பழக்கம் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்டகாட்சி' என்று தொடங்கி. 'பெரிய முதலியார்' என்றது, ஸ்ரீமந் நாதமுனிகளை.

3. "என்னுடைய பந்தும் கழலும் தந்துபோகு" என்கிறவர்களுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'என்னுடைய பந்தும்' என்று தொடங்கி.

4. மேலே கூறிய பொருளை விவரணம் செய்கிறார் 'பதினாறாயிரம்' என்று தொடங்கி.

"ஷோடசஸ்திரீ ஸஹஸ்ராணி சதமேகம் ததோதிகம்
தாவந்தி சக்ரே ரூபாணி பகவாந் தேவகீஸுதஃ"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 31: 17.

5. "தந்துபோகு" என்றதற்கு, தன்னுடைய சத்தை தரிக்கைக்காகத் தந்துபோ என்கிறாள் என்று மேலே அருளிச்செய்து, அவன்போகாமைக்காகத் "தந்துபோகு" என்கிறாள் என்று வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'உயிரை வைத்து' என்று தொடங்கி.

டான் என்று அறிந்து அவன் மனக்கருத்தை அறிந்தவர்கள் ஆகையாலே 'தந்துபோகு' என்கிறார்கள் என்றபடி. (1)

565.

போகு நம்பி! உன் தாம ரைபுரை கண்ணி ணையும் செவ் வாய் மு றுவலும்
ஆகுலங்கள் செய்ய அழி தற்கேநோற் றோமேயாம்?
தோகை மாமயி லார்கள் நின்னருள் சூடு வார்செவி ஓசை வைத்தெழ
ஆகள் போகவிட்டுக் குழலூது போயிருந்தே.

பொ - ரை :—நம்பி! போ; தாமரையை ஒத்த உன்னுடைய இரண்டு கண்களும் சிவந்த திருவாயிலே தோன்றுகின்ற புன்முறுவலும் துயரத்தைச் செய்ய, அதனால் அழிவதற்கே யாம் தவம் செய்துள்ளோம்; தோகையையுடைய சிறந்த மயில்போன்ற பெண்கள் நினது திருவருளைப் பெறுதற்குரியவர்கள் ஒலியைக் காதுகளால் கேட்டு அங்கிருந்து எழுந்து வரும்படியாக, பசுக்களைத் தூரத்தே போகவிட்டு, அவற்றை அழைப்பதைப் போன்று, அங்கே சென்று இருந்து உனது வேய்ங்குழலை ஊதுவாய்.

வி - கு :—நம்பி! போகு, கண்ணிணையும் முறுவலும் ஆகுலங்கள் செய்ய யாம் அழிவதற்கே நோற்றோம்; நின்னருள் சூடுவாராகிய தோகை மாமயிலார்கள் ஓசை செவி வைத்து எழ ஆக்களைப் போகவிட்டுப் போய் இருந்து குழல் ஊது என்க. ஆகுலம் - துன்பம். எழ ஊது என்க.

ஈடு :—இரண்டாம்பாட்டு. [1] நோக்குப் பெறாதவன் முகம் பார்க்கப் பெற்றான்; வார்த்தை கேட்கப் பெறாதவன் 'போ' என்னவும் பெற்றான்; இனி, இதற்கு மேற்படக் கிருதார்த்தனைகை இல்லையன்றே. [2] 'போ' என்றால், அந்த வார்த்தையையே அன்று இவன் புத்திபண்ணுவது; அதில் அகவாயில்

---

1. "போகு நம்பி" என்று இவர்களாலே தள்ளப்பட்டவனாக இருக்க, "தாமரைபுரை கண்ணிணையும் செவ்வாய் முறுவலும்" அவனுக்கு உண்டாகக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நோக்குப் பெறாதவன்' என்று தொடங்கி. கிருதார்த்தனாதல் - பேறு பெற்றவனாதல்.

2. ஆயினும், "போகு" என்று தள்ளாநிற்க, கிருதார்த்தனாதல் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'போ என்றால்' என்று தொடங்கி.

ஒடுகிறதும் அறியும் அவன் அலனே'. [1]"இன்னம் என் கையகத்து ஈங்கு ஒருநாள் வருதியேல் என் சினம் தீர்வன் நானே" என்று இதனை **உய்ந்தபிள்ளை** பாடாநிற்கச் செய்தே, காலாலே உதைப்பது கையாலே தள்ளுவதாய் அபிநயித்துக் காட்டினர். இதனை **எம்பார்** கேட்டருளி, 'அங்ஙன் அன்று, அது பின்னைப் பெற்றானாகில் அவன் நெடுநாள் பிரார்த்தித்துக் கிடந்தது அன்றோ; ஆனபின்னர் அதுவன்றுபொருள்' என்று முகத்தைத் திரிய வைத்துக் காட்டினர். [2]'நீ அகல நின்று செய்தவை எல்லாம் உன் சந்நிதியிலே உன்னைச் செய்வேன் என்கிறாள்' என்று அருளிச்செய்தார். [3]**எம்பார்,** புறம்பான விஷயங்களிலே ருசி இல்லாமையாலே பதார்த்த ஞானம் இன்றிக்கே இருப்பர். இப்படி இருக்கையாலே "'பெண்களுக்கு அசாதாரணமான சிந்நங்கள் எங்ஙனே இருக்கும்படி?' என்று **சிங்கப்பிரானைக்** கேட்டருளினர்" என்பது பிரசித்தம். [4]இப்படி இருக்கிறவர் தாம் "**மின்னிடை மடவார்**" என்ற இத்திருவாய்மொழி அருளிச்செய்யப் புக்கால், 'இந்தச் **சந்நியாசி** பிரட்டுப் பாடத் தொடங்கினர்' என்பராம் **பிள்ளையுறங்காவில்லிதாசர்.** [5]பகவத்விஷயத்தில் இவருடைய உட்புகுவு இருக்கும்படி! ஒரு க்ஷுத்ரவிஷயத்திலே நான்கு நாட்கள் வாசனை பண்ணினவர்கள் போர விதக்தராய் இராநின்றார்கள், அவ்வளவு அல்ல அன்றோ சமஸ்த கல்யாணகுணாத்மகனோடே நெடு

---

1. அவர்களால் தள்ளப்படுதலே, கிருதார்த்தனாதற்குக் காரணம் என்று அதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'இன்னம் என்' என்று தொடங்கி. இப்பாசுரம், பெருமாள் திருமொழி. 6 : 8.

2. மேல் வாக்கியத்திற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நீ அகல நின்று' என்று தொடங்கி.

3. எம்பார்க்கு இப்பொருள் அறிதற்கு விரகு இல்லை என்கைக்காக, அவருடைய இதர விஷய வைராக்கியத்தை அருளிச்செய்கிறார் 'எம்பார்' என்று தொடங்கி.

4. இப்படி விரக்தராயிருக்கிறவர், சிருங்காரத்தில் தேர்ச்சியுடையாரைக் காட்டிலும், இத் திருவாய்மொழியில் அதிகத்தேர்ச்சியுள்ளவராய் அருளிச்செய்யும் வார்த்தைகளுக்குக் காரணத்தை அருளிச்செய்யத் தொடங்குகிறார் 'இப்படி இருக்கிறவர்தாம்' என்று தொடங்கி.

5. காரணத்தை அருளிச்செய்கிறார் 'பகவத் விஷயத்தில்' என்று தொடங்கி. உட்புகுந்தால் தெரியுமோ? என்ன, 'ஒரு க்ஷுத்ர விஷயத்தில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். விதக்கர் - தேர்ச்சியுள்ளவர்.

நாள் வாசனை பண்ணினர்க்கு இருக்கும்படி. [1]எம்பார் 'ஈசு வரன் முன்னே வந்து நின்றாலும் 'வா' என்பாரையும் கிடையாத சம்சாரத்திலே, அவன் சிறிது தாழ்த்தான் என்று 'போ' என்பாரைப் பெறுவதே!' என்பர்.

போகு நம்பி - "போகு நம்பி" என்று முன்பு சொல்லச் செய்தே, மீண்டும் சொல்லும்போது ஒன்று இரண்டு அடிகள் வரவிட்டுக்கிட்ட நின்றுகை வேணுமன்றே. [2]வாரீர்! எத்தனை பேரைத் தீண்டி வந்தீர் என்று தெரியாது; புடைவை படாமே கடக்க நில்லும் என்றார்கள். 'போ' என்ன, அருகில் வந்து நிற்கிறவன், 'தீண்டாதே கொள்ளும்' என்றால், என்படுமோ? நம்பி - [3]எளியார் செய்வதனை நீர் செய்யக்கடவீரோ? நீர் குறைவற்றவர் அல்லீரோ? நம்பி - [4]எங்கள்பக்கலிலே இப்படிக் கால் தாழ்க்க நீர் ஏதேனும் குறைவாளரோ? நாங்கள் வேண்டியிருந்ததோ உமக்கு? [5]"உயிரினுற் குறையிலம்" என்று "ஏரு ளும் இறையோனும்" என்ற திருவாய்மொழியில், தம்மை அழிக்கப் பார்த்தார்; அது அவன் உளனுகையாலே அழிந்தது இல்லை. "மாசறு சோதி" என்ற திருவாய்மொழியில், அதற்கு அடியான அவனையே அழிக்கப் பார்த்தார். இங்கு, அவன் வரக்கொள்ள, 'போ' என்னுநின்றார். இதற்குக் காரணம் என் என்று அறிகிலோம். [6]இவர்கள் இப்படி 'நம்பி'

---

1. ஆழ்வார் பிரணயரோஷத்தாலே ஊடி "போகு" என்கிற இதனை அநுசந்தித்த எம்பாருடைய ஈடுபாட்டினை அருளிச்செய்கிறார் 'எம்பார்' என்று தொடங்கி.

2. முதலில் "போகுநம்பி" என்றவாறே, வந்தான்; வந்தவனை மீளவும் "போகுநம்பி" என்று சொல்லுகைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வாரீர்' என்று தொடங்கி. 'என்படுமோ' என்றது, தீண்டிவிடுவான் என்பது குறித்து நின்றது.

3. "நம்பி" என்றதற்கு, பூர்ணர் என்று பொருள் அருளிச்செய்கிறார் 'எளியார்' என்று தொடங்கி.

4. "நம்பி" என்பதற்கு, மின்னிடை மடவாரால் நிறைவுற்றவர் என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'எங்கள் பக்கலிலே' என்று தொடங்கி.

5. இவருடைய ஈடுபாட்டின் மிகுதியை என் என்று கூறுவது என்று வியாக்யாதா ஈடுபடுகிறார் 'உயிரினுல்' என்று தொடங்கி. 'என் என்று அறிகிலோம்' என்றது, பலநாளாகப் பிரிந்திருக்கையாலே பிரணயரோஷம் தலை மண்டையிட்டுச் சொல்லுகிற வார்த்தையன்றே என்றபடி.

6. "கடியன் கொடியன்" என்பது போன்று சொல்லாது, "நம்பி" என்கிற இது, கொண்டாட்டமாயிருக்க, உறவு அறச் சொல்லுகிற வார்த்தையோ இது, என்ன, 'இவர்கள் இப்படி' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

என்று சொல்லி இருக்கையாவது, இவர்கள் கோஷ்டிக்குத் தக்கான் அல்லன் ஆகையாலே அன்றோ. [1]தாழ்ச்சியே மேன்மையாமிடத்தில் முதன்மை கொண்டாடுவது போராதே. உன் தாமரை புரை கண் இணையும் செவ்வாய் முறுவலும்- [2]காணப் பெறாத காரணத்தால் விடாய்த்து உருவின கண்களும், கண்டு செவ்விபெற்றுக் குளிர்ந்தன; அகவாயில் உவகைக்குப் போக்குவீடாகப் புன்முறுவல் பூக்கவும்பெற்றான். [3] இவர்களுடைய 'போ' என்கிற விலக்குகிற வார்த்தையாகிற அமிருத பானத்தாலே அவனுக்குப் பிறந்த வேறுபாடு இருக்கிறபடி. [4]'வா' என்பாரைக்கூடக் கிடையாத சம்சாரத்திலே 'போ' என்பாரைக் கிடையாதன்றோ. என்றது, ஒரு பிரயோஜனத்துக்காகவும் தன்னை வேண்டுவார் இன்றிக்கே இருக்கிற இடத்தே, தன்னையே பிரயோஜனமாகப் பற்றி இப்படிப் படுவாரைக் கிடையாதன்றோ என்றபடி.

ஆகுலங்கள் செய்ய - [5]காரணம் இரண்டாக இருக்கச் செய்தே, எல்லாக் கரணங்களும் அழியாநின்றன. அவனுக்கு ஒன்று இரண்டு ஆயிற்று வேறுபட்டன; இவர்களுக்கு எல்லா அவயவங்களும் வேறுபட்டன. [6]அணு அழிக்குமாறுபோல் அன்றே விபு அழிப்பது. ஆகுலம் - பூசலும், வருத்தமும், துக்க

1. அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'தாழ்ச்சி' என்று தொடங்கி.

2. பிரிவுகாலத்தில் இவன் கண் மலர்ந்திருப்பதற்கு, அவதாரிகையிற் கூறிய காரணத்தைத் தவிர, வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'காணப்பெறாத' என்று தொடங்கி.

3. இவர்கள் முகங்கொடாதே இருக்க, உவகை பிறக்கும்படி எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்களுடைய' என்று தொடங்கி.

4. சிம்ஹாவலோகந நியாயத்தாலே, "போகுநம்பி" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'வா என்பாரை' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார் 'ஒரு பிரயோஜனத்துக்காகவும்' என்று தொடங்கி.

5. "ஆகுலங்கள்" என்ற பன்மைக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'காரணம்' என்று தொடங்கி. 'இரண்டு' என்றது, திருக்கண்களையும், திருவாயினையும். அதனை விவரணம் செய்கிறார் 'அவனுக்கு என்று தொடங்கி.

6. இங்ஙனம் வேறுபட்டதற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அணு அழிக்குமாறு' என்று தொடங்கி. 'அணு' என்றது, ஆத்மாவை. 'விபு' என்றது, சர்வேசுவரனை.

மும். [1]'வாரீர்கோள்! உங்களுக்கு என்னோடு ஒன்று இல்லை என்னாநின்றீர்கோள்; மனப்பற்றுடையாரைப் போன்று வார்த்தை சொல்லாநின்றீர்கோள்; முரண்பட்டனவாயிருக்கின்றனவே! 'போகு நம்பி' என்னாநின்றீர்கோள்; '**ஆகுலங்கள் செய்ய**' என்னாநின்றீர்கோள்; இதற்கு அடி என்?' என்றான். [2]'வாராய்! நாங்கள்தாம் மனப்பற்று உண்டாய்ச் செய்கிறோம் என்று இருக்கிறாயோ? சந்திரனைக் கண்ட அளவிலே சந்திர காந்தம் உருகுகிறது என்ன பாவபந்தம் உண்டாய்? [3]"**அவசியம் அநுபவித்தே அறவேண்டும்**" என்கிற விதியைத் தப்ப ஒண்ணுமோ? அழிதற்கே நோற்றோமே யாம் - [4]எங்களுக்கு இது இயல்புகாண். இளையபெருமாள் காடு ஏறப் போகாத அன்றுஅன்றோ எங்களால் அழியாதிருக்கலாவது? "காட்டில் வசிப்பதற்கே நீ படைக்கப்பட்டாய்" என்பதன்றோ சுமத்திரையின் வார்த்தை. [5]நோன்பாவது,முற்பிறவியில் உள்ளதுஅன்றோ. [6]இவர்கள் இப்படிச் சொன்னவாறே, 'அவ்வழிவு கலவியின் பொருட்டு அன்றோ' என்று பார்த்து, அவன், 'நம்மைக் கண்ட அளவிலே இத்தனை வேறுபாடு

---

1. சென்றதையும் கடாக்ஷித்து, மேல் வருவனவற்றிற்குச் சங்கதி அருளிச்செய்கிறார் 'வாரீர்கோள்' என்று தொடங்கி.

2. "அழிதற்கே" என்றதிலே நோக்காக, அதற்கு விடை அருளிச் செய்கின்றார் 'வாராய்' என்று தொடங்கி. மனத்திலே பற்று இன்றிக்கே இருக்க, உருகக் கூடுமோ? என்ன, 'கூடும்' என்னுமதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார்கள் 'சந்திரனைக் கண்ட' என்று தொடங்கி.

3. ஆயின், இது வருவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார்கள் 'அவசியம்' என்று தொடங்கி.

"அவஶ்யம் அநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம்
நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி சதைரபி"

என்பது.

4. "அழிதற்கே" என்ற ஏகாரத்தின் பொருள், 'எங்களுக்கு' என்று தொடங்கும் வாக்கியம். அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார்கள் 'இளையபெருமாள்' என்று தொடங்கி. காடு ஏறப் போனதற்குப் பிரமாணம் காட்டுகிறார்கள் 'காட்டில்' என்று தொடங்கி.

"ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே
ராமே ப்ரமாதம் ஆகார்ஷீः புத்ர ப்ராதரி கச்சதி"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 40 : 5.

5. 'அவசியம் அநுபவித்தே அறவேண்டும்' என்று மேலே கூறிய வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'நோன்பாவது' என்று தொடங்கி.

6. "அழிதற்கே" என்ற ஏகாரத்திலே நோக்காகச் சங்கித்துப் பரிஹரிக்கிறார் 'இவர்கள்இப்படி' என்று தொடங்கி.

உண்டான பின்பு [1] 'மேல் உள்ளவை எல்லாம் செய்து கொள்ளீர்களோ!' என்றான். அதுவோ உன் நினைவு! நாங்கள் அவர்கள் அல்லோம்காண்! நாங்கள் இங்ஙனே அழிந்தே போக நோற்றோம்காண்! உன்னைப் பிரிந்தால் கலத்தற்கு நோற்றார் வேறே சிலர்காண் என்பார் '**யாம்** அழிதற்கே நோற்றோம்' என்கிறார்கள்.

நெடும்போது இவர்கள் பேச்சுக்களைக் கேட்கையால் உண்டான உவகை தோற்றப் பார்த்துக்கொடு நின்றான். [2] 'நம்மைக் காணுதல் இவனுக்குத் தரித்திருக்கைக்குக் காரணமாக இருந்தது' என்று, முகத்தைமாறிப் பின்னோக்கி இருந்தார்கள்; அவ்வளவிலே அவன் நெஞ்சிலே மயிர் பாடு உண்டாயிற்று; '**தோகை மா மயிலார்கள்**' என்கிறான். அன்றிக்கே, [3] 'நமது வைவர்ணியமும் கண்ணநீரும் இவன் காண்பான் அல்லன்; தெய்வயோகத்தால் காணுமவற்றை நம்மால் செய்யலாவது இல்லையன்றோ' என்னுத் திரிய இருந்தார்கள்; அதுதானே இவனுக்குக் காரியமாயிற்று, '**தோகை மா மயிலார்கள்**' என்கிறான் என்னுதல். என்றது, முறுவலுக்கும் கண்களுக்கும் இலக்காய் அழிந்து போகாமல், திரிய இருந்ததும் நின்று அநுபவிக்கைக்கு உடலாயிற்று என்றபடி. [4]'நம் காரியம் தலையாகப் போயிற்று' என்று இருக்கிறான் அன்றோ அவன். [5]"கற்புக்கரசியாகிய சீதாபிராட்டி, துடைகளால் வயிற்றையும் திருக்

1. 'மேல் உள்ளவை எல்லாம் செய்துகொள்ளீர்களோ? என்றதற்குக் கருத்து, நீங்கள் நோற்ற நோன்பே கலவியை உண்டாக்காதோ? என்பது.

2. முகம் மாற வைத்ததற்கு இரண்டு காரணங்கள் காட்டுகிறார். "தாமரைபுரை கண்ணிணையும் செவ்வாய் முறுவலும்" என்றதனைக் கடாக்ஷித்து முதல் காரணத்தை அருளிச்செய்கிறார் 'நம்மைக் காணுதல்' என்று தொடங்கி. மயிர்பாடு - மயிரின் வைலக்ஷண்யம்.

3. "ஆகுலங்கள் செய்ய அழிதற்கே நோற்றோம் யாம்" என்றதனைக் கடாக்ஷித்து, பின் நோக்கி இருந்ததற்கு இரண்டாவது காரணத்தை அருளிச்செய்கிறார் 'நமது வைவர்ணியமும்' என்று தொடங்கி. பின்நோக்கி இருந்தாலும் இனிமையைத் தருகின்ற மயிர்முடியைக் காண்பானே? என்ன, 'தெய்வயோகத்தால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'நம்காரியம்' என்று தொடங்கி.

5. நன்று; இவர்கள் அவனுக்கு இன்பத்தைத் தருகின்ற அவயவங்களை மறைக்கலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கற்புக்கரசியாகிய' என்று தொடங்கி.

"ஊருப்யாம் உதரம் சாத்ய பாஹுப்யாம்ச பயோதரௌ
உபவிஷ்டா விசாலாக்ஷீ ருதந்தீ வர வர்ணிநீ"

என்பது, ஸ்ரீராமா. சுந். 19 : 3.

கரங்களால் தனங்களையும் மறைத்தவளாய் அழுதுகொண்டு வீற்றிருந்தாள்" என்று கொண்டு 'அவன் உடைமையினை அசுரத் தன்மை வாய்ந்தவர்கள் காண ஒண்ணாது' என்று மறைக்கக் கடவ அவள்,'அவன்தான் காணவொண்ணாது' என்று மறைக்கும்படி காணும், பிரணயகோபம் தலை மண்டை இட்ட படி. தோகை மா மயிலார்கள் - தோகை விரித்த நல்ல மயில் போலே அலைந்த குழலையுடையவர்கள். [1] "நிதம்ப பாகத்தை யடைந்த கிருஷ்ணசர்ப்பம் போன்ற சடையாலே" என்கிற படியே பேணாத குழல் இருக்கிறபடியைக் கண்டான்; 'நீங்கள் முன்னம் [2] ஆனார் ஆகிடுக; இது ஒரு மயிர்முடி இருந்தபடி என்தான்!' என்றான். [3] இவள்தான் ஓதி நல்லளாய் இருக்குமே. [4]இவன் கூழை ஆகையாலே கொண்டாடுமே. "குழல் கூழை ஓதி" என்பது நிகண்டு. எங்கள் மயிர்முடியைக் கண்டு தந்தாம் மயிர் முடி என்று மயங்கும்படி செய்வதே அவர்கள் சிலர்! [5]அபிமதவிஷயத்தைப் பிரிந்தால் கண்டவையெல்லாம் அதுவாகத் தோற்றுமன்றோ என்றார்கள். 'அங்ஙனே சிலர் உளரோ' என்றான். நின் அருள் சூடுவார் - உன்னோடு

---

1. " நீலகாகபயா வேண்யா ஜகநம் கதயைகயா
   நீலயா நீரதாபாயே வநராஜ்யா மஹீமிவ"

என்பது, ஸ்ரீராமா. சுந். 15 : 25.

2. 'ஆனார் ஆகிடுக' என்றது, முன்னேக்கி இருந்தாலுமாம், பின்னேக்கி இருந்தாலுமாம்; நமக்கு அதுகொண்டு காரியம் இல்லை என்றபடி.

3. தலைவன் அப்படிக் கொண்டாடுகைக்குக் காரணம், கூந்தலின் வைலக்ஷண்யம் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இவள்தான்' என்று தொடங்கி. ஓதி என்பதற்கு, கூந்தல் என்றும், படித்து என்றும் பொருள்.

4. இப்படி அழகியான இவளுடைய வைலக்ஷண்யத்தை நன்கு அறியுமவனாகையாலே கொண்டாடுகிறான் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இவன் கூழை' என்று தொடங்கி. கூழை என்பதற்கு, மயிர்முடியின் தன்மையை அறிந்தவன் என்றும், சபலன் என்றும் பொருள். ஓதி கூழை என்னும் இவ்விரு சொற்களும் மயிர்முடி என்ற பொருளில் வருதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'குழல் கூழை ஓதி' என்று.

5. செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினொடும்
   சந்தார் தடந் தோளொடும் தாழ் தடக் கைகளோடும்
   அந்தார் அகலத்தொடும் அஞ்சனக் குன்றமென்ன
   வந்தான் இவனாகும் அவ்வல்வில் இராமன் என்றான்.

என்பது, மிதிலைக்காட்சிப். கம்பராமாயணம்.

"காடும் செடியும் அவளாகத் தோன்றுமென் கண்களுக்கே"

என்றார் பிறரும்.

கலந்து பிரிவிலே இப்படிப் பிச்சு ஏறும்படி செய்தவர்கள். அவர்களைப் பிரிந்து நோவுபடாமல் அவர்களோடே கலந்து பரிமாறுவாய். 'ஆனால் அதற்கு என்? அவர்களைப் பெறுகைக்கு ஒரு விரகு பெறுந்தனையும் நான் இங்ஙனே சிறிது போது இருந்து போகிறேன்' என்றான். உனக்கு இங்ஙன் விரகு பெற்றுப் போக வேண்டுமோ? நீ [1]கைகண்டதைப் பிரயோகம் செய்வாய். 'அது யாது?' என்றான். செவி ஓசை வைத்து எழக் குழல் ஊது - [2]"எங்களுக்கே ஒருநாள் வந்து ஊத உன் குழல் இன்னிசை போதராதே" என்று இருக்குமவர்கள்; நீ குழல் ஊதினால் சென்று செவிப்படும்; உடனே வருவர்கள்காண். [3]சர்ப்பயாகத்தில் சர்ப்பங்கள் வந்து விழுமாறு போலே, நீ குழல் ஊதவே பெண்கள் அடங்கலும் உன் காற்கீழே வந்து விழுவார்கள் காண்! [4]"குழல் ஓசை கேட்பது எப்போது?' என்று செவிகொடுத்துக்கொடுகாண் அவர்கள் இருப்பது; உன்னைப் பிரிந்தார் எல்லாக் கரணங்களையும் உன்மேலே வைத்திருப்பர்காண். [5]"தூ வலம்புரியுடைய திருமால் தூய வாயில் குழலோசை வழியே, கோவலர் சிறுமியர் இளங்கொங்கை குதுகலிப்ப உடலுள் அவிழ்ந்து எங்கும், காவலும் கடந்து கயிறு மாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனர்" என்கிறபடியே, நீ குழல் ஊதப் புக்கால் நிற்பார் உளரோ? உன் காற்கீழே வந்து விழுவர்காண்! அதனைச் செய் என்றார்கள்.

---

1. கைகண்டது - அநுபவமானது என்றும், கையிலே இருந்த குழல் என்றும் சிலேடை.

2. நான் குழல் ஊதினால், வேறு ஒன்றிலே நோக்குள்ளவர்களுக்கு அது செவிப்படுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார்கள் 'எங்களுக்கே' என்று தொடங்கி. என்றது, நீ சர்வ சாதாரணனான பின்பு உன் குழலும் சர்வ சாதாரணமாயிருக்க, ஒரோ இடங்களில் ஒருநாள் நாங்கள் கேட்க வந்து ஊதவேண்டும் என்றால், நீ ஊதினும் இசை புறப்படாதபடியாயிற்று குழலின் தன்மை இருப்பது என்றபடி.

3. அதனை விவரணம் செய்கிறார் 'சர்ப்பயாகத்தில்' என்று தொடங்கி. சர்ப்பயாகம் செய்தவன் - ஜநமேஜயன்.

4. 'எங்களுக்கே ஒருநாள்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'குழல் ஓசை' என்று தொடங்கி. அதற்குக் காரணம், உன் விஷயத்தில் அவர்களுக்கு உண்டான பிராவண்யம் என்கிறார்கள் 'உன்னைப் பிரிந்தார்' என்று தொடங்கி.

5. குழல் ஓசையில் ஈடுபட்டு அவர்கள் வருவதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தூவலம்புரி' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 3, 6; 1.

"அது எனக்கு ஒரு விரகு அன்று; "கொங்கு நறுங் குழலார் களோடு குழைந்து குழல் இனிது ஊதி வந்தாய்' என்று ஒத்த தரத்தில் பெண்களும் தானும் கலக்கைக்காக அவர்களை அழைப்பதற்குக் குழல் ஊதாநின்ருன் என்பர்கள்; நான் குழல் ஊதுகை பெண்களை அழைக்கை என்று பிரசித்தம்; அது எனக்கு ஈடு அன்று" என்ருன்.

ஆகில், உனக்கு ஒரு நல்விரகு சொல்லக் கேள்: ஆகள் போகவிட்டு - பசுக்களைக் கைகழிய விடுவது, உடனே குழலை ஊதுவதா? 'அறியாதார் பசுக்களை மறிக்க ஊதினன் என்று இருப்பர்கள்; அதனை அறிந்து போரும் பெண்கள் உன்பக்க லிலே வந்து கிட்டுவர்கள். [2] இதுதான் உனக்குச் சாதிக்கு ஏற்றதொழிலும் அன்றே. தீங்குழல் ஊதிற்றும் நிரைமேய்த் ததும் என்பரேயன்றே. ஆனபின்னர் அதனைச் செய்வாய்' என்ருர்கள். [3] 'அநுஷ்டிக்கவேண்டிய உபாயசொரூபம் இருக் கும்படி அறிந்தோம்; அநுஷ்டிக்க வேண்டியதற்குத் தகுதி யான உபதேசம் பெற்ருேம்; இனி, உபேய அம்சத்தில் கைப் படாதன இல்லை; இனி, நமக்கு ஒருகுறை இல்லை' என்று பார்த்து, அவ்விடத்திலே இருந்து ஊதுவதற்குப் புக்கான். [4] இனி, தான் விதிகளை மீறி ஒரு காரியத்தைச் செய்யுமவன் அன்றே; 'தோகை மா மயிலார்கள், செவி ஓசை வைத்து எழ' என்றுஅன்ருே இவர்கள் சொல்லியது; 'இன்ன இடத்தே' என்று சொன்னர்கள் இலரே! இங்கே இருந்து ஊதத் தொடங்கினன். 'அதுவோ பார்த்தபடி; நீ துடியா

1. "கொங்கு நறுங் குழலார்களோடு" என்பது, பெருமாள் திரு மொழி. 6 : 9. இந்தப் பாசுரத்திற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'ஒத்த தரத்தில்' என்று தொடங்கி.

2. இதற்காகப் பசுக்களை மேய்த்துக்கொண்டு திரியவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இதுதான்' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'தீங்குழல்' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 4 : 2.

3. 'அநுஷ்டிக்கவேண்டிய' என்றது முதல், 'இங்கே கொள்ளப் பார்த்தாயோ' என்றது முடிய, "போயிருந்து" என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிருர். உபாய சொரூபம் - குழல் ஊதுகை. 'உபதேசம் பெற் ருேம்' என்றது, ஆகள் போக விடுகையைக் குறித்தபடி.

4. இவர்கள் சொன்னமாத்திரத்தில் ஊதவேண்டுமோ? என்ன, 'இனி, தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

மைக்கு ஒரு விரகு சொன்னேமாகில் அதனை இங்கே கொள்ளப் பார்த்தாயோ?' குழல் ஊது போய் இருந்தே-உனக்குப் பெண்கள் படும் வாய்ப்புள்ள இடத்தே போய் இருந்து ஊதப் பாராய்!

[1]தோகை மா மயிலார்கள்-இவன் ஓதி உணர்ந்தவன் ஆகையாலே கொண்டாடத் தொடங்கினான்; 'இவன் ஓதி உணராமல் அன்றோ நம் குழலை இப்படிக் கொண்டாடுகிறது' என்று 'இது மயங்கியவன் வார்த்தை' என்று அவர்கள் வேறுபடுத்துகிறார்கள். [2]தலையான பேச்சினை அன்றோ இவர்கள் வேறுபடுத்துகிறது. செவி ஓசை வைத்து எழ - குழல் ஓசையைச் செவியிலே வைத்துக்கொண்டு வர. ஆகள் போக விட்டுக் குழல் ஊது-பசுக்களைப் போகவிட்டுக் குழல் ஊது. [3]ஊதவே, உன் நினைவும் முடிந்து பசுக்களின் வயிறும் நிறையும். 'செவி ஓசை வைத்து எழுகை பலமாய், குழல் ஊதுகை உபாயமாய் இருந்தது; அதுதான் அபிமதவிஷயத்தைப் பற்றி யன்றோ செய்வது; இங்கே இருந்து ஊதுகிறேன்' என்று குழலை வாங்கி ஊதினான். போய் இருந்தே குழல் ஊது - ஒன்றைச் சொல்ல, ஒன்றைச் செய்யாதே; உனக்கு விருப்பமுள்ளவர்கள் திரளுகைக்கு நீர்வாய்ப்புள்ள நிலங்களிலே போயிருந்து ஊதாய். (2)

## 566.

**போயி** ருந்துநின் புள்ளு வம்அறி யாத வர்க்குரை நம்பீ! நின்செய்ய
**வாயிருங் கனியும் கண்களும்விப ரீதம்இந்நாள்**
**வேயி ருந்தடந் தோளி னார்இத்** திருவ ருள்பெறு வார்ய வர்கோல்?
**மாயிருங் கடலைக் கடைந்தபெரு மானாலே.**

**பொ - ரை:**—எல்லாம் நிறைந்தவனே! போயிருந்து, உனது களவுகளை அறியாதவர்களுக்குச் சொல்லுவாய்; பெரிய கோவைக்கனி

1. ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் எழுந்தருள, அவருக்காக மீண்டும் அப்பதங்களை எடுத்துப் பொருள் அருளிச்செய்கிறார் "தோகைமாமயிலார்கள்" என்று தொடங்கி. 'ஓதி உணர்ந்தவன்' என்பதற்கு, மயிரின் அழகினை அறிந்தவன் என்றும், அத்யயனம் செய்த ஞானவான் என்றும் பொருள். 'ஓதி உணராமல்' என்பதற்கு, எங்கள் கூந்தலின் தன்மையை அறியாமல் என்றும், படித்து அறியாமல் என்றும் பொருள்.

2. 'தலையான' என்பதற்கு, மேன்மையான என்றும், தலைவிஷயமான என்றும் பொருள்.

3. குழல் ஊதினால், பசுக்கள் மேய்தலைவிட்டு வருமே, வந்தால் அவை பட்டினியாக இருக்கவேண்டிவருமே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார்கள் 'ஊதவே' என்று தொடங்கி.

போன்ற திருவதரமும் திருக்கண்களும் இப்போது தீமையைப் பயப்பனவாம்; பெரிய விரிந்த கடலைக் கடைந்த பெருமானாகிய இவனால் இந்தத் திருவருளைப் பெற்றிருப்பவர்களான, மூங்கில்போன்ற பெரிய நீண்டதோள்களையுடைய பெண்கள் யாவர்?

**வி - கு :—**நம்பீ! போயிருந்து நின் புள்ளுவம் அறியாதவர்க்கு உரை; இருங் கனி வாயும் கண்களும் இந்நாள் விபரீதம்; பெருமானால் திருவருள் பெறுவார் தோளினார் யவர்கொல்? என்க. புள்ளுவம் - களவு. அல்லது, வஞ்சனை. பெறுவார் : காலமயக்கம்.

**ஈடு :—**மூன்றாம்பாட்டு. [1]"'குழல் ஊது போய் இருந்தே' என்றே யன்றோ என்னைச் சொல்லுகிறது; கூறியது ஒன்றனைச் செய்யவேண்டுமத்தனை அன்றோ. [2]இனித்தான், 'உனக்குப் பெண்கள் படும் நீர்வாய்ப்புள்ள இடங்களிலே போயிருந்து ஊது' என்றே யன்றோ நீங்கள் சொன்னீர்கள்; அழகிது, இத்தனையன்றோ. நீர்வாய்ப்புள்ள இடந்தான் எது? அதனைச் சொல்லலாகாதோ?" என்று இரண்டு அடி உட்புகுரவிட்டு நற்றரிக்க இருந்து, குழலில் இனிய பேச்சிலே கைவைத்

1. மேற்பாசுரத்தில் "குழல் ஊது போயிருந்தே" என்றதன்பின், இப்பாசுரத்தில் "போயிருந்து நின்புள்ளுவம் அறியாதவர்க்கு உரை" என்றதற்குச் சங்கதி அருளிச்செய்கிறார். "அறியாதவர்க்கு உரை" என்றதனால், இவன் குழல் ஊதுகையை விட்டு வார்த்தை சொல்லப் புக்கான் என்பது போதரும். அப்படிச் சொன்ன வார்த்தைகள் இரண்டு. அவற்றுள் ஒன்று, 'நீர் வாய்ப்புள்ள இடம் எது' என்பது. இதனை அருளிச்செய்கிறார் 'குழல் ஊது போய் இருந்தே' என்றது முதல், 'இனிய பேச்சிலே கைவைத்தான்' என்றது முடிய. மற்றொன்று, 'நான் சிலரை அழைக்கைக்காகவோ குழல் ஊதுவது? அது எனக்குச் சாதிக்கு ஏற்ற தொழில் அன்றோ?' என்பது. இதனை அருளிச்செய்கிறார் 'நான் செய்தபடி செய்கிறேன்' என்று தொடங்கி. ஆக, நீர்வாய்ப்புள்ள இடம் எது? என்றும், நான் குழல் ஊதுதல் சாதிக்குரிய தொழிலாகையாலே பெண்களை அழைத்தற்கு அது சாதனமாகமாட்டாது என்றும் வார்த்தை சொல்லப்புக்கான்; அதற்கு, "போயிருந்து நின்புள்ளுவம் அறியாதவர்க்கு உரை நம்பி" என்று மேல் பாசுரத்திற்கும் இதற்கும் இயைபு அருளிச்செய்தபடி. 'கூறியது ஒன்றனைச் செய்யவேண்டுமத்தனையன்றோ' என்றது, நீங்கள் கூறியதனை நான் செய்யவேண்டுவது அத்தனையன்றோ என்றபடி.

2. அவர்கள் கூறியது ஏது? என்ன, அதனை விளக்குகிறார் 'இனித்தான்' என்று தொடங்கி.

தான். [1] குழல் ஓசைபோல் அன்றே பேச்சில் இனிமை இருக்கும்படி! [2] "நான் செய்தபடி செய்கிறேன், 'செவி ஓசை வைத்து எழ குழல் ஊது போய் இருந்து' என்று நீங்கள் சொன்ன இதற்குக் கருத்து எனக்குத் தெரிந்ததில்லை; இது எனக்குச் சாதிக்கு ஏற்றதொழில் அன்றோ?" என்றான்.

போய் இருந்து நின் புள்ளுவம் அறியாதவர்க்கு உரை நம்பீ - உன் பொய்களிலே பழகின எங்கள்பக்கல் உன்பொய் விலை செல்லாது; இங்கு நின்றும் போய் உன்பொய் அறியாதவர்கள் கோஷ்டியிலே இருந்து சொல்லு. [3] நினைவு ஒன்றும் சொலவு ஒன்றுமான உன்னை அறியாதாரும் கிடைப்பர்கள் அன்றோ; ஐந்துலக்ஷங் குடிகளில் பெண்கள் உளராகையாலே. உன்பொய்யை **'மெய்'** என்று இருக்கும் அவர்களுக்கு அன்றோ இவைஎல்லாம் சொல்லுவது? [4] "பொய் கேட்டிருந்தேன்" என்று இருப்பாரும் உளர்அன்றோ. நம்பீ - [5] நிறைந்தவர் அல்லீரோ! நீர் எங்களைப் பெறாமல் குறைவாளராக இருந்தீரோ? [6] தன்னைக் குறித்து இவர்கள் சொல்லுகிற அமிருதத்திற்குச் சமமான விலக்குகிற வார்த்தைகளைக் கேட்டவாறே அவன் முகத்திலே ஒரு மகிழ்ச்சி பிறந்தது. [7] இந் நாள்

1. குழலோசையைக் காட்டிலும் பேச்சு இனிமையாக இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'குழல் ஓசை' என்று தொடங்கி.

2. 'நான் செய்தபடி செய்கிறேன்' என்றது, சொன்னபடி செய்கிறேன் என்றபடி.

3. என் புள்ளுவம் அறியாத பேர் உளரோ? என்ன, 'நினைவு ஒன்றும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. பொய்யை மெய் என்று இருப்பார் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பொய் கேட்டிருந்தேன்' என்று தொடங்கி.

வில்லால் இலங்கை மலங்கச் சரந்துரந்த
வல்லாளன் பின்போன நெஞ்சம் வருமளவும்
எல்லாரும் என்தன்னை ஏசிலும் பேசிடினும்
புல்லாணி எம்பெருமான் பொய்கேட் டிருந்தேனே.

என்பது, பெரிய திரு. 9. 4: 5.

5. எனக்கு அங்ஙனே சிலர் உளரோ? நான் உங்களை ஒழிய அறிவனோ? என்கிறவனுடைய வார்த்தையை உளத்தேகொண்டு சொல்லுகிறார்கள் 'நிறைந்தவர்' என்று தொடங்கி.

6. "நின்செய்யவாய்" என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'தன்னைக் குறித்து' என்று தொடங்கி.

7. "இந்நாள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நாங்கள்' என்று தொடங்கி.

நின் செய்ய வாய் இரும் கனியும் கண்களும் விபரீதம்-நாங்கள் இதற்கு முன்னர் இச் செவ்வியும் வேறுபாடும் ஒருநாளும் கண்டு அறியோம்: இவை இருந்தபடி என்? என்றார்கள். [1]"கழுத்துக்கு மேலே ஒன்றைச் சொல்லுகிறீர்கோளித்தனை அன்றோ! அதனை விடுங்கோள்; இது ஒரு தோள் அழகு இருந்தபடி என்? என்றான்.

வேய் இரும் தடம் தோளினர் இத் திருஅருள் பெறுவார் யவர்கொல் - வேறு ஒருவருடைய தோள் அழகைக் கண்டு, தந்தாம் தோள்அழகு என்று மயங்கும்படிக்குத் தகுதியான தோள்அழகு உடையார் யாரோ? என்றது, நீ கிடந்து இப்படித் துடிக்கும்படி செய்ய வல்லராவதே அவர்கள் சிலவர்! என்பதனைத் தெரிவித்தபடி. '**இத் திரு அருள் பெறுவார் யவர் கொல்**' என்றதனால், '**செய்ய வாய் இரும் கனியும் கண்களும்**' என்ற இடம், அவன்பக்கல் இவர்களுக்கு உண்டான பாவபந்தம் சொல்லுகிறது. '**வேய் இரும் தடம் தோளினர்**' என்ற இடம், இவனுக்கு அவர்கள்பக்கல் உண்டான பாவபந்தம் சொல்லுகிறது. இவர்களுக்குத் தன்பக்கல் பாவபந்தம் [2]தன்முகத்தால் அறிந்தான் அவன். தங்கள்பக்கல் இவனுக்கு உண்டான பாவபந்தம் கைமேலே கண்டுவிட்டார்கள் அவர்கள். உனக்கு இப்படி விரும்பத் தக்கவர்களாய் இருக்குமவர்கள் யாரோ? என்பார் '**யவர்கொல்**' என்கிறார்கள். இவன்பக்கல் பிரணயரோஷத்தாலே சொல்லுகிறார்களத் தனைபோக்கி, இவனோடு கலந்தாரைத் தனக்கு உத்தேசியராகவன்றோ இவர்கள் இருப்பது. மா இரும் கடலைக் கடைந்த பெருமானாலே இத் திருவருள் பெறுவார் யவர்கொல்-[3]'மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ் சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்' என்று சொல்லுகிற தோள் அழகினையுடை

---

1. 'கழுத்துக்கு மேலே' என்றதற்கு, கழுத்துக்கு மேலே இருக்கின்ற வாயும் கண்களும் என்பது நேர் பொருள். மனத்தொடு படாமல் என்பது தொனிப்பொருள். தோளழகு, கழுத்துக்குக் கீழேயாகையாலே, மனத்தொடுபட்டது என்பது, தொனிப்பொருள்.

2. 'தன்முகத்தால்' என்றது, தன்னுடைய முகத்தைக் கொண்டாடுகையாலே என்றபடி. 'கைமேலே' என்றது, சிலேடை: கண்கூடாக என்றும், தோளழகைக் கொண்டாடுகையாலே என்றும் பொருள்.

3. "மாயிருங் கடலைக் கடைந்த பெருமான்" என்றதற்கு, மூன்று வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார். முதல் கருத்து, 'மந்தரம் நாட்டி' என்று தொடங்குவது. இது, நாய்ச்சியார் திருமொழி. 9: 1.

யவன் விரும்பும்படியான தோள்அழகு படைப்பதே! [1] தன் தோள் அழகு கண்டு பெண்பிறந்தார் அடங்கலும் படும் பாட்டை யடங்கலும் இவனைப் படுத்தும்படியான தோள் அழகுடையார் உண்டாவதே! [2] பெரியவன் கையிலே பெரியது பட்ட பாடு அடங்கலும் தங்கள் கையிலே இவன் படும்படி செய்ய வல்லர் ஆவதே! "வைகுந்தனுடைய தோள்களால் சுழலப்பட்ட மந்தரத்தின் ஒலி வீழ்ச்சி" என்றுகொண்டு அது ஊமைக்கூறனைகப் பட்டவெல்லாம் படுகைஅன்றோ. [3] அன்றிக்கே, மந்தரத்தை நட்டுக் கடலை நெருக்கிக் கடைந்து பெரிய பிராட்டியாரைப் பெற்ற அன்றும் இந்த வேறுபாடு கண்டோம் இல்லையே! பழையாரைப் பெற்றாற்போல் அன்றே யன்றோ புதியாரைப் பெற்றால் இருக்கும்படி. (3)

## 567.

ஆலி னிளிலை ஏழு லகுமுண்டு அன்று நீகிடந் தாய்உன் மாயங்கள்
மேலை வானவரும் அறியார்இனி எம்பரமே?
வேலி னேர்தடங் கண்ணி னார்விளை யாடு சூழலைச் சூழ வேநின்று
காலிமேய்க்க வல்லாய்! எம்மை நீ கழறேலே.

**பொ - ரை:**—பிரளயகாலத்தில் ஏழ் உலகங்களையும் உண்டு, முகிழ் விரிந்து நீளுமளவான ஆல் இலையிலே நீ சயனித்திருந்தாய்; உன்னுடைய ஆச்சரியமான செயல்களை நித்தியசூரிகளும் அறியமாட்டார்கள்; இனி எங்களால் சொல்லக் கூடியதாமோ? வேலை ஒத்த விசாலமான கண்களையுடைய பெண்கள் விளையாடுகின்ற இடங்களைச் சூழ்ந்து நின்றுகொண்டு பசுக்களை மேய்க்க வல்லவனே! எங்களை நீ மேலிட்டு வார்த்தை சொல்லாதே.

---

1. "சுந்தரத்தோளுடையான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தன்தோள் அழகு' தொடங்கி.

2. "பெருமான்", "மாயிருங்கடல்" என்பனவற்றைக் கடாக்ஷித்து இரண்டாவது கருத்து அருளிச்செய்கிறார் 'பெரியவன்' என்று தொடங்கி. 'கையிலே இவன் படும்படி' என்றது, தோளழகிலே இவன் ஈடுபடும்படி என்றபடி. விவரணம் செய்கிறார் 'வைகுந்தனுடைய' என்று தொடங்கி.

3. "நின் செய்ய வாய் இருங் கண்ணும்" என்றதனைக் கடாக்ஷித்து மூன்றாவது கருத்தினை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. பெரிய பிராட்டியாரை அடைந்ததைக் காட்டிலும், இவர்களைப் பெற்றதற்கு ஏற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பழையாரை' என்று தொடங்கி.

**வி - கு :**—அன்று ஏழ் உலகும் உண்டு ஆலின் நீள் இலை கிடந்தாய் என்க. 'வேலின்' என்பதில் இன்சாரியை இடைச்சொல். சூழல் - இடம். காலி - பசுக்கள். கழறுதல் - இடித்துச்சொல்லுதல்.

**ஈடு :**—நாலாம்பாட்டு. [1] 'நாம் சொன்னவற்றை எல்லாம் இவர்கள் வேறாக நினைப்பது, நம்மை ஒழியச் செல்லாமை பிறந்து நாம் அரைக்கணம் தாழ்த்தது பொறுக்கமாட்டாமையன்றோ' என்று பார்த்து, "நீங்கள் என்னை இங்ஙனே சொல்லலாமோ? நான் தாய் தந்தையர்கட்குப் பரதந்திரப்பட்டவன் அன்றோ? அவர்கள் என் கையிலே கோலைத் தந்து 'நீ சென்று பசு மேய்த்து வா' என்றால், நான் மாட்டேன் என்னப் போமோ?" என்றான்; தாய்தந்தையர்கட்குப் பரதந்திரராய்க் கொண்டு பசுமேய்ப்பார் மேய்க்கும்படி இதுவோ? நீ செய்யும் செயல் சேர்ந்திருக்கில்அன்றோ, நீ சொல்லும் சொலவும் சேர்ந்திருப்பது.

ஆலின் [2]நீள் இலை ஏழ் உலகும் உண்டு அன்று நீ கிடந்தாய்- ஓர் ஆலிலையாவது, அதுதான் முகிழ் விரியாத அளவாய் இருப்பது; அதிலே ஏழ் உலகங்களையும் வயிற்றிலே வைத்து, ஒரு யசோதை முதலாயினோர்களுங்கூட உதவாத நிலையிலே திருக்கண்வளர்ந்தருளினாய். உலக முழுதினையும் வயிற்றிலே வைத்து,சிறு வடிவைக் கொண்டு பிரளயத்தில் தனியே கிடக்க வல்லவன் அன்றோ நீ! [3]பொருத்தமற்றனவற்றையும் பொருத்தமுள்ளனவாகச் செய்யவல்ல ஆற்றலையுடைய உனக்கு இவை

---

1. பிரணயரோஷத்தாலே ஊடுகிற இடத்திலே, பெண்கள் இருக்கிற மணற்குன்றின் அருகிலே பசுமேய்த்த வகையினையும், ஆலின்இலைமேல் சயனித்திருந்தபடியையும் சொன்னதற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'நாம் சொன்னவற்றையெல்லாம்' என்று தொடங்கி. இதனால், இவர்கள்பிரணயரோஷம் தீருகைக்காக, தான் தாழ்த்து வந்தமைக்குத் தாய் தந்தையர்கள் ஏவினது காரணமாகப் பசுமேய்த்தபடியை அவன் சொல்ல, அதனைப் பொருத்தம் இல்லாத வார்த்தையாகக் கொண்டு பரிகாசம் செய்யுமவர்கள், 'இவன் வார்த்தை பொருத்தம் இல்லாத வார்த்தை' என்பதற்கு உறுப்பாக, பொருத்தமில்லாத காரியமான ஆலிலை சயனத்தை முன்னிடுகிறார்கள் என்றபடி. 'நீ செய்யும் செயல்' என்றது, "ஆலினீளிலை" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

2. "நீள் இலை" என்றது, நீளுகின்ற இலை என்றாய், முகிழ் விரியாத சிற்றிலை என்றபடி. 'யசோதை முதலாயினோர்களும் கூட உதவாத நிலை' என்றது, பரிகின்றவர்கள் இல்லாத நிலையிலே என்றபடி. விவரணம் செய்கிறார் 'உலகமுழுதினையும்' என்று தொடங்கி.

3. அதனால் பலித்தபொருளை அருளிச்செய்கிறார் 'பொருத்தமற்றனவற்றையும்' என்று தொடங்கி.

எல்லாம் பொருந்தச் சொல்லுகை [1] பொருளோ? நீ சொல்லு கிறவை காதலர்கள் கோஷ்டியில் பரிமாறுவன அல்லகாண்; [2]"தந்தை யென்பான் வடிவு கொண்ட தலைநோய்" என்றும், [3]"பெரியோர்கள் நமக்கு என்ன செய்வார்கள்" என்றும் காண் இங்குப் பரிமாறுமவை. [4]"அன்னை என்செய்யில் என்? ஊர் என்சொல்லில் என்?" என்றே யன்றோ இங்கு இருப்பது. [5]"விரகாக்நியினாலே தகிக்கப்பட்ட" இதற்கு, நீர் சொரியவல்ல வர்களோ அவர்கள்? அவர்களை மறைத்து வந்து கிட்டக்கடவ எங்களுக்கு இவை வார்த்தை யல்ல காண்! உன் மாயங்கள் மேலை வானவரும் அறியார் - [6] உன்னுடைய வஞ்சனை பொருந் திய காரியங்களை, உண்டாக்கப்பட்ட இந்திரன் முதலானோர் அன்றிக்கே நித்தியசூரிகளும் அறியார்கள். [7]"பிரமனும் சர் வேசுவரனை ஸ்ரீமந்நாராயணனை அறியான்" என்கிறபடியே, அறியாமைக்கு அவர்களும் ஒத்திருக்கச்செய்தே, உகந்தா ரைக் காற்கடைக்கொள்ளுதலைச் சொல்லும் இடமாகையாலே நித்தியசூரிகளை எடுத்துக்காட்டாகச் சொல்லுகிறார்கள்.

---

1. பொருளோ-அருமையோ! பொருத்தமில்லாதபடியைக் காட்டுகிறார் கள் 'நீ சொல்லுகிறவை' என்று தொடங்கி.

2. பிரணயகோஷ்டியில் பரிமாறும்படி எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார்கள் 'தந்தை என்பான்' என்று தொடங்கி.

"பிதா நாம மூர்த்தஃ ஶிரோ ரோகஃ"

என்பது.

3. "குரூணும் அக்ரதோ வக்தும் கிம் ப்ரவீஷி ந நஃ க்ஷமம்
குரவஃ கிம் கரிஷ்யந்தி தக்தாநாம் விரஹாக்நிநா"

என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 18 : 22.

4. திருவாய்மொழி. 5. 3 : 6.

5. தாய் தந்தையர்களை அலக்ஷ்யம் செய்யலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார்கள் 'விரகாக்நியினாலே' என்று தொடங்கி. அதனால் பலித்தபொருளை அருளிச்செய்கிறார் 'அவர்களை மறைத்து' என்று தொடங்கி.

6. நீங்கள் 'பொய்' என்கிறது போன்று, எல்லாரும் 'பொய்' என்றார் களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உன்னுடைய' என்று தொடங்கி.

7. "மேலை வானவர்களும்" என விசேடிக்க வேண்டுமோ? பிரமன் முதலானோரும் அறியார் என்ன ஒண்ணாதோ? என்ன, 'பிரமனும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"ப்ரஹ்மாபி ந வேத நாராயணம் ப்ரபும்"

என்பது.

[1] "சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி" என்று கொண்டு அவர்கள் சமாராதனத்துக்கு வேண்டுவன கொண்டு நிற்க, ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ணப் போந்தான் அன்றோ. அது தன்னையும் விட்டு அன்றோ அடல் ஆயர்தம் கொம்பினுக்குக் கோட்டிடை ஆடினன். [2] பழையாரை எல்லாம் காற்கடைக் கொள்ளுகிற இடமாய் இருக்கிற தன்றோ. நவப்பிரியைகளை விரும்புவாரைப் போலே காணும்.

இனி எம் பரமே - [3] நித்திய சூரிகளோடு ஒக்கத் தங்களையும் ஒன்றுபடுத்திப் பேசுகிறார்கள். அவர்களுக்கு நிலம் அல்லாதது எங்களால் அளவிடப் போமோ? [4] அவை யெல்லாவற்றையும் எங்களை ஒழியச் சொல்லாய். 'என்தான்? நான் பசுமேய்த்தமை இல்லை என்கிறீர்கோளோ? அறிந்திலோம் என்கிறீர்கோளோ? நான் சொன்னது பொய்தான் என்கிறீர்கோளோ?' என்றான். அவைஎல்லாம் அப்படியேயானாலும் நீதான் பசுக்கள் மேய்க்கும்படி இப்படியேயோ? வேலின் நேர் தடங் கண்ணினர் விளையாடு சூழலைச் சூழவே நின்று காலி மேய்க்க வல்லாய் - அநுபவிக்கின்றவர்களுடைய அளவு அல்லாதபடி பரப்பையுடைத்தாய், ஓர் ஆளும் ஒரு நோக்கும் நேரான கண்களையுடையராயிருக்கிற பெண்களினுடைய கண்களிலே துவக்குப்பட்டு அவ்வருகு போகமாட்டாதே நின்றுபோலே காணும் பசுக்கள் மேய்ப்பது! [5] என்றது, "கார்த் தண் கமலக் கண் என்னும் நெடுங் கயிறு படுத்து

1. நித்தியசூரிகளைக் காற்கடைக் கொண்டானோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "சூட்டுநன்மாலைகள்" என்று தொடங்கி. இது, திருவிருத். செய். 21.

2. 'உகந்தாரைக் காற்கடைக் கொள்ளுதலைச் சொல்லும் இடமாகையாலே' என்று மேலே கூறிய வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'பழையாரை' என்று தொடங்கி. 'பழையார்' என்றது, இங்கே, ஊடுகிறவர்களை. 'புதியார்' என்றது, அவன் மின்னிடை மடவாரை. நவப் பிரியைகள் - விருப்பத்திற்கிடமான புதியர்கள்.

3. 'நித்தியசூரிகளோடு ஒக்க' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து, நித்தியசூரிகளை வஞ்சித்தாற் போலே எங்களையும் வஞ்சித்தாய் என்பது. அறியாமையில் ஒப்புமையை நோக்கி ஒன்றுபடுத்துகிறார்கள் என்க.

4. 'அவை எல்லாவற்றையும்' என்றது, மாயங்கள் எல்லாவற்றையும் என்றபடி. என்றது, 'நான் தாய் தந்தையர்கட்குப் பரதந்திரப்பட்டவன்' என்றது முதலாக மேலே கூறிய வார்த்தைகளை.

5. "வேலின் நேர் தடங்கண்ணினர்" என்கிறவர்களுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'என்றது' என்று தொடங்கி. 'கார்த்தண் கமலம்' என்ற திருப்பாசுரம், நாய்ச்சியார் திரு. 14 : 4.

என்னை, ஈர்த்துக்கொண்டு விளையாடும் ஈசன்தன்னைக் கண்டீரே" என்று, தன் கண்ணழகைக் கண்ட பெண்கள் படும் பாடு எல்லாம் இவனை அவர்கள் படுத்த வல்லவர்கள் என்பதனைத் தெரிவித்தபடி. விளையாடு சூழலைச் சூழவே நின்று காலி மேய்க்க வல்லாய்-[1]"உன்வயிற்றையும் நிறைத்துப் பசுக்களின் வயிறுகளையும் நிறைத்து அல்லது வாராதேகொள்' என்று அன்றோ தாய்தந்தையர்கள் உன்னைச் சொல்லிவிட்டது? [2]'இன்ன இடத்தே நின்று பசுக்களை மேய்' என்று ஓர் இடத்தை வரையறைசெய்து விட்டார்களோ?[3] அவர்கள் சொல்லாதனவற்றையும் செய்யும்போது அதனை இங்குச் செய்யலாகாதோ? கண்ணுக்கு இட ஒரு துரும்பும் இல்லாத, அவர்கள் விளையாடுகின்ற மணற்குன்றுகளைச் சூழ நின்று மேய்க்க வேணும்போலே காணும். அன்றிக்கே, [4]"பசுக்களை மேய்க்கைக்கு நினைக்கத் தகுதி இல்லாத இடங்களிலே இவற்றின் வயிறுகளை நிறைத்துக்கொடு போகையினாலே, மேலே கூறிய அகடிதகடநா சாமர்த்தியம் போலே இதுவும் ஓர் ஆச்சரியம் சொல்லுகிறதாகவுமாம். [5]**'வல்லாய்'** என்றதனால், உன்னை

---

1. "வேலினேர் தடம் கண்ணினார்...வல்லாய்" என்பதற்கு இரண்டு கருத்து அருளிச்செய்கிறார். முதலது, தாய்தந்தையர்களது வார்த்தைகளைக் கேட்கைக்கு ஆனால், மணற்குன்றிலே வந்து பசு மேய்ப்பர்களோ! இது பொய் என்பது. இதனை அருளிச்செய்கிறார் 'உன் வயிற்றையும் நிறைத்து' என்று தொடங்கி.

2. "விளையாடு சூழல்" என்றதனைக் கடாக்ஷித்து, அவர்கள் மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இன்ன இடத்தே' என்று தொடங்கி.

3. மேற்கூறியனவற்றால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'அவர்கள் சொல்லாதனவற்றையும்' என்று தொடங்கி. அவற்றை விவரணம் செய்கிறார் 'கண்ணுக்கு இட' என்று தொடங்கி.

4. பசுக்களை மேய்க்கைக்குச் சம்பாவனை இல்லாத இடங்களிலே இவற்றின் வயிறுகளை நிறைத்துக்கொண்டு போகையினாலே, மேலே கூறிய அகடிதகடநா சாமர்த்தியம் போலே இதுவும் ஒரு ஆச்சரியம் என்று, "வேலின்நேர்" என்றதற்கு இரண்டாவது கருத்து அருளிச்செய்கிறார்'பசுக்களை மேய்க்கைக்கு' என்று தொடங்கி.

5. "வேலின் நேர்" என்றதற்கு அருளிச்செய்த இருவகைக் கருத்துக்களுள் முதல் கருத்துக்குச் சேர "வல்லாய்" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் '"வல்லாய்" என்றதனால்' என்று தொடங்கி. என்றது, ஆகையாலே, எங்களோடும் சேரலாம் என்றபடி. இரண்டாவது கருத்துக்குச் சேர "வல்லாய்" என்பதற்கு, அகடிதகடநா சாமர்த்தியமுடையவன் என்று பொருள் கொள்க.

யாரேனும் ஒன்றிலே நியமித்தாலும் நீ நினைத்தது செய்து தலைக்கட்ட வல்லாய் ஒருவன் என்பதனைத் தெரிவித்தபடி.

[1]இவர்கள், நாம் சொன்ன மர்மம் புத்திபண்ணுதே, 'நம்மு டைய சாமர்த்தியம் தோற்றச் சொல்லாநின்றார்கள்' என்று, தன் மேன்மை தோற்றச் சில சொல்லப் புக்கான். 'இவன் அழியும்படி நெடும்போது சிலவார்த்தை சொன்னோம்; இவ னும் சில சொல்லக் கடவன்' என்று இருந்தார்கள். [2]"இதீவ- மேலே நெடும்போது சில பாசுரமிட்டுச் சொல்லிக்கொடு போந் தான்; பிரணயதாரையில் ஓடுமது இருடிகளாயிருப்பார்க்கு நிலம்அன்றே? இப் புடைகளிலே என்கிறுன். தேவீ - வல் லபைகளுடைய பரிமாற்றம் கடக்க நிற்பார்க்குத் தெரியாதே அன்றே. வசனம் மஹார்த்தம் - கடக்க நிற்பார்க்கே அன்று; தேசிகரானவர் தங்களுக்கும் தெரியாதிருக்கை. தம் வாநரேந் திரம் - [3]இவனோடு ஒக்கக்கடவார் ஒருவரும் இலர், சேஷத்து வத்திற்கு முடிசூட்டப்பட்டார் மஹாராஜரேயாகிலும், பாரதந் திரியத்தின் எல்லையிலே நின்றுன் இவன் என்கை. இவ்வள விலே இவள் முகம் பார்த்து வார்த்தை சொல்லப் பெற்றிலர் அன்றே அவர். மதுரார்த்தம் - நிலம்அன்று என்னுக் கை

---

1. இரண்டாவது பொருளுக்குச் சேர, மேலுக்கு அவதாரிகை அருளிச் செய்கிறுர் 'இவர்கள்' என்று தொடங்கி. முதற் பொருளுக்குச் சேர அவ தாரிகை அருளிச்செய்கிறுர் 'இவன் அழியும்படி' என்று தொடங்கி. 'இவன் அழியும்படி' என்றது, இவன் வேறு விடை சொல்ல முடியாதவனுய் என்றபடி.

2. இதற்குத் திருஷ்டாந்தமும், அந்தத் திருஷ்டாந்தச் சுலோகத்திற் குப் பொருளும் அருளிச்செய்கிறுர் 'இதீவ' என்று தொடங்கி.

" இதீவ தேவீ வசநம் மஹார்த்தம்
தம்வாநரேந்த்ரம் மதுரார்த்தம் உக்த்வா
ஶ்ரோதும் புநஸ் தஸ்ய வசோபிராமம்
ராமார்த்தயுக்தம் விரராம ராமா"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 31.

தேசிகர் - பெருமாள்; ஸ்ரீராமபிரான்.

3. "வானரேந்த்ரம்" என்னுமல், "தம் வாநரேந்த்ரம்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறுர் 'இவனோடு ஒக்க' என்று தொடங்கி. பெரு மாளுக்கு அண்மையிலிருப்பவன் என்னுமது கொண்டேயன்றே, 'இவனோடு ஒக்கக்கடவார் ஒருவரும் இலர்' என்றது, இது, சுக்கிரீவனுக்கும் ஒவ்வாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'சேஷத்துவத்திற்கு' என்று தொடங்கி. அது எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'இவ்வளவிலே' என்று தொடங்கி, 'அவர்' என்றது, சுக்கிரீவ மஹாராஜரை,

வாங்க ஒண்ணுதபடி இருக்கை. உக்த்வா - அவனும் [1] அவன் உடையவர்களும் வாழும்படி வார்த்தை சொன்னுள். ஸ்ரோதும் புநஸ் தஸ்ய வசோபிராமம்- [2]**'அழிந்தாரை ஆக்கவல்லன்'** என்னுமிடம் கண்டாள்; தான் அழித்ததலே உண்டாம்படிவார்த்தை சொல்லவல்லமை கேட்கவேணும் என்று இருந்தாள். ராமார்த்தயுக்தம்-இராமபிரானுகிற பிரயோஜனத்தோடு கூடியது; தன் காரியம் செய்து தலைக்கட்ட வல்லான் ஒருத்தன். விரராம-[3]நெடும்போது தான் வார்த்தை சொல்லுகையினுலும், ஸ்வாமி வார்த்தை சொல்லும்போது மேலிட்டு வார்த்தை சொல்ல ஒண்ணுமையினுலும் பேசாதே இருந்து அவனுக்கு இடம்கொடுத்தாள். ராமா"-[4]இவ்விட்டு நீட்டுகைஒழியவார்த்தை சொல்லாதே இருக்கிறபோதை அழகை அவர்தாம் காணப் பெற்றிலோம். இவனும் அடர்த்து வார்த்தைசொன்னுன்.

எம்மை நீ கழறேலே - வாராய்! நோவுபடுத்தி நலிந்தார் முடிக்கவும் தேடுவர்களோ? எம்மை- உன்னைப் பிரிந்து ஆற்ருமல் நோவுபடுகிற எங்களை. நீ - ஒருகாலமும் பிரியாத நீ. என்றது, பிரிவால் வரும் நோவு இன்றிக்கே இருக்கிற நீ என்றபடி.

---

1. 'அவனுடையவர்களும்' என்றது, திருவடியும், திருவடியை யுடைய பெருமாள் மஹாராஜர் தொடக்கமானவர்களும் என்றபடி.

2. பிராட்டி, தான் பெருமாளைப் பிரணயரோஷத்தாலே அழித்த வார்த்தைக்கு இவன் சமாதானம் செய்யவல்லவன் என்கிற இது அறிந்தபடி எங்ஙனே? என்ன, 'அழிந்தாரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிருர். என்றது, முடியப்புக்க தன்னை உண்டாக்குகையாலே, 'அழிந்தாரை ஆக்கவல்லவன்' என்னுமிடம் கண்டாள் என்றபடி. 'தான் அழித்த தலை' என்ற சொற்றொடருக்கு முன்னே, 'இப்படியாகையாலே' என்றதனைக் கொணர்ந்து கூட்டிப் பொருள் காண்க. 'தான் அழித்த தலை' என்றது, 'அருள் அற்றவர், தன் காரியத்திலே நோக்குள்ளவர்' என்று அழித்த பெருமாளை என்றபடி. உண்டாம்படி வார்த்தை சொல்லுகையாவது, அவர் குற்றம் அற்றவராம்படி வார்த்தை சொல்லுதல்.

3. பிராட்டி தான் பேசாதே வறிதே இருந்ததற்குப் பயனை அருளிச் செய்கிருர் 'நெடும்போது' என்று தொடங்கி. 'தான்' என்றது, திருவடியினை. ஸ்வாமிவார்த்தை - ஸ்வாமியினுடைய வார்த்தை.

4. 'இவ்விட்டு நீட்டுகை ஒழிய' என்றது, பிராட்டி வார்த்தை சொல்லுகிறபோதை அழகினைத் திருவடி சொல்லக் கேட்கை அன்றிக்கே என்றபடி.

5. 'இவனும் அடர்த்து வார்த்தை சொன்னுன்' என்னுமிதனை, 'இவனும் சில சொல்லக்கடவன்' என்று மேலே கூறிய வாக்கியத்தோடு சேர்த்துப் பொருள் முடிவு காண்க.

கழறேலே - [1] விசாய்ந்து வார்த்தை சொல்லாதேகொள். என்றது, நீ இங்ஙன் மேலிட்டு வார்த்தை சொல்லப்பெறாய் காண் என்கிறார்கள் என்றபடி. [2] நீயும் நாங்களுமானால் எங்களை நீ அடர்த்து வார்த்தை சொல்ல என்ன சம்பந்தம் உண்டு? சேதநரைப்போலே வந்து வார்த்தை சொல்லுவதே! அதிலே வைத்து மிகைத்து வார்த்தை சொல்லுவதே. ஆற்றாமைக்கு உதவினார்க்கு அன்றோ வாய் உள்ளது! (4)

568.

கழறேல் நம்பி! உன் கைதவம் மண்ணும் விண்ணும் [நன்கறி யும்திண் சக்கர
நிழறு தொல்படையாய்! உனக்குஒன்று உணர்த்துவன்நான்
மழறு தேன்மொழி யார்கள் நின்னருள் சூடு வார்மனம் வாடி நிற்கஎம்
குழறு பூவையொடும் கிளியோடும் குழகேலே.

**பொ-ரை:**—நம்பீ! மேலிட்டு வார்த்தை சொல்லாதே; உனது வஞ்சனையை மண்ணுலகமும் விண்ணுலகமும் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறது; திண்மை பொருந்திய பிரகாசத்தையுடைய இயல்பிலே அமைந்த சக்கரப் படையையுடையவனே! நான் உனக்கு ஒன்று உணர்த்துகின்றேன்: இளந்தேன் போன்ற சொற்களைப் பேசுகின்றவர்களாய் நின்னருளைப் பெற்றவர்களான பெண்கள் மனம் வாடி நிற்க, நீ இங்கே நின்றுகொண்டு, எங்களுடைய குழறுகின்ற பூவையோடும் கிளியோடும் சேர்ந்து விளையாடாதே என்கிறாள்.

**வி - கு:**—நின்னருள் சூடுவாராகிய மழறு தேன்மொழியார்கள் என்க. மழறுதல் - மென்மையவாதல். குழறுதல் - தெளிவில்லாமல் பேசுதல். நிழறுதல் - ஒளிவிடுதல்.

---

1. விசாய்ந்து - மேலிட்டு. மேலிட்டு வார்த்தை சொல்லலாகாதோ? என்ன, குற்றத்தையுடைய உனக்கு அதற்குத் தகுதி இல்லைகாண் என்கிறார்கள் 'என்றது' என்று தொடங்கி.

2. "எம்மை நீ" என்ற சொற்களையும் கூட்டிக்கொண்டு, மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'நீயும் நாங்களும்' என்று தொடங்கி. 'நீயும் நாங்களும்' என்றது, குற்றத்தையுடைய நீயும், துக்கத்தை அநுபவிக்கின்ற நாங்களும் என்றபடி. 'சேதநரைப்போலே' என்றது, அறிவுடையவர்களைப்போலே எங்களை எண்ணி என்றபடி.

ஈடு :—ஐந்தாம்பாட்டு. [1]'அன்புள்ளவர்களுக்குக் குற்றத்தைக் குணமாகக் கொள்ளவுமாம்; அன்பில்லாதவர்களுக்குக் குணந்தன்னையே குற்றமாகக் கொள்ளவுமாம்; விஷயத்துக்குத் தகுதியாகஅன்றோ குணதோஷங்கள் இருப்பன; [2]ஆகையாலே, நான் சொன்னவைஎல்லாம் இப்போது இத்தலைக்குக் குறையாய்த் தோற்றும்அன்றோ; ஆனாலும், மத்தியஸ்த்தர் சொன்னதன்றோ அர்த்தமாகத் தலைக்கட்டுவது' என்றான்.

கழறேல் நம்பி - [3]அது முன்னம் செய்தபடி செய்ய: நீர் தாம் முதன்மை கொண்டாடி மேலிட்டு வார்த்தைசொல்லாதே கொள்ளும் எங்களை. 'நம்பி' என்றதனால், பிரபாவம் கொண்டு விருப்பத்தைச் சாதிக்க ஒண்ணாதுகாணும் என்பதனைத் தெரிவித்தபடி. [4]'நெஞ்சில் வெறுப்புடையார் சொல்லுமது

---

1. 'அன்புள்ளவர்களுக்கு' என்று தொடங்கும் இங்கு,

வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்
ஒரும் வையத்தி யற்கையன் றோஎனா
வீர வேல்நெடுங் கண்ணி விளம்பினாள். (சிந். 888.)

"காய்வதன்கண், உற்ற குணம்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமும் தோன்றா கெடும்" (அறநெறிச். 23.)

என்னும் பகுதிகள் நினைவிற்கு வருகின்றன.

"உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கறியும்" என்பதற்குத் தகுதியாக 'மத்தியஸ்தர் வேண்டும்' என்று அவன் சொல்லுவதாக அவன் வார்த்தையினின்றும் யூகித்து, அதற்கு வேறு நடுவணரைத் தேட வேண்டுமோ? அன்புடையவர்களான நாங்கள் சொன்னது போதியதாகாதோ? என்று சொல்லுவர்களாக எண்ணி, 'நீங்கள் சொன்னது எனக்கு நம்பத் தகுந்ததாய் இராது' என்கைக்கு உறுப்பான காரணங்களைப் பல வார்த்தைகளாலே காட்டா நின்றுகொண்டு, இப்படி ஆகையாலே நடுவணர் சொன்னதே அர்த்தமாவது என்கிறான் என்று அருளிச்செய்கிறார் 'அன்புள்ளவர்களுக்கு' என்று தொடங்கி.

2. 'ஆகையாலே' என்றது, உலகவழக்கம் அதுவாகையாலே என்றபடி. 'குறையாய்த் தோற்றுமன்றோ' என்றது, 'பொருத்தம் இல்லாத காரியங்களைச் செய்தேன்' என்றும், 'பொய்யை மெய்யாக விரித்துப் பேசினேன்' என்றும், இவ்வழியாலே குறையாகத்தோற்றும் அன்றோ என்றபடி. 'ஆனாலும்' என்றது, நீங்கள் சொன்ன வார்த்தை நம்பத் தகுந்ததானாலும் என்றபடி.

3. 'அது முன்னம் செய்தபடி செய்ய' என்றது, நடுநிலையாளரைக் கொண்டு விருப்பத்தை முடித்துக் கொள்ளுகிறபோது முடித்துக் கொள்ளுகிறோம்; நீ எங்களை மேலிட்டு வார்த்தை சொல்லாதேகொள் என்றபடி. அதுமுன்னம் - நடுநிலையாளர் கூறியது. முதன்மை - பரத்துவம்.

4. "உன்கைதவம் மண்ணும் விண்ணும் நன்கறியும்" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'நெஞ்சில் வெறுப்புடையார்' என்று தொடங்கி.

வார்த்தை அன்று; 'நான் வஞ்சகன்' என்பதற்கு உங்களை ஒழியச் சான்று வேறு உண்டோ? என்ன, உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கு அறியும் - உன் வஞ்சனை எங்கள் அளவன்று: எல்லாவுலகங்களிலும் பிரசித்தங்காண். [1]"வாயும் திரையுகளும்" என்ற திருவாய்மொழியின் வாசனையாலே "தம்மைப்போலே உலகமெல்லாம் நினைத்திருக்கும்" என்று இருக்கிறார். [2] சம்பந்தம் பொதுவானால் அங்ஙன் நினைத்திருக்க ஒரு தட்டு இல்லைஅன்றோ. [3] அன்றிக்கே, சேஷி ஒருவன் ஆனால் சேஷமான பொருள்கள் எல்லாம் ஒருமிடறாய் இருக்கும் அன்றோ; ஒருவனுக்குப் பல அடிமை உண்டானால் தங்களுக்குள் எல்லாரும் திருதசங்கேதர்களாய் ஒத்திருப்பர்கள் அன்றோ. மண்ணிலுள்ளாரும் விண்ணிலுள்ளாரும் அழகிதாக அறிவர்கள்.[4]விசேஷஜ்ஞரோடு விசேஷஜ்ஞர் அல்லாதாரோடு வாசிஅற அறிவர்கள். [5]'இவ் விடையாட்டம் இரண்டும் அறியாதாரையோ சான்றாகச் சொல்லுவது? அறிவினால் குறையில்லாத அகல் ஞாலம் அன்றோ இது!' என்றான். **'விண்ணும் நன்குஅறியும்'** என்கிறார்கள். 'ஆனாலும், அவர்களிலே ஒருவரைச் சொல்லச் சொல்லுங்கோள் பொய் என்று' என்

1. இவள் 'வஞ்சகன்' என்று சொன்னால், எல்லாரும் அப்படிச் சொல்லுவர்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வாயும் திரை' என்று தொடங்கி.

2. எல்லாரும் அப்படி நினைக்கக் கூடுமோ? என்ன, 'சம்பந்தம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. நித்தியவிபூதியும் லீலாவிபூதியும் தம் பக்கத்திலே நிற்கையாலே 'வஞ்சகன்' என்று சொல்லுவர்கள் என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. அதனையே விவரணம் செய்கிறார் 'ஒருவனுக்கு' என்று தொடங்கி. திருதசங்கேதர் - ஒரு காரியத்தில் ஒற்றுமை உணர்ச்சியுள்ளவர்கள்.

4. 'மண்ணிலுள்ளாரும் விண்ணிலுள்ளாரும்' என்றதனை விவரணம் செய்கிறார் 'விசேஷஜ்ஞரோடு' என்று தொடங்கி.

5. "விண்" என்பதற்கு, தெய்வலோகம் என்று பொருள் அருளிச்செய்தார் மேல். அதற்கே, பரமபதம் என்று பொருள் அருளிச்செய்கிறார் 'இவ்விடையாட்டம்' என்று தொடங்கி. இடையாட்டம் - செயல். 'அறிவினாற் குறையில்லா' என்றது, திருவாய். 4. 8: 6. விண்ணும் - பரமபதமும். "சுரர் அறிவரு நிலை விண்முதல்" (திருவாய். 1. 1: 8.) என்ற திருப்பாசுரத்திற்கு எழுதியுள்ள வியாக்கியானத்தை ஈண்டு நினைவு கூர்தல் தகும்.

றான்; ஆனால், உன்னிடத்தில் அன்பு வைத்திருக்கும் அவர்களிலே [1]ஏற்றுகிறோம் கைமேலே என்கிறார்கள் மேல்:

திண் சக்கர நிழறு தொல் படையாய் - [2] குற்றத்தையே குணமாகக் கொள்ளுவாரைக் கேள்! உன் வஞ்சனைகட்குப் பெருநிலை நிற்பார்க்குஅன்றோ தெரிவது! [3] உன் நினைவு அறிந்து கையிலே வந்திருப்பது, "**பகலை இரவு ஆக்கவல்லையோ?**" என்று கேட்டால் "**ஓம்**" என்று கொண்டு சூரியனை மறைப்பது; இப்படியேஅன்றோ அவனுடைய செயல். அப்பொய்யில் [4]அவனைப் பேதிக்கிலும் இவனைப் பேதிக்க ஒண்ணாதாயிருத்தலின் '**திண்சக்கரம்**' என்கிறார்கள். [5]சுதந்திரனுகையாலே காரியத்துக்குத் தகுதியாக ஏட்டிட்டுக் கொள்ளுவான் அவன்; இவனுக்கு அது இல்லை அன்றோ. பொய்யனுயிருக்கச் செய்தே மெய்யனுனல் பிறக்கும் காரியத்தைப் பிறப்பித்துக் கொடுக்கவற்ற தாதலின் '**நிழறு படை**' என்கிறார்கள். நிழறுகையாவது, [6] நடத்துகை. அன்றிக்கே, நிழறுகையாவது, நிறம்கொடுக்கையாய், பொய்யனுயிருக்கச் செய்தே, மெய்யனுல் பிறப்பிக்கும் காரியத்தைப் பிறப்பித்துக் கொடுத்தலையுடைய என்னுதல். [7]இப்படிகட்குப் பழையனுய்ப் போருமவனுதலின் '**தொல் படை**' என்கிறார்கள். இவர்கள் இப்படிச் சொன்னவாறே"நம்பக்கலிலே சிலர் இப்படி நமக்கு உண்டா

1. 'ஏற்றுகிறோம் கைமேலே' என்பதற்கு, கையில் திருவாழியைக் கொண்டு அறிவிப்போம் என்பது நேர்பொருள். பிரத்தியக்ஷமாக இசைவிக்கிறோம் என்பது வேறு ஒரு பொருள்.

2. 'குற்றத்தையே குணமாகக் கொள்ளுவாரைக் கேள்' என்றது, குற்றத்தை உண்மையாகவே அறிந்திருந்தும், நாட்டார் 'குற்றம்' என்று நினையாமல் 'குணம்' என்று கொள்ளும்படி மறைக்குமவர்களைக் கேள் என்றபடி. அதனை விவரணம் செய்கிறார் 'உன் வஞ்சனைகட்கு' என்று தொடங்கி. என்றது, உன் வஞ்சனைகட்குத் துணைபுரிவார்கட்கு அன்றோ உன் குற்றத்தை மறைக்கும் வகை தெரிவது என்றபடி. பெருநிலை நிற்பார் - உதவிபுரிகின்றவர்கள்.

3. உதவிபுரிதலைக் காட்டுகிறார் 'உன் நினைவு அறிந்து' என்று தொடங்கி. 'கையிலே வந்திருப்பது' என்றது, வீடுமனைக் கொல்லுதற்குக் கையிலே வந்திருப்பது என்றபடி.

4. அவன் - கண்ணபிரான். இவன் - சக்கரத்தாழ்வான்.

5. பேதிக்க ஒண்ணுமைக்குக் காரணம் அருளிச்செய்கிறார் 'சுதந்திரனுகையாலே' என்று தொடங்கி. 'அது இல்லை அன்றோ' என்றது, பாதந்திரனுகையாலே பேதிக்கப் போகாது என்றபடி.

6. நடத்துகை - உதவிபுரிதல். "நிழறு" என்பதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

7. இப்படிகட்கு - இத்தகைய செயல்களுக்கு.

வதே!"என்று, சொல்லலாவது காணமல் கவிழ்தலையிட்டான். உனக்கு ஒன்று உணர்த்துவன் நான் - வாராய்! நீ சொலவு அற்று இருக்கவேண்டா;உனக்கு நாங்கள்[1] நல்லது ஒரு ஹிதம் சொல்லுகிறோம் வா என்றார்கள். இது செவிகொடுத்துக் கேட்டானாகில், இதற்குச் சொல்லலாவது [2]ஒரு மறுமாற்றம் இல்லை; தனக்கு மேல் வார்த்தை சொல்லுகைக்கு ஒரு போக்கடியும் இல்லை.

[3] இவை எல்லாம் கிடக்கச்செய்தே பேசாதேபுகா 'இது ஒரு பேச்சின் இனிமை இருந்தபடி என்?' என்றான். மழறு தேன்மொழியார்கள் - பாவியேன், நீ யாருடைய பேச்சுக்களை யாருடைய பேச்சுக்கள் என்று மயங்குகிறாய்! மழறு தேன் - [4]மழலைத் தேன். அன்றிக்கே, கலங்கின தேன்போலே இனிய பேச்சுக்களையுடையராயிருப்பவர்கள் என்னுதல். [5]இவன் சந்நிதி மாறுமையாலே கலக்கமும் மாறுதே இருக்குமேயன்றோ. [6]'அவைஎல்லாம் இங்கே யன்றோ' என்பானே அவன். மொழியார்கள் - எத்தனைபேர் உனக்கு? நின் அருள் சூடுவார் - வேறு ஒருவருடைய பேச்சுக்களைக் கேட்டாலும் தங்கள் பேச்சுக்கள் என்று மயங்கும்படி செய்யவல்லவர்கள். என்றது, [7]ஒருவார்த்

---

1. 'நல்லது ஒரு ஹிதம்' என்றது, வஞ்சனைகளைச் செய்யாமல் அங்கே போ என்னுதல். 'வஞ்சனைகளைச் செய்தேன்' என்று சொல்லிவிடு என்னுதல்.

2. 'மறு மாற்றம் இல்லை' என்றது, திருவாழியாலே சூரியனை மறைக்கையாலே, 'வஞ்சனையைச் செய்யவில்லை' என்று சொல்லலாவது ஒரு வார்த்தை இல்லை என்றபடி. 'போக்கடியும் இல்லை' என்றது, தான் அசத்தியவாதி என்னுமதற்கு மறுமாற்றம் இல்லாதபின்பு, இவர்களோடு இட்டீடு கொண்டு வார்த்தை சொல்லுகைக்கு அவகாசம் இல்லை என்றபடி.

3. 'இவையெல்லாம் கிடக்கச் செய்தே' என்றது, "உணர்த்துவன் நான்" என்றால், 'அது எது?' என்று கேட்டல், மறுமாற்றம் சொல்லுதல் ஆகிற இவையெல்லாம் கிடக்க என்றபடி. பேசாதேபுகா - பேசாதே இருந்து.

4. மழலைத்தேன் - இளம்தேன். "மழறுதேன்" என்பதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. மழறு - கலங்கின.

5. கலங்குகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இவன் சந்நிதி' என்று தொடங்கி.

6. "மொழியார்கள்" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அவையெல்லாம்' என்று தொடங்கி.

7. 'ஒரு வார்த்தையாலே' என்றது, "மாசுசஃ - வருந்தாதே" என்ற வார்த்தையாலே என்றபடி.

"நஷ்டோ மோஹஃ ஸ்மிருதிஃ லப்தா த்வத் ப்ரஸாதாத் மயாச்யுத
ஸ்திதோஸ்மி கதஸந்தேஹஃ கரிஷ்யே வசநம் தவ"

என்பது, ஸ்ரீ கீதை. 18 : 73.

தையாலே "மனம் நிலைபெற்றது, சந்தேகங்களும் நீங்கின" என்னும்படி வார்த்தை சொல்ல வல்ல உன்னை ஒருவார்த்தையாலே கலங்கப் பண்ணுமவர்கள் என்றபடி. 'அதற்கு என்?' என்றான். 'அவர்கள் [1]எங்களைப்போல் அல்லர்காண்; நீ பிரயோஜனம் இல்லாமல் இங்கே நிற்கச்செய்தேயும், இதனை அறிந்துவைத்தும் கணநேரமும் பிரிவு பொறுக்கமாட்டாமையாலே அவர்கள் மனங்கள் வாடுங்காண்! [2]கொம்பை இழந்த தளிர்போலேகாண் அவர்கள் நெஞ்சுகள் வாடும்படி. 'கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பு அழியப் புகுந்து ஒருநாள், தங்குமேல் என் ஆவி தங்கும்' என்று இருக்குமவர்கள் அலரோ அவர்கள்; அவ்வளவில் நீ உதவப் பெறாமையாலே போர நோவுபடுவர்கள்; அதுகண்டால், நீ பொறுக்க வல்லையோ' என்று சொல்லிப் பேசாதே இருந்தார்கள்.

'உங்கள் பேச்சைக் காட்டிலும் எனக்குத் தாரகம் இவற்றின் பேச்சுக்கள் அன்றோ!' என்று அவர்களை விட்டுப் பூவையையும் கிளியையும் கொண்டாடப் புக்கான்; [3]சிலரை ஆதரிக்கையாவது, அவர்கள் உடைமையை ஆதரிக்கை அன்றோ, அவற்றை ஆதரித்து வார்த்தை கொள்ளப் புக்கவாறே, [4]'வாராய்! அவைதாம் யார் உடைமைகள் என்றிருக்கின்றாய்? அவை நீ நினைக்கிறவர்களுடைய உடைமைகள் அல்லகாண்! எம் குழறு பூவையொடும் கிளியோடும் குழகேலே - [5]அவை உனக்கு வார்த்தை சொல்லுகிறன அல்லகாண்! அவற்றிற்கு

---

1. 'எங்களைப்போல் அல்லர்காண்' என்றது, பலநாள் பிரிந்து நோவுபட்டு, ஜீவிக்கவும் மாட்டாதே முடியவும் மாட்டாதே தரித்திருக்கிற எங்களைப்போல் அல்லர்காண் என்றபடி. இதனை விவரணம் செய்கிறார் 'நீ பிரயோஜனம்' என்று தொடங்கி.

2. "வாடிநிற்க" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கொம்பை இழந்த' என்று தொடங்கி. பிரிவு பொறுக்காமல் அங்ஙனம் வாடுகைக்குக் காரணம் ஏது? என்ன, 'கொங்கை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். இது, நாய்ச்சியார் திரு. 8 : 7.

3. இவர்களை விட்டுப் பூவை கிளிகளை ஆதரிப்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'சிலரை ஆதரிக்கையாவது' என்று தொடங்கி.

4. "எம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வாராய்' என்று தொடங்கி.

5. "குழறுபூவை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவை உனக்கு' என்று தொடங்கி,

அது இயல்புகாண்! குழகேலே - [1]நாங்கள் வேறாக வார்த்தை சொல்லச்செய்தேயும் கண்டாயே நீ வேறு கதி இல்லாமை தோற்ற வார்த்தை சொல்லுகிறபடி; அப்படியே இவற்றின் பேச்சும் வேறு பொருள்காண். குழறுதல் - எழுத்துக்கள் தோன்றாதவாறு பேசுதல். குழகுதல் - லீலாரசம் கொண்டாடுகை. (5)

569.

குழகி எங்கள் குழமணன் கொண்டு கோயின்மை செய்து
[கன்மமொன் றில்லை
பழகியாம் இருப்போம் பரமேஇத் திருவருள்கள் ?
அழகி யார்இவ் வுலகு மூன்றுக்கும் தேவி மைதகு வார்ப லருளர்
கழகம்ஏறேல் நம்பீ! உனக்கும்இளை தேகன்மமே.

**பொ - ரை :**—வசீகரித்தற்குரிய செயலைச் செய்து எங்களுடைய குழமணனை எடுத்துக்கொண்டு மேன்மை தோன்றப் பேசுவதனால் ஒரு பயனும் இல்லை; நாங்கள் முன்னரே இவற்றில் பழகி இருக்கின்றோம்; நீ செய்கின்ற இந்தத் திருவருள்கள் எங்கள் அளவேயோ! இந்த மூன்று உலகங்கட்கும் உம்மோடு ஒக்க முடிசூடத் தக்கவர்களாகிய அழகினையுடையவர்கள் பலர் உளர்; நம்பீ! எங்கள் கூட்டத்தில் ஏறாதே; உனக்கும் இது இளமைப் பருவத்திற்கு உரிய செயலேயாம்.

**வி - கு :**—இவ்வுலகு மூன்றுக்கும் தேவிமை தருவார் அழகியார் பலர் உளர் என்க. குழகுதல் - வசீகரித்தலுக்குரிய செயலைச் செய்தல். குழமணன் - மரப்பாவை. கோயின்மை - பெருமை. அல்லது, செருக்கு. கழகம் - கூட்டம். இளைது - இளமைப் பருவத்திற்குரியது.

**ஈடு :**—ஆறாம்பாட்டு. [2]தங்கள் மனங்களிலே ஓடுகின்றவற்றைத் தெரியாமல் மறைத்துக்கொண்டு அணுக முடியாதவர்களாயிருக்கிற இந்தப்பிராட்டியையும் தோழிமாரையும் கண்டு, அவன் தன் முகமுத்திரைகளாலும், கருத்துடைய வார்த்தைகளாலும், அதனைத் தொடர்ந்து வருகின்ற இன்பச்செயல்களாலுமாக இவர்கள் எண்ணங்களைக் குலைத்து,இனி இவர்

---

1. இயல்பு ஆன படியைக் காட்டுகிறார் 'நாங்கள்' என்று தொடங்கி. வேறாக - உறவு அற.

2. "குழகி எங்கள் குழமணன் கொண்டு" என்பதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார். "குழகி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் தன் முகமுத்திரைகளாலும்' என்று தொடங்கி. அதனை - அந்த மனக்கருத்தை. வாய்மாளப்பண்ணி - ஈடுபடுத்தி

கள், தான் செய்தவை எல்லாம் 'வேண்டா' என்னமாட்டாதவர்கள் என்னும்படி வாய்மாளப் பண்ணி, அவ்வளவிலே சென்று இவர்களுடைய விளையாட்டுக் கருவியாகிய குழமணனை எடுத்துக்கொண்டான்.

'குழகி எங்கள் குழமணன் கொண்டு' என்கிறார்கள். [1]குழகுகையாவது, யௌவன புருஷர்களாயிருக்குமவர்கள், பெண்கள், தங்களுக்கு வசப்பட்டவர் அல்லாதவர்களாயிருப்பார்களேயானால் அவர்களைச் சேரவிட்டுக் கொள்ளுகைக்காகச் செய்யும் செயல்கள். [2]மேன்மையாலேயாகவுமாம், கீழ்மையாலேயாகவுமாம்; ஏதேனுமாக இவ்வளவு கிட்டி நின்று அவர்கள் நினைவைக் குலைத்துக் குழமணனை எடுத்துக் கொள்ளும்படியாகக் கைப்புகுந்தான் அன்றே. '**எங்கள் குழமணன் கொண்டு**' என்றதனால், அதுதான் யாருடையது என்று நீ இருக்கிறாய்? அது நீ நினைக்கிறவர்களுடையது அன்றுகாண்; அது எங்களுடையது; உனக்கு இதனால் ஒருகாரியம் இல்லை என்பதனைத் தெரிவிக்கின்றார்கள். [3]"'**எங்களது**' என்றவாறே பொகட்டுப்போம்" என்று சொன்னார்கள்; அதுதானே அவனுக்குப் பற்றுகைக்கு உடலாயிற்று. 'எங்கள் அநுமதி வேண்டாவோ உனக்கு?' என்ன, 'என்னைத் தடைசெய்வார் உளரோ! நான்செய்வது செய்யலாமித்தனையன்றோ?' என்ன, கோயின்மை செய்து கன்மம் ஒன்று இல்லை - நீ செய்கிற முறைகேடான செயலால் உனக்கு ஒரு பலம் இல்லை. '**கன்மம்**' என்றது, கர்மத்தினது பலனை. [4]ஆராய்ச்சி இல்லாத இடத்தே செய்யுமவற்றைச் செய்யாதேகொள்ளாய். அவை

1. "குழகி" என்பது, 'முக முத்திரைகளாலும்' என்று தொடங்கி மேலே கூறியவற்றையெல்லாம் காட்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'குழகுகையாவது' என்று தொடங்கி. "குழகி" என்பது, ஒரு பொதுவான சொல் ஆகையாலே மேலே கூறியவற்றையெல்லாம் காட்டும் என்பது.

2. "கோயின்மைசெய்து" என்கிற பதங்களாலே, மேன்மை தோன்றியிருக்க, முகமுத்திரை முதலாயினவற்றால் குழமணன் கொள்ளுகிறபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேன்மையாலேயாகவுமாம்' என்று தொடங்கி.

3. "கொண்டு" என்ற பதத்துக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'எங்களது' என்று தொடங்கி.

4. "கோயின்மைசெய்து" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஆராய்ச்சியில்லாத' என்று தொடங்கி. 'ஆராய்ச்சியில்லாத இடத்தே' என்றது, அராஜகதேசத்திலே என்றபடி. "கன்மம் ஒன்று இல்லை" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'அவை செய்தாலும்' என்று தொடங்கி.

செய்தாலும் ஆமே அன்றே உனக்கு ஒருபிரயோஜனம் உள தாகில். [1] கோயின்மை செய்கையாகிறது, இவர்கள் இசைவு இன்றிக்கே இருக்க இவர்கள் விளையாட்டுக் கருவிகளை எடுத்துக்கொள்வது, அவர்கள் வேண்ட வேண்டக் கொடாதொழிவதாய் மிறுக்குப்பண்ணுகை. நீ போகிற இடத்துக்கு இதனைக் கொண்டு போக ஒண்ணுது; உனக்கு இதுதான் வேண்டுவதன்று: இனி எங்களுக்கோ விருப்பமில்லாத காரியம்; ஆன பின்பு, இச்செயலால் என்ன பிரயோஜனம் உண்டு என்பார் '**ஒன்று இல்லை**' என்கிருர்கள். என்றது, இது கொண்டு போனல் தங்களது அல்லாமையாலே அவர்கள் முகம் பாரார்களே; நீ ஆதரித்தவர்களுடையது அல்லாமையாலே உனக்கு வேண்டுவதன்று; எங்கள் இசைவோடே கொடுபோகாமையாலே எங்களுக்கும் பிரியமன்றே! ஆனபின்னர், இதனல் வருவது ஒரு பேறு இல்லைகாண் என்கிருர்கள் என்றபடி.

[2] 'அது கிடக்க; நான் முன்னம் உங்களோடு ஒத்த கருத்துடையன்; எனக்கும் ஒரு பிரயோஜனம் இல்லை, இதனைக் கருவியாகக் கொண்டு முடித்துக் கொள்ள வேண்டுவது ஒரு பொருளைக் கண்டு வைத்திலேன்; இதுதானே அன்றே எனக்குப் பிரயோஜனம்; பிரயோஜனத்துக்கு ஒரு பிரயோஜனம் உண்டோ?' என்றுன். [3] அங்ஙனே ஆன அன்று அநவஸ்தா தோஷம் வரத் தொடங்குமன்றே. யாம் பழகி இருப்போம் - இப் பொய்களுக்குப் பழையோம் அல்லேமோ! [4] எங்களுக்கு அன்றுகாண் நீ சொல்லுவது! நீ சொல்லும் பொய்யெல்லாம் '**மெய்**' என்று இருப்பார்க்குச் சொல்லாய் என்றுர்கள். அவனும், 'இத் தலையை ஒழிய எனக்குச் செல்லாது' என்னுமிடம்

---

1. "கோயின்மைசெய்து" என்று இவர்கள் சொல்லுகைக்கு, அவன் செய்த கோயின்மை யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'கோயின்மை செய்கையாகிறது' என்று தொடங்கி.

2. மேலிற் பதத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிருர் 'அது கிடக்க' என்று தொடங்கி. 'அது கிடக்க' என்றது, எனக்கு உங்கள் பக்கல் அன்பு இல்லை என்றது கிடக்க என்றபடி.

3. 'அங்ஙனே ஆன அன்று' என்றது, பிரயோஜனத்துக்குப் பிரயோஜனம் கல்பிக்கும் அன்று என்றபடி. அநவஸ்தாதோஷம் - முடிவுபெருமை என்னும் குற்றம்.

4. "பழகி யாம் இருப்போம்" என்கிறவர்களுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிருர் 'எங்களுக்கு அன்று' என்று தொடங்கி.

தோற்றச் சில செயல்களைச் செய்ய, இத் திரு அருள்கள் [1]எம் பரமே - நீ எங்கள் அளவல்லாத ஆசையை வைத்து, குளப் படியிலே கடலை மடுத்தாற் போலே நீ செய்கிறவை எல்லாம் எங்களால் பொறுக்கப் போமோ? நீ செய்கிறவை எல்லாம் பொறுக்கவல்லார் வேறே சிலவர்கள் என்கிறார்கள். 'அவர்கள் யார்?' என்றான்.

[2] அழகியார் இவ்வுலகு மூன்றுக்கும் - "மூன்று உலகங் களையும், அவற்றோடே உலகம் என்ற சொல்லுக்குப் பொரு ளாகவுள்ள சர்வேசுவரனையும் கூட ஒரு தட்டு ஆக்கினால், பிராட்டியினுடைய ஒரு கலா மாத்திரத்திற்கு எடை நிற்கமாட் டாது" என்று கூறும்படியுள்ளவர்கள். [3]'அவர்கள் எங்ஙனே இருப்பர்கள்?' என்றான். தேவிமைதகுவார்-'உனக்குப்பட்டங் கட்டப் போரும்படியாயிருப்பார்' என்ன, [4]'ஆனால், எனக்கு உபேக்ஷிப்பதற்கும் சிலர் வேணுமே?' என்றான். பலர் உளர்- உனக்குப் பொகடுகைக்கும் விஷயம் அங்கே உண்டு என்கிறார் கள். [5] ஒருத்தனுக்கு ஒன்று சுபாவம் ஆனால், அது வேறு ஓர் இடத்தில் போன அளவில் குலையாதே அன்றோ; அப்படியே அங்குள்ளாரையும் பொகடுகை இவனுக்கு இயல்பு என்னு மிடம் தோற்றச் சொல்லுகிறார்கள். [6]'ஓர் அடிப்பாடர் அல்

---

1. பாசுரத்தில் இல்லாத "எம்" என்ற சொல்லைக் கொணர்ந்து கூட்டி "எம்பரமே" என்கிறார்.

2. "அழகியார் இவ்வுலகு மூன்றுக்கும்" என்பதற்கு, மூன்று உலகங் களும் விலையாகப் போரும்படியான அழகியார் என்பது பொருள். அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "மூன்று உலகங்களையும்" என்று தொடங்கி.

"ராஜ்யம் வா த்ரிஷு லோகேஷு ஸீதா வா ஜநகாத்மஜா
த்ரைலோக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத்கலாம்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 14. 'கலாமாத்திரத்திற்கு' என்றது, அழகிலே கலாமாத்திரத்திற்கு என்றபடி.

3. 'அவர்கள் எங்ஙனே இருப்பர்கள்?' என்றது, அவர்கள் நம் முடைய விருப்பத்திற்கு விஷயமாக இருப்பார்களோ? விருப்பமின்மைக்கு விஷயமாக இருப்பார்களோ? என்றபடி.

4. 'ஆனால்' என்றது, அவர்கள் என்னுடைய காதலுக்கு உரியவர்க ளானால் என்றபடி.

5. இவர்களை விரும்பாமல் இருக்கலாமே ஒழிய, அங்கேயுள்ள அவர் களையும் விரும்பாமல் இருப்பானேன்? என்ன, அதற்கு விடை அருளிச்செய் கிறார் 'ஒருத்தனுக்கு' என்று தொடங்கி.

6. "பலர்" என்றதனால் போதரும் பொருளை அருளிச்செய்கிறார் 'ஓர் அடிப்பாடர்' என்று தொடங்கி. என்றது, **விருப்பமின்மைக்கு உரியவர் களும் உளர் என்றபடி.**

லீரே நீர்; பரப்பர் அல்லீரோ! அவர்கள்பக்கல் ஏறப் போம்' என்ன, ‘ஆனால், அங்குப் போகும் வழியும், போனால் செய்யும் படிகளும் எல்லாம் கேட்டுப் போகவேணுமே; [1]இனித்தான், சீடர்களுக்குஅன்றோ ஒன்று சொல்லுவதும்; [2]“சாஷ்டாங்க நமஸ்காரத்தினாலும் செவ்வினின் கேட்பதனாலும் ஆசாரிய சேவையினாலும் உபதேசிப்பார்கள் என்று அறிந்து கொள்” என்பதேஅன்றோ கேட்பார்படி; ஆனபின்பு, நாலடி கிட்ட நின்று கேட்கவேணும்' என்று திரளிலே வந்து புகுரப் புக்கான். கழகம் ஏறேல் நம்பீ-அவர்கள் முன்னம் ஆனார் ஆகிடுக; [3]ஏறிட்டுக் கொள்ளுதல் எங்களுக்குப் பரமோ? நீர் முன்னம் எங்கள் ஓலக்கத்தில் புகுராதே கொள்ளும்.

[4]இவ்விடத்தே **பட்டர்** அருளிச்செய்வது ஒரு வார்த்தை உண்டு. அதாவது, “சமஸ்த கல்யாண குணாத்மகனாய் உபய விபூதியுக்தனாய் ஸர்வாதிகனாய் ஸர்வ நியந்தாவாயிருக்கிற சர்வேசுவரன் நான்கு இடைப்பெண்கள் இருந்த இடத்தே புக்கு அல்லது நிற்கமாட்டாத செல்லாமை விளைய, அவர்கள் ‘நீ இங்குப் புகுராதேகொள்’ என்ன, விலங்கு இட்டாற்போலே போரவும் திரியவும் மாட்டாதே தடுமாறிநின்றான் என்கிற ஸௌசீல்யம் யார் அறிந்து கொண்டாட வியாசர் முதலாயினோர் எழுதி

---

1. தூர இருந்து கேட்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘இனித்தான்’ என்று தொடங்கி.

2. சீடன் ஆனால் அண்மையில் வரவேண்டுமோ? என்ன, ‘சாஷ்டாங்க நமஸ்காரத்தினாலும்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

“தத் வித்தி ப்ரணிபாதேந பரி ப்ரச்நேந ஸேவயா
உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞாநிநஃ தத்வதர்ஶிநஃ”

என்பது, ஸ்ரீ கீதை. 4 : 34.

3. ‘ஏறிட்டுக்கொள்ளுதல் எங்களுக்குப் பரமோ?’ என்றது, இதற்கு முன்பு இல்லாத ஆசார்ய பதத்தை ஏறிட்டுக்கொள்ளுதல் எங்களுக்குப் பரமோ என்னுதல். அன்றிக்கே, போம் வழியும் போனால் செய்யும்படிகளும் சொல்லுமதனை ஏறிட்டுக்கொள்ளுதல் எங்களுக்குப் பரமோ என்னுதல்.

4. இவர்கள், “கழகம் ஏறேல்” என்றவாறே, அவன் செயல் அற்றவனாய் நின்றபடியை அநுசந்தித்துப் பட்டர் ஈடுபட்டபடியைக் காட்டுகிறார் ‘இவ்விடத்தே பட்டர்’ என்று தொடங்கி. சர்வநியந்தா - எல்லாரையும் நியமிக்கிறவன். “ஆய்ச்சியோம்” என்றதனைத் திருவுள்ளம்பற்றி ‘நான்கு இடைப்பெண்கள்’ என்கிறார். ‘வியாசர் முதலாயினோர்’ என்றது, கிருஷ்ணனுடைய கல்யாணகுணங்களில் ஈடுபட்டவர்கள் ஆகையாலே. ‘முதலாயினோர்’ என்றதனால், ஆழ்வார்களைக் கொள்க.

யிட்டு வைத்துப் போனர்களோ?" என்பது. [1] 'எல்லாரையும் நியமிக்கிற சர்வேசுவரன் சிலரால் நியமிக்கலாம்படி எளியனானன்' என்றால், 'இது மெய்' என்று கைக்கொள்ளுவாரைக் காணமுடியாதன்றே. [2] சாஸ்திரங்கள் எல்லாம், நியமிக்கிறவன் நியமிக்கப்படுகிறவர்கள் என்று பாகுபடுத்தி ஒருங்கவிடா நிற்க, [3] அத் தலை இத் தலையாகச் சொல்லுகிறதன்றே இது!

[4] 'சாது கோட்டியுள் கொள்ளப்படுவார்' என்று சொல்லுவது, [5] வைஷ்ணவர்களுடைய திரளிலே ஒருவன் வந்து புகுந்தால் செருக்காலே மலையிட்டு அமுக்கினாற் போலே இருக்கை அன்றிக்கே, நீரும் நீரும் கலந்தாற் போலே இவன் புகுந்தமை தெரியாதபடி இருந்து, அவர்கள் இடம் கொடுத்து அவர்கள் ஏற்றுக்கொள்ள இருத்தல் அன்றே ஒருவனுக்கு நன்மையாவது. இது, இவர்களுக்கே அன்றியே, அவனுக்கும் ஒத்திருக்கிறபடி; [6] "அந்த இராமனும் மற்றவர்களோடுகூட இருந்து அநுபவிக்கவேண்டும் என்னும் விருப்பத்தால் மெதுவாகச் சபையை அடைந்தவனாய்க் குசலவர்களின் கானத்தைக் கேட்பதில்

---

1. 'ஆர் அறிந்து கொண்டாட' என்பான் என்? கொண்டாடுவார் இலரோ? என்ன, 'எல்லாரையும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. சாஸ்திரம் சொன்னால் மெய் என்று கொள்ளலாமே? என்ன, 'சாஸ்திரங்கள் எல்லாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'அத்தலை இத்தலையாக சொல்லுகிறது' என்றது, நியமிக்கிறவன் நியமிக்கப்படுகின்றவர்கள் என்னும் தன்மை மாறாடி, அவன் நியமிக்கப்படுகின்றவனாயும் இவர்கள் நியமிக்கின்றவர்களாகவும் சொல்லப்படுகிறதன்றே என்றபடி.

4. "கழகம் ஏறேல்" என்கையாலே, ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் சேர்தல், அடியார்களுக்கே யன்றி எம்பெருமானுக்கும் உத்தேசியம் என்கிறார் 'சாது கோட்டியுள்' என்று தொடங்கி. 'சாது கோட்டியுள்' என்ற பாசுரப் பகுதி, பெரியாழ்வார் திருமொழி. 3. 6 : 11.

5. பாசுரத்தில் "உட்கொள்ள" என்றிருப்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வைஷ்ணவர்களுடைய' என்று தொடங்கி. 'செருக்காலே' என்றது, வருகின்றவனுடைய செருக்காலே என்றபடி. அவனுக்கும் - எம்பெருமானுக்கும்.

6. அவனுக்கும் ஒத்திருக்குமாற்றைக் காட்டுகிறார் 'அந்த இராமனும்' என்று தொடங்கி.

"ததஃ து தௌ ராமவசஃ ப்ரசோதிதௌ
அகாயதாம் மார்க விதாந ஸம்பதா
ஸ சாபி ராமஃ பரிஷத்கதஃ ஶனைஃ
புபூஷயா ஸக்த மநா பபூவ"

என்பது, ஸ்ரீராமா, பால. 4 ; 31.

மனமுடையவனாய் இருந்தான் என்று மஹருஷி ஆச்சரியப் படுகிறார்" என்பது ஸ்ரீ ராமாயணம்.[1] என்றது, பெருமதிப்ப ராய்ப் பாட்டுக்களை அறிந்து கொண்டாடுகைக்குப் போரும் படி பேரறிவாளரான புலவர்களும் தாமுமாகப் பேரோலக் கம் இருந்து பிள்ளைகளைப் பாடவிட்டுத் தாம் சிம்மாசனத் திலே இருந்தார்; இவர்கள் தாழஇருக்கத் தாம் உயரஇருந்த இடம் தமக்கு விருப்பம் இல்லாமையாலே சிம்மாசனத்தினின் றும் மெள்ள இழிந்து, தெரியாதபடி இவர்கள் நடுவே புகுந் திருந்தார்; அது என்? என்னில், இராஜா எழுந்திருந்தால் ஓலக்கம் எழும்அன்றோ; தாம் எழுந்தவாறே ஓலக்கம் எழும் எனக் கருதி, மெள்ளப் புகுந்திருந்தார் என்றபடி. [2] இங்ஙன் வேண்டுவான் என்? என்னில், "அநுபுபூஷயா - அநுபவிக் கும் இச்சையால்" என்னுதல், "பவிதுமிச்சயா - தாம் உளரா வதற்கு இச்சையாலே" என்னுதல். என்றது, 'இவர்களோடே கூடி இருந்து அநுபவிக்கைக்காக' என்னுதல், 'தாம் உள ராகைக்காக' என்னுதல் என்றபடி.

நம்பீ - உமக்கும் எங்களுக்கும் உள்ள நெடுவாசி பாரீர்! உமக்கு ஒன்று கேட்கவேண்டும்படியாய் இருந்ததோ? அன் றிக்கே, முதலிகளாய் இருக்கிற உமக்கு நாங்கள் இருக்கிற இடத்தே புகுருகை போருமோ? என்கிறார்கள் என்னுதல். "அழகிது! நான் முதலியாகிலும் ஆகிறேன்;[3]பயலியாகிலும் ஆகிறேன்; என்னைத்தான் அறிகை இல்லையோ! 'தீமைசெய் யும் சிரீதரன்' என்றுஅன்றோ என்னைச் சொல்லுவது? ஆன பின்னர், நாலுபெண்கள் இருந்த இடம் எங்கும் தீங்குசெய்கை எனக்கு இயற்கையன்றோ?" என்றான். உனக்கும் இளைதே கன்மமே - தீமைசெய்கையில் சமைந்திருக்கிற உனக்குங்கூட இது பாலிசம். தீமைசெய்வார்க்கும் ஒரு சம்பந்தம் வேண் டாவோ? (6)

---

1. மேலே காட்டிய சுலோகத்தின் பொருளை விளக்குகிறார் 'என்றது' என்று தொடங்கி. 'அது என்? என்னில்' என்றது, சிம்மாசனத்திலிருந்த வர்க்கு 'இங்ஙனம் வேண்டுவான் என்? என்னில்' என்றபடி.

2. 'இங்ஙன் வேண்டுவான் என்? என்னில்' என்றது, மெள்ளவாகி லும் இவர்கள் நடுவே புகுர வேண்டுவான் என்? சிம்மாசனத்தில் தானே இருந்துவிட ஒண்ணாதோ! என்றபடி.

3. பயலி - பாலனது செயலையுடையவன். "தீமை செய்யும் சிரீதரன்" என்பது, நாய்ச்சியார் திருமொழி. 2 : 1. பாலிசம் - பாலன் செயல்.

570.

கன்மமன்று எங்கள் கையில் பாவை பறிப்ப துகடல் ஞாலம் உண்டிட்ட
நின்மலா ! நெடியாய் ! உனக்கேலும் பிழைபிழையே
வன்மமேசொல்லி எம்மை நீவிளை யாடுதிஅது கேட்கில் என்னைமார்
தன்மம் பாவம் என்னார் ஒருநான்று தடிபிணக்கே.

**பொ - ரை :**—பிரளய வெள்ளத்தில் அழுந்துகிற உலகத்தைப் புசித்துக் காப்பாற்றிய குற்றமற்றவனே! நெடியவனே! எங்கள் கையிலேயுள்ள பாவையைப் பறிப்பது செய்யத்தக்க காரியம் அன்று; இப்படிப் பட்ட உனக்கும் குற்றம் குற்றமேயாகும் ; எம்மைப் பார்த்து மர்மமான வார்த்தைகளைச் சொல்லி நீ விளையாடுகின்றாய்; அதனைக் கேட்கில், எங்களுடைய் தமையன்மார்கள் தர்மம் பாவம் என்று நினையார்கள் ; ஒரு நாள் தடியைக்கொண்டு மாறுபடுவர்.

**வி - கு :**—கர்மம் வர்மம் தர்மம் என்பன, கன்மம் வன்மம் தன்மம் என்று திருந்தி வந்தன. பாவை - விளையாடுதற்குரிய பொம்மை. என்னைமார் - தமப்பன் தமையன்மார்கள். நான்று - காலம்.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [1]ஸ்ரீபரதாழ்வான் எல்லா உபாயங்களையும் அநுஷ்டித்துத் தன்பக்கல் பட்டனஎல்லாம் தான் இவர்கள்பக்கலிலே பட்டான். [2]"ஸ்ரீராமபிரான் திரும்புவதற்கு எல்லாவிதமான உபாயங்களையும் மேற்கொள்ளப் போகின்றேன்" என்று மீட்கையிலே போர வருந்தினான் அன்றோ. [3]தாமே இரங்கி மீளும்படி செய்கிறேன், அதுதான் கேட்டார் வாய்க் கேட்கவேண்டுமோ? "எவ்வளவு வரையில் அவர் என்

---

1. "கன்மம் அன்று எங்கள் கையில் பாவை பறிப்பது" என்றதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'எல்லா உபாயங்களையும்' என்றது, தாய்மாரைக்கொண்டும், வசிஷ்டர் முதலாயினோர்களைக் கொண்டும் சொல்லச் செய்தது முதலானவற்றை.

2. 'ஸ்ரீ பரதாழ்வான் பட்டன எல்லாம்' என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ஸ்ரீராமபிரான்' என்று தொடங்கி.

"ஸர்வோபாயம் து வர்திஷ்யே விநிவர்தயிதும் பலாத்
ஸமக்ஷம் ஆர்ய மிச்ராணாம் ஸாதூனாம் குணவர்திநாம்"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 82 : 19.

3. மேலதற்கே மற்றும் ஒரு பிரமாணம் காட்டுகிறார் 'தாமே இரங்கி' என்று தொடங்கி.

"அநாஹாரோ நிராலோகோ தநஹீநோ யதா த்விஜஃ
சேஷ்யே புரஸ்தாத் சாலாயா யாவந்மே ந ப்ரஸீததி"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 111 ; 14.

னிடம் இரங்கவில்லையோ அவ்வளவு வரையிலும் பர்ணசாலையில் அவருக்கு முன்பு படுக்கிறேன்" என்றான் அன்றோ. இவனும் அப்படியே எல்லா உபாயங்களையும் செய்து பார்த்தவிடத்திலும் அணுக ஒண்ணாதபடி கடுமை தோற்ற இருந்தார்கள்; 'இனிச் செய்யலாவது என்?' என்று பார்த்தான்; '**பலத்தாலே காரியங் கொள்ளுவோம்**' என்று நிச்சயித்து, இவர்களுடைய பாவையை எடுப்பதற்குக் [1] கணிசித்தான்; [2] "கோசலதேசத்தவர்கள் பார்வையைக் கொண்டே பிறர் எண்ணத்தை அறிவார்கள்" என்கிறபடியே, நினைவு அறியுமவர்களாகையாலே, எல்லாரும்கூட வைத்த பாவையைச் சென்று எடுத்துக் கொண்டார்கள்; அதுதான் "**நம் காரியம்**" என்றே இருந்தான். [3]"தனித்து முயற்சிசெய்ய விருப்பம் இன்றிக்கே ஒழியப் பெற்றோம்' என்று பார்த்தான். என்றது, திருக்குரவை போலே ஆளுக்குஆளாய் நின்று கைப்பிடிக்க வேண்டாவாய் இருந்தது என்றபடி. '**நல்ல வாய்ப்பு**' என்று இவர்கள் பாவையைச் சென்று பற்றினான்.

கன்மம் அன்று - வாராய்! உனக்கு இது காரியம் அன்று காண் என்கிறார்கள். 'ஏன்தான் இது காரியம் அன்றிக்கே ஒழிவான் என்?' என்றான். எங்கள்கையில் பாவை பறிப்பது - 'இதுதான் யாரது என்று இருக்கிறாய்? நீ நினைக்கிறவர்களது அன்றுகாண்! இது எங்களதுகாண்!! என்றார்கள். 'அதுதான் மெய்யே!' என்றான்; [4]" மனைவி முதலான இவர்கள் எவருக்கு உடைமைப்பட்டவர்களோ, இவர்களுடைய செல்வமும் அவரு

1. கணிசித்தான் - தொடங்கினான்.

2. " இங்கிதஜ்ஞாஸ்து மகதாঃ **பிரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலாঃ**
அர்த்தோக்தாঃ குருபாஞ்சாலாঃ ஸர்வோக்தா தக்ஷிணாபதாঃ "

நினைந்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி அறிவனும்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலும்அம் மாதவத்தோன்
நினைந்தவெலாம் நினைந்து அந்த நெடுஞ்சிலையை நோக்கினான்.

என்ற கம்பராமாயணச் செய்யுள் ஈண்டு ஒப்புநோக்குக.

3. காரியமானபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தனித்து' என்று தொடங்கி.

4. மெய்யானால் தனக்குப் பயன் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மனைவி முதலான இவர்கள்' என்று தொடங்கி.

" த்ரய ஏவாதநா ராஜந் பார்யா தாஸஸ் ததா ஸுதঃ
யத்தே ஸமதி கச்சந்தி யஸ்யைதே தஸ்ய தத்தநம் "

என்பது, பாரதம் உத்யோக பர்,

டைமையே " என்பதேயன்றே பிரமாணம். இவர்கள் '**எங்களது**' என்கைஅன்றே அவன் விருப்பத்துக்கு அடி. '**இவர்களது**'என்னுமிடம் அறுதியிட்டுக் கொள்ளுகையிலேயன்றே அவனுக்குத் தாத்பரியம். நீ நினைக்கிறவர்களது அன்று என் கையிலேயன்றே இவர்களுக்குத் தாத்பரியம். எங்கள் கையில் பாவை பறிப்பது-இவர்கள் கையிலே பாதிகொடுத்துப்போலே காணும் பறிப்பது! [1]அவர்கள் விட்டுக் கடக்க நிற்குமதில் ஒரு பிரயோஜனம் இல்லையே; அதனை அவர்கள் ஒருதலை பற்றத் தானும் ஒரு தலை பற்றும்போதேயன்றே ஒருகலத்திலே உண்பாரைப்போலே இன்பமாயிருப்பது. கையில் பாவை பறிப்பது - [2]கிடக்குமவையெல்லாம் கிடக்க, எங்கள்கையிற் பாவை பறிப்பது கர்மம் அன்று. [3]செய்யக்கடவது அல்லாததனைச் செய்யாநின்றாய்; உனக்கு இதனால் ஒரு பிரயோஜனம் இல்லை காண் என்றார்கள். [4]ஆக, இதனால், பலித்தது என்? என்னில், ஒரு வைஷ்ணவன் "**என்னது**" என்று அபிமானித்துக் கைப்பிடித்தால் "**அவன் விரும்புவது**" என்றபடி. [5]" 'செய்யக்கடவது அல்லாததைச் செய்யாநின்றாய்' என்று நீங்கள் சொல்லுவான் என்? செய்யக்கடவனவற்றிற்கும் செய்யக்கடவவல்லாதனவற்றிற்கும் வரம்பு கட்டினேன் நானே அன்றே" என்றான்.

---

1. பாதி கொடுக்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவர்கள் விட்டு' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அதனை அவர்கள்' என்று தொடங்கி.

2. "கையில்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கிடக்குமவையெல்லாம்' என்று தொடங்கி.

3. "கன்மம்" என்றதற்கு, மேல் 'காரியம்' என்று பொருள் அருளிச்செய்தார். இங்குக் காரியத்தாலாய பயன் என்று பொருள் அருளிச்செய்கிறார் 'செய்யக் கடவது' என்று தொடங்கி. கன்மம் - கர்மத்தாலாய பயன்.

4, 'ஆக, இதனால்' என்றது, 'எங்களது' என்றதனையே காரணமாகக் கொண்டு அவன் மேல் விழுந்து வந்து பறிக்கிற இதனால் என்றபடி. 'பலித்தது என்? என்னில்' என்றது, சுவாபதேசத்தில் சொல்லப்பட்ட பொருள் யாது? என்னில் என்றபடி.

5. "கன்மம்" என்றதற்கு அருளிச்செய்த இருவகைப் பொருள்களுள் முதற்பொருளுக்குச் சேர, மேலிற் பதத்திற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'செய்யக்கடவது' என்று தொடங்கி. வரம்பு கட்டுகை = கடலாலே சூழச் செய்தல்.

கடல் ஞாலம் உண்டிட்ட - [1]பிரளய ஆபத்திலே இவற்றை எல்லாம் எடுத்து வயிற்றிலே வைத்து நோக்கிற்றிலேனே? இவர்கள் அளவும் அப்படியே ஆகாதேதான். இவன்சென்று பறித்திலனாகில் அழியுமளவே அன்றோ இவர்களது. [2]அது வேறு நிலையை அடைந்தாகிலும் கிடக்குமன்றோ. இவர்களுக்கு இவனை ஒழிந்த அன்று சத்தைக்கு அழிவன்றோ உள்ளது! [3]'ஆபத்து ரக்ஷகனன்றோ நான்! ஆனபின்பு, நான் செய்யுமவையெல்லாம் பிரயோஜனத்தை எதிர்பாராமலே அன்றோ இருப்பன. ஆகையினால் எனக்கு இது தானேயன்றோ பிரயோஜனம்! பிரயோஜனத்துக்குப் பிரயோஜனம் வருமன்று முடிவு இல்லாமை ஆகுமன்றோ. இதனைச் சாதனமாக நினைத்திருக்கிலன்றோ நான் வேறே ஒன்றனைப் பிரயோஜனமாகச் சாதித்துக்கொள்வது!' என்றான். 'நீ இங்ஙன் சொல்லுமது வார்த்தை அன்றுகாண்; [4]எங்கள் இசைவு இன்றிக்கே இருக்க, நீ பலத்தாலே பறிக்கிற இதற்கு "**ஆபத்து ரக்ஷகன்**" என்று சொல்லுகிற இது எடுத்துக்காட்டு ஆகமாட்டாது காண்; ஆனபின்பு, உன்னுடைய குணத்திற்குக்கேடுகாண் மேற்படுவது' என்றார்கள். நின்மலா நெடியாய் - குற்றங்கட்கெல்லாம் எதிர்த்தட்டானவனாய் அளவிடமுடியாத மஹா குணங்களையுடையவனே! 'பலகுணங்களையுடைய எனக்கு

---

1. வரம்பு கட்டினபடியைக் காட்டுகிறார் 'பிரளயாபத்திலே' என்று தொடங்கி. தலைவியின் மனோபாவத்தை வியாக்யாதா அருளிச்செய்கிறார் 'இவர்கள் அளவும்' என்று தொடங்கி. விவரணம் செய்கிறார் 'இவன் சென்று' என்று தொடங்கி. 'இவர்கள் அளவும் அப்படியே ஆகாதேதான்' என்றது, இவர்கள் நிலையும் உலகத்தின்படி அன்றோ என்றபடி.

2. பூமியோடு ஒப்பாம்தன்மை அன்றிக்கே, இவர்களுக்கு ஆதிக்கம் அருளிச்செய்கிறார் 'அது வேறு நிலையை' என்று தொடங்கி.

3. "கன்மம்" என்றதற்கு அருளிச்செய்த இரண்டாம் பொருளுக்குச் சேர, "கடல் ஞாலம் உண்டிட்ட" என்றதற்கு, மற்றும் ஓர் அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஆபத்துரக்ஷகன்' என்று தொடங்கி.

4. மேலே கூறிய இருவகையான அவதாரிகைக்கும் சேர, "கடல் ஞாலம் உண்டிட்ட" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எங்கள் இசைவு இன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, இசைவின்றிக்கே இருக்கப் பறிக்கையாலே, உனக்கு ஒரு பயன் இல்லை என்று இரண்டாவதாக அருளிச்செய்த அவதாரிகைக்குப் பரிஹாரமாகவும், பலத்தாலே பறிக்கிற இது உனக்குக் காரியம் அன்று என்று முதல் அவதாரிகைக்குப் பரிஹாரமாகவும் கோடல் வேண்டும் என்றபடி.

ஒருகுற்றம் கிடந்த அளவிலே அது தெரியாநின்றதோ?' என்றான். நின்மலா! நெடியாய்!-நிர்மலனான சந்திரனுக்கும் அன்றோ மறுகிடக்கிறது! ஆனபின்பு, குணங்கள் பிரகாசிக்கின்ற இடங்கள் எங்கும் குணமின்மையும் பிரகாசிக்குங்காண்!! உனக்கேலும் பிழை பிழையே - அளவிடமுடியாத குணங்களையுடையையாயிருந்தாயேயாகிலும், குற்றம் குற்றமேயாயே கிடக்குங்காண்.

இவர்கள் இப்படிச் சொன்னவாறே, இதற்கு ஒரு மறு மாற்றம் காணாமையாலே, பிறர்க்குப் பாசுரமிட்டுச் சொல்ல ஒண்ணாதபடி இவர்கள் செவிகளிலே [1] சிலவற்றைச் சொல்லப்புக்கான்: '**வன்மமே சொல்லி**' என்கிறார்கள். [2] தங்கள் மனமும் அவன் மனமும் அறியுமித்தனை; வார்த்தைகளால் சொல்ல ஒண்ணாது. எம்மை நீ விளையாடுதி-நீ மர்மம் சொல்லும்போது, [3] சொல்லுகிற உன்னையும் கேட்கிற எங்களையும் அறிந்தன்றோ சொல்லுவது. 'இவன் சொன்ன மர்மம் ஏது?' என்று எம்பாரைச் சிலர்கேட்க, "மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் பாசுரமிடமாட்டாமல் '**வன்மம்**' என்னாநின்றார்; என்னைப் பாசுரம் இடச் சொல்லுகிறீர்களோ?" என்று அருளிச்செய்தார். விளையாடுதி - அவன் தன்னை அழிய மாறி ஒரு மர்மம் சொன்னானன்; இவர்கள் அதனை விளையாட்டாக்குகிறார்கள். [4] நெஞ்சில் இல்லாதனவற்றைச் சொல்லுகிறவதனால் உனக்கு என்ன பிரயோஜனம் உண்டு? என்கிறார்கள். [5] மீளவும் சில வற்றைச் சொல்லப் புக்கான்: அது கேட்கில் என்னைமார் தன்மம் பாவம் என்னார் ஒரு நான்று தடி பிணக்கே - சொல்லுகிறவை எல்லாம் எங்கள் பந்துக்கள் கேட்பாராகில் சாலத் தப்

1. 'சிலவற்றை' என்றது, புணர்ச்சிக்காலத்தில் கூறுகிற பணிமொழிகளை. வன்மம் - மர்மம்.

2. அந்த மர்மம் யாது? என்ன, 'தங்கள் மனமும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'சொல்லுகிற உன்னையும்' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, உனக்கும் எங்களுக்கும் உறவு உண்டானால் அன்றோ ஹாஸ்யம் செய்யலாவது, உறவு இல்லாத இடத்து ஹாஸ்யம் செய்யலாமோ? என்பது.

4. விளையாட்டு ஆக்குகைக்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நெஞ்சில் இல்லாதனவற்றை' என்று தொடங்கி.

5. 'மீளவும் சிலவற்றை' என்றது, ஐந்துலக்ஷம் குடியிற் பெண்களும் எனக்கு உறவு என்பது போன்ற சிலவற்றை என்றபடி.

பாய் விடுங்காண். என்னைமார்-ஆணுடன் பிறந்தார். '**தன்மம் பாவம் என்னர்**' என்றதனால், உன் பக்கல் எங்களுக்கு, [1]பாவ பந்தம் இல்லை என்னுமிடம் அறியார்கள். நீ மேல் விழுகிறவதனைக் கண்டு, 'இது செய்யலாம், இது செய்ய ஒண்ணாது' என்று பாராதே நலிவர்காண் என்பதனைத் தெரிவித்தபடி.

'ஆனல் என்? அவர்கள் இதனை அறியாநின்றார்களோ? அவர்கள் இங்கு இல்லையே?' என்றான். ஒருநான்று-அதுவோ! முதலிலே தவிரில் அறியாதொழியுமத்தனை போக்கி எல்லாம் செய்தாலும் உண்டானால் ஒருநாள்வரையிலே அறிவர்கள் காண். 'அழகிது; அறிந்தால்தான் வருவது என்?' என்றான். தடி பிணக்கே - பின்னைக் குத்தும் பூசலுமாயன்றோ தலைக்கட்டுவது. [2]இராமாவதாரத்தில் எல்லாக்காரியங்களையும் வில்லினைக் கொண்டே செய்யுமாறுபோலே, கிருஷ்ணவதாரத்திலே தடிகொண்டே காரியம் கொள்ளுமத்தனை. (7)

## 571.

**பிணக்கி யாவையும் யாவ ரும்பிழை யாமல் பேதித்தும் பேதி யாததுஓர்**
**கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிர்ஞான மூர்த்தியினாய்!**
**இணக்கி எம்மைஎம் தோழி மார்விளை யாடப் போதுமின் என்னப்**
**[போந்தோமை**
**உணக்கி நீவளைத்தால் என்சொலார்உக வாதவரே!**

**பொ - ரை:**—அழிக்குங் காலத்திலே அசேதனங்களையும் சேதனங்களையும் ஒன்றாகச் சேர்த்து, பின், படைக்குங் காலத்தில் ஓர் ஆத்மாவின் கர்ம பலத்தை மற்றோர் ஆத்மா அநுபவியாதபடி படைத்தும் வேறுபடாததாகிய ஒப்பற்ற எல்லையில்லாத கீர்த்திவெள்ளத்தினையுடைய கதிர் ஞானத்தினையே திருமேனியாகவுடையவனே! எம் தோழிமார் எம்மை இசையச் செய்து விளையாடுதற்கு வாருங்கோள் என்ன, வந்த எங்களை துவளச்செய்து நீ வளைத்தால் விருப்பமில்லாதவர்கள் என்ன சொல்லமாட்டார்கள்?

**வி - கு:**—பேதித்தும் பேதியாதது ஓர் ஞானம் என்க. ஞானம்-சங்கல்பரூப ஞானம். கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிர்ஞானம் என்க.

1. 'பாவபந்தம்' என்றது, புணர்ச்சியினை. புணர்ச்சி உண்டு என்று நிரூபித்துச் செய்தல், தருமம்; நிரூபியாமல் செய்தல், பாவம். இரண்டும் பாராமல் அடிப்பர்கள் என்றபடி.

2. தடி எதற்கு? ஆயுதம் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இராமாவதாரத்தில்' என்று தொடங்கி.

அத்தகைய ஞானமே மூர்த்தி என்க. எம் தோழிமார் எம்மை இணக்கி விளையாடப் போதுமின் என்னப் போந்தோம் என்க.

**ஈடு:**—எட்டாம்பாட்டு. [1] கிட்டிநின்று இவர்களைச் சில மிறுக்குக்களைச் செய்யப் புக்கான்; 'இங்கே இருக்கில்அன்றோ இவைஎல்லாம் செய்வது' என்று பார்த்து, ஒருவர் ஒருவராகப் போகப் புக்கார்கள்; '**இதுவோ பார்த்தபடி**!' என்று வழியைப் பற்றி இருவிலங்காகக் கிடந்தான். பூஞ்சோலையாகையாலே வழி ஓர் அடிப்பாடாய் இருக்குமன்றோ. இப் பாசுரத்தைச் **சீயர்** அருளிச்செய்யாநிற்கச் செய்தே, அங்கே இருந்தவரான **ஆப்பான்** 'இவர்கள் இவனைக் கடந்துபோனார்களாகிற் செய்வது என்?' என்று கேட்க, 'அது யார் காரியம்? பின்னை [2] இரண்டத்தில் ஒன்று சித்திக்கும் என்று அன்றோ அவன் தான் கிடந்தது!' என்று அருளிச்செய்தார்.

[3] நீ வழியைப் பற்றிக் கிடவாநின்றாய்; நீ செய்கிறவை எல்லாம் உறவு உண்டாய்ச் செய்கிறாய் என்று இருப்பர்கள்காண்; நீ எல்லா ஆத்மாக்கள் விஷயமாகவும் செய்யும் லீலைக்கு ஓர் அளவு உண்டோ? உன்னை ஒழிந்த வஸ்துக்கள் எல்லாவற்றுக்கும் கோடி விகாரத்தைச்செய்து, விகாரம் இல்லாதவனாய் இருப்பான் ஒருவன்அன்றோ; [4] அப்படியே எங்களை வேறு

---

1. "உணக்கி நீ வளைத்தால்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி, இவன் அவர்களை வளைத்துக் கிடக்கும்போது, இவன் மிறுக்குக் காரணமாக அவர்கள் போகப் புக்கார்களாக வேண்டும் என்கிறார் 'கிட்டி நின்று' என்று தொடங்கி. மிறுக்குக்கள் - க்ஷுத்ரமான வார்த்தைகள். இருவிலங்கு - பெருவிலங்கு. வேறு வழியில்லையோ? என்ன, 'பூஞ்சோலையாகையாலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"உயவல் யானை வெரிநுச் சென்றன்ன
கல்லூர் பிழிதரும் புல்சாய்ச் சிறுநெறி"
"வாள்நடந் தன்ன வழக்கருங் கவலை
உள்ளுநர் உட்கும் கல்லடர்ச் சிறுநெறி"
"யானைக், கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி"

என்பன, அகநானூறு. 65, 72, 128.

2. 'இரண்டத்தில் ஒன்று' என்றது, தகைவுபட்டு நிற்கையாதல், கடந்து போகும்போது தீண்டுதலாதல். கிடக்கின்றவனைத் தீண்டாமல் தாண்ட முடியாதே.

3. "பிணக்கி" என்றது முதல், "பேதியாதது" என்றது முடிய உள்ளனவற்றிற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'நீ வழியைப் பற்றி' என்று தொடங்கி.

4. "பேதித்தும் பேதியாதது" என்கிறவர்களுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அப்படியே' என்று தொடங்கி.

பாட்டினையுடையவர்களாகச் செய்து நீ [1]வேறுபாடு இல்லாதவனாய் இராநின்றாய். யாவையும் யாவரும் பிணக்கி-[2]தன்பக்கல் பொருந்துகைக்கு நினைவு இல்லாதனவற்றையும் நினைவாலே பொருந்தாதனவற்றையும் கூட்டி, [3]"மூலப்பிரகிருதியானது பரமாத்மாவினிடத்தில் கலக்கிறது"என்கிறபடியே, தன்னோடு வேற்றுமையறக் கலசி. பிழையாமல் பேதித்தும் - தப்பாமல் பிரித்தும். என்றது, [4]வயிற்றில் நின்றும் புறப்பட விடுதல், சம்ஹரித்துப் புறப்படவிடுதல்களைக் குறித்தபடி. ஒவ்வொரு கலகத்திலே அமர்ந்த நிலங்களிலே குடிவாங்கிப் பின்பு தெளிந்தவாறே தம்தம் இடங்களிலே புகுந்து, விட்ட காரியங்களிலே அதிகரிப்பாரைப் போலே. [5]ஒருவன் செய்த கர்மம் வேறு ஒருவன் சென்று அநுபவியாதபடி தன்பக்கல் நின்றும் பிரித்தும். பேதியாதது ஓர்கணக்கு இல் கீர்த்திவெள்ளம் கதிர்ஞான மூர்த்தியினாய் - [6]காரிய நிலையானதுவே காரண நிலையானாலும், காரண நிலையில் அசித்தைப்பற்றி வருகின்ற சூக்ஷ்மபரிணா

---

1. 'நீ வேறுபாடு இல்லாதவனாய் இராநின்றாய்' என்றது, பிரிவினால் வந்த கலக்கமும், கலவியால் வந்த வேறுபாடும் இல்லாமலே இருக்கின்றாய் என்றபடி.

2. "யாவையும் யாவரும்" என்று, அஃறிணையை முன்னும் உயர்திணையைப் பின்னுமாக அருளிச்செய்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தன்பக்கல்' என்று தொடங்கி. என்றது, இருவகையான பொருள்களுக்கும் பொருந்தாமை பொதுவாகையாலே அசேதனங்களோடே சேதனர்களையும் கூட்டி அருளிச்செய்கிறார் என்றபடி. 'நினைவாலே' என்றது, நினைவு உண்டாயிருக்கச் செய்தே என்றபடி.

3. 'கூட்டி' என்னாமல், "பிணக்கி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மூலப்பிரகிருதியானது' என்று தொடங்கி.

"தமஃ பரே தேவ ஏகீபவதி" சுபால உப. 2.

4. 'வயிற்றில் நின்றும் புறப்படவிடுதல்' என்றது, அவாந்தர பிரளய காலத்திலே என்க. 'சம்ஹரித்துப் புறப்படவிடுதல்' என்றது, மஹாப்பிரளய காலத்திலே என்க. 'வயிற்றில் நின்றும் புறப்படவிடுதல்' என்றதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஒவ்வொரு கலகத்திலே' என்று தொடங்கி.

5. சம்ஹரித்துப் புறப்படவிடுதல் என்ற பொருளில் "பிழையாமல்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஒருவன் செய்த கர்மம்' என்று தொடங்கி. பிரித்தும் - சிருஷ்டித்தும்.

6. 'காரிய நிலையானதுவே' என்றது முதல், 'வேற்றுமைகள் ஒன்றுமின்றிக்கே' என்றது முடிய, "பேதியாதது" என்பதற்குப் பொருள். 'காரிய நிலையானதுவே' என்றது, காரிய நிலையான பிரஹ்ம சொரூபமே என்றபடி. 'சொரூபத்தின் வேறுபாடு' என்றது, ஸ்தூலபரிணாமம். இது, மேலே 'சூக்ஷ்மபரிணாமம்' என்றதற்கு மறை. 'தன்மையின் வேறுபாடு' என்றது, ஞானத்தின் மலர்ச்சி. இது, மேல், 'சேதனத்தைப் பற்றி வருகின்ற அஜ்ஞானம்' என்றதற்கு மறை.

மம், சேதனத்தைப் பற்றி வருகின்ற அஜ்ஞானம், படைப்புக் காலத்தில் அசித்தைப் பற்றியுள்ள சொரூபத்தின் வேறுபாடு, சேதனத்தைப் பற்றியுள்ள தன்மையின் வேறுபாடு, ஆக, இந்த வேற்றுமைகள் ஒன்றும் இன்றிக்கே, [1]ஒரே உருவமாய், அத்விதீயமாய், எல்லையில்லாத கீர்த்திக் கடலையுடைத்தாய், ஒளி உருவமான சங்கல்ப ரூப ஞானத்துக்கு இருப்பிடமானவனே! [2]எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் முதலில் சிதையாத மனஞ்செய் ஞானமன்றோ. இதனால், பிரிவு நிலையில் கலக்கமும், கூடிய நிலையில் இன்பத்தாலே வேறுபாடும் இன்றிக்கே இருக்கின்ற **ஏகரூபன்** என்பதனைத் தெரிவித்தபடி. 'இப்படிப்பட்ட குணங்களை அளவிடுவோம்' என்று பார்த்தார் உளராகில் இளைத்துக் கால்வாங்கும்படி இருத்தலின் '**கணக்கில் கீர்த்திவெள்ளம்**' என்கிறது. இப்படிக் கூட்டுவன கூட்டிப் பிரிப்பன பிரித்தாலும், ஞானத்திற்கு ஒருகுறைவு அற்று இருத்தலின் '**கதிர் ஞான மூர்த்தியினாய்**' என்கிறது. என்றது, காரியம் கொண்டது என்று மழுங்காது இருக்கை; காரியம் கொள்ளக் கொள்ளப் புகர்த்து வருகையைத் தெரிவித்தபடி. ஞான மூர்த்தியினாய் - அன்றிக்கே, [3]ஞானமே சொரூபனாயுள்ளவனே! என்னுதல்.

எம் தோழிமார் எம்மை இணக்கி விளையாடப் போதுமின் என்னப் போந்தோமை - [4]நீ செய்கிறவற்றால் பிரயோஜனம் உள்ளது நீ இருந்த இடத்தே நினைத்துத் தேடி வந்தார் உளராகில் அன்றோ! இணக்கி - இசையும்படி வார்த்தை சொல்லி. என்றது, 'அவ்விடம் கிருஷ்ணன் வாராத இடம்' என்று காண் சொல்லிக்கொண்டு போந்தது என்றபடி. உன்னுடைய கலவியாகிற அபாயம் வரும் என்று அறியாத நாங்கள் என்பார் '**எம்மை**' என்கிறார்கள். உன்னை வெறுக்கிறது என்?

1. "பேதியாதது" என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'ஒரே உருவமாய்' என்று. "ஓர்" என்றதன்பொருள், 'அத்விதீயமாய்' என்பது. அத்விதீயம் - இரண்டு அற்றது.

2. "பேதித்தும் பேதியாதது" என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எல்லாப் பொருள்கட்கும்' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி. 1. 5: 2.

3. "ஞானமூர்த்தியினாய்" என்றதற்கு, சங்கல்ப ரூப ஞானத்துக்கு இருப்பிடமானவனே என்று மேலே பொருள் அருளிச்செய்தார். சொரூபபரமாக வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'ஞானமே சொரூபனாயுள்ளவனே!' என்று.

4. "இணக்கி" என்கிறவர்களுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'நீ செய்கிறவற்றால்' என்று தொடங்கி.

உன்பக்கல் குற்றம் உண்டோ? சேர்த்தாராலே வந்ததுகாண் என்பார் '**எம்தோழிமார்**' என்கிறார்கள். ஒரே சாதியினரா யிருந்து சேர்க்க வேண்டுமாதலின் '**எம்தோழிமார்**' என்கிறார்கள். அவர்கள் உனக்குப் [1]பெருநிலை நிற்பது அறியப் பெற்றிலோம். சொலவுக்குமேல் அகவாய் ஆராயப் பெற்றிலோம் என்பார் '**விளையாடப் போதுமின் என்னப் போந்தோம்**' என்கிறார்கள். என்றது, '**நீ இங்கே உண்டு**' என்று அறிந்தோமாகில் இவ்விடம் என்றும் நினையோம் என்றபடி. [2] "**அவர்கள் உனக்குப் பார்வை**" என்னுமிடம் அறியப் பெற்றிலோம். [3]பகவத் விஷயத்தில் வைலக்ஷண்யம் நெஞ்சிலே பட்டால் உபகாரகரைக் கொண்டாடவேண்டும் என்னும் அர்த்தமன்றோ உள் ஓடுகிறது. [4]"எந்த நாதமுனிகளுடைய இரண்டு திருவடிகளானவை எப்பொழுதும் எனக்கு ரக்ஷக வஸ்துக்கள்" என்கிறபடியே, இங்கோடு அங்கோடு வாசிஅற அவர்களாலே வருமதன்றோ.

பொகடுங்கோள்; ஆனல் என்? அவர்கள் சொல்லப் போந்தீர்கோளாகில் உங்களுக்கு வந்த தீங்கு என்? என்றான்: உணக்கி நீ வளைத்தால் என்சொலார் உகவாதவரே-உணக்குகையாவது, தரிக்கமாட்டாதே துவளும்படி செய்கை. [5] எங்களுக்கு இதற்குமேல் வருவது என்? கால்வாங்கிப் போகப் பெறுகின்றிலோம்; கிட்டிநின்று முகம்பார்த்து அநுபவிக்கப் பெறுகின்றிலோம். இதனைக் காண வேண்டாதவர்கள் என்

---

1. பெருநிலை - சகாயம்.

2. 'உனக்குப் பெருநிலை நிற்பது' என்று மேலே கூறியதனை விவரிக்கிறார் 'அவர்கள்' என்று தொடங்கி. பார்வை - விலங்குகள் முதலானவற்றைப் பிடித்தற்குப் பழக்கிய விலங்கு முதலானவைகள். "பார்வை யாத்த பறைத்தாள் விளவின்" என்பது, பெரும்பாண். 95.

3. "எம்தோழிமார் விளையாடப் போதுமின் என்னப் போந்தோம்" என்பதற்குச் சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறார் 'பகவத் விஷயத்தில்' என்று தொடங்கி.

4. பற்றுகிற காலத்திலே ஒழிய, போக தசையிலும் ஆசாரியன் வேண்டுமோ? என்ன, 'வேண்டும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எந்த நாதமுனிகளுடைய' என்று தொடங்கி.

"நாதாய நாதமுநயேத்ர பரத்ரசாபி
நித்யம் யதீய சரணௌ ஶரணம் மதீயம்"

என்பது, ஸ்தோத்திரரத்நம். 2. "அத்ரபரத்ரசாபி" என்றதன் பொருள், 'இங்கோடு' என்று தொடங்கும் வாக்கியம்.

5. "உணக்கி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எங்களுக்கு' என்று தொடங்கி.

சொல்லுவர்கள்? "எதனைச் சொல்லுவது: [1]என்னை 'ஈசுவரன்' என்றீர்கோளாகில், உங்களை 'ஆயர் சிறுமியரோம்' என்றீர்கோளாகில், இனி எதனைச் சொல்லுவது?" என்றான். [2]'நீ சர்வேசுவரனான இதுவும், நாங்கள் ஆய்ப்பெண்கள் ஆன இதுவுமேயன்றோ சொல்லுகைக்குக் காரணமும்.' [3]ஈசுவரனோடு ஒக்கப் பழிசொல்லுகைக்கு இவர்கள்தாம் ஒரு நப்பின்னைப் பிராட்டிபோல்வார் ஆகாதேதான். [4]'அது என்தான்? என்னோடு உங்களுக்கு உறவு முறை இல்லை என்றீர்கோளாகில் இதனால் வருவது என்?' என்றான்: என்சொலார் உகவாதவரே - உன்பக்கல் எங்களுக்கு உறவு முறை இல்லை என்று அறிவர்களோ உகவாதார்? என்றது, நீ சிறிது கால் தாழ்த்த இதுவே ஏதுவாகக் 'கலவி உண்டாயிற்று' என்னார்களோ? வளைக்கிற உன்னையும், வளைப்புண்கிற எங்களையும் அறிந்தோ அவர்கள் வார்த்தை சொல்லுவது? என்றபடி. [5]அன்றிக்கே, உன்னுடைய மின்னிடை மடவார் உன்னை நெகிழ வார்த்தை சொல்லுவர்கள் என்னுதல். [6]பிரிவாற்றாமல் கண்ணாஞ்சுழலை இடுகிறவர்கள் எதனைச் சொல்லார். (8)

---

1. "பிணக்கி யாவையும் யாவரும், விளையாடப் போதுமின்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'என்னை' என்று தொடங்கி. என்றது, அறப் பெரியவனான நான் மிகத் தாழ்ந்தவர்களான உங்களோடு கலந்திருத்தற்குத் தகுதிஇல்லாமையாலே பழிச்சொல் வாராது என்றபடி.

2. அவன் சொன்னதற்கு விடை அருளிச்செய்கிறார்கள் 'நீ சர்வேசுவரனான' என்று தொடங்கி. என்றது, நீ சர்வேசுவரனாயிருந்தும் நப்பின்னைப் பிராட்டியைக் கைப்பிடிக்கையாலே, ஆயர்பெண்கள் ஆன இதுவே காரணம் என்றபடி.

3. மேல் வாக்கியத்தால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'ஈசுவரனோடு' என்று தொடங்கி.

4. பழி சொல்லாமைக்கு, வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் இரண்டாவது அவதாரிகையாக 'அது என்தான்' என்று தொடங்கி.

5. "உகவாதார்" என்றதற்கு, உலகத்தார் என்று பொருள் அருளிச்செய்தார் மேல். "மின்னிடை மடவார்" என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. இப்பொருளில் பழிக்குப் பாத்திரமாயிருப்பவன் சர்வேசுவரன்.

6. வளைக்கிற இவனையும் வளைக்கப்படுகிற இவர்களையும் அறிந்தால் 'புணர்ச்சி இல்லை' என்று நிச்சயிக்கலாயிருக்க, அது செய்யாமல், 'புணர்ச்சியுண்டு' என்று சொல்லுகிறபடி யாங்ஙனம்! என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரிவாற்றாமல்' என்று தொடங்கி.

572.

உகவை யால்நெஞ்ச முள்ளு ருகிஉன் தாம ரைத்தடங் கண்வி ழிகளின்
[1] அகவலைப் படுப்பான் அழித்தாய்உன் திருவடியால்
தகவு செய்திலை எங்கள் சிற்றிலும் யாம டுசிறு சோறும் கண்டுநின்
முகஒளி திகழ முறுவல்செய்து நின்றிலையே.

**பொ - ரை :**—மகிழ்ச்சியாலே மனமானது உருகும்படியாக, உனது தாமரைபோன்ற விசாலமான திருக்கண்களின் பார்வையாகிற வலைக்குள்ளே அகப்படுத்துவதற்கு, எங்களுடைய சிற்றிலையும் யாங்கள் சமைக்கின்ற சிறு சோற்றினையும் பார்த்துக்கொண்டு நினது முகத்தின் ஒளி திகழும்படியாகப் புன்முறுவல் செய்துகொண்டு நின்றாய் இல்லை; உன் திருவடியால் அழித்தாய்; அதனால் தக்க காரியத்தைச் செய்தாயில்லை.

**வி - கு :**—நெஞ்சம் உள் உருக, கண்டு திகழ முறுவல்செய்து நின்றிலை; சிற்றிலையும் சிறுசோறும் உன் திருவடியால் அழித்தாய்; தகவு செய்திலை என முடிக்க. உருக என்பது, உருகி எனத் திரிந்து நின்றது. வலை அகப்படுப்பான் முறுவல்செய்து நின்றிலை என்க. அகவலைப் படுப்பான் என்பதனை, வலை அகப்படுப்பான் எனப் பிரித்துக் கூட்டுக. பிரித்துக் கூட்டாது, நின்றவாறே பொருள் கோடலுமாம்.

**ஈடு :**—ஒன்பதாம்பாட்டு. [2]“இவன் ‘போகவொட்டேன்’ என்று வளைத்துக் கிடந்ததற்குப் பிரயோஜனம் உள்ளது இவன் நினைத்தபடி பரிமாறப் பெற்றால் அன்றோ? ஒருதேச விசேடத்திலே முக்தர் சம்சாரிகளோடு உறவு அற்று இருக்குமாறுபோன்று இவன் முகம் பாராதே இருக்கிறோம்” என்று அறுதியிட்டுப் பேசாதே இருந்தார்கள்; பின்னர், நாம் இங்ஙனம் இருப்பின் இவன், ‘தன்னை நினைத்துக்கொண்டிருந்தோம் என்று இருப்பான்’ என்று ‘வேறு ஒன்றிலே நோக்குள்ளமை தோற்றச் சிற்றில் இழைப்போம்’ என்று இழைக்கப் புக, ‘என்னைப் பாராதே இருப்பது மன்றிக்கே வேறு ஒன்றிலே சிறிது நோக்குள்ளவர்களாகவும் இருப்பதே’

1. முற்றிலைப் பந்தைக் கழங்கைக்கொண் டோடினை முன்னும்பின்னும்
அற்றிலை தீமை அவைபொறுத் தோம் தொல்லை ஆலினிளங்
கற்றிலை மேற்றுயில் வேங்கட வாஇன்று உன் கான்மலரால்
சிற்றிலைத் தீர்த்ததற் குப் பெரு வீட்டினைச் செய்தருளே.

என்ற அருமைத் திருப்பாசுரம் இங்கு நினைவிற்கு வருகின்றது. திருவேங்கடத்தந். 97.

2. “அழித்தாய் உன்திருவடியால்” என்றதனைக் கடாக்ஷித்து, அதற்குத் தகுதியாக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

என்று சிற்றிலையும் சிறுசோற்றினையும் தன்திருவடிகளாலே அழிக்க, அதனாலே அவர்களுக்குச் சீற்றம் பிறந்து, தாங்கள் கொண்ட கொள்கையை மறந்து அவன் முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். [1]அவனுடைய விருப்பம் நிறைவேறுவதற்கும் சாதனம் திருவடிகள் காணும். அடியுடையார்க்கெல்லாம் சாதித்துக் கொள்ளலாமே.

உகவையால் நெஞ்சம் உள்உருகி-[2] வாராய்! உன்செயல் பயன் இல்லாத செயல்காண்; பிரிந்து நெஞ்சினைப் புண்படுத்துகையாலே வந்த உருகுதல் ஒழிய, எங்களுக்கு உகவையால் நெஞ்சம் உள்உருகப் பண்ணவன்றோ நீ பார்த்தது; அது செய்யப் போகாது. உன் தாமரைத் தடம் கண்விழிகளின் அகவலைப் படுப்பான்-[3]பகல்கண்ட குழியிலே விழவிட்டுஅகப்படுத்துவான்;[4]திருஷ்டிபந்தத்தாலேயன்றோ தனக்கே உரிமையாக்குவது. தாமரையைப்போலே வாசனையையும் குளிர்த்தியையும் சிவப்பையுமுடைத்தாய், அநுபவிக்கின்றவர்களால் உண்டறுக்க ஒண்ணாத இன்பமிகுதியையுடைய திருக்கண்களின் நோக்காகிற வலையுள்ளே அகப்படுத்துகைக்காக. அகவலை - வலைக்குள்ளே. அன்றிக்கே, [5] அகவிய வலை என்றுமாம். கண்ணென்னும் நெடுங் கயிறே அன்றோ. [6] 'கண்ணிலே அகப்பட்

1. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அவனுடைய விருப்பம்' என்று தொடங்கி. 'அடியுடையார்க்கு' என்பதற்கு, செல்வத்தையுடையார்க்கு என்றும், திருவடியையுடையார்க்கு என்றும் இருபொருள்.

2. இவனுடைய சங்கல்ப வாக்கியத்தைச் சொல்லுமவர்களுடைய உட்கருத்தை அவர்கள் வார்த்தையாலே அருளிச்செய்கிறார் 'வாராய்'. என்று தொடங்கி. இவன் செய்யத் தொடங்கிய செயலையும், அச்செயல் பயன் அற்றபடியையும் அடைவே காட்டுகிறார்கள் 'பிரிந்து' என்று தொடங்கி.

3. "உன்தாமரைபுரை கண்ணிணையும் செவ்வாய் முறுவலும் ஆகுலங்கள் செய்ய" என்றதனைத் திருவுள்ளம்பற்றி, 'பகல்கண்ட' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

4. கண்களாலே அகப்படுத்தும் என்பதனை விவரணம் செய்கிறார் 'திருஷ்டி' என்று தொடங்கி. திருஷ்டி - கண்பார்வை. "தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்" என்பர் பின்னும்.

5. அகவிய வலை - நெடிய வலை. அவன் திருக்கண்கள் நெடிய வலையாக இருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'கண்ணென்னும்' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திரு. 14 : 4.

6. அப்படிக் கண்ணழகிலே ஈடுபடுவர்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்து, பிரமாணமும் காட்டுகிறார் 'கண்ணிலே' என்று தொடங்கியும், 'தாமரைக் கண்ணனை' என்று தொடங்கியும். இது, திருவாய். 2. 6 ; 3.

டால், ஜன்னி ஜ்வரத்தாலே பீடிக்கப்பட்டவர்களைப் போலே பிதற்றுமித்தனை அன்றே. "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்பதன்றே மறைமொழி. உன் திருவடியால் அழித்தாய் - [1]தன் சிற்றிலை அன்றே சங்கல்பத்தால் அழிக்கலாவது; [2]இவர்களுடைய சிற்றிலைத் தொட்டு அழிக்க வேணுமே: [3] உன் சிற்றில் அழிக்கும் பரிகரம் அமையாதோ இதற்கு? உலகத்தை அழிப்பது சங்கல்பத்தாலேஅன்றே. [4]அடியவர்களுக்குத் திருவடிகள் உத்தேசியமாமாறுபோன்று காதலிமார்கட்கும் உத்தேசியமாய்அன்றே திருவடிகள் இருப்பன. அழித்தாய்-[5]வெறும் சிற்றிலை அன்றுகாண் நீ அழித்தது; எங்கள் அகவாயையும் நீ அழித்தாய்காண்; சிற்றிலோடு எங்கள் சிந்தையையும் சிதைத்தாய்காண். [6] காலாலே சிற்றிலை அழித்து, கண்ணாலே எங்கள் எண்ணங்களையும் அழித்தாய்காண் என்கிறார்கள்.

தகவு செய்திலை - கிருபையுடையார் செய்வதைச் செய்திலை. [7]பிரிந்தபோதே அன்புடைமை போயிற்றே யன்றே; இனிக் கண்ணுடையார் செய்வதும் செய்திலை என்னுதல். கண் படைத்ததற்குப் பிரயோஜனம் நல்லதுகண்டு கொண்டிருத்தலன்றே? [8] உன் முகத்தன கண்கள் அல்லவே! 'நான்செய்த

1. சங்கல்பத்தால் அழிக்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன்சிற்றிலை' என்று தொடங்கி. தன்சிற்றில் - இந்த உலகம்.

2. "திருவடியால் அழித்தாய்" என்கிறவர்களுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவர்களுடைய சிற்றிலை' என்று தொடங்கி.

3. அவன் சிற்றில் உலகம் என்னுமதனையும், அதனை அழிக்கும் சாதனம் சங்கல்பம் என்னுமதனையும் விளக்கமாக அருளிச்செய்கிறார் 'உன்சிற்றில்' என்று தொடங்கி.

4. காதலியானவள், 'காலால்' என்னாமல், "திருவடியால்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'அடியவர்களுக்கு' என்று தொடங்கி.

5. மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'வெறும் சிற்றிலை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'சிற்றிலோடு' என்று தொடங்கி. இங்கே, "முற்றத்தூடு புகுந்து" என்ற நாய்ச்சியார் திருமொழி திருப்பாசுரம் அநுசந்தேயம். 2: 9.

6. அழித்த பிரகாரம் யாங்ஙனம்? என்ன, 'காலாலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. காதலி, கிருபை செய்திலை என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரிந்தபோதே' என்று தொடங்கி. தகவு-அருள். இரண்டாவது பொருளில், 'கண்' என்பதற்கு, நீதி என்பது பொருள்.

8. நல்லது காணாதபோது கண் படைத்ததற்குப் பயன் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உன்முகத்தன' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி. 2: 5.

குறை என்?' என்ன, எங்கள் சிற்றிலும் யாம் அடு சிறு சோறும் கண்டு நின்முக ஒளி திகழ முறுவல்செய்து நின்றிலை - [1]உன் படைப்பினைப் போன்று கொள்ளத்தக்கதாகாததோ எங்கள் படைப்பு? கொள்ளத் தக்கதன்றோ? 'என்னுடைய படைப்புக் கொள்ளத்தகாததாயினவாறு என்? உங்கள் படைப்புக் கொள்ளத்தக்கதாயினவாறு என்?' என்னுமே அவன்; உன்னுடைய படைப்புப் போன்று நெருப்பும் காற்றும் [2]அன்னலும் துன்னலுமாக விட்டுக் கருமங்கட்குத் தகுதியாகப் படைக்கப்பட்டதோ இது? வண்டல் நுண்மணல் தெள்ளி யாம் வளைக் கைகளால் சிரமப்பட்டுப் படைக்கப்பட்டதன்றோ இது! நீ அடு சிறு சோறு[3] நிர்மால்யத்தைப்போன்று புறம்பு ஒருவர்க்கு உண்ணலாகாது; நீயே உண்ணுமத்தனை; நாங்கள் அடு சோறு மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக் கூடி இருந்து உண்ணுமத்தனை யன்றோ என்பார் **'யாம் அடு சிறு சோறும்'** என்கிறார்கள். **'கண்டு நின்முக ஒளிதிகழ முறுவல்செய்து நின்றிலையே'** என்றதனால் [4]'எங்களுடைய லீலாவிநோதங்களைக் கண்டு பிரீதனாய், உன்னுடைய முகஒளி திகழப் புன்முறுவல் செய்து நிற்கமாட்டிற்றிலையே; இங்ஙன் செய்தவிடம் தக்கோர்மை செய்தாயல்லையே என்று தங்களுடைய இன்னாமையைத் தெரிவிக்கிறார்கள். தகவு செய்திலை - [5]நாங்கள் சிற்றில் இழைக்கிறோமாகப் பாவித்துக் கடைக்கண்ணாலே உன் முக ஒளியையும் முறுவலையும் கண்டுகொண்டிருக்க வொட்டிற்றிலையே. முழுக்கப் பார்க்கில் எல்லாரையும் போன்றவர்களாவோமே: [6]காதலனைப்

1. "எங்கள் சிற்றில்" என்றதற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'உன் படைப்பினைப் போன்று' என்று தொடங்கி.

2. அன்னல் - வெயில். துன்னல் - சிறு திவலை. 'வண்டல்' என்று தொடங்கும் இவ்விடத்தில் "குண்டுநீர் உறை" என்ற நாய்ச்சியார் திருமொழி திருப்பாசுரம் அநுசந்தேயம். 2: 3.

3. நிர்மால்யம் - சிவன் கோயில் நிர்மாலியம். 'மூட நெய் பெய்து' என்ற விடத்தில் திருப்பாவை திருப்பாசுரம் (27.) அநுசந்தேயம்.

4. "எங்கள் சிற்றில்" என்று தொடங்கி, "நின்றிலை, தகவு செய்திலை" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'எங்களுடைய' என்று தொடங்கி. தக்கோர்மை - அருள், நியாயம்.

5. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'நாங்கள்' என்று தொடங்கி.

6. எய்யவில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்
மெய்வினை விடத்துமுத லையம்விட லுற்றாள்
ஐயனை யகத்துவடி வேயல புறத்தும்
**கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்,**

என்றார் கம்பநாட்டாழ்வார். (கோலங்காண். 37.)

பார்ப்பது, கடைக்கண்ணாலேயன்றோ? [1] எங்ஙனே பாராதே இருந்து சிற்றில் இழைத்தார்கள்தாம்! (9)

## 573.

நின்றிலங்கு முடியினாய்! இருபத்தோர் கால் அரசுகளை கட்ட
வென்றிநீள் மழுவா! வியன்ஞாலம் முன்படைத்தாய்!
இன்றிவ் வாயர் குலத்தை வீடுய் யத்தோன் றியகரு மாணிக் கச்சுடர்!
நின்றன்னால் நலிவேபடு வோம் என்றும் ஆய்ச்சியோமே.

பொ - ரை:—நிலைபெற்று விளங்குகின்ற கிரீடத்தையுடையவனே! இருபத்தொருபடிகால் அரசர்களைக் குலத்தோடு வேர் அறுத்த வெற்றி பொருந்திய நீண்ட மழு என்னும் ஆயுதத்தையுடையவனே! அகன்ற உலகத்தையெல்லாம் முன்னே உண்டாக்கினவனே! இக்காலத்திலும் இந்த ஆயர் குலமானது அடியோடு உய்வுபெறும்படியாகத் தோன்றிய கரிய மாணிக்கச் சுடரே! ஆய்ச்சியர்களாகிய நாங்கள் எப்பொழுதும் உன்னால் துன்பமே படுகின்றோம்.

வி - கு:—களைகட்டல் - களைபிடுங்குதல். 'மழுவா' என்றது, பரசுராமனை. குலத்தை - குலமானது; உருபு மயக்கம். வீடு உய்ய - விடுபட்டு உய்ய என்னலுமாம்; மோக்ஷத்தைப் பெற்று உய்வுபெற என்னலுமாம். ஆய்ச்சியோம் நலிவே படுவோம் என்க.

ஈடு:—பத்தாம்பாட்டு. [2]"நின் முக ஒளி திகழ முறுவல் செய்து நின்றிலையே" என்று விழுக்காடு அறியாதே வாய் தப்பச் சொல்லிக்கொண்டு நின்றார்கள்; காலால் அழித்தது சிற்றிலை யன்று: இவர்கள் நெஞ்சுகளிலுள்ள மறத்தையே யன்றோ; அந்த மறம் போனவாறே மேல்நோக்கிப் பாதாதிகேசாந்தமாகப் பார்த்தார்கள்; தங்களை வென்றதனால் உண்டான உவகை வடிவிலே தோற்றும்படி நின்றான்; அவ்வடிவிலே பிறந்த வேறுபாட்டினைச் சொல்லுகிறார்கள்.

---

1. வியாக்கியாதாவின் ஈடுபாடு, 'எங்ஙனே' என்று தொடங்கும் வாக்கியம்.

2. பாசுரமுழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'விழுக்காடு அறியாதே' என்றது, மேல் புணருமதனை அறியாமலே என்றபடி. வாய்தப்பச் சொல்லுகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'காலால் அழித்தது' என்று தொடங்கி. 'அந்த மறம் போனவாறே' என்று தொடங்கிப் பாசுரத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார்.

நின்று இலங்கு முடியினைய் - [1] இவர்களை வெல்வதற்கு முன்பு தலைச்சுமையாய்க் காணும் கிடந்தது; இப்போதாயிற்று நற்றரித்து ஒளிவிடத் தொடங்கிற்று. [2] இராசாக்கள் சிலர் தந் தாம் பகைவர்களை அழித்து வீர அபிடேகமும், விஜய அபிடேகமும் பண்ணி நிற்குமாறுபோலே. முன்பே முடி சூடி இருக்கச் செய்தேயும் இவர்களைத்தோற்பிப்பதற்கு முன்பு இல்லாததற்குச் சமமாகக் காணும் இருந்தது. [3] இராவணன் முதலாயினோர்களை வென்றதற்கு முடி சூடினதுபோன்று அன்று காணும், காதலிமார்களை வென்றதற்குச் சூடின முடி இருப்பது; [4] இவர்கள் எண்ணங்களைக் குலைத்துப் பொருந்தவிட்டுக் கொண்ட பின்பு காணும் மேன்மையையுடையவனைப் பிரகாசிக்கின்றவனுமாய் முடியும் நற்றரித்தது.[5] "ஸ்ரீராமபிரான் விபீடணனை அரக்கர்களுக்குத் தலைவனாக இலங்கையில் அபிடேகம் செய்து, அப்போது செய்து முடித்த எல்லாக் காரியங்களையுமுடையவராயும் ஜ்வரம்அற்றவராயும் மகிழ்ந்தார்அன்றோ." [6] ஸ்ரீபரதாழ்வானைப்போலே, **'நான் முடிசூடேன் நீர் முடிசூடும்'** என்று முடிக்கு இறாய்க்கின் செய்வது என்? என்று உடம்பு வெளுத்துக் காணும் இவர் இருந்தது; [7] 'ஒருபடி அத் தலைச்

1. இப்பொழுது, நிலைபெற்றுப் பிரகாசிக்கின்றது என்கையாலே, இதற்கு முன்னர் அங்ஙனம் இல்லை என்று தோற்றுகிறதே யன்றோ; அதனை அருளிச்செய்கிறார் 'இவர்களை' என்று தொடங்கி. 'நற்றரித்து ஒளிவிடத் தொடங்கிற்று' என்பது, "நின்று இலங்கு" என்றதன் பொருள்.

2. அதனைத் திருஷ்டாந்தம் காட்டி விளக்குகிறார் 'இராசாக்கள் சிலர்' என்று தொடங்கி. வீராபிடேகம் செய்துகொண்டது, அபிமந்யு. விஜயாபிடேகம் செய்துகொண்டது, அருச்சுனன்.

3. பெண்களை வென்று முடி சூடினான் என்றது, ஒரு அதிசயமோ? என்ன, 'இராவணன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. "நின்று இலங்கு முடியினாய்" என்ற மூன்று பதங்களின் பொருள்களை அவரோகணக் கிரமத்தாலே விவரிக்கிறார் 'இவர்கள்' என்று தொடங்கி.

5. இவர்களைப் பொருந்தவிட்டுக் கொண்டபின்பு, தான் கிருதக் கிருத்யனாய் இருந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஸ்ரீராமபிரான்' என்று தொடங்கி.

"அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்
க்ருதக்ருத்யஃ ததா ராமோ விஜ்வரஃ ப்ரமுமோத ஹ"

என்பது, ஸ்ரீராமா பால. 1: 85.

6. நன்று; "அபிஷிச்ய க்ருதக்ருத்யஃ - அபிடேகத்தைச் செய்து தன் கடமையைச் செய்து முடித்தவரானார்" என்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீ பரதாழ்வானைப் போலே' என்று தொடங்கி.

7. உடம்பு வெளுத்திருந்த பெருமாளுடைய திருவுள்ளக் கருத்தை அருளிச்செய்கிறார் 'ஒருபடி' என்று தொடங்கி,

சுமையைக் கழித்துப் போநந்தோம்; இதுவும் ஒரு தலைச்சுமை யாகின் செய்வது என்?' என்று. [1]இக்ஷ்வாகு வம்ஸ்யர்க்குப் பணியன்றோ முடிக்கு இறாய்க்கை. [2]அடிக்கு இறாயாதிருக்கையும் முடிக்கு இறாய்க்கையுமன்றோ சொரூபம். [3]'அது கிடக்க; உங்களுடைய எண்ணங்களைக் குலைத்து உங்களை வென்றோம் அன்றோ' என்றான். இருபத்தொருகால் அரசு களைகட்ட வென்றி நீள் மழுவா-[4]மிடுக்கரான அரசர்களை இருபத்தொரு படிகால் வென்ற உனக்கு அபலைகளான எங்களை வெல்லுகை பெரிய பணியோ? "எனக்கு"என்று இருப்பாரையும் உனக்கு ஆக்கிக் கொள்ளவல்ல உனக்கு உனக்கேயாய் இருப்பாரை வெல்லுகை பெரியஏற்றமோ? இராஜாக்களை வென்ற உனக்கு ஆய்ச்சியர்களை வென்றாய் என்பது ஓர் ஏற்றமோ? அசுரத் தன்மை வாய்ந்தவர்களாய் நாட்டினைப் பட அடித்துத் திரிந்த க்ஷத்திரிய குலத்தைக் கிழங்கு எடுத்த மிடுக்கனே! களைகட்டுகையாவது, எடுத்துப் பொகடுகை.

---

1. ஸ்ரீ பரதாழ்வான் முடிக்கு இறாய்த்தால், ஸ்ரீ விபீஷணாழ்வானும் முடிக்கு இறாய்க்கவேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இக்ஷ்வாகு வம்ஸ்யர்க்கு' என்று தொடங்கி.

குகனொடும் ஐவரானோம் முன்பு; பின் குன்றுசூழ்வான்
மகனொடும் அறுவரானோம்; எம்முழை அன்பின் வந்த!
அகனமர் காதல் ஐய! நின்னொடும் எழுவ ரானோம்;
புகலருங் கானந் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை.
நடுவினிப் பகர்வ தென்னே நாயக! நாயி னேனை
உடனுதித் தவர்களோடும் ஒருவனென் றுரையா நின்றாய்
அடிமையிற் சிறந்தேன் என்னு அயிர்ப்பொடும் அச்சம் நீங்கித்
தொடுகழற் செம்பொன் மௌலி சென்னியிற் சூட்டிக் கொண்டான்.

என்பன அநுசந்தேயம். (கம். விபீட. 146, 147.)

2. அவர்கள் தாம் முடிக்கு இறாய்க்கைக்குக் காரணம் யாது? என்ன, 'சொரூபஞானம் பிறந்த உரப்பு' என்கிறார் 'அடிக்கு இறாயாதிருக்கையும்' என்று தொடங்கி.

3. 'அது கிடக்க' என்றது, "நின்று இலங்கு முடியினாய்" என்று என்னைக் கொண்டாடுவது கிடக்க என்றபடி.

4. 'உங்களை வென்றோம் அன்றோ' என்றதற்கு, மூன்று வகையாக விடை அருளிச்செய்கிறார்கள் 'மிடுக்கரான' என்று தொடங்கியும், 'எனக்கு என்றிருப்பாரையும்' என்று தொடங்கியும், 'இராஜாக்களை' என்று தொடங்கியும்.இம்மூன்றாலும், சரீரத்தாலும் மனத்தாலும் சாதி காரணமாகவும் வருகிற தோல்விகளைக் குறித்தபடி.

வியன் ஞாலம் முன் படைத்தாய் - [1]பிரளயத்தில் உரு மாய்ந்து கிடந்த பூமியை உண்டாக்கினாற் போலே அன்றோ பிரணய ரோஷத்தாலே அழிந்த எங்களை உண்டாக்கினபடி. வியன் - ஆச்சரியம். [2]பிரளயம் கொண்ட பூமியை எடுத்தாற் போலே, விரஹ பிரளயம் கொண்ட எங்களை எடுத்தபடி. [3]அங்கு விலக்குவார் இல்லாமையாலே செய்யலாம்; '**கழகம் மேறேல்**' என்று விலக்கச் செய்தேயன்றோ உண்டாக்கிற்று? இன்று இவ் வாயர் குலத்தை வீடு உய்யத் தோன்றிய கரு மாணிக்கச் சுடர்-[4]"பல பொருள்களாக ஆகக்கடவேன்" என்று பொதுவான சிருஷ்டியைத் தேடிப் போக வேணுமோ? இந்த ஆயர்குலத்திலே வந்து பிறந்து, இன்று இவ் வாயர் குலத்தை வடிவைக் காட்டி மனைவி மக்கள் முதலியவர்களோடு ரக்ஷித்தவனாதலின் '**கரு மாணிக்கச் சுடர்**' என்கிறார்கள். அன்றிக்கே, தன்னை அடைந்தார் திறத்திற் பண்ணின ஓரம் தன்பேறு என்னுமிடம் வடிவிலே தோன்றும்படி காணும் இருக்கிறது; ஆதலின், '**கரு மாணிக்கச் சுடர்**' என்கிறார்கள் என்னுதல். அன்றிக்கே, பிரணயரோஷத்தாலே 'சேரோம்' என்று இருக்கிற தங்களைச் சேர்த்தபடியாலே '**கருமாணிக்கச் சுடர்**' என்கிறார்கள் என்னுதல். "புத்திர பௌத்திரர்களாகிய அடிமைப் பொருள்களோடு" என்கிறபடியே, ஒருசேர உய்வு பெறும்படி செய்தானாதலின் '**வீடு உய்ய**' என்கிறது. தோன்றிய - ஆவிர்ப்பவித்த. நின்தன்னால் என்றும் நலிவே

---

1. தங்களுடைய பிரணயரோஷத்தைப் போக்கிச் சேர்த்துக்கொண்ட படியைச் சொல்லுகிற இடத்தில் படைத்தலைக் கூறியதற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'பிரளயத்தில்' என்று தொடங்கி.

2. இவர்களுக்கும் பிரளயம் உண்டு என்பதனைக் காட்டுகிறார் 'பிரளயம்' என்று தொடங்கி.

3. உலகத்தைப் படைத்தலைப் போன்று அத்துணை அருமை உண்டோ இங்கு? என்ன, அதிலும் இங்கு அருமை அதிகம் என்கிறார் 'அங்கு' என்று தொடங்கி.

4. "கரு மாணிக்கச் சுடர்" என்றதற்கு மூன்று வகையாக, பாவம் அருளிச்செய்கிறார். தன் வடிவழகாலே ஆயர்குலத்தை வசீகரித்தவன் என்பது முதல் வகை; இதனை அருளிச்செய்கிறார் 'பல பொருள்களாக' என்று தொடங்கி. ஆயர்குலத்தை உஜ்ஜீவிப்பித்த பின்பு அவன் வடிவு புகர் பெற்றது என்பது இரண்டாவது கருத்து; இதனை அருளிச்செய்கிறார் 'தன்னை அடைந்தார் திறத்தில்' என்று தொடங்கி. ஆயர்குலத்தை உஜ்ஜீவிப்பித்தவனாய் எங்கள் பிரணயரோஷத்தைத் தீர்க்கையாலே மாணிக்கச்சுடரானான் என்பது மூன்றாவது கருத்து; இதனை அருளிச்செய்கிறார் 'பிரணயரோஷத்தாலே' என்று தொடங்கி. "கருமாணிக்கச் சுடர்" என்றது, விளிப்பெயர்.

படுவோம் ஆய்ச்சியோமே - [1]பகைவர்களாய் முடிந்து போகப் பெறுதே, சம்சாரிகளாய் வேறு ஒன்றிலே நோக்குள்ளவர் களாய்ப் போகப்பெறுதே, நீ நலியவும் நாங்கள் நோவுபடவு மாம்படி சமைந்து விட்டதன்றே! [2] இரண்டு தலையும் கூடி மேல்விழுந்து அணைத்துக்கொண்டு நின்று சொல்லுகிற வார்த்தைஅன்றே. இவ்வளவும் தங்கள் வெற்றியேஅன்றே சொல்லிப் போந்தது;இப்போதுஅன்றே தங்கள் தோல்விக்கு இசைந்தது. நலிவே படுவோம் - [3] இதுதான் எங்களுக்கு மெய் யாகப் புகாநின்றதோ? எங்களுடையது அன்றே எங்களுக்குச் சித்தித்து விடுவது. இவர்களுடையதாவது, [4] "கூடிலும் நீங்கி லும் யாம் மெலிதும்" என்று மெலிவேயாயிருக்கை. செய்வது இன்னது என்று அறியாத தாங்கள் என்பார் "**ஆய்ச்சி யோமே**" என்கிறார்கள். (10)

## 574.

ஆய்ச்சி யாகிய அன்னை யால்அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்ற [முண்டழு
கூத்த அப்பன்தன்னைக் குருகூர்ச் சடகோபன்
ஏத்திய தமிழ்மாலை ஆயி ரத்துள் இவையும் ஓர் பத்து இசையோடும்
நாத்தன்னால் நவிலஉரைப் பார்க்குஇல்லை நல்குரவே.

---

1. "நின் தன்னால் நலிவே படுவோம்" என்கிறவர்களுடைய மனோ பாவத்தை அருளிச்செய்கிறார் 'பகைவர்களாய்' என்று தொடங்கி. "அரசு களை கட்ட, வியன்ஞாலம்" என்பனவற்றைக் கடாக்ஷித்து, 'பகைவர்களாய்' என்றும், 'சம்சாரிகளாய்' என்றும் தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. "நலிவே படுவோம்" என்ற இது, 'பிரணயரோஷத்தாலே சொல்லுகிற வார்த்தையோ? என்ன; 'இரண்டுதலையும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இங்ஙனம் தாம் அருளிச்செய்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இவ்வளவும்' என்று தொடங்கி.

3. இப்போது, கலவி சித்தித்திருக்க "நலிவே படுவோம்" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதுதான்' என்று தொடங்கி.

4. "கூடிலும் நீங்கிலும்" என்பது, திருவிருத்தம். 16.

இத்திருப்பாசுரக் கருத்தோடு,

"வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்"

என்னும் திருக்குறள், ஒரு புடை ஒப்புமையுடைத்தாம்.

**பொ - ரை :**—அன்று வெண்ணெய் களவு போயிற்று என்ற வார்த்தை பிறந்த அளவிலே ஆய்ச்சியாகிய தாயால் சிறப்பட்டு அழுத கூத்தனாகிய அப்பனை, திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் துதித்த தமிழ்மாலை ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் இசையோடும் நாவினால் விருப்பத்தோடு சொல்லுகின்றவர்கட்கு வறுமை இல்லை.

**வி - கு :**—அன்று வெண்ணெய் வார்த்தையுள் ஆய்ச்சியாகிய அன்னையால் சீற்றம் உண்டு அழு அப்பன் என்க. 'ஆய்ச்சியாகிய அன்னை' என்றது, பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம். நவில உரைத்தல் - மனத்தொடுபடவுரைத்தல்.

**ஈடு :**—முடிவில், [1]இத் திருவாய்மொழியை ஆதரத்தோடு சொல்ல வல்லார்க்குப் பகவானுடைய அநுபவத்தின் வறுமை இல்லை என்கிறார்.

ஆய்ச்சியாகிய அன்னையால் -[2]அரசர் குலத்தில் ஒரு தாயும் ஆயர்குலத்தில் ஒரு தாயும் ஆகையாலே, பொதுவறுத்து ஆய்ச்சியாகிய தாயாலே என்கிறார். [3]தேவகிப் பிராட்டியார் அடிக்கில் இத்தனை நோவாது காணும். [4]"தாய் எடுத்த சிறு கோலுக்கு உளைந்து ஓடி" என்கிறபடியே, '**இவள் நம்மை அதட்டுவதே!**' என்று உளைந்தன்றோ கிடப்பது. [5]தெய்வம் அறியத் தாய் ஆயினமை அன்றோ தேவகியார்பக்கல் உள்ளது; முலைச்சுவடு அறிந்ததும் முகம் பழகிற்றும் வளர்ந்ததும் எல்லாம் இங்கே அன்றோ. அன்று வெண்ணெய் வார்த்தை

---

1. "நவில உரைப்பார்க்கு இல்லை நல்குரவு" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'அன்னையால்' என்னாமல், "ஆய்ச்சியாகிய அன்னையால்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அரசர் குலத்தில்' என்று தொடங்கி.

3. "ஆய்ச்சியாகிய தாய்" என்றதற்குக் கருத்து ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தேவகிப் பிராட்டியார்' என்று தொடங்கி.

4. யசோதைப் பிராட்டி அடித்தால் நோவுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாய் எடுத்த' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 8. 3: 5. உளைந்து - வருந்தி.

5. தாயாந் தன்மை இருவர்க்கும் பொதுவாக இருக்க, அவள் அடித்தால் பொறுக்கப் போகாமைக்குக் காரணம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தெய்வம் அறிய' என்று தொடங்கி.

யுள் - [1]ஊரிலே '**வெண்ணெய் களவு போயிற்று**' என்றார்கள்; அவ்வளவிலே '**நாம் அன்றோ இதற்கு இலக்கு**' என்று அழப் புக்கான். [2]'மடம் மெழுகுவார் யார்?' என்ன, '**அஶ்ரோத்திரியன்**' என்றார்கள்; 'இப் பரப்பு எல்லாம் என்னாலே மெழுகப் போமோ' என்றான்; அதுபோலே. [3] யாரேனும் ஏதேனும் செய்யிலும் இவனைச் சொல்லும்படியன்றோ இவனுடைய தீம்பு தான் இருப்பது; "பல்லாயிரவர் இவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார் எல்லாம் உன்மேலன்றிப் போகாது" என்னும் படியன்றோ இருப்பது. **சீற்றம் உண்டு அழு கூத்த அப்பன் தன்னை** - [4] தாயார் பொடியப் பொடியுண்டு அழுகிற நிலையில் "பையவே நிலையும்" என்கிறபடியே நிற்கிற நிலை, வல்லார் ஆடினாற்போலே இருந்தபடி. [5] அன்றிக்கே, அழுகையாகிற கூத்தையுடைய மஹோபகாரகனை என்றுமாம். [6] இது ஒன்றற்கு எடுத்துக்காட்டாகச் சொல்லுகிறது: "போகு நம்பீ" என்றும், "கழகம் ஏறேல் நம்பீ" என்றும் இவர்கள் சொன்ன

---

1. 'வெண்ணெய் உண்டு அழு' என்னாமல், "வார்த்தையுள் அழு" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஊரிலே' என்று தொடங்கி.

2. சொன்ன மாத்திரத்திலே தன் மேலே ஏறிட்டுக்கொள்ளுவதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'மடம் மெழுகுவார்' என்று தொடங்கி. அஶ்ரோத்திரியன் - சுரோத்திரியம் இல்லாதவன்; பிராமணன் அல்லாதவன். சுரோத்திரியம் - இனும் நிலம்.

3. 'இவன்' என்று தன்னைச் சொல்லாதிருக்க, தன்பேரிலே ஏறிட்டுக் கொண்டு இவன் அழுதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'யாரேனும்' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பல்லாயிரவர்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 2. 8 : 5.

4. அழுகை கூத்து ஆகமாட்டாமையாலே, அழுகிறபோது "பையவே நிலையும்" என்கிறபடியே நிற்கிற நிலை என்கிறார் 'தாயார் பொடிய' என்று தொடங்கி. என்றது, தமக்குக் கவர்ச்சிகரமாயிருக்கையாலே "கூத்த அப்பன்" என்கிறார் என்றபடி. 'பையவே' என்பது, திருவாய். 5. 10: 3.

5. இரண்டாவது பொருளுக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, எல்லாரையும் நியமிக்கின்றவனுக்கு அழுதற்குத் தகுதி இல்லாமையாலே அழுகிறானைப் பாவித்தான் என்றபடி.

6. "அழு கூத்த அப்பன்" என்று வர்ணிப்பது என்? என்ன, 'இது ஒன்றற்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். தியோதகம் - சூசகம், குறிப்பு.

போது ஒன்றிலும் விருப்பம் இல்லாத அவன் கால் வாங்கிப் போகமாட்டாதே நின்ற நிலைக்குத் தியோதகம். அப்பன் தன்னை - [1] அந்த நிலையைக் காட்டிச் சேர்த்துக்கொண்டு தம்மை உண்டாக்கினபடி.

குருகூர்ச் சடகோபன் ஏத்திய தமிழ் மாலை - [2]பிரணய ரோஷத்தாலே "போகு நம்பி" என்றும், "கழகம் ஏறேல் நம்பீ" என்றும், "நின்புள்ளுவம் அறியாதவர்க்கு உரை நம்பீ" என்றும் சொன்னவையெல்லாம் அந்தப் பிரணயரோஷம் போனவாறே ஏத்தாய்விட்டது. ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து - [3]தன்னை அடைந்தவர்களோடு உண்டான பாவபந்தத்தை வெளியிட்ட ஒப்பற்ற பத்து. இசையொடும் - சொல் மாத்திரத்தாலே. நவில உரைப்பார்க்கு - ஆதரத்தோடு சொல்லுவார்க்கு. நல்குரவு இல்லை - வறுமை இல்லை; பகவானுடைய அநுபவத்தின் வறுமை இல்லை. என்றது, தூதுவிட்டு, அவன் வரக்கொண்டு '**புகுர ஒட்டோம்**' என்று பட்ட கிலேசம் படவேண்டா என்றபடி. [4] சோறும் புடைவையும் கிடைக்கும் என்கிறது அன்று; பகவானுடைய அநுபவத்தின் வறுமை இல்லை என்கிறது; [5]"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்று இருக்கிற இவருடைய வறுமை அன்றோ ஆகையாலே. அதிகாரிகட்குத் தகுதியாக அன்றோ உண்ணும் உணவு முதலானவைகளும் இருப்

---

1. "அப்பன்" என்றதற்கு, மேலே உபகாரகன் என்று பொருள் அருளிச்செய்து, 'பிறப்பித்தவன்' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அந்த நிலையை' என்று தொடங்கி.

2. பிரணயரோஷத்தாலே நீக்குதல் தோன்ற வார்த்தை சொல்லாநிற்க "ஏத்திய" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரணய ரோஷத்தாலே' என்று தொடங்கி. என்றது, அவனைக் கண்டவாறே தம்முடைய கோபம் நீங்கித் துதித்தால் பிறக்கும் பிரீதி அவனுக்கு உண்டாகையாலே "ஏத்திய" என்கிறார் என்றபடி.

3. "இவையும் ஓர்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய் செய்கிறார் 'தன்னை அடைந்தவர்களோடு' என்று தொடங்கி.

4. 'செல்வத்தின் வறுமை இல்லை' என்று கூறுகிறது என்று கூறினலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சோறும் புடைவையும்' என்று தொடங்கி.

5. சோறும் புடைவையும் கிடைக்கும் என்றாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உண்ணும் சோறு' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 7; 1.

பன. [1]"உண்டியே உடையே உகந்து ஓடும் இம்மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்" என்கிறவர்கள் இவற்றைச் செல்வமாக நினையார்களே. [2]"சென்று ஒன்றி நின்ற திரு" என்கிறபடியே அவன்தானே வந்துமேல்விழ நித்தியாநுபவம் பண்ணப்பெறுவர்கள்.

'அழ கூத்த அப்பன்' என்கிற இடத்தில் [3]"முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டு உண்ணும்" என்கிற பாசுரத்தை யோஜித்துக் கொள்வது. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

**மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தென வந்தானென்று**
**தன்னிலைபோய்ப் பெண்ணிலைபாய்த் தான்தள்ளி-உன்னுடனே**
**கூடேனென்று ஊடுங் குருகையர்கோன் தாள்தொழவே**
**நாடோறும் நெஞ்சமே நல்கு.** (52)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. மேல் அந்வயத்தால் அருளிச்செய்து வியதிரேகத்தால் அருளிச்செய்கிறார் 'உண்டியே' என்று தொடங்கி. இது, பெருமாள் திருமொழி. 3 : 4.

2. வறுமை இல்லையாகில், பெறுகிறது எது? என்ன, 'சென்று ஒன்றி நின்ற திரு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, நான்முகன் திருவந், 61.

3. "முழுதும் வெண்ணெய்" என்ற திருப்பாசுரம், பெருமாள் திருமொழி. 7 : 8.

# மூன்றாந் திருவாய்மொழி — " நல்குரவும் "

## முன்னுரை

---

ஈடு:—[1] " ' இப்படித் தாழநின்றவன் சர்வேசுவரன் ' என்கிறார் என்று **பிள்ளான்** பணிக்கும் " என்று அருளிச்செய்வர். அதாகிறது, "யாவையும் யாவரும் பிழையாமல் பிணக்கி" என்று மேலே சொல்லிய சர்வேசுவரத்வத்தை அருளிச்செய்கிறார் என்றபடி. ' இதிலே [2]ஒரு வேறுபாடு தோன்ற **பட்டர்** அருளிச்செய்வர் ' என்று **சீயர்** அருளிச்செய்வர். [3] அதாவது, " சேரோம் " என்ற எண்ணத்தைக் குலைத்துத் தம்மைச் சேர விட்டுக்கொண்ட ஆச்சரியத்தைக் கண்டு ஆச்சரியப்படுகிறார் என்பதாம். [4] சேர விட்டுக்கொண்ட படிதாம் பலவாக இருக்கு

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இத் திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிறார். அவ் வியைபினை, மேல் திருவாய்மொழியிலே எளிமையைச் சொன்னவர், இத்திருவாய்மொழியில் சர்வேசுவரத்வத்தைச் சொல்லுவான் என் ? என்கிற சங்கையிலே, பெரியவன் எளிமையே குணமாவது என்கிற தன்மையாலே பரத்துவத்தைச் சொல்லுகிறார் என்னுமதனை ஆப்தர்களுடைய வார்த்தைகள் மூலமாகக் காட்டுகிறார் ' இப்படித் தாழநின்றவன் ' என்று தொடங்கி. ' இப்படித் தாழநின்றவன் ' என்றது, " போகு நம்பி ", " கழகம்ஏறேல் நம்பி " என்னலாம்படி தாழநின்றவன் என்றபடி. அதனை விவரணம் செய்கிறார் ' அதாகிறது ' என்று தொடங்கி.

2. ' ஒரு வேறுபாடு தோன்ற ' என்றது, பரத்துவத்தைச் சொல்லுவதாயிருக்கச்செய்தே " நல்குரவும் செல்வும் " என்றது முதலாக முரண்பட்ட தன்மையை அருளிச்செய்கையாலே ஒரு விசேடம் தோற்ற என்றபடி.

3. ' அதாவது ' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, இத் திருவாய்மொழியில் சர்வேசுவரத்வத்தை அருளிச்செய்கிறாராகில், உபய விபூதிகட்கும் நிர்வாஹகன் என்கிற இவ்வளவே சொல்ல அமைந்திருக்க, " நல்குரவும் செல்வும் " என்று தொடங்கி இத்திருவாய்மொழி முடிய முரண்பட்ட தன்மையனாயிருத்தலை அருளிச்செய்ததற்குப் பிரயோஜனம் அடைவுபடாமையாலே, பிரணயரோஷத்தாலே ' சேரோம் ' என்று முடிந்து போகப்புக்க தம்மை, தன்னுடைய சக்தி விசேடத்தாலே சேரவிட்டுக்கொண்டமைக்கு எடுத்துக்காட்டாக,முரண்பட்ட தன்மையனாயிருத்தலை அவன் காட்டித்தர, இவரும் கண்டு அதனை அருளிச்செய்கிறார் என்பது.

4. முன்னரேயும் இங்ஙனம் சேரவிட்டுக் கொண்டமை இல்லையோ ? அவற்றிற்கும் இதற்கும் வேறுபாடு யாது ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ' சேரவிட்டுக்கொண்டபடி தாம் ' என்று தொடங்கி,

மன்றே: [1]முதல் தன்னிலே தம்மையும் அறியாதே அவனையும் அறியாதே இருக்க, தன்படிகளை அறிவித்துக் கூட்டுவித்துக் கொண்டான்; உள்ளே புகுர நின்று தம்முடைய தாழ்வினையும் அவனுடைய உயர்வினையும் அநுசந்தித்து 'நாம் அங்குத்தைக்குத் தக்கவர்அல்லோம்' என்று அகல, தன்செல்லாமையைக் காட்டிப் பொருந்தவிட்டுக் கொண்டான்; [2]இனி, அவை போன்றுஅன்றே இது; ஒன்றால் போக்கக் கூடியதுஅன்றே. [3]அகலில் குற்றம், அணுகில் குற்றமாய் இருப்பது ஒன்றேயன்றே! [4]ஜாதி சண்டாளனை நோக்கினால் பிராயச்சித்தம் உண்டு; பிரணயத்தால் உண்டாகிய கோபம் ஆகிற காரணத்தால் சண்டாளர் ஆனவர்க்கு அதுவும் இல்லை. ஆக, இந்தப் படிகளாலே தன்செல்லாமையைக் காட்டி அவன் பொருந்தவிட்டுக்கொண்ட படியைக் கண்டு ஆச்சரியப்படுகிறார் என்றபடி.

---

1. அவற்றினுடைய தன்மைகளையும் விளக்கமாகக் காட்டாநின்றுகொண்டு, அவற்றிலும் இதுவே அரிது என்கிறார் 'முதல் தன்னிலே' என்று தொடங்கி. மயர்வற மதிநலம் அருளிச் சேரவிட்டுக் கொண்டமையிலே நோக்காக 'முதல் தன்னிலே' என்று தொடங்கும் வாக்கியம் எழுகிறது. "வளவேழுலகு" என்ற திருவாய்மொழியிலே நோக்காக 'உள்ளே புகுர நின்று' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'இனி, அவைபோன்றுஅன்றே' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, தன் சொரூபம் முதலானவைகளையும், தனக்கு இவர் பக்கல் உண்டான வியாமோகத்தையும் அறியாதே அகன்ற இவரை அவற்றை அறிவித்துக் கூடவிட்டுக்கொண்டவை யாகையாலே மேலே கூறிய இரண்டும் எளிது. இங்குத் தன்பக்கல் பாவபந்தம் முருடு கொளுந்தி அகன்ற இடமாகையாலும் காரணங்களைக் காட்டி நீக்கப் போகாமையாலும் அரிது என்பது.

3. நீக்கப் போகாமையைக் காட்டுகிறார் 'அகலில் குற்றம்' என்று தொடங்கி.

இங்கே,

இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.
உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

என்ற குறட்பாக்களின்பொருள் ஒப்புநோக்கத்தக்கது.

4. "பாவியேன் மனத்தே" (பா. 6.) என்றதனைக் கடாக்ஷித்து, ஈசுவரன் மேல் விழாநிற்க முகம் மாறி இருந்த இது, பிராயச்சித்தம் இல்லாத பாபம் என்கிறார் 'ஜாதி சண்டாளனை' என்று தொடங்கி. நோக்கினால் - திருத்தப் பார்த்தால். 'பிரணயத்தால்' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, தலைவன் விஷயத்தில் தலைவிக்கு உண்டான பிரணய கோபத்துக்குப் பரிஹாரம் இல்லை என்பது. 'இந்தப் படிகளாலே' என்றது, மேல்திருவாய்மொழியிற் கூறிய வகைகளாலே என்றபடி.

அங்ஙனம் ஆச்சரியப்படுகிற இவர்க்கு, 'இவ்வளவு அல்ல காணும் நம்முடைய ஆச்சரியங்கள் இருக்கும்படி; உலகத்தில் தம்மில் தாம் சேராத மாறுபட்ட பொருள்களும் எல்லாம் நம் மோடே சேர்ந்திருக்கிறபடி பாரீர்; ஆனபின்னர், நம்மோடு சேராதார் இலர்காணும்!' என்று தன்னுடைய விருத்த விபூதி கத்வத்தைக் காட்டிக்கொடுக்க இவரும் கண்டார்; கண்ட இவர் 'இவை இருந்தபடி என்?'[1] கொடுத்த அறிவைக்கொண்டு அகலுகைக்குக் காரணமாயிருக்கிற இவற்றை எல்லாம் கூட விட்டுக்கொடு நிற்கிறபடிகளும், இனி, நிமித்தகாரணமானது உபாதான காரணமாக மாட்டாது; உபாதான காரணமானது நிமித்த காரணமாகமாட்டாது; இங்ஙனே இருக்க, இவை எல்லாம் தானேயாயிருக்கிற படியையும், இவற்றோடே கூடி இருக்கச்செய்தேயும் இவற்றின் குற்றங்கள் தன்னைத் தீண்டாமல் இருக்கிற படியையும், குற்றம் தீண்டாமல் கடக்க இருக்கை மாத்திரமன்றிக்கே நியமிக்கின்றவனாய் இருக்கிற படியையும், இனி, நாட்டில், பிராப்யமானது பிராபகம் ஆகமாட்டாது; பிராபகமானது பிராப்யம் ஆகமாட்டாது; இங்ஙனே இருக்க, பிராப்பிய பிராபகங்கள் இரண்டும் தானேயாக இருக்கிற படியையும், மற்றும், இவனுடைய அழகு சீலம் முதலானவை களையும் அநுசந்தித்து, 'இப்படி உபகார சீலனான சர்வேசுவ ரன் திருவிண்ணகரிலே வந்து அண்மையில் இருப்பவனானான்; இவன் அல்லது நமக்குப் பரம பந்துக்கள் இலர்' என்று அறுதியிட்டு, 'இவன் திருவடிகள் அல்லது பற்று இல்லை' என்று பேசுகிறாராயிருக்கிறது.

---

1. இத்திருவாய்மொழியிற் சொல்லப்படுகின்ற பொருளைச் சுருங்க அருளிச்செய்கிறார் 'கொடுத்த அறிவை' என்று தொடங்கி. "எண்ணமாய் மறப்பாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிக் 'கொடுத்த அறிவை' என்று தொடங்கியும், "பெய்த காவு கண்டீர்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இனி நிமித்த காரணமானது' என்று தொடங்கியும், (உபாதான காரணம் - முதற் காரணம்) "அல்லனாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இவற்றோடே' என்று தொடங்கியும், "பரஞ்சுடர்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிக் 'குற்றம் தீண்டாமல்' என்று தொடங்கியும், "என் சரண், என்னை ஆளுடை" என்ற தனைத் திருவுள்ளம்பற்றி 'இனி நாட்டில்' என்று தொடங்கியும், (பிராப்யம் - பேறு. பிராபகம் - பேற்றினை அடைதற்குரிய வழி.) "பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன்", "தந்தனன் தன தாள் நிழலே" என்பனவற்றைத் திருவுள்ளம்பற்றி 'மற்றும் இவனுடைய' என்று தொடங்கியும், "என்னப்பன் எனக்காய் இகுளை" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இவன் அல்லது நமக்குப் பரம பந்துக்கள் இலர்' என்றும், "கழல்கள் அன்றி மற்றோர் களைகண் இலம்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இவன் திருவடிகள்' என்று தொடங்கியும் அருளிச்செய்கிறார்.

முதல் திருவாய்மொழியிலே பரத்துவ அநுபவம் பண்ணி, மூன்றும் திருவாய்மொழியிலே சௌலப்யத்தை அநுசந்தித்து "எத்திறம்" என்று கிடந்தார். இங்கு, "போகுநம்பி" என்று தள்ளச்செய்தேயும் கால்வாங்கமாட்டாதே நின்ற நீர்மையை அநுசந்தித்து, அதற்கு எதிர்த்தட்டான பரத்துவத்தை அநுசந்திக்கிறார்; இப்படிக் கிரமம் இல்லாமல் அருளிச்செய்கிறதற்குக் காரணம் யாது? என்னில், மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர் அலரோ; மேன்மையை அநுசந்திப்பது, நீர்மையை அநுசந்திப்பதாமத்தனை அன்றே.[1]

575.

நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமு மாஅய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமு மாஅய்ப்
பல்வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானைச்
செல்வம் மல்குகுடித் திருவிண் ணகர்க்கண் டேனே.

**பொ - ரை :**—வறுமையும் செல்வமுமாகி, நரகமும் சுவர்க்கமுமாகி, வெல்லக்கூடிய பகையும் நட்புமாகி, விஷமும் அமுதமுமாகி, பலவகையாகவும் பரந்த பெருமானாகி என்னை ஆள்கின்றவனைச் செல்வம் நிறைந்திருக்கின்ற மக்களையுடைய திருவிண்ணகரம் என்னும் திவ்விய தேசத்தில் பார்த்தேன்.

**வி - கு :**—ஆகி ஆகிப் பரந்த பெருமான் என்க. என்னை ஆள்வானைத் திருவிண்ணகர்க் கண்டேன் என்க. இந்தத் திவ்யதேசம், உப்பிலியப்பன் சந்நிதி என்றும், ஒப்பிலியப்பன் சந்நிதி என்றும் இப்பொழுது வழங்கப்படுகிறது. [2]செல்வு - செல்வம்.

இத்திருவாய்மொழி, கலிநிலைத்துறை.

---

இத்திருவாய்மொழியிற் கூறப்படுகின்ற பொருளோடு

1. "தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றம்நீ
கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுடர் ஒளியும்நீ திங்களுள் அளியும்நீ
அனைத்தும்நீ அனைத்தினுட் பொருளும்நீ"

என்ற பரிபாடற் பகுதி ஒப்பு நோக்கத் தகும். (பரி. 3.)

2. "செல்வை யாயின் செல்வை யாகுவை"
என்பது, புறம். செ. 70.

"செல்வாய செல்வம் தருவாய் நீயே"
என்பது, தேவாரம்.

ஈடு:—முதற்பாட்டு. [1]விருத்த விபூதிகனான சர்வேசுவர னைத் திருவிண்ணகரிலே காணப்பெற்றேன் என்கிறார்.

நல்குரவும் செல்வும்-வறுமையும், அதற்கு எதிர்த்தட்டான செல்வமும். நரகும் சுவர்க்கமும்-துக்கத்திற்கே இருப்பிடமான நரகமும், சுகத்திற்கே இருப்பிடமான சுவர்க்கமும். வெல் பகையும் நட்பும்-சமாதானத்தாலே மீளுமதன்றிக்கே வென்றே விடவேண்டும் பகையும், அதற்கு எதிர்த்தட்டான உறவும்.விடமும் அமுதமுமாய்-முடித்தே விடுவதான விஷமும், போன உயிரை மீட்கவற்றான அமுதமுமாய். [2]போன உயிரை மீட்டுத் தான் போக்கியமுமாய்அன்றோ அமிருதம் இருப்பது. [3]விருப்பம் இல்லாத வறுமை முதலானவற்றோடு விரும்பக் கூடிய செல்வம் முதலானவற்றோடு வாசியறத் ததீயத்வ ஆகா ரத்தாலே இவர்க்கு உத்தேசியமாய் இருக்குமன்றோ. பல் வகையும் பரந்த பெருமான்-[4]ஞானதிகனான தானும்கூட விபூதி யைப் பேசப் புக்கு "என்னுடைய விபூதியின் பரப்பிற்கு முடிவு இல்லை" என்று இளைத்துக் கைவாங்கினத்தை, இவ் வளவு அன்பிலே கனத்த இவரால் சொல்லப் போகாது அன்றோ.[5] ஆனாலும் சிறிது பேசினாராகவும் வேணும்அன்றோ.

---

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். விருத்த விபூதிகன் - ஒன்றற்கொன்று தம்முள் மாறுபட்ட செல்வத்தையுடைய வன்.

2. அமுதம் இனிமையாக இருக்குமே ஒழிய, போன உயிரை மீட்க வற்றாயும் இருக்குமோ? என்ன, 'போன உயிரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, அமுதத்திற்கு இரண்டு தன்மையும் உண்டு என்றபடி.

3. விரும்பப்படுகின்ற செல்வம் முதலானவற்றையும் விரும்பப்படாத வறுமை முதலானவற்றையும் சேர்த்துக் கூறுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விருப்பமில்லாத' என்று தொடங்கி. ததீயத்வ ஆகாரம் - அவனுடைய உடைமை என்னும் தன்மை.

4. மேலும் சிலவற்றைச் சொல்லாமல், "பல்வகையும் பரந்த" என்று திரள அருளிச்செய்வான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஞானதிகனான' என்று தொடங்கி.

"ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீராத்மநஸ்ஶுபாः
ப்ராதாந்யதः குருசிரேஷ்ட நாஸ்தி அந்தः விஸ்தரஸ்ய மே"

என்பது, ஸ்ரீ கீதை. 10: 19.

5. ஆயின், முதலிலேயே "பல்வகையும் பரந்த" என்னாமல், சிலவற் றைச் சொல்லுவான் என்? என்ன, 'ஆனாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, சொல்ல ஒண்ணாது என்னும்போது, சில சொல்லிப் பின்னர் 'முடியாது' என்னவேண்டுமன்றோ என்றபடி.

[1]வஸ்துவுக்கு விசேடணத்தை ஒழியத் தோன்றுதல் இல்லை யன்றே; "[2]**வஸ்து விசேடணம் இல்லாதது**"என்று விசேடணம் இல்லாததாக **மாயாவாதம்** சொல்லுகிறார் அலரே. [3]அங்ஙனே யாகில் மோக்ஷசாஸ்திரந்தான் வேண்டாவே. [4]வஸ்துவின் உண்மையைக் கொள்ளும்போது விசேடணம் வேறுபடுத்து வதாயல்லது இராது. [5]ஒன்றற்கு ஒன்று விசேடணமாகும் போது அந்யயோக வியவச்சேதம் பண்ணிக்கொண்டல்லது விசேடணம் ஆகமாட்டாது. [6]இங்கு, இவனுக்கு, தன்னினின் றும் வேறுபட்ட பொருள்களடங்கலும் விசேடணமாயிருக் கையாலே அந்யயோகவியவச்சேதம் பண்ண ஒண்ணாது; ஆனால், மாறுபட்ட விசேடணங்கள் ஒருபொருளிலே சேருகிற படி எங்ஙனே? என்னில், அயோகவியவச்சேதம் பண்ணிக் கொண்டு சேருகிறது.

---

1. அங்ஙனம் சொல்லவேண்டுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வஸ்துவுக்கு' என்று தொடங்கி.

2. விசேடணம் இன்றியே பொருள் தோன்றாதோ? என்ன, அது மாயாவாதிகளுக்கு ஒழிய, இவர்க்கு உடன்பாடு அன்று என்கிறார் 'வஸ்து விசேடணம் இல்லாதது' என்று தொடங்கி.

3. "நிர்விசேஷமே வஸ்து - பொருள் விசேடணம் இல்லாதது" என்றால், விரோதம் யாது? என்ன, 'அங்ஙனேயாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, "ஸவிசேஷ வஸ்து விஷயத் வாத் ஸர்வ பிரமாணாநாம் - எல்லாப் பிரமாணங்களும் விசேஷணத்தோடு கூடிய பொருளையே விஷயமாகவுடையன ஆகையாலே" என்கையாலே, மோக்ஷசாஸ்திரமும் விசேடணத்தோடு கூடிய பிரஹ்மத்தைச் சொல்லுகிறதே ஒழிய, விசேடணம் இல்லாத பொருளைச் சொல்லாமையாலே மோக்ஷ சாஸ் திரம் பயன் அற்றதாய்விடும் என்றபடி.

4. பொருள் விசேடணத்தை ஒழியத் தோன்றுதல் இல்லை என்றார் மேல். அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'வஸ்துவின் உண்மையை' என்று தொடங்கி. என்றது, தன்னினின்றும் வேறான பொருள்களை வேறு படுத்தும் தன்மையோடு வஸ்துவைக் கோடல்வேண்டுகையாலே என்றபடி.

5. விசேடணத்தை வேறுபடுத்துவதாகவே உடையது வஸ்து என்றால், "நல்குரவும்" என்ற இடத்தில் அது சொல்லப் போகாதே? என்று சங்கிக்கிறார் 'ஒன்றற்கு ஒன்று' என்று தொடங்கி. அந்யயோக வியவச்சேதம் - பிறிதினியைபு நீக்கிய விசேடணம்; இனச்சுட்டுள்ள அடை.

6. இங்கு அந்யயோக வியவச்சேதம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்கு' என்று தொடங்கி. என்றது, அயோக வியவச்சேதம் மாத்திரம் கோடல் வேண்டும் என்பது கருத்து. அயோகவியவச் சேதம் - இயைபின்மை நீக்கிய விசேடணம்; இனச்சுட்டு இல்லா அடை. விசேடணமாவது, பிறிதினியைபு நீக்கிய விசேடணத்தின் வழியாகத் தனக்கு வேறுபட்ட பொருள்களைக் காட்டிலும் தான் அடுத்து நிற்கும் பொருளை வேறு படுத்துவது.

[1]இவர்தாம் அவனை அநுபவிக்கவன்றோ இழிகிறது, இந்த மாறுபட்ட விசேடணங்களைச் சொல்லுகிற இவற்றால் பிரயோஜனம் என்? என்னில், அவனை உள்ளபடி கண்டு அநுபவிக்கவேணுமே. [2] இராஜபுத்திரனுக்கு, இராஜாவினுடைய இன்பத்திற் கிடமான ஓலக்கத்தோடு சிறைக் கூடத்தோடு வாசி அற 'என் தமப்பனுடைய செல்வம்' என்று தோன்றுமன்றோ. [3] இவர்தமக்கு இங்கு உண்டான அநுசந்தானம், முக்தனுக்கு லீலாவிபூதி அநுசந்தானம்போலே அன்றோ. [4] "ஜனங்களின் நடுவில் இருந்துள்ள இந்தச் சரீரத்தை நினையாதவனாகிறான்" என்னா நிற்கச்செய்தே, முக்தனுக்கு லீலா

இங்கே,

"பன்மை சுட்டிய பெயர் என்றமையால் பன்மையே உணர்த்தல் வேண்டும் எனின், அற்றன்று; இயைபின்மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலும் என விசேடித்தல் இருவகைத்து. 'வெண்குடைப் பெருவிறல்' என்றவழிச் செங்குடை முதலியவற்றோடு இயைபு நீக்காது வெண்குடையோடு இயைபின்மை மாத்திரம் நீக்கி வெண்குடையான் என்பது பட நிற்றலின் அஃது இயைபின்மை நீக்கலாம். 'கருங்குவளை' என்றவழிச் செம்மை முதலாயினவற்றோடு இயைபு நீக்கலின், அது பிறிதின் இயைபு நீக்கலாம். பன்மை சுட்டிய பெயர் என்பது, 'வெண்குடைப் பெருவிறல்' என்பதுபோல, ஒருமை இயைபு நீக்காது பன்மை சுட்டுதலோடு இயைபின்மை மாத்திரை நீக்கிப் பன்மை சுட்டும் என்பது பட நின்றது. அதனான் விசேடிக்குங்கால் பிறிதினியைபு நீக்கல் ஒருதலை அன்று என்க." என்ற சேனாவரையர் உரையை ஒப்பு நோக்கல் தகும். (தொல். சொல். சூ. 182.)

1. 'விருப்பம் இல்லாத வறுமை முதலானவற்றோடு' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை வினா விடை மூலமாக விவரிக்கிறார் 'இவர்தாம்' என்று தொடங்கி.

2. தாழ்ந்தவைகளான இவற்றைக் கூட்டி அநுபவிக்கும்போது துக்கரூபமாய் இராவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இராஜபுத்திரனுக்கு' என்று தொடங்கி.

3. நன்று; ததீயத்வ ஆகாரத்தாலே உத்தேசியமாவது முக்தனுக்கு அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர் தமக்கு' என்று தொடங்கி.

4. 'அம் முக்தனும் நினையான்' என்று சொல்லுகிறதே? என்ன, 'ஜனங்களின் நடுவில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம்" (சாந்தோக்யம். 8. 12 : 3.) என்றது, கர்மம் காரணமான ஆகாரத்தாலே நினையான்; ததீயத்வ ஆகாரத்தாலே உத்தேசியம் என்று நினைத்து அநுபவிப்பான் என்றபடி.

விபூதி ததீயத்வ ஆகாரத்தாலே உத்தேசியமாகாநின்றதன்றே.[1] இவர்க்கும் அப்படி முக்தரோடு ஒக்கத் ததீயத்வ ஆகாரம் ஒழிய, வேறு ஆகாரமாக நினைவு இல்லாதபடி, இங்கே இருக்கச் செய்தே மயர்வு அறுத்துக் கொடுத்தான். [2] தம்முடைய சம்பந்தத்தாலே பார்த்தபோது கால்வாங்கியல்லது நிற்கவொண்ணாதபடி தியாஜ்யமாகத் தோற்றும். [3] அன்றிக்கே, ஞான அஜ்ஞானங்களுக்குப் பொதுவான இந்த இருப்பைக் கழித்து, அதற்குக் கலக்கமில்லாத தேசத்திலே போகையிலே விரையக் கடவன் எனப்படுதலால் என்னுதல். பல்வகையும் பரந்த பெருமான்-இப்படி உலக முகத்தாலே பலபடியாக விரிந்திருப்பவனைவன். பரந்த பெருமான் என்னை ஆள்வானை - இங்ஙனம் பரந்து இருத்தல் எல்லாம் தம்மை அகப்படுத்த என்று இருக்கிறார்; [4]ஒருவனை அகப்படுத்த நினைத்தார் ஊரை வளையுமாறு போலே. செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர்க் கண்டேன் - [5]மருபூமியிலே பொய்கை கண்டாற்போலேஇருக்கிறபடி.மிக்க செல்வத்தை யுடைத்தான குடிகளையுடைய திருவிண்ணகர் என்பார் '**செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர்**' என்கிறார்.

---

1. அது இவர்க்குத் திருமேனியோடே இருக்கச்செய்தே கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்க்கும் அப்படி' என்று தொடங்கி.

2. ஆயின், "இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை" என்று தியாஜ்யமாகச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தம்முடைய' என்று தொடங்கி.

3. மேலதற்கே, வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. "பரந்த பெருமான்" என்று வியாப்தியைச் சொன்னபின்பு "என்னை ஆள்வான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இங்ஙனம்' என்று தொடங்கி.

4. இவர் ஒருவரை அகப்படுத்தற்கு எங்கும் பரந்திருத்தல் வேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒருவனை' என்று தொடங்கி.

5. "கண்டேனே" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மருபூமியிலே' என்று தொடங்கி. மருபூமி - நீரும் நிழலும் அற்ற பாலை நிலம். திருக்குறள். 742. காண்க.

[1] "இலக்குமணன் செல்வத்தால் நிறைந்தவன்" என்னுமாறு போலே, சம்பந்தம் ஒத்திருக்கச் செய்தே, கடக்கக் கிடந்த ஸ்ரீ பரதாழ்வானைப் போலன்றிக்கே, கிட்ட நின்று அடிமை செய்யும் இளையபெருமாளைப் போலே. [2] '**காணவேணும்**' என்னும் ஆசையோடே இருந்து வேறு சரீரத்தை அடைந்து வேறு தேசத்திலே போய்க் காண்கை யன்றிக்கே, பசித்த இடத்தே சோறு பெறுமாறுபோலே, ஆசைப்பட்ட இடத்தே அநுபவிக்கப் பெறுதலின் '**திருவிண்ணகர்க் கண்டேன்**' என்கிறார். [3] "நான் சென்று நாடி நறையூரிற் கண்டேனே" என்னுமாறுபோலே. (1)

## 576.

**கண்ட இன்பம் துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய்த்**
**தண்டமும் தண்மையும் தழலும் நிழலு மாஅய்க்**
**கண்டுகோ டற்கரிய பெருமான் என்னை ஆள்வா னூர்**
**தெண்தி ரைப்புனல் சூழ்திரு விண்ண கர் நன்னகரே.**

**பொ - ரை :—** அநுபவிக்கின்ற இன்பமும் துன்பமுமாகி, கலக்கமும் தேற்றமுமாகி, சீற்றமும் அருளுமாகி, நெருப்பும் நிழலுமாகிக் கண்டு கொள்வதற்கு அரியவனாகிய பெருமானாகி, என்னை ஆள்கின்றவனுடைய ஊரானது, தெளிந்த அலைகளையுடைய புனலால் சூழப்பட்ட திருவிண்ணகரம் என்னும் நல்ல நகரமேயாகும்.

**வி - கு :—** ஆஅய் ஆய்க் கண்டு கோடற்கு அரிய பெருமான் என்க. ஊர் திருவிண்ணகராகிய நல் நகர் என்க. தண்டம் - கோபம். தழல் - நெருப்பு.

---

1. மிக்க செல்வமாவது யாது? என்ன, 'இலக்குமணன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

> ஸர்வ ப்ரியகர: தஸ்ய ராமஸ்ய அபி ஶரீரத:
> லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந: பஹி: ப்ராண இவாபர:

என்பது, ஸ்ரீராமா. பால. 18 : 28.

சுலோகத்துக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சம்பந்தம் ஒத்திருக்கச் செய்தே' என்று தொடங்கி.

2. "திருவிண்ணகர்க் கண்டேன்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'காணவேணும் என்னும்' என்று தொடங்கி.

3. ஆசைப்பட்ட இடத்தே அநுபவிக்கப்பெற்ற பேர் உளரோ? என்ன, 'உளர்' என்று, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நான் சென்று' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி, 6. 8 ; 1.

**ஈடு** :—இரண்டாம்பாட்டு.[1] தங்கள் முயற்சியாலே ஒருவர்க்கும் காணவொண்ணாத பெருமையையுடையனாய் வைத்து என்னை அடிமைகொண்டவனுடைய ஊரான திருவிண்ணகரம் எல்லா நன்மைகளும் பொருந்திய நகரம் என்கிறார்.

கண்ட இன்பம் - [2]"ஐங்கருவி கண்ட இன்பம்" என்னுமாறுபோலே, அளவிற்கு உட்பட்ட சுகம். துன்பம் - பெயர் வேறுபாடு மாத்திரமேயாய் அதனோடு ஒத்த துக்கம். கலக்கங்களும் தேற்றமுமாய்-இதர விஷயங்களைப் பெறுமையால் வரும் கலக்கமும், அவற்றைப் பெற்றால் வரும் தேற்றமும். தண்டமும் தண்மையும் - கோபமும் அருளும். தழலும் நிழலுமாய் - வெப்பத்தைச் செய்யக்கூடிய நெருப்பும், குளிர்ச்சியைச்செய்யக்கூடியதான நிழலுமாய். கண்டுகோடற்கு அரியபெருமான்- [3]இவை எல்லாவற்றாலும் அவனுடைய அளவு இடற்கு அரிய தன்மையைச் சொன்னபடி.[4] இவருடைய ஞானத்தின் தெளிவு இருந்தபடி என்தான்! [5]இங்கே சில விசேடணங்களைச் சொல்லா, "**கண்டு கோடற்கு அரிய பெருமான்**" என்று அவனைச் சொல்லாநின்றார்; மேலே சிலவற்றைச் சொல்லா, "**பல்வகையும் பரந்த பெருமான்**" என்னாநின்றார்; இது என்ன

---

1. பின் இரண்டு அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "கண்ட இன்பம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஐங்கருவி' என்று தொடங்கி. இது, திருவாய். 4. 9 : 10.

3. "கண்டு கோடற்கரிய" என்பதற்கு, அவதாரிகையில் கூறிய பொருளைத் தவிர, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'இவை எல்லாவற்றாலும்' என்று தொடங்கி. இவையெல்லாவற்றாலும் - "கண்ட இன்பம்" தொடங்கி இங்குச் சொல்லப்பட்ட இவை எல்லாவற்றாலும் என்றபடி. என்றது, 'இவ்வளவு' என்று எல்லை காணமுடியாத பரந்த விபூதியையுடைய சர்வேசுவரன் என்றபடி.

4. "கண்ட இன்பம்" என்று தொடங்கி, "தழலும் நிழலுமாய்" என்றது முடிய, விசேஷ்ய விசேஷணங்களைப் பிரிய நினையாதே சொல்லிக்கொடு போந்து, "கண்டுகோடற்கரிய பெருமான்" என்று விசேஷ்யமானவனையே அருளிச்செய்தபடியை அநுசந்தித்து வியாக்யாதா ஈடுபடுகிறார் 'இவருடைய' என்று தொடங்கி. ஞானத்தின் தெளிவாவது, எல்லாம் பரம்பொருள் மயமாகவே தோற்றுகை.

5. அதனை விவரணம் செய்கிறார் 'இங்கே சில' என்று தொடங்கி.

அநுசந்தான முறைதான்! [1]இவனை ஒழிந்தது ஒரு வஸ்துவுக்கு சத்பாவம் இன்றிக்கே இருக்கிறபடி அன்றோ.

[2]**நல்லாரும் நம்பி ஸ்ரீசேநாபதிதாசரும்** கூடத் திருமலைக்குப் போகாநிற்க, ஸ்ரீசேநாபதிதாசர் ஒரு கோலையிட்டுத் தூற்றை அடிக்க, நல்லார் 'அர்த்தகாம நிமித்தமான துவேஷம் இதனோடு இன்றிக்கே இருக்க, ஒரு காரணமும் இல்லாமல் ஈசுவரனுடைய விபூதியை நலிவதே!' என்ற வார்த்தையை நினைப்பது. என்னை ஆள்வான் ஊர் - என்னை இழக்கமாட்டாமல் "**மின்னிடை மடவார்**" என்ற திருவாய்மொழியில் மிறுக்கு எல்லாம் பட்டு என்னை அடிமை கொண்டவனுடைய ஊர். தெண்திரைப் புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே-தெளிந்த திரைகளையுடைத்தான புனலாலே சூழப்பட்ட திருவிண்ணகராகிற நன்னகர். [3]திவ்விய நதியான விரஜைக்குப் போலியான ஆறும் உண்டாகப்பெற்றது என்பார் '**தெண்திரைப் புனல் சூழ்**' என்கிறார். [4]அங்கு இருக்கிறவன் இங்கே வந்து நின்றால் அங்கு உள்ளவை எல்லாம் இங்கு உண்டாகத் தட்டுஇல்லையே. [5]அன்றிக்கே, இவ்வளவில் முகங்காட்டாத ஸ்ரீவைகுண்டமும் ஒரு தேசமாயிற்றதோ? [6]அவன் விரும்பின இடம் பிராப்பிய பூமியாமித்தனையன்றோ. (2)

---

1. இந்த அநுசந்தான முறைக்கு அடி எது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவனை ஒழிந்தது' என்று தொடங்கி. சத்பாவம் - உளதாந் தன்மை.

2. ஞானிகட்கு எல்லாம் பரம்பொருள் மயமாகவே தோற்றும் என்பதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'நல்லாரும்' என்று தொடங்கி.

3. திருவிண்ணகரை "நன்னகர்" என்று, பரமபதத்தோடு ஒத்ததாக மேலே அருளிச்செய்கையாலே, இங்கே இருக்கிற ஆறும் விரஜையோடு ஒத்தது என்கிறார் 'திவ்விய நதியான' என்று தொடங்கி.

4. இதனைப் பரமபதம் என்றும், இந்த ஆற்றை விரஜை நதி என்றும் சொல்லுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'அங்கு இருக்கிறவன்' என்று தொடங்கி.

5. திருவிண்ணகரமாகிற நன்னகரம் என்று மேலே அருளிச்செய்தார். திருவிண்ணகரே நல் நகர் என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

6. இந்த உலகத்தில் இருக்கும் இருப்பு, பரமபதம்போன்று உத்தேசியமாக இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் விரும்பின' என்று தொடங்கி. பிராப்பிய பூமி - பரமபதம்.

577.

நகரமும் நாடுகளும் ஞானமும் மூடமு மாஅய்
[1]நிகரில் சூழ்சுடராய் இருளாய் நிலனாய் விசும்பாய்ச்
சிகர மாடங்கள் சூழ்திருவிண்ணகர் சேர்ந்தபிரான்
புகர்கொள் கீர்த்தியல் லால்இல்லை யாவர்க்கும் புண்ணியமே.

பொ - ரை :—நகரத்திலுள்ளவர்களும் நாட்டிலுள்ளவர்களுமாகி, அறிவும் அறியாமையுமாகி, ஒப்பு இல்லாமல் பரந்திருக்கின்ற ஒளியாகி இருளாகி, நிலமாகி ஆகாசமாகி, சிகரங்களையுடைய மாடங்கள் நிறைந்துள்ள திருவிண்ணகர் என்னும் திவ்வியதேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானுடைய ஒளிபொருந்திய கீர்த்தியேயல்லாமல் எத்தகையார்க்கும் உய்வு பெறுதற்குரிய புண்ணியம் வேறு இல்லை.

வி - கு :—ஆய் ஆய் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் என்க. பிரானுடைய கீர்த்தியல்லால் யாவர்க்கும் புண்ணியம் இல்லை என்க. புகர் - ஒளி.

ஈடு :—மூன்றாம்பாட்டு.[2]திருவிண்ணகர் அப்பனுடைய கல்யாணகுணங்களை ஒழிய ஒருவர்க்கும் பிழைத்தற்குரிய வேறு வழி இல்லை என்கிறார்.

நகரமும் நாடுகளும்-[3]போகமே மிக்கிருப்பாராய் இன்பம் நுகர்ந்திருக்கும் நகரத்திலுள்ளார், பயிர்த்தொழில் செய்து கொண்டு தேகயாத்திரையை நடத்திக்கொண்டிருக்கும் நாட்டிலேயுள்ளார். அன்றிக்கே, அளவிற்கு உட்பட்டனவாயுள்ளவையும், அளவிற்கு உட்படாதனவாயுள்ளவையும் என்னலுமாம். ஞானமும் மூடமுமாய்-பொருள்களின் தன்மைகளை உள்ளபடியே அறியக்கடவதான ஞானமும், அதனை மாறுபாடாக எண்ணக்கூடியதான அறியாமையும். நிகர் இல் சூழ் சுடராய்

1. "இருளே வெளியே இகபர மாகி இருந்தவனே" என்பது, திருவாசகம். (நீத்தல் விண். 17.)

2. "திருவிண்ணகர் சேர்ந்தபிரான் புகர்கொள் கீர்த்தியல்லால் இல்லை யாவர்க்கும் புண்ணியமே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். மேல் பாசுரத்தில், "நன்னகர்" என்றதனால் பிராப்யத்வமும், இப்பாசுரத்தில், "யாவர்க்கும் புண்ணியம்" என்றதனால் பிராபகத்வமும் சொல்லப்படுகிறது.

3. மாறுபட்டுள்ள செல்வங்களைச் சொல்லுகிற இடத்திலே "நகரமும் நாடும்" என்கிறார்; இவற்றிற்கு மாறுபாடு யாது? என்ன, அதற்கு இரண்டு வகையில் விடை அருளிச்செய்கிறார் 'போகமே' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும்.

இருளாய்-உபமானம் இல்லாததாய்க்கொண்டு எங்கும் பரந்து நிற்கிற ஒளியாய், அதற்கு எதிர்த்தட்டான இருட்டாய். நிலனாய் விசும்பாய் - [1]உருவத்தோடு கூடிய பூமியாய், உருவம் இல்லாத ஆகாசமுமாய். அன்றிக்கே, கடினத் தன்மையையுடைய பூமியும், இலேசான ஆகாசமும் என்னலுமாம். சிகர மாடங்கள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் - மலைகளின் சிகரங்களைக் கொண்டு வந்து வைத்தாற்போலே இருக்கிற மாடங்களாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே பொருந்தி நிற்கிற உபகாரகன்.

புகர் கொள் கீர்த்தி யல்லால்-[2]பரமபதத்தில் புகழ் மழுங்கியாகாதே கிடப்பது; [4]அங்கு உள்ளாரில் தன்னில் குறைந்தார் இலரே; [3]"என்னுடைய உருவம் முதலானவற்றிற்குச் சமானமான உருவம் முதலானவற்றை அடைந்தவர்கள்" என்றும்,[4]"பூர்ணசாம்யத்தை அடைகிறான்"என்றும், [5]"தம்மையே ஒக்க அருள்செய்வார்" என்றும் சொல்லுகிறபடியே, தனக்குச் சமானமாயுள்ளவர்களாய் அன்றோ அங்குள்ளார் இருப்பது. [6]குறைவாளர்க்கு முகங் கொடுத்தால் அன்றோ புகழ் நிறம் பெறுவது. யாவர்க்கும் புண்ணியம் இல்லை-[7]எல்லார்க்கும் உய்வு பெறுதற்கு வழி அதுவல்லது இல்லை. [8]தாம்தாம் தேடிக் கொள்ளுமவை எல்லாம் கழுத்துக் கட்டியாமத்தனை. [9]"மின்

---

1. "நிலனாய் விசும்பாய்" என்பதற்கும் இரண்டு வகையாக மாறுபாட்டினை அருளிச்செய்கிறார் 'உருவத்தோடு' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும்.

2. "புகர்கொள் கீர்த்தி" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பரமபதத்தில்' என்று தொடங்கி. மழுங்கி இருத்தற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'அங்குள்ளாரில்' என்று தொடங்கி.

3. "மம ஸாதர்மியம் ஆகதா:" என்பது, ஸ்ரீ கீதை. 14: 2.

4. "நிரஞ்ஜன: பரமம் ஸாம்யம் உபைதி" இது, முண்டகோபநிடதம்.

5. இது, பெரிய திருமொழி. 11. 3: 5.

6. இங்குப் புகர் உண்டாகைக்குக் காரணம் தாழ்ந்தவர்களுக்கு முகம் கொடுக்கையாலே என்கிறார் 'குறைவாளர்க்கு' என்று தொடங்கி.

7. 'எல்லார்க்கும்' என்றது, "மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழியில் இருய்த்த தம்மோடு, இதில் இழியாத மற்றையாரோடு வாசி அற எல்லார்க்கும் என்றபடி.

8. "யாவர்க்கும் புண்ணியம் இல்லை" என்பது என்? வேறு உபாயங்கள் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாம் தாம்' என்று தொடங்கி.

9. அப்படிக் கழுத்துக் கட்டியோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மின்னிடை மடவார்' என்று தொடங்கி.

னிடை மடவார்" என்ற திருவாய்மொழியில் அவன் வர, 'வேண்டா' என்று முடிந்து போகப் புக்காரன்றே; [1]இவன் பார்க்கும் உபாயம் இவனுக்கும் கழுத்துக்கட்டியாம்; அவன் காட்டும் உபாயம் அவனுக்கும் காற்கட்டாம்; இதுவன்றே உபாயத்தில் அடிப்பாடு. (3)

578.

[2]புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென் றிவையாய்
எண்ணமாய் மறப்பாய்[3]உண்மையாய் இன்மையாய் அல்லனாய்
திண்ண மாடங்கள் சூழ்திரு விண்ணகர் சேர்ந்தபிரான்
கண்ணன் இன்னரு ளேகண்டு கொண்மின்கள் கைதவமே.

பொ - ரை:—புண்ணியம் என்ன, பாவம் என்ன; புணர்ச்சி என்ன, பிரிவு என்ன; ஆகிய இவையாகியும், நினைவு ஆகியும், மறப்பு ஆகியும், உண்மையாகியும், இன்மையாகியும், கர்மங்கட்குக் கட்டுப்படா தவனாகியும்; திண்ணிய மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரம் என்னும் திவ்வியதேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற பிரானாகிய ஸ்ரீ கிருஷ்ண னுடைய இனிய திருவருளையே உய்வு பெறுதற்குரிய புண்ணியமாகக் கண்டு கொள்ளுங்கள்; யான் கூறும் இது கைதவம் அன்று.

வி - கு:—ஆய் ஆய் ஆய் ஆய் ஆய் ஆய் சேர்ந்த பிரான் இன்னருளே கண்டுகொண்மின் என்க. 'கைதவமே' என்றதிலுள்ள ஏகாரம், எதிர்மறைக்கண் வந்தது. கைதவம் - வஞ்சனை. ஈண்டு, பொய்யைக் காட்டுகிறது.

ஈடு:—நான்காம்பாட்டு.[4]புண்ணியம் பாவம் முதலானவைகளாய் எம்பெருமானுக்கு விசேடணமாகத் தோற்றுகிற

1. 'தாம் தாம் செய்யும் முயற்சி தடையாம், அவன் கீர்த்தியே உபாயமாம்' என்கிற இதனால், இவன் பார்க்கிற உபாயத்தினுடைய தாழ்வினையும், அவன் காட்டும் உபாயத்தினுடைய ஏற்றத்தினையும் அருளிச்செய்கிறார் 'இவன் பார்க்கும்' என்று தொடங்கி. 'அவனுக்கும் காற்கட்டு' என்றது "போகுநம்பி" என்றாலும் போகாமாட்டாமையை நினைத்து.

2. "நன்றாங் கறிந்தவர்க்குந் தானேயாகி
நல்வினையும் தீவினையு மானான்தன்னை"
என்பது, தேவாரம். (அப்பர்.)

3. "ஒத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையுமாய்ப்
பூத்தானே" என்பது, திருவாசகம். (திருவேசறவு. 8.)

4. முதலில் இருந்து "கண்ணன் இன்னருளே" என்றது முடியக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

விபூதிகள் எல்லாம் அவன் கிருபையாலே உண்டாயின என்கிருர்.

புண்ணியம் பாவம்-இன்பத்திற்குக் காரணமான புண்ணியம், துன்பத்திற்குக் காரணமான பாவம். புணர்ச்சி பிரிவு - புண்ணியத்தின் பலமான கலவி, பாவத்தின் பலமான பிரிவு. எண்ணமாய் மறப்பாய் - விருப்பமுள்ள பொருளில் நினைவு, விருப்பம் இல்லாத பொருளில் மறதி. உண்மையாய் இன்மையாய் - [1] உள்ளது என்ற சொல்லின் பொருளுமாய், இல்லது என்ற சொல்லின் பொருளுமாய். என்றது, சேதன அசேதனங்களுமாய் என்றபடி. அன்றிக்கே, உண்மை இன்மை என்னுதல். அல்லனாய் - புண்ணிய பாவங்கட்கு நியாமகனாய், அவற்றுக்குக் கட்டுப்பட்டவன் அன்றிக்கே இருப்பவனாய். திண்ண மாடங்கள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்-[2]"ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திருமாளிகை ஒன்றனை மாத்திரம் கடல் அழிக்கவில்லை" என்கிறபடியே, பிரளயகாலத்துக்கும் அழியாதபடி திண்ணிதான மாடங்களாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே சேர்ந்து நிற்கிற உபகாரகனான ஸ்ரீ கிருஷ்ணன். இன்னருளே- புண்ணியம் பாவம் முதலாயினவைகளாய்க் கொண்டு அவனுக்கு விபூதிகளாகத் தோற்றுகிறவையெல்லாம் அவனுடைய கிருபையாலே உண்டாயின. பாவமும் அவன் கிருபையாலேயோ? என்னில், அதுவும் அப்படியே; சேதனனுடைய முற்பிறவியின் கர்மங்களுக்குத் தகுதியாக நடத்துவிக்கின்ற காரணத்தாலே அதுவும் அவன் கிருபையாலேயாமத்தனை. நன்று; எல்லாம் செய்தாலும் [3] தீமை அவன் கிருபையாலே வரக் கூடுமோ? என்னில், தீயதனைக் காட்டி வெதுப்பி நல்வழி போக்குகையினாலே கூடும் அன்றோ. இன் அருள் - காரணம் இல்லாமலே செய்யப்படுகின்ற அருள். கைதவமே - நான் சொல்லு

---

1. இங்கே, "இல்லதும் உள்ளதும்" (1. 2: 4.) என்ற திருப்பாசுரத்திற்கு அருளிச்செய்துள்ள பொருளை நினைவு கூர்க.

2. "வாசுதேவக்ருஹம் து ஏகம் நப்லாவயதி ஸாகரः" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 38: 9.

3. 'தீமை அவன் கிருபையாலே வரக் கூடுமோ?' என்றது, தீமை அவன் நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே வரக் கூடுமோ? என்றபடி. அதுவும் ஹிதரூபமாகையாலே 'கூடும்' என்று பரிஹரிக்கிருர் 'தீயதனைக் காட்டி' என்று தொடங்கி. இங்கே,

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

என்ற திருக்குறள் ஒப்புநோக்கத் தகும்.

கிற இதில் [1]அர்த்தவாதம் இல்லை. கண்டுகொண்மின்கள் - நீங்களும் எல்லாம் சாஸ்திரங்களிலே கண்டுகொள்ளுங்கோள். அன்றிக்கே, கைதவமே - என்பதற்கு, செய்யப்பட்டவை என்றபடியாய், செய்யப்பட்டவை அடங்கலும் அவனுடைய காரணமில்லாமலே செய்யப்படுகின்ற இனிய திருவருளாலே உண்டாயின என்னுதல். (4)

## 579.

**கைதவம் செம்மை கருமை வெளுமையு மாஅய்**
**மெய்பொய் இளமை முதுமை புதுமை பழமையுமாய்ச்**
**செய்த திண்மதிள் சூழ்திரு விண்ணகர் சேர்ந்தபிரான்**
**பெய்த காவுகண் டீர்பெருந் தேவுடை மூவுலகே.**

**பொ - ரை :**—வஞ்சனையும் நேர்மையுமாகி, கருமையும் வெண்மையுமாகி, மெய்யும் பொய்யுமாகி, இளமையும் முதுமையுமாகி, புதுமையும் பழமையுமாகி, செய்யப்பட்ட திண்ணிய மதிள்களாற் சூழப்பட்ட திருவிண்ணகரம் என்னும் திவ்வியதேசத்தில் நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் வைத்து வளர்க்கின்ற சோலை காண்மின்; பெரிய தெய்வங்களையுடைய இந்த மூன்று உலகங்களும்.

**வி - கு:**—பெருந்தேவுடை மூவுலகு, ஆய், சேர்ந்த பிரான் பெய்த காவு கண்டீர் என்க. கா - சோலை.

**ஈடு :**—ஐந்தாம்பாட்டு. [2]சிறியார் பெரியார் என்னுதே எல்லார்க்கும் ரக்ஷகன் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் என்கிறார்.

கைதவம் செம்மை - வஞ்சனை நேர்மைகள். கருமை வெளுமை - கறுப்பு வெளுப்பு. மெய் பொய்- உண்மை இன்மை. இளமை முதுமை - இளமை கிழத்தனம். புதுமை பழமை - புதுமையும் பழமையும். செய்த திண் மதிள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் - காலம் செல்லச் செய்தேயும் இப்பொழுது செய்தாற்போலே இருக்கிற தொழிலின் புதுமையைச்

1. அர்த்தவாதம் - புனைந்துரை.

2. தேவர்கள் முதலானவர்களையுடைய மூன்று உலகமும் அவன் உண்டாக்கின சோலை என்கையாலே தோற்றுகிற கருத்தினை அருளிச்செய்கிறார் 'சிறியார் பெரியார்' என்று தொடங்கி.

"எல்லாமாய்க் கொண்டிருக்கிற திருவிண்ணகர் சேர்ந்த பிரான் பெய்த காவு" என்கையாலே, சொரூப ஐக்யம் சொல்லுகிறது அன்று; சாமாநாதிகரண்ய நியாயத்தாலே, காரிய காரண பாவத்தைச் சொல்லுகிறது.

சொல்லுகிறது. பெய்த காவு கண்டீர்-வைத்து ஆக்கின சோலை கண்டீர். பெருந்தேவுடை மூ உலகே-ஈசுவர அபிமானிகளான தேவர்களையுடைத்தான மூன்று உலகங்களும்.[1] இத்தால், என் சொல்லியவாறோ? எனின், சோலையானது தனக்கு வேண்டும் பாதுகாவலை அறிவிக்கமாட்டாது அன்றோ; நின்ற இடத்தே நின்று வாடிக் காட்டுகையும், பின்னர், வைத்து ஆக்கினவனே அதற்கு வேண்டும் காவலைச் செய்யவேண்டுகையும் முதலாயினவற்றையுடைத்தாயிருக்கையாய் இருக்குமன்றோ. அப்படியே, நியமிக்கின்றவர்கள் நியமிக்கப்படுகின்ற பொருள்கள் என்னும் வேற்றுமை அற எல்லாம் அவன் புத்தியதீனமாக இருப்பதனைத் தெரிவித்தபடி. (5)

## 580.

மூவுல கங்களுமாய் அல்லனுய் உகப்பாய் முனிவாய்
பூவில்வாழ் மகளாய்த் தவ்வையாய்ப் புகழாய்ப் பழியாய்த்
தேவர் மேவித் தொழும்திரு விண்ணகர் சேர்ந்தபிரான்
பாவி யேன்மனத் தேஉறை கின்ற பரஞ்சுடரே.

**பொ - ரை:**—மூன்று உலகங்களையுடையனும் அல்லாத பரமபதத்தையுடையனுகியும், மகிழ்ச்சியாகியும் சீற்றமாகியும், தாமரைப் பூவில் வசிக்கின்ற திருமகளாகியும் மூதேவியாகியும், புகழாகியும் பழிப்பாகியும், தேவர்கள் மனம் மகிழ்ந்து தொழுகின்ற திருவிண்ணகர் என்னும் திவ்வியதேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற உபகாரகன், பாவியேனுகிய என்னுடைய மனத்தின் கண்ணே நித்தியவாசம் செய்கின்ற மேலான ஒளியுருவன் ஆவான்.

**வி - கு:**—ஆய், சேர்ந்த பிரான் உறைகின்ற பரஞ்சுடர் என்க. தவ்வை - தமக்கை; மூதேவி.

---

1. 'இத்தால்' என்றது, "பெய்த காவு" என்றதனுல் என்றபடி. இங்கே,

"வையெயிற் றெய்யா மகளிர் திறமினிப்
பெய்ய உழக்கும் மழைக்கா மற்றைய" (பரி. 9. 33, 34.)

என்ற பரிபாடற் பகுதியையும், 'காவை ஒத்தலாவது, கா தனக்கு இன்றியமையாத மழையை வருவித்துக் கொள்ளமாட்டாது, அது தானே பெய்துழிப் பொலிந்து, வாராதவழியும் ஆமளவும் ஆற்றி, ஆகாத எல்லைக்கண் இறந்துபடுதல்' என்ற அதன் உரையையும் நோக்கத்தகும்.

ஈடு:—ஆறும்பாட்டு.[1] 'நான் அல்லேன்' என்னச் செய்தே தன் குணங்களையும் செயல்களையும் காட்டி மறக்க ஒண்ணுத படி கலந்து அதனாலே பேரொளிப் பிழம்பாயிருக்கிறவன் திருவிண்ணகரிலே நின்றருளின சர்வேசுவரன் கண்டீர் என்கிறார்.

மூன்று உலகங்களுமாய் - மூன்று உலகங்கட்கும் நிர்வாஹகனாய். அன்றிக்கே, [2] கிருதகம் அகிருதகம் கிருதாகிருதகம் என்னும் மூன்று வகைப்பட்ட உலகங்களுமாய் என்னுதல். அல்லனாய் -[3] அல்லாத மேலேயுள்ள உலகங்கட்கும் நிர்வாஹகனாய். அன்றிக்கே, இந்த உலகங்களைச் சொல்லி '**அல்லனாய்**' என்கையாலே, இவ்வளவு அன்றிக்கே அசாதாரணமான நித்திய விபூதியையுடையவன் என்னுதல். உகப்பாய் முனிவாய் - மகிழ்ச்சியும் முனிவுமாய். பூவில் வாழ் மகளாய்த் தவ்வையாய்- திருமகளும் திருமகள் அல்லாதவளுமாய். தவ்வை - திருமகள் அல்லாதவள். புகழாய்ப் பழியாய்-திருமகளினுடைய கடாக்ஷமுடையார்க்கு வரும் புகழ், தவ்வையினுடைய கடாக்ஷமுடையார்க்கு வரும் பழி. தேவர் மேவித் தொழும் திருவிண்ணகர் சேர்ந்த பிரான்-[4] இந்திரன் முதலான தேவர்கள் இங்குள்ளாரால் கொடுக்கப்படுகின்ற ஹவிஸ்ஸினைக் கொள்ளும்போது மூன்று யோஜனை தூரம் அவ்வருகே நின்று முகத்தைத் திரிய வைத்து வாங்கி வாந்தி பண்ணியாயிற்றுப்போவது; அப்படி

---

1. "பாவியேன்" என்றதனை நோக்கி 'நான் அல்லேன்' என்று தொடங்கியும், "மனத்தே உறைகின்ற" என்றதனை நோக்கித் 'தன் குணங்களையும்' என்று தொடங்கியும், "பரஞ்சுடர் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்" என்றதனை நோக்கி 'அதனாலே' என்று தொடங்கியும் அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. கிருதகமாவது, அவாந்தரபிரளயத்திலே அழியப் படைப்புக் காலத்திலே மீண்டும் படைக்கப்படுமவை. இவை, கீழ் ஏழுலகமும் மேல் மூன்று உலகமும். அகிருதகமாவது, அவாந்தர சிருஷ்டியில் படைக்கப்படாதவை. இவை, ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பன. கிருதாகிருதகமாவது, அவாந்தரபிரளயத்தில் குடி வாங்குகையாலே கிருதகம் என்றும், கிருஹங்களுக்குச் சொரூபநாசம் இல்லாமையாலே அகிருதகம் என்றும் சொல்லப்படும் மஹர்லோகம்.

3. "மூவுலகங்களுமாய்" என்றதற்கு அருளிச்செய்த இருவகைப் பொருள்களுக்கும் தகுதியாக "அல்லனாய்" என்பதற்கும், முறையே இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'அல்லாத' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும்.

4. "மேவித் தொழும்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இந்திரன் முதலான' என்று தொடங்கி. 'பூமியிலே ஆகையாலே' என்றது, பூமியிலே இருக்கையாலே என்றபடி.

இருக்கிறவர்களுடைய வாசனையும் பொறுக்கமாட்டாத நித்தியசூரிகள், திருவிண்ணகர் பூமியிலே ஆகையாலே இங்கே வந்து பொருந்தி வசிப்பர்கள். அப்படிப்பட்ட திருவிண்ணகரிலே நித்தியவாசம் செய்கிற உபகாரகன். பாவியேன்-“மின்னிடை மடவார்” என்ற திருவாய்மொழியிலே, அவன் மேல் விழத் தாம் இருய்த்தபடியை நினைத்துப் ‘**பாவியேன்**’ என்கிறார். [1]நித்தியசூரிகள் தன் பக்கலிலே வந்து மேல் விழ, அதனைத்தள்ளித் தான் என் பக்கலிலே வந்து மேல் விழாநிற்கக் கண்டீர் நான் ‘**அல்லேன்**’ என்றது. மனத்தே உறைகின்ற - இப்போது, நித்தியசூரிகளும் அந்த இருப்பும் கிடக்கக் கண்டீர் என் நெஞ்சிலே புகுந்து நித்தியவாசம் செய்யாநின்றான். பரஞ்சுடரே - தனக்குப் புறம்பே உண்டான வசிக்கும் இடங்கள் கிடக்க, என் நெஞ்சிலே புகுந்து நின்றது எனக்குக் காரியம் செய்தானாய்இருக்கையன்றிக்கே ‘**தன்பேறு**’என்று தோற்றும்படி பேர்ஒளியன் ஆனான்.[2]என்றது,“மின்னிடை மடவார்” என்ற திருவாய்மொழியிலே,‘இவரை இழக்கிறோமோ?’என்று வந்த உறாவுதல் தீர, இவரைப் பெற்ற பின்பு அதனாலே “நின்றிலங்கு முடியினாய்!” என்கிறபடியே வடிவிலே பிறந்த வேறுபாடு இருக்கிற படியைத் தெரிவித்தபடி. (6)

581.

பரஞ்சுடர் உடம்பாய் அழுக்குப் பதித்த உடம்பாய்
கரந்தும் தோன்றியும் நின்றும்கை தவங்கள்செய் தும்விண்ணோர்
சிரங்க ளால்வணங் கும்திரு விண்ணகர் சேர்ந்தபிரான்
வரங்கொள் பாதமல் லால்இல்லை யாவர்க்கும் வன்சரணே.

**பொ - ரை :**—பிரகிருதி சம்பந்தம் இல்லாத திருமேனியையுடையவனாயும், உலகத்தையே உருவமாகவுடையவனாயும், கண்களுக்கு வெளிப்படாது மறைந்தவனாயும், இராம கிருஷ்ணாதி அவதாரங்களைச் செய்து கண்களுக்குத் தோன்றுகின்றவனாயும், அந்த அந்த அவதாரங்களில் பல ஆண்டுகள் நிலைபெற்று நிற்கின்றவனாயும், வஞ்சனையான காரியங்களைச் செய்கின்றவனாயும் இருந்து, தேவர்கள் தலைகளால்

---

1. ‘“பாவியேன்”என்றது, “மின்னிடை மடவார்” என்ற திருவாய்மொழியில் இருய்த்தபடி நினைத்து’ என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘நித்தியசூரிகள்’ என்று தொடங்கி.

2. மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் ‘என்றது’ என்று தொடங்கி. ‘நின்றிலங்கு’ என்பது, திருவாய். 6. 2 ; 8.

வணங்குகின்ற திருவிண்ணகரம் என்னும் திவ்வியதேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானுடைய சிறப்பையுடைத்தான திருவடிகள் அல்லாமல் எத்தகையார்க்கும் வலிய உபாயம் வேறு ஒன்றுஇல்லை.

வி-கு :—உடம்பாய் உடம்பாய்க் கரந்தும் தோன்றியும் நின்றும் செய்தும் சேர்ந்த பிரான் என்க. பிரான் பாதம் அல்லால் வன்சரண் யாவர்க்கும் இல்லை என்க.

ஈடு :—ஏழாம்பாட்டு. [1]எத்தனையேனும் ஞானமுடையார்க்கும் வலிய புகல் அவன் அல்லது இல்லை என்கிறார்.

பரஞ்சுடர் உடம்பாய்-[2]"திருமேனி ஒளிகளின் கூட்டம்" என்கிறபடியே, சுத்த சத்துவ மயமான அசாதாரண திவ்விய விக்கிரகத்தையுடையனாய். அழுக்குப் பதித்த உடம்பாய்-முக்குணங்களுக்கு வசப்பட்ட உலகத்தையே உருவமாகவுடையனாய். கரந்தும் - இவற்றுக்கு அந்தராத்மாவாய்ப் புக்கு நிற்கச்செய்தே [3]"எந்தப் பரமாத்மாவை, ஆத்மா அறிகிறான் இல்லை" என்கிறபடியே, இவற்றுக்குத் தோன்றாதபடி நின்று, இவற்றின் சத்தையை நோக்கியும். தோன்றியும் - [4]காண வாராய் என்று என்று கண்ணும் வாயும் துவர்ந்திருப்பார்க்குக் காணலாம்படி இராம கிருஷ்ணாதி அவதாரங்களைச் செய்தும். நின்றும் - நூறு ஆண்டுகள், பதினோராயிரம் ஆண்டுகள் நின்றும். [5] அவ்விடங்களிலே, கைதவங்கள் செய்தும் - வஞ்சனைகள் பொருந்திய காரியங்களைச் செய்தும். அதாவது, அவதரித்து நிற்கச்செய்தே தன்படிகள் சிசுபாலன் முதலாயினார்கட்குத் தோற்றாதபடி செய்தும், தன்னை அடைந்தவர்கட்குத் தோன்றும்படி செய்தும் போந்தமையைத் தெரிவித்தபடி. விண்ணோர் சிரங்களால் வணங்கும் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்-[6]'பிரமன் முதலாயினோர் ' தலைபடைத்த பிரயோஜனம் பெற்

1. "வரம்கொள் பாதமல்லால் இல்லை" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "தேஜஸாம் ராஸி மூர்ஜிதம்" இது, விஷ்ணுபுரா. 1. 9 : 67.

3. "யம் ஆத்மா ந வேத" என்பது, பிருஹதாரண்யக உப.

4. தோன்றாமல் நிற்கிறவன் தோன்றுவது எதற்காக? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ' காணவாராய் ' என்று தொடங்கி. இது திருவாய். 8. 5 : 2.

5. அவ்விடங்களிலே-இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களிலே.

6. "சிரங்களால்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் ' பிரமன் ' என்று தொடங்கி.

ரோம்' என்று வணங்கும்படி திருவிண்ணகரிலே நிற்கிற உபகாரகன். வரம் கொள் பாதம் அல்லால் - [1]எத்தனையேனும் தண்ணியாரும் கிட்டலாம்படியான சிறப்புப் பொருந்திய திருவடிகள் அல்லது. யாவர்க்கும் வன்சரண் இல்லை - எத்தனையேனும் [2]கிழார் கிழார்க்கும் வலிய புகல் இல்லை. [3]அவனை ஒழிந்த சரண்யர் அனைவரும் இவனைக்கொண்டு முழுகும் பேர்; இவனைக்கொண்டு கரை ஏறுதற்குத் தக்க வலிய புகல் அவன் திருவடிகள் அல்லது இல்லை. [4]அடியே பிடித்து ஜீவிக்கில் ஜீவிக்குமத்தனை? (7)

582.

வன்ச ரண்சுரர்க் காய் அசு ரர்க்குவெங் கூற்றமுமாய்த்
தன்சரண் நிழற்கீழ் உலகம் வைத்தும் வையாதும்
தென்ச ரண்திசைக் குத்திரு விண்ணகர் சேர்ந்தபிரான்
என்சரண் என்கண்ணன் என்னை ஆளுடை என்னப்பனே.

**பொ - ரை:**—தேவர்கட்குச் சிறந்த புகலிடமாகியும், அசுரர்கட்குக் கொடிய யமனாகியும், பெரியோர்களைத் தன்திருவடிகளின் நிழலிலே வைத்துக் காப்பாற்றியும், பெரியோர்அல்லாதாரை அங்ஙனம் வைத்துக் காப்பாற்றாமலும், தெற்குத் திசைக்குப் புகலிடமான திருவிண்ணகரம் என்னும் திவ்வியதேசத்திலே எழுந்தருளியிருக்கிற பிரான் என் கண்ணன் என்னை ஆளுடைய என்னப்பன் எம்பெருமான் எனக்குப் புகலிடமாவான்.

**வி - கு:**—சுரர்க்கு வன்சரண் ஆய் என்க. ஆய் வைத்தும் வையாதும் சேர்ந்த பிரானாகிய கண்ணன் என்க. கண்ணனாகிய என்னப்பன் என் சரண் என்க. என்சரண் - எனக்குச் சரண்.

---

1. "வரம்" என்ற சொல்லின் பொருளை விளக்குகிறார் 'எத்தனையேனும்' என்று தொடங்கி.

2. கிழார் கிழார்க்கும் - பெரியவர்க்கும் பெரியரானவர்கட்கும். கிழார் - பெரியவர்.

3. "வன்சரண்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'அவனை ஒழிந்த' என்று தொடங்கி. சரண்யர் - புகலிடமானவர்.

4. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அடியே பிடித்து' என்று தொடங்கி. திருவடிகளையே பிடித்து என்றும், முதலிலே பிடித்து என்றும் பொருள்.

ஈடு:—எட்டாம்பாட்டு. [1]எனக்குப் புகலான மாத்திரமன்றிக்கே, மற்றும் எல்லாமும் திருவிண்ணகர் சேர்ந்தபிரானே என்கிறார்.

சுரர்க்கு வன்சரண் ஆய் - தேவர்களுக்காகத் தன்னை அம்புக்கு இலக்கு ஆக்கி அவர்களை நோக்கும் வலிய ரக்ஷகனாய். அசுரர்க்கு வெம் கூற்றமுமாய் - அசுரத்தன்மை வாய்ந்தவர்களுக்கு [2]'அந்தகன் தண்ணீர்' என்னும்படி வெவ்விய கூற்றமுமாய். தன்சரண் நிழற்கீழ் உலகம் வைத்தும் வையாதும் - தன்னுடைய பாதங்களின் நிழலிலே, அநுகூலரான அருச்சுனன் முதலாயினோர்களை இட்டுக்கொண்டும், சம்பந்தம் ஒத்திருக்கச்செய்தே, பிரதிகூலரான துரியோதனன் முதலாயினோர்களைப் புறம்பே இட்டும். தென் திசைக்குச் சரண் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்-[3]"புண்ணிய சரித்திரங்களையுடைய எந்த அகத்தியராலே தெற்குத் திக்கானது புகலிடமாகச் செய்யப்பட்டது" என்கிறபடியே, தெற்குத் திக்கிற்குப் புகலிடமான திருவிண்ணகரிலே கிட்டின உபகாரகன். என் சரண் - எனக்குப் புகலிடம். என் கண்ணன் - எனக்குப் பவ்யனானவன். என்னை ஆளுடை என் அப்பன் - என்னை அடிமை கொள்ளுதற்கு உரியவன், எனக்கு உபகாரகன். [4]'உலகம்' என்பது, உயர்ந்தோர் மாட்டு. (8)

---

1. "என் சரண் என் கண்ணன்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். மேற்பாசுரத்தில் எல்லார்க்கும் புகல் என்றார்; இதில், எனக்குப் புகலான மாத்திரமன்றிக்கே எல்லாவிதமான உறவும் ஆனான் என்கிறார் என்பதாம்.

2. 'அந்தகன் தண்ணீர் என்னும்படி' என்றது, கூற்றுவனும் குளிர்ந்தவன் (நல்லவன்) என்னும்படி என்றபடி.

3. "தக்ஷிணாதிக் க்ருதா யேந ஶரண்யா புண்ய கர்மணா"
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 11: 82.

பத்திக்கு வரம்பாகிய பார்த்தன் பலதீர்த்தம்
அத்திக்கினும் எத்திக்கினும் ஆம் என்றவை ஆடிச்
சித்திக்கொரு விதையாகிய தென்னாட்டினை அணுகித்
தத்திச்சொரி அருவித்தட அரவக்கிரி சார்ந்தான்.

என்பது, வில்லிபாரதம்.

4. "உலகம்" என்பதற்கு, மேல் 'அநுகூலரான அருச்சுனன் முதலாயினோர்களை' என்று பொருள் அருளிச்செய்தார்; அதனை விவரணம் செய்கிறார் 'உலகம்' என்று தொடங்கி. என்றது, உலகம் என்ற சொல் உயர்ந்தோரைக் குறிக்கும் என்றபடி.

உலக மென்பது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான.

என்பது மரபு.

583.

என்னப்பன் எனக்காய் இகுளாய் என்னைப் பெற்றவளாய்ப்
பொன்னப்பன் [1]மணியப்பன் முத்தப்பன் என்னப் பனுமாய்
மின்னப் பொன்மதிள் சூழ்திரு விண்ணகர் சேர்ந்தஅப்பன்
தன்ஞெப்பார் இல்லப்பன் தந்த னன்தன தாள் நிழலே.

பொ - ரை :—எனக்கு என் அப்பனுகியும், எனக்குச் செவிலித் தாயாகியும், என்னைப் பெற்ற தாயாகியும், பொன்னைப்போன்றவனும் மணியைப்போன்றவனும் முத்தைப்போன்றவனும் என் அப்பனும் ஆகியும், பிரகாசிக்கின்ற அழகிய மதிள்களாற் சூழப்பட்ட திருவிண்ணகரம் என்னும் திவ்வியதேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற அப்பன், தனக்குச் சமானமானவர்கள் இல்லாத அப்பன் தன்னுடைய திருவடிகளின் நிழலைத் தந்தான்.

வி - கு :—எனக்கு என்னப்பன் ஆய் என்று மாற்றுக. இகுளை-தோழி. ஆய் ஆய் சேர்ந்த அப்பன் தன் ஒப்பார் இல் அப்பன் அவன் தன தாள் நிழல் தந்தனன் என்க.

ஈடு :—ஒன்பதாம்பாட்டு. [2]எனக்குச் சரணமான மாத்திரமே யன்று, மற்றும் எல்லாமும் அவனே என்கிறூர். அன்றிக்கே, எனக்கு எல்லாவகையாலும் உபகாரகனும் தன் திருவடி நிழலை, 'அல்லேன்' என்ன, வலிய எனக்குத் தந்தான் என்கிறூர் என்னுதல்.

எனக்கு என் அப்பன் ஆய் - எனக்கு அசாதாரணனுய்ச் சத்தைக்குக் காரணமாயுள்ள பிதாவாய். [3]பஞ்சகாலத்திலே குழந்தைகளை விற்று உண்ணும் தமப்பனைப்போல் அன்றியிலே, தன்னை அழிய மாறியும் என்னை நோக்கக்கடவ தமப்பனுய். இகுளாய்- எனக்கு நடந்த செயலைப் பற்றிச் சொல்லுவதற்குரிய தோழியுமாய். இகுளை என்று தோழிக்குப் பெயர். அது கடைக்குறைந்து 'இகுள்' என நிற்கிறது. என்னைப் பெற்றவளாய் - வளர்த்துக் கொள்ளியான தாயைப்போல்

1. "முத்தனையானே மணியனையானே முதல்வனே" என்பது, திருவாசகம். (எண்ணப்பதிகம். 4.)

2. முதல் இரண்டு அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறூர். "தந்தனன் தன தாள் நிழலே" என்றதனைத் திருவுள்ளம்பற்றி இரண்டாவது அவதாரிகை அருளிச்செய்கிறூர்.

3. "எனக்கு" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிறூர் 'பஞ்சகாலத்திலே' என்று தொடங்கி. "பெற்றவள்" என்றதற்குக் கருத்து, 'வளர்த்துக் கொள்ளியான தாயைப்போல் அன்றியே' என்பது.

அன்றியே, பத்து மாசம் வயிற்றிலேவைத்து நோக்கிப் பெற்ற தாயாய். பொன் அப்பன் மணி அப்பன் முத்து அப்பன் என் அப்பன் - வேறே இனிய பொருள்களாய்க் கொண்டு உபகாரகம் ஆவன சில பொருள்கள் உள; எனக்கு அப்பொருள்கள் எல்லாம் தானாய் நின்று உபகரித்தவன். மின்னப் பொன் மதிள்சூழ் திருவிண்ணகர் சேர்ந்த அப்பன்-மின்னாநின்றுள்ள பொன்மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே நின்ற உபகாரகன். தன் ஒப்பார் இல் அப்பன் - சிலர்க்கு ஒன்றைக் கொடுக்குமிடத்தில், தன்னோடு ஒக்கக் கொடுக்கவல்லார் இல்லாதபடியான மஹோபகாரகன். இதற்கு, [1]"**மின்னிடை மடவார்**' என்ற திருவாய்மொழியிலே, அவன் மேல் வந்து விழ, 'நீ எனக்கு வேண்டா' என்று நான் தள்ளத் தள்ள, 'நீ உனக்கு ஹிதம் அறிந்தாயோ? நான் உனக்கு வேணுங்காண் என்று தன்னை எனக்குத் தந்தவன்' என்று **சீயர்** அருளிச்செய்வர். தன தாள் நிழல் தந்தனன் - [2]'உன்னை ஒழிந்த வெய்யிலே எனக்கு அமையும்' என்று நான் அகலப் புக, "அழித்தாய் உன் திருவடியால்" என்று தன்னுடைய திருவடிகளாலே என் செருக்கைப் போக்கி, திருவடிநிழலை எனக்குத் தந்தான். [3]அடிபட்டவாறே, '**எனக்கு**' என்று வைத்தவற்றையும் பொகடுவர்களே. (9)

584.

**நிழல்வெய்யில் சிறுமை பெருமை குறுமை நெடுமையுமாய்ச்**
**சுழல்வன நிற்பன மற்று மாய் அவை அல்லனுமாய்**
**மழலை வாய்வண்டு வாழ் திரு விண்ணகர் மன்னுபிரான்**
**கழல்கள் அன்றிமற்றோர்களை கண் இலம் காண்மின்களே.**

---

1. "தன் ஒப்பார் இல் அப்பன்" என்பதற்கு, மற்றையோரைக் காட்டிலும் இவன் செய்த உபகாரம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மின்னிடை மடவார்' என்று தொடங்கி.

2. "நிழல்" என்றதற்கு, எதிர்த்தட்டாக 'வெய்யில்' என்கிறார் 'உன்னை ஒழிந்த' என்று தொடங்கி.

3. 'திருவடிகளாலே என் செருக்கைப் போக்கினான்' என்றதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அடிபட்டவாறே' என்று தொடங்கி. திருவடிகள் என்றும், தண்டனை என்றும் பொருள்.

**பொ - ரை:**—நிழலும் வெய்யிலுமாகி, சிறுமையும் பெருமையு மாகி, குறுமையும் நெடுமையுமாகி, திரிகின்றவையும் நிற்கின்றவையு மாகி, மற்றுமாகி, அவை அல்லனுமாகி, இசைபாடுகின்ற இளமைபொருந் திய வண்டுகள் வாழ்கின்ற திருவிண்ணகரில் எழுந்தருளியிருக்கின்ற பிரானுடைய திருவடிகளே அல்லாமல் மற்றும் ஒரு பற்றுக்கோடு இலோம்; நீங்களே காணுங்கோள்.

**வி - கு:**—அல்லனுமாய் மன்னு பிரான் என்க. களைகண் - பற்றுக் கோடு.

**ஈடு:**— பத்தாம்பாட்டு. [1]அவன் திருவடிகள் அல்லாமல் வேறு ஒரு ரக்ஷகம் இல்லை என்னுமிடத்தைப் புத்திபண்ணுங் கோள் என்கிருர்.

நிழல் வெய்யில் - குளிர்ச்சிக்குக் காரணமான நிழலும், உஷ்ணத்திற்குக்காரணமான வெய்யிலும். சிறுமை பெருமை- சிறுமைக்கு எல்லையான அணுத்வமும், பெருமைக்கு எல்லை யான மகத்வமும். குறுமை நெடுமை - மத்திம அளவிலுண் டான குறுகுதல் நீளுதல்கள். சுழல்வன நிற்பன - ஜங்கமங்க ளும், தாவரங்களும். மற்றுமாய்-சொல்லப்படாதனஎல்லாமாய். 'மற்றும்' என்றது, சொல்லப்படாதனவற்றைத் தழுவுகின் றது. அவை அல்லனுமாய்-[2] அவற்றுக்கு அந்தர்யாமியாய் நிற் கச்செய்தே அவற்றின் தோஷங்கள் தட்டாதபடி நிற்பான் என்று மேலே சொல்லப்பட்டதே அன்றே; இனி, இங்கு என்? என்னில், அவற்றிற்கு வரும் அவஸ்தைகளையுமுடைய னல்லனய் நிற்பன் என்பதனைத் தெரிவித்தபடி. அவை: சேதனனிடத்தே உள்ள சுகதுக்கங்களும், அசேதனத்திடத் தேயுள்ள வளர்தல் முதலானவைகளுமாம். மழலை வாய் வண்டு வாழ் திருவிண்ணகர் மன்னுபிரான் - பருவத்தின் இளமை யாலே இனிய பேச்சுக்களையுடைத்தான வண்டுகள் வாழா நின்றுள்ள திருவிண்ணகரிலே நித்தியவாசம் செய்கிற உப காரகன். கழல்கள் அன்றி மற்று ஓர் களைகண் இலம் - அவன்

---

1. "கழல்கள் அன்றி மற்று ஓர் களைகண் இலம்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. மேல், ஆரும் பாசுரத்திலும் "அல்லனய்" என்ருர்; இங்கும், "அல்லனுமாய்" என்கிருர்; இவற்றிற்கு வேறுபாடு என்னை? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அவற்றுக்கு' என்று தொடங்கி. என்றது, அங்கு, கர்மங்கட்குக் கட்டுப் படாதவன் என்பது சொல்லப்பட்டது. இங்கு, அவற்றின் காரியமான சுகதுக்கங்கள் இல்லாதவன் என்பது சொல்லப்பட்டது என்றபடி.

திருவடிகளை ஒழிய வேறு ரக்ஷகத்தையுடையோம் அல்லோம். [1]"என்னையே சரணமாகப் பற்று" என்னுமவன் அன்றிக்கே, திருவடிகள்தாமே தஞ்சம் என்பார் '**கழல்கள் அன்றி மற்றோர் களைகண் இலம்**'என்கிறார். காண்மின்களே-இது[2] அர்த்தவாதம் சொல்லுகிறேன் அல்லேன்; நீங்களும் பாருங்கோள் என்கிறார். (10)

**585.**

**காண்மின் கள்உல கீர்! என்று கண்முகப் பேநிமிர்ந்த**
**தாளிணை யன்தன்னைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன**
**ஆணை ஆயிரத்துத் திருவிண்ணகர்ப் பத்தும் வல்லார்**
**கோணை இன்றிவிண் ணோர்க்கென்று மாவர் குரவர்களே.**

**பொ - ரை :**—உலகத்தீர்! இதனைக் காணுங்கோள் என்று கண்களுக்கு எதிரே வளர்ந்த திருவடிகளையுடைய சர்வேசுவரன் விஷயமாக, திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீசடகோபரால் அருளிச்செய்யப்பட்ட, பகவானுடைய ஆணை உருவமாக இருக்கிற, ஆயிரம் திருப்பாசுரங்களுள் திருவிண்ணகரம் என்ற திவ்வியதேசத்தைப் பற்றிய இப்பத்துத் திருப்பாசுரங்களையும் வல்லவர்கள், ஒரு குற்றமும் இன்றி நித்தியசூரிகளுக்கு என்றும் கௌரவிக்கத் தக்கவர்கள் ஆவர்கள்.

**வி - கு :**—சடகோபன் சொன்ன திருவிண்ணகர்ப் பத்தும் வல்லார் விண்ணோர்க்கு என்றும் கோணை இன்றிக் குரவர்கள் ஆவர் என்க.

**ஈடு :**—முடிவில், இத்திருவாய்மொழி [3]வல்லார் நித்தியசூரிகளுக்கு நாள்தோறும் கௌரவிக்கத் தக்கவராவர் என்கிறார்.

காண்மின்கள் உலகீர் என்று கண்முகப்பே நிமிர்ந்த தாள் இணையன் தன்னை-[4]"உங்கள் தலைகளிலே நான் காலைவைக்கக்

1. "மன்னுபிரான் அன்றி", "கழல்கள் அன்றி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'என்னையே' என்று தொடங்கி.

"மாமேகம் சரணம் வ்ரஜ"

என்பது, ஸ்ரீ கீதை. 18: 66.

"மறுபிறப் பறுக்கும் மாசில் சேவடி"

என்பது பரிபாடல்.

2. அர்த்தவாதம் - புனைந்துரை.

3. "பத்தும் வல்லார் விண்ணோர்க்கு என்றும் ஆவர் குரவர்களே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. "கண்முகப்பே நிமிர்ந்த" என்னாமல், "காண்மின்கள் உலகீர்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உங்கள் தலைகளிலே' என்று தொடங்கி,

கொடு வாருங்கோள்' என்றால், இசையார் என்று பார்த்து, நான் காட்டப் புகுவது ஓர் ஆச்சரியத்தைப் பாருங்கோள் என்பாரைப் போலே இவர்கள் கண்முகப்பே நிமிர்ந்த திருவடித் தாமரைகளையுடையவனை. காண்மின்கள்-[1] இது ஓர் ஆச்சரியம் என்னவேண்டிற்றுக்காணும் 'தலைகளிலே அடிபடப் புக்க வாறேஇருப்பர்கள்'என்று.குருகூர்ச்சடகோபன்சொன்ன-[2] இந்தச் சௌலப்யத்தை அநுபவித்தவர் சொன்ன வார்த்தையாகையாலே ஆப்தம் என்கை. ஆயிரத்து ஆணை திருவிண்ணகர் இப்பத்தும் வல்லார் - ஈசுவரனுடைய உலக நியமனத்தைச் சொன்ன இத் திருவாய்மொழி வல்லார். விண்ணோர்க்கு என்றும் கோணை இன்றிக் குரவர்கள் ஆவர் - நித்தியசூரிகளுக்குக் காலம் என்னும் ஒருபொருள் உள்ளவரையிலும் கௌரவிக்கத் தக்கவராவர். இதில், கோணை இல்லை-ஒருமிறுக்குஇல்லை. என்றது, என் சொல்லியவாறோ? எனின், சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாத நித்தியசூரிகளுக்கு, [3] நித்திய சம்சாரியான்வன் இதனைக் கற்ற அளவிலே கௌரவிக்கத் தக்கவராதல் எங்ஙனே? என்னில், அங்கே இருந்து வைத்தே ததீயத்வ ஆகாரத்தாலே லீலாவிபூதியை நினைத்து உவகையராம் நிலையுள்ளது முக்தர்க்கு ஆகையாலே, இங்கே இருந்தே அவர்கள் அநுசந்தானத்தைச் செய்கிற இவனை, 'சம்சாரத்தே இருந்து வைத்தே நம்படி ஒருவனுக்கு உண்டாவதே!' என்று கொண்டாடி இருப்பர்கள் என்பதனைத் தெரிவித்தபடி. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

**நல்லவலத் தால்நம்மைச் சேர்த்தோன்முன் நண்ணாரை**
**வெல்லும் விருத்த விபூதியன்என்று—எல்லையறத்**
**தானிருந்து வாழ்த்தும் தமிழ்மாறன் சொல்வல்லார்**
**வானவர்க்கு வாய்த்தகுர வர். (53)**

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. ரசோக்தியாக அதனை விவரணம் செய்கிறார் 'இது ஓர் ஆச்சரியம்' என்று தொடங்கி.

2. இந்தச் சௌலப்யத்தை - திருவுலகு அளந்தருளின சௌலப்யத்தை.

3. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

என்ற திருக்குறளையும், அதன் பரிமேலழகர் உரையையும் இங்கே நோக்குக.

## நான்காந் திருவாய்மொழி — "குரவை"

## முன்னுரை

ஈடு:—[1] இத்திருவாய்மொழியில் ஆழ்வார் ஸ்ரீவால்மீகி பகவானோடு ஒப்பர். அவனும் இராமாவதாரமல்லது போக்கி அறியான்; அவனுடைய பிரபந்தமும் அப்படியே; இவரும் கிருஷ்ணாவதாரம் அல்லது அறியார்; இத் திருவாய்மொழி கிருஷ்ணனுடைய சரிதை ஒழிய வேறு ஒன்றைச் சொல்லாது.[2] அன்றிக்கே, "சூரனே! என் எண்ணமானது வேறு இடத்தில் செல்வது இல்லை" என்று கொண்டு 'பரமிலையும் கூட வேண்டேன்' என்ற திருவடியைப்போலே யாயிற்று இவரும் கிருஷ்ணாவதாரம் ஒழிய வேறு ஒன்று அறியாதபடி என்னுதல். [3]"சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான்" என்கிறபடியே, கிட்டிநின்று அநுபவிக்கப் பெற்றிலோம் என்கிற இழவு தீர, பூமியிலே ஆகப்பெற்றது;"தொல்லருள் நல்வினையால் சொலக் கூடுங்கொல்?" என்றே யன்றோ இவர் ஆசைப்பட்டது; அதாவது, நா நீர் வந்து திருநாமம் சொல்லுகையாகிறது[4] புண்ணியத்தின் பலமே அன்றோ.[5]"பிறந்தவாறும்"என்ற திருவாய்மொழியில் இவர்க்கு உண்டான இழவு எல்லாம் தீரும்படி ஸ்ரீபிருந்தா

---

1. இத்திருவாய்மொழியிலே, கிருஷ்ணனுடைய குணங்களிலே ஈடுபட்டுப் பேசுகிற இவர்க்கும், கிருஷ்ணனுடைய குணங்களையே சொல்லுகிற இத்திருவாய்மொழிக்கும் திருஷ்டாந்தமாக, ஸ்ரீவால்மீகி பகவானையும், ஸ்ரீராமாயணத்தையும் அருளிச்செய்கிறார் 'இத்திருவாய்மொழியில்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அவனும்' என்று தொடங்கி.

2. வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

"ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டிதஃ
பக்திஶ்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி"

என்பது, ஸ்ரீராமா. உத். 40 : 16.

3. "மாசறுசோதி" என்று தொடங்கி "மின்னிடை மடவார்" அளவும் உண்டான வியசனங்கள் எல்லாம் தீர இத்திருவாய்மொழியில் அநுபவிக்கிறார் என்கிறார் "சேணுயர் வானத்திருக்கும்" என்று தொடங்கி. 'பூமியிலேயாகப்பெற்றது' என்றது, அவதரிக்கப்பெற்றது என்றபடி.

4. 'புண்ணியத்தின் பலமேயன்றோ' என்றது, புண்ணியத்தின் பலம் ஆகையாலே ஆசைப்பட்டபடியே திருநாமங்கள் சொல்ல நேர்ந்தது என்றபடி.

5. '"பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழியில் இவர்க்கு உண்டான இழவெல்லாம்' என்றது, தரித்துநின்று அநுபவிக்கமாட்டாத இழவு எல்லாம் என்றபடி.

வனத்தில் நடந்த செயல்களைக் காட்டிக் கொடுக்கக் கண்டு, அவை இறந்தகாலத்தில் நடந்த செயல்கள் போலத் தோற்றுகை அன்றிக்கே, சமகாலத்தில் நடக்கும் செயல் போலே தோற்றக் கிட்டி நின்று அநுபவிக்கிறார்.

[1] "**மின்னிடை மடவார்**" என்ற திருவாய்மொழியிலே, '**அல்லோம்**' என்று அகன்று முடிந்து போகப் புக்க தம்மை '**ஆவோம்**' என்னச் செய்து சேரவிட்டுக் கொண்டபடியை நினைத்து, இப்படி வல்லார் இவன் அல்லது இலர்கண்டீர் என்று தலைக்கட்டுகிறாராயிருக்கிறது. [2] "**சன்மம் பலபல**" என்ற திருவாய்மொழியிலும் இப்படி இருப்பது ஓர் உவகை உண்டே; அதற்கும் இதற்கும் வாசி என் ? என்னில், அங்கு, இதர வியாவிருத்தி மாத்திரத்தால் உண்டான ஞான லாபத்தால் உண்டான உவகை; இங்கு, அவன், தன் குணங்களை நேரே இவரை நெருங்கி அநுபவிப்பிக்க, தம்வசப்பட்டவர் அல்லாதபடி அநுபவித்து உவகையராய் வாய்விடுகிறார்.

---

## 586.

குரவை ஆய்ச்சிய ரோடு கோத்ததும் குன்றம்ஒன்று ஏந்தியதும்
உரவுநீர்ப் பொய்கை நாகங் காய்ந்ததும் உள்பட மற்றும்பல
அரவில் பள்ளிப் பிரான்தன் மாய வினைகளை யேஅலற்றி
இரவும் நன்பக லும்[3] தவிர் கிலன்என்ன குறைவு எனக்கே.

**பொ-ரை :**—ஆய்ச்சியரோடு குரவைக்கூத்தினைக் கோத்து விளையாடியதும், கோவர்த்தனம் என்னும் மலையை ஏந்திக் குடையாகப் பிடித்ததும், வலிய தண்ணீரையுடைய பொய்கையிலே கிடந்த காளிங்கன்

---

1. மின்னிடை மடவாரோடு இதற்கு இயைபு யாது ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மின்னிடை மடவார்' என்று தொடங்கி. 'தலைக் கட்டுகிறாராயிருக்கிறது' என்றது, "நல்குரவும்" என்ற திருவாய்மொழியிலே தலைக்கட்டுகிறாராயிருக்கிறது என்றபடி. மின்னிடை மடவார்க்கும் இதற்கும் நேரே இயைபு. "நல்குரவும்" என்ற திருவாய்மொழி பிராசங்கிகம்.

2. மேலேயும் இப்படிப்பட்ட உவகை உண்டே ; அதற்கும் இதற்கும் வாசி யாது ? என்கிற சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் "சன்மம் பலபல" என்று தொடங்கி. இதர வியாவிருத்தி என்றது, "சொன்னால் விரோதம்" என்ற திருவாய்மொழியில் திருந்தாத சம்சாரிகளில் தமக்கு உண்டான வேறுபாடு என்றபடி.

3. "தவிர்கிலம் என்ன குறை நமக்கே" என்பதும் பாடம்.

என்னும் பாம்பினை ஒட்டினதும், இவை முதலான மற்றும் பலவான, ஆதிசேடசயனத்தையுடைய பெருமானது ஆச்சரியமான செயல்களையே சொல்லிக்கொண்டு நல்ல இராப்பொழுதும் நல்ல பகற்பொழுதும் தவிரேன் ; எனக்கு வேறு என்ன குறை உளது ?

**வி - கு :**—மற்றும் பல மாய வினைகளை என்று கூட்டுக. அலற்றித் தவிர்கிலன் என்க.

இத் திருவாய்மொழி, அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

**ஈடு :**—[1]முதற் பாட்டு. பகலும் இரவும் கிருஷ்ணனுடைய குணங்களைப் பிரீதி முன்னாக அநுபவிக்கப் பெற்ற எனக்கு, இனி ஒரு குறை இல்லை என்கிறார்.

ஆய்ச்சியரோடு குரவை கோத்ததும் - "பிறந்தவாறும்" என்றாற்போலே தொடங்கி ஓர் அவதாரம் முன்னாக இழியாமல், [2] இதிலே இழிவான் என் ? என்னில், "மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழியில் உண்டான தம்முடைய பிரணய ரோஷத்தினைப் போக்கித் தம்மைச் சேரவிட்டுக்கொண்டபடி, திருக்குரவைக் கூத்தில் பெண்களோடே கலந்து அவர்களை அநுபவிப்பித்தாற் போலே இருக்கையாலே, அது முன்னாகப் பேசுகிறார். அன்றிக்கே, [3]தாம் அநுசந்திக்கில் அன்றோ ஓர் அடைவாக இழிவது! அவன் அநுபவிப்பித்தபடியே பேசுகிறாராகையாலே திருக் குரவைக்கூத்தினை முதல் முன்னம் பேசுகிறார் என்னுதல். திருக்குரவையில் பெண்களோடு உண்டான கலவியையாயிற்று இவர்க்கு முதலிலே காட்டிக் கொடுத்தது. [4] ஐந்து லக்ஷம் குடிகளிலுள்ள பெண்கள் எல்லாரோடும் கலந்த பிரீதி உண்டாயிற்று, இவர் ஒருவரோடு கலந்த பிரீதி. [5] தன்செல்லாமையாலே ஆயர் பெண்களுடைய மாலையிலே

---

1. "அரவில் பள்ளிப்பிரான் தன் மாய வினைகளையே அலற்றி" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. இதிலே - திருக் குரவைக்கூத்திலே.

3. அங்ஙனம் இழிந்ததற்கு வேறும் ஒருவகையில் காரணம் காட்டுகிறார் 'தாம் அநுசந்திக்கில்' என்று தொடங்கி.

4. அவன்தான் இதனை முந்தற அநுபவிப்பித்தற்குக் காரணம் என் ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஐந்து லக்ஷம்' என்று தொடங்கி.

5. "ஆய்ச்சியரோடு" என்ற மூன்றும் வேற்றுமை யுருபிற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'தன்செல்லாமையாலே' என்று தொடங்கி. என்றது, ஆய்ச்சியர்க்கு உண்டான உயர்வு இன்மை தனக்கு உண்டாம்படி கோத்தான் என்றபடி. இங்கு, "ஆய்ச்சியரோடு" என்ற ஒருவினைக் கிளவியாகிய "ஒடு" உருபு, உயர்பில் வழியில் வந்திருப்பதாகத் திருவுள்ளம்பற்றி இவ்விசேடவுரை அருளிச்செய்கிறார்.

தன்னை முதன்மை இல்லாதவனாகச் செய்து கொண்டு கோத்ததும்.[1] "**குரவை பிணைந்த குழகும்**" என்று ஆசைப்பட்டபடியே அநுபவிக்கிறார். [2]பெண்களுடைய மாலையிலே இடையீடாகத் தன்னைக் கோக்கிறபோது, '**விஜாதீயன் ஒருவன் கலந்தான்**' என்று தோற்றாதபடி அவர்களோடே ஒரு நீராகக் கலந்தபடி. பெண்களும் பெண்களும் அல்லவோ கைகளைக்கோத்து விளையாடுவார். [3] திருக்குரவையில் இவனை ஒழியப் பெண்களுக்குச் செல்லாததுபோலே காணும் "மின்னிடை மடவார்"என்ற திருவாய்மொழியில், ஆழ்வாரை ஒழிய இவனுக்குச் செல்லாமை விளைந்தபடி. கோக்கை - தொடுத்தல். கைகோத்துக்கொண்டு ஆடும் கூத்து அன்றோ, குரவைக் கூத்து ஆகிறது.

குன்றம் ஒன்று ஏந்தியதும்-[4]சுவர்க்கம் என்று கொண்டு ஒரு போக பூமியாய், அங்கே தேவமாதர்களோடே கழகம் இருந்து புண்ணியத்தின் பலத்தை அநுபவம் பண்ணி மிக்க சுகத்தோடு இருப்பான் இந்திரன் ஒருவன் உளன் அன்றோ; அந்த அநுபவத்தைப் பூமியிலே ஒரு பருவத்திற் பெண்களோடேகூடப்பூர்ணமாகஅநுபவித்திருக்கிறஇருப்பைக்கண்டு அது பொறுக்கமாட்டாமையால் பொறாமை மிக்கு, '**நமக்கு இட்டசோற்றை உண்டான்**'என்று ஒருவியாஜமாகக் கல்மழையைப் பெய்வித்தான்; அப்போது கைக்கு எட்டிற்று ஒரு மலையை எடுத்துத் தரித்துக்கொண்டு நின்றபடி. [5] ஒருவன் இங்கே ஒருநாள் மூக்குப் புதைக்குங் காட்டில், 'நம்முடைய போகம் பகுந்து போகப் புகாநின்றது' என்று அஞ்சி அவரை

---

1. "பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழியில் உண்டான துன்பமும் இதிலே தீர்ந்தது என்கிறார் 'குரவை பிணைந்த குழகும்' என்று தொடங்கி.

2. "கோத்ததும்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பெண்களுடைய' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'பெண்களும்' என்று தொடங்கி.

3. "குரவை ஆய்ச்சியரோடு கோத்ததும்" என்று பதங்களைப் பிரயோகித்ததற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'திருக்குரவையில்' என்று தொடங்கி.

4. மேலே உள்ள பதங்களையும் கூட்டிக்கொண்டு "குன்றம் ஒன்று ஏந்தியதும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சுவர்க்கம்' என்று தொடங்கி.

5. இந்திரன் அப்படிப் பொறாமை என்னும் குணம் உள்ளவனோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒருவன்' என்று தொடங்கி. மூக்குப் புதைத்தல் - பிராணாயாமம் செய்தல். 'அவரை உவரை' என்றது, அப்ஸரஸ்திரீகளை.

உவரை வரவிட்டுக் கலக்குமவன் அன்ரே. [1]' இப்படி அநு பவிக்கிறன் சர்வேசுவரன்' என்று அறியான் அன்ரே; [2] இவன், தன்னை மனிதசஜாதீயன் ஆக்கிக்கொண்டு இருக்கை யாலே. [3]அன்றைய தினத்தில் கல்மழையில் பசுக்களுக்கும் இடையர்க்கும் வந்த ஆபத்தைத் தீர்த்தாற்போலே யாகாதே, இவர்க்கும் "மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழியில் வந்த ஆபத்தைத் தீர்த்த படியும். ஏந்தியதும்-[4]பிறர்பொருட்டு ஆகையாலே கைக்கு ஓர் ஆபரணம் போலே ஆயிற்று. அது தான் வருத்தமற்று இருந்தபடி. பூ ஏந்திஞற் போலே இருந் தது. [5]ஏழு வயதிலே ஏழுநாள் ஒருபடிப்பட தரித்துக்கொண்டு அன்ரே நின்றது! ' இப்படி ஏழு வயதிலே ஏழு நாள் தரித்த தற்கு என்செய்வோம் நாம்' என்று ஒருவர் நெஞ்சாறல் படாத படி சகோத்திரியாய் நின்றே அன்ரே இவன் இவற்றை ரக்ஷித்தது.

உரவு நீர்-தறை காண ஒண்ணுமையால் உண்டான ஆழத் தையுடைத்தான மிடுக்கையுடைய நீர் என்னுதல். அன்றியே, காளியனுடைய விஷத்தால் ஒருவர்க்கும் கிட்ட ஒண்ணுத வலி யையுடைய நீர் என்னுதல்.அன்றிக்கே,[6]முது நீர் ஆகையாலே வலிய நீர் என்னுதல். உரவு - விஷம். நாகம் காய்ந்ததும்-நாகத்தை ஓட்டியதும். [7]பாம்பு அடித்து மேலிட்டுக் காணும் பெண்களோடே ஜலக்கிரீடை பண்ணிற்று. உள்பட மற்றும் பல - இவை முதலான செயல்களுக்கு ஓர் எண் இல்லை.

---

1. சர்வேசுவரனிடத்திலும் இப்படிப் பொருமை உண்டாகுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் ' இப்படி ' என்று தொடங்கி.

2. அறியாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிருர் ' இவன், தன்னை ' என்று தொடங்கி.

3. " குன்றம் ஒன்று ஏந்தியதும் " என்கிறவருடைய மனேபாவத்தை அருளிச்செய்கிருர் ' அன்றைய தினத்தில் ' என்று தொடங்கி.

4. " ஏந்தியதும் " என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் ' பிறர் பொருட்டு ' என்று தொடங்கி. ' கைக்கு ஓர் ஆபரணம்போலே ' என்றதனை விவரணம் செய்கிருர் ' பூ ஏந்திஞற் போலே இருந்தது ' என்று.

5. பிறர் பொருட்டுத் தரித்து நின்றதன் எல்லையை ரசோக்தியாக அருளிச்செய்கிருர் ' ஏழுவயதிலே ' என்று தொடங்கி. சகோத்திரியாய் - ஸகோத்திரனுய் என்றும், ஸஜ்ஞாதிவர்க்கன் என்றும் இருபொருள். கோத்தி ரம் - மலையும், குலமும்.

6. முதுநீர் - பழைய நீர்.

7. "குரவை ஆய்ச்சியரோடு" என்றதனையும் கூட்டி ரசோக்தியாக, பாவம் அருளிச்செய்கிருர் ' பாம்பு அடித்து ' என்று தொடங்கி,

[1] "பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழியில், வலிமைக் குறைவாலே சொல்ல மாட்டிற்றிலர்; இங்கு, உகப்புத் தலை மண்டையிட்டுச் சொல்லமாட்டுகிறிலர். மற்றும், இப்படிப் பெண்களுடைய கலவிக்குத் [2] தண்ணீர்த்துரும்பு அறுத்தவை பலவாம். அரவில் பள்ளிப் பிரான் - [3] நாட்டார் உறக்கம் தமோ குணத்தால் மறைக்கப்பட்டதாய் தங்கள் பொருட்டேயாய் இருக்கும்; இவன் உறக்கம் பிறருடைய ரக்ஷணத்தின் பொருட்டு இருக்கும். [4] உறங்குவான்போல் யோகு செய்த பெருமான் அல்லனோ. உறங்கினானாகில் பிறருடைய ரக்ஷணத்துக்கு உடலாயிருக்கும்; உணர்ந்திருந்தானாகிலும் அப்படியே; இது என்ன உபகாரந்தான்! அரவில் பள்ளிப்பிரான் - [5] மேலே, ஒரு பாம்போடு உண்டான சேராமை சொல்லிற்று; இங்கு, ஒரு பாம்போடு உண்டான சேர்த்தி சொல்லுகிறது. அங்கு, போகத்தைக் காற்கடைக் கொண்டமை சொல்லிற்று; இங்கு, போகப் பிராவண்யம் சொல்லுகிறது. [6] பிரதிகூலனான காளியனைப் பறக்க ஓட்டினான்; அநுகூலனானவனைப் படுக்கையாகக் கொண்டான்.

---

1. "பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழியிற் போன்று, இங்கு வலிமைக்குக் குறை இல்லையே? அங்ஙனம் இருக்க, சேரச் சொல்லாது, "மற்றும் பல" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிறந்தவாறும்' என்று தொடங்கி.

2. 'தண்ணீர்த்துரும்பு அறுத்தவை பலவாம்' என்றது, தண்ணீர்த் துரும்பு போலே விரோதிகளானவற்றைப் போக்கின செயல்கள் பலவாம் என்றபடி.

3. உணர்ந்த சமயத்தில் ஒழிய, உறங்குகிற சமயத்தில் செய்கிற உபகாரம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நாட்டார்' என்று தொடங்கி.

4. இவன் உறக்கம் பிறரைக் காப்பாற்றும் பொருட்டேயாக இருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'உறங்குவான்' என்று தொடங்கி. இது, திருவாய். 5. 4 : 11.

வியாக்கியாதாவினுடைய ஈடுபாடு: 'உறங்கினானாகில்' என்று தொடங்கும் வாக்கியம்.

5. "நாகம் காய்ந்ததும்" என்றதனையும் கூட்டிக்கொண்டு "அரவில் பள்ளிப்பெருமான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மேலே' என்று தொடங்கி. ரசோக்தியாக மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'அங்கு, போகத்தை' என்று தொடங்கி. போகம் - பாம்பினுடல், இன்பம்.

6. இரண்டும் பாம்பாக இருக்க, இப்படிச் செய்கைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரதிகூலனான' என்று தொடங்கி.

[1] இவன்தான் பலபல முகமாக அநுகூலிக்கும்; அவனும் பல பல முகமாக அடிமைகொள்ளும். [2] ஆயிரம் பைந்தலை அனந்தன் அல்லனே.

அரவில் பள்ளிப் பிரான் - [3] அவதாரங்களுக்கு அடி திருப்பாற்கடலாகையாலே அதனைச் சொல்லுதல்; அன்றியே, [4] "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்" என்றதனை நினைக்கிறாராதல். தன் மாய வினைகளையே அலற்றி - அவனுடைய ஆச்சரியமான செயல்களையே வாய்விட்டுத் துதிசெய்து. இரவும் நன்பகலும் தவிர்கிலன் - பகவானுடைய அநுபவத்திற்கு உறுப்பாகாதஅன்றே அன்றோ [5] சுடர்கொள் இராப் பகலாக இருப்பது; அநுபவத்திற்குத் தக்கதான காலமாகையாலே, **நல்ல இரவும் நல்ல பகலும்** என்கிறார். பிரிந்த காலத்திலே அன்றோ நெருப்பை உருக்கி ஏறட்டினாற் போலே இருப்பது. என்ன குறைவு எனக்கே - [6] "அங்குக் காலம் பிரபுவாய் இல்லை" என்றுகொண்டு பகலும் இரவும் நடையாடாதது ஒரு தேச விசேடம் தேடி அநுபவிக்கைக்குப் பட்டைப் பொதிசோறு கட்டவேண்டும்படி குறைவாளனாயிருந்தேனோ? ஒரே தன்மையதான அநுபவம்அன்றோ அங்கு உள்ளது; [7] "பல இருதுக்களில் விளையாடினார்" என்கிறபடியே, அந்த அந்தக் காலங்கள்

---

1. இவன் அநுகூலிக்கும் பிரகாரம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவன்தான்' என்று தொடங்கி. இவன் பல பல முகமாக அடிமை செய்கையாலே, அவனும் பல பல முகமாக அடிமை கொள்ளும் என்கிறார் 'அவனும் பல பல' என்று தொடங்கி.

2. அவனுக்குப் பல முகங்கள் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆயிரம்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 4. 3: 10.

3. கிருஷ்ணவதாரம் அல்லது பேசாதிருக்கிற இவர் திருப்பாற்கடல் நாதனைச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவதாரங்களுக்கு' என்று தொடங்கி.

4. இது, திருவாய். 5. 10: 11.

5. இது, திருவாய். 2. 1: 4. "சுடர்கொள்" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பிரிந்த காலத்தில்' என்று தொடங்கி. சுடர் - நெருப்பு.

6. "காலம் ஸபசதே தத்ர ந காலஃ தத்ரவை ப்ரபுஃ" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. பட்டைப்பொதி சோறு - பாக்குப் பட்டையில் கட்டுகிற சோறு.

7. "விஜஹார பஹூந் ருதூந்" என்பது, ஸ்ரீராமா. பால. 77: 25.

தோறும் உண்டான அநுபவ விசேடங்களை அநுபவிக்கப் பெற்ற எனக்கு ஒருகுறை உண்டோ? அன்றிக்கே, பரத்துவ அநுபவமே அன்றோ அங்கு உள்ளது; சீலகுண அநுபவமுள்ளது இங்கே அன்றோ. ஆதலின் "என்ன குறைவு எனக்கே" என்கிறார் என்னுதல். (1)

587.

கேயத் தீங்குழல் ஊதிற் றும்நிரை மேய்த்ததும் கேண்டைஒண்கண்
வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் மற்றும்பல
மாயக் கோலப்பிரான் தன் செய்கை நினைந்து மனம் குழைந்து
நேயத் தோடு கழிந்த போதுஎனக்கு எவ்வுல கம்நிகரே.

**பொ - ரை:**—வேய்ங்குழலிலே இனிய பாட்டுக்களை வைத்து ஊதியதும், பசுக்களை மேய்த்ததும், கெண்டைமீன் போன்ற பிரகாசம் பொருந்திய கண்களையும் வாசனைபொருந்திய பூக்களை யணிந்த கூந்தலையுமுடைய நப்பின்னைப்பிராட்டியினுடைய தோள்களைக் கூடியதும், மற்றும் பலவான, அழகிய மாயப்பிரானுடைய செயல்களை நினைந்து மனம் குழைய அன்போடு காலங்கள் கழிகின்றன; ஆதலால், எனக்கு எந்த உலகம்தான் ஒப்பாகும்.

**வி-கு:**—மற்றும் பல செய்கை என்க. நினைந்து மனம் குழைந்து போது நேயத்தோடு கழிந்த என்க. குழைந்து - குழைய; எச்சத்திரிபு. கேயம் - பாட்டு. கழிந்த - கழிகின்றன; காலமயக்கம். மாற்றிக் கூட்டாமல், கழிந்தபோது-கழிந்த காலத்தில் என நேரே பொருள் கூறலுமாம். உலகம்: ஆகுபெயர்.

**ஈடு:**—இரண்டாம்பாட்டு. [1]"தொல்லருள் நல்வினையால் சொலக் கூடுங்கொல்" என்று பிரார்த்தித்தபடியே பெறுகையாலே, திருநாட்டிலேதான் என்னோடு ஒப்பார் உளரோ? என்கிறார்.

கேயம் தீம் குழல் ஊதிற்றும் -[2]தான் நினைத்த பெண்களுடைய பெயரை வைத்துப் புணர்த்துச் சுவைப் பாட்டாக வைத்து ஊதிற்றும். கேயம் - பாட்டு. தீம் - இனிமை; இனிமையையுடைய பாட்டு என்றபடி. நிரை மேய்த்ததும் -[3]பெண்களை

1. "நேயத்தோடு கழிந்தபோது எனக்கு எவ்வுலகம் நிகர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஊதுகைக்கு விஷயம் காட்டுகிறார் 'தான் நினைத்த' என்று தொடங்கி.

3. "கேயத் தீங்குழல் ஊதிற்றும்" என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'பெண்களை' என்று தொடங்கி.

அழைக்கைக்கும் பசுமேய்க்கைக்கும் ஒன்றே பரிகரம். [1]குழலை ஊதவே பசுக்கள் வயிறு நிறையும். [2]சக்கரவர்த்தித் திருமகனுக்கு வில் கைவந்திருக்குமாறுபோலே யாயிற்று, கிருஷ்ணனுக்குக் குழல் கைவந்திருக்கும்படி. கெண்டை ஒண் கண் வாசம் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் - [3]கரனைக் கொன்றஅன்று, பிராட்டி "கணவனை ஆலிங்கனம் செய்தாள்" என்னும்படி அணைத்தாற் போலே யாயிற்று, பசு மேய்த்து வந்த சிரமம் எல்லாம் போகும்படி நப்பின்னைப்பிராட்டி இளமைபொருந்திய அழகிய திருக்கண்களாலே குளிர நோக்கி அழகிய திருக்குழலின் பரிமளத்தாலே திருமேனியை வாசனையுடையதாம்படி ஆக்கித் தன்தோள்களோடே அணைத்ததுவும். கெண்டை ஒண்கண் - கெண்டை போலே மிக இளமையினையுடையனவாய், அமிருதத்தைப் பெய்தாற்போலே குளிர நோக்குகிற திருக்கண்கள். வாசம் பூங் குழல் - [4]வாசம் செய் பூங்குழலிற் காட்டிலும் பொலிவையுடைத்தான தன்னேற்றமுடைய குழலையுடையவள். பின்னை தோள்கள் மணந்ததும் - அவளுடைய தோள்களுடனே கலந்ததுவும். மணத்தல் - கலத்தல். [5]"தோளி" என்கிறபடியே, இவளுக்கு அழகு [6]கைவிஞ்சி யிருக்குமே.

---

1. குழல் ஊதுதல் பசுமேய்க்கைக்குப் பரிகரம் ஆகுமோ? என்ன, 'குழலை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. குழலை ஒழிய வேறு கருவி இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சக்கரவர்த்தித் திருமகன்' என்று தொடங்கி.

3. "நிரைமேய்த்ததும்" என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'கரனைக்கொன்ற' என்று தொடங்கி.

"தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணும் ஸுகாவஹம்
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்தாரம் பரிஷஸ்வஜே"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 30 : 39.

4. வாசம் செய்கிற குழல் என்னுமல், "வாசப் பூங் குழல்" என்கையாலே, பிராட்டியினுடைய திருக்குழலைக்காட்டிலும் நப்பின்னைப் பிராட்டியின் திருக்குழலுக்கு ஏற்றம் உண்டு என்கிறார் 'வாசம்செய்' என்று தொடங்கி. இது, திருவாய். 10. 10 : 2.

5. மற்றைய அவயவங்கள் இருக்க, "தோள்களை" விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தோளி' என்று தொடங்கி. இது, திருவாய். 4. 2: 5.

6. கை விஞ்சியிருக்கும் - தோளாலே விஞ்சி இருக்கும் என்றும், அதிகமாயிருக்கும் என்றும் இருபொருள்.

மற்றும் பல-மற்றைப் பிராட்டிமாரோடு கலந்தபடி. [1]சக்கரவர்த்தித் திருமகனுக்கு அத்யயநம், ஆசாரிய சேவை, அஸ்திர சஸ்திரப் பயிற்சிகள் உண்டாமாறுபோலே, இவனுக்கு, எல்லாம் இவையே அல்லவோ. மாயம் கோலம் பிரான் - [2]நப்பின்னைப் பிராட்டியோடே கலந்த ஒற்று மஞ்சளும் தானுமான மிக்க ஆச்சரியமான ஒப்பனையுடைய உபகாரகன். [3]அன்றிக்கே, நப்பின்னைப் பிராட்டியோடு கலந்தாற் போலே, அல்லாத பிராட்டிமார் "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பு அழியப் புகுந்து ஒருநாள், தங்குமேல் என் ஆவி தங்கும்" என்று இருக்குமவர்களுடைய திருமுலைத்தடத்தில் குங்குமக் குழம்பும் கோயிற்சாந்துமாய் நின்ற அழகினைச் சொல்லவுமாம். தன் செய்கை நினைந்து மனம் குழைந்து நேயத்தோடு கழிந்த போது - அவன் செயல்களை நினைத்தவாறே நெஞ்சு தன்வசம் இன்றி அழியும்படி. [4]"நினைதொறும், நெஞ்சு இடிந்துகும்" என்றே அன்றோ இருப்பது. நேயத்தோடு கழிந்த போது - [5]நினைக்கப்படுகின்ற பொருளினுடைய இனிமையாலே நினைவு தான் இனிதாய்க் கழிந்த போது. நேயம் -நேசம். எனக்கு எவ்வுலகம் நிகர்-ஒருதேச விசேடத்தில்தான் எனக்கு ஒப்பாவார் உளரோ? [6]அநுபவ வேளை போலே நினைக்கின்ற காலத்திலும் இனிமையோடே செல்லக்கடவதானல் எனக்கு எங்கே

---

1. இவனுக்கு வேறு செயல் இல்லையோ? இதுவேயோ செயல்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சக்கரவர்த்தித் திருமகன்' என்று தொடங்கி.

2. "பின்னை தோள்கள் மணந்ததும்" என்றதனையும் கூட்டி "மாயம் கோலம்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நப்பின்னைப் பிராட்டி' என்று தொடங்கி.

3. "மாயம் கோலம்" என்றதனை "மற்றும் பல" என்றதனோடு கூட்டி, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'கொங்கைமேல்' என்று தொடங்கும் பாசுரம், நாய்ச்சியார் திருமொழி. 8: 7.

4. இது, திருவாய். 9. 6: 2.

5. அநுபவத்தால் உண்டாகக்கூடிய பிரீதி நினைவினல் உண்டாகக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நினைக்கப்படுகின்ற' என்று தொடங்கி.

6. நித்தியாநுபவம் செய்கிற நித்தியசூரிகளைக் காட்டிலும் இவர்க்கு ஏற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அநுபவவேளை' என்று தொடங்கி.

ஒப்பு ? [1] ஆகாசவாயர் எனக்கு எதிரோ! வாய் - இடம். பரமாகாசம் என்கிற பரமபதமாகிற இடத்திலுள்ளார்தாம் எனக்கு ஒப்பாரோ!! உலகம் என்பது, உயர்ந்தோராகையாலே நித்திய சூரிகள் என்றபடி. (2)

588.

நிகரில் மல்லரைச் செற்ற தும்நிரை மேய்த்ததும் நீள்நெடுங்கைச்
சிகர மாகளி றட்ட தும்இவை போல்வன வும்பிறவும்
புகர்கொள் சோதிப் பிரான்தன் செய்கை நினைந்து புலம்பிஎன்றும்
நுகர வைகல் வைகப்பெற் றேன்எனக் கேன்னினி நோவதுவே?

பொ - ரை :—ஒப்பு இல்லாத மல்லர்களைக் கொன்றதும், பசுக்களை மேய்த்ததும், நீண்ட நெடிய கையையுடைய மலைபோன்ற பெரிய குவலயாபீடம் என்னும் யானையைக் கொன்றதும், இவற்றைப் போன்றவையும் பிற செயல்களுமான, பேரொளிப்பிழம்பின் மயமான திருமேனியையுடைய கண்ணபிரானது செயல்களை நினைந்து புலம்பி என்றும் அநுபவிக்கும்படியாக நாட்கள் கழியப்பெற்றேன் ; யான் இனி எதற்கு வருந்தவேண்டும் ?

வி - கு :—போல்வனவும் பிறவுமான செய்கை என்க. நினைந்து புலம்பி என்றும் நுகர வைகல் வைகப் பெற்றேன் என்க. வைகப்பெற்றேன் - கழியப்பெற்றேன்.

ஈடு :—மூன்றாம்பாட்டு. [2] கிருஷ்ணனுடைய செயல்களையே அநுபவித்துக் கொண்டு காலம் போக்கப் பெற்ற எனக்கு 'இன்னது பெற்றிலேன்' என்று நோவ வேண்டுவது இல்லை என்கிறார்.

நிகர் இல் மல்லரைச் செற்றதும் - மிடுக்குக்கு ஒப்பு இன்றிக்கே இருக்கும் மல்லரைச் செற்றதும். [3] பால் வெண்ணெய் இவற்றை உண்கையாலே மிருதுத் தன்மையராய் இருப்பார் இரண்டு பிள்ளைகள் அல்லரோ; மாமிசபக்ஷணங்களாலும் சஸ்திர அஸ்திர சிக்ஷைகளாலும் மலைகள்போலே திண்ணியவான

1. ஆகாசவாயர் - ஆகாசத்தை நோக்கி வாயைத் திறந்துகொண்டிருப்பவர்கள் என்பது ஒருபொருள் ; தரித்திரர் என்றபடி. 'ஆகாசவாயர்' என்பதற்கு, நேர் பொருளை அருளிச்செய்கிறார் 'வாய்' என்று தொடங்கி.

2. "நுகர வைகல் வைகப் பெற்றேன்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. "நிகரில்" என்கையாலே, இவர்களை வென்றது ஆச்சரியம் என்கிறார் 'பால்வெண்ணெய்' என்று தொடங்கி.

தோள்களையுடைய மல்லரைப் பொடிபடுத்தினார்கள்; [1]புழுக் குறித்தது எழுத்தானாற்போலே இங்ஙனே வாய்த்துக்கொண்டு நிற்கக்கண்டதித்தனை. [2]இல்லையாகில், இளைஞர் சிலருடைய செயல்களாக மாட்டாதே அன்றோ. [3]"ஒவ்வாத போர் என்று கூறினர்" என்கிறபடியே எல்லாரும் அஞ்சும்படி அன்றோ அற்றைச்செயல். [4]**'ஏவிற்றுச் செய்வான் ஏன்று எதிர்ந்து வந்த மல்லரை'** - தாமாகவே வந்து மேல்விழுந்தால் அன்றோ **'முடியாது'** என்று கால் வாங்கலாவது? கம்சனுக்குப் பரதந்திரர்களாய் வருகையாலே இங்குத் தோற்றார்களாகில் அவன் அங்கே தோள்களைக் கழிக்குமாயிற்று; ஆனபின்பு, 'கோழைகளாய்க் கொலையுண்பதில் புகழோடே முடிய அமையும்' என்று மேலிட்டார்கள். **'சாவத் தகர்த்த சாந்து அணி தோள் சதுரன்'**-[5] கூனி சாத்திவிட்ட சாந்து குறியழியாமலே காணும் அவர்களோடு போர்த் தொழில் செய்தது. [6]மல்லரோடே கூட எல்லா அவயவங்களும் பொருந்தி போர்த் தொழில் செய்யா நிற்கச்செய்தே, சாத்தின சாந்து குறி அழிந்தது இல்லை

---

1. இளைஞரானால் அவர்கள் பொடி படும்படி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'புழுக்குறித்தது' என்று தொடங்கி. இதனை குணாக்ஷர நியாயம் என்பர். "மானத்து வண்டல்உழ ஓர் எழுத்தின் வடிவுற்றசீர் மான" என்பது, திருவரங்கத்தந்தாதி.

2. 'வாய்த்துக் கொண்டு நிற்கக் கண்டதித்தனை' என்னவேண்டுமோ? இவர்கள் கொன்றார்கள் என்ன ஒண்ணாதோ? என்ன, 'இல்லையாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. "ந ஸமம் யுத்தம் இத்யாஹு:" என்பது, ஸ்ரீராமா. யுத். 103: 6.

4. கம்சனுடைய ஏவலால் வருகையாலும் அவர்களைக் கொல்லுதல் முடியாத காரியம் என்று கொண்டு அதற்குப் பிரமாணம் காட்டி, அப்பிரமாணப் பாசுரத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'ஏவிற்று' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 4. 2: 6. "ஏவிற்றுச் செய்வான்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'தாமாகவே வந்து' என்று தொடங்கி.

5. "சாவத் தகர்த்த" என்றதன்பின், "சாந்து அணிதோள் சதுரன்" என்கையாலே, வியாக்கியாதாவின் ஈடுபாடு: 'கூனி சாத்திவிட்ட' என்று தொடங்கும் வாக்கியம்.

6. மேல் எழுந்த வாரியாக அவர்களோடு போர் செய்தமையால் சாந்து அழியாமல் இருந்தது என்றாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மல்லரோடே கூட' என்று தொடங்கி.

காணும்.[1] கூனி சாத்திவிட்ட உடனே பெண்கள் கண்களாலே இலச்சினை இட்டு விடுகையினாலே இவனால் அழிக்கவும் போகாதே அன்றோ. இவர்கள் கண்களாலே இலச்சினை இடுகையாவது, அவன் தோள்களிலே சேலும் கயலும் இடுகை அன்றோ. [2] இவன் மல்லரோடே சேர்ந்து அழித்தானாகிலும், '**மற்று எங்கேனும் அழித்தான்**' என்றே அன்றோ அவர்கள் இருப்பார்கள். இதனை அழித்துப் போனானாகில், பின்பு பெண்கள் கோஷ்டிக்கு ஆளாகானே. ஏன்று எதிர்ந்து வருகையாவது, பொரக்கடவோம் என்று நெஞ்சிலே துணிந்து வருகை.

நிரை மேய்த்ததும்-முதற் பிறவிக்கு ஈடாகச் செய்த செயலும், இரண்டாம் பிறவிக்கு ஈடாகச் செய்த செயலும்: க்ஷத்திரியப் பிறவிக்கு ஈடாம்படி மல்லரோடே போர் செய்தான்; ஆயர் பிறவிக்கு ஈடாம்படி பசுக்களை மேய்த்தான். [3] அன்றிக்கே, பசுக்களை மேய்த்த போதை ஆயாசம் ஆகாதே, மல்லரோடு பொருதபோதும் உள்ளது என்னலுமாம். நீள் நெடும் கைச் சிகரம் மா களிறு அட்டதும்-[4] மல்லர்க்குத் தப்பிலும் தப்ப ஒண்ணாது கண்டீர் இதற்கு. தூரப்போய்த் தப்ப ஒண்ணாதபடி கையாலே வளைத்துக் கொள்ளவற்றாயிருத்தலின் '**நீள் நெடும்**

---

1. குறி அழியாமைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கூனி சாத்திவிட்ட' என்று தொடங்கி. சேலும் கயலும் இடுகையாவது, அவைபோன்ற கண்களாலே பார்த்தல்.

2. மல்யுத்தத்தில் சார்ந்து அழிந்தால் இவர்கள் செய்வது யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவன் மல்லரோடே' என்று தொடங்கி.

"வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தீஞ் சாயல் பரத்தை வியன்மார்ப!
பண்டின்னை யல்லைமன் ஈங்கெல்லி வந்தீயக்
கண்டதெவன்மற் றுரை.
ஏந்தெழில் மார்ப! எதிரல்ல நின்வாய்ச்சொல்
பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை
சாந்தழி வேரை சுவல்தாழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் றீங்குவந் தீத்தந்தாய்".

என்பன, கலித்தொகை. 93, 96.

3. "மல்லரைச் செற்றதும் நிரைமேய்த்ததும்" என்று இரண்டனையும் சேர்த்து அருளிச்செய்ததற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

4. "நீள் நெடும் கை" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'மல்லர்க்கு' என்று தொடங்கி. அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'தூரப்போய்' என்று தொடங்கி.

கை' என்கிறது. 'நெடுங்கை' என்னுநிற்கச் செய்தே 'நீள் நெடுங்கை' என்கிறதன்றே, அதன் பெருமை இருக்கிறபடி. ஒரு கை தான் வேண்டுமோ? இதுதன்னைக் காணவே அமையுமாதலின் 'சிகர மா களிறு' என்கிறது. [1] "ஆனைமாமலை" என்னக் கடவதன்றே. மலைச்சிகரம் போலேயாயிற்றுப் பெருத்து இருக்கிறபடி. அட்டதும் - முடித்ததும். இவை போல்வனவும் பிறவும் - இவை தொடக்கமான கேசியைக் கொன்ற செயல் முதலானவைகளும். புகர் கொள் சோதி - குவலயாபீடத்தைக் கொன்ற பின்னர் வடிவிற் பிறந்த ஒளிபெற்ற தேஜஸ்ஸு. பிரான்-உபகாரகன். [2]"வெயர்வைத் துளிகள் நிறைந்த கிருஷ்ணனுடைய திருமுகமண்டலத்தைத் தோழிகாள் பாருங்கள்" என்னும்படி இருக்குமன்றே. யானையோடே பொருதாலும் இங்ஙனேயோ வேர்ப்பது? மூலையாகிற மலையோடு பொருததோடு யானையாகிற மலையோடு பொருததோடு வாசி இல்லைகாணும் இவனுக்கு.

தன் செய்கை நினைந்து புலம்பி - உபகாரம் செய்தலையே இயல்பாகவுடையவனுடைய செயல்களை நினைத்து, அது உள்ளடங்காமை புலம்பி. என்றும் நுகர வைகல் வைகப்பெற்றேன் - நாடோறும் அநுபவித்துக்கொண்டு, வைகலானது வைகப் பெற்றேன்: வைகல் வைகப்பெற்றேன் - காலமானது கழியப் பெற்றேன். [3] வைகல் - கழிதல். அன்றிக்கே, அநுபவிக்கைக்குப் போரும்படி காலமானது நெடுகப்பெற்றேன் என்றுமாம். அப்போது, வைகுதலாவது - நெடுகுகை. எனக்கு என் இனி நோவதுவே - 'காலம் நெடுகுவது குறுகுவது

---

1. இது, திருவாய். 8. 4: 1.

2. யார்க்கு உபகரித்தான்? என்ன, மதுரையிற் பெண்களுக்கு உபகரித்தான் என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அவர்கள் அதிலே ஈடுபட்டு இருந்தார்கள் என்பதற்குப் பிரமாணம் அருளிச்செய்கிறார் 'வெயர்வைத் துளிகள்' என்று தொடங்கி.

" ஸக்ய: பஶ்யத கிருஷ்ணஸ்ய முகம்அத்யருணேக்ஷணம்
கஜயுத்த க்ருத ஆயாஸ ஸ்வேதாம்பு கணிகாசிதம் "

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 20 : 54. "பஶ்யத" என்கையாலே, உபகாரம் தோற்றுகிறது. 'இங்ஙனேயோ வேர்ப்பது' என்றது, தங்கள் கலவியிலே வேர்க்கக் கண்டிருக்கையாலே தங்கள் தனங்களிலே சேர்ந்தாற் போலேயோ? என்றபடி. வியாக்கியாதாவின் ஈடுபாடு, 'மூலையாகிற' என்று தொடங்கும் வாக்கியம்.

3. "வைகல் நாளும் வைகின்றே" என்பது, சிந்தாமணி.

ஆகாத இடந்தேடி அநுபவிக்கப் பெற்றிலேன்' என்கிற அதிருப்தியுண்டோ எனக்கு என்கிறார். [1] அன்றிக்கே, அவனுக்கு வரும் நோவன்றோ, இவர்க்கு நோவாவது; அது கழியப் பெற்றதன்றோ என்னுதல். [2] இவர் நோவு போக்கும் அவனுக்கு வரும் நோவன்றோ, இவர்க்கு நோவாவது: அது போகவே இவர்க்கு நோவு போயிற்றதாமன்றோ. உயிருக்கு வரும் நோவு உடம்புக்கு வரும் நோவாமன்றோ. (3)

589.

நோவ ஆய்ச்சி உரலோ டார்க்க இரங்கிற் றும் வஞ்சப்பெண்ணைச்
சாவப் பாலுண் டதும்ஊர் சகட மிறச்சா டியதும்
தேவக் கோலப் பிரான்தன் செய்கை நினைந்து மனங்குழைந்து
மேவக் காலங்கள் கூடி னேன்எனக்கு என்இனி வேண்டுவதே?

**பொ - ரை :**—யசோதைப் பிராட்டி நோவும்படி உரலோடு இழுத்துக் கட்ட அச்சத்தால் அழுததும், வஞ்சனை பொருந்திய பூதனையானவள் இறக்கும்படி பாலினை உண்டதும், ஊர்ந்து வந்த சகடாசுரன் இறக்கும்படி உதைத்ததுமான, அழகிய தேவப்பிரானுடைய செயல்களை நினைந்து மனம் குழைந்து இச்செயல்களோடே மனம் பொருந்தும்படி காலங்கள் கூடப்பெற்றேன்; இனி, எனக்கு வேண்டுவது என்?

**வி - கு :**—நோவ ஆர்க்க இரங்கிற்று என்க. பெண்ணை : வேற்றுமை மயக்கம். பெண்ணனவள் என்பது பொருள். சாடியதுமான செய்கை என்க.

**ஈடு :**—நான்காம்பாட்டு. [3] தன்னை அடைந்தவர்கட்குத் தான் பவ்யனாயிருக்கும் இருப்பிலே பிரதிகூலரை மாய்த்த கிருஷ்ணனை அநுபவிக்கப்பெற்ற எனக்கு அடையத்தக்கது ஒன்று உண்டோ என்கிறார்.

ஆய்ச்சி உரலோடு நோவ ஆர்க்க இரங்கிற்றும்-[4] **சீயர்**, இத்திருப்பாசுரத்தை இயல் அருளிச்செய்யப் புக்கால் "**நோவ**"

1. "நிகரில் மல்லரைச் செற்றதும்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

2. அவனுடைய நோவு இவரதாகுமோ? என்ன அதற்கு இரண்டு வகையாக விடை அருளிச்செய்கிறார் 'இவர் நோவு' என்று தொடங்கியும், 'உயிருக்கு வரும்' என்று தொடங்கியும்.

3. "நோவ" என்பது போன்றவைகளையும், "வஞ்சப் பெண்ணை" என்பது போன்றவைகளையும், "எனக்கு என் இனி வேண்டுவது" என்றதனையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. பிராசங்கிகமாக, 'சீயர்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'நோவ என்று அருளிச்செய்யும் அழகு காணும்' என்றது, சீயர், "நோவ"

என்று அருளிச்செய்யும் அழகு காணும். '**நோவ**' என்கிறார் காணும் ஆழ்வார், தம் திருமேனியிலே கயிறு உறுத்தினாற் போலே. [1] ஒரு துவேஷம் உண்டாய்க் கட்டுகிறாள் அல்லளே, சிநேக காரியமான கோபமாகையாலே சிநேகமுள்ள அளவும் இடைநிற்கும் அன்றோ கோபமும். தாய் எடுத்த சிறுகோலுக்கு உளைந்து ஓடியன்றோ, விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மி அழு தான்; வாய்விட்டு அழமாட்டாதது அன்றோ இவரை வருத்து கிறது. [2]"தறியார்ந்த கருங்களிறே போல நின்று தடங்கண்கள் பனிமல்கும் தன்மையானை" என்கிறபடியே, ஒரு மத்தயானையைத் தறியோடே சேர்த்தாற்போலே காணும் இவன் கட்டுண்டு நின்ற நிலை! ஓர் அபலை கட்டின கட்டு அவிழ்த்துக்கொண்டு போகமாட்டாதே, நின்று அழுகையே இயல்பாய் இருந்தபடி. [3]"வல்லையாகில் போய்க் காணாய்" என்றாள் அன்றோ. உரலோடு ஆர்க்க இரங்கிற்றும் - உரலோடே கட்ட இரங்கிற்றும். [4] துரி யோதனாதியர்களுடைய கட்டாகில் அன்றோ அறுக்க விரகு சிந்

---

என்று ஈடுபட்டு அநுசந்திக்கும்போது கேட்க நன்றாக இருக்கும்என்று நம் பிள்ளை அருளிச்செய்வர் என்றபடி. சீயர் ஈடுபட்டதற்கு, பாவம் அருளிச்செய் கிறார் '"நோவ" என்கிறார் காணும்' என்று தொடங்கி.

1. பிரியமுடைய தாய் நோவக் கட்டுவான் என்? என்ன, அதற்கு **விடை** அருளிச்செய்கிறார் 'ஒரு துவேஷம்' என்று தொடங்கி. இடை நிற்கும் - ஒத்திருக்கும். என்றது, எவ்வளவு சிநேகம் உண்டு, கோபமும் அதற்கு ஒத் திருக்கும் என்றபடி. இதனால், கோபத்தின் மிகுதியினாலே நோவக் கட்டினாள் என்னுதல்; தாய் மெதுவாகக் கட்டினாலும் பொறுக்க ஒண்ணாமையாலே நோவாயிருக்கும் என்னுதல்.

2. பிரிய முள்ள தாய் பரிபவித்ததற்குப் பொறுக்கமாட்டாமல் வேறுபட்ட வனாய் இருந்த தன்மைக்குத் திருமொழியிலிருந்து பிரமாணங்கள்மூன்றுகாட்டு கிறார் "தாய் எடுத்த", "விளியா ஆர்க்க", "தறியார்ந்த" என்று என்று தொடங்கி. "தாய் எடுத்த" என்பது, பெரிய திரு. 8. 3 : 5. "விளியா ஆர்க்க" என்றது, பெரிய திரு. 6. 7 : 4. "தறியார்ந்த" என்பது, பெரிய திரு. 2. 10 . 6. வாய்விட்டு அழாமல் விம்மி அழுதற்குப் பிரமாணம், "தறியார்ந்த" என்பது.

3. அவிழ்த்துக்கொண்டு போகமாட்டாமல் இருந்ததற்குப் பிரமாணம், 'வல்லையாகில்' என்று தொடங்குவது.

"யதி ஶக்நோஷி கச்ச த்வம் அதி சஞ்சல சேஷ்டித"

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 6 : 15.

4. இரங்குவான் என்? அவிழ்த்துக்கொண்டு போக ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'துரியோதனாதியர்களுடைய' என்று தொடங்கி.

திப்பது. இரங்கிற்றும் - மானசபீடையை அநுசந்தித்தபடி. இரக்கம் - ஈடுபாடு.

வஞ்சப் பெண்ணைச் சாவப் பால் உண்டதும்-[1]கெட்டேன்! பேய்த்தாய்பக்கலிலும் அங்ஙன் இருந்தானாகில் என்படக் கடவதுதான் ? [2] சூர்ப்பணகியைப்போலே அங்கத்தைக் குறைத்துப் பூசலை விளைப்பியாதே முடித்துவிட்டானாதலின் '**சாவ**' என்கிறார். [3] யசோதைப்பிராட்டியின் முலை உண்ணும் போதும் தான் உயிர்பெற உண்ணுமாறுபோலே காணும் இவள் முலை உண்கிறபோதும் தான் உயிர்பெற முலையுண்ட படி; ஆதலின், '**உண்டதும்**' என்கிறார். பெருமுலையூடு உயிரை வற்ற வாங்கி உண்ட வாயான் அன்றோ; [4] இவன் பிள்ளை யாயே முலை உண்டானத்தனை ; பொருளின் இயல்பாலே பிரதி கூலர் முடிந்ததித்தனையன்றோ. ஊர் சகடம் இறச் சாடியதும்- [5] தாண்டுகின்றவர்கள் வேண்டாதபடி தானே வந்து நலிந்த படி. ஒரு மனிதவடிவு கொண்டு வந்து நலியிலன்றோ தடுக்கலா வது. இத்தால்சொல்லிற்றாயிற்று, வேறு துணை வேண்டாமலே பாதகமாகும் தன்மையில் உறைப்புச் சொன்னபடி. இறச் சாடியதும்-[6]"தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர் உடல் வேறாப்

---

1. "வஞ்சப்பெண்ணை" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச் செய்கிறார் 'கெட்டேன்' என்று தொடங்கி. 'அங்ஙன் இருந்தானாகில்' என்றது, தாய் பக்கல் போலே இருந்தானாகில் என்றபடி.

2. "சாவ" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'சூர்ப்பணகியை' என்று தொடங்கி.

3. "உண்டதும்" என்பதற்கு ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'யசோதைப் பிராட்டி' என்று தொடங்கி. உயிர் பெற உண்டதற்குப் பிரமா ணம் காட்டுகிறார் 'பெருமுலையூடு' என்று தொடங்கி. இது, பெரிய திரு. 1. 3: 1.

4. இவன் குழந்தையாய் முலை உண்டால் அவள் முடியக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவன் பிள்ளையாயே' என்று தொடங்கி.

"புகர்கொள் வானவர்கள் புகலிடம் தன்னை
அசுரர் வன்கையர் வெங்கூற்றை"

என்பது, ஈண்டு அநுசந்தேயம். (திருவாய். 8. 4. 8.)

5. "ஊர்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'தாண்டுகின்ற வர்கள்' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்று தொடங்கி.

6. முறியச் சாடினதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தளர்ந்தும்' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 9: 4.

பிளந்து" என்று சொல்லக்கடவதன்றே. [1] வருத்தமில்லாமல் திருவடிகளை நிமிர்க்கச் செய்தேயும், ஒரு இளைஞனுடைய செயலாகையாலே போரப் பொலியச் சொல்லுகிறார். "பேர்ந்தோர் சாடிறச், செய்ய பாதம் ஒன்றால் செய்த நின் சிறுச் சேவகமும்" என்னக்கடவதன்றே. தேவக் கோலப் பிரான்-[2] மனிதர்களை ஒத்து நின்று செய்யவும் பெற்றதில்லையே. அதிபால்யத்திலே செய்த செயலாகையாலே அப்ராகிருதமாய் இருப்பதோர் ஒப்பனைபோலே இருக்கிறபடி. தன் செய்கை நினைந்து மனம் குழைந்து மேவக் காலங்கள் கூடினேன்-அவனுடைய செயல்களை நினைத்து அகவாய் [3] உடை குலைப்பட்டு வேறு பிரயோஜனம் இல்லாதவனாய்க்கொண்டு காலம் போக்கப்பெற்றேன். நெஞ்சு நெகிழ்ந்து செயல்களோடே பொருந்தும்படி காலங்களைக் கூடப் பெற்றேன். எனக்கு என் இனி வேண்டுவது - இனி அடையத்தக்கது ஒன்று இல்லை என்கிறார். (4)

## 590.

**வேண்டித் தேவர் இரக்க வந்து பிறந்ததும்** வீங்கிருள்வாய்ப்
பூண்டுஅன் றன்னை புலம்பப் போய்அங்கோர் ஆய்க்குலம் புக்கதும்
காண்ட லின்றி வளர்ந்து கஞ்சனைத் துஞ்ச வஞ்சம்செய்ததும்
ஈண்டுநான் அலற்றப் பெற்றேன் எனக்கு என்ன இகல்உளதே?

**பொ - ரை:**—தேவர்கள் வேண்டி இரக்க வந்து பிறந்ததும், அற்றைய நாளில் செறிந்த இருட்டிலே தாயாகிய தேவகிப்பிராட்டியானவள் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு புலம்ப, அந்நிலையிலே சென்று ஒப்பற்றதான ஆயர்பாடியிலே புக்கதும், கம்சனுடைய ஆட்கள் காணாதபடி வளர்ந்து கம்சன் இறக்கும்படியாக வஞ்சனை செய்ததுமான செயல்களை இப்போது இருந்து சொல்லப்பெற்றேன்; எனக்கு என்ன விரோதம் உளது?

---

1. "சாடியதும்" என்று இதனை மிகுத்துச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வருத்தமில்லாமல்' என்று தொடங்கி. போரப் பொலியச் சொன்னதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பேர்ந்தோர்சாடிற' என்று. இது, திருவாய். 5. 10: 3.

2. "தேவக்கோலம்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'மனிதர்களை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அதிபால்யத்திலே' என்று தொடங்கி.

3. உடைகுலைப்பட்டு - கரையுடைபட்டு; நெஞ்சு நெகிழ்ந்து என்றபடி. குலை - கரை.

வி - கு:—கஞ்சனை-கம்சனுனவன். மயக்கமாக்கொள்ளாது,நேரே பொருள் கோடலுமாம். துஞ்சுதல் - இறத்தல்.

ஈடு :—ஐந்தாம்பாட்டு. [1] அவதரித்து, கம்சன் அறியாதபடி வளர்ந்து கம்சனை மாய்த்தபடியை இன்று இருந்து அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஓர் எதிர் இல்லை என்கிருர்.

தேவர் இரக்க வேண்டி வந்து பிறந்ததும்-[2]"எங்கள் அளவு அறியாதே ஒருவனுக்கு வரம் கொடுத்து அவனை உயரப் பார்த்தோம்: எங்களுக்குக் குடி இருப்பு அரிதாயிற்று' என்று தேவசாதி கப்படம் கட்டிக்கொண்டு செல்ல "தந்தையாக அடையவேண்டும் என்று விரும்பினர்" என்கிறபடியே, தான் விருப்பமுள்ளவனுய், வந்து பிறந்ததுவும். அன்றிக்கே, [3]"என்னுடைய மாயையாலே" என்னும்படி அன்றே என்னுதல்; என்றது, என்னுடைய இச்சையாலே என்றபடி. [4]'மாயா வயுனம் ஞானம்' என்பது நிகண்டு. [5]இரக்கிறவர்கள் அளவு பார்த்தல், தன்னளவு பார்த்தல் செய்கையன்றிக்கே வந்துபிறந்தபடி காணும் இவரை வருத்துகிறது. [6] தான் இரப்பாளனுய்க் காரியம் செய்யுமவன், பிறர் இரந்தால் பொறுக்கமாட்டானே

---

1. "காண்டல் இன்றி வளர்ந்து" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. தேவர்கள் இரக்கும் பிரகாரத்தைக் காட்டுகிருர் 'எங்கள் அளவு' என்று தொடங்கி. கப்படம் - வறுமையைக் காட்டுகின்ற உடை. கப்பறையுமாம்.

"ததஃ பத்மபலாசாக்ஷஃ க்ருத்வா ஆத்மாநம் சதுர்விதம்
பிதரம் ரோசயா மாஸ ததா தசரதம் ந்ருபம்"

என்பது, ஸ்ரீராமா. பால. 15 : 30½. வேண்டிவந்து - விரும்பிவந்து.

3. வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிருர் 'என்னுடைய' என்று தொடங்கி.

"ப்ரகிருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்ம மாயயா"
என்பது, ஸ்ரீ கீதை. 4 : 6.

4. 'மாயை' என்ற சொல், இச்சை என்ற பொருளில் வருவதற்கு மேற்கோள் காட்டுகிருர் 'மாயா வயுநம் ஞானம்' என்று. 'மாயை' என்னும் சொல் ஞானத்தைக் காட்டி, அதனுடைய நிலைவேறுபாடான இச்சையை உணர்த்தும் என்றபடி.

5. "வந்து பிறந்ததும்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிருர் 'இரக்கிறவர்கள்' என்று தொடங்கி. இரக்கிறவர்கள் அளவு - ஈஶ்வரோகம்' என்றிருத்தல் முதலான குற்றங்கள். தன்னளவு - தன் பெருமை.

6. இருவர் அளவும் பாராமல் வந்து பிறக்கைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'தான் இரப்பாளனுய்' என்று தொடங்கி.

யன்றே. பிறந்ததும் வீங்கு இருள்வாய் - [1]"எல்லா உலகங்கட்கும் ஆதாரனை ஸ்ரீ கிருஷ்ணன் நடு இரவில் அவதரித்தார்" என்னும்படி அன்றே. [2]'இவனும் விழுக்காடு அறியாதே அகப்பட்டுக்கொடு நின்றான், கம்ச பயமும் ஏற்பட்டதாயிரா நின்றது, இருளாலே அன்றே நாம் பிழைத்தது! இனி, இந்த இருளைச் சரணம்புகு மித்தனை அன்றோ' என்று **பிள்ளை யுறங்காவில்லிதாசர்** பணிப்பாராம். [3]"ஊர் எல்லாம் துஞ்சி" என்ற திருவாய்மொழியில், கூற்றமான இருள், இப்போது இவர்க்கு ஆதரத்துக்கு விஷயமாயிற்று அன்றே. [4]வீங்கு இருள்வாய்ப் பூண்டு அன்று அன்னை புலப்பப் போய் என்று கூட்டுக. [5]"மக்கள் அறுவரைக் கல்லிடை மோத இழந்தவள்" என்கிறபடியே, பெற்றுப் பெற்று இழந்தவள் ஆகையாலே, இவனையும் இழக்கிறேனோ!" என்று விரகபயத்தாலே, காலைப் பூண்டு கிடந்து கூப்பிடப் போய். [6]பிள்ளை பக்கல் அன்பினாலே இவள் கூப்பிட, இவன் முலைச்சுவடு அறியாமை யாலே போனபடி. வீங்கு இருள் - வளர்கிற இருள்.

---

1. வளருகிற இருளிலே பிறந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எல்லா உலகங்கட்கும்' என்று தொடங்கி.

"மத்யராத்ரே அகிலாதாரே ஜாயமாநே ஜநார்தநே
மந்தம் ஜகர்ஜு꞉ ஜலதா꞉ புஷ்பவ்ருஷ்டி முசோ த்விஜ"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 3: 7.

2. "வீங்கு இருள்" என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இவனும்' என்று தொடங்கி. விழுக்காடு - மேல் வரும் காரியம். 'சரணம்புகுமித்தனை' என்றது, இருளை உத்தேசியமுள்ளதாகப் புத்திபண்ணி வணங்குமித்தனை என்றபடி.

3. "ஊரெல்லாம்" என்ற திருவாய்மொழியிலே வருகின்ற "வீங்கிருளின் நுண்துளியாய்" என்று இருளுக்கு அஞ்சினபடியையும், இப்போது கொண்டாடுகிறபடியையும் நினைத்து வியாக்யாதா ஈடுபடுகிறார் 'ஊரெல்லாம்' என்று தொடங்கி.

4. "வீங்கிருள்வாய்ப் பிறந்ததும்" என்றும், "வீங்கிருள்வாய்ப் புலம்பப் போய்ப் புக்கதும்" என்றும், "வீங்கிருள்வாய்" என்றதனை இடைநிலைத் தீவகமாக முன்னும் பின்னும் கூட்டுக.

5. காலைப் பூண்டு கொண்டு புலம்புகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மக்கள்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 5. 3: 1. காலைப் பூண்டு - கிருஷ்ணனுடைய திருவடிகளைப் பிடித்து.

6. இவன் கூப்பிடுவதற்கும், அவன் போனதற்கும் காரணத்தை அருளிச்செய்கிறார் 'பிள்ளை பக்கல்' என்று தொடங்கி. சுவடு - இனிமை.

அங்கு ஓர் ஆய்க்குலம் புக்கதும் - [1]'அந்த நிலையிலே இடையிலே வளருகைக்கு ஓர் அஞ்சினன் புகலிடம் உண்டாவதே! ஆய்க்குலம் - '**கம்சன் பாதகன்**' என்று பயப்பட அறியாதவர்கள். [2]'குடிவாய் உடன்பட இருந்தானாகில் இருக்கிறான், இல்லையாகில் உழக்கோலாலே தகர்க்கிறோம்' என்று இருப்பர்கள். காண்டல் இன்றி வளர்ந்து - கம்சனும் அவன் வரக்காட்டின தீயோர் கூட்டமும் காணாதபடி வளரப்பெறுவதே! கஞ்சனைத் துஞ்ச வஞ்சம் செய்ததும் - ஸ்ரீ நாரதபகவான் அறிவித்தபின்பு ஒருபோது தாழாதே வந்து, அவன்தான் நினைத்த வஞ்சனையை அவன் தன்னோடே போக்கினதும். கம்சன் முடியும்படியாக வஞ்சனை செய்தது, [3]இராமாவதாரம் போலே '**செவ்வைப்பூசல் அல்லது அறியேன்**' என்று இராமை அன்றோ. ஈண்டு நான் அலற்றப் பெற்றேன் - தேவகியாரைப் போலே சமகாலத்தே இருந்து பயப்படாதே, இப்போது பயம் கெட்டு இருந்து அநுபவிக்கப்பெற்றேன். ஈண்டு - இப்போது. எனக்கு என்ன இகல் உளதே - கம்சன் பட்டபின்பு எனக்குப் பகைவர்கள் உண்டோ? இகல் - பகை. அன்றிக்கே, கம்சனை முடித்தபடியை இன்று இருந்து அநுபவிக்கப்பெற்ற எனக்கு இனி ஒரு மிடி இல்லை என்கிறாராகவுமாம். (5)

---

1. "ஓர்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அந்த நிலையிலே' என்று தொடங்கி. அஞ்சினன் புகலிடம் - அஞ்சினவன் புகும் இடம்.

2. அச்சத்தை அறியாமையின் எல்லையைக் காட்டுகிறார் 'குடிவாய்' என்று தொடங்கி. 'குடிவாய் உடன்பட இருந்தானாகில்' என்றது, குடிமக்களோடே ஒத்திருந்தானாகில் என்றபடி. குடிவாய் - குடிமக்கள். உழக்கோல் - தாற்றுக்கோல்.

3. "அயர்த்திலன் முடிவு மஃதே யாயினும் அறிஞ ராய்ந்த
நயத்துறை நூலின் நீதி நாம் துறந் தமைதல் நன்றோ"
"நின்றவன் னிலை நோக்கிய நெடுந்தகை இவனைக்
கொன்றல் உன்னிலன் வெறுங்கை நின் றானெனக் கொள்ளா"
என்பன, கம்பராமாயணம். (அங்கதன் தூது. 8. முதற்போர். 251.)

"ஊராண்மை, உபகாரியாந்தன்மை: அஃதாவது, இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும் படத் தமியனாய்அகப்பட்டானது நிலைமை நோக்கி அயோத்தியர்இறை மேற் செல்லாது 'இன்றுபோய் நாளை நின் தானையோடு வா' என விட்டாற் போல்வது" என்பது, பரிமேலழகருரை. திருக்குறள், 773.

591.

இகல்கொள் புள்ளைப் பிளந்ததும்இமி லேறுகள் செற்றதுவும்
உயர்கொள் சோலைக் குருந்தொசித்ததும் உட்பட மற்றும்பல
அகல்கொள் வைய மளந்த மாயன்என் னப்பன்தன் மாயங்களே
பகலிராப் பரவப் பெற்றேன் எனக்கென்ன மனப்பரிப்பே.

**பொ - ரை :**—பகைமைகொண்ட பகாசுரன் என்னும் பறவையின் வாயினைப் பிளந்ததும், திமில்களையுடைய இடபங்கள் ஏழனையும் அழித்ததும், உயர்ந்து ஓங்கித் தழைத்த குருந்த மரத்தினை முறித்ததும் முதலாக வேறும் இத்தன்மையவான, அகன்ற பூலோகத்தை அளந்த மாயப்பிரானுகிய என்னப்பனுடைய ஆச்சரியமான செயல்களையே பகலும் இரவும் துதிக்கப்பெற்றேன் ; எனக்கு மனத்தின்கண் துக்கம் என்ன இருக்கிறது ?

**வி - கு :**—இகல் - வலிமையுமாம். மற்றும் பலவாகிய மாயங்கள் என்க. பரிவு-பரிப்பு - துக்கம்.

**ஈடு:**—ஆறும்பாட்டு. [1]கிருஷ்ணனுடைய பிரதிகூலர்களின் நிரசன பரம்பரையை அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஒரு மனோதுக்கம் இல்லை என்கிறார்.

இகல்கொள் புள்ளைப் பிளந்ததும்-[2]கேவலம் புள் மாத்திரமாய் வந்து தோற்றுகை அன்றிக்கே போரினை மேற்கொண்டு எதிரிட்ட புள்ளினை அழித்ததும். 'அசுராவேசத்தோடு வரச்செய்தேயும் 'பாதிக்க வருகிறது' என்று பிறர் அஞ்சாத வடிவு கொண்டு வந்தபடி. பள்ளத்திலே மேயும் பறவை உருக்கொண்டு வந்தது. இமில் ஏறுகள் செற்றதுவும்-திமிலையுடைத்தான இடபங்களைச் செற்றதுவும். உயர் கொள் சோலைக் குருந்து ஒசித்ததும் - ஒக்கத்தையுடைத்தாய்ச் சோலைசெய்து நின்ற குருந்தமரத்தை முறித்ததும். [3] 'இளைஞரா யிருப்பார்க்குக் கவர்ச்சிகரமாயிருக்கும்' என்று தழைத்து நின்றது; இனி,

1. முதல் இரண்டு அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "இகல்கொள்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கேவலம்' என்று தொடங்கி. "புள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அசுராவேசத்தோடு' என்று தொடங்கி. அஞ்சாத வடிவுகொண்டு வந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பள்ளத்தில்' என்று தொடங்கி. இது பெரியாழ்வார் திருமொழி. 2. 5 : 4.

3. சோலைசெய்து நிற்கைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இளைஞராயிருப்பார்க்கு' என்று தொடங்கி.

இதனை முறித்துக் காரியம் கொள்ளுவோம் என்று பொடிபடுத்தினன். உட்பட மற்றும் பல - இப் புடையிலே பகைவர்களை அழித்தல் பலவே அன்றோ. அகல் கொள் வையம் அளந்த மாயன் என் அப்பன் தன் மாயங்களே-பரப்பையுடைத்தான பூமியடங்கலும் வருத்தம் இன்றி வளர்ந்து அளந்த ஆச்சரியத்தையுடையனை உபகாரகனுடைய ஆச்சரியமான செயல்களையே. பகல் இராப் பரவப் பெற்றேன்-[1]நாட்டார் அபிமத விஷயங்களை அநுபவிப்பதற்குப் 'பகல் இரா' என்று கூறிட்ட காலம் இரண்டும் இந்த விஷயத்திலே அநுபவிக்கப்பெற்ற எனக்கு, இரவு பகல் புறம்பே விஷயங்களை அநுபவிப்பாருடைய மனோ துக்கம் உண்டோ? பரிவு-துக்கம். அதிலே ஒரு ஒற்றெழுத்து ஏறினும் அந்தப்பொருளையே காட்டக்கடவது. (6)

## 592.

**மனப்ப ரிப்போடு அழுக்கு மானிட சாதியில் தான்பிறந்து**
**தனக்கு வேண்டுருக் கொண்டு தான்தன சீற்றத் தினைமுடிக்கும்**
**புனத்து ழாய்முடி மாலை மார்பன்என் னப்பன் தன் மாயங்களே**
**நினைக்கும் நெஞ்சுடை யேன் எனக் கினியார் நிகர் நீணிலத்தே.**

**பொ - ரை :**—மனத்தில் துக்கத்தோடே தாழ்ந்த மனித வர்க்கத்தில் தனக்கு வேண்டிய உருவினைக்கொண்டு தான் அவதரித்து, தான் தனது சீற்றத்தினை முடிக்கும், புனத்துழாயினை முடியிலே தரித்த மாலை பொருந்திய மார்பினையுடையவனை என் அப்பனுடைய ஆச்சரியமான செயல்களையே நினைக்கின்ற மனத்தினையுடையேன்; இனி நீண்ட பெரிய உலகத்தில் எனக்கு ஒப்பாவார் யாவர்?

**வி - கு :**—அழுக்கு மானிடச் சாதியில் தனக்கு வேண்டுருக் கொண்டு தான் மனப்பரிப்போடு பிறந்து என்க. புனம் துழாய்மாலை முடி மார்பன் எனக்கூட்டலுமாம். சீற்றத்தினை முடிக்கும் என்னப்பன் என்க.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [2]தன்னை அடைந்த அடியார்களைப் பிரதிகூலர் நலியுமதனைப் பொறுக்கமாட்டாமல் அவதரித்து அவர்களை அழியச்செய்யும் செயல்களை நினைக்கும் நெஞ்சுடைய எனக்கு பூமியில் நிகர் இல்லை என்கிறார்.

---

1. "பகல் இரா" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நாட்டார்' என்று தொடங்கி. அபிமதவிஷயங்கள் - பெண்கள். 'கூறிட்ட காலம்' என்றது, அபிமதவிஷயங்களுக்குக் கொடுக்கைக்கு உறுப்பாகப் பொருளை ஈட்டுதற்குப் பகலும், அவற்றை அநுபவிக்கைக்கு இரவுமாகப் பிரிக்கப்பட்ட காலம் என்றபடி.

2. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

மனப் பரிப்போடு அழுக்கு மானிட சாதியில் தான் பிறந்து-
[1] நாட்டாரை அழுக்கு உடம்பு கழிக்குமவன்தான் கண்டீர் அழுக்கு மானிடச் சாதியில் வந்து பிறந்தான். [2] குழந்தை கிணற்றிலே விழுந்தால் எடுக்க வரும் தாய் நெஞ்சு நொந்து வந்து எடுக்குமாறு போலே, [3]'இவற்றிற்கு உதவப் பெற்றிலோம்' என்னும் திருவுள்ளத்தில் தளர்த்தியோடே வந்து பிறந்தவனாதலின் '**மனப் பரிப்போடு பிறந்து**' என்கிறது. குற்றங்களுக்கெல்லாம் எதிர்த்தட்டான தான் பிரகிருதி சம்பந்தம் இல்லாத திவ்ய திருமேனியோடே கர்ப்பத்தில் வாசம்செய்து அவதரித்தானாதலின் '**தான்பிறந்து**' என்கிறது. அன்றிக்கே, [4]பிறப்பதற்குக் கர்மம்செய்து வைத்தவரும்கூட அருவருக்கும் பிறவியிலே கண்டீர் கர்மத்துக்கு வசப்படாத தான் பிறந்தது என்பார் '**தான் பிறந்து**' என்கிறார் என்னுதல். இதற்கு அடி பரம கிருபை அன்றோ. தனக்கு வேண்டு உருக் கொண்டு-
[5] பிரகிருதி சம்பந்தமில்லாத திவ்ய திருமேனியையுடையனாய்க் கொண்டு. அன்றிக்கே, அப்படிப் பிறந்தால் ஒருபடிப் பட்டி

---

1. "தான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நாட்டாரை' என்று தொடங்கி. 'நாட்டாரை' என்றது, 'இழிவான இந்த உடம்பைக் கழிக்கவேண்டும்' என்று இறைவனிடத்தில் வேண்டிக் கொள்ளுகிற முமுக்ஷுக்களை.

2. "மனப்பரிப்போடு" என்றதற்கு, திருஷ்டாந்தத்தோடு பாவம் அருளிச்செய்கிறார் 'குழந்தை' என்று தொடங்கி.

> கூவத்தில் வீழும் குழவி யுடன்குதித்தவ்
> வாபத்தை நீக்குமந்த அன்னைபோல்—பாபத்தால்
> யான்பிறப்ப னேனுமினி எந்தை எதிராசன்
> தான்பிறக்கும் என்னையுய்ப்ப தா.

என்பது, ஆர்த்திப் பிரபந்தம். 9.

3. 'இவற்றிற்கு' என்றது, தனக்கே அடிமையாக இருந்துகொண்டு நோவுபடுகிற இவற்றுக்கு என்றபடி.

4. "தான்" என்றதற்கு, கர்மத்திற்குக் கட்டுப்படாதவனான தான் என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'பிறப்பதற்கு' என்று தொடங்கி.

5. "தனக்கு வேண்டுருக் கொண்டு" என்பதற்கு, இரண்டு விதமாகப் பொருள் அருளிச்செய்கிறார். 'பிரகிருதி சம்பந்தமில்லாத திருமேனியையுடையனாய்க் கொண்டு' என்பது முதற்பொருள். இப்பொருள் தன்னையே 'பிரகிருதி' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'இரண்டு தோள்களையுடையனாதல், நான்கு தோள்களையுடையனாதல்' வேண்டினபடியாய்க் கொண்டு என்பது மற்றொரு பொருள். இதனையே அருளிச்செய்கிறார் 'அப்படிப் பிறந்தால்' என்று தொடங்கி.

ருக்கப் பெற்றேமோ!என்னுதல். [1]"இரண்டு தோள்களுடைய வனு? நான்குதோள்களுடையவனு?"என்னும்படியன்றோ பட்ட படி. [2]ஈசுவரத் தன்மையைக் கைகழிய விட்ட பின்பு அன்றோ இவனுக்கு இங்கு இடம் கொடுத்தது. இவைதாம் அடியார்க ளுக்காக ஆகையாலே தனக்கே விரும்பத் தக்கனவாயிருக் கும். அன்றிக்கே, இச்சையால் எடுத்தவை என்றுமாம்.

தான் தன சீற்றத்தினை முடிக்கும் - [3] அடியார்களுடைய விரோதியைப் போக்கினுய் இருக்கையன்றிக்கே, தன்சினம் தீர்ந்தானுய் இருக்கை; தாயானவள், குழந்தையை நலிந்தவர் களைத் தான்நலிந்து தன்சினம் தீருமாறுபோலே. [4]"இராவண ஞல் உண்டாக்கப்பட்ட புண்களோடு கூடின வானர சிரேஷ்ட னை அநுமாரைப் பார்த்து, பிறகு மஹாபராக்கிரமமுடைய ஸ்ரீ ராமர் கோபத்தின் வசப்பட்டவரானுர்" என்பது, ஸ்ரீ ராமா யணம். புனம் துழாய் முடி மாலை மார்பன் என் அப்பன்-அடி யார்களுடைய விரோதிகளைப் போக்கித் திருமஞ்சனம்செய்து ஒப்பித்து, திருமேனியின் பரிசத்தாலே தன்நிலத்தில் நின்ருற் போலே செவ்விபெற்று இருக்கின்ற திருத்துழாய் மாலையினைத் திருமுடியிலும் திருமார்பிலுமுடையவனுய், அந்த ஒப்பனை யாலே என்னை எழுதிக்கொண்டவன். தன்மாயங்களே நினைக்

---

1. ஒருபடிப்பட்டிருக்க இல்லையோ ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் 'இரண்டு தோள்கள்' என்று தொடங்கி.

"த்விபுஜோ வா சதுர்புஜோவா" என்பது.

2. நாற்ருேளன் இருதோளன் ஆகைக்குக் காரணம் என் ? என்ன, 'சம்சாரத்தினுடைய கொடுமை' என்று அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'ஈசுவரத்தன்மை' என்று தொடங்கி. 'கை கழியவிட்ட' என்பதற்கு, கைகளைக் கழியவிட்ட என்றும், கை கழியும்படி விட்ட என்றும் பொருள். இதற்கு நோக்கு, "உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூப மேதத் சதுர்புஜம்-எல்லாருக் கும் அந்தராத்மாவாக இருப்பவனே! நான்குதோள்களோடு கூடின இந்த உரு வத்தை மறைத்துக் கொள்" என்பது. இது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 3: 13.

3. "தன் சீற்றத்தினை" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிருர் 'அடியார்களுடைய' என்று தொடங்கி. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டு கிருர் 'தாயானவள்' என்று தொடங்கி.

4. அடியார்களுடைய விரோதிகளைத் தன் விரோதிகளாக நினைத்துச் சினம் கொண்டதற்கு மேற்கோள் காட்டுகிருர் 'இராவணனல்' என்று தொடங்கி.

"ததோ ராமோ மஹாதேஜ ராவணேன க்ருத வ்ரணம்
த்ருஷ்ட்வா ப்லவகசார்தூலம் கோபஸ்ய வஸமேயிவாந்"

என்பது, ஸ்ரீராமா. யுத். 50 : 136.

கும் நெஞ்சுடையேன்-[1]"மனம் பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமாக நிற்கிறது" என்று பொதுவாகையன்றிக்கே, அவனுடைய ஆச்சரியமானசெயல்களையே அநுசந்திக்கும்நெஞ்சையுடையேன். எனக்கு நீள் நிலத்தில் யார் நிகர்-பூமி பரப்பையுடைத்து என்னு, எனக்கு ஒப்பாவார் உளரோ? [2] பரமபதத்தை ஒன்றாக நினைக்கின்றிலர்; தம்மைப்போலே கவிபாடி அடிமைசெய்வார் இல்லாமையாலே, சம்சாரத்தே இருந்து கவி பாடி அடிமை செய்யப்பெற்ற எனக்கு, பூமியில் ஓர் எதிர் உண்டோ? என்கிறார். (7)

## 593.

நீணிலத்தொடு வான்வி யப்ப நிறைபெரும் போர்கள்செய்து
வாண னாயிரம் தோள்து ணித்ததும் உட்பட மற்றும்பல
மாணி யாய்நிலம் கொண்ட மாயன்என் னப்பன்தன் மாயங்களே
கா ணும் நெஞ்சுடை யேன்எனக் கினி என்ன கலக்க முண்டே?

**பொ - ரை:**—பெரிய உலகத்திலேயுள்ள மக்களோடு தெய்வ லோகத்திலேயுள்ள தேவர்களும் கண்டு ஆச்சரியப்படும்படியாக, குறைவில்லாத பெரிய போரைச் செய்து வாணாசுரனுடைய ஆயிரம் தோள்களைத் துணித்ததும் முதலான மற்றும் பலவான, பிரமசாரியாய் நிலத்தை வாங்கின மாயனாகிய என்னப்பனுடைய ஆச்சரியம் பொருந்திய செயல்களையே காண்கின்ற நெஞ்சினையுடையேன்; ஆதலால், எனக்கு இனி என்ன கலக்கம் இருக்கின்றது?

**வி-கு:**—வியப்பப் போர்கள் செய்து துணித்ததும் என்க. மற்றும் பலவான மாயங்கள் என்க. மாணி - பிரமசாரி.

**ஈடு:**—எட்டாம்பாட்டு. [3]வாணனை வெற்றிகொண்டது முதலான கிருஷ்ணன் செயல்களையே அநுசந்திக்கும் நெஞ்சினையுடைய எனக்கு ஒரு கலக்கம் இல்லை என்கிறார்.

---

1. "மாயங்களே" என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'மனம்' என்று தொடங்கி. "மநஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:" என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 6. 7: 28.

2. மேல் "எனக்கு எவ்வுலகம் நிகர்" என்றாரே? இங்கே, "நிகர் நீள் நிலத்தே" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரமபதத்தை' என்று தொடங்கி.

3. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

நீள்நிலத்தொடு வான்வியப்ப-பூமியிலுள்ளாரோடு சுவர்க்கத்திலுள்ளாரோடு வாசிஅற ஆச்சரியப்பட. கண்டவற்றுக்கெல்லாம் ஆச்சரியப்படும் மனிதர்களோடு ஒக்க, ஒன்றற்கும் வேறுபட்டவராகாதே தந்தாமைப் போரப் பொலிய நினைத்திருக்கும் தேவர்களும் ஆச்சரியப்படும்படி. கும்பிடுவாரோடு கும்பீடு கொள்வாரோடு வாசி அறும்படியாக என்றபடி. 'வியப்ப' என்று மேலே வருகையினாலே, **'கட்டில்கள் கூப்பிடுகின்றன'** என்பது போன்று, **'நிலம், வான்'** என்பன ஆகு பெயர்கள். நிறை பெரும் போர்கள் செய்து-குறைவற்ற மஹா யுத்தத்தைச் செய்து. அதாவது, ஈசுவர அபிமானிகளான சிவன் முதலாயினோர்களும் கெட்டு ஓடும்படியான போரைச் செய்து என்றபடி. வாணன் ஆயிரம் தோள் துணித்ததும் - [1]சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றின தோள்களைக் கழித்தபடி.[2]'இவன் கரபாதை ஆற்றமாட்டாமல் கண்டார்கால்களில் எல்லாம் குனிந்து திரியாநின்ருன்' என்று அந்தக் கரத்தைக் கழித்துவிட்டான்.[3]'கை கழியப் போய்ச் சிவனை அடைந்தான், இவன் கரபாதை ஆற்ருமை' என்று அதனைப் படைக்கு அடைத்துவிட்டான். [4]வாணன் வேறு தெய்வத்தை பஜனம் பண்ணுகையன்றே அவனுக்கு இங்ஙனம் கை பிழைபாடு வந்தது என்று நாட்டார் கைவந்தபடி செய்கைக்காகச் செய்

---

1. தலையைத் துணிக்காமல், தோள்களைத் துணித்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர் 'சம்பந்தமில்லாத' என்று தொடங்கி.

2. 'சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றுதற்குக் காரணம், 'போர் இன்மையாலும் தோளில் உண்டான தினவின் மிகுதியாலும் வந்த செருக்கு' என்று அதனைக் கழித்துவிட்டான் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிருர் 'இவன்கரபாதை' என்று தொடங்கி. கரம் - இறையும், கையும்.

3. மேலே 'சம்பந்தமில்லாத விஷயங்களை' என்று தொடங்கி அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்துகொண்டு,கரத்தைக் கழித்தது திவ்விய ஆயுதங்களாலே என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிருர் 'கை கழியப் போய்' என்று தொடங்கி. படைக்கு அடைத்துவிட்டான் என்பதற்கு, திருவாழியாழ்வானுக்குச் செலவிட்டான் என்றும், சேனைக்குச் செலவிட்டான் என்றும் இருபொருள். படை - ஆயுதமும், சேனையும்.

4. 'சம்பந்தமில்லாத பொருளைப் பற்றின கைகள்' என்று இவற்றைச் சேதித்தால், நாட்டார் கை வந்தபடி தொழுகைக்கு உறுப்பாக இருக்கும் என்று செய்தான் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிருர் 'வாணன்' என்று தொடங்கி. கை பிழைபாடு - கைகள் அவனைவிட்டு வேறு தெய்வத்தைப் பற்றுதல். கைவந்தபடி - கைக்குத் தகுதியானபடி என்றும், கைகளைப் படைத்ததற்குத் தகுதியாக என்றும் பொருள்.

தான். [1]"ஈசுவரனை வணங்கும் பொருட்டு" என்றேயன்றோ சரீர சம்பத்தைக் கொடுத்தது.ஈசுவரன், கை வந்தபடி செய்யாதவர்களைக் கைமேலே தண்டிக்கை தக்கதே அன்றோ. சர்வேசுவரன் தன்னைப் பற்றுகைக்காக இவனோடே கைசெய்தன்றோ அடியிலே விட்டது. [2]'அதனை மதித்திலன், இவன் அறக் கை விஞ்சினன்' என்று தண்டித்து விட்டான். [3]வேறு தெய்வத்தைப் பற்றிக் கையிலே பலம் பெற்றுவிட்டான். [4]பகவானைப் பற்றுவதற்குக் கைம்முதல் இல்லாமை விட்டான் அன்றே. உட்பட மற்றும் பல - அவனுக்கும் [5]பெருநிலை நின்றாரையும் முதுகுகாட்டும்படி செய்தபடி.[6] "கிருஷ்ண கிருஷ்ண மஹாபாஹோ" என்று பின்பு அன்றோ அவன் இவனை உள்ளபடி அறிந்தது.

மாணியாய் நிலம் கொண்ட மாயன் - பெறில் ஜீவிப்பானாய்ப் பெறாவிடில் முடிவானாய், இரப்பிலே தழும்பு ஏறின வடி

---

1. கை வந்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'ஈசுவரனை' என்று தொடங்கி. "ஈசுவராய நிவேதிதும்" என்ற இந்தச் சுலோகத்தை மேலே பார்க்கவும். இந்தச் சுலோகத்தின் பொருளை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி. கைசெய்து - கையை இவனுக்குக் கொடுத்து என்றும், அலங்காரம் செய்து என்றும் பொருள்.

2. யுத்த கண்டூதியால் வந்த அகங்காரமுடையவனகையாலே அவனுடைய கையைக் கழித்துவிட்டான் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அதனை மதித்திலன்' என்று தொடங்கி. கண்டூதி - தினவு. கைவிஞ்சினன் - கைக்கு அடங்காதவனானன் என்றும், கைகளாலே அதிகன் ஆனன் என்றும் பொருள்.

3. வேறு தெய்வங்களை அவன் வணங்கினதற்குக் கரங்கள் அழிந்ததையே பலமாய்விட்டது என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'வேறு தெய்வத்தை' என்று தொடங்கி. கையிலே பலம் பெற்றுவிட்டான் - உண்மையிலே பலம் பெற்றுவிட்டான் என்றும், கரங்கள் அறுதலாகிற பலத்தைப் பெற்றுவிட்டான் என்றும் பொருள்.

4. பகவானை அடைவதற்குக் கைகள் தக்கன அல்லாமையாலே விட்டான் அல்லன்; கர்வத்தாலே விட்டான் என்னுமதனையும் ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'பகவானை' என்று தொடங்கி. கைம்முதல் இல்லாமை - மூலதனம் இல்லாமை என்றும், முதலிலே கை இல்லாமல் என்றும் பொருள். 'விட்டான் அன்றே' என்றது, கர்வத்தாலே விட்டான் என்றபடி.

5. பெருநிலை நின்றார் - உதவியாக நின்ற சிவன் முதலானோர்.

6. "சிவன் ஞானத்தால் மேம்பட்டவன்" என்னும்படி இருக்கிறவன் சர்வேசுவரனோடு எதிர் இடுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கிருஷ்ண' என்று தொடங்கி.

"க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்
பரேசம் பரமாத்மாநம் அநாதி நிதனம் பரம்"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 33 : 41.

வைக்கொண்டு. [1]இவர் அந்த அவதாரத்திலே கால்வாங்குகிறார் அல்லர்; கண்ணழிவற்ற அழகாலும், வரையாதே எல்லாரையும் தீண்டுகையாலும், அடியார்கள் விஷயத்தில் ஓரத்தாலும், செய்யும் ஆனைத்தொழில்களாலும் கிருஷ்ணாவதாரத்தோடு ஒத்திருக்கையாலே, ஸ்ரீவாமனாவதாரத்தை அநுபவிக்கிறார். நிலம் கொண்ட மாயன் என் அப்பன் - 'திருஉலகு அளக்க' என்று ஒரு வியாஜத்தை இட்டு அளந்துகொண்டது தம்மை என்று இருக்கிறார். அப்பன் தன் மாயங்களே காணும் நெஞ்சுடையேன்-[2]" 'முடியானே' என்ற திருவாய்மொழியிற் கூறிய கரணங்களையுடைய ஆழ்வார் ஆகையாலே, நெஞ்சு தானே நினைக்கவும் வற்றாய்க் காணவும் வற்றாயிருக்கும் என்று **பிள்ளான்** பணிப்பர்" என்று அருளிச்செய்வர். அன்றிக்கே, **'கட் கண்'** என்றும், **'உட் கண்'** என்றும் சொல்லுகிறபடியே, நெஞ்சு தன்னையும் கண்ணாகச் சொல்லக்கடவதன்றோ; அது ஆகவுமாம். எனக்கு இனி என்ன கலக்கம் உண்டே - 'இந்த விஷயத்தைக் காணப்பெற்றிலோம்' என்கிற கலக்கம் எனக்கு உண்டோ? அன்றிக்கே, [3]வேறு தெய்வங்கள் **'ரக்ஷகர்'** என்று இருக்கிற கலக்கமும், ஈசுவரனுடைய ரக்ஷணத்திலே ஐயப்படும் கலக்கமும், 'தானே தனக்குக் கடவன்' என்னும் கலக்கமும் இல்லை என்னனுமாம். (8)

594.

**கலக்க ஏழ்கடல் ஏழ்மலை உலகேழும்கழியக்கடாய்**
**உலக்கத் தேர்கொடு சென்ற மாயமும் உட்பட மற்றும்பல**
**வலக்கை ஆழி இடக்கைச் சங்கம் இவையுடை மால்வண்ணனை**
**மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின் மிசையே?**

---

1. கிருஷ்ணாவதாரத்திலே மூழ்கிப் பேசுகிற இவர் வாமனாவதாரத்தைப் பேசுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்' என்று தொடங்கி.

2. நெஞ்சாலே காணக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முடியானே' என்று தொடங்கி.

" கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும்
உட்கண்ணேல் காணும் உணர்ந்து " (பெரிய திருவந். 28.)

என்பது, ஈண்டு அநுசந்தேயம்.

3. இங்குக் கூறுகின்ற கலக்கங்கள் மூன்றனுள், முன்னே கூறிய இரண்டு கலக்கமும் வாணாசுரனைப் பற்றியன; மூன்றாவதாகக் கூறிய கலக்கம் மஹாபலியைப் பற்றியது.

**பொ - ரை :**—ஏழ்கடலும் ஏழ்மலையும் உலகு ஏழும் ஒக்க கழியச் செலுத்தி, முடியத் தேரைக் கொண்டு சென்ற ஆச்சரியமும் முதலான மற்றும் பலவான ஆச்சரியமான செயல்களையுடைய, சக்கரம் சங்கு இவற்றை வலக்கையிலும் இடக்கையிலுமாகவுடைய மால் வண்ணனை வேறுபடும்படி செய்கிற பாசுரங்களைப் பாடுகின்ற நாக்கினையுடைய எனக்கு இந்த மண்ணின்மேல் ஒப்பாவார் உளரோ ?

**வி-கு :**—மால்வண்ணன்-கரிய நிறத்தை யுடையவன். மலக்குதல்-கலங்கச் செய்தல்.

**ஈடு :**—ஒன்பதாம்பாட்டு. [1]வைதிக புத்திரர்களைக் கொண்டு வந்து தருதல் முதலான வெற்றிச் செயல்களையுடைய சர்வேசுவரனை மலக்கும் நாவீறுடைய என்னோடு ஒப்பார் உளரோ? என்கிறார்.

கலக்க ஏழ்கடல் ஏழ்மலை உலகுஏழும் கழியக் கடாய்- ஏழ் கடல் ஏழ்மலை உலகுஏழும் கலக்கக் கழியக் கடாய். கலக்க-ஒக்க : அதாவது, தேரை நடத்துகிறபோது நீரோடு மலையோடு தறையோடு வாசிஅற ஒக்க நடத்தினபடி. அன்றிக்கே, கலக்க என்பதனைக் கடலுக்கு அடைமொழியாக்கி, கலங்குதலையுடைய கடல் என்று பொருள் கூறலுமாம். அங்ஙனமன்றிக்கே, ஏழ்கடல் ஏழ்மலை உலகு ஏழையும் கழிய நடத்துகிறபோது அதிர நடத்தி என்றுமாம். கலக்க-அதிர. உலக்கத் தேர்கொடு சென்ற மாயமும் - காரியமான தேரினைக் காரணமான மூலப்பகுதியிலே நடத்துகிற இடத்தில் அழியாதபடி நடத்தின ஆச்சரியமும். உலக்க - முடிய. உட்பட மற்றும் பல- வைதிக புத்திரர்களை இந்தத் தேசத்தினின்று கொண்டுபோருகையும், போன செவ்வியிலே கொடுவந்து கொடுக்கையும், காலையில் செய்யவேண்டிய யாககாரியங்களைச் செய்து முடித்த பின்பு மத்தியானத்தில் செய்யவேண்டிய காரியங்களைச் செய்வதற்கு முன்பு இவை அடங்கலும் செய்கையும். வலம் கை ஆழி இடம் கைச் சங்கம் இவையுடை மால்வண்ணனை மலக்கு நாவுடையேற்கு - [2] இவ்விடத்தைப் **பட்டர்** அருளிச்செய்யா

---

1. முதல் இரண்டு அடிகளையும் கடாக்ஷித்து 'வைதிக புத்திரர்களை' என்று தொடங்கியும், "மலக்கு நாவுடையேற்கு" என்றது முதலானவற்றைக் கடாக்ஷித்து 'மலக்கும் நாவீறுடைய' என்று தொடங்கியும் அருளிச்செய்கிறார்.

2. இடைப்பிறவரலாக ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் 'இவ்விடத்தை' என்று தொடங்கி.

நிற்கச்செய்தே கஞ்சனூரில் இருந்தவரான **வண்டுவரைப் பெருமாள்** என்பவர், மால்வண்ணனை 'மலக்கு நாவுடையேன்' என்ன அமையாதோ? 'வலக்கை ஆழி இடக்கைச் சங்கம் இவையுடை' என்று விசேடித்ததற்குக் கருத்து என்? என்ன, [1]**"சோளேந்திரசிங்கனை உளுக்காக்கப் பண்ணுகிறேன் என்கிருர் காணும்"** என்று அருளிச்செய்தார். [2] அறப் பெரியவனுக்கு லக்ஷணம் அன்றோ சங்க சக்கரங்கள். [3] "ஒன்றிலும் ஆசை இல்லாதவன், மௌனமாக இருப்பவன்" என்கிற சர்வாதிக வஸ்துவைக் கலங்கச்செய்யும் நாவீறுடையேன் என்கிருர். மால்வண்ணனை - கறுத்த நிறத்தையுடைய சர்வேசுவரனை. மலக்கும் நாவுடையேன்-[4] இவர் வார்த்தையில் கலங்குமவனன்றோ அவன்தான். [5] இவர் கலங்கிச் சொல்லச் சமைந்தாற்போலேயன்றோ அவனும் கலங்கிக் கேட்கச் சமைந்தபடி. இம் மண்ணின்மிசை மாறு உளதோ - [6] பரமபதத்தில் அநுபவம் வாய்புகுநீர் ஆகையாலே அதனை ஒன்ருக நினைத்திருக்கின்றிலர். இனி, உண்டாகில் பூமியிலே; அதிலும் இல்லை என்கிருர். அன்றிக்கே, 'ஒப்பு உண்டு, இல்லை' என்று ஐயங்

---

1. 'சோளேந்திர சிங்கன்' என்பது, பெருமாளுடைய யானை. உளுக்காக்க - இருக்கும்படி. என்றது, சர்வேசுவரனுகிற மத்த யானையானது பணிந்து கொடுக்கும்படி செய்கிறேன் என்ருகிர் என்றபடி.

2. "வலக்கையாழி" என்பதுபோன்ற அடைமொழிகளால், சங்க சக்கரங்களோடு கூடின ஆகாரம் தோற்றுமே ஒழிய, பெருமை தோன்ற வழி இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அறப்பெரியவனுக்கு' என்று தொடங்கி.

3. 'சோளேந்திர சிங்கனை' என்று தொடங்கி மேலே அருளிச்செய்ததனை விவரணம் செய்கிருர் 'ஒன்றிலும்' என்று தொடங்கி.
"அவாக்யநாதரஃ" என்பது, சாந்தோக்யம். 3 : 14.

4. இவருடைய சொல்லளவில் சர்வேசுவரன் கலங்குவானோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவர் வார்த்தையில்' என்று தொடங்கி.

5. சர்வேசுவரன் கலங்குகைக்குக் காரணம், வியாமோகம் என்று கொண்டு, அதற்கு இவரையே திருஷ்டாந்தமாக்கிக்கொண்டு அருளிச்செய்கிருர் 'இவர் கலங்கி' என்று தொடங்கி.

6. இரண்டு உலகங்களிலும் ஒப்பு இல்லை என்னுமல், "மண்மிசை மாறு இல்லை" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'பரமபதத்தில்' என்று தொடங்கி. வாய்புகுநீர் - வாயளவு தண்ணீர். என்றது, தலைமுடிய உள்ள அநுபவம் என்றபடி. அதற்கே வேறும் ஒரு விடை அருளிச்செய்கிருர் 'ஒப்பு உண்டு' என்று தொடங்கி. "ஆக, மண்ணின் மிசை மாறுளதோ" என்றதற்கு, முதல் கருத்து, பரமபதத்தில் அநுபவம் உன்மஸ்தகமாய், தரித்திருந்து அநுபவிக்கமுடியாமையாலே அதனைவிட்டு, தரித்திருந்து

கொள்ளுகைக்குத்தான் விஷயமுள்ளது நித்திய விபூதியிலே யன்றோ? ஆதலால், '**இம் மண்ணின்மிசை மாறுளதோ?**' என்கிறார் என்னுதல். (9)

595.

**மண்மி சைப்பெரும் பாரம் நீங்கவோர் பாரத மாபெரும்போர்**
**பண்ணி மாயங்கள் செய்து சேனையைப் பாழ்படநூற் றிட்டுப்போய்**
**விண்மி சைத்தன தாம மேபுக மேவிய சோதிதன் தாள்**
**நண்ணி நான்வணங் கப்பெற் றேன்**எனக் கார்பிறர் நாயகரே?

**பொ - ரை :**—பூமியின்மேலே பெரிய பாரம் நீங்கும்படி ஒப்பற்ற மிகப் பெரிய பாரதமாகிய போரைச்செய்து ஆச்சரியமான காரியங்களைச் செய்து சேனைகள் பாழ்படும்படியாக மந்திரித்துப் போய்ப் பரமாகாசமான தன்னுடைய வைகுண்டலோகத்தைச் சென்று அடைந்த பரஞ்சோதியினுடைய திருவடிகளைச் சேர்ந்து நான் வணங்கப்பெற்றேன்; எனக்குத் தலைவர் வேறு யாவர் உளர்?

**வி - கு :**—நீங்கப் பண்ணிச் செய்து நூற்றிட்டுப் போய்த் தன தாமமே மேவிய சோதி என்க. நூற்றிட்டு - சாம்பலாக்கி என்னலுமாம். நூறுதல் - கொல்லுதல்.

**ஈடு :**—பத்தாம்பாட்டு. [1]அபாயங்களே மிகுதியாகவுடைய சம்சாரத்திலே வந்து அவதரித்து யாதொரு அபாயமும் இல்லாமல் பரமபதத்திற் போய்ப்புக்க படியை அனுபவிக்கப்பெற்ற எனக்கு வேறே சிலர் நிர்வாஹகர் வேண்டும்படி குறையுடையவனோ நான்? என்கிறார்.

மண்மிசைப் பெரும் பாரம் நீங்க-[2]'விஶ்வம்பரை' என்றும் 'க்ஷமை, பொறை' என்றும் பெயர்களையுடைத்தாய்த் தாங்கக் கூடியதான பூமியாலும் பொறுக்க ஒண்ணாதபடி அன்றோ

---

அநுபவிக்கலான இந்த உலகத்தில் எதிர் உளரோ? என்கிறார் என்பது. 'எதிர் உண்டு, இல்லை' என்று சங்கிக்கைக்கு விஷயம் பரமபதத்தில் உண்டானால் உண்டித்தனை ஒழிய, இங்கு இல்லை என்கிறார் என்பது இரண்டாவது கருத்து.

1. "போய் விண் மிசைத் தன தாமம்" என்பது போன்றவைகளையும், "நண்ணி நான்" என்பது போன்றவைகளையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "பெரும்பாரம்" என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'விஶ்வம்பரை' என்று தொடங்கி. **விஶ்வம்பரை - எல்லாவற்றையும் தாங்குவது; பூமி.**

தூர்வர்க்கம் திரண்டபடி. [1] பரமபதத்தில் "எந்தப் பரமபதத்திலே பழையர்களான சாத்தியர்என்கிற தேவர்கள் வசிக்கிறார்களோ" என்கிறபடியே, கனத்தார் உண்டாயிருக்கச் செய்தேயும், பாரம் இல்லை அன்றோ அகங்கார சம்பந்தமுடையார் இல்லாமையாலே. [2] தங்கள் பாரத்தினை அவன் தலையிலே வைத்திருக்குமவர்களன்றோ அவர்கள். ஓர் மா பெரும் பாரதப் போர் பண்ணி - ஒப்பற்றதான மஹாபாரதமாகிற மஹா யுத்தத்தைச் செய்து. மாயங்கள் செய்து - பகலை இரவாக்குவது, 'ஆயுதம் எடேன்' என்று ஆயுதம் எடுப்பது, எதிரிகளுடைய மர்மத்தைக் காட்டிக்கொடுப்பது ஆனவை தொடக்கமானவற்றைச் செய்து. சேனையைப் பாழ்பட நூற்றிட்டு - சேனை வெறுந்தறையாம்படி மந்திரித்து. [3]"எவனுக்கு, மூன்று உலகங்கட்கும் நாதனும் ஜனார்த்தனனுமான கண்ணன் மந்திரியாயும் ரக்ஷகனும் சிநேகிதனும் இருந்தானோ, அந்தத் தர்மபுத்திரனுக்கு ஜெயிக்கப்படக் கூடாதது யாதுளது" என்னக்கடவதன்றோ. [4] 'ஆயுதம் எடுக்க ஒட்டோம்' என்கையாலே சூழ்ச்சியாலே அழித்தான்.

போய் விண்மிசைத் தன தாமமே புக மேவிய சோதி தன் தாள் - [5] பகைவர்களை அழித்ததற்கு மேலே அன்றோ இவர்கள்

1. "இதனைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமான கூட்டம் இருக்கச்செய்தேயும் பரமபதம் பொறுத்திருக்கவில்லையோ? அதனை நோக்கும்போது இதற்குப் பாரம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரமபதத்தில்' என்று தொடங்கி.

"யத்ர பூர்வே ஸாத்யாஃ ஸந்தி தேவாஃ"

என்பது, புருஷசூக்தம். இங்குப் பாரம் என்கிறது, மக்கள் பாரம் அன்று; யான் எனது என்னும் செருக்கே பாரம் என்றபடி.

2. நித்தியசூரிகளுக்கு யான் எனது என்னும் செருக்கு இல்லையோ? என்ன, 'தங்கள் பாரத்தினை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'பரமபதத்தில்' என்று தொடங்கியும், 'தங்கள்' என்று தொடங்கியும் அருளிச்செய்யும் இரண்டு வாக்கியங்களும் "மண்மிசை" என்று விசேடித்ததற்கு, பாவங்கள்.

3. மந்திரித்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எவனுக்கு' என்று தொடங்கி.

"யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்தநஃ
ஹரிஸ் த்ரைலோக்ய நாதஸ்ஸஃ கிந்நு தஸ்ய ந நிர்ஜிதம்"

என்பது, பாரதம் ஆரண்யபர்வம். 49: 20.

4. மந்திரிக்கிறது என்? திருவாழியாலே அழிக்கலாகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆயுதம்' என்று தொடங்கி.

5. "போய்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பகைவர்களை' என்று தொடங்கி.

இருந்த நிலத்தில் இராமல் பரமபதத்திலே போய்ப் புகப் பெற்றபடி! என்று உகக்கிறார். [1] பொய்யாசனம் இடுவார், பரிபவிப்பவர் இவர்களையுடைய இந்த நிலத்தை விட்டுப் பரிவரேயான பரமபதத்து ஏறப் போகப் பெறுவதே! [2] "ப்ருது லோசநஃ ப்ருதிவ்யாஃ பாராவதரணம் க்ருத்வா - நீண்ட கண்களையுடைய கண்ணன் பூமியினுடைய பாரத்தைக் கழித்து, மோஹயித்வா ஜகத்சர்வம் - ப்ரதிகூலரை அடங்கலும் உழவு கோலாலே விழவிட்டு, அநுகூலரை யடங்கலும் கண்களாலே விழவிட்டுப் போனன்; கதஃ ஸ்வம் ஸ்தானம் உத்தமம் - விண் மிசைத் தன தாமமே புக்கான். உத்தமம்-கம்சன் முதலானோர் துரியோதனன் முதலானோர் இவர்களால் வரும் அச்சம் இன்றியே, தனக்குப் பரிவரானவர்கள் இருக்கிற நிலத்திலே போய்ப் புகப் பெற்றபடி. [3] ஒரு தீர்த்தத்தின் அன்று நாயிறு போது **ஆண்டானும் எம்பாரும்** தங்களிலே சந்தித்து, "யான் எனது என்னும் செருக்கினால் மலினமாக்கப் பட்டவராயிருப்பார் பத்துக்கோடிபேர் நடுவே, அதிசுகுமாரமான திருமேனியைக்கொண்டு பத்துநாள் எழுந்தருளி, அபாயம் இல்லாமல் புக்கருளப் பெற்றபடி கண்டதே!" என்று ஒருவரை ஒருவர் தண்டன் இட்டுத் தழுவிக் கொள்ளாநிற்க, கண்டேன் என்று **சீயர்** அருளிச்செய்வர். நண்ணி நான் வணங்கப்பெற்றேன் - [4] காலயவனன், ஜராசந்தன் தொடக்கமானாரைப்போலே, எதி

1. உகப்பதற்கு, இங்கு நடந்த பொல்லாங்குகள் யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பொய்யாசனமிடுவார்' என்று தொடங்கி.

2. பூமியின் பாரத்தைப் போக்கித் தன் தாமத்தை அடைந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ப்ருது லோசநஃ' என்று தொடங்கி.

"க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யாஃ ப்ருது லோசநஃ
மோஹயித்வா ஜகத்ஸர்வம் கதஃ ஸ்வம் ஸ்தாநம் உத்தமம்"

என்பது, பாரதம் மௌசலபர்வம்.

3. தன் தாமத்திலே போகப் பெற்றது உகப்பாய் இருக்கும் என்னுமதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'ஒரு தீர்த்தத்தின் அன்று' என்று தொடங்கி. நாயிறுபோது - சூரியன்படுகிற மாலை நேரத்தில். மலினம் - குற்றம். 'பத்து நாள்' என்றது, சில ஆண்டுகள் என்பது பட நின்றது. "இல்லினுள் இரண்டு நாளைச் சுற்றமே இரங்கல்வேண்டா" என்பது, சிந்தாமணி.

4. "வணங்கி நான் நண்ணப்பெற்றேன்" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'காலயவனன்' என்று தொடங்கி.

ரிட்டுக் கிட்டுகை அன்றிக்கே, முறையாலே கிட்டப்பெற்றேன். எனக்கு நாயகர் பிறர் ஆர்-[1] அவனுடைய அவதாரம் தொடக்கமாக, நடுவுள்ள அபாயங்களைத் தப்பி அடியார்களை வாழ்வித்துத் தனக்கு அமர்ந்த நிலத்தேபோய்ப் புக்கபடி யளவும் அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஆர்தான் நியமிக்கின்றவர்கள்? என்கிறார். [2]"பயிலும் திருவுடையார் யவரேலும்" என்றதனை மறந்தார்போலே இருந்தது. அன்றிக்கே, அவர்களைப் பிறராக நினையாரே யன்றோ என்னனுமாம். (10)

## 596.

நாயகன் முழு வேழுல குக்குமாய் முழுவே ழுலகுந்தன்
வாயகம் புக வைத்து மிழ்ந்தவை யாய்அவை அல்லனுமாம்
கேசவன் அடி யிணைமிசைக் குருகூர்ச் சடகோ பன்சொன்ன
தூய ஆயிரத் திப் பத் தால் பத்த ராவர் துவளின்றியே.

**பொ - ரை :**—எல்லா உலகங்கட்கும் நாயகனும், எல்லா உலகங்களையும் பிரளயகாலத்தில் தன் வயிற்றினுள் வைத்துப் பிரளயம் நீங்கினவுடனே அவற்றை உமிழ்ந்தவனும், சராசரங்கள் அனைத்துமாய், அவற்றின் தோஷங்கள் ஒன்றும் தன்பக்கல் தட்டாதவனுமாய் இருக்கின்ற கண்ணபிரானுடைய திருவடிகளின்மேலே, திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீ சடகோபராலே அருளிச்செய்யப்பட்ட பரிசுத்தமான ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களால் குற்றமின்றிப்பக்தர் ஆவார்கள்.

**வி - கு :**—வாயகம் - வாயிடம். புகவைத்தல் - செலுத்தல்; உண்டு என்றபடி. தூய - பரிசுத்தமான. துவள் - குற்றம்.

---

1. "எனக்குப் பிறர் ஆர் நாயகர்" என்று கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார் 'அவனுடைய' என்று தொடங்கி.

2. பாகவதர்கள், தமக்கு நாயகராக இருக்க, இங்ஙனே சொல்லலாமோ? என்ன, அதற்கு இரண்டு வகையாக விடை அருளிச்செய்கிறார் 'பயிலும்' என்று தொடங்கியும், 'அவர்களை' என்று தொடங்கியும். என்றது, இவ்வநுபவத்தால் உண்டான பிரீதியின் மிகுதியாலே "பயிலும் சுடர்" என்ற திருவாய்மொழியிற் கூறியதனை மறந்தார் என்பது ஒன்று. பாகவதர்களைச் சர்வேசுவரனைப்போன்று நினைத்திருக்குமது ஒழிய, வேறாக நினையாராகையாலே, இங்குப் "பிறர்" என்றது, பாகவதர்களை அன்று; வேறுபட்ட மற்றையோரை என்பது இரண்டாவது.

ஈடு :—முடிவில்,[1] கிருஷ்ணனுடைய செயல்களைப் பேசின இப்பத்தும் கற்றார், தம்மைப் போன்றே கிருஷ்ணபக்தராவர் என்கிறார்.

முழு ஏழ் உலகுக்கும் நாயகன் ஆய்-சேதந அசேதநங்கள் எல்லாவற்றையும் நியமிக்கின்றவனாய். முழு ஏழ் உலகும் தன் வாயகம் புக வைத்து உமிழ்ந்து-பிரளயாபத்தில் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நெருக்குப் படாமல் வெளிநாடு காணப் புறப்பட விட்டு. அவையாய் - எல்லாப் பொருள்களும் 'தான்' என்கிற சொல்லிலே அடங்கும்படி அவற்றைப்[2] பிரகாரதயா சரீரமாகவுடையனாய். அவை அல்லனுமாய் - இப்படி இருக்கச்செய்தே அவற்றினுடைய தோஷங்கள் தீண்டப்படாதவனாயிருக்கின்ற.கேசவன் அடியிணைமிசைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன - கேசி என்னும் அசுரனைக் கொன்ற சர்வேசுவரன் திருவடிகளிலே. [3] "மேல் திருவாய் மொழியிற் சொன்ன சர்வேசுவரத்வத்தையும், இத்திருவாய் மொழியிலே, கேசியைக் கொன்றவனான கிருஷ்ணனுடைய அவதாரத்தையும் அநுபாஷித்துத் தலைக்கட்டுகிறது" என்று சொல்லுவர். அன்றிக்கே, "எல்லா உலகங்கட்கும் காரணன்

---

1. "இப்பத்தால் பத்தராவர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. பிரகாரதயா - விசேடணமாக இருப்பதனாலே.

3. கிருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகிற இத்திருவாய்மொழியில், சர்வேசுவரனுந் தன்மையைச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியில்' என்று தொடங்கி. என்றது, "நாயகன் முழுவேழ் உலகுக்குமாய்" என்றது முதல் "அவையல்லனுமாய்" என்றது முடிய, "நல்குரவும்" என்ற திருவாய்மொழியிற் கூறிய சர்வேசுவரத்வத்தையும், "கேசவன்" என்றதனால், இந்தத் திருவாய்மொழியிற் கூறிய கிருஷ்ணனுடைய செயல்களையும் அநுவதித்துத் தலைக்கட்டுகிறார் என்றபடி. மேலதற்கே, வேறும் ஒருவகையில் விடை அருளிச்செய்கிறார் 'எல்லா வுலகங்கட்கும்' என்று தொடங்கி. என்றது, உலகத்தைப் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையும் செய்கிறவன் கண்ணபிரானே என்று சொல்லுகையாலே, இத்திருவாய்மொழியிற் கூறிய கிருஷ்ணன் செயல்களையே, இப்பாசுரத்திலே அநுபாஷித்துத் தலைக்கட்டுகிறார் என்றபடி. 'கிருஷ்ணவிஷயமே சொல்லுகிறது' என்றது, இப்பாசுரம் முழுதும், கிருஷ்ணனுடைய செயல்களையே கூறுகிறது என்றபடி.

"க்ருஷ்ண ஏவஹி லோகாநாம் உத்பத்திரபிசாப்யயஃ
க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்"

என்பது, மஹாபாரதம் சபாபர். 38 ; 23.

கிருஷ்ணனே" என்கிறபடியே, கிருஷ்ண விஷயமே சொல்லுகிறது என்னுதல். தூய ஆயிரத்து இப்பத்தால் துவள் இன்றிப் பத்தர் ஆவர் - இப்பத்தினையும் கற்றவர்கள் ஆழ்வாரைப் போலே ஆவர். இப்பத்தினையுடைத்தாகையாலே தூய்மையையுடைத்தான ஆயிரம் என்னுதல்; அன்றிக்கே, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு, கிருஷ்ணனுடைய செயல்களைச் சொல்லுகையாலே தூய்மையையுடைத்தான இப்பத்து என்னுதல். துவள் இன்றியே பத்தர் ஆவர் - துவள் - குற்றம். குற்றம் இல்லாமையாவது, வேறு அவதாரங்களில் போகாமல் கிருஷ்ணனுடைய செயல்களிலே தாழ்தல். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

குரவைமுத லாம்கண்ணன் கோலச் செயல்கள்
இரவுபகல் என்றுமல் என்றும்—பரவுமனம்
பெற்றேன்என் றேகளித்துப் பேசும் பராங்குசன்தன்
சொற்றேனில் நெஞ்சே! துவள். (54)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

## ஐந்தாந் திருவாய்மொழி — "துவளில்"

### முன்னுரை

---

ஈடு :—[1]இத் திருவாய்மொழிக்கு முன்னும் பின்னும் எல்லாம் எம்பெருமானைக் கவிபாடினார்; இத் திருவாய்மொழியில் தம்முடைய படி சொல்லுகிறார். [2]சிம்ஹாவலோகந நியாயத்தாலே [3]"பொய்ந்நின்ற" என்னும் பாசுரம் தொடங்கி இவ்வளவும் வர தமக்குப் பகவத் விஷயத்தில் உண்டான பிராவண்யத்தின் மிகுதியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். [4]"இத் திருவாய்மொழி, ஆழ்வார் தன்மை சொல்லுகிறது" என்று நம் முதலிகள் எல்லாரும் போர விரும்பி இருப்பர்கள். [5]பகவானுடைய திருவருளாலே அடைந்த ஞானத்தினையுடையவராய்,

---

1. சங்கிரஹமாகச் சங்கதி அருளிச்செய்கிறார் 'இத்திருவாய்மொழிக்கு' என்று தொடங்கி, 'தம்முடைய படி சொல்லுகிறார்' என்றது முடிய. இத் திருவாய்மொழியில் வருகின்ற "முன்னம் நோற்ற விதிகொலோ" என்பது போன்றவைகளையும், "பின்னை கொல்?" என்பது போன்றவைகளையும், "சிந்தையாலும்" என்பது போன்றவைகளையும் கடாக்ஷித்துத் 'தம்முடைய படி சொல்லுகிறார்' என்கிறார்.

2. 'தம் படி யாது? என்ன, 'சிம்ஹாவலோகநம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். சிம்ஹாவலோகநம் - சிங்க நோக்கு.

> ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
> பாய்த்துப் பருந்தின் வீழ்வன்ன சூத்திரநிலை.

என்பது, நன்னூல்.

3. 'பொய்ந்நின்ற என்னும் பாசுரம் தொடங்கி' என்றது, "கைதொழுத வந்நாள் தொடங்கி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. "பொய்ந்நின்ற" என்பது, திருவிருத்தம். செய். 1.

4. 'தம் படி சொல்லுகிறார்' என்றதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'இத்திருவாய்மொழி' என்று தொடங்கி.

5. தம் படிகளைத் தாமே சொன்னால், தற்புகழ்ச்சி ஆகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பகவானுடைய' என்று தொடங்கி. என்றது, ஆப்தியின் பொருட்டுச் சொல்லுகிறாராகையாலே குற்றமில்லை என்றபடி.

> மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்
> தன்னுடை யாற்றல் உணரா ரிடையினும்
> மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்
> தன்னை மறுதலை பழித்த காலையும்
> தன்னைப் புகழ்தலும் தகும்புல வோர்க்கே.

என்பது நன்னூல்.

திருவடி தன்னைப் புகழ்ந்து பேசுதலையும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும். கம்ப. கிஷ்கிந். மகேந்திரப். 20-முதல் 24-முடியக் காண்க.

"வேதவாக்குக்கள் அந்த ஆனந்த குணத்தினின்றும் திரும்பின" என்கிற விஷயத்தை மறுபாடு உருவப் பேசின நாமே வேணுமாகாதே தம்படி பேசும்போதும்.

[1]ஸ்ரீஜனகராஜன் திருமகள் பிறந்த சமயத்திலே சோதிடர்களை அழைத்து, '**இவள் ஜீவிக்கும்படிகள் என்?**' என்று கேட்க, 'இவள் ஜீவிக்கும்படிகளில் ஒரு குறை இல்லை, எல்லாவுலகங்களையுமுடைய ஒருவனைக் கைப்பிடிக்கவும் கடவள்; இங்ஙனே இருக்கச்செய்தேயும் வனவாச ரசம் அநுபவிக்கக் கடவள்' என்றார்கள்; அப்படியே, இப் பெண்பிள்ளை பிறந்தபோது இவள் திருத்தாயார் உள்ளிட்டார், காரணம் அறிந்தவர்களை அழைத்து, '**இவள் ஜீவிக்கும்படிகள் எங்ஙனே?**' என்று கேட்க, 'எல்லாம் நன்றாகத் தலைக்கட்டக்கடவன; ஆனாலும், இவளுக்கு ஓர் அகால மரணம் உண்டு; அது தப்பினாளாகில் சுகமே ஜீவிக்கும். அதாவது, **திருத் தொலை வில்லிமங்கலத்திற் கொடுபோகாதே ஒழியப் பெறில் இவளைப் பெறலாம்** என்றார்கள். [2]இவள் மரணத்தையே அடையினும் திருத்தொலை வில்லிமங்கலத்தில் கொடுபோகாது ஒழியவல்ல குடி அன்றே; [3]'**இவள் அங்கே புக்கு இறப்பினும் அமையும்**' என்று இருப்பார் சிலர் அன்றோ. [4]பிராட்டி வனவாச ரசம் அநுபவியாத அன்றேஅன்றோ இவள் திருத் தொலை வில்லிமங்கலத்தில் புகாதொழியவல்லளாவது. **ஸ்ரீநளர்** வார்த்தையை நினைப்பது.

---

1. தோழியானவள், தாய்மாரைப் பார்த்துப் "பிரான் இருந்தமை காட்டினீர்" என்று, திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபோனால் இவளுக்குக் கேடு வரும் என்று அறிந்திருந்தும் கொண்டுபோனீர்கள் என்கிறாள்; அங்கே கொண்டுபோனால் இவளுக்கு அநர்த்தம் வரும் என்று தாய்மார்கள் எதனால் அறிந்தார்கள்? என்ன, அறிந்தமையைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் 'ஸ்ரீஜனகராஜன்' என்று தொடங்கி.

2. இப்படி அறிந்திருந்தும் கொண்டுபோவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் மரணத்தையே அடையினும்' என்று தொடங்கி.

3. அந்தக் குடியிலுள்ளார் படியினை அருளிச்செய்கிறார் 'இவள் அங்கே' என்று தொடங்கி.

4. குடியின் தன்மை மாத்திரமேயன்று; தெய்வத்தின் கல்பிதமாகையாலும் தவிரவொண்ணாது என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு காட்டுகிறார் 'பிராட்டி' என்று தொடங்கி. தெய்வத்தின் கல்பிதமாகையாலும் என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'ஸ்ரீநளர் வார்த்தையை நினைப்பது' என்று. என்றது, சமுத்திரராஜன் தோன்றி வந்து, 'விசுவகர்மாவின் மகனான நளன் சேதுபந்தனத்துக்கு என்று கல்பிதனாயிருக்கிறான், அவனைக்கொண்டு என்பக்கலிலே

[1]தேஹாத்மாபிமாநிகளாய் இருப்பார்க்கு எத்தனையேனும் அறிவு பிறந்தாலும் '**நான் பருத்தவன், நான் இளைத்தவன்**' என்கிற நிலை மாற்றப் போகாதவாறுபோலே, இவரையும் எல்லா வகையாலும் உகந்தருளின நிலங்களிலே நின்றும் திருஷ்டத்தில் குறைசொல்லி மீட்கப் போகாது. [2]சிற்றின்பத்திலே ஈடுபாடு உடையராயிருப்பார் 'அதர்மம்' என்றும், 'பழி' என்றும், 'மேல் நரகம்' என்றும் சொன்னால் சிற்றின்பத்தில் நின்றும் மீளார்களே அன்றோ. [3]இங்குக் குணாதிக விஷயமாகையாலே ஒருகுறை சொல்லி மீட்கப்போகாதே. [4]'**குறைசொல்லுவோம்**' என்று நினைக்கிலும் குணங்களின் மிகுதியைச் சொல்லுமத்தனை அன்றோ. [5]அது பின்னை ஈடுபாட்டுக்குக் காரணமாமத்தனை அன்றோ. [6]பழியும் உண்டாயிடுக, மதிப்புக்கேடும் வருக; ஆனாலும், அது கண்டு மீளமாட்டாத உறுதியன்றோ இவளது. [7] அங்ஙனேயாகிலும், இவர்கள் இவ்விஷயத்தில் நின்றும் இவளை மீட்கப் பார்க்கிறது என்? என்னில், 'பருவம் நிரம்பாதிருக்கச் செய்தேயும் நம்மளவு அல்லாத அளவு கடந்த ஈடுபாடு இவளுக்கு விளையாநின்றது; அது இவளை இழக்க வரின் செய்

சேதுபந்தனம் செய்து கொள்ளும்' என்று சொல்லிப் போன அளவிலே, பெருமாள் திருவடிகளிலே நளன் வந்து சேவித்து 'சமுத்திரராஜன் வார்த்தை சத்தியமே; நான் சேதுபந்தனம் செய்யவல்லேன்' என்று கூறிய வார்த்தையை நினைப்பது என்றபடி.

1. அங்கே கொண்டுபுக்காலும், அவ்விஷயத்துக்கு ஏதேனும் குறை சொல்லி மீட்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தேஹாத்மாபிமாநிகளாயிருப்பார்க்கு' என்று தொடங்கி, 'உறுதியன்றோ இவளது' என்றது முடிய. திருஷ்டத்தில் குறை - ஐசுவரியத்தில் குறை.

2. அதற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சிற்றின்பத்திலே' என்று தொடங்கி.

3. திருஷ்டத்தில் குறைசொல்லி மீட்கப் போகாவிட்டாலும், விஷயத்திற் குறைசொல்லி மீட்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்குக் குணாதிக விஷயமாகையாலே' என்று தொடங்கி.

4. குணாதிக விஷயமேயாகிலும் "கடியன் கொடியன்" என்றாற்போலே சில குறைகளைச் சொன்னாலோ' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'குறை சொல்லுவோம்' என்று தொடங்கி.

5. "கொடிய என்னெஞ்சம் அவன் என்றே கிடக்கும்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி, 'அது பின்னை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

6. பிராவண்யத்தால் மீட்கப்போகாத மாத்திரமன்றிக்கே, அவ்விஷயத்தில் மிக்க உறுதிகொண்டவளாதலாலும் மீட்கப்போகாது என்கிறார் 'பழியும்' என்று தொடங்கி.

7. 'அங்ஙனேயாகிலும்' என்றது, குடிப்பிறப்பு தானே அங்கே கொண்டுபோய் மூட்டுகையாலும், தெய்வவசத்தாலும், இவளுடைய பிராவண்யத்தாலும், மன உறுதியினாலும் இப்படி அபஹரிக்கப்பட்டவளாயிருந்தும் என்றபடி.

வது என்?' என்னும் அச்சமாயிற்று இவர்களுக்கு ஓடுகிறது. [1] இனித்தான், **அளவு கடந்த ஈடுபாடு சாதனத்தை அநுஷ்டிப்பார் கையிலே கிடக்கக் காண்கையாலே 'இவள் சாதன புத்தியால் இழியின் செய்வது என் ?'** என்னும் அச்சத்தாலே மீட்கவும் பார்ப்பரே. [2] **'இந்த ஈடுபாடு சொரூபத்திற்கு விரோதமானுலன்றே சாதனத்தில் சேர்வது'** என்றே அன்றோ இருப்பது இவள். [3]**'சொருபபேதத்துக்கு இசைந்தால் சொருபத்திற்குத் தகுதியான காரியங்களுக்கு இசைய வேண்டாவோ ?'** என்று காணும் இவள் கருத்து. [4]**சேஷிக்கு உபாயமாயிருத்தல் சொரூபத்திற்குச் சேர்ந்தது** ஆனபின்பு, **சேஷனாயிருப்பவனுக்கும் பிராவண்யம் சொரூபத்தில் கட்டுப்பட்டதாகக் கடவதன்றோ.**

[5] இனித்தான், மேல் திருவாய்மொழியோடு இத் திருவாய்மொழி சேர்ந்திருக்கும்படி என் ? என்னில், கிருஷ்ணனுடைய குணங்களை அநுபவியாநிற்கச்செய்தே, குடிக்கிற தண்ணீர் விக்கி அதுதானே பரவசமாந் தன்மையை விளைப்பிக்குமாறு போலே, அந்த அநுபவம்தானே வேறு ரசத்திலே மூட்டத் தமக்குப் பிறந்த துன்பத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். அதாவது, "பொய்ந்நின்ற ஞானம்" தொடங்கி இவ்வளவும்வர, பகவத் விஷயத்தில் பூர்ண அநுபவம் இன்றிக்கே

---

1. மீட்கப் பார்ப்பதற்குச் சுவாபதேசத்திலே காரணம் அருளிச்செய்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி.

2. 'மிகுந்த பிராவண்யம் சொரூபத்திற்கு மாறுகில் செய்வது என் ?' என்னும் அச்சம் மகளுக்கும் ஒவ்வாதோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இந்த ஈடுபாடு' என்று தொடங்கி. 'சொரூபத்திற்கு விரோதமானுல் அன்றோ' என்றது, 'நாம் அவனுலேயே பாதுகாக்கப்படும் பொருள்' என்ற சொரூபத்திற்கு மாறுபட்டால் அன்றோ என்றபடி.

3. சொரூபத்திற்கு மாறுபட்டது அன்று என்கைக்குக் கருத்து ஏது ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சொரூப பேதத்துக்கு' என்று தொடங்கி. என்றது, 'அவன் சேஷி, நாம் சேஷபூதர்' என்கிற சொரூப பேதத்திற்கு என்றபடி. 'காரியங்களுக்கு' என்றது, பிராவண்யத்தின் காரியமான கைங்கர்யங்களுக்கு என்றபடி.

4. இவளுக்கு இப்படிக் கருத்தானாலும், பொருளின் தன்மையாலே சாதனத்தில் சேராதோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சேஷிக்கு' என்று தொடங்கி.

5. மேல் திருவாய்மொழியோடு இத்திருவாய்மொழிக்கு இயைபு யாது ? என்று சங்கித்து, அதற்கு இரண்டு வகையாக விடை அருளிச்செய்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி. முதல் விடை, பட்டர் நிர்வாஹம். இரண்டாவது விடை, பூர்வர்கள் நிர்வாஹம். 'வேறு ரசத்திலே' என்றது, மோஹத்திலே என்றபடி. அன்றிக்கே, அர்ச்சாவதார குணநுபவத்தில் என்னுதல்.

இருக்கையாலே, தமக்குப் பிறந்த பிராவண்யத்தின் மிகுதியை அருளிச்செய்கிறார். அன்றிக்கே, மேலே அநுபவித்த அநுபவம்தான் மானச அநுபவமாத்திரமாய், புறத்திலேயும் அநுபவிக்கவேணடும் என்ற அபேக்ஷை பிறந்து, அது பெறாமையால் வந்த கலக்கத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார் என்னலுமாம். [1]இப்பெண்பிள்ளையின் தன்மையை அறியச்செய்தேயும் தாய்மார் விழுக்காடு அறியாமையாலே திருத்தொலைவில்லி மங்கலத்திலே கொடுபுக, அவள் "**அரவிந்தலோசந**" என்பது "**தேவபிரான்**" என்பது: நீர்மையைச் சொல்லுவது, மேன்மையைச் சொல்லுவது, ஒப்பனை வாசி அறிந்தமை தோற்றச் சொல்லுவதாய் வாய்வெருவ, இவள் நிலை இருந்தபடியால் 'இவள் கிடைக்கமாட்டாளே அன்றோ' என்று தாய்மார் வெறுத்துத் தோழிபாடே வந்து, 'இவள்படி உனக்குத் தெரியாமை இல்லை; இவளை மீட்கலாம் விரகு சொல்லவேண்டும்' என்ன, தோழி, [2]"நீங்களே இவளுக்குப் பிராவண்யத்தை உண்டாக்கி இப்போதாக இவளை மீட்க ஆசைப்படுகிற இதனால் பிரயோஜனம் என்? முன்னரே விலக்கப்பெற்றிலீர்; இனி, இவள் பக்கல் நசை அறுங்கோள்; இவளைத் தடைசெய்யப் பாராமல் நீங்களும் துணையாக இருந்து இவள் உஜ்ஜீவிக்கும்படி பண்ணப் பாருங்கோள்' என்கிறாள். [3]தாய்மார் கேட்கத் தோழி அன்றோ சொல்லுகிறாள்: [4]பகவத் விஷயத்துக்குப் "**பழையார், புதியார்**" என்று இலர்; தேசிகர் சொல்ல ஆதரமுடையார் கேட்குமித்தனை.

---

1. சோதிடர்கள் கூறிய பின்பு இவர்கள் செய்தது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இப்பெண் பிள்ளையின்' என்று தொடங்கி. "அரவிந்தலோசந" என்றதனால் நீர்மையையும், "தேவதேவ பிரான்" என்றதனால் மேன்மையையும், "இழைகொள் சோதி" என்றதனால் ஒப்பனையையும் கொள்க. "நாடொறும் வாய்வெரீஇ" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'வாய்வெருவ' என்கிறார்.

2. 'நீங்களே இவளுக்குப் பிராவண்யத்தை உண்டாக்கி' என்றது, "பிரான் இருந்தமை காட்டினீர்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. "இனி உமக்கு ஆசை இல்லை" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'முன்னரே விலக்கப் பெற்றிலீர்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. மேலே, இதில் சொரூபத்திற்குத் தகுதியானது ஓர் அர்த்தத்தை விளக்குவதற்காக அடி இடுகிறார் 'தாய்மார்' என்று தொடங்கும் வாக்கியத்தால்.

4. முதியோரான தாய்மார்கள், இளையளான தோழிபக்கலிலே பகவத் விஷயம் கேட்கலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பகவத் விஷயத்துக்கு' என்று தொடங்கி.

[1]“ ஆசசக்ஷேத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:” என்று இளையபெருமாள் படியை ஸ்ரீ பரதாழ்வானுக்கு ஸ்ரீ குகப்பெருமாளன்றோ சொல்லுகிறார். ஆசசக்ஷே - வாக்கு இந்திரியத்திற்கு நிலமல்லாததையும் சொல்லலாமாகாதே. அத - ஸ்ரீ பரதாழ்வான் தன்மை அறிந்தபின்பு. ஸத்பாவம்-[2]“இளமைப் பருவம் தொடங்கியே அதிக அன்புள்ளவராயிருந்தார்” என்றும், [3]“பரதந்திரனாக இருக்கிறேன்” என்றும் [4]சத்தையோடு கூடியதாயிருக்கின்ற தன்மையைச் சொன்னான். லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:-கடலைக் கையாலே இறைக்கத் தொடங்கினான். பரதாய அப்ரமேயாய-‘இன்னார் இன்னார்க்கு உபதேசிக்க’என்று இல்லை ஆகாதே. குஹோ கஹந கோசர: - காட்டில் மரங்களின் வாசி அறியுமவர் இவர்கள்நிலை அறியும்படி நிலவரானார். அன்றிக்கே, இராம விரஹத்தாலே ஒரு தூற்றடியிலே கிடந்தவன், தேசிகரைப் பெற்றவாறே தலையெடுத்துப் புறப்பட்டான் என்னலுமாம்.

## 597.

**துவளில் மாமணி மாட** மோங்கு [5]தொலைவில்லி மங்க லம்தொழும்
இவளை **நீர்இனி அன்னை மீர்!** உமக் காசை இல்லை விடுமினோ
**தவள ஒண்சங்கு சக்கர மென்றும்** தாமரைத் தடங்கண் என்றும்
**குவளை ஒண்மலர்க் கண்கள் நீர்மல்க** நின்று நின்று குமுறுமே.

---

1. இந்த அர்த்தத்துக்கு அநுஷ்டானம் காட்டுகிறார் “ஆசசக்ஷே” என்று தொடங்கி.

“ஆசசக்ஷேத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:
பரதாய அப்ரமேயாய குஹோ கஹந கோசர:”

என்பது, ஸ்ரீராமா. அயோத். 86 : 1. சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் ‘வாக்கு இந்திரியத்திற்கு’ என்று தொடங்கி. “மஹாத்மந:” என்கையாலே, நிலமல்லாமை தோற்றுகிறது. ‘சொல்லலாமாகாதே’ என்றது, சிறிது சொன்னான் என்றபடி.

2. “பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்தந:
ராமஸ்ய லோகராமஸ்ய ப்ராதுர் ஜ்யேஷ்ட நித்யஸ:”

என்பது, ஸ்ரீராமா. பால. 18 : 27.

3. “பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஸதம் ஸ்திதே”

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 7.

4. ‘சத்தையோடு கூடியதாயிருக்கின்ற தன்மையை’ என்றது, பெருமாள் பக்கல் பிரேமத்தையும், பாரதந்திரியத்தையும் குறித்தபடி.

5. “துலைவில்லிமங்கலம்” என்ற பாடமும் உண்டு. துலைவில்லி - ஒப்பு இல்லாதது ; துலைவு - ஒப்பு. “தோல்வி, துலைவில்லார் கண்ணும் கொளல்” என்பது, திருக்குறள்.

**பொ - ரை :**—குற்றம் இல்லாத பெரிய மாணிக்கங்கள் பதித்த மாடங்கள் உயர்ந்து விளங்குகின்ற திருத்தொலைவில்லிமங்கலம் என்னும் திவ்வியதேசத்தைத் தொழுகின்ற இவளிடத்தில், அன்னைமீர்! உங்களுக்கு இனி ஆசைவேண்டாம்; நீங்கள் ஆசையை விடுங்கோள்; வெண்ணிறத்தையுடைய பிரகாசம் பொருந்திய சங்கு என்றும் சக்கரம் என்றும் தாமரைபோன்ற விசாலமான திருக்கண்கள் என்றும் சொல்லிக்கொண்டு அழகிய குவளை மலர்போன்ற கண்களிலே தண்ணீர் தேங்கும்படி நின்று நின்று குழறுவாள்.

**வி - கு :**—அன்னைமீர்! தொழும் இவளை உமக்கு ஆசை இல்லை; இனி நீர் விடுமின்; என்றும் என்றும் கண்கள் நீர்மல்க நின்று நின்று குழறும் என்க. இவளை: வேற்றுமை மயக்கம். 'இவளை விடுமின்' என்று கூட்டி நேரே பொருள் கோடலுமாம்.

இத்திருவாய்மொழி, எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

**ஈடு :**—முதற்பாட்டு. [1]இவள் தன்மை அறியாதே திருத்தொலைவில்லிமங்கலத்தைக் காட்டினபின்பு உங்கள் நல்வார்த்தைக்கு இவள் மீளுவாளோ? என்கிறாள்.

துவள் இல் மா மணி மாடம் ஓங்கு தொலைவில்லிமங்கலம் தொழும் இவளை உமக்கு ஆசை இல்லை இனி நீர் விடுமின் - [2]'உனக்கு இப்போது உதவாதபடி தூரத்திலேயுள்ளவை' என்னுதல், 'சென்றகாலத்தில் அவதாரங்கள்' என்னுதல், உகந்தருளின நிலங்களிலே உள்ளே நிற்கிறவனளவிலே ஈடுபட்டவளாதல் செய்தாளாய் மீட்க நினைக்கிறீர்கோளோ? அசலிட்டுத் திருத்தொலை வில்லிமங்கலத்தை விரும்புகிற இவளை எங்ஙனே

---

1. "உமக்கு ஆசை இல்லை விடுமினோ" என்றதிலே நோக்காக, அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "தொலைவில்லிமங்கலம் தொழும் இவளை" என்று வைத்து, "உமக்கு ஆசை இல்லை" என்கிற தோழியினுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'உனக்கு இப்போது' என்று தொடங்கி. என்றது, பரமபதத்திலே ஈடுபட்டவளானாளாகில் 'உனக்கு இப்போது உதவாது தூரத்திலே உள்ளது' என்று மீட்கலாம்; அவதாரத்திலே ஈடுபட்டவளானாளாகில் 'இறந்த காலத்திலே உள்ளது' என்று மீட்கலாம்; திருத்தொலை வில்லிமங்கலத்திலே நிற்கிறவனிடத்திலே ஈடுபட்டவளானாளாகில் 'பிரத்தியக்ஷவிஷயம் அபரிச்சின்னம்' என்று மீட்கலாம்; இவற்றை எல்லாம் வெளி நிலமாக்கித் திருத்தொலைவில்லிமங்கலத்திலே ஈடுபட்டவளான இவளை மீட்க விரகு உண்டோ? என்றபடி. அசல் இட்டு - தேவபிரானையும் புறம்பாக்கி,

மீட்கும்படி? [1] சரமாவதியிலே நிற்கிற இவளைப் பிரதமாவதியிலே நிற்பார் மீட்கவோ?[2] அவ்வூர்ச் சரக்கிலே குற்றமுண்டாகிலன்றோ இவளை மீட்கலாவது? குற்றமுண்டாகிக் கழிந்தது அன்று. ஜீவன் பரன் என்னும் இருவர்க்கும் பாபம்இல்லாமை முதலானவைகள் உண்டாயிருக்கச்செய்தே, ஜீவாத்மாவுக்குக் குற்றம் உண்டாகிப் பகவானுடைய திருவருளாலே அது கழியும்; பரமாத்மா குற்றங்கள் சேரத் தகுதிஅற்றவனாகவே இருப்பான்; அப்படியேயாயிற்று, [3]அவ்வூரில் மாடங்களில் இரத்தினங்களும். துவள் - குற்றம். இல் - அது இன்றிக்கே இருக்கை. மா மணி-ஒளியே அன்று; பெருவிலையனுமாயிருக்கும். ஓங்கு - அவ்வூரில் மாடங்களின் நிழலீடு திருநகரியளவும் வந்து காணும் இருப்பது. 'இடமணித்து' என்றுபோலே காணும் நாயகன் பிரிந்தது. மாளிகையின் நிழற்கீழே இட்டுவைத்துக் காணும் பிரிந்தது. [4]அவன் பிரிந்தபோது தொடங்கி அவ்வூரையும் அவ்வூரில் மாடங்களையும் அவற்றில் மாணிக்கங்களையும் பார்த்து, வைத்தகண் வாங்கமாட்டாதே இருந்தாள்போலே காணும். [5]துருப்புக் கூடுபோலே அவ்வூரை அன்றோ இவள் விரும்பி

---

1. "தொலைவில்லி மங்கலம் தொழும் இவளை நீர்" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'சரமாவதியிலே' என்று தொடங்கி. சரமாவதி-ததீயசேஷத்வம். பிரதமாவதி - ஈசுவரனுக்கு அடிமைப்பட்டிருத்தல்.

2. "குற்றம் இல்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவ்வூர்ச் சரக்கிலே' என்று தொடங்கி. "இல்" என்பது, அத்யந்தாபாவத்தை (என்றும் இன்மையை)ச் சொல்லுகிறது என்கிறார் 'குற்றமுண்டாகி' என்று தொடங்கி. அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஜீவன் பரன்' என்று தொடங்கி.

3. "ஓங்கு" என்றதன் கருத்தை அருளிச்செய்கிறார் 'அவ்வூரில்' என்று தொடங்கி. இதனால் பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார் 'இடமணித்து' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'மாளிகையின்' என்று தொடங்கி.

வருங்குன்ற மொன்றுரித் தோன்தில்லை அம்பல வன்மலையத்து
இருங்குன்ற வாணர் இளங்கொடியே! இடர் எய்தல்எம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்களப த்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுகம் ஏய்க்கும் கனங்குழையே!

என்பது, திருக்கோவையார். 15. செய்.

4. "தொழும்" என்ற நிகழ்காலத்துக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் பிரிந்தபோது' என்று தொடங்கி.

5. 'துருப்புக் கூடுபோலே' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, இன்னார் இனியார் என்னாதே, அவ்வூரில் எல்லாரையும் விரும்பினாள் என்பது. துருப்புக் கூடு - தூற்றுதபொலி. "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்பது, சுந்தரமூர்த்தி நாயனார் தேவா. திருத்தொண்டத் தொகை.

யது என்பாள் '**தொலைவில்லிமங்கலம் தொழும்**' என்கிறாள். 'கறுத்திருக்கும், வெளுத்திருக்கும்' என்னுமாறு போலே, தொழுகையே நிரூபகமாகவுடையவள் என்பாள் '**தொழுமிவளை**' என்கிறாள். [1] "கைகூப்பினவனும் வணங்கினவனும் உட்கார்ந்திருக்கிறவனுமானவனைப் பார்த்துச் சொன்னார்" என்னுமாறு போலே; "கணபுரம் கைதொழும் பிள்ளை" என்னுமாறு போலே. [2] இவளை மீட்கப் பார்ப்பதே, இவள்படியைப் புத்திபண்ணியன்றோ மீட்பது! இவள் படி கைமேலே காணா நிற்கச்செய்தே நீங்கள் மீட்கத் தேடுகிறபடி எங்ஙனே? பழி சொல்லப் பண்ணுகிறவள் இவள், பழியை நீக்குவதற்குப் பார்க்கிறீர்கோள் நீங்கள் என்பாள் '**இவளை நீர்**' என்கிறாள்.

தொழுகை தேகயாத்திரை யாதற்கு முன்னே யன்றோ மீட்கப் பார்க்கவேண்டும் என்பாள் '**இனி**' என்கிறாள். பகவத் விஷயத்தில் [3] மூழ்குதல் என்று ஒன்று இல்லையோ? நியமித்தல் நியமிக்கப்படுதல் என்ற தன்மையேயோ வேண்டுவது; பெற்றவர்கள் என்ன, பொருத்தமில்லாத காரியங்களில் இழியக்கடவதோ? என்பாள் '**அன்னைமீர்!**' என்கிறாள். தக்க பருவத்தினையுடையவர்களானார்பக்கல் பெற்றவர்களுக்குச் சம்பந்தம் உண்டோ? புக்க இடத்தே ஈடுபட்டவர்களாகாநிற்க, பெற்ற சம்பந்தம் கொண்டு மீட்கவோ? என்பாள் '**உமக்கு ஆசை இல்லை**' என்கிறாள். விடுமினோ - இவ்வளவில் நீங்கள் கைவாங்க

---

1. "தொழுமிவளை" என்றதற்குக் கூறிய விசேட உரைக்குப் பிரமாணங்கள் இரண்டு காட்டுகிறார் 'கைகூப்பினவனும்' என்று தொடங்கியும், 'கணபுரம்' என்று தொடங்கியும்.

"இதி ஏவம் உக்தஃ மாத்ரா இதம் ராமோ ப்ராதரம் அப்ரவீத்
ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம் அபிவீக்ஷ்ய ஸ்மயந்நிவ"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 4 : 42.

"கணபுரம்" என்பது, பெரிய திருமொழி. 8. 2: 9.

2. "தொழுமிவளை ஆசை இல்லை" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவளை' என்று தொடங்கி. இவள்படி - இவள் சரீரமும், இவள் விதமும். கைமேலே - பிரத்யக்ஷமாக என்பது நேர்பொருள். கையிலே என்பது வேறும் ஒரு பொருள்.

3. 'மூழ்குதல் என்று ஒன்று இல்லையோ' என்றது, மூழ்கினவர்களை மீட்கப்போகாது என்கிறது ஒன்று இல்லையோ? என்றபடி. ஆயினும், பெற்றவர்களான எங்களுடைய வார்த்தைகளைக் கேட்கவேண்டாவோ? என்ன, 'பெற்றவர்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

அமையும். [1]பெற்ற தாய்மார் '**விடுமின்**' என்ற அளவிலே விடார்களே அன்றோ; பின்னையும் நிர்ப்பந்திக்க, வேண்டா, இவளுக்கு ஓடுகிற ரசத்தைக் கண்டு கொடு நிற்கப்பாருங்கோள் என்கிறாள். என்றது, இவளுடைய அநுபவத்திற்குத் தண்ணீர்த் துரும்பு ஆகாதே இதனைக் கண்டு கொடு நிற்க அமையும் என்கிறாள் என்றபடி. [2] எங்களை 'ஆசைப்படவேண்டா, விடுங்கோள்' என்கிறது என்? என்னில், இவள் பேச்சிலும் நினைவிலும் நீங்களாதல் நானுதல் உண்டோ? "புத்திரர்களையும் மனைவியையும் துறந்து" என்னும் நிலையன்றோ இவளது!

தவளம் ஒண் சங்கு - கரியநிறமுடைய திருமேனிக்குப் பரபாகமான வெண்மையையுடைத்தாய், [3]"உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்" என்கிற அழகையுடைத்தான சங்கு. சக்கரம் - அங்ஙனம் ஒரு விசேடணம் இட்டுச் சொல்ல வேண்டாத அழகையுடைய சக்கரம். என்றும் - 'இவற்றைக் காணவேணும்' என்னுதல்; 'இவற்றோடே வரவேணும்' என்னுதல் சொல்லமாட்டுகின்றிலள் பலக்குறைவாலே. தாமரைத் தடம் கண் என்றும்-அந்த ஆழ்வார்கள் அளவும் வந்து அலை எறிகிற திருக்கண்கள். தாமரையை ஒருவகைக்கு ஒப்பாகச் சொல்லலாய், அநுபவிக்கின்றவர்கள் அளவன்றிக்கே இருக்கின்ற திருக்கண்கள் ஆதலின் '**தடம்கண்**' என்கிறாள். [4] ஒரு மலை எடுத்தாற் போலே, சொல்லுக்குச் சொல்லு தளர்ந்து நடு நடுவே விட்டு விட்டுச் சொல்லுகிறாள் என்பாள் '**என்றும் என்றும்**' என்கிறாள். [5]திவ்வியாயுதங்களையும் கண்ணழகையும் காட்டியாயிற்று இவளைத் தோற்பித்தது. குவளை

---

1. மேலே வருகின்ற "குவளை ஒண்மலர்க் கண்கள் நீர் மல்க நின்று நின்று குமுறுமே" என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார் 'பெற்றதாய்மார்' என்று தொடங்கி.

2. அதற்கே, வேறும் ஓர் அவதாரிகை அருளிச்செய்கிறார் 'எங்களை' என்று தொடங்கி.

"த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கதঃ"

என்பது, ஸ்ரீராமா. யுத். 17: 14. என்னும் நிலையினர் - ஸ்ரீ விபீஷணாழ்வான்.

3. "உண்பது" என்பது, நாய்ச்சியார் திருமொழி.

4. திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் நாலாம்பத்து, 2 : 9. உரை பார்க்கவும்.

5. திவ்விய ஆயுதங்களையும் திருக்கண்களையும் வர்ணிப்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'திவ்வியாயுதங்களையும்' என்று தொடங்கி.

ஒண்மலர்க் கண்கள் நீர்மல்க - [1] இந்தக் கண்களைக் கண்டால் தாமரைத் தடங்கண்கள் அன்றோ நீர்மல்க அடுப்பது? [2]கண்ணும் கண்ணீருமாய் இவள் இருக்கிற இருப்பைக் கண்டு கொண்டு இருக்க அன்றோ உங்களுக்கு அடுப்பது? [3]"பகவத் அநுபவத்தால் உண்டான சந்தோஷத்தாலே குளிர்ந்த கண்ணீரையுடையவனாய், மயிர்க்கூச்சு எறிகின்ற சரீரத்தையுடையவனாய், பரமாத்மாவின் குணங்களால் எப்போதும் ஆவேசமடைந்தவனாய், மக்களால் பார்க்கத் தகுந்தவனாய் இருப்பான் ஞானி" என்பது விஷ்ணுதத்வம். இதனால், எப்பொழுதும் தரிசனம் செய்துகொண்டு இருப்பதற்கு ஒரு தேசம் தேடிப் போகவேண்டாகாணும் என்பதனைத் தெரிவித்தபடி. குவளைப் பூப்போலே அழகிய கண்கள் நீர்மல்க. [4]அவள் தன்னுடைய பெண் தன்மையைக் காற்கடைக் கொள்ள, நீங்கள் எங்ஙனே மீட்கப் பார்க்கும்படி? கண்ணநீர் பாய்கையாவது, பெண் தன்மை அழிதலே அன்றோ. நின்று நின்று குமுறும் - [5]பேச்சுப் போய்க் கண்ணநீராய், கண்ணநீர்போய்த் தடுமாறுகிற நிலையிலே மீட்கப்போமோ?

[6] இராஜகோஷ்டியிலே "உ-ும், இறும்" என்று சிலர் பொருள் சொல்ல, **விக்கிரமசிங்கன்** என்பான் ஒருவன், 'அங்

1. "குவளை ஒண்மலர்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இந்தக் கண்களை' என்று தொடங்கி.

2. மேலே அருளிச்செய்த அவதாரிகை இரண்டனுள் முதல் அவதாரிகைக்குச் சேர, பாவம் அருளிச்செய்கிறார் 'கண்ணும் கண்ணீருமாய்' என்று தொடங்கி.

3. தலைவி நிற்கிற நிலை கவர்ச்சிகரமாக இருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பகவத் அநுபவத்தால்' என்று தொடங்கி.

> "ஆஹ்லாத சீத நேத்ராம்புः புளகீக்ருத காத்ரவான்
> ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யः ஸர்வதேஹிபிः"

என்பது, ஸ்ரீ விஷ்ணு தத்வம். இந்தச் சுலோகத்திற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எப்பொழுதும்' என்று தொடங்கி.

4. இரண்டாம் அவதாரிகைக்குச் சேர, பாவம் அருளிச்செய்கிறார் 'அவள் தன்னுடைய' என்று தொடங்கி. காற்கடைக் கொண்டபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்ணநீர்' என்று தொடங்கி.

5. "நின்று நின்று' என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பேச்சுப் போய்' என்று தொடங்கி.

6. தடுமாறுகிற நிலைக்குச் சம்வாதம் காட்டுகிறார் 'இராஜ கோஷ்டியிலே' என்று தொடங்கி.

ஙன் அன்று, கன்றைக் கடக்கக் கட்டிவைத்தால் மூலைக்கண் கடுத்துப் பசு அலமந்து படுமாறுபோலே, உள்ளோடுகிற கிலேசம் வாய்விடமாட்டாதே நோவுபடுகிற இவளுக்கு இது வார்த்தையோ?'' என்ருன்.[1] பெருவெள்ளத்தில் சுழிக்குமாறுபோலே, அகவாயில் உள்ளது வெளியிடமாட்டாள்; உள்ளே நின்று சுழிக்கிறபடி.

'தொலை வில்லிமங்கலம் தொழும்' என்கையாலே, சரீரத்தின் செயல் சொல்லிற்று; 'தவள ஒண்சங்கு சக்கரம் என்றும், தாமரைத் தடங்கண் என்றும்' என்று சொல்லுகையாலே, வாக்கின் செயல் சொல்லிற்று; 'குமுறும்' என்கையாலே, மனத்தின் செயல் சொல்லிற்று. (1)

598.

குமுறு மோசை விழவொ லித்தொலை வில்லி மங்கலம் கொண்டுபுக்கு
அமுத மென்மொழி யாளை நீர்உமக் காசை யின்றி அகற்றினீர்
திமிர்கொண் டாலொத்து நிற்கும் மற்றிவள் தேவ தேவபி ரான்என்றே
நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க நெக்கொ சிந்து கரையுமே.

**பொ-ரை:**—ஒலிக்கின்ற ஓசையையுடைய திருவிழாவின் ஒலி பொருந்திய திருத்தொலைவில்லிமங்கலம்என்னும் திவ்வியதேசத்திற்குக் கொண்டு சென்று அமுதம்போன்ற இனிய மெல்லிய சொற்களையுடைய இவளை உங்களுக்கு ஆசையில்லாமல் அகலும்படி நீங்கள் செய்தீர்கோள்; இவள், திமிர்கொண்டாற் போன்று நிற்கிருள்; தேவ தேவபிரான் என்றே நெளிகின்ற வாயோடு கண்களில் நீர்பெருகி நிற்கும்படியாகக் கட்டுக் குலைந்து தளர்ந்து கரையாநிற்கின்ருள்.

**வி-கு:**—ஓசைவேறு, ஒலிவேறு; "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" என்பது தேவாரம். கொண்டுபுக்கு அகற்றினீர் என்க. நிமிதல்-நெளிதல்.

**ஈடு:**—இரண்டாம்பாட்டு. [2]அவ்வூரில் கொடுபுக வேண்டினல், திருநாளிலே கொடுபுகுவார் உளரோ? என்கிருள்.

---

1. குமுறுகையாவது யாது? என்ன, அதனை விளக்குகிருர் 'பெருவெள்ளத்திலே' என்று தொடங்கி. குமுறும்-உள்ளே நின்று சுழியாநிற்கும்.

2. "குமுறும் ஓசை விழவொலி" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

குழுறும் ஓசை விழவு ஒலித் தொலை வில்லிமங்கலம் கொண்டு புக்கு - [1]"பின்பு அந்தப் பிராமணர்களுடைய கம்பீரமாயும் மதுரமாயுமிருக்கிற சப்தத்தையுடையதும் தூரியம் என்னும் வாத்தியத்தின் ஒலியோடு கூடியதுமான புண்யாகவாசன சப்தமானது அயோத்தியாநகரம் முழுவதும் பரந்தது" என்கிற படியே, ஓத்துச்சொல்லுவார், சங்கீர்த்தனம் பண்ணுவார், பாடுவார், இயல் விண்ணப்பம் செய்வாராய், எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக்கொண்டு எழுகின்ற ஒலியையுடைய திருநாளில் ஆரவாரம். [2]பாவியேன்! இந்த ஒலி செவிப்பட்டால் கொண்டு மீள அன்றோ அடுப்பது! '**இவ்விடம் பிள்ளை கொல்லி**' என்று கூப்பிடுமாறு போலே காணும் ஒலி இருக்கிறது. [3]அவ் வூரும் திருநாளும் அங்குள்ளார் படுகிறதும் கண்டுவைத்து இவளைக் கொண்டு புகுவார் உளரோ? கொண்டு புக்கு - இவள் அறியாதிருக்க நீங்களே கொண்டு புக்கு. அமுத மென்மொழியாளை-[4] இவள்மொழி, கேட்டார்க்குஅழியாத தன்மையைக் கொடுக்குமே! இந்த இனிய பேச்சைக் கேளாதபடி

---

1. குழுறும் ஓசை உண்டாகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பின்பு' என்று தொடங்கி.

"தேஷாம் புண்யாஹ கோஷோத கம்பீர மதுரஸ்வநः
அயோத்யாம் பூரயாமாஸ தூர்யநாதாநுநாதிதः"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 6: 8.

"குழுறும்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'எழுத்தும்' என்று தொடங்கி.

2. "கொண்டுபுக்கு" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பாவியேன்' என்று தொடங்கி. "குழுறும் ஒலி" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இவ்விடம்' என்று தொடங்கி.

3. "குழுறும் ஓசை விழவொலித் தொலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு" என்னுமளவும் பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார் 'அவ்வூரும்' என்று தொடங்கி.

4. அமுதத்துக்கு, அழியாத தன்மையைக் கொடுத்தல், இனிமையாக விருத்தல் என்னும் இரண்டு தன்மையும் உளவாதலின், அவ்விரண்டினையும் திருவுளத்தே கொண்டு "அமுதமென்மொழியாள்" என்பதற்கு இரண்டு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார் 'இவள்மொழி' என்று தொடங்கி. திருவாய்மொழியினைக் கேட்டார்க்கு மீண்டு வருதல் இல்லாத உலகம் உண்டாம் என்பது மேல் வாக்கியத்திற்குச் சுவாபதேசம்.

புண்ணியம் இல்லாதவர்கள் ஆவதே நீங்கள். [1]அதாவது, அவ் வூரில் புக்க பின்பு இவர்களுடன் வார்த்தை சொல்லத் தவிர்ந் தாளாயிற்று என்றபடி. [2]"அழகானவளும் இனிய வார்த்தை பேசுகின்றவளும்" என்னும்படி காணும் இருப்பது. [3]இது கேட்க ஆசைப்பட்டிருக்குமவன் பெற்றுப் போனன். அமு தத்தினின்றும் வேறுபாடு தோற்ற 'மென்மொழி' என்கிருள். கேட்பதற்குத் தக்கதாய் இராதே அமுதம்: வேணுமாகில் இனி மைக்கு ஒரு சொல்லுக்கு நிற்கிறது, மிருதுத்தன்மை இதற்கே உளதாயித்தனை.

நீர் உமக்கு ஆசை இன்றி அகற்றினீர்-இவள் பேச்சினைக் கேட்டுப் போகிற நீங்களே உங்களுக்கு இவள் வழிபடாதபடி செய்தீர்கோள். திமிர்கொண்டால் ஒத்துநிற்கும்-[4]"செயல் அற் றவன் ஆகிருய்" என்னுமாறுபோலே, அநுபவிக்கக்கூடிய விஷயத்தை அநுபவிக்கவும் மாட்டாதே செயல் அற்றவளாய் நில்லாநின்ருள். அன்றிக்கே, "செயல்அற்றவன் ஆகிருய்" என்கிறபடியே, பரிபூர்ணஞானிகளைப் போலே இராநின்ருள் என்னலுமாம். மற்று இவள் - இவள் இதற்குமேலே வார்த்தை

---

1. 'அதாவது, அவ்வூரில்' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, தொலைவில்லிமங்கலத்தில் கொடு புகுகையாலே அங்கே ஈடுபட்டவ ளாய் இவர்களோடே வார்த்தை சொல்லுதல் தவிர்ந்தாள்; ஆகையாலே, இவள் பேச்சைக் கேட்டுக்கொண்டிராமல், அங்கே கொடுபுக்கு இவள் பேச்சை இழந்தீர்கோள் என்றபடி.

2. அவள் வார்த்தை இனிமையாக இருப்பதற்குப் பிரமாணம் காட்டு கிருர் 'அழகானவளும்' என்று தொடங்கி.

"மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ
மத்விஹீநா வராரோஹா ஹநுமந் கதயஸ்வ மே"

என்பது, ஸ்ரீராமா. சுந். 66: 15.

3. "நீர் உமக்கு ஆசை இன்றி" என்கையாலே, இதற்கு, எதிர்மறை யாக, பாவம் அருளிச்செய்கிருர் 'இது கேட்க' என்று தொடங்கி. வேறுபாடு எதனுலே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'கேட்பதற்கு' என்று தொடங்கி.

4. "திமிர்கொண்டால் ஒத்து நிற்கும்" என்பதற்கு, இரண்டு வகையா கக் கருத்து அருளிச்செய்கிருர். ஒன்று, அநுபவத்தின் மிகுதியால் செயல் அற்றவளாய் நிற்கிருள் என்பது. இதனையே அருளிச்செய்கிருர் 'செயல் அற்றவனுகிருய்' என்று தொடங்கி. மற்றொன்று, பரிபூர்ண ஞானத்தாலே செயல் அற்றவளாய் நிற்கிருள் என்பது. இதனையே அருளிச்செய்கிருர் 'அன் றிக்கே' என்று தொடங்கி.

சொல்லில். தேவதேவபிரான் என்றே - [1]இங்கே கண்டாலும் அயர்வறும் அமரர்கள் அதிபதி இங்கே வந்து சுலபனுனன் என்றாயிற்று இவள் புத்திபண்ணுவது. [2]நாயகனுடைய மேன்மைக்குத் தோற்று வார்த்தை சொல்லுகிற இவளை மீட்கப் போமோ? என்றே நிமியும் - 'அப் பெரியவன் இப்படிச் சுலபனுய்ச் சீலவானுவதே!' என்று, அந்தச் சீலகுணத்தைச் சொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே உதடு நெளிக்கும். நிமியும் வாயொடு கண்கள் நீர் மல்க - உதடு நெளிக்கிற வாயோடே கண்கள் நீர் மல்க. நெக்கு-கட்டுக்குலைந்தவளுமாய். ஒசிந்து-பரவசப்பட்டவளாய். கரையும் - நீராகாநின்ருள். நெக்கு ஒசிந்து கரையும்-[3]பெருவெள்ளத்தில் கரையானது நெகிழ்ந்து ஒட்டுவிட்டு ஒசிந்து பொசிந்து அவயவி ஆகாதபடி கரைந்து போமாறுபோலே, ஓர் அவயவியாக்கிக் காண ஒண்ணுதபடி கரைந்து போகாநின்ருள். (2)

599.

கரைகோள் பைம்பொழில் தண்பணைத்தொலை வில்லி மங்கலம் [கொண்டுபுக்கு
உரைகொள் இன்மொழி யாளை நீர்உமக் காசை யின்றி அகற்றினீர்
திரைகொள் பௌவத்துச் சேர்ந்த தும்திசை ஞாலம் தாவி அளந்ததும்
நிரைகள் மேய்த்ததுமேபி தற்றி நெடுங்கண் நீர்மல்க நிற்குமே.

**பொ - ரை :**—தாமிரபாணி ஆற்றின்கரையைத் தன்னகப்படுத்திக் கொண்டிருக்கிற பசுமைநிறம்பொருந்திய சோலைகளாற் சூழப்பட்ட குளிர்ந்த மருத நிலங்களையுடைய திருத்தொலைவில்லிமங்கலம் என்னும் திவ்விய தேசத்திலே கொண்டுபுக்கு, உலகத்தாரால் கொண்டாடப்படுகின்ற இனிய சொற்களையுடைய இவளை நீங்கள் உங்களுக்கு ஆசையில்லாமல் அகற்றிவிட்டீர்கள் ; அலைகளையுடைய திருப்பாற்கடலிலே சயனித்திருப்பதையும் திசைகளோடுகூடிய உலகத்தை எல்லாம் தாவி அளந்ததையும் பசுக்களை மேய்த்ததையும் ஆகிய இவைகளையேபிதற்றிக் கொண்டு பெரிய கண்களிலே நீர்பெருக்கு எடுக்கும்படி நிற்கின்ருள்.

---

1. நம்முடைய புத்திக்கு அதீனப்பட்டவனுய் இருக்கிற இவனைத் "தேவதேவபிரான்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இங்கே கண்டாலும்' என்று தொடங்கி.

2. "தேவதேவ பிரான்" என்கிறவளுடைய மனேபாவத்தை அருளிச்செய்கிருர் 'நாயகனுடைய' என்று தொடங்கி.

3. "நெக்கு,ஒசிந்து, கரையும்" என்ற மூன்றனையும் திருஷ்டாந்தத்திலே காட்டுகிருர் 'பெரு வெள்ளத்தில்' என்று தொடங்கி.

வி - கு :—கொண்டுபுக்கு அகற்றினீர் என்க. பௌவம் - கடல். பிதற்றி நிற்கும் - பிதற்றிக்கொண்டு நிற்கின்றாள்.

ஈடு :—மூன்றாம்பாட்டு.[1] திருநாளிலேதான் கொண்டுபோக வேண்டினால், திருச்சோலை உள்ளிட்டுக் கொடுபுகுவார் உளரோ? என்கிறாள்.

கரைகொள் பைம்பொழில் தண்பணைத் தொலைவில்லி மங்கலம் கொண்டு புக்கு - திருப்பொருநல்கரையைப் பொழில் விழுங்கி இருக்கை. [2] கரையைப் பொழில் கொண்டாற்போலே, இவளைக் குணம் கொண்டபடி. அன்றிக்கே, [3] அந்தத்திருச்சோலையை உங்களுடைய நல்வார்த்தைகளால் பேர்த்துக் கொடு போம்அன்றன்றோ இவள்நிலையை உங்களால் பேர்க்கலாவது! என்னுதல். பரந்த பொழிலையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைய திருத்தொலைவில்லி மங்கலத்திலே கொடுபுக்கு. உரைகொள் இன்மொழியாளை-[4] "படிப்பதிலும் இசையுடன் பாடுவதிலும் இனிமையோடு கூடியதும்" என்னும் ஸ்ரீ ராமாயணம் குத்துண்ணும்படியான பேச்சு என்னுதல்; அன்றிக்கே, பொருளில் இழியவேண்டாமல் 'உரையே அமையும்' என்னும்படியான பேச்சு என்னுதல்; அன்றிக்கே, 'இது ஓர் உரையே! பேச்சே!' என்று உலகத்தார் கொண்டாடும்படியான பேச்சு என்னுதல்; அன்றிக்கே, மாற்றும் உரையும் அற்ற பேச்சு என்னுதல்; அன்றிக்கே, உரை - அடைவு சொல் என்னுதல். நீர் உமக்கு ஆசை இன்றி அகற்றினீர் - அந்தப் பேச்சில் வாசி அறிந்து அநுபவிக்கமாட்டாமல், நீங்களே ஆசையின்றி அகற்றி

---

1. "கரைகொள் பைம்பொழில் தண்பணை" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "கரைகொள்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'கரையைப் பொழில்' என்று தொடங்கி. 'குணம் கொண்ட படி' என்றது, "நிரைகள் மேய்த்ததுமே பிதற்றி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

3. "பொழில்" என்கிற பதத்திலே நோக்காக, வேறும் ஒரு மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அந்தத் திருச்சோலையை' என்று தொடங்கி.

4. "உரைகொள்" என்பதற்கு, ஐந்து வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். உரை என்பதற்கு, ஸ்ரீமத் இராமாயணம் என்பது முதற்பொருள். இதனையே அருளிச்செய்கிறார் 'படிப்பதிலும்' என்று தொடங்கி.

"பாட்யே கேயே ச மதுரம் பிரமாணை: த்ரிபி: அந்விதம்"
என்பது, ஸ்ரீராமா. பால. 4; 8.

னீர்கோள். [1]அவ்வூரிலே கொடுபுகுகையும், இவள்பக்கல் நசை அறுகை என்பதும் பரியாயம். ஆயிட்டு, 'இவள் வேண்டா' என்று அன்றோ கொடுபுக்கது என்கிறாள்.

திரைகொள் பௌவத்துச் சேர்ந்ததும்-தன் சந்நிதானத்தாலே கிளராநின்றுள்ள திரைகளையுடைத்தான திருப்பாற் கடலிலே பிரமன் முதலாயினருடைய கூக்குரல் கேட்கும்படியாகக் கண்வளர்ந்தருளினதுவும்; [2]இவர்கள் துன்பம் கேட்ட பின்பு இந்திரன் முதலானோர்கட்குக் குடியிருப்புப் பண்ணிக் கொடுக்க அடியிட்டபடியும். திசை ஞாலம் தாவி அளந்ததும்-திக்குக்களோடே கூடின பூமியை இரப்பாளனாயிருந்து வருத்தமின்றி வளர்ந்து அளந்தபடியும். திசைஞாலம் தாவி அளந்ததும் - [3]'இந்திரன் முதலானோர்களை ரக்ஷிக்கவேணும்' என்ற ஆசையோடே காணும் பூமியை அளந்தது. ஆசை - திக்கு. 'இவன் திருவடிகளாலே நம்மைத் தீண்டவேணும்' என்று ஆசைப்பட்டுக் காணும் கிடக்கிறது பூமி. படுகை - உடைத்தாகை. பூமியினுடைய ஆசையாவது, திக்குப்பட்டு அன்றோ இருப்பது. நிரைகள் மேய்த்ததும்-அவ்வளவன்றிக்கே, அறிவு கேட்டுக்குத் தலையான பசுக்களோடே சேர்ந்து வாழ்ந்தபடியும். பிதற்றி - இவற்றையே அடைவுகெடக் கூப்பிட்டு. நெடும் கண் நீர்மல்க - இக்கண்ணில் பரப்பு அடங்கலும் பரப்பு மாறத் தண்ணீர் உண்டாவதே! நிற்குமே-பிதற்றவும் சக்தியில்லாமல், கண்ணீர் மல்குகை '**தன்னுடைய குண நிலை**' என்னும்படி செயலற்று நில்லாநின்றாள். (3)

---

1. நாங்கள் அகற்றினோமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவ்வூரிலே' என்று தொடங்கி. ஆயிட்டு - ஆனபின்னர்.

2. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இவர்கள் துன்பம்' என்று தொடங்கி.

3. "திசை ஞாலம் தாவி அளந்ததும்" என்றதற்கு, ரசோக்தியாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'இந்திரன் முதலானோர்களை' என்று தொடங்கியும், 'இவன் திருவடிகளாலே' என்று தொடங்கியும். "ஆசை" என்பதற்கு, திசை என்பதும் ஒருபொருள். ஆசை என்றால், விருப்பத்தையும் காட்டும், திசையையும் காட்டும். திக்குப்பட்டு - அடைவுபட்டு.

> ஓலையை யவட்கு நீட்டி ஒண்மணிக் குழையு முத்தும்
> மாலையும் படுசொல் ஒற்றி வம்மென மறைய நல்கி
> வேலைநெய் பெய்த திங்கள் விரவிய பேயரி றூந்து
> மேலைநாட் பட்ட தொன்று விளம்புவல் கேளி தென்றாள்.

என்ற சிந்தாமணிச் செய்யுளையும், 'திங்கள் - மதி: மதி எனவே புத்திசேனனும்; "தீத்தீண்டு கையார்" என்றது வேங்கையை உணர்த்தினாற்போல' என்ற அதனுரையையும் ஈண்டு நோக்கற்பாலன.

600.

**நிற்கும்** நான்மறை வாணர் வாழ்தொலை வில்லி மங்கலம் கண்டபின்
**அற்க மொன்றும்** அறவு ருள்மலிந் தாள்கண் டீர் இவள் அன்னைமீர்!
கற்கும் கல்வி யெல்லாம் கருங்கடல் வண்ணன் கண்ணபி ரான்என்றே
**ஒற்கம் ஒன்றும் இலள்உ கந்து கந்து**உண் மகிழ்ந்து குழையுமே

**பொ - ரை :**—நித்தியமான நான்கு வேதங்களிலும் வல்லவர்களான அந்தணர்கள் வாழ்கின்ற திருத்தொலைவில்லிமங்கலம் என்னும் திவ்வியதேசத்தைப் பார்த்த பின்னர் இவள் அடக்கம் என்னுமது ஒன்றனை அடியோடு விட்டாள்; நம்மை மீறினாள்; தாய்மார்களே! கற்கப்படுகின்ற கல்வி முழுதும் கரிய கடல்போன்ற நிறத்தையுடையவனை கண்ணபிரான் என்று சொல்லிக்கொண்டே தளர்ச்சி சிறிதும் இல்லாதவளாயிருக்கின்றாள்; மகிழ்ந்து மகிழ்ந்து மனம் களித்துக் குழையாநின்றாள்.

**வி - கு :**—அன்னைமீர்! இவள் தொலைவில்லி மங்கலம் கண்டபின் அறவுருள் மலிந்தாள் என்க. அற்கம் - அடக்கம். ஒற்கம் - தளர்ச்சி.

**ஈடு :**—நான்காம்பாட்டு. [1] அந்த ஊரினையும் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களையும் யாதொருநாள் கண்டாள், அன்று தொடங்கித் தடைநிற்கை தவிர்ந்தாள் என்கிறாள்.

நிற்கும் நான்மறை-நித்தியமான நான்கு வேதங்கள். [2]நித்தியத்வமாவது, பூர்வ பூர்வ உச்சாரண கிரமத்தைப் பற்ற உத்தர உத்தர உச்சார்யமாணத்வம். ஆகையாலே, நித்தியமான வேதம். புருஷனாலே செய்யப்படாதது ஆகையாலே குற்றமற்றதாயிருக்குமன்றே. வாணர் - வியாசபதம் செலுத்தவல்லராயிருப்பவர்கள். வாழ் - வேதப் பொருளாய் விளங்குமவனைக் கண்ணாலே கண்டு வாழாநிற்பர்கள். வாழ் தொலைவில்லி மங்கலம்-வேததாத்பரியனானவனைக்கண்டு நித்தியாநுபவம் பண்ணு

---

1. முதல் இரண்டு அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஒலி மூன்றுகணநேரமே நிற்கக் கூடியதாக இருக்க, நித்தியமாக இருத்தல் கூடுமோ? என்ன, ஆநுபூர்வீநித்யத்வமே நித்தியத்வம் என்கிறார் 'நித்தியத்வமாவது' என்று தொடங்கி. ஆநுபூர்வீநித்யத்வமாவது, ஆசிரியன் முன்னே உச்சரிக்க, அதனைக் கேட்டுப் பின்னே ஓதுகின்றவர்கள் உச்சரிக்கிற முறை தப்பாமல் வருதல். நித்தியத்வத்தால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'புருஷனாலே' என்று தொடங்கி.

கிறவர். [1]"வேதத்தை அத்யயனம் செய்வதனுல் அவ்வேதத்தில் சொல்லப்படுகின்ற பரமாத்மாவின் தியானத்தைச் செய்யக்கடவன்" என்னுமளவன்றியே, "அந்த யோகத்தினுல் தன்னுல் அத்யயனம் செய்யப்படாத வேதபாகங்களின் பொருள்களைக் கண்டு மனனம் செய்யவேண்டும்" என்று ஆரூட யோகராயிருக்குமவர்கள். கண்டபின்-[2]அவ்வூரில் வைஷ்ணவர்களும் அவனுமான சேர்த்தியைக் காட்டிக் கொடுத்துக் கெடுத்தீர்கோள். அற்கம் ஒன்றும்அற உறாள் - நம்சொல்வழி வந்திருக்கும் இருப்புத் தவிர்ந்தாள். அற்கம் - அல்குதல். அதாவது, அடக்கம். மலிந்தாள் - நம்மால் ஹிதம்சொல்லி மீட்க ஒண்ணுதபடி மிக்காள். என்றது, மீட்கைக்குத் தகுதியுமில்லாதபடி ஆனுள் என்றபடி. அன்றிக்கே, எனக்கும் தெரியாதபடி இவள் பகவானிடத்தில் ஈடுபட்டிருத்தலில் விஞ்சினுள் கண்டீர் என்னுதல்.

அன்னைமீர்-[3]மீட்கத் தேடுகிற உங்களோடு இவள் கருத்து அறிந்தேனுகச் சொல்லுகிற என்னேடு வாசிஇல்லை தெரியாமைக்கு. நித்தியசூரிகள் யாத்திரை சம்சாரிகளுக்குத் தெரியிலன்றே நமக்கு இவள் அளவு தெரிவது. கற்கும் கல்வி எல்லாம் கரும் கடல்வண்ணன் கண்ணபிரான் என்றே - சொல்லும் சொல்லெல்லாம் திருநாமமேயாய், அவற்றிலும் வடிவழகிற்கும் அடியார்கட்குப் பரதந்திரப்பட்டிருத்தற்கும் வாசகங்களான திருநாமங்களையே சொல்லாநின்றுள். [4]"கிருஷ்ணனுகில் அடியார்கட்குப் பவ்யன்" என்பது பிரசித்திமன்றே. அவ்வடிவழகைத் தாழநின்று இவளை அநுபவிப்பித்த உபகாரகனுதலின் '**பிரான்**' என்கிறது. திருநாமங்களை இடைவிடாதே சொல்லா

---

1. வாழ்ச்சியைக் காட்டுகிறுர் 'வேதத்தை' என்று தொடங்கி.
"ஸ்வாத்யாயாத் யோகமாஸீத யோகாத் ஸ்வாத்யாயம் ஆமநேத்" என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 6. 6 : 2. ஆரூடயோகர் - சித்தித்தயோகத்தையுடையவர்.

2. "கண்டபின் அற்கம் ஒன்றும் அற உறாள்" என்கிறவளுடைய மனேபாவத்தை அருளிச்செய்கிறுர் 'அவ்வூரில்' என்று தொடங்கி.

3. ஆயினும், எங்களைக்காட்டிலும் அந்தரங்கமானவள் அன்றே நீ? உனக்குத் தெரியாமை உண்டோ? என்ன, "மலிந்தாள்" என்ற பதத்தையும் கடாக்ஷித்து "அன்னைமீர்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'மீட்கத் தேடுகிற' என்று தொடங்கி. தெரியாமையின் முடிவின் எல்லையைக் காட்டுகிறுர் 'நித்திய சூரிகள்' என்று தொடங்கி.

4. "கண்ணபிரான்" என்றுல், 'அடியார்கட்குப் பரதந்திரப்பட்டிருப்பவன்' என்பதனைக் காட்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் '**கிருஷ்ணனுகில்**' என்று தொடங்கி.

நின்றால் இளைப்பு ஒன்றும் இன்றிக்கே இராநின்றாள் என்பாள் '**என்றே ஒற்கம் ஒன்றும் இலள்**' என்கிறாள். [1]'விரஹத்தால் வலியற்று இருத்தலாலே திருநாமத்தை முட்டச்சொல்ல மாட்டாள்' என்று இராநிற்கச்செய்தே, வருத்தம் அறச் சொல்லாநின்றாள்.[2] திருநாமந்தான் தரிப்பினைக் கொடுத்துச்சொல்லுவிக்கும்போலே காணும்; [3]"பாடி இளைப்பிலம்" என்றாரேயன்றே முன்னம். ஒற்கம் - மிடி. என்றது, இளைப்பின்றிக்கே என்னுதல்; அன்றிக்கே, ஒற்கமாவது, ஒடுக்கமாய், தாய்மார் முன்பே 'இப்படிச் சொல்லாநின்றோமே' என்னும் நாணம் இன்றிக்கே என்னுதல். உகந்து உகந்து - திருநாமங்களைச் சொல்லுதல் மூலமாக அவனுடைய அழகு சீலம் முதலிய குணங்களை நினைத்து மேன்மேல் எனப் பிரீதியுடையவள் ஆகாநின்றாள். உள்மகிழ்ந்து குழையும் - மனத்திலே உண்டான பிரீதியின் மிகுதியாலே உடல் அழியாநிற்பாள். (4)

## 601.

குழையும் வாண்முகத் தேழை யைத்தொலை வில்லி மங்கலம் கொண்டு புக்கு
இழைகொள் சோதிச் செந்தா மரைக்கண் பிரான் இ ருந்தமை காட்டினீர்
மழைபெய் தால் ஒக்கும் கண்ண நீரினொ டன்று தொட்டுமை யாந்திவள்
நழையுஞ் சிந்தையள் அன்னை மீர்தொழும் அத்திசை[4] உற்று நோக்கியே.

**பொ - ரை :**—தாய்மார்களே! வருந்துகின்ற ஒளிபொருந்திய முகத்தையுடைய ஏழையாகிய இவளைத் திருத்தொலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு, வேறு ஆபரணம் வேண்டாமல் தானே ஆபரணமாக விளங்குகின்ற பிரகாசத்தையுடைய செந்தாமரைபோன்ற திருக்கண்களையுடைய பிரான் வீற்றிருத்தலைக் காட்டினீர்கள்; அன்று தொடங்கி

---

1. இளைப்புக்குக் காரணம் யாது? என்ன, 'விரஹத்தால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. வருத்தம் அறச் சொல்லுகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருநாமந்தான்' என்று தொடங்கி.

3. திருநாமம் தரிப்பினைக் கொடுப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பாடி இளைப்பிலம்' என்று. இது, திருவாய்மொழி. 1. 7 : 10.

4. " துன்பமொரு முடிவில்லைத் திசைநோக்கித் தொழுகின்றன்
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்றான் "
என்றார் கம்பநாட்டாழ்வார்.

மயங்கி மழைபெய்தாற்போலே இருக்கின்ற கண்ணீரோடு பகவானு டைய குணங்களிலே உட்புகாநின்ற மனத்தையுடையவளாகி அந்தத் திசையையே உற்று நோக்கித் தொழாநிற்பாள்.

வி - கு :—அன்னைமீர்! ஏழையைக் கொண்டுபுக்குப் பிரான் இருந் தமை காட்டினீர் ; அன்றுதொட்டு மையாந்து நீரிணைடு சிந்தையளாகி உற்று நோக்கித் தொழும் என்க. ஏழை - ஆசையுடையவள். சிந்தை யள் : வினையெச்சமுற்று.

ஈடு :—ஐந்தாம்பாட்டு. [1] இவள் தன்மையை அறிந்து வைத்து, தேவபிரானுடைய அழகினைக் காட்டிக் கெடுத்தீர் கோள் என்கிருள். அன்றியே, அவ்வூரில் வாழ்கின்றவர்கள் படியைக் காட்டினுல், அவர்கள் ஜீவனத்தையும் இவளுக்குக் காட்டிக் கொடுக்கவேணுமோ? என்கிருள் என்னுதல்.

குழையும் வாள்முகத்து ஏழையை - ஒரு கலவி வேண்டா மலே இயல்பிலே அமைந்த மிருதுத்தன்மையாலே நையும் தன்மையளாய், [2] "உகந்து உகந்து உள்மகிழ்ந்து குழையும்" என்கிற பகவானுடைய அநுபவத்தாலே ஒளியையுடைத்தான முகத்தையுடையளாய், 'கிடையாது' என்ருலும் மீளமாட்டாத சாபலத்தையுடையவளை. தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு- [3] பகவானுலே விரும்பப்படுகின்ற தேசத்திலே கொடுபுகத் தவி ராத பின்பு, ஸ்ரீ வைகுண்டத்திலே மேன்மையைக் காட்ட அன்றே அடுப்பது! நீர்மைக்கு எல்லை நிலமான இடத்தே கொடுபுகுவார் உளரோ? வாள் - ஒளி. [4] இழைகொள் சோதி - ஆபரணங்களினுடைய ஒளியையுடைத்தாயிருக்கும் என்னு

---

1. "குழையும் வாண்முகத்தேழையை" என்றதிலே நோக்காக அவ தாரிகை அருளிச்செய்கிருர். மேற்பாசுரத்தின் அர்த்தத்தையும் அநுவதித் துக்கொண்டு, "இழைகொள் சோதிச் செந்தாமரைக்கண் பிரான்" என்ற திலே நோக்காக 'அன்றியே' என்று தொடங்கி வேறும் ஓர் அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. பிரிந்திருக்கும் காலத்திலே முகத்தில் ஒளி உண்டாகைக்குக் கார ணம் சொல்லுகிருர் 'உகந்து' என்று தொடங்கி.

3. "தொலைவில்லி மங்கலம் கொண்டுபுக்கு" என்கிறவளுடைய மனோ பாவத்தை அருளிச்செய்கிருர் 'பகவானுலே' என்று தொடங்கி.

4. "இழைகொள் சோதி" என்பதற்கு மூன்று வகையாகப் பொருள் அருளிச்செய்கிருர். முதல் வகை, இழைகளினுடைய சோதியைக் கொண்டி ருக்கிற விக்கிரஹம் என்பது. இழை சோதி கொள் என்று மாற்றுக. இரண்டா வது வகை, இழையாகையைக் கொண்டிருக்கிற ஒளியையுடைய விக்கிரஹம் என்பது. மூன்ருவது வகை, ஆபரணங்களின் ஒளியைத் தன்னுள் கொண்டிருக் கிற ஒளியையுடைய விக்கிரஹம் என்பது. மூன்ருவது பொருளில் "இழை" என்பதற்கு, ஆபரணங்களின் ஒளி என்று பொருள் கொள்க.

தல்; வேறு ஓர் ஆபரணம் வேண்டாதே தானே ஆபரணமான ஒளி என்னுதல்; அன்றிக்கே, ஆபரண ஒளி தன்னுள்ளே அடங்கும்படியான இயல்பாகவே அமைந்த ஒளி என்னுதல். செந்தாமரைக் கண் பிரான்- மலர்த்தி முதலானவைகளுக்குத் தாமரையை ஒப்பாகச் சொல்லலாயிருக்கிற திருக்கண்கள். [1] அகவாயில் தண்ணளிக்குப் பிரகாசகமான திருக்கண்கள். பிரான்- [2] "பக்தர்களுக்காகவே" என்கிற வடிவு. இருந்தமை காட்டினீர் - நீங்கள் கெடுத்தீர்கோள். [3] இவள் அறியாத விஷயங்களையும் நீங்களே காட்டிக் கொடுத்துக் கெடுத்தீர்கோள். இருந்தமை-[4] இருப்பில் வீறு அங்கே முடிந்து நிற்றல்போலே. [5] நின்றானாகில், [6]"நிலையாரநின்றான்" என்பர்கள்; இருந்தானாகில், "இருந்தமை காட்டினீர்" என்பர்கள்; கிடந்தானாகில், [7]"கிடந்ததோர் கிடக்கை" என்பர்கள். [8] அன்றிக்கே, அவன் தன்மையைக் காட்டினீர்கோள் என்றுமாம். நோக்கு இருந்தபடி கண்டாயே, முறுவல் இருந்தபடி கண்டாயே என்று தனித்தனியே காட்டினீர் என்பாள் 'காட்டினீர்' என்கிறாள்.

நன்று; இப்போது அதற்கு வந்தது என்? என்னில், மழை பெய்தால் ஒக்கும் கண்ணநீரினொடு - கண்டவுடனே வருஷதாரைபோலே கண்ணநீர் வெள்ளம்இடுகிறபடி பாரீர்கோள்.

---

1. "செம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அகவாயில்' என்று தொடங்கி.

2. "பிரான்" என்பதற்கு, உபகாரகன் என்பது பொருளாகையாலே, அவ்வுபகாரத்தை அருளிச்செய்கிறார் 'பக்தர்களுக்காகவே' என்று தொடங்கி.

3. 'நீங்கள் கெடுத்தீர்கோள்' என்கைக்கு, நாங்கள் என் செய்தோம்? என்ன, 'இவள் அறியாத' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'விஷயங்கள்' என்றது, விசேஷங்கள் என்றபடியாய், விக்கிரஹத்தின் அழகு, கண்ணழகு முதலியவைகளைச் சொல்லுகிறது.

4. "இருந்தமை" என்றதனால் பலித்த பொருளினை அருளிச்செய்கிறார் 'இருப்பில் வீறு" என்று தொடங்கி.

5. "இருந்தமை காட்டினீர்" என்பது என்? மற்றைய நிலைகளும் இனிமையாக இராவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நின்றானாகில்' என்று தொடங்கி.

6. 'நிலையார' என்பது, பெரிய திருமொழி. 6. 9: 8.

7. திருமாலை. செய். 23.

8. "இருந்தமை" என்பதற்கு, வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. ஆக, "இருந்தமை" என்பதற்கு, இருப்பின் அழகு, தன்மை என இருபொருள் உரைத்தபடி.

**ஆளவந்தார் மணக்கால் நம்பி**பக்கல் எம்பெருமானைக் கேட்ட வுடனே, "**உபாயம் இதற்குமேல் இல்லை**; இவ்விஷயத்தை இப்போதே நேரே காண்டற்கு விரகு இல்லையோ?" என்றாராம். அப்படிக் கண்டவுடனே கண்ணநீர் வெள்ளமிடப்புகுந்த தத்தனை. '**ஏழை**' என்ற இடத்தை மூதலிக்கிருள்: அன்று தொட்டும் - நீங்கள் காட்டின அன்று தொடங்கி. மையாந்து - மயங்கி. '**குழையும்**' என்ற இடத்தை மூதலிக்கிருள்: இவள் நுழையும் சிந்தையள்-[1]அவன் குணங்களிலே உட்புகாநின்ற நெஞ்சினையுடையவள். சொரூபத்தையும் ஆத்ம குணத்தையும் ஒழிய வடிவழகிலே இடம்கொள்ளாநின்ருள். [2]அங்கே சுழித்து நின்று,'இது ஒரு வடிவழகே! இது ஓர் ஒப்பனையே! இது ஒரு கண்ணழகே!' என்று இடம் கொள்ளாநின்ருள். அன்னைமீர்-[3]இவளை மீட்கப் பார்க்கிற அளவே அன்றே உங்களது. தொழும் - [4]"ஒரே இடத்தில் நிறுத்திய மனத்தையுடையவளாய் ஸ்ரீராமபிரானையே நிச்சயமாகப் பார்க்கிருள்" என்கிறபடியே, அந்தத் திக்கை மறுபாடு உருவப் பார்த்துத் தொழாநிற்கும். இவள் தொழிலும் ஒரு [5]திக்குப்பட்டல்லது இராது காணும். (5)

---

1. "இருந்தமை" என்றதற்கு அருளிச்செய்த இருவகைப் பொருள்களுள், 'தன்மை' என்ற பொருளைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிருர் 'அவன் குணங்களிலே' என்று தொடங்கி. 'அழகு' என்ற பொருளைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிருர் 'சொரூபத்தையும்' என்று தொடங்கி.

2. இடம் கொள்ளும் பிரகாரத்தைக் காட்டுகிருர் 'அங்கே சுழித்து' என்று தொடங்கி.

3. 'இவளை மீட்கப் பார்க்கிற' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, இவளுடைய பாவபந்தத்தை அறியாதே 'இவளை மீட்கப் பார்க்கிற அளவே அன்றே உங்களது' என்பது.

4. "அத்திசை யுற்றுநோக்கித் தொழும்" என்று கூட்டிப் பொருள் அருளிச்செய்கிருர் 'ஒரே இடத்தில்' என்று தொடங்கி.

"ந ஏஷா பஶ்யதி ராக்ஷஸ்யஃ ந இமாந் புஷ்பபல த்ருமாந்
ஏகஸ்த ஹ்ருதயா நூநம் ராமம் ஏவ அநுபஶ்யதி"

என்பது, ஸ்ரீராமா. சுந் 16 : 25.

5. 'திக்குப்பட்டல்லது' என்பதற்கு, அடைவுபட்டல்லது என்றும், திக்கையுடைத்தல்லது என்றும் இருபொருள்.

602.

நோக்கும் பக்க மெல்லாம் கரும்போடு செந்நெல் ஓங்குசெந் தாமரை
வாய்க்கும் தண்பொரு நல்வட கரை வண்தொலைவில்லி மங்கலம்
நோக்கு மேல் அத் திசையல் லால்மறு நோக்கி லள்வைகல் நாடொறும்
வாய்க்கொள் வாசக மும் மணி வண்ணன் நாம மே இவள் அன்னைமீர்!

பொ - ரை:—தாய்மார்களே! இவள், பார்க்கும் இடங்கள் தோறும் கரும்புகளும் செந்நெலும் உயர்ந்த செந்தாமரைகளும் நிறைந்திருக்கின்ற குளிர்ந்த தாமிரபரணியின் வடகரையிலுள்ள திருத்தொலைவில்லி மங்கலம் என்னும் திவ்யதேசத்தைப் பார்ப்பாளேயானால் அந்தத் திசையையே அன்றி வேறு ஒருதிசையையும் பார்த்து அறியாள், கழிகின்ற நாள்தோறும் வாயிலே வைத்துப் பேசுகின்ற வார்த்தைகளும் நீலமணிபோன்ற நிறத்தையுடைய எம்பெருமானது திருப்பெயர்களே யாகும்.

ஈடு:—ஆறும்பாட்டு.[1] வலிமை இல்லாமையாலே முதலிலே பார்க்கமாட்டாள், பார்த்தாளாகில் மற்று ஓரிடமும் பாராள் என்கிறாள்.

நோக்கும் பக்கம் எல்லாம் - [2]பார்த்த பார்த்த இடமெல்லாம். "திருப்பொருநல் நோக்கும் பக்கமெல்லாம்" என்று கூட்டிப் பொருள் கூறுவாரும் உளர். கரும்பொடு செந்நெல் ஓங்கு செந்தாமரை-கரும்பும், அதனோடே இசலி வளர்கிற செந்நெலும், இரண்டற்கும் நிழல்செய்கின்ற செந்தாமரையும். வாய்க்கும் - நிறைந்திருக்கும் என்னுதல்; இட்டன எல்லாம் நூறு கிளைகளாகப் பணைக்கும் என்னுதல். தண்பொருநல் வடகரை வண் தொலைவில்லிமங்கலம்-சிரமஹரமான திருப்பொருநல் வடகரையிலேயான ஐசுவரியத்தையுடைய தொலைவில்லி மங்கலம். நோக்குமேல் அத்திசை அல்லால் மறு நோக்கு இலள்-முதலிலே நோக்க வலியுடையள் அல்லள்; வருந்திப் பார்த்தாளாகில் அத்திக்கை ஒழிய முகம்எடுத்துப் பார்க்கிறிலள். வைகல் நாள்தொறும்-கழிகிற நாள்தோறும். வாய்க்கொள் வாசகமும்-

---

1. "நோக்குமேல் அத்திசை அல்லால் மறுநோக்கு இலள்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஊரிலே பார்த்த பார்த்த இடம் எல்லாம் என்றபடி. 'திருப்பொருநல்நோக்கும் பக்கமெல்லாம்' என்றது, தாமிரபரணி வெள்ளம் பெருகி ஓடுகின்ற இடங்கள் எல்லாம் என்றபடி. 'கூறுவாரும் உளர்' என்றது, தாமிரபரணிக்கு அடைமொழியாக்கிக் கூறுவாரும் உளர் என்றபடி.

வாயாலே சொல்லுகிற சொலவும். மணிவண்ணன் நாமமே - வடிவழகுக்கு வாசகமான வற்றையே சொல்லாநின்றாள்.[1] குண விஷயமாதல் விபூதிவிஷயமாதல் அன்றிக்கே, வடிவழகிற்குத் தோற்றமை தோற்றச் சொல்லாநின்றாள். [2] இவள் நிலை எது? நம் நிலை எது? உங்களது சொரூப ஞானம்; இவளது உருவ ஞானம். (6)

## 603.

அன்னைமீர்! அணி மாமயில் சிறு மானிவள்நம்மைக் கைவலிந்து
என்ன வார்த்தையும் கேட்குறாள்தொலை வில்லி மங்கலம் என்றலால்
முன்னம் நோற்ற விதிகொலோ? முகில் வண்ணன் மாயம் கொலோ?
அவன்
சின்னமும் திரு நாமமும் இவள் வாயனகள் திருந்தவே.

**பொ - ரை :**—தாய்மார்களே! அழகிய பெருமைபொருந்திய மயிலையும் இளையமானையும் போன்றவளான இவள், நம்மை விஞ்சித் திருத்தொலைவில்லி மங்கலம் என்ற பெயரையல்லாமல் வேறு எந்த வார்த்தையையும் கேட்கின்றாள் இல்லை; முற்பிறவிகளில் செய்த புண்ணியம் தானோ? முகில்வண்ணனை எம்பெருமானுடைய மாயம்தானோ? அறியேன்; அவ் வெம்பெருமானுடைய சின்னங்களும் திருப்பெயர்களும் திருந்த இவள் வாயின ஆயின.

**வி - கு :**—கைவலித்தல் - மீறுதல். வாயனகள் : [3]கள், அசைநிலை. என்ன - என்னுடைய என்றலுமாம். கேட்க உறாள் என்பது, கேட்குறாள் என வந்தது; விகாரம். கைவலிந்து தொலைவில்லி மங்கலம் என்றல் லால் என்ன வார்த்தையும் கேட்குறாள் என்க.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [4]அவன் சின்னமும் திருநாமமும் இவள் சொல்லப்புக்கவாறே நிறம்பெற்றன என்கிறாள்.

---

1. "மணிவண்ணன் நாமமே" என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச் செய்கிறார் 'குணவிஷயமாதல்' என்று தொடங்கி.

2. "இவள், அன்னைமீர்!" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் நிலை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'உங்களது' என்று தொடங்கி.

3. "செய்வனகள் செய்யக்கண்டு" என்பது, தேவாரம். (அப்பர்.)
"கற்றனங்கள் யாமுமுடன் கற்பனகள் எல்லாம்" என்பது,
(சிந்தாமணி. 1795.)

4. "அவன் சின்னமும் திருநாமமும் இவள் வாயனகள் திருந்தவே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

அன்னைமீர்! - [1]இவள் பருவம் இது; நமக்கு அவ்வருகே போன ஆச்சரியத்தைப் பாரீர்கோள். 'மைத்ரேய' என்னுமாறுபோலே, 'அன்னைமீர்!' என்கிறாள். அணி மா மயில் சிறுமான் - [2] அழகிய நிறத்தையுடைய பெண்பிள்ளை. அன்றிக்கே, அழகியதாய்ச் சிலாக்கியமான மயில் போலே இருக்கிற பெண் பிள்ளை என்னுதல். சிறுமான் இவள் நம்மைக் கைவலிந்து - [3] நாம் கற்பித்த திருநாமங்களையும் சொப்படச் சொல்லமாட்டாதவள் நமக்கு எட்டாதபடியானாள். கைவலித்தல்-கைகடத்தல். என வார்த்தையும் கேட்குறாள் - [4]தன் நினைவினை யான் சொல்லிலும் மீட்பதற்கு நினைத்துச் சொல்லுகிறேன் என்று, என் வார்த்தையையும் கேட்கை தவிர்ந்தாள். தொலைவில்லி மங்கலம் என்றல்லால் - [5] திருத்தொலைவில்லிமங்கலம் என்னில் நான் சொன்னதையும் கேட்பாள். என வார்த்தை - என்னுடைய வார்த்தை.

முன்னம் நோற்ற விதிகொலோ- [6]ஒக்கப் பிறந்து வளர்ந்தோம், பின்பு இது சாதிக்கக் கண்டிலோம். ஆதலால், முன்

1. "அன்னைமீர் என்ன வார்த்தையும் கேட்குறாள்" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் பருவம்' என்று தொடங்கி. "அன்னைமீர்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மைத்ரேய' என்று தொடங்கி.

2. "அணிமாமயில்" என்பதற்கு, இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருளுக்கு, 'அணிமாமைஇல்' என்பது சொல். அது, "அணிமாமயில்" என ஐகாரம் அகரமாகத் திரிந்து வந்தது. அணி - அழகு. மாமை - நிறம். இல் - இருப்பிடம். இதனாற் பலித்த பொருள், அழகிய நிறத்தையுடைய என்பது. இதனையே 'அழகிய நிறத்தையுடைய பெண் பிள்ளை' என்கிறார்.

3. 'இவள் பருவம் இது' என்று தொடங்கி, மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'நாம் கற்பித்த' என்று தொடங்கி. சொப்பட - நன்றாக. "சொப்பட நான் சுட்டுவைத்தேன்", "சொப்பட நீராடவேண்டும்" என்பன பெரியாழ்வார் திருமொழி. 'சோப்பன' என்பது, முன்னுள்ள பாடம்.

4. "என்ன வார்த்தையும்" என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'தன் நினைவினை' என்று தொடங்கி.

5. ஆயின், எல்லாம் அப்படியேயோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருத்தொலை வில்லிமங்கலம்' என்று தொடங்கி.

6. "முன்னம் நோற்ற" என்று விசேடிப்பான் என்? இப்போது செய்த புண்ணியத்தின் பலமானாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒக்கப் பிறந்து' என்று தொடங்கி. "அவளும் உடன்பிறந்து, உடன் வளர்ந்து, நீர் உடனாடி, சீர் உடன்பெருகி, ஒல் உடன் ஆட்ட, பால் உடன் உண்டு, பல் உடன் எழுந்து, சொல் உடன்கற்று, பழமையும் பயிற்றியும் பண்பும் நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியு முடையார் பற்பல் நூறாயிரவர்" என்பது, இறையனார் களவியல் உரை. (சூத். 2.)

னரே செய்து வைத்த புண்ணியத்தின் பலமோ இது! [1]"புண்ணியமானது, விதி என்றும் விதானம் என்றும் சொல்லப்படுமன்றோ" என்னக்கடவதன்றோ. [2]இவளாலே செய்யப்பட்ட தர்மத்துக்கு இத்தனைபலம் கனக்க உண்டாகமாட்டாது; இது சித்த தர்ம பலமாகவேணும்; ஆகையால், முகில்வண்ணன் மாயம்கொலோ - [3]பிடாத்தை விழவிட்டு வடிவினைக் காட்டினனோ? [4]இத்தலையாலே சாதித்தது ஓர் அசேதனமான கிரியைக்கு இத்தனை கனத்த பலம் உண்டாகமாட்டாமையாலே '**முன்னம் நோற்ற விதிகொலோ?**' என்று ஐயப்பட்டாள். இப்படி முன்பு ஒருவடிவில் பலிக்கக் காணுமையாலே '**முகில்வண்ணன் மாயம்கொலோ?**' என்று இங்கே ஐயப்படுகிறாள். அவன் சின்னமும் திருநாமமும் - "தவளஒண்சங்கு சக்கரம்" என்பதான அடையாளங்களும், "**அரவிந்தலோசனன்**", "**தேவபிரான்**" என்பனவான திருநாமங்களும். இவள் வாயனகள் திருந்தவே - [5]பண்டே திருந்தி இருக்கிறவை இவள் சொல்லப் புக்கவாறே உயிர்பெற்று இராநின்றன. [6]**பட்டர் "அழகிய மணவாளப் பெருமாள்"** என்றால் திருநாமம் நிறம்பெறுமாறு

1. "விதி" என்பது, புண்ணியத்தைக் காட்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'புண்ணியமானது' என்று தொடங்கி. "ஊழ்; அஃதாவது, இருவினைப்பயன் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருட்கிளவி" என்பது பரிமேலழகருரை.

2. மேலே வருகின்ற பதங்கட்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இவளாலே' என்று தொடங்கி.

3. 'இறைவன்' என்னுமல், "முகில்வண்ணன்" என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பிடாத்தை' என்று தொடங்கி. பிடாத்தை - பச்சைவடத்தை; இது, ஓர் உடை விசேடம்.

4. "முகில்வண்ணன் மாயமே" என்று நிச்சயிக்கவேண்டியிருக்க, அங்ஙனம் செய்யாது, இரண்டு வகையிலும் ஐயப்படுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இத்தலையாலே' என்று தொடங்கி. 'அசேதநமான கிரியை' என்றது, புண்ணியத்தை. 'இப்படி' என்று தொடங்கும் இவ்விடத்தில், முதற்பத்து ஈட்டின் தமிழாக்கம். பக். 16. காணல் தகும்.

5. முன்பே திருந்தி இருக்கவில்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பண்டே' என்று தொடங்கி. என்றது, பிராவண்யத்தாலே சொல்லுமவை நிறம் பெற்றிருக்கும் என்றபடி.

6. 'பிராவண்யத்தாலே சொல்லுமவை நிறம்பெற்றிருக்கும்' என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'பட்டர்' என்று தொடங்கி.

போலேயும், சோமாசியாண்டான் "எம்பெருமானர்" என்றால், திருநாமம் நிறம்பெறுமாறுபோலேயும், அனந்தாழ்வான் "திருவேங்கடமுடையான்" என்றால், திருநாமம் நிறம்பெறுமாறு போலேயும்: [1] "எவை உம்மால் சொல்லப்பட்ட குணங்கள்" என்னுமாறுபோலே. (7)

604.

திருந்து வேதமும் வேள்வி யும்திரு மாமகளிரும் தாம்மலிந்து
இருந்து வாழ்பொரு நல்வடகரை வண்தொலைவில்லி மங்கலம்
கருந்த டங்கண்ணி [2] கைதொழுத அந்நாள் தொடங்கி இந்நாள்தொறும்
இருந்திருந்து அரவிந்த லோசந! என்றென்றே நைந் திரங்குமே.

**பெர் - ரை :**—திருந்திய வேதங்களும் யாகங்களும் அழகிய செல்வமும் ஆகிய இவற்றால் நிறைந்திருக்கின்ற பிராமணர்கள் நிறைந்து இருந்து வாழ்கின்ற, தாமிரபரணிக்கு வடக்கேயுள்ள வளப்பம்பொருந்திய திருத்தொலைவில்லிமங்கலம் என்னும் திவ்விய தேசத்தை, கரிய விசாலமான கண்களையுடைய இவள் கைகூப்பி வணங்கிய அந்த நாள் தொடங்கி இந்த நாள்வரையிலும் இருந்து இருந்து தாமரைக்கண்ண! என்று என்றே உருக் குலைந்து மனமும் கரையாநின்றாள்.

---

1. இதனை வால்மீகிபகவான் பக்கலிலும் காணலாம் என்கிறார் 'எவை உம்மால்' என்று தொடங்கி.

"பஹவோ துர்லபா: ஏவ யே த்வயா கீர்த்திதா குணா:
முநே வக்ஷ்யாமி அஹம் புத்வா தை: யுக்த: ச்ரூயதாம் நர:"

என்பது, சங்க்ஷேப ராமாயணம். 7. இந்தச் சுலோகத்தில் 'கதிதா' என்னாது, "கீர்த்திதா" என்கையாலே, குணங்கள் நிறம்பெற்றன என்று தோற்றுகிறது.

வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி என்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை அன்பெனும் நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்றான் என்னயான் மொழிய லுற்றேன்.

என்றார் கம்பநாட்டாழ்வாரும்.

2. வரையாழி வண்ணர் அரங்கேசர் ஈசன்முன் வாணன் திண்தோள்
வரையாழி யார்புள்ளின் வாகனத்தே வந்த நாடொடிற்றை
வரையாழிய துயராய்த் தூசும் நாணும் மதியும் செங்கை
வரையாழியும் வளையு மிழந்தாள் என்மடமகளே.

என்பது, திவ்விய கவியின் திருவாக்கு. (திருவரங்கத். 58.)

ஈடு:—எட்டாம்பாட்டு. [1] அந்த ஊரைத் தொழுத அன்று தொடங்கி இன்று அளவும் உண்டான இவளுடைய உருக் குலைந்த தன்மையைச் சொல்லுகிருள்.

திருந்து வேதமும்-வேதம் கட்டளைப்பட்டது அவ்வூரிலுள்ளார் கைக்கொண்ட பின்பாயிற்று.[2] சொரூபம் ஞானமாத்திரம் என்கிற சுருதிகள், ஞாத்ருத்வ சுருதிகள், பேதாபேத சுருதிகள், சகுணசுருதிகள், நிர்க்குணசுருதிகள் இவை அடங்க விஷய வேறுபாட்டாலே ஒருங்கவிட்டிருக்குமவர்கள். வேள்வியும்-வைதிக சமாராதனமும். [3] கற்ற கல்வி அநுஷ்டானத்திற்கு

---

1. "தொலைவில்லிமங்கலம் கைதொழுத அந்நாள் தொடங்கி" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. கட்டளைப்பட்ட பிரகாரத்தைக் காட்டுகிருர் 'சொரூபம்' என்று தொடங்கி. "ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் பிரஹ்ம", "விஜ்ஞாநம் பிரஹ்ம" என்பன போன்ற சுருதிகள், சொரூபம் ஞானமாத்திரமே என்பதனைத்தெரிவிப்பன. "யஸ்ஸர்வஜ்ஞஃ ஸர்வவித்" என்பது போன்றவைகள், ஞாத்ருத்வசுருதிகள். (ஞாத்ருத்வம் - அறிகின்றவனுடைய தன்மை.) "த்வாஸுபர்ணா", "நித்யோ நித்யாநாம்", "பதிம்விஶ்வஸ்ய" என்பன போன்றவைகள், பேத சுருதிகள். "தத்வமஸி", "ஸர்வம் கல்விதம் பிரஹ்ம" என்பன போன்றவைகள், அபேத சுருதிகள். "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந்", "அபஹத பாப்மா" என்பன போன்றவை, சகுண சுருதிகள். "நிஷ்களம் நிஷ்க்ரியம்", "நிர்குணம்", "நிரஞ்ஜனம்" என்பன போன்றவைகள், நிர்க்குண சுருதிகள்.

'இவையடங்க விஷய வேறுபாட்டாலே ஒருங்க விட்டிருத்தலாவது, 'சொரூபம் ஞானமாத்திரமே' என்றது, ஞாத்ருத்வத்தை விலக்க வந்தது அன்று; "தத்குண சாரத்வாத் தத்வியபதேசஃ - ஞானமாகிற குணத்தைப் பிரதாநமாகவுடையதாய் இருக்கையாலே ஞானம் என்று சொல்லப்படுகிறது" என்கிறபடியே, ஞானத்தின் மிகுதியைக் குறிப்பதற்காகவும், சொரூபம் சுயம்பிரகாசம் என்று தோற்றுகைக்காகவும் கூறப்பட்டது என்றும், பேதாபேத சுருதிகளில், பேத சுருதியே தத்துவார்த்தம்; அபேத சுருதி சரீர ஆத்மபாவம் தோற்றுகைக்காகச் சொல்லப்பட்டதித்தனை என்றும், சகுண நிர்க்குண சுருதிகளில், சகுண சுருதியே தத்துவார்த்தம்; நிர்க்குண சுருதி சரீரத்தைப்பற்றி வருகின்ற தாழ்ந்த குணங்கள் இல்லாமையைச் சொல்லவந்தது; கல்யாண குணங்களை விலக்க வந்தது அன்று என்றும், இப்படி விஷய வேறுபாட்டாலே நிச்சயித்தல் என்றபடி.

3. "திருந்து வேதமும்" என்றதனைச் சார "வேள்வியும்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிருர் 'கற்றகல்வி' என்று தொடங்கி.

உறுப்பாய் இருக்கிறபடி. திரு மா மகளிரும் தாம் - [1] ஆராதிக்கின்றவர்களுடைய நிறைவு இருக்கிறபடி. திருமாமகள் - செல்வம்.[2] அன்றிக்கே, ஆராதிக்கப்படுகின்ற பிராட்டியும் தானுமாகவுமாம். தாம்-தான். ஆக, [3] பிரமாணம் பிரமேயம் பிரமாதாக்கள் குறைவற்று வாழ்கின்ற தேசம் என்றபடி. மலிந்து இருந்து- [4]பரமபதத்தில் உள்ளெதுப்போடேபோலே யன்றோ இருப்பது. பொருநல் வடகரை-விரஜைக்கு அக்கரை என்னுமாறுபோலே. கரும்தடம் கண்ணி-கண்ணழகில், கறுத்த கண்களையுடைய பிராட்டியோடு ஒக்கும். தடம்கண்ணி - அவனைக் காட்டிலும் வேறுபாடு. [5] அவனை அநுபவிக்கையால் வந்ததன்றோ அவளுக்கு; அவள் கண்களைக்காட்டிலும் ஏற்றம்உண்டன்றோ, அவர்கள் இருவரையும் அநுபவிக்கையாலே இவள் கண்களுக்கு; [6] தொழும்போதும் வடிவு அழகியராயிருப்பார் தொழவேணுமாகாதே.

---

1. "வேள்வியும்" என்றதனைச் சார, "திரு மா மகளிரும் தாம்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'ஆராதிக்கின்றவர்களுடைய' என்று தொடங்கி. என்றது, மந்திரங்களைக்கொண்டு வைதிக சமாராதனம் செய்யும்போது செல்வம் குறைவற உண்டாயிருக்கவேண்டுமன்றோ, அதனைச் சொல்லுகிறது என்றபடி. "திருமாமகளிரும் தாம்" என்பதற்குப் பொருள், செல்வத்தையுடைய பிராமணர்கள் என்பது.

2. "திரு மா மகளிரும் தாம்" என்பதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. தாம் - என்றது, இங்கே, ஈசுவரனை.

3. பிரமாணம், வேதம்; பிரமேயம், வேள்வி; பிரமாதா, பிராமணர்கள். இரண்டாவது பொருளில், 'பிரமேயம்' என்றது, சர்வேசுவரனை.

4. "திருமாமகளிரும் தாம் மலிந்திருந்து" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பரமபதத்தில்' என்று தொடங்கி. இது, "திருமாமகளிரும் தாம்" என்பதற்கு, மேலே அருளிச்செய்த இருவகைப் பொருள்களில், இரண்டாவது பொருளுக்கு, பாவம்.

5. வேறுபாட்டினைக் காரணத்தோடு காட்டுகிறார் 'அவனை அநுபவிக்கையால்' என்று தொடங்கி. அவளுக்கு - சீதாபிராட்டிக்கு. அவர்கள் இருவரையும் - பெருமாளையும் பிராட்டியையும். இவள் - ஆழ்வார்நாயகி.

6. "கருந்தடங்கண்ணி" என்று அவயவலக்ஷணத்தைச் சொல்லி, "கைதொழுத" என்றதனால், பாவம் அருளிச்செய்கிறார் 'தொழும்போதும்' என்று தொடங்கி.

கைதொழுத அந்நாள் தொடங்கி இந்நாள்தொறும்- [1]திரு வடி தொழுத அன்று தொடங்கி இன்றளவும் வர என்னுதல்; தன்சத்தை உண்டான அன்று தொடங்கி இன்று அளவும் வர என்னுதல். "அஸந்நேவ - அசத்தைப்போல", "அன்று நான் பிறந்திலேன்" இதுவன்றோ முன்புற்றை நிலே. [2]அவன் கையிலும் அன்றிக்கே, பிறர் கையிலும் அன்றிக்கே, தன் கையதாயிருந்தபடி என்தான் தன்சத்தை! [3]"தொழுது எழு" அன்றோ. இருந்து இருந்து அரவிந்தலோசந! என்று என்றே- ஒருகால் அரவிந்தலோசந! என்னும்போது, நடுவே பதின் கால் பட்டைப்பொதிசோறு அவிழ்க்கவேணும். [5]வலி இன்மை யாலே சொல்லமாட்டாளோ? என்று இருக்கச் செய்தே, சொல் லித் தலைக்கட்டாநின்றாள். அவன் **அரவிந்தலோசனன்,** இவள் **கருந்தடங்கண்ணி.** இருவரும் [6]ஒருமுகத்திலே காணும் ஆகப் பட்டது. நைந்து இரங்கும் - உருக்குலைந்து அழியாநின்றாள். [7]சரீரத்தளவும் அன்றிக்கே, நெஞ்சும் அழிகின்றது. இரக்கம்- ஈடுபாடு. (8)

---

1. 'திருவடி தொழுத அன்று தொடங்கி' என்றது, அவ்வூரில் அவனைத் திருவடி தொழுத அன்று தொடங்கி என்றபடி. 'தன் சத்தை உண்டான அன்று தொடங்கி' என்றது, மயர்வற மதிநலம் அருளப்பெற்ற அன்று தொடங்கி என்றபடி. ஆயின், ஞானம் இல்லாதபோது சத்தை இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அஸந்நேவ' என்று தொடங்கி. 'அஸந்நேவ' என்பது, தைத்திரீயஉப. ஆன. 16. 'அன்று நான்' என்பது, திருச்சந்த விருத்தம். 64.

2. "நாகிஞ்சித் குர்வதஸ் ஶேஷத்வம் - கைங்கரியம் செய்யாதவனுக் குச் சேஷத்வம் இல்லை" என்கிறபடியே, தொழுகையாகிற கிஞ்சித்காரத்தைத் திருவுள்ளத்தேகொண்டு அருளிச்செய்கிறார் 'அவன் கையிலும்' என்று தொடங்கி. என்றது, தொழுகையாகிற கிஞ்சித்காரத்தாலே சத்தை சித்திக்கும் என்றபடி. கிஞ்சித்காரம் - கைங்கரியம்.

3. அப்படித் தொழுதல் சத்திற்குக் காரணமாக இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் '"தொழுது எழு" அன்றோ' என்று. இது, திருவாய். 1. 1 : 1.

4. "இருந்து இருந்து" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒரு கால்' என்று தொடங்கி. பட்டைப்பொதி சோறு - பாக்குப் பட்டையில் கட்டிய சோறு; தோட்கோப்பு.

5. "என்றே" என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'வலி இன்மையாலே' என்று தொடங்கி.

6. 'ஒரு முகத்திலே' என்றது, பரஸ்பரம் கண்ணழகிலே என்றபடி.

7. நைதலுக்கும் இரங்குதலுக்கும் வேறுபாடு காட்டுகிறார் 'சரீரத் தளவும்' என்று தொடங்கி.

## 605.

இரங்கி நாள்தொறும் வாய்வெரீஇ இவள் கண்ண நீர்கள் அலமர
மரங்களும் இரங்கும் வகைமணி வண்ணவோ என்று கூவுமால்
துரங்கம்வாய் பிளந்தானுறை தொலைவில்லி மங்கலம் என்று தன்
கரங்கள் கூப்பித் தொழும் அவ்வூர்த் திருநாமம் கற்றதற் பின்னையே.

**பொ - ரை :**—இவள் நாள்தோறும் இரங்கி வாய்வெருவிக் கண்களிலே நீர் தேங்கும்படியாக மரங்களும் இரங்கும்படி மணிவண்ணா! என்று கூவுகிறாள்; பேசுதற்குக் கற்றுக்கொண்ட பிறகு, கேசி என்னும் அசுரனது வாயினைப் பிளந்த எம்பெருமான் நித்தியவாசம் செய்கிற திருத்தொலைவில்லிமங்கலம் என்று சொல்லித் தன்னுடைய கைகளைக் குவித்துத் தொழுவாள்.

**வி - கு :**—வெருவி - வெரீஇ; சொல்லிசையளபெடை. அலமருதல் - சுழலுதல். துரங்கம் - குதிரை. பிளந்தான்: வினையாலணையும் பெயர். திருநாமம் கற்றதற் பின்னை, கரங்கள் கூப்பித் தொழும் என்க.

**ஈடு :**—ஒன்பதாம் பாட்டு. [1]இவளுடைய மனம் வாக்குக் காயங்கள் மூன்றும் முதலிலே தொடங்கி அவன் பக்கலிலே ஈடுபட்டன ஆயின என்கிறாள்.

இரங்கி - நெஞ்சு அழிந்து. வாய்வெரீஇ - [2]அடியற்ற பேச்சாய் இராநின்றது. "இராமா! என்றும் இராமா! என்றும் எப்பொழுதும் புத்தியினால் எண்ணி அவனையே வாக்கால் சொல்லிக்கொண்டவளாய்" என்னுமாறுபோலே, மனத்தின் துணை இன்றிக்கே இருக்கை. நாள்தொறும்- [3]மயர்வற மதிநலம் அருளப்பெற்ற அன்றே அறிவு கேடும் குடிபுகுந்தது காணும். பக்தியின் உருவத்தை அடைந்த ஞானம் அன்றோ பெற்றது.

---

1. "இரங்கி, கூவுமால், கரங்கள் கூப்பித் தொழும், திருநாமம் கற்றதற் பின்னை" என்பனவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. நெஞ்சு அழிந்தால், வாய் வெருவக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அடியற்ற' என்று தொடங்கி. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'இராமா' என்று தொடங்கி.

"ராமேதி ராமேதி ஸதைவ புத்த்யா விசிந்த்ய வாசா ப்ருவதீ தமேவ
தஸ்ய அநுரூபாம்ச கதாம் ததர்தாம் ததைவ பஶ்யாமி ததா ச்ருணோமி"

என்பது, ஸ்ரீராமா. சுந். 32: 11. சுலோகத்திலே "ப்ருவதீ" என்ற பதத்தாலே, வாக்காலே என்னுமது போதரவும், "வாசா" என்று விசேடிக்கையாலே மனத்தின் துணை இல்லை என்றபடி.

3. "நாடொறும்" என்றதற்கு, எல்லை ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மயர்வற' என்று தொடங்கி. அப்போது அறிவுகேடு குடிபுகுதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பத்தியின்' என்று தொடங்கி.

இவள் கண்ணநீர்கள் அலமர - [1]கண்கள் வாய்வெருவுகிறபடி. 'நாள்தொறும் வாய்வெரீஇ' என்றது, [2]பொய்ந்நின்ற ஞானம் தொடங்கி இவ்வளவும் வரக் கூப்பிட்ட கூப்பீட்டை அன்றோ மரங்களும் இரங்கும் வகை - [3] சேதனம் என்றும், அசேதனம் என்றும் வேறுபாடு அற அழியும்படி காணும், இவள் வாய் விட்டுக் கூப்பிடும்படி. [4] **எம்பாரை** 'மரங்களும் இரங்கக் கூடுமோ?' என்று கேட்க, இது அருளிச்செய்த அன்றுதொடங்கி எத்தனை பாவசுத்தி இல்லாதார் வாயிலே புக்கது என்று தெரியாது; இங்ஙனே இருக்கச்செய்தே, இயமம் நியமம் முதலிய யோக உறுப்புக்களாலே பதம்செய்யப் பார்த்தாலும் சுக்கான்பருக்கை போலே நெகிழாதே இருக்கிற நெஞ்சுகளும் இன்று அழிகிறபடி கண்டால் சமகாலத்தில் மரங்கள் இரங்கச் சொல்லவேணுமோ? என்று அருளிச்செய்தார். [5] "மரங்கள் நின்று மது தாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர்கொம்புகள் தாழும்" என்று அவதாரத்தில் திருக்குழல் ஓசையில் பட்ட எல்லாம் இத் துன்ப ஒலியிலே படுமாயின; "மரங்களும் வாடி நின்றன" என்று, இராமனைப் பிரிந்த பிரிவில் பட்டஎல்லாம்

---

1. "வாய்வெரீஇ" என்றதனோடு கூட்டி, "கண்ணநீர்கள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கண்கள்' என்று தொடங்கி.

2. முன்னர், "நாடொறும் இரங்கி" என்று சேர்த்து, பாவம் அருளிச் செய்தார் 'மயர்வற' என்று தொடங்கும் வாக்கியத்தால். இப்பொழுது "நாடொறும் வாய்வெரீஇ" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'பொய்ந்நின்ற' என்று தொடங்கி. ஆக, "நாடொறும்" என்பதனை, இடை நிலைத் தீவகமாக முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார் என்க.

3. மரங்கள் இரங்கக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சேதனம்' என்று தொடங்கி. "மரங்களும்" என்ற உம்மை, மக்களைத் தழுவுகிறது.

4. மரங்கள் இரங்குவதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'எம்பாரை' என்று தொடங்கி. திருவாய்மொழி, 5-ஆம் பத்து, 7-ஆம் திருவாய்மொழி, 7-ஆம் பாசுரம் வியாக்கியானம் பார்க்கவும்.

5. மரங்கள் அழியக் கண்ட இடம் உண்டோ? என்ன, அதற்கு இரண்டு உதாரணம் காட்டுகிறார் 'மரங்கள்' என்று தொடங்கியும், 'மரங்களும்' என்று தொடங்கியும்.

'மரங்கள் நின்று' என்பது, பெரியாழ்வார் திருமொழி. 3. 6: 10 "மரங்களும் வாடி நின்றன" என்பது, ஸ்ரீராமா. அயோத். 59: 4. "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:"

இவள்பேச்சிலே படாநின்றன. [1] பகவானுடைய குணங்களைக் காட்டிலும் குணநிஷ்டர் பாசுரம் அழிக்கும்போலே காணும்.

மணிவண்ணவோ என்று கூவுமால் - [2] இவளையோதான் நீங்கள் மீட்கப்பார்க்கிறது! வடிவழகைச் சொல்லியன்றோ கூப்பிடுகிறது. துரங்கம் வாய் பிளந்தான் உறை தொலைவில்லிமங்கலம் - [3] பண்டு உபகரித்தவன் இப்போது உபகரிக்கைக்கு வந்து இருக்கிற தேசம். கேசிவாயினை வருத்தம் இன்றியே கிழித்தவன் வாழ்கின்ற தேசம். தொலைவில்லிமங்கலம் என்று தன்கரங்கள் கூப்பித்தொழும்-அத்தலை இத்தலை ஆவதே!என்கிறாள்.[4] தன் ஊரின் பெயரைச் சொல்ல எல்லாரும் கைஎடுக்கும்படி பிறந்தவள் கண்டீர் தான் அவன் ஊரைச் சொல்லித் தொழுகிறாள். அன்றிக்கே, இக் கை கண்டார் தொழுமத்தனை என்று போலேகாணும் இவள் இருப்பது என்னுதல். [5] தான் தொழுவது பெண்மைக்குப் போராதேயன்றோ. இதுதான், என்று தொடங்கி? என்னில், அவ் வூர்த் திருநாமம் கற்றதன் பின்னை-இவள் சொல் கற்ற பின்பு. [6] திருநகரியிலுள்ளார் சொல் கற்பது, "திருத்தொலை வில்லிமங்கலம்" என்றுபோலே காணும்.

---

1. "மரங்கள் நின்று" என்று தொடங்கி மேலே ஒப்புமை சொல்லி, அதற்கே உயர்வு சொல்லுகிறார் 'பகவானுடைய' என்று தொடங்கி. என்றது, "வ்ருக்ஷா꞉ பரிம்லாநா꞉" என்றவிடத்தில் சரீரத்திலுண்டான வாட்டமே சொல்லப்பட்டது. இங்கு, "இரங்கும்" என்று மனம் உருகுதல் சொல்லப்படுதலாலே, வேற்றுமை உண்டு என்றபடி.

2. "மணிவண்ணவோ" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவளையோதான்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'வடிவழகை' என்று தொடங்கி.

3. 'கேசியைக்கொன்றவன் வாழ்கிற தொலைவில்லிமங்கலம்' என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பண்டு உபகரித்தவன்' என்று தொடங்கி.

4. கரங்கள் என்னாமல், "தன் கரங்கள்" என்று விசேடித்ததற்கு, இரண்டு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார் 'தன் ஊரின் பெயரை' என்று தொடங்கி. 'இக் கை கண்டார்' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து, தன் கைகளின் அழகினைக்கண்டு ஈடுபட்டு அவன் தொழும்படி இருக்கக்கூடிய இவள் அன்றோ, இப்போது அவனைத் தொழுகிறாள் என்பது.

5. இவள் தான் தொழுவது குற்றமாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தான் தொழுவது' என்று தொடங்கி.

6. சொல் கற்ற பின்பு என்றால், "அவ்வூர்" என்று விசேடிப்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருநகரியிலுள்ளார்' என்று தொடங்கி.

[1]இவள் பேச்சுக் கற்கை என்றும், திருநாமம் சொல்லுகை என்றும் இரண்டு இல்லை. [2]கோயிலிலுள்ளார் "கோயில்" என்றும், "பெருமாள்" என்றும் கற்குமாறு போலே. [3] தோழி, தன்வாயாலே 'திருத்தொலைவில்லிமங்கலம்' என்றால், இவள் சொன்ன இனிமை பிறவாமையாலே, 'அவ்வூர்' என்கிறாள் காணும். என்தான்! முன்பு சொன்னாளே? என்னில், அது அப்படி இராமையால் அன்றோ 'அவ்வூர்' என்கிறது. (9)

606.

**பின்னை கொல்!**நில மாம கள் கோல்? திரும கள் கோல்?பிறந் திட்டாள்
என்ன **மாயங்கொலோ!**இ வள்நெடு மால்என் றேநின்று கூவுமால்
முன்னி வந்தவன் நின்றி ருந்துறையும்தொலை வில்லி மங்கலம்
சென்னி யால்வணங் கும் அவ் வூர்த் திரு நாமம் கேட்பது சிந்தையே.

**பொ - ரை:**—இப்படிப் பிறந்திருக்கும் இவள், நப்பின்னைப் பிராட்டி தானோ? பூமிப்பிராட்டிதானோ? பெரிய பிராட்டியார்தானோ? என்ன ஆச்சரியமோ? இவள் நெடுமால் என்றே நின்று கூவாநிற்பாள்; முற்பட்டு வந்து அவன் நின்று இருந்து உறையும் திருத்தொலைவில்லி மங்கலம் என்னும் திவ்விய தேசத்தைத் தலையால் வணங்குவாள்; அந்த ஊரின் திருநாமத்தைக் கேட்பதுவே சிந்தையாக இராநின்றாள்.

**வி - கு:**—பின்னைகொல் பிறந்திட்டாள், நிலமாமகள்கொல் பிறந்திட்டாள், திருமகள்கொல் பிறந்திட்டாள் எனத் தனித்தனியே கூட்டுக. அவன் முன்னி வந்து நின்று இருந்து உறையும் தொலை வில்லி மங்கலம் என்க.

**ஈடு:**—பத்தாம்பாட்டு. [4]அவனால் அல்லது செல்லாத இவளுடைய ஈடுபாட்டின் மேம்பாட்டினைக் கண்டு, பிராட்டிமாரிலே ஒருத்தியோ? என்று ஐயப்படுகிறாள்.

பின்னைகொல் - நப்பின்னைப் பிராட்டி பிறந்திட்டாளோ? நிலமாமகள்கொல் - அங்ஙன் அன்றியே, பூமிப்பிராட்டி பிறந்

---

1. சொல் கற்ற பின்புதானே, திருநாமங் கற்கவேண்டும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் பேச்சு' என்று தொடங்கி.

2. தாம் கூறியதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'கோயிலிலுள்ளார்' என்று தொடங்கி. கோயில் - திருவரங்கம் பெரியகோயில்.

3. திருத்தொலைவில்லிமங்கலம் என்னாமல், "அவ்வூர்" என்றது, எற்றிற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தோழி' என்று தொடங்கி.

4. பாசுர முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

திட்டாளோ? திருமகள்கொல் - அங்ஙன் அன்றிக்கே, [1] இந்த ஏற்றங்களைக் கொடுக்கும் பிராட்டி தானே பிறந்திட்டாளோ? அன்றிக்கே, [2] சர்வேசுவரனுடைய செல்வமாக இருக்குமவள் பிறந்திட்டாளோ? அச்செல்வம் விளையும் பூமியாயிருக்குமவள் பிறந்திட்டாளோ? அவ் விளைபூமியினுடைய பல ரூபமாயிருக்குமவள் பிறந்திட்டாளோ என்னுதல். [3] அங்ஙன் அன்றிக்கே, அவர்களுக்கு இவள்படி இல்லாமையாலே அவர்கள் ஒப்பு அல்லர்; உலகமெல்லாம் வாழுகைக்கு இவள் ஒருத்தி பிறந்தாளோ? என்றுமாம். [4] "வீரியத்தில் விஷ்ணுவை ஒத்தவர்" என்றாற்போலே, நாய்ச்சிமார் பக்கலிலேயும் ஒவ்வொரு வகைக்கு ஒப்புச் சொல்லலாயிருக்கையாலே கதிர் பொறுக்குகிறாள். [5] "எல்லாச் சாதுக்களுக்கும் உபமானமாக யாதொரு பிரஹ்லாதன் இருந்தானோ" என்கிறபடியே, இவரை எல்லார்க்கும் ஒப்புச்சொல்லலாம், இவர்க்கு ஒப்பாவார் இலர் காணும்.

என்ன மாயம்கொலோ-[6] பகவத் விபூதியில் கூடாதது இல்லையாகாதே! இது என்ன ஆச்சரியம்தான்! இவள் நெடுமால் என்றே நின்று கூவும் - தன்பிச்சினைக் காற்கடைக்கொண்டு

---

1. 'இந்த ஏற்றங்களை' என்றது, இவளுக்கு உண்டான ஏற்றங்களை என்றபடி.

2. மேலே அருளிச் செய்ததனை ஒரு விசேடம் தோற்ற முறை மாற்றி அருளிச்செய்கிறார் 'சர்வேசுவரனுடைய' என்று தொடங்கி.

3. "பிறந்திட்டாள்" என்றதனை, மூவருக்கும் தனித்தனியே கூட்டிப் பொருள் அருளிச்செய்தார் மேல். "பிறந்திட்டாள்" என்பதனை, தனியே கொண்டு பொருள் அருளிச்செய்கிறார் 'அங்ஙன் அன்றிக்கே' என்று தொடங்கி.

4. மூவரையும் ஒப்புச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வீரியத்தில்' என்று தொடங்கி.

"விஷ்ணு நா ஸத்ருசோ வீர்யே ஸோமவத் ப்ரிய தர்சந:"
என்பது, ஸ்ரீராமா. பால. 1 : 18.

5. முற்றுவமை சொன்னால் என்? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'எல்லாச் சாதுக்களுக்கும்' என்று தொடங்கி.

"உபமாநம் அஸேஷாணாம் ஸாதூநாம் யஸ்ஸதாபவத்"
என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 1. 15 : 156. முதல் பத்து, திருமகள் கேள்வன் ஒன்று. பக். 22. பார்க்கவும்.

6. மேலேகூறிய இருவகைப் பொருள்களுள், இரண்டாவது பொருளைக் கடாக்ஷித்துத் தோழியின் ஈடுபாடாக அருளிச்செய்கிறார் 'பகவத் விபூதியில்' என்று தொடங்கி. என்றது, மிக்க விலக்ஷணையான இவள் இந்த உலகத்திலே திருவவதரிக்கையாலே, பகவத் விபூதியில் இது என்ன ஆச்சரியம் என்றபடி.

அவன்பிச்சினைச் சொல்லிக் கூப்பிடாநின்றாள். ஆல்-ஆச்சரியத்தைக் காட்டும் இடைச்சொல். அவன் முன்னி வந்து நின்று இருந்து உறையும் - தன்னுடைய வியாமோகத்துக்கும் அவன் கிருஷி செய்தபடி. முற்பாடனாய் வந்து அவன் நிற்பது இருப்பதாய்க் கொண்டு நித்தியவாசம் செய்கிற ஊர். [1] பசியன், சோறு தாழ்த்தால் படுமாறுபோலே. சென்னியால் வணங்கும்- தன்கரங்கள் கூப்பித் தொழுகையும் [2]வேண்டத்தக்கதானபடி. இருந்த இடத்தே இருந்து தலைசாய்க்கும்படி ஆனாள். அவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே - அவ்வூர்த் திருநாமம் கேட்கச் செவிதாழ்க்கையிலே [3] இவளுக்கு மநோரதம். இவள், '**அவ்வூர்**' என்றது, பெண்பிள்ளை சொன்னாற்போலே இராமையாலே. ஆயின், ஒருகால் சொன்னாளே என்னில், 'அது [4] வறைமுறுகல் ஆயினமையால் அன்றோ பின்பு தவிர்ந்தது' என்று அருளிச்செய்வர். (10)

## 607.

சிந்தையாலும்சொல்லாலும் செய்கையி னாலும் தேவபிரானையே
தந்தை தாய் என் றடைந்த வண்குரு கூர வர் சட கோபன்
முந்தை ஆயிரத் துள் இவை தொலை வில்லி மங்கலத் தைச்சொன்ன
செந்தமிழ் பத்தும் வல்லார் அடிமை செய்வார் திருமா லுக்கே.

**பொ - ரை :**—தேவபிரானையே தந்தை என்றும் தாய் என்றும் மனத்தாலும் வாக்காலும் சரீரத்தாலும் அடைந்த வளப்பம் பொருந்திய திருக்குருகூரிலேயுள்ளவர்கட்குத் தலைவரான ஸ்ரீசடகோபர் அருளிச்செய்த பழைமை பொருந்திய ஆயிரம் திருப்பாசுரங்களுள், திருத்தொலைவில்லிமங்கலம் என்னும் திவ்வியதேசத்தைப் பற்றிச் செந்தமிழால் அருளிச்செய்த இவை பத்துப் பாசுரங்களையும் வல்லவர் திருமாலுக்கு அடிமை செய்வார்கள்.

---

1. 'உறையும்' என்னாமல், "நின்று இருந்து" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பசியன்' என்று தொடங்கி. இதனால், நிற்பது இருப்பதாகிற இரண்டனையும் ஒரே இடத்தில் செய்தான் என்கையாலே, சர்வேசுவரனுக்கு ஆழ்வாரை அநுபவிக்கையில் உண்டான விடாய் எல்லாம் தோற்றுகிறது என்க.

2. 'வேண்டத் தக்கதான படி' என்றது, கையெடுத்துத் தொழுதற்கும் வலி இல்லாமற் போயிற்று என்றபடி.

3. 'இவளுக்கு மனோரதம்' என்றது, பல ஹாநியாலே கேட்கை தானும் வேண்டத்தக்கதானபடியாயிற்று என்றபடி.

4. வறைமுறுகல் - கருகிப்போதல்.

**வி - கு :**—தேவபிரானையே தந்தை தாய் என்று சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும் அடைந்த சடகோபர் என்க. சொன்ன செந்தமிழ் இவை பத்தும் என்க.

**ஈடு :**—முடிவில், [1] இத்திருவாய்மொழியின் கருத்தை விளக்கிக் கூறுவதாய்க் கொண்டு, இதனைக் கற்றவர்கள் இதற்குத் தகுதியான கைங்கரியத்தைச் செய்யப் பெறுவர்கள் என்கிறார்.

சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் - மனம் வாக்குக் காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட அவன் பக்கலிலே ஈடுபட்டனவாய் இருக்கிறபடி. [2]"இரங்கி" என்றும், "மணிவண்ணவோ" என்றும், "தன் கரங்கள் கூப்பித் தொழும்" என்றும் என்னும் இம்மூன்றாலும், இவர்க்கு உண்டான ஈடுபாட்டின்மிகுதியன்றோ இத் திருவாய்மொழியிற் சொல்லிற்று. தேவபிரானையே தந்தை தாய் என்று அடைந்த-அயர்வறும் அமரர்களுக்கு அதிபதியாயிருந்து வைத்துத் தொலைவில்லி மங்கலத்திலே சுலபனாயிருந்தவனே எல்லாவிதமான உறவும் என்று அறுதியிட்டபடியே பற்றுவதும் செய்தவர். வண்குருகூரவர் சடகோபன் - அவனே இவர்க்கு எல்லாவித உறவும் ஆனாற்போன்று அவ்வூரிலுள்ளார் ஆழ்வாரையே எல்லா உறவு முறையாகப் பற்றியாயிற்று இருப்பது. [3]"அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும் தன்மையான்"என்றும், "தாயும் தமப்பனும் மனைவியும் குழந்தைகளும் செல்வமும் மற்றும் எல்லாம் வகுளாபரணர் திருவடிகளே" என்றும் சொல்லுகிறபடியே

---

1. "பத்தும் வல்லார் அடிமை செய்வார் திருமாலுக்கே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மூன்று கரணங்களும் ஈடுபட்டமை மேலே சொல்லப்பட்டதோ? என்ன, 'ஆம்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் '"இரங்கி" என்றும்' என்று தொடங்கி.

3. அவ்வூரிலுள்ளார் அப்படி இருந்தார்கள் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அன்னையாய்' என்று தொடங்கியும், 'தாயும் தமப்பனும்' என்று தொடங்கியும். 'அன்னையாய்' என்பது, கண்ணிநுண் சிறுத்தாம்பு. 'தாயும் தமப்பனும்' என்பது, தோத்திரரத்நம்.

மாதாபிதா யுவதயஃ தநயா விபூதிஃ
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய நஃ குலபதேஃ வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா"

என்பது, தோத்திர ரத்நம். 5.

இருப்பர்கள். முந்தை ஆயிரத்துள்-[1]பழையதான வேதார்த்தத்தை அருளிச்செய்கையாலே. சர்வேசுவரன் இதர சஜாதீயனாய் அவதரித்தாற் போலே, வேதமும் தமிழாய் வந்து இவர் பக்கலிலே அவதரித்தபடி என்னுதல். இவை தொலைவில்லி மங்கலத்தைச் சொன்ன செந்தமிழ் பத்தும் வல்லார் திருமாலுக்கு அடிமைசெய்வார்-இதனைக் கற்கவல்லவர்கள் திருமகள் கேள்வனுக்கு அடிமைசெய்யப் பெறுவர். செந்தமிழ்-செவ்விய தமிழ்;பசுந்தமிழ். அர்த்தத்தைத் தெளிவாகக்காட்டுவது. பெருமாளும் பிராட்டியும் சேர இருக்க இளையபெருமாள் அடிமை செய்தாற்போலே, சேர்த்தியிலே அடிமை செய்யப் பெறுவர் என்பார் [2]திருமாலுக்கு அடிமைசெய்வார்' என்கிறார். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

துவளறுசீர் மால்திறத்துத் தொன்னலத்தால் நாளும்
துவளறுதன் சீலமெல்லாம் சொன்னான்—துவளறவே
முன்னம் அநுபவத்தில் மூழ்கிநின்ற மாறனதில்
மன்னுமுவப் பால்வந்த மால. (55)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. தாம் இப்போது அருளிச்செய்ததாக இருக்க, "முந்தை ஆயிரம்" என்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பழையதான' என்று தொடங்கி. வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி.

2. "திருமாலுக்கு அடிமைசெய்" என்பது, ஔவையார் வாக்கு.

## ஆறாந் திருவாய்மொழி — "மாலுக்கு"

### முன்னுரை

---

ஈடு :—[1]மேல் திருவாய்மொழியிலே இவளுக்குப் பிறந்த தசை முற்றி வியசனம் அதிகரிக்கையாலே மயங்கினவளாய்க் கிடக்க, அது கண்டு ஆற்றாளாய் இவளுடைய தோழியும் மயங்க, இந்த நிலையிலும் இவளைப் பிழைப்பிப்பதற்குரிய விரகுகளை எண்ணுகையாலே தரித்திருக்கிற திருத்தாயார் இவளுடைய வளையம் முதலானவைகள் காணக் காண உருக்குலைகிறபடியைக் கண்டு, அவற்றைத் தனித்தனியே சொல்லிக் கூப்பிடுகிறாள். [2] ஒவ்வொரு நகரம் பத்தநம் முதலானவைகள் வேவப்புக்கால், 'ஒருமாடம் முறிந்தது, மாளிகை முறிந்தது' என்பாரைப்போலே. [3]மேல் திருவாய்மொழியிலே பெறாத நிலைமையாய், 'கிடையாது' என்றாலும் விடமாட்டாதபடி தம்முடைய மனம் வாக்குக் காயங்கள் அவ்விஷயத்திலே மிக்க ஈடுபாடு உண்டானபடி சொல்லிற்று; இதில், அந்த அலாபத்தால் வந்த பரவசப்பட்ட தன்மையைச் சொல்லுகிறது. [4]"நெடுமால் என்றே கூவுமால்" என்று தன்னுடைய வியாமோகத்தைக் காட்டியாயிற்று இவளை இப்படி விளைத்தது; [5]பெரியவன் தாழ

---

1. மேல் திருவாய்மொழி தோழி வார்த்தையாக இருக்க, இந்தத் திருவாய்மொழி தாய் வார்த்தையாதற்குக் காரணம் யாது? என்னும் சங்கையிலே இயைபு அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி.

2. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஒவ்வொரு நகரம்' என்று தொடங்கி. பத்தநம் - பேட்டை. 'வேவப்புக்கால்' என்றதற்குத் தகுதியாக, விரஹாக்நியிலேலே தன்மகள் இழந்தனவற்றைச் சொல்லுகிறாள் என்று தார்ஷ்டாந்திகம் கண்டுகொள்வது.

3. மேல் திருவாய்மொழியும் இத்திருவாய்மொழியும் பிரிவினைச் சொல்லுவதாக இருப்பினும், அதற்கும் இதற்கும் உள்ள வேற்றுமையினைக் காட்டுகிறார் 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி.

4. இதற்குரிய காரணத்தை அருளிச்செய்கிறார் "நெடுமால்" என்று தொடங்கி.

5. அவன் வியாமோகம் கண்டால் இவள் இப்படி ஈடுபடவேண்டுமோ? என்ன, 'பெரியவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

நின்றால் பொறுக்கலாய்இராதன்றோ. [1]"பெருமாளால் அபயம் கொடுக்கப்பட்டபோது, இராவணன் தம்பியும் மஹாபுத்திசாலியுமான விபீஷணன் பூமியைப் பார்த்துக்கொண்டு வணங்கினான்" என்று இவன் தறைப்படும்படியன்றோ அவனுடைய வியாமோகம் இருப்பது.

---

608.

மாலுக்கு வையம் அளந்த மணாளற்கு
நீலக் கருநிற மேக நியாயற்கு
கோலச்செந் தாமரைக் கண்ணற்குஎன் கொங்கலர்
ஏலக் குழலி இழந்தது சங்கே.

**பொ-ரை :**—திருமாலுக்கு உலகத்தை எல்லாம் அளந்த மணவாளனுக்கு மிகக் கரிய நிறத்தையுடைய மேகம்போன்ற தன்மையனுக்கு அழகிய செந்தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனுக்கு, என்னுடைய, தேனோடு மலர்ந்த பூக்களையுடைய வாசனைபொருந்திய கூந்தலையுடைய மகள் இழந்தது சங்கவளையலேயாம்.

**வி - கு :**—மேக நியாயன் - மேகம்போன்ற தன்மையன். ஏலம் - வாசனை. சங்கு - சங்கவளையல்.

இத்திருவாய்மொழி, கலிவிருத்தம்.

**ஈடு :**—முதற்பாட்டு. [2] இவள் வாமன அவதாரத்தில் குணங்களிலும் செயல்களிலும் அகப்பட்டு வளை இழந்தாள் என்கிறாள்.

---

1. இதனைத் திருஷ்டாந்தத்தோடு காட்டுகிறார் 'பெருமாளால்' என்று தொடங்கி.

"ராகவேண அபயே தத்தே ஸந்நதோ ராவணாநுஜ:
விபீஷணோ மஹா ப்ராஜ்ஞோ பூமிம் ஸமவலோகயந்"

என்பது, ஸ்ரீராமா. யுத். 19 : 1.

கரங்கள்மீச் சுமந்து செல்லும் கதிர்மணி முடியன் கல்லும்
மரங்களு முருக நோக்கும் காதலான் கருணை வள்ளல்
இரங்கினன் நோக்குந் தோறும் இருநிலத் திறைஞ்சு கின்றான்
வரங்களின் வாரி யன்ன தாளிணை வந்து வீழ்ந்தான்.

என்பது, கம்பராமாயணம். விபீடணனடைக்கலப். 140.

2. "வையம் அளந்த மணாளற்கு இழந்தது சங்கே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

மாலுக்கு - [1]"மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழியிலே, நீ எனக்கு வேண்டா என்ன, நீ எனக்கு வேண்டும் என்று தடுமாறி நின்ற நிலையைக் காட்டியாயிற்று இவளை இப் பாடு படுத்திற்று. [2] சர்வேசுவரனை உயர்வு தோற்ற நின்றானாகில் இப் பாடுபடாள் கண்டீர்! வையம் அளந்த மணாளற்கு-[3]உகவாதாரையும் கூட விடமாட்டாத வியாமோகம். "அழித்தாய் உன் திருவடியால்" என்று இவளையும் தன் காற்கீழே இட்டுக் கொண்டான் அன்றோ. [4]அச்செயலுக்கு எழுதிக்கொடுத்தாள் இவள் ஒருத்தியுமே அன்றோ; [5] "மூவடிமண் கொண்டளந்த மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன்" என்கிறாள். அவன் இரந்து மண் பெற்றான், இவள் உகந்து பொன் பெற்றாள். உகப்பாலே பெறுமது உரைபெற்றிருக்குமே. மணாளன்-அநுபவிக்கிறவன். நீலக் கருநிற மேக நியாயற்கு - நெய்த்துக் கறுத்த நிறத்தையுடைய மேகத்தைப் போன்ற தன்மையற்கு. அன்றிக்கே, நியாயம் - சமம், ஒப்பு என்னுதல். [6]வேறு **பிரயோஜனம் கருதாது கொடுக்கையும், கொடுக்கப் பெறாத**

---

1. மால் - வியாமோகத்தையுடையவன். அந்த வியாமோகந்தான் எது? என்ன, அருளிச்செய்கிறார் "மின்னிடை மடவார்" என்று தொடங்கி.

2. "மால்" என்ற பதத்துக்கு, எதிர்மறைமுகத்தால் பாவம் அருளிச்செய்கிறார் 'சர்வேசுவரனை' என்று தொடங்கி.

3. "வையம் அளந்த" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உகவாதாரையும்' என்று தொடங்கி. என்றது, விருப்பம் இல்லாத சேதநரையும் விடமாட்டாமல் திருவுலகு அளந்தருளி அவர்களைச் சேஷமாக்கிக் கொண்டாற் போன்று, பிரணயகோபத்தாலே முகம் மாறிநின்ற இவளையும் "அழித்தாய் உன் திருவடியால்" என்று அந்த மறத்தை மாற்றித் தனக்குச் சேஷமாக்கிக்கொண்டான் என்றபடி.

4. "மணாளற்கு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அச்செயலுக்கு' என்று தொடங்கி.

5. அப்படி எழுதிக்கொடுத்தாளோ! என்ன, "மூவடிமண்" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "மூவடிமண்" என்பது, பெரிய திருமொழி. 9. 4 : 2. இத் திருப்பாசுரத்துக்கு ரசோக்தியாக, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் இரந்து' என்று தொடங்கி. உரை என்று மாற்றாய், மாற்று ஏறியிருக்கும் என்னுதல்; உரை என்று கொண்டாட்டத்தைக் கூறுவதாய், உலகத்தாருடைய கொண்டாட்டத்தை யுடைத்தாயிருக்கும் என்னுதல்.

6. மேகத்தின் தன்மை யாது? என்ன, 'வேறு பிரயோஜனம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

**போது உடம்பு வெளுக்கையும்.** [1]வியாமோகம் இன்றியே ஒழிந்தாலும் விட ஒண்ணாத வடிவும் ஔதார்யமும் இருக்கிற படி. நீலக் கரு நிற மேக நியாயற்கு-[2]மஹாபலியை வடிவைக் காட்டி அபகரித்தாற்போலே காணும் இவளையும் வடிவைக் காட்டி அபகரித்தபடி. [3]இவள் பிச்சு ஏறுகைக்கு இட்ட மை இருக்கிறபடி. [4] மைப் படி மேனி அன்றோ.

கோலம் செந்தாமரைக் கண்ணற்கு-காட்சிக்கு இனியவாய் வாத்சல்யத்தாலே சிவந்து, மலர்ச்சி முதலானவைகளையுடைய வான திருக்கண்களையுடையவனுக்கு. [5] "தாமரைத்தடங்கண் விழிகளின் அகவலைப் படுப்பான்" என்று திருக்கண்களாலே யாயிற்று அகப்படுத்திக்கொண்டது. [6] விசேடணம் தோறும் அவனுக்கு என்று தனித்தனியே அகப்பட்ட துறைகளைச் சொல்லுகிறாள். 'மாலுக்கு' என்று தொடங்கி, [7]தன்மகள்மேல் பட்ட அம்புகளை எண்ணுகிறாள்; [8] இது ஒரு குத்து, இது ஒரு வெட்டு, இது ஒரு அம்பு என்று. என் கொங்கு அலர் ஏலம் குழலி - தேன் பெருக்கு எடுக்கின்ற பூக்களையுடைத்தாய், நறு

1. "மாலுக்கு" என்ற பதத்திலே நோக்காக, "மேகநியாயற்கு" என்பதற்கு அருளிச்செய்த இருவகைப்பொருள்களையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'வியாமோகம்' என்று தொடங்கி.

2. "நீலக் கருநிறம்" என்பன போன்ற பதங்களைக் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'மஹாபலியை' என்று தொடங்கி.

3. "நீலக் கருநிறம்" என்ற விசேடணங்கட்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'இவள்' என்று தொடங்கி.

4. திருமேனி கறுத்திருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மைப்படி' என்று தொடங்கி. இது, திருவிருத்தம். பா. 94.

5. திருக்கண்களைச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தாமரை' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 2 : 9.

6. ஓரிடத்திலே 'அவனுக்கு' என்று சொல்லலாயிருக்க, அங்ஙனமின்றி, "மாலுக்கு", "மணாளற்கு", "நியாயற்கு", "கண்ணற்கு" எனத் தனித் தனியே நான்காம் வேற்றுமை கொடுத்துச் சொன்னதற்கு,பாவம் அருளிச்செய் கிறார் 'விசேடணந்தோறும்' என்று தொடங்கி. என்பது, வியாமோஹ குணத் திலும், செயல்களிலும், விக்கிரஹத்திலும், கண்ணழகிலும், தனித்தனியே அகப்பட்ட துறைகளைச் சொல்லுகிறாள் என்றபடி.

7. "மாலுக்கு" என்றது முதல், "கோலச் செந்தாமரைக் கண்ணற்கு" என்றது முடிய, இவற்றை அம்புகளாக உருவகப்படுத்துகிறார் 'தன் மகள்மேல்' என்று தொடங்கி.

8. வேறு ஒரு ரீதியிலே உருவகம் செய்கிறார் 'இது ஒரு குத்து' என்று தொடங்கி.

நாற்றத்தையுடைத்தான குழலையுடைய என்பெண்பிள்ளை. கொங்கு - தேன். அலர் - பூ. ஏலம் - நறுநாற்றம். [1]இவள் மயிர் முடி ஒன்றுக்குத் தோற்றுக் குமிழிநீர் உண்ணும் அவன்கண்டீர் இவளை அழித்தான்! பங்களப்படைகொண்டு, தனிவீரம் செய்வாரை அழிக்குமாறுபோலே. இழந்தது சங்கே - [2]இவள் மயிர்முடி கண்டு அவன் இழக்கக்கடவதனை இவள் இழந்தாள். (1)

## 609.

சங்குவில் வாள்தண்டு சக்கரக் கையற்கு
செங்கனி வாய்ச்செய்ய தாமரைக் கண்ணற்கு
கொங்கலர் தண்ணந் துழாய் முடி யானுக்குஎன்
மங்கை இழந்தது மாமை நிறமே.

**பொ - ரை:**—சங்கம் வில் வாள் தண்டு சக்கரம் என்னும் ஐந்து ஆயுதங்களையும் தரித்த திருக்கரங்களையுடையவனுக்கு, சிவந்த கோவைக்கனி போன்றதிருவதரத்தையும் செந்தாமரைபோன்ற திருக் கண்களையுமுடையவனுக்கு, தேனோடு மலர்கின்ற குளிர்ந்த அழகிய திருத்துழாயைத் தரித்த திருமுடியையுடையவனுக்கு, என் பெண்ணானவள் இழந்தது அழகிய நிறமேயாகும்.

**வி - கு:**—கொங்கு - வாசனையுமாம். மாமை - ஒரு நிறவிசேடமுமாம். இத் திருப்பாசுரத்தில், பஞ்சாயுதங்களையும் ஒருசேர அருளிச் செய்திருத்தல் காண்க.

**ஈடு:**—இரண்டாம்பாட்டு. [3]திருவுலகு அளந்தருளின காலத்தில் திவ்விய ஆயுதங்கள் முதலியவைகளின் அழகிலே அகப்பட்டுத் தன்னுடைய அழகிய நிறத்தை இழந்தாள் என்கிறாள்.

---

1. இறைவனுக்கு, "மாலுக்கு" என்று தொடங்கி, குணம், செயல், வடிவழகு, அவயவசௌந்தர்யம் என்பனவாகப் பலவற்றைச் சொல்லி, இவளுக்கு, "ஏலக்குழலி" என்று ஒன்றனைமட்டும் கூறியதற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'இவள் மயிர்முடி' என்று தொடங்கி. 'பங்களப்படை' என்றது, "மாலுக்கு" என்பது போன்றவைகளாற் கூறிய குணம் முதலானவற்றை. பங்களப்படை - கூளப்படையான கூட்டுப்படை. 'தனிவீரம் செய்வார்' என்றது, கொங்கலர் ஏலக் குழலியை. தனிவீரம் செய்வாரைப் பங்களப் படைகொண்டு அழிக்குமாறு போலே என்று கூட்டுக.

2. "கொங்கு அலர் ஏலம்" என்ற விசேடணங்கட்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'இவள் மயிர்முடி' என்று தொடங்கி.

3. மேல்வரும் திருப்பாசுரங்களில் எல்லாம் ஒவ்வோர் அவதாரங்களைச் சொல்லுகையாலே, அவற்றிற்குத் தகுதியாக, இத்திருப்பாசுரத்தையும் சென்ற திருப்பாசுரத்திற் கூறிய அவதாரத்தோடே சேர்த்து, "சங்கு வில் வாள்" என்பன போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

சங்கு வில் வாள் தண்டு சக்கரம் கையற்கு- ஸ்ரீபஞ்சாயுதங்களின் சேர்த்தி அழகிலே ஆயிற்று இவள் ஈடுபட்டது. இவளுடைய [1]ஓர் ஆபரணம் வாங்குகைக்கு எத்தனை ஆபரணம் பூண்டு காட்டினான்? கைக்குமேல் ஐந்துங் காட்டிக்காணும் இவளுடைய ஆபரணம் வாங்கிற்று. [2]ஆபரணகோடியிலும் ஆயுதகோடியிலும் இருபுடைமெய்க் காட்டின அன்றோ இவைதாம். செம்கனிவாய்ச் செய்ய தாமரைக் கண்ணற்கு-கையிலே ஒன்றனைத் தரித்துக் காட்டிக் கவர்ச்சி செய்யவேண்டி இருந்ததோ? புன்சிரிப்பும் நோக்கும் அமையாதோ நலிகைக்கு? கொங்கு அலர் தண் அம் துழாய் முடியானுக்கு - தேன்பெருக்கு எடுக்கின்ற திருத்துழாய்மாலையை, ஆதிராஜ்ய சூசகமான திருமுடியிலேயுடையவனுக்கு. வைத்த வளையத்தைக் காட்டிக் காணும் இவள் நிறத்தை அபகரித்தது. ஆக, ஆபரணசோபை, அவயவசோபை, ஒப்பனை அழகு என எத்தனை செய்யவேணும் இவள் நிறத்தினைக் கொள்ளுகைக்கு என்றபடி. என்மங்கை-தன்பருவத்தாலே இவற்றையடையத் தோற்பிக்குமவள் கண்டீர் நிறம் இழந்தாள்! மாமைநிறம் - அழகிய நிறம். மாமை-அழகு. (2)

610.

நிறங்கரி யானுக்கு நீடுலகு உண்ட
திறங்கிளர் வாய்ச்சிறுக் கள்வ ரவர்க்கு
கறங்கிய சக்கரக் கையவ னுக்குஎன்
பிறங்கிருங் கூந்தல் இழந்தது பீடே.

**பொ - ரை :**—கரிய நிறத்தையுடையவனுக்கு, பெரிய உலகத்தை உண்ட கூறுபாடு விளங்குகின்ற திருவாயினையுடைய சிறிய வடிவிலே பெரிய உலகங்களை எல்லாம் அடக்கிய கள்வனுக்கு, சுழலுகின்ற சக்கரம் பொருந்திய கையையுடையவனுக்கு, என்னுடைய, விளங்குகிற கரிய கூந்தலையுடைய பெண்ணானவள் பெருமையை இழந்தாள்.

---

1. ஓர் ஆபரணம்-மாமைநிறம். ‘கைக்குமேல் ஐந்துங்காட்டி’ என்பதற்கு, திருக்கைகளில் இருக்கிற ஐந்து ஆயுதங்களைக் காட்டி என்பது நேர்பொருள். குறடு கீறி ஆடுகிற அளவிலே அஞ்சுக்கு இலக்காய் ஒரு பருக்கை இருந்தால், ‘கைமேலே அஞ்சுபோட்டு வெட்டுகிறேன்’ என்று ஒட்டம் பேசி அப்படியே போகட்டு அதனை வாங்குகை என்பது வேறும் ஒருபொருள்.

2. ஆயுதங்கட்கு ஆயுதங்களின் தன்மை ஒழிய, ஆபரணங்களின் தன்மை உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘ஆபரண கோடியிலும்’ என்று தொடங்கி. இருபுடைமெய்க்காட்டு-இருபக்கங்களிலும் சோதல்.

வி - கு:—பிறங்கிருங் கூந்தல்: அன்மொழித் தொகை. கறங்குதல் - சுழலுதல்.

ஈடு:—மூன்றாம்பாட்டு. [1]ஆலிலையில் சயனித்தவனுடைய படிகளிலே அகப்பட்டு இவள் தன் பெருமையை இழந்தாள் என்கிறாள்.

நிறம் கரியானுக்கு - [2]"இழந்தது மாமைநிறம்" என்றாள்; அந்த நிறமும் அவன் பக்கலிலே கிடக்கையாலே இரட்டித்துக் காட்டிற்று வடிவு. [3]தன் நிறத்துக்கு மேலே ஒருநிறம் உண்டாயிற்று. "நீலக் கருநிறமேக நியாயற்கு" என்ன வேண்டாவாயிற்று; நிறத்துக்கு ஒப்பாக மாட்டாமையாலே. நெய்த்துக் குளிர்ந்து சிரமத்தைப் போக்குகின்ற வடிவினையே சொல்லுகிறாள். நீடு உலகு உண்ட திறம் கிளர் வாய் - பரப்பையுடைத்தான பூமியைத் திருவயிற்றிலே வைத்த பிரகாரத்தைக் கோட்சொல்லாநின்ற திருவதரத்தையுடைய. கிளருகை - சொல்லுகை. [4]"வையம் ஏழும் கண்டாள் பிள்ளை வாயுளே" என்னக் கடவதன்றோ. ரக்ஷிக்குந்தன்மையை விளக்கிக் காட்டுகின்ற திருவதரம். சிறுக் கள்வரவர்க்கு - [5]சிறுவயிற்றிலே பெரிய உலகங்களை வைத்து, அளவிட முடியாத செயலையுடையவ

1. "நீடுலகுண்ட" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "நிறம் கரியானுக்கு" என்றதற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'இழந்தது மாமை' என்று தொடங்கி. என்றது, மேலே "நீலக் கருநிறமேக நியாயற்கு" என்று மேகத்தை ஒப்பாகச் சொல்லிப் பார்த்தாள், அது ஒப்பாக மாட்டாமையாலே மேகத்தை நீக்கி, "நிறம் கரியான்" என்று "நீலக் கருநிறம்" என்றதனையே சொல்லுகின்றாள் என்றபடி. இரட்டித்துக் காட்டுகையாலே ஒப்பு இல்லை என்க.

3. அதனை விவரணம் செய்கிறார் 'தன் நிறத்துக்குமேலே' என்று தொடங்கி. இதற்குக் காரணம் யாது? என்ன 'நீலக் கருநிறம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதற்குக் கருத்து அருளிச் செய்கிறார் 'நிறத்துக்கு' என்று தொடங்கி.

4. அப்படிக் கோட்சொல்லுமோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'வையம் ஏழும்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 1. 1: 6. இதனால் பலித்த பொருளை அருளிச் செய்கிறார் 'ரக்ஷிக்கும் தன்மையை' என்று தொடங்கி.

5. சிறியவனாக இருக்கச்செய்தே களவு ஏது? என்ன, பாலனாயிருக்கச் செய்தே அளவிடமுடியாத அதிமானுஷ சேஷ்டிதங்களையுடையனாயிருக்கை என்கிறார் 'சிறு வயிற்றிலே' என்று தொடங்கி.

னுக்கு. நீடு உலகு உண்ட திறம் கிளர் வாய் - [1] வேறு ஒருவர் வாயாலே கேட்கவேண்டாதே, இவன் வாயாலே சொல்லக் கேட்கலாம்படி. சிறுக்கள்வரவர்க்கு - [2]வடிவில் சிறுமையும் ரக்ஷிக்குந் தன்மையில் பாரிப்பும் இருக்கிறபடி. தன்னுடைய ரக்ஷிக்கும் தன்மையையும் அகடிதகடநா சாமர்த்தியத்தையும் காட்டியாயிற்று இவளை அகப்படுத்திற்று.

கறங்கிய சக்கரக் கையவனுக்கு - பகைவர்களை அழிக்க வேண்டும் விரைவாலே எப்பொழுதும் சுழலாநின்றுள்ள திரு வாழியைத் திருக்கையிலேயுடையவனுக்கு: [3] தான் ரக்ஷகனை அளவன்றியே, பரிகரமும் ரக்ஷணத்திலே முயற்சியோடு கூடி இருக்கிறபடி. [4] அவன் கைப்பிடித்தார் எல்லாரும் ரக்ஷணத் திலே விரைவுடையராயன்றோ இருப்பது. [5] ஸ்ரீ பாஞ்சஜன்ய ஆழ்வானும், "ஒரு வினை உண்டாகவற்றே, நாம் வாய்க்கரை யிலே நின்று ஓசையை விளைத்து வினை தீர்க்க!" என்று பிரார்த்தியாநிற்கும். என் பிறங்கு இரும் கூந்தல்-சுற்றுடைத் தாய் ஒழுகு நீண்ட மயிர்முடியையுடையவள். அன்றிக்கே, மிகவும் பெரிய குழலையுடையவள் என்றுமாம். இருமை - பெருமை. இங்குப் பெருமையாவது, நீட்சி. பிறங்குதல் - மிகு தல். கூந்தல் - மயிர். "கூந்தல் ஐம்பால்....குழல்" என்பது, திவாகரம், மக்கள் பெயர். [6] எதிர்த்தலையைத் தோற்பிக்கும் குழலையுடையவள் கண்டீர் தன்பெருமையை இழந்தாள். பீடு-

---

1. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'வேறு ஒருவர்' என்றுதொடங்கி.

2. வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'வடிவில் சிறுமையும்' என்று தொடங்கி. 'ரக்ஷிக்குந்தன்மையில் பாரிப்பு' என்றது, "நீடு உலகு உண்ட" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

3. "கறங்கிய" என்ற விசேடணத்துக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தான் ரக்ஷகனை' என்று தொடங்கி.

4. மற்றையோரில் இவனுக்கு உள்ள வேறுபாட்டினை அருளிச்செய்கி றார் 'அவன் கைப்பிடித்தார்' என்று தொடங்கி. என்றது, மற்றையோர் ஒரு வருக்கு ஒன்றனைக் கொடுக்கப் புக்கால் பரிகரங்களாயிருப்பார் தடை செய்வார் கள் அல்லரோ; இவனுக்கு அங்கனம் இல்லை என்றபடி.

5. ஆனல், ஸ்ரீ பாஞ்சஜன்ய ஆழ்வானுக்கு ரக்ஷணத்தில் விரைவு இல் லையே? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'ஸ்ரீ பாஞ்சஜன்ய ஆழ் வானும்' என்று தொடங்கி.

6. கூந்தலை வர்ணித்ததற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'எதிர்த் தலையை' என்று தொடங்கி,

பெருமை. [1]"ஸ்ரீ ஜனக மகாராஜனுடைய புத்திரியான அந்தச் சீதா பிராட்டி, யாதொருவருக்கு மனைவியாக இருக்கிறளோ அவருடைய பராக்கிரமும் அளவிட முடியாதது" என்று அவனுக்கும் பெருமையைக் கொடுக்கும் பெருமையை அன்றோ இவள் இழந்தது. (3)

## 611.

பீடுடை நான்முக னைப்படைத் தானுக்கு
மாடுடை வையம் அளந்த மணாளற்கு
நாடுடை மன்னர்க்குத் தூதுசெல் நம்பிக்குஎன்
பாடுடை அல்குல் இழந்தது பண்பே.

**பொ - ரை :**—பெருமைபொருந்திய பிரமனை உண்டாக்கினவனுக்கு, செல்வம்பொருந்திய பூமியை அளந்த மணவாளனுக்கு, உலகத்தையுடையவர்களான பாண்டவர்களுக்குத் தூதுசென்ற நம்பிக்கு, என்னுடைய, பரப்புப் பொருந்திய அல்குலையுடைய பெண்ணானவள் பண்பினை இழந்தாள்.

**வி - கு :**— மணாளன் என்பது, மணவாளன் என்பதன் திரிபு. பாடுடை அல்குல் : அன்மொழித் தொகை.

**ஈடு:**—நான்காம்பாட்டு. [2]பிரமனைப் படைத்தவன் என்னும் மேன்மையைப் பாராதே தன்னை அடைந்தவர்களுக்காகத் தூதுசென்ற மஹாகுணத்தையுடையவனுக்கு இவள் நீர்மையை இழந்தாள் என்கிறாள்.

பீடு உடை நான்முகனைப் படைத்தானுக்கு - [3]பதினான்கு உலகங்களையும் படைக்கவல்ல பெருமையையுடைய பிரமனைப் படைத்தவனுக்கு. பீடு-பெருமை. மாடு உடை வையம் அளந்த மணாளற்கு - திருவுலகு அளந்தருளின வஞ்சனை பொருந்திய செயலாலே [4]தன்னை எனக்கே யுரியவனாகச் செய்தவனுக்கு.

---

1. வியாக்கியாதாவின் ஈடுபாடு : 'ஸ்ரீ ஜனகமஹாராஜனுடைய' என்று தொடங்கும் வாக்கியம்.

"அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜனகாத்மஜா
ந த்வம் ஸமர்தஸ்தாம் ஹர்த்தும் ராம சாபாஶ்ரயாம்வநே"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 37 : 18.

2. "பீடுடை நான்முகனை" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

3. பிரமனுக்குரிய பெருமையினை விளக்குகிறார் 'பதினான்கு உலகங்களையும்' என்று தொடங்கி.

4. 'தன்னை எனக்கே உரியவனாகச் செய்தவனுக்கு' என்பது, "மணாளன்" என்பதன் பொருள்.

மாடுடை - செல்வம் பொருந்திய என்னுதல்; 'மாடு' என்று இடமுடைமையாய், பரப்பையுடைய என்னுதல். நாடுடை மன்னர்க்குத் தூதுசெல் நம்பிக்கு - நாடுடைய இராஜாக்களான பாண்டவர்களுக்குத் தூதுபோய் அதனாலே பூர்ணனானவனுக்கு. [1]பகவத் அபிப்பிராயத்தாலே, அவர்களை '**நாடுடை மன்னர்**' என்கிறார் காணும். [2]"இருக்கைக்கு ஒரு குறிச்சியும் கொடோம்" என்று இராச்சியம் செய்கிறவர்கள் துரியோதனாதியர்களாக இருக்க; [3]"ஸ்ரீ ராமபிரான், விபீடணனை இராக்கதர்களுக்கு அரசனாக இலங்கையில் முடிசூட்டிச் செய்யத்தக்க செயலைச் செய்து முடித்தவரானார்" என்றது போன்று. '**இன்னார் தூதன்**' என நின்ற செயலாலே, இட்ட சட்டை பீறும்படி இருத்தலின் '**நம்பிக்கு**' என்கிறாள். [4]அடியிலே உலகத்தை உண்டாக்கி, அபஹரித்தார் உளராகில் எல்லை நடந்து மீட்டுக்கொண்டு, அதனைத் தன்னை அடைந்தவர்க்கு ஆக்குகைக்கு இழிதொழில் செய்த இந் நீர்மையையுங் காட்டி இவள் நீர்மையைக் கவர்ந்தான். என் பாடுடை அல்குல் - இடமுடைத்தான நிதம்பப்பிரதேசத்தையுடையவள். பாடு - இடம். [5]"திரௌபதியினுடைய நிதம்பப் பிரதேசத்தைக் கண்ட பெண்கள் மனத்தினாலே ஆண் தன்மையை அடைந்தார்கள்" என்பது

1 நாடு இழந்த பாண்டவர்களை "நாடுடைமன்னர்" என்பது என்? என்ன, 'பகவத் அபிப்பிராயத்தாலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

2. "ஈ இருக்குமிடமெனினும் இப்புவியில் யானவர்க்கு அரசினிக் கொடேன்" என்பது, வில்லிபாரதம். (கிருஷ்ணன் தூது.) குறிச்சி - குப்பம்; சிறிய ஊர்.

3. அடியார்களுடைய காரியத்தைச் செய்தவதனாலே பூர்ணனாயிருப்பானோ? இறைவன் எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீராம பிரான்' என்று தொடங்கி.

"அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்
க்ருதக்ருதயஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ"

என்பது, சங்க்ஷேப ராமாயணம். 85.

4. முதல் மூன்று அடிகளையும் கடாக்ஷித்து, பாவம் அருளிச் செய்கிறார் 'அடியிலே' என்று தொடங்கி.

5. அல்குலைக் கொண்டாடுவதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'திரௌபதியினுடைய' என்று தொடங்கி.

"பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா: ஜகநம் கநம்
யா: ஸ்திரியோ த்ருஷ்டவத்ய: தா: பும்பாவம் மநஸா யயு:"

என்பது, பாரதம்.

போன்று, ஸஜாதீயரை அழிக்கும் வடிவழகைக் குறித்தபடி. [1]அவன், ஆடவர்களுடைய கண்களையும் மனத்தையும் அபஹரிக்கின்றவன் ஆற்போலே. பண்பு - நீர்மை. (4)

612.

பண்புடை வேதம் பயந்த பரனுக்கு
மண்புரை வையம் இடந்த வராகற்கு
தெண்புனற் பள்ளிஎம் தேவபி ரானுக்குஎன்
கண்புனை கோதை இழந்தது கற்பே.

**பொ - ரை:**—பகவானுடைய தன்மைகளை உள்ளவாறே சொல்லும் பண்பினையுடைய வேதங்களைப் பிரமனுக்கு உபதேசித்த மேலானவனுக்கு, அணுக்கள் செறிந்த உலகத்தை மேலே கொண்டு வந்த ஸ்ரீ வராகப்பெருமானுக்கு, தெளிந்த தண்ணீரையுடைய பிரளயவெள்ளத்திலே பள்ளிகொண்ட எம் தேவபிரானுக்கு, என்னுடைய, கண்டார் கண்களைப் பிணிக்க வல்ல மயிர்முடியையுடைய பெண்ணானவள் கல்வியை இழந்தாள்.

**வி - கு:**—மண் - அணுக்கள். "மணிதிணிந்த நிலனும்" என்பது, புறம். (செய்-2.) கற்பு - கல்வி.

**ஈடு:**—ஐந்தாம் பாட்டு. [2] வேதங்களைக் கொடுத்தல் முதலான உபகாரங்களைச் செய்தவனுக்கு என்மகள் கல்வியினை இழந்தாள் என்கிறாள்.

பண்புடைவேதம்-[3]ஈசுவரனை உள்ளபடியே காட்டித் தரும்

---

புண்ணவாம் புலவு வாட்கைப் பொலன்கழல் புனைந்த பைந்தார்க்
கண்ணவாம் வனப்பி னானைக் காமனே கண்ட போழ்தும்
பண்ணவாம் பவளச் செவ்வாய்ப் படாமுலைப் பரவை அல்குல்
பெண்ணவா மிற்கு மென்றால் பிணையனாட் குய்தல் உண்டோ?

என்பது, சிந்தாமணி. 1528.

"ஆடவர் பெண்மையை அவாவு தோளினாய்
தாடகை என்பதுஅச் சழக்கி நாமமே"

என்பது, கம்பராமாயணம். தாடகை வதைப்பட.

1. சஜாதீயரை அழிக்கக்கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'அவன்' என்று தொடங்கி.

"பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 3: 29.

2. "பண்புடைவேதம்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

3. வேதத்திற்குப் பண்பு ஏது? என்ன, 'ஈசுவரனை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்,

நீர்மையையுடைய வேதம். பயந்த - [1]தூங்கினவன் எழுந்தான் என்ற கணக்கிலே பிரமனுக்குக் கற்பிக்கை. பரனுக்கு-[2]"அந்தப் பகவான் உலகங்களைப் படைப்பதற்கு முன்பு பிரமனைப் படைத்து அவனுக்கு வேதங்களை உபதேசித்தார்" என்கிற படியே, பிரமனுக்கு வேதங்களாகிய கண்களைக் கொடுக்கையாலும், வேதங்களிலேயே அறியப்படுகின்றவன் ஆகையாலும் எல்லோரைக்காட்டிலும் மேலானவனுக்கு. [3]அறிவு இழந்தார்க்கு அறிவு கொடுக்குமவன் கண்டீர் இவள் அறிவை அழித்தான். மண்புரைவையம் - மண்மிக்கபூமி. இடந்த வராகற்கு - [4]மண்ணோடு விண்ணோடு வாசி அறத் தன் முகத்தால் ரக்ஷித்த படி. [5]பிறருடைய சொரூப சித்திக்காகத் தன்னை அழிய மாறுமவன். [6]அழிவுக்கு இட்ட வடிவுக்கு ஆலத்தி வழிக்கவேண்டும்

---

1. நித்தியமான வேதத்தைப் பயந்தான் என்பது எப்படி? என்ன அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தூங்கினவன்' என்று தொடங்கி. 'தூங்கினவன் எழுந்தான் என்ற கணக்கிலே' என்னும் இவ்விடத்தில்

> ஸம்ஸ்காரம் ப்ரதி ஸஞ்சரேஷு நிததத் ஸர்கேஷு தத்ஸ்மாரிதம்
> ரூபம்நாமச தத்ததர்ஹ நிவஹே வ்யாக்ருத்ய ரங்காஸ்பத
> ஸுப்தோத்புத்த விரிஞ்சபூர்வஜநதாம் அத்யாப் யதத்தத்திதம்
> சாஸந்நஸ்ம்ருத காத்ருகாந் வஹஹி யத்வேதாஃ பிரமாணம் ததஃ

என்ற ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் உத்தரசதகம் 17-வது சுலோகம் அநுசந்தேயம்.

2. 'அந்தப் பகவான்' என்று தொடங்கும் பொருளையுடைய சுருதி, "யோபிரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்பது. இது, ஸ்வேதாஸ்வதரம்.

மேற்பாசுரத்தில், "யோபிரஹ்மாணம் விததாதி பூர்வம்" என்பதனையும், இப்பாசுரத்தில் "யோவை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்பதனையும் சொல்லுகிறது என்று அருளிச்செய்வர்.

3. "பண்புடை வேதம் பயந்த பரனுக்கு, கற்பு இழந்தாள்" என்கிற திருத்தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அறிவு இழந்தார்க்கு' என்று தொடங்கி.

4. முதல்வரியையும் சேர்த்துக்கொண்டு "இடந்த வராகற்கு" என்பதற்கு, ரசோக்தியாக அருளிச் செய்கிறார் 'மண்ணோடு' என்று தொடங்கி. மண்ணைத் தன் முகத்தால் ரக்ஷிக்கையாவது, திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கை. விண்ணைத் தன் முகத்தால் ரக்ஷிக்கையாவது, அன்னத்தின் உருவமாய் வேதத்தை உபதேசித்து ரக்ஷிக்கை.

5. விகாரம் பொருந்திய வராகவேடத்திற்குக் கற்பு இழக்கக் கூடுமோ? என்ன, 'பிறருடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, குணத்திற்கு ஈடுபட்டாள் என்றபடி.

6. குணத்திற்கேயன்றி அழகிற்கும் ஈடுபட்டாள் என்கிறார் 'அழிவுக்கு' என்று தொடங்கி. அழிவுக்கு இட்டவடிவாவது, தன் மேன்மையை விட்டு நீர்மையைக் கொள்ளுகைக்கு ஈடாகக் கொண்ட வராக வேடம்,

படியன்றே இருப்பது. [1]"மானமிலாப் பன்றியாம்தேசு"என்னக் கடவதன்றே. [2]மண்மிகுதி சொல்லிற்று, எடுக்கையில் அருமை தோற்றுகைக்காக. வராகற்கு-[3] அல்லாத ரக்ஷணம் போல் அன்றியே, எல்லார்க்கும் ஏற முக்கியமான ரக்ஷணம் இதுவன்றே. [4]"எயிற்றிடை மண்கொண்ட எந்தை இராப்பகல் ஓதுவித்து என்னைப் பயிற்றிப் பணிசெய்யக் கொண்டான்" என்கிறபடியே, இவளைப் போன்றார்க்கு ஞானத்தைக் கொடுக்கிறவன் இவளை அறிவு அழித்தான்.

தெண் புனல் பள்ளி - தெளிந்த புனலையுடைய ஏகார்ணவத்தைப் படுக்கையாகவுடையவன். [5]அழிந்த உலகத்தைப் படைத்து, படைக்கப்பட்ட சேதநர்க்கு அறிவு கொடுக்கக் கிடக்கிறவனுக்கு. [6] சத்தையே பிடித்து உண்டாக்கி அறிவு

---

1. அப்படி அழகியதாக இருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மானமிலாப்பன்றி' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி. 11. 8.

2. "மண்புரை" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'மண்மிகுதி சொல்லிற்று' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. மேலே கூறிய ரக்ஷணம் போன்று தேகத்தைப் பூண்கட்டிக் கொடுக்கை அன்றிக்கே, 'ஸ்திதே' என்றும், 'ததஸ்தம்' என்றும் தொடங்குகிற இரண்டு சுலோகங்களை உபதேசித்த காரணத்தாலே பிறவிக்கடலில் நின்று கரை ஏற்றும்படியான அவதாரம் என்று கூறத் திருவுள்ளம்பற்றி ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அல்லாத ரக்ஷணம்' என்று தொடங்கி. 'எல்லார்க்கும் ஏற' என்பதற்கு, எல்லாரும் பிறவிக்கடலில் நின்றும் கரை ஏறுவதற்கு என்பது நேர்பொருள். எல்லாரும் சம்மதிக்க என்பது வேறும் ஒருபொருள்.

> ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே சரீரே ஸதி யோ நர:
> தாது ஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விச்வரூபஞ்ச மாமஜம். (1)
> ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்டபாஷாண ஸந்நிபம்
> அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம்கதிம். (2)

என்பன வராக சரமம்.

4. "வராகற்குக் கற்பு இழந்தாள்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'எயிற்றிடை' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 5. 2: 3. 'இவளைப் போன்றோர்க்கு' என்றது, பெரியாழ்வாரை.

5. "தெண்புனல்பள்ளி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அழிந்த உலகத்தை' என்று தொடங்கி. 'அழிந்த உலகத்தைப் படைத்து' என்றது, "நான்முகனைப் படைத்தானுக்கு" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

6. இங்ஙனம் சொல்லுகிற திருத்தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'சத்தையே பிடித்து' என்று தொடங்கி.

கொடுக்கக்கடவ அவன்கண்டீர் உண்டான அறிவினை வாங்கிக்கொள்ளுகிறான்! எம் தேவபிரானுக்கு-பிரமன் சிவன் முதலானவர்கட்கும் உபகாரகனானவனுக்கு. [1] "ஈச்வரோஹம்" என்று இருந்தாளாகில் அறிவு இழக்கவேண்டா கண்டீர்! என் கண் புனை கோதை - [2]கண்டார் கண்கள் பிணிப்பு உண்கையாலே, அவற்றை ஆபரணமாகவுடைய மயிர்முடியையுடையவள். அதாவது, வைத்த கண் வாங்க ஒண்ணாதிருக்கை. கண்களுக்கு விஷயம் தலையாய்விட்டது. இழந்தது கற்பே - எல்லார்க்கும் ஞானத்தைக் கொடுக்கக்கூடியவனை அவனுக்குங் கூட அறிவினைக் கொடுக்கும் இவள் கண்டீர் அறிவினை இழந்தது! [3] "இராஜாக்களின் இலக்ஷணங்களை அறிந்தவளே" அன்றோ. கற்பு - கல்வி, அதாவது, ஞானம். (5)

## 613.

கற்பகக் காவன நற்பல தோளற்கு
பொற்சுடர்க் குன்றன்ன பூந்தண் முடியற்கு
நற்பல தாமரை நாண்மலர்க் கையர்க்குஎன்
விற்புரு வக்கொடி தோற்றது மெய்யே.

**பொ - ரை:—** கற்பகச்சோலையைப் போன்ற சிறந்த பல தோள்களையுடையவனுக்கு, பிரகாசம் பொருந்திய பொன்மலையைப் போன்ற அழகிய குளிர்ந்த திருமுடியையுடையவனுக்கு, அன்று பூத்த அழகிய தாமரை மலர்கள் போன்ற திருக்கைகளையுடையவனுக்கு, வில்லினைப்

---

1. "எம்" என்கிறவனுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'ஈஶ்வரோஹம்' என்று தொடங்கி. 'வேண்டா கண்டீர்' என்றதன்பின், 'அச்செயலுக்குத் தோற்று "எம்" என்கையாலே அறிவு இழந்தாள்' என்ற வாக்கியத்தைச் சேர்த்துக்கொள்வது.

2. பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங் கழகிற் கெல்லை யில்லையாம் என்று நின்றாள்
கண்பிற பொருளிற் செல்லா கருத்தேனின் அஃதே நீண்ட
பெண்பிறந் தேனுக் கென்றால் என்படும் பிறருக் கென்றாள்.

என்பது, கம்பராமாயணம், சூர்ப்பணகைப்படலம்.

3. அவனுக்கும் அறிவைக் கொடுக்கும்படியான அறிவு இவளுக்கு உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இராஜாக்களின்' என்று தொடங்கி.

"தேவகார்யம் ஸ்ம ஸா க்ருத்வா க்ருதஜ்ஞா ஹ்ருஷ்டசேதநா
அபிஜ்ஞா ராஜதர்மாணாம் ராஜபுத்ரம் ப்ரதீக்ஷதே"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 26: 4.

போன்ற புருவங்களையுடைய பூங்கொம்புபோன்ற என் பெண்ணானவள் தனது சரீரத்தினை இழந்தாள்.

வி - கு :—கா - சோலை. அன்ன - ஒத்த. சுடர் பொற்குன்று என மாற்றுக.

ஈடு :—ஆரும் பாட்டு. [1]பெரும் புறக்கடலிலே திருப்பள்ளி கொண்டவனுடைய அவயவ சௌந்தர்யத்திலே அகப்பட்டு இவள் தன்னுடைய மெய்யினை இழந்தாள் என்கிறாள்.

கற்பகம் கா அன்ன நல் பல தோளற்கு-[2]தன் அவயவங்களைக் காட்டி இவளுடைய அவயவினயக் கொண்டான். கற்பகச்சோலை போலேயாய், அவ்வளவன்றியே விலக்ஷணமான பல திருத்தோள்களையுடையவனுக்கு. சுடர் பொன் குன்று அன்ன பூந் தண் முடியற்கு - ஒளியையுடைய பொன் மலை போலேயாய்க் காண்டற்கு இனியதாய்த் திருமுடிக்குத் தகுதியான திருவபிடேகத்தையுடையவனுக்கு. பூ என்பதற்கு, மாலைகளாலே அலங்கரிக்கப்பட்ட என்னலுமாம். திருமுடியைக் கூறியது, எல்லா ஆபரணங்களுக்கும் உபலக்ஷணம். நல் பல நாள் தாமரை மலர்க் கையற்கு-நன்றாய்ப் பலவாய்ச் செவ்வித் தாமரைப் பூப்போலே இருக்கிற திருக்கைகளையுடையவனுக்கு. என் வில்புருவம் கொடி - வில்போலே இருக்கிற புருவத்தையுடைய கொடிபோலே இருக்கிற என்பெண். [3]பிரஹ்மாஸ்திரத்தைக்கொண்டிருந்தும் பட்டுக் கிடப்பாரைப்போலே, வெற்றிக்குக் காரணமான பரிகரத்தைக் கொண்டிருந்தும் கண்டீர் தோற்றது! தோற்றது மெய்யே - [4]"ஒரு மாதத்திற்கு மேல் பிழைத்திருக்க மாட்டேன்" என்னப் பண்ணும் வடிவைக்

---

1. இத்திருப்பாசுரத்தில் தனியே ஓர் அவதாரத்தைச் சொல்லாமையாலே, மேல் திருப்பாசுரத்திற் சொன்ன பெரும்புறக்கடலில் பள்ளிகொண்டவனையே சொல்லுகிறது என்றுகொண்டு, "கற்பகக்காவன" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "நற்பல தோளற்கு, தோற்றது மெய்யே" என்பதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'தன் அவயவங்களை' என்று தொடங்கி.

3. "விற்புருவக்கொடிதோற்றது" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பிரஹ்மாஸ்திரத்தை' என்று தொடங்கி.

4. "ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ
ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே ஸத்யே நாஹம் ப்ரவீமி தே"
என்பது, ஸ்ரீராமா. சுந். 40 : 10.

காட்டி, [1]" கணநேரமும் பிழைத்திருக்கமாட்டேன் " என்னப் பண்ணும் வடிவினைக் கண்டீர் கொண்டது. தன்வசப்படாத சரீரத்தையுடையவளானாள் என்பது கருத்து. (6)

614.

மெய்யமர் பல்கலன் நன்கணிந் தானுக்கு
பையர வின்அணைப் பள்ளியி னானுக்கு
கையொடு கால்செய்ய கண்ணபி ரானுக்குஎன்
தையல் இழந்தது தன்னுடைச் சாயே.

**பொ - ரை :**—திருமேனிக்குப் பொருந்தின பலவகைப்பட்ட ஆபரணங்களைக் காட்சிக்கு இனியதாம்படி அணிந்திருப்பவனுக்கு, படத்தையுடைய ஆதிசேஷனைப் படுக்கையாகவுடையவனுக்கு, திருக் கரங்களும் திருவடிகளும் செந்நிறத்தோடு கூடின கண்ணபிரானுக்கு, என் பெண்ணானவள் தன்னுடைய சோபையை இழந்தாள்.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [2]திருப்பாற்கடலிலே திருக்கண் வளர் கின்றவனுடைய ஆபரணசோபை முதலானவைகளிலே அகப் பட்டு இவள் லாவண்யத்தை இழந்தாள் என்கிறாள்.

மெய் அமர் பல் கலன் - திருமேனியிலே பூத்தாற்போலே பொருந்தியிருந்துள்ள திருமுடி முதல் நூபுரம் ஈறாகவுள்ள திரு ஆபரணங்கள். நன்கு அணிந்தானுக்கு - பூணவல்லபடியாலே வந்த அழகு. பை அரவின் அணைப் பள்ளியினானுக்கு - தன்னு டைய பரிசத்தாலே விரிந்த படங்களையுடையவனாய், நாற்றம் மென்மை குளிர்த்தி இவற்றை இயல்பாகவுடையவனைப் படுக் கையாகவுடையவனாய், அதிலே திருக்கண்வளர்ந்தருளுகிறவ னுக்கு: [3]இதுவும் ஓர் ஆபரணவிசேடம்போலே காணும்: அநந்தமுகமான ஆபரணம் அன்றோ. [4]மேலே கூறிய ஒப்பனை

1. " சிரம் ஜீவதி வைதேஹீ யதிமாஸம் தரிஷ்யதி
ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம் "
என்பது, ஸ்ரீராமா. சுந். 66 : 10.

2. " பையரவின்அணைப்பள்ளியினானுக்கு, மெய்யமர் பல்கலன் " என்பன போன்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. " பல்கலன் " என்றதன்பின், திருவனந்தாழ்வானை அருளிச்செய்த தற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இதுவும்' என்று தொடங்கி. அதனையே ர்சோக்தியாக அருளிச்செய்கிறார் 'அநந்தமுகமான' என்று தொடங்கி. ஆதிசேஷன் உருவமான என்றும், பல உருவமான என்றும் பொருள்.

4. " பல்கலன் " என்றதன்பின், திருவனந்தாழ்வானைக் கூறியதற்கு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'மேலே கூறிய' என்று தொடங்கி.

நிறம்பெறும்படியான படுக்கை அன்றே. கையொடு கால் செய்ய கண்ணபிரானுக்கு-திருமேனிக்குப் பரபாகமான சிவப்பையுடைய திருக்கைகளையும், திருவடிகளையுமுடையவனாய் உபகாரசீலனான ஸ்ரீக்ருஷ்ணனுக்கு. [1]திருவனந்தாழ்வானுடைய சேர்த்தியாலேயாயிற்று அவயவங்கள் தொடக்கமானவை பூர்ணமாயின. என் தையல் இழந்தது தன்னுடைச் சாய் - என் பெண்பிள்ளை இழந்தது, மாணிக்கத்தின் ஒளிபோலே தனக்கு நிறங்கொடுக்கும் லாவண்யத்தை. [2]கழற்றிப் பூணும் ஆபரணத்தைக் காட்டி கழற்ற ஒண்ணாத ஆபரணத்தைக் கொண்டான். தையல் - பெண். சாய் - லாவண்யம். (7)

615.

சாயக் குருந்தம் ஒசித்த தமியற்கு
மாயச் சகடம் உதைத்த மணாளற்கு
பேயைப் பிணம்படப் பாலுண் பிரானுக்குஎன்
வாசக் குழலி இழந்தது மாண்பே.

**பொ - ரை :**—குருந்த மரமானது சாயும்படி முறித்த தனிவீரனுக்கு, சகடாசுரன் இறக்கும்படியாக உதைத்த மணவாளனுக்கு, பூதனையானவள் பிணமாகும்படி முலைப்பாலைக் குடித்த உபகாரகனுக்கு, என்னுடைய, வாசனை பொருந்திய கூந்தலையுடைய பெண்ணானவள் தன் மாண்பினை இழந்தாள்.

**வி - கு :**—மாய - இறக்க. மாயம் என்று பிரித்து வஞ்சனையுடைய என்னுதல். பேயை : வேற்றுமை மயக்கம். குழலி-கூந்தலையுடையவள்.

**ஈடு :**—எட்டாம்பாட்டு. [3]க்ருஷ்ணன், தன் விரோதிகளை அழித்த செயலுக்குத் தோற்று, இவள், தன்னுடைய பெண்மையை இழந்தாள் என்கிறாள்.

குருந்தம் சாய ஒசித்த தமியற்கு - [4]அசுர ஆவேசத்தாலே தழைத்துப் பூத்து நின்ற குருந்தத்தை வேரோடே சாய்ந்து

1. "பள்ளியினானுக்கு" என்றதனோடே சேர்த்து, "கையொடு கால் செய்ய" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'திருவனந்தாழ்வானுடைய' என்று தொடங்கி.

2. "பல்கலன்" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'கழற்றிப்பூணும்' என்று தொடங்கி.

3. "சாயக் குருந்தம் ஒசித்த" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. "சாய" என்பதற்கு, சாயையையுடைய என்றும், சாயும் படி என்றும் பொருள்கொண்டு அவ்விரண்டு பொருளையும் சேர அருளிச்செய்கிறார் 'அசுர ஆவேசத்தாலே' என்று தொடங்கி.

விழும்படி முறித்த தனியற்கு. என்றது, நம்பிமூத்தபிரானை ஒழியவே தனிவீரம்செய்தவனுக்கு என்றபடி. [1]தான் அத்தனிமையிலே சென்று உதவக்காணும் இவளுக்கு நினைவு. மாயச் சகடம் உதைத்த மணாளற்கு-[2]வஞ்சனைபொருந்திய சகடம்என்னுதல்; "தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர் உடல் வேறாப் பிளந்து வீய" என்கிறபடியே, சகடம் உருமாயும்படி என்னுதல். மணாளற்கு - ஸ்ரீஜனகராஜன் திருமகளுக்கு வில்லை முறித்தல்போலே, இந்தச் செயலினைக் காட்டியாயிற்று இவளைத் தனக்கே உரியவளாக்கியது. பேயைப் பிணம் படப் பால் உண் பிரானுக்கு - [3]சூர்ப்பணகையைப் போலே ஒரு கேட்டினை விளைக்க உயிரோடே விடாதே, பூதனையைப் பிணமாய் விழும்படி முலை உண்ணவல்ல மஹோபகாரகனுக்கு. என் வாசக் குழலி - [4]இயற்கையிலேயே வாசனைபொருந்திய குழலையுடைய என் பெண்பிள்ளை. [5]அவனை, "சர்வகந்தః" என்று சொல்லுகைக்கு அடி இத்தலையை இட்டு. [6]வாசஞ்செய் பூங்குழலாள் அன்றே. இழந்தது மாண்பே - தன் ஆண்தன்மைக்குரிய செயல்களை எல்லாம் காட்டி, இவளுடைய பெண்தன்மையைக் கொண்டான். மாண்பு - மாட்சிமை; பெண்தன்மை. மாண்பு என்பதற்கு, அழகு என்றும் சொல்லுப. (8)

---

1. "தமியற்கு" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'தான் அத்தனிமையிலே' என்று தொடங்கி. இங்கே, நரகாசுர யுத்தத்தில் சத்தியபாமை உதவியது கருதல் தகும்.

2. "மாயம்" என்றும், "மாய" என்றும் பதத்தைப் பிரித்துக்கொண்டு, இருவகைப்பட்ட பதங்கட்கும் பொருந்த பொருள் அருளிச்செய்கிறார் 'வஞ்சனை' என்று தொடங்கி. மாயம் - வஞ்சனை. மாய - இறக்க.

3. "பிணம்பட" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சூர்ப்பணகையை' என்று தொடங்கி.

4. "கொங்கலர் ஏலக்குழலி" என்பதுபோன்று சொல்லாமல் "வாசக் குழலி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இயற்கையிலே' என்று தொடங்கி.

5. "வாசக்குழலி" என்றதனால் பலித்த பொருளை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அவனை' என்று தொடங்கி. 'இத்தலையையிட்டு' என்றது, சிலேடை. இந்த மயிர்முடியைக்கொண்டு என்றும், இவளைக் கொண்டு என்றும் பொருள்.

6. அவனுக்கும் பரிமளத்தைக் கொடுப்பவள் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'வாசஞ்செய்' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி. 10. 10 : 2.

## 616.

**மாண்பமை கோலத்துஎம் மாயக் குறளற்கு**
**சேண்சுடர்க் குன்றன்ன செஞ்சுடர் மூர்த்திக்கு**
**காண்பெருந் தோற்றத்துஎம் காகுத்த நம்பிக்குஎன்**
**பூண்புனை மென்முலை தோற்றது பொற்பே.**

**பொ - ரை :**—அழகுபொருந்திய வடிவத்தையும் வஞ்சனையையுமுடைய வாமனனாகி அவதரித்தவனுக்கு, உயர்ந்த பிரகாசம்பொருந்திய மலைபோன்ற சிவந்த ஒளியையுடைய திருமேனியையுடையவனுக்கு, காணத்தக்க பெரிய தோற்றத்தையுடைய ஸ்ரீராமபிரானுக்கு, என்னுடைய, ஆபரணங்களைத் தரித்த மெல்லிய முலைகளையுடைய பெண்ணானவள் அழகினைத் தோற்றாள்.

**வி - கு :**—தோற்றம் - தோன்றுதல்; அவதாரத்தைக் குறித்தபடி. காகுத்தன் - ககுஸ்தவம்சத்தில் பிறந்தவன். நம்பி - பூர்ணன்.

**ஈடு :**—ஒன்பதாம்பாட்டு. [1]ஸ்ரீ வாமனம் முதலிய அநேக அவதாரங்களிலே அகப்பட்டு இவள் தன் அழகினை இழந்தாள் என்கிறாள்.

மாண்பு அமை கோலத்து எம் மாயக் குறளற்கு - [2]அழகு சமைந்த ஒப்பனையையுடையனாய், ஆச்சரியமான வேடத்தையுடைய ஸ்ரீவாமனனுக்கு. மாண்பு - அழகு. மாயம் - வஞ்சனையாகவுமாம். சேண் சுடர் குன்று அன்ன செம்சுடர் மூர்த்திக்கு- [3]அடியிலே நீர்வார்த்துக் கொடுத்தவாறே வளர்ந்தபடி. ஓங்கிய புகரையுடைய மலைபோலே அழகிய ஒளியையுடைய வடிவினையுடையவனுக்கு. காண்பெரும் [4]தோற்றத்து-கண்களுக்கு இனியதாய் அளவிடற்கரியதான இனிமையையுடைய தோற்றத்தையுடைய என்னுதல்; தோற்றம் - அழகு. அன்றிக்கே, "ஸ்ரீராம

1. "மாயக் குறளற்கு" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'அழகு சமைந்த ஒப்பனை' என்றது, பூணுநூல், மான்தோல், தருப்பை முதலியவற்றை. வேடம் - விக்கிரஹம்.

3. 'அடியிலே' என்றதற்கு, முதலில் என்றும், வேரிலே என்றும் பொருள்.

4. "தோற்றம்" என்பது அழகு; அது, இங்கு விக்கிரஹத்தைக் காட்டுகிறது. இரண்டாவது பொருளில் "தோற்றம்" என்றது, அவதாரத்தினை. அதனை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

"ஜந்ம ராமஸ்ய ஸுமஹத் வீர்யம் ஸர்வாநுகூலதாம்
லோகஸ்ய ப்ரியதாம் க்ஷாந்திம் ஸௌம்யதாம் ஸத்ய ஶீலதாம்"
என்பது, ஸ்ரீராமா. பால. 3 : 10,

பிரானுடைய மஹத்தான அவதாரம்" என்கிற அவதாரத்தின் மஹத்துவமாதல். எம் காகுத்த நம்பிக்கு-[1]குணங்கள் நிறைந்த சக்கரவர்த்தி திருமகனுக்கு. [2]"தயரதற்கு மகன் தன்னை யன்றி மற்று இலேன்" என்னுமவராதலின் "எம் காகுத்தன்" என்கிருள். [3]"குணங்களுக்கு எல்லாம் நிலைக்களமானவர்" ஆதலின் '**நம்பி**' என்கிருள். என் பூண் புனை மென் முலை-ஆபரணத்தாலே அலங்கரிக்கப்பட்டனவாய் விரகத்தைப் பொறுக்கும் அளவில்லாத மெல்லிய முலைகளையுடையவள். தோற்றது பொற்பே - [4]"பூண்புனை மென்முலை" என்கையாலே, ஒப்பனையால் வந்த அழகினை இழந்தாள் என்கிருள். பொற்பு - அழகு. [5]"மலராள் தனத்துள்ளான்" என்கிறபடியே, அவனைத் தன்னழகாலே புறம்பு ஒன்று அறியாதபடி பண்ணி அநுபவிக்குமவள் கண்டீர் தோற்ருள் என்கை. (9)

## 617.

**பொற்பமை நீண்முடிப் பூந்தண் துழாயற்கு**
**மற்பொரு தோளுடை மாயப் பிரானுக்கு**
**நிற்பன பல்லுரு வாய்நிற்கு மாயற்குஎன்**
**கற்புடை யாட்டி இழந்தது கட்டே.**

**பொ - ரை:**—அழகுபொருந்திய நீண்ட திருமுடியிலே தரித்த அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடையவனுக்கு, சாணூரன் முஷ்டிகன் என்னும் மல்லர்களோடே போர்செய்த தோள்களையும் ஆச்சரியமான செயல்களையுமுடைய உபகாரகனுக்கு, நிற்கின்றனவான

---

1. 'குணங்கள் நிறைந்த' என்ற இந்த இடத்தில்
"ஆந்ருஶம்ஸ்யம் அநுக்ரோஶ: க்ஷமா சத்யம் தமஶ்ஶம:
ராகவம் ஶோபயந்தி ஏதே ஷட்குணா: புருஷோத்தமம்"
என்றது, அநுசந்தேயம். ஸ்ரீராமா. அயோத். 33 : 12.

2. "எம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'தயரதற்கு' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 6 : 8.

3. "குணாநாம் ஆகரோ மஹாந்" என்பது, ஸ்ரீராமா. கிஷ். 15 : 21.

4. மேலே 'அழகினை இழந்தாள்' என்று கூறியிருக்க, இங்கும் "பொற்பு இழந்தது" என்றல் கூறியது கூறல் ஆகாதோ? என, ஆகாதபடி பொருள் அருளிச்செய்கிருர் 'பூண்புனை மென்முலை' என்று தொடங்கி.

5. "பூண்புனை மென்முலை' என்று விசேடிக்கிற திருத்தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிருர் 'மலராள்' என்று தொடங்கி. இது, மூன்ருந் திருவந். 3.

பலவகைப்பட்ட பொருள்களையும் சரீரமாகவுடையவனாய் அவற்றின் குற்றங்கள் தன்பக்கல் தட்டாமலே நிற்கின்ற மாயவனுக்கு, அறிவுடைய என் மகளானவள் மரியாதையை இழந்தாள்.

**வி - கு:**—மல் - மல்லர்கள். கற்பு - கல்வி; அறிவு. கட்டு - உலக மரியாதை. பெண்களுக்குள்ள மரியாதையுமாம்.

**ஈடு:**—பத்தாம்பாட்டு. [1]பரத்துவம் என்ன, அவதாரம் என்ன, உலகமே உருவமாயிருக்கும் தன்மை என்ன இவற்றை யடங்கக் காட்டி இவள் உடைமை எல்லாவற்றையும் கொண்டான் என்கிறாள்.

பொற்பு அமை நீள்முடி பூந்தண் துழாயற்கு-அழகு சமைந்திருப்பதாய் ஆதிராஜ்யப் பிரகாசகமான திருமுடியின்மேலே இறைமைத்தன்மைக்கு அறிகுறியான திருத்துழாய் மாலையையுடையவனுக்கு; தன்னுடைய பரிசத்தாலே பூத்துச் சிரமஹரமாயிருத்தலின் '**பூந்தண்துழாய்**' என்கிறாள். மல் பொரு தோளுடை மாயம் பிரானுக்கு - வந்து அவதரித்து மற்பொரு தோளையுடையனாயிருக்கை. சாத்தின சாந்து அழியாதபடி மல் பொருத ஆச்சரியத்தையுடையவனாதலின் '**மாயப் பிரான்**' என்கிறாள். [2]சாவத் தகர்த்த சாந்து அணி தோளன் அன்றோ. ஸ்ரீ மதுரையிற் பெண்களுக்கு அழகினை உபகரித்தவனாதலின் '**பிரான்**' என்கிறாள். அன்றிக்கே, மற்றும் ஆச்சரியமான உபகாரங்களைச் செய்தவனுக்கு என்றுமாம். நிற்பன பல் உருவாய் நிற்கும் மாயற்கு - தாவர சங்கமங்களான எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாய் நிற்கச்செய்தே, அவற்றின் தோஷங்கள் தன்பக்கல் தட்டாதபடி நிற்கிற ஆச்சரியத்தையுடையவனுக்கு. என் கற்புடையாட்டி - மிக்க அறிவையுடைய என்மகள். [3]"என்னை அழைத்துக்கொண்டு போகும் அச்செயல் அவர்க்குத் தக்கதாம்" என்று இருக்குமவள்

---

1. "பொற்பமை நீண்முடி" என்பது போன்றவைகளால், பரத்துவம். "மற்பொருதோளுடை" என்பது போன்றவைகளால், அவதாரம். "நிற்பன பல்லுருவாய் நிற்கும்" என்பதால், உலகமே உருவமாயிருக்கும் தன்மை.

2. "சாவத்தகர்த்த" என்பது, பெரியாழ்வார் திருமொழி. 4. 2 : 6.

3. மிக்க அறிவு ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என்னை அழைத்துக்கொண்டு' என்று தொடங்கி.

"தத் தஸ்ய ஸத்ருஸம் பவேத்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 39 : 30.

அன்றே. இழந்தது கட்டே-[1]தனக்கு உள்ளவற்றை நேராகக் காட்டி இவள் பக்கல் உள்ளவற்றை நேராகக் கொண்டான். கட்டு - முழுதும். 'கட்டு' என்று மரியாதையாய், உலக மரியாதையை இழந்தாள் என்றுமாம். (10)

618.

கட்டெழில் சோலைநல் வேங்கட வாணனைக்
கட்டெழில் தென்குரு கூர்ச்சட கோபன்சொல்
கட்டெழில் ஆயிரத்துஇப் பத்தும் வல்லவர்
கட்டெழில் வானவர் போகம்உண் பாரே.

**பொ-ரை :**—செறிவினையுடைய அழகுபொருந்திய சோலைகளாற் சூழப்பட்ட சிறந்த திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனை, அரண்களின் அழகையுடைய தெற்குத் திக்கிலேயுள்ள திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபரால் அருளிச்செய்யப்பட்ட அழகிய தொடைகளையுடைய ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் வல்லவர்கள் நித்தியசூரிகளுடைய அநுபவத்தை அநுபவிப்பார்கள்.

**ஈடு :**—முடிவில், [2] இத் திருவாய்மொழியினை வல்லவர்கள் நித்தியசூரிகள் அநுபவிக்கின்ற இன்பத்தினை அநுபவிப்பார்கள் என்கிறார்.

கட்டு எழில் சோலை - பரிமளத்தையுடைத்தான நல்ல சோலை. கடி என்ற சொல், 'கட்டு' என்று வந்தது; வலித்தல் விகாரம். கடி - வாசனை. நல்வேங்கடம்- [3]சேஷசேஷிகள் இருவர்க்கும் உத்தேசியமான திருமலை. வாணன் - நிர்வாஹகன். திருவேங்கடமுடையானையாயிற்றுக் கவிபாடிற்று. [4]"திருவேங்கடத்து என்னானை என்னப்பன் எம்பெருமான் உளனாக, என்

1. "பொற்பமை நீண்முடி" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்துத் 'தனக்குள்ளவற்றை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. "இப்பத்தும் வல்லவர்கள் கட்டெழில் வானவர் போகம் உண்பாரே" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. நன்மை ஏது? என்ன, 'சேஷசேஷிகள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கைங்கரியம் செய்தற்கு ஏகாந்தமான நிலமாகையாலே சேஷபூதனுக்கு உத்தேசியம்; இவனை அடிமை கொள்ளுவதற்கு ஏகாந்தமான நிலமாகையாலே சேஷிக்கு உத்தேசியம் என்றபடி.

4. திருவேங்கடமுடையானையோ கவிபாடினார்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருவேங்கடத்து' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 9: 1.

ணுவில் இன்கவி யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்" என்று இருக்கும் அவர் அன்றோ. கட்டு எழில் தென்குருகூர்-அரணை யுடைய திருநகரி. கட்டு - அரண். கட்டு எழில் ஆயிரம் - அழகிய தொடைகளையுடைத்தா யிருக்கை. கட்டு-தொடை. கட்டு எழில் வானவர்-கட்டடங்க நல்லவரான நித்தியசூரிகள். அன்றிக்கே, 'கட்டு' என்பது, போகத்திற்கு விசேடணமாகவுமாம். என்றது, சம்சாரத்தில் போகங்கள் கர்மங் காரணமாக வருகையாலே அல்பமாய் நிலையற்றவையாய் இருக்கும் அன்றோ, இது, சொரூபத்துக்குத் தக்கது ஆகையாலே நிறைந்ததாய் நித்தியமாய் இருக்கையைத் தெரிவித்தபடி. அன்றிக்கே, நான்கு அடிகளிலுமுள்ள 'கட்டு' என்ற சொல்லிற்கு, முழுதும் என்றே பொருள்கோடலுமாம். [1]நீர்மைக்கு எல்லையான திருமலை பற்றுதற்குரிய தலம்; மேன்மைக்கு எல்லையான பரமபதம் அநுபவத்திற்குரிய தலம். [2]ஒன்றி ஆக்கை புகாமை உய்யக்கொள்வான் நின்ற வேங்கடம் அன்றோ. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

மாலுடனே தான்கலந்து வாழப் பெருமையால்
சாலநைந்து தன்னுடைமை தானடையக்—கோலியே
தானிகழ வேண்டாமல் தன்னைவிடல் சொல்மாறன்
ஊனமறும் சீர்நெஞ்சே! உண். (56)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. "திருவேங்கடமுடையானைச் சொன்ன இப்பத்தும் வல்லவர் வானவர் போகம் உண்பார்" என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'நீர்மைக்கு' என்று தொடங்கி.

2. திருமலை அடையத்தக்க தலம் என்பதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'ஒன்றி' என்று தொடங்கி. இது, திருவாய். 9. 3 : 8.

## ஏழாந் திருவாய்மொழி — "உண்ணுஞ்சோறு"

### முன்னுரை

ஈடு :—[1]மேல் திருவாய்மொழியிலே, மோகித்துக் கிடக்கிற தன்மகளுடைய துன்பத்தைக் கண்ட திருத்தாயாரானவள், 'அது போயிற்றது, இது போயிற்றது' என்று அவன் திருநாமத்தைச் சொல்லிக் கூப்பிட்டு இவள் தானும் மோகித்தாள்; அவன் திருநாமத்தைச் சொல்லுகையாலே பெண்பிள்ளை உணர்ந்து எழுந்து புறப்பட்டுத் திருக்கோளூர் ஏறப்போனாள்; [2] திருத்தாயாரும் வாசனையாலே உணர்ந்து படுக்கையைப்பார்த்தாள்; வெறும்படுக்கையாய்க் கிடந்தது; [3] இனி, இவள் என் வயிற்றிற் பிறப்பாலும், தன் தன்மையாலும், இங்கு இருந்த நாட்களில் தேகயாத்திரை இருந்தபடியாலும் இவள் திருக்கோளூர் ஏறப் புறப்பட்டுப் போயினாள் என்று அறுதியிடுகிறாள்.

[4]வளையம் முதலாயினவற்றை எல்லாம் இழந்தாளேயாகிலும் நாம் இவளை இழக்கவேண்டி இராது என்றே இருந்தாள்

---

1. மேல் திருவாய்மொழியில், தன்னுடைய நிலையினைத் திருத்தாயார் பேசவேண்டும்படி மயங்கி இருந்த இவள், இத்திருவாய்மொழியில், அருகில் இருக்கிற திருத்தாயாரும் அறியாமல் திருக்கோளூர் செல்லுதல் யாங்ஙனம்? மயங்கியிருந்த இவள் உணர்ந்துதானே செல்லவேண்டும்; இவள் உணர்ந்தபடி யாங்ஙனம்? என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி.

2. மயங்கிக் கிடந்த திருத்தாயார் உணர்வதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருத்தாயாரும்' என்று தொடங்கி.

3. திருக்கோளூர் சென்றமையை என்கொண்டு அறுதியிடுகிறாள்? என்ன, 'இனி, இவள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

இத்திருவாய்மொழியில் வருகின்ற "என் இளமான்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'என்வயிற்றிற் பிறப்பாலும்' என்கிறார். "என்" என்றது, திருக்கோளூரில் மிக்க ஈடுபாட்டினையுடைய என்னுடைய என்றபடி. 'தன் தன்மையாலும்' என்றது, "இளமான்" என்ற இடத்தில், இளமையாலே மிருகத் தன்மையைச் சொல்லி, அதனாலே தூரத்திலே செல்லமாட்டாத தன்மையைக் குறித்தபடி. 'தேகயாத்திரை இருந்தபடியாலும்' என்றது, "உண்ணும் சோறு" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றி. "திண்ணம்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அறுதி இடுகிறாள்' என்கிறார்.

4. மேல் திருவாய்மொழியிலும் ஆற்றாமை உண்டே, அதில் இதற்கு வேற்றுமை யாது? என்ன, 'வளையம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

மேல் திருவாய்மொழியில். இத் திருவாய்மொழியில், இவள் தன்னையும் இழந்தோம் என்று கூப்பிடுகிறாள். [1] ஆளவந்தார் கோஷ்டியில் '"உண்ணுஞ்சோறு" என்ற திருவாய்மொழியில் வருகின்ற பிராட்டிக்கோ, "கள்வன்கொல்" என்ற திருமொழியில் வருகின்ற பிராட்டிக்கோ அஞ்சவேண்டுவது' என்று கேட்க, "இருவராகப் போனவர்கட்கு வயிறு எரியவேணுமோ? தனிவழியே போனவளுக்கன்றோ வயிறு எரியவேண்டுவது!" என்று இருந்த முதலிகள் சொல்ல, "அங்ஙன் அன்று காணுங்கோள்! இருவராகப் போனவர்கள் ஆகையாலே, இருவர்க்கும் அஞ்சவேணும்; தனியே போனவளுக்கு அச்சம் உண்டோ?" என்று அருளிச்செய்தார். அதற்கு அடி, இருவரும் இருவர்க்கும் [2]ஊமத்தங்காயாய், கடித்ததும் ஊர்ந்ததும் அறியார்கள்: [3] இவள் அங்கே புக்கல்லது தரியாள் என்பதாம். [4] "அள்ளல் அம்பூங்கழனி அணி ஆலி புகுவர்கொலோ! அன்றியே, இலங்கையின் வாசலிலே புகுவர்கொலோ! என்றே அன்றோ அங்கே வயிறு பிடி. [5] ஆனாலும், எங்கேனும் போகிலும் இருவராயல்லது இராது அங்கு; 'தனியே சென்ற இவள் என்படுகிறாளோ?' என்று மிகவும் நொந்து கூப்பிடுகிறாள் இவளுடைய திருத்தாயார்.

---

1. இத் திருத் தாயார்க்கு மகளைப் பிரிந்த துக்கமும், தனிவழியே போன துக்கமுமாகிய இரண்டும் உண்டாகையாலே, அவற்றுள், பிரிவால் வந்த துக்கத்தை மேல் திருவாய்மொழியில் அருளிச்செய்து, தனி வழி சென்றமையால் வந்த துக்கத்துக்குச் சூசக சம்வாதம் காட்டுகிறார் 'ஆளவந்தார்' என்று தொடங்கி. "கள்வன்கொல்" என்றது, பெரியதிருமொழி. 3. 7 : 1.

2. 'ஊமத்தங்காயாய்' என்றது, ஊமத்தங்காயானது, தன்னைத் தின்றார்க்குத் தான் மயக்கத்தை உண்டுபண்ணுமாறு போலே, அந்யோந்ய வைலக்ஷண்யங்களாலே ஒருவர்க்கு ஒருவர் மயக்கத்தை உண்டுபண்ணுமவராய் என்றபடி. "அகலகில்லேனிறையும்", "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்பன ஈண்டு நினைக்கத்தகும்.

3. 'இவள் அங்கே புக்கல்லது தரியாள்' என்றது, இத்திருவாய்மொழியில் வருகின்ற "திண்ணம்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

4. 'இருவராய்ப் போனவர்கள் ஆகையாலே இருவர்க்கும் அஞ்சவேண்டும்' என்பதற்கு, திருமொழியில் அதனைக் காட்டுகின்ற சொல் எது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அள்ளலம் பூங்கழனி' என்று தொடங்கி. "கொலோ" என்றது, ஐயம்.

5. இவ்விடத்திற்குச் சேர, முதலிகள் நிர்வாஹத்தை அங்கீகரித்து அருளிச்செய்கிறார் 'ஆனாலும்' என்று தொடங்கி.

[1]"அற்ப சாரங்களவை சுவைத்து அகன்று ஒழிந்தேன்" என்கிறபடியே, 'பகவத்கோஷ்டிக்கு இனி ஆளாகமாட்டாரே!' என்னும்படி ஐம்புல இன்பங்களிலே கைகழிந்த இவர், 'சம்சாரிகளுக்கு இனி ஆளாகமாட்டார்' என்னும்படி நாட்டாரோடு இயல்வு ஒழிந்து, கொள்ள மாளா இன்பவெள்ளத்தைப் புஜிக்கக் கைகழிந்தபடி சொல்லுகிறது. நரகத்திற்குக் காரணமான விஷயத்தைப் பற்றிப் பிறர் அறியாமலே போகக்கடவ இவர், சொரூபத்திற்குத் தகுதியான விஷயத்தைப் பற்றிப் பிறர் அறியாமலே போகும்படி விழுந்தது. க்ஷுத்ரவிஷயத்தைப் பற்றிப் பழிக்கு அஞ்சாதே போகக்கடவ இவர், குணாதிக விஷயத்தைப் பற்றிப் பழிக்கு அஞ்சாதபடி ஆனார். [2]'என்னுடைமை புக்க இடத்திலே நானும் போய்ப் புக்கு அல்லது நில்லேன்' என்கிறாள். [3]"நான் இப்பொழுதே இலக்குமணனால் செல்லப்பட்ட வழியிலேயே செல்லப் போகிறேன்" என்றாற்போலே. [4]ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய - தான் பண்டு விரும்பியிருக்கும் அவற்றோடு பெற்றவர்களோடு வாசி அறப் பொகட்டுப் போனாள். 'மீண்டும் இவற்றிலே நசை பண்ணும்' என்று தோற்றாதபடி விட்டாளாதலின் '**பரித்யஜ்ய**' என்கிறது. பர்த்ருஸ்நேஹ பலாத்க்ருதா-ஒரு விஷயத்தில் சிநேகமானது எல்லாவற்றையும் விடப் பண்ணும் அன்றோ. தன்வசத்

1. இத்திருவாய்மொழியில், தாயார் முதலான உறவினர்களையும், போக உபகரணங்களையும் விட்டுச் சென்றதற்கு, சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறார் 'அற்ப சாரங்கள்' என்று தொடங்கி.

2. பெண்பிள்ளை விட்டுப் போனாளாகில் தாயார் செய்தது யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என்னுடைமை' என்று தொடங்கி. 'உடைமை' என்றது, மகளை. 'புக்கலல்லது நில்லேன்' என்றது, "செல்ல வைத்தனளே" என்றதற்கு அருளிச்செய்யும் இரண்டாவது பொருளைத் திருவுள்ளம்பற்றி.

3. 'பெருமாள், இளைய பெருமாள் சென்ற வழியே செல்வேன்' என்றாற்போலே என்று இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'நான் இப்பொழுதே' என்று தொடங்கி.

"ப்ரவேஶயத ஸம்பாராந் மாபூத் காலாத்யயோ யதா
அத்யைவ அஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்"

என்பது, உத்தரராமாயணம்.

4. தாயார் முதலானவர்களை விட்டுப் போனதற்குத் திருஷ்டாந்தமும், திருஷ்டாந்த சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'ஸர்வாந்' என்று தொடங்கி.

"ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய பர்த்ருஸ்நேஹ பலாத்க்ருதா
அசிந்தயித்வா துக்காநி ப்ரவிஷ்டா நிர்ஜ்ஜனம் வனம்"

**என்பது, ஸ்ரீராமா. சுந். 16 ; 19.**

தால் போனுள் அல்லளாதலின் 'பலாத்க்ருதா' என்கிறது. அசிந்த யித்வா துக்காநி - விட்டனவற்றை நினையாவிட்டால், போய்ப் புகுகிற இடத்தில் மிறுக்கைத்தான் நினையாநின்ருளோ?[1] இவள் பெருமாளை ஒழியத் தன்னைக் காணில் அன்றோ துக்கத்தை நினைக்க வல்லளாவது. ப்ரவிஷ்டா நிர்ஜ்ஜனம் வனம் - 'போகத்துக்கு ஏகாந்தமான இடம்' என்னுமதுவே கண்டீர் இவள் நெஞ்சிலே பட்டது.

[2]புத்ர த்வய விஹீநம் தத்-சக்கரவர்த்தி, பிள்ளைகள் இருவரையும் தேடிப் போர நொந்தான். ஸ்நுஷயாச விவர்ஜிதம் - 'மீண்டும் இவ்விடத்தை விரும்புவார்கள்' என்று நினையாதபடி [3]குழைசரக்கு அறுத்துக்கொண்டு போனபடி.அபஸ்யத்பவநம் ராஜா நஷ்ட சந்த்ரம்இவாம்பரம்-[4]நிலவோடும் நக்ஷத்திர தாரா கணங்களோடும் கூட சந்திரன் குடிவாங்கின ஆகாசம்போலே கிடந்தது. அப்படியே ஆயிற்று இத் திருமாளிகை கிடக்கிறது. [5]"நல்லது ஓர் தாமரைப் பொய்கை" என்ற திருப்பாசுரத்திற் கூறியுள்ளபடியேயாயிற்று இவள் திருமாளிகை கிடக்கிறது.

---

1. "கன்னகு திரள்புயக் கணவன் பின்செல
நன்னகர் ஒத்தது நடந்த கானமும்"

என்ருர் கம்பநாடரும். (கிளைகண்டு நீங். 87.)

2. மகள் புறப்பட்டுப் போன பிறகு திருமாளிகை இருந்ததற்குத் திருஷ்டாந்தமும், அந்தத் திருஷ்டாந்த சுலோகத்திற்குப் பொருளும் அருளிச் செய்கிருர் 'புத்ரத்வய' என்று தொடங்கி.

"புத்ரத்வயவிஹீநம் தத் ஸ்நுஷயா ச விவர்ஜிதம்
அபஶ்யத் பவநம் ராஜா நஷ்ட சந்த்ரம் இவாம்பரம்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 42 : 31.

3. 'குழைசரக்கு அறுத்துக்கொண்டு போனபடி' என்றது, பாதுகாக்கப் படவேண்டியவர்களையும் கூடக்கூட்டிக்கொண்டு போனபடி என்கை. என்றது, பை நெகிழ்ந்த கயிறு எல்லாம் கட்டிப் பண்டங்களை எடுத்துக்கொண்டு போகும் செட்டிகளைப் போலே, தங்களுக்கு ரக்ஷ்யவர்க்கமான பிராட்டியையும் கூட்டிக்கொண்டு போனுர்கள் என்றபடி.

4. பிராட்டிக்கு நிலவையும், இளையபெருமாளுக்கு நக்ஷத்திர தாராகணங்களையும், பெருமாளுக்குச் சந்திரனையும் ஒப்பாகக் கொள்க.

5. வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிருர் 'நல்லதோர் தாமரைப் பொய்கை' என்று தொடங்கி.

நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர்மேல் பனிசோர
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு அழகழிந்தால் ஒத்ததாலோ
இல்லம் வெறி ஓடிற்ருலோ என்மகளை எங்கும் காணேன்
மல்லரை அட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள்கொலோ.

என்பது, பெரியாழ்வார் திருமொழி. 3. 8 : 1.

திருத்தாயாரும் இம்மாளிகையைக் கண்டு வெறுத்து, [1]"போகக் கடவதாகத் துணிந்தால் என்னையும் கூட்டிக்கொண்டு போனால் ஆகாதோ? தனிவழியே போவதே! நான் கூடப் போகாவிட்டால் அவனுடனே கூடப் போகவும்பெறாது ஒழிவதே! இவள் தான் எங்ஙனே போகிறாளோ! நாடு அடங்க வாழ்வித்துக் கொண்டு போகிறாளோ! அங்கே புக்கால் என்படுகிறாளோ! வழியிலுள்ளார் என் சொல்லுகிறார்களோ! [2]அங்கே புக்கால் அவ்வூரிற் சோலைகளையும் அங்குள்ள நீர்நிலைகளையும் அவன் குணங்களையும் கண்டு உகக்கிறாளோ? கண்டு சிதிலை ஆகிறாளோ! இவைஎல்லாம்தாம் அங்கே சென்று புக்கால் அன்றோ! என்றாற்போலே மனோரதித்துக்கொண்டு,[3] தன்னைப் பார்த்தல் எங்களைப் பார்த்தல் செய்யாதே, [4]இவற்றை எல்லாம் கடலிலே கவிழ்த்துப் போவதே!' என்று திருத்தாயார் இன்னாதாகிறாள்.

---

1. "எம்மை ஒன்றும் நினைத்திலள்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிப் 'போகக்கடவதாகத் துணிந்தால்' என்று தொடங்கியும், "இதெல்லாம் கிடக்க" என்றதனைத் திருவுள்ளம்பற்றித் 'தனி வழியே' என்று தொடங்கியும், "அவன் கிடந்த" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'நான்கூட' என்று தொடங்கியும், "ஒல்கி ஒல்கி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இவள்தான்' என்று தொடங்கியும், "ஊரும் நாடும்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'நாடு அடங்க' என்று தொடங்கியும், "கோவைவாய் துடிப்ப" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அங்கே புக்கால்' என்று தொடங்கியும், "கொல்லை என்பர் கொலோ" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றி 'வழியிலுள்ளார்' என்று தொடங்கியும் அருளிச்செய்கிறார்.

2. "பூவியலும் பொழிலும்" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம் பற்றி 'அங்கே புக்கால்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். "எங்ஙனே உகக்குங்கொல்", "நின்று நின்று நையும்" என்பனவற்றைக் கடாக்ஷித்து 'உகக்கிறாளோ? கண்டு சிதிலை ஆகிறாளோ?' என்கிறார். "செல்லுங்கொல்" என்றதனைக் கடாக்ஷித்து 'இவையெல்லாம்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. "இதெல்லாம் கிடக்க" என்றதற்கு அருளிச்செய்யும் இரண்டாவது பொருளைத் திருவுள்ளம்பற்றித் 'தன்னைப் பார்த்தல்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். என்றது, தன்னுடைய மிருதுத் தன்மையைப் பார்த்தல், பிரிவினால் நாங்கள் படுகிற வருத்தத்தைப் பார்த்தல் என்றபடி.

4. "ஊரும் நாடும்......பிதற்ற" என்கையாலே, 'இவற்றை எல்லாம் கடலிலே கவிழ்த்துப் போவதே!' என்கிறாள்.

619.

உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன்எம் பெருமான் என்றென்றே கண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன் சீர்வளம் மிக்கவன் ஊர்வினவித்
திண்ணம் என் இளமான்புகு மூர்திருக் கோளூரே.

**பொ - ரை :**—உண்ணுகின்ற சோறும் குடிக்கின்ற தண்ணீரும் தின்னுகின்ற வெற்றிலையும் எல்லாம் கண்ணனாகிய எம்பெருமான் என்று என்றே கண்கள் நீராலே நிறைய, பூமியிலே அவனுடைய கல்யாண குணங்களையும் வளத்தால் மிக்கவனான எம்பெருமானுடைய திவ்விய தேசத்தையும் கேட்டுக்கொண்டு,என்னுடைய இளமான் புகும் ஊர் திருக்கோளூர் என்னும் திவ்வியதேசமே யாகும்; இது நிச்சயம்.

**வி - கு :**—"உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை" என்று அவ்வவற்றிற்குரிய சிறப்புத் தொழிலாற் கூறப்பட்டுள்ளமை நோக்கல் தகும். என் இளமான் என்று என்றே கண்கள் நீர்மல்க, வளமிக்கவன் சீரையும் ஊரையும் வினவிப் புகும் ஊர் திருக்கோளூரே; இது திண்ணம் என்க. வளமிக்கவன் : பெயர்.

இத்திருவாய்மொழி, கலி நிலைத்துறை.

**ஈடு :**—முதற்பாட்டு. [1]தன்வயிற்றிற் பிறப்பாலும், இவளுடைய தன்மையாலும் இவள் இங்கு நின்றும் போய்ப் புகும் ஊர் திருக்கோளூர் என்று அறுதியிடுகிறாள்.

உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்-[2]இவள் அவ்வருகே ஒரு வாய் புகுநீர் தேடிப் போனாளோ. என்றது, இங்கு இருந்த நாள் அந்நம் பானம் முதலியவைகளாலே தரித்து,அங்கேபுக்கு அவனாலே தரிக்கப்போனாளோ என்றபடி. "அஹமந்நம், அஹமந்நாதः - நான் பகவானுக்கு இனியன், [3]நான் பகவானாகிய

1. "திண்ணம் என் இளமான்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'திருக்கோளூர் ஏறப் போனாள்' என்று சொல்லுகிற திருத்தாயார், "உண்ணும்சோறு" என்று தொடங்கி இவளுடைய தேகயாத்திரையைச் சொல்லுவதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் அவ்வருகே' என்று தொடங்கி. 'வாய்புகுநீர்' என்றது, உச்சிவரையிலும் அநுபவிக்கிற அநுபவம். மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'இங்கு இருந்த நாள்' என்று தொடங்கி.

3. 'நான் பகவானாகிய இனிமையை அநுபவிக்கிறவன் என்றிருப்பார்க்கும்' என்றது, "அஹமந்நாதः" என்னும் சுருதியில் சொல்லுகிற நித்தியசூரிகள் அநுபவம் இங்கே உண்டாயிருப்பார்க்கும் என்றபடி. "அஹமந்நம்"

இனிமையை அநுபவிக்கிறவன்" என்று இருப்பார்க்கும் அவ்வருகு போகவேணுமோ? சோறு, நீர், வெற்றிலை என்ன அமையாதோ? 'உண்ணுஞ்சோறு' என்பது போன்ற அடைமொழிகட்குக் கருத்து என்? என்னில், "வேட்ட பொழுதின் அவையவை போலுமே, தோட்டார் கதுப்பினள் தோள்" என்று வள்ளுவனும் சொன்னான் அன்றோ; அப்படியே, இவை தாமே, விருப்பம் இல்லாதவைகளாகவும் இருக்கும் ஒரோ நிலைகளிலே; அதற்காக, விரும்புகிற சமயத்தில் இவைதாம் யாதொருபடியிருக்கும் அப்படியேயாயிற்று இவர்க்கு எப்போதும் பகவத்விஷயம் என்கைக்காகக் கூறப்பட்டன என்க. [1] தாரக போஷக போக்கியங்கள் எல்லாம் "வாசுதேவஸ் ஸர்வம்" என்று கொண்டு 'எல்லாம் கிருஷ்ணன்' என்று இருக்கும் என்பாள் '**எல்லாம் கண்ணன்**' என்கிறாள். '**உண்ணும்சோறு**' என்ற நிகழ்காலத்தாலே, அல்லாதது[2] உண்டு சமையும் சோறு என்கையும், இது மாறாதே உண்ணும்சோறு என்னுமதுவும் தோற்றுகிறது. [3] "கணைநாணில், ஓவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே, ஓவாத ஊணாக உண்" என்னக் கடவதன்றோ. மாறாதே உண்ணலாவதும், மாளாததும் இதுவே அன்றோ; "**அப்பொழுதைக் கப்பொழுது என் ஆராவமுதம்**" என்றும், "**கொள்ளமாளா இன்பவெள்ளம்**" என்றும் அன்றோ

---

என்கையாலே, ஈசுவரனுக்கு நித்தியசூரிகளிடத்திலுள்ள ஆதரம் சொல்லுகிறது. "அஹமந்நாத:" என்கையாலே, நித்தியசூரிகளுக்கு ஈசுவரனிடத்திலுண்டான ஆதரம் சொல்லுகிறது.

1. "சோறு, நீர், வெற்றிலை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தாரகபோஷக' என்று தொடங்கி. சோறு, தாரகம்; நீர், போஷகம்; வெற்றிலை, போக்கியம் என்க. போக்கியம் - இனியபொருள்.

"பஹூநாம் ஜந்மநாம் அந்தே ஞானவாந் மாம் ப்ரபத்யதே
வாஸுதேவஸ்ஸர்வம் இதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:"

என்பது, ஸ்ரீகீதை. 7 : 19.

2. 'உண்டு சமையும் சோறு' என்றது, மாளுகையாலும் தெகுட்டுகையாலும் உண்டு சமையும் என்றபடி. உண்டு சமையும் - உண்டு செலவழியும். 'மாறாதே உண்ணும்சோறு' என்றது, மாளாமையாலும் தெகுட்டாமையாலும் இது மாறாதே புஜிக்கும் சோறு என்றபடி.

3. பகவானுடைய அநுபவம், மாறாதே புஜிக்கும் சோறாக இருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'கணைநாணில்' என்று தொடங்கி. இது, பெரிய திருவந். 78. "ஓவாத ஊணாக உண்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மாறாதே' என்று தொடங்கி. மாறாததுமாய், மாளாததுமாய் இருப்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'அப்பொழுதைக்கு' என்றும், 'கொள்ள' என்றும் தொடங்கி. 'அப்பொழுதைக்கு' என்பது, திருவாய். 2. 5 : 4. 'கொள்ளமாளா' என்பது திருவாய். 4. 7 : 2.

இருப்பது.[1] இவற்றில் ஆகாதது ஒன்று இல்லை கண்டீர், இவை எல்லாம் வகுத்தவனேயாயிருக்கை என்பாள் 'எம்பெருமான்' என்கிறாள். [2] இவள் சந்நிதியே அமையும் கண்டீர் எங்களுக்கு.

என்று என்றே - [3] இது ஒழிய வேறு ஒன்றனைத் 'தாரகம்' என்று இருக்கில் அன்றோ மற்று ஒன்றனைச் சொல்லுவது; இது தன்னையே மாறாதே சொல்லி. என்றது, ஒருகால் இதனைச் சொல்லிப் பின்பு ஊண் உறக்கத்தாலே போது போக்கலாம் விஷயம் அன்றே என்றபடி. கண்கள் நீர்மல்கி - [4] இவர்களுடைய உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் இருக்கிறபடி. [5] இவள் முகத்தாலே காணும் இவர்களுக்கு ஜீவனம். [6] தன் ஜீவனத்துக்குப் போகிறவள் எங்கள் ஜீவனத்தைக் கொண்டு போகவேணுமோ? ஒருவன் பகவத் குணங்களிலே ஈடுபட்டவனைக் கண்ணும் கண்ணநீருமாயிருக்க, அவனைக் கண்டுகொண்டிருக்கவன்றோ அடுப்பது.

---

1. "எல்லாம் கண்ணன்" என்ற பின்னர், "எம்பெருமான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவற்றில் ஆகாதது' என்று தொடங்கி. என்றது, பெண்களைப்போன்று அப்ராப்தமாய்க் கழியுண்கிற விஷயம் அன்று; பிராப்தவிஷயம் இவன் என்கைக்காக "எம்பெருமான்" என்கிறது என்றபடி.

2. "கண்கள் நீர்மல்கி" என்றதனைக் கடாக்ஷித்து, "உண்ணும்சோறு" என்பது போன்றவைகளைக் கூறுகின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவள் சந்நிதியே' என்று தொடங்கி.

3. அடுக்குத்தொடருக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இது ஒழிய' என்று தொடங்கி. ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இது தன்னையே' என்று தொடங்கி. மாறாதே சொல்லுகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'ஒருகால்' என்று தொடங்கி.

4. மகளுடைய தேகயாத்திரை சொன்னபின்பு, "கண்கள் நீர்மல்கி" என்கையாலே, இவளுடைய கண்ணநீர் தாயாருக்குத் தேகயாத்திரை என்று கொண்டு அருளிச்செய்கிறார் 'இவர்களுடைய' என்று தொடங்கி. இவள் மயர்வற மதிநலம் அருளப்பெற்று உலகத்தையெல்லாம் திருத்துகையாலே இவள் திருத்தின நாடெல்லாம் இவள் கண்ணும் கண்ணீருமாயிருக்கும் இருப்பையே தங்களுக்குத் தாரக போஷக போக்கியங்களாக நினைத்திருப்பர்கள்என்னுமிடம் தோற்ற 'இவர்களுடைய' என்று பன்மையில் வைத்து அருளிச்செய்கிறார்.

5. இவள் கண்ணும் கண்ணீருமாய் இருக்கும் இருப்பே இவர்களுக்குத் தாரகாதிகள் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இவள் முகத்தாலே' என்று தொடங்கி.

6. இவள் கண்ணும் கண்ணீருமாயிருக்கிற இருப்பை இழந்த கிலேசம் தோற்றச் சொல்லுகிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'தன் ஜீவனத்துக்கு' என்று தொடங்கி. இதற்கு, சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஒருவன்' என்று தொடங்கி.

[1]"அழுநீர் துளும்ப அலமருகின்றன வாழியரோ' என்று சேதனராகில் மங்களாசாசனம் செய்யக்கடவது.[2]**நஞ்சீயர், 'பிள்ளை திருநறையூர் அரையரோடே** மூன்று திருவாய்மொழி கேட்டேன், அதில் எனக்கு ஒரு வார்த்தையும் போகாது; ஒரு திருவாய்மொழியைச் சொன்னஅளவிலே அவர் சிதிலராய்க் கண்ணும் கண்ணநீருமாய் இருக்கும் இருப்பை நினைத்திருப்பன்' என்று அருளிச்செய்வர்.

[3] ஆஹ்லாத ஶீதநேத்ராம்புஃ-விரகத்தாலே கொதித்துப் புறப்படும் துக்கக்கண்ணீர் போலன்றிக்கே, பகவானை அநுபவிப்பதனால் உண்டான மிகுந்த உவகையினாலே குளிர்ந்த கண்ணீரையுடையனாவது. புளகீக்ருத காத்ரவாந் - உடம்பு முழுதும் மயிர் எறிந்து இருப்பது. பரகுணாவிஷ்டஃ - பகவானுடைய குணங்களாலேஏறப்பட்டிருப்பவனாவது,தெய்வம்ஏறினவரைபோலே. அவன், ஸர்வதேஹிபிஃ த்ரஷ்டவ்யஃ - அவன் தேகத்தை எடுத்தவர்கள் எல்லாருக்கும் பார்க்கத்தகுந்தவன். சரீரத்தை எடுத்ததற்குப் பயன் இவனைக் காண்கையாயிற்று. ஸதா த்ரஷ்டவ்யஃ - எப்பொழுதும் காண்கைக்கு ஒரு தேசவிசேடம் தேடிப் போகவேணுமோ? [4]**அனந்தாழ்வான்** சோழகுலாந்தகனிலே பயிர்த்தொழில் செய்து கொண்டிருப்பவனை ஒரு ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டு,'உம்முடைய ஊர் எது' என்று கேட்க, 'என்னுடைய ஊர் திருக்கோளூர்' என்ன, 'அங்கு நின்றும் போந்தது என்?' என்ன, 'தேகயாத்திரை நடவாமே போந்தேன்' என்ன, அவ்வூரில் கழுதையை மேய்த்து ஜீவிக்க மாட்டிற்றிலையோ? நிலைநின்ற ஜீவனத்தை விட்டுப் போந்தாயே யன்றோ!' என்றானும்.

---

1. கண்டு கொண்டிருத்தலே அன்றி மங்களாசாசனமும் செய்யவேண்டும் என்கிறார் 'அழுநீர்' என்று தொடங்கி. இது, திருவிருத்தம். பா. 2.

2. கண்ணும் கண்ணீருமாய் இருக்கிற இருப்பைக் கண்டுகொண்டிருத்தலே புருஷார்த்தம் என்கைக்கு ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார் 'நஞ்சீயர்' என்று தொடங்கி.

3. மேலே கூறியதற்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'ஆஹ்லாத' என்று தொடங்கி.

"ஆஹ்லாத ஶீத நேத்ராம்புஃ புளகீக்ருத காத்ரவான்
ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஃ ஸர்வதேஹிபிஃ"

என்பது, ஸ்ரீவிஷ்ணுதத்வம்.

4. ஈசுவரனே தாரக போஷக போக்யங்கள் எல்லாமாக இருப்பான் என்பதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'அனந்தாழ்வான்' என்று தொடங்கி.

கண்ணன் எம்பெருமான் என்று என்றே கண்கள் நீர் மல்கி - [1]இந்த பாவனையின் மிகுதியினாலே பெற்றாற்போலே இருந்து ஆனந்தக் கண்ணீர் புறப்படுகிறபடியாகவுமாம்; இந்த அநுசந்தானத்தாலே கண்ணீர் மல்கி என்னவுமாம். மண்ணினுள்......புகும் ஊர்த் திருக்கோளூரே-மண்ணினுள்புகும் ஊர் திருக்கோளூரே. [2]விண்ணில் ஓர் ஊர் விசேடிக்கவேண்டும்படியாய் இராதன்றே. அவன் சீர் வளம் மிக்கவன் ஊர் - அவனுடைய கல்யாண குணங்களையும் தனக்குமேல் ஒன்று இல்லாத தான செல்வத்தையுடையவனுடைய ஊரையும். [3]"அந்த முக்தன் எல்லாக் கல்யாணகுணங்களையும் சர்வஜ்ஞனான பரமாத்மாவோடு அநுபவிக்கிறான்" என்கிறபடியே, அவனோடு அவன் குணங்களோடு வாசிஅறப் பிராப்யமாவதைப் போன்று, அவன் விரும்பின தேசமும் பிராப்பியத்திலே சேர்ந்ததாகக் கடவது அன்றே. அவன்சீர் - அவனுடைய கல்யாணகுணங்கள். அவையாவன: அவன் தன்திறத்தில் தாழநிற்கும் நிலைகள். வளம்மிக்கவன் ஊர் - [4]பரமபதம் கலவிருக்கையைப் போன்றது; உகந்த விஷயத்தைப் பெறும் இடம் அன்றோ ஊராகிறது! [5]"எனக்குச் சீதையால் என்ன காரியம் உள்ளது"

---

1. இங்குச் சொல்லுகிற கண்ணீர், ஆனந்தக்கண்ணீர் என்று கொண்டு, பிரிந்த நிலையில் ஆனந்தக்கண்ணீர் வருவதற்கு இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இந்த பாவனையின்' என்று தொடங்கி. 'இந்த அநுசந்தானத்தாலே கண்ணீர் மல்கி என்னவுமாம்' என்றது, பிரிந்த நிலையில் நினைக்கும் நினைப்பு ஆகையாலே சோகக் கண்ணீர் என்னலுமாம் என்றபடி.

2. "மண்ணினுள் புகும் ஊர்" என்று விசேடிக்க வேண்டியது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விண்ணில்' என்று தொடங்கி. என்றது, பரமபதமும், மற்றுமுள்ள மேலுலகங்களும் எல்லாம் அவனுக்குப் பரதந்திரமாகையாலே விசேடிக்க வேண்டா; இங்கு ஈர் அரசு ஆகையாலே விசேடிக்க வேண்டிற்று என்றபடி.

3. அவன் குணங்களைப் போன்று அவன் ஊரும் பிராப்பியமாக இருக்குமோ? என்ன, 'அந்த முக்தன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹப்ரஹ்மணா"

என்பது, சுருதிவாக்கியம்.

4. "ஊர்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பரமபதம்' என்று தொடங்கி. கலவிருக்கை - ஓலக்கமிருத்தல். பரமபதத்தைக் காட்டிலும் இதற்கு அதிசயம் ஏது? என்ன, 'உகந்த' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. உகந்த விஷயம் அங்கு இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'எனக்கு' என்று தொடங்கி. "கிம் கார்யம் ஸீதயா மம" என்பது, ஸ்ரீராமா. யுத். 41; 4.

என்பதேயன்றோ அவனுடைய திருவார்த்தை. [1]பரமபதத்தைக் காட்டிலும் அடியார்கள் இருந்த இடம் அன்றோ ஊராகிறதும், அவன் திருவுள்ளத்துக்குப் பொருந்தியிருப்பதும். வளம் மிக்கவன் - [2]பிரணயதாரையில் சாமர்த்தியத்தையுடையவன் என்றுமாம். இப்போது சாமர்த்தியமாவது, தான் இருந்த இடத்தே இவள் வரும்படி இத்தலையை அழித்தது.

வினவி-[3]'திருக்கோளூர் எத்தனை இடம் போரும்' என்று எதிரே வந்தாரைக் கேட்டு, அவர்கள் 'இன்னதனை இடம் போரும்' என்ன, அதுதானே வழிக்குத் தோட்கோப்பாகப் போகை. "தாமரைக் கண்ணனாகிய எம்பெருமானுடைய திருநாம சங்கீர்த்தனமானது வழிக்குக் கட்டுச்சோறாகும்" என்றார் பிறரும். [4]பூ அலரும்போதைச் செவ்விபோலே 'திருக்கோளூர் எத்தனை இடம் போரும்' என்று கேட்கும் போதைத் திருப்பவளத்தில் செவ்வி காணப்பெற்றிலேன் என்று காணும் திருத்தாயார்தான் நோவுபடுகிறது. என் இளம் மான் புகும் ஊர் திருக்கோளூரே-[5]என் வயிற்றிற் பிறப்பாலும் இவளுடைய தன்மையாலும் அவ்வூரில் அல்லது புகாள் என்கிறாளாயிற்று.

---

இந்நிலை விரைவின் எய்தாது இத்துணை தாழ்த்தியாயின்
நன்னுதற் சீதையால்என் ஞாலத்தாற் பயன்என் நம்பி
உன்னையான் தொடர்வன் என்னைத் தொடருமிவ் வுலகம் என்றால்
பின்னைஎன் இதனைநோக்கி விளையாடிப் பிழைப்ப செய்தாய்.

என்பது, கம்பராமாயணம், மகுடபங்கப்படலம்.

1. மேற்கூறியவற்றால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'பரமபதத்தைக் காட்டிலும்' என்று தொடங்கி.

2. "வளம்" என்பதற்கு, செல்வம் என்று மேலே பொருள் அருளிச்செய்தார். இங்கு, சாமர்த்தியம் என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'பிரணயதாரையில்' என்று தொடங்கி.

3. திருக்கோளூரிற்குச் சென்றால், வழிதே செல்லாது, வினவிக்கொண்டு செல்வதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருக்கோளூர்' என்று தொடங்கி. வினவுதல், வழிக்குத் தோட்கோப்பாக இருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தாமரைக் கண்ணனாகிய' என்று தொடங்கி.

"பாதேயம் புண்டரீகாக்ஷ நாம சங்கீர்த்தநாம்ருதம்"

என்பது.

4. "வினவிப் புகுமூர்" என்று வினவுகிறதைச் சொல்லுகிற திருத்தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பூ அலரும் போதை' என்று தொடங்கி.

5. 'திருக்கோளூரிலே புகும்' என்பது, எதுகொண்டு நிச்சயிக்கிறாள்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என் வயிற்றில்' என்று தொடங்கி.

[1]தாயின் வழியைக் கொண்டே தன்மைகளை அறுதியிடலாமே அன்றோ. [2]பெருமாளைக் கண்டல்லது தரிக்கமாட்டாதானாய் வருகிற ஸ்ரீபரதாழ்வானைக் கண்டுவைத்தேயும், முக்காலமும் உணர்ந்த முனிவரும்கூட, [3]"வருத்தம் இன்றிக் காரியம்செய்கிற ஸ்ரீராபிரானிடத்தில் கெட்ட நினைவில்லாதவனாகிச் செல்லுகிறாயோ! இந்தப் பெரிய சேனையானது எனக்குச் சந்தேகத்தை உண்டுபண்ணும் போலிருக்கிறது" என்கிறபடியே, தாயாரை இட்டு வழக்குப் பேசுவித்துக்கொண்டு இவரைக் காடு ஏறப் போக விட்டாயாகில்,இன்னம் 'பெருமாள் இருக்கில் [4]கீழ்வயிற்றுக் கழலையாகிறது' என்று அங்குப் போய் நலியத் தேடுகிறாய் அல்லை அன்றோ என்றான் அன்றோ. அவன் படிகள் காணாநிற்கச்செய்தே தாய் சம்பந்தம் கொண்டு ஐயப்பட்டானே அன்றோ. பொருள்களின் தன்மைகளைக்கொண்டு பத்தும் பத்தாக நிமித்தங்களை அறியக் கடவர்களாய் இருப்பர்கள் வேடர்கள்; இங்ஙனே இருக்கச்செய்தேயும், தம் எல்லையிலே இவன்வந்து புகுந்ததற்கு மகிழ்ந்தவர்களாய் [5]**'அடிச்சேரியிலே வந்து புகுவதே!'** என்பது; 'ஆனாலும், அரசர்களாயிருப்பார் வன்னியர் பற்றிலே புகுரும்போது கேள்விகொண்டன்றோ புகுருவது' என்றாற்போலே இருக்க வெளிறும் காழ்ப்புமாகச்

---

1. இவள், வயிற்றிற் பிறப்பாலே அவ்வூரிலே போயினமை நிச்சயிக்கும்படி எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாயின் வழியை' என்று தொடங்கி.

2. அங்ஙனம் தாயின் வழிகொண்டு அறுதியிட்டபேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பெருமாளை' என்று தொடங்கி.

3. "கச்சிந் ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்ய அக்லிஷ்ட கர்மண:
இயம் தே மஹதீ ஸேநா ஶங்காம் ஜநயதீவ மே"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 85: 7. இது, ஸ்ரீ பரதாழ்வானைப் பார்த்து ஸ்ரீ குகப்பெருமாள் கூறியது. இது, குகப்பெருமாளுடைய வார்த்தையாக இருப்பினும், இதனை இங்கே எடுத்தது, பரத்துவாச பகவானுக்கும் கருத்து இதுவாகையாலே.

4. கீழ்வயிற்றுக் கழலை - அடிவயிற்றில் தோன்றிய கட்டி. அக்கட்டியைப் போன்று பாதகமாம் என்பது கருத்து. 'கீழ்வயிற்றுக் கழலை' என்று தொடங்கும் வாக்கியம்,

"கச்சிந்ந தஸ்ய அபாபஸ்ய பாபம் கர்தும் இஹேச்சஸி
அகண்டகம் போக்துமநா ராஜ்யம் தஸ்யாநுஜஸ்ய ச"

என்பது (ஸ்ரீராமா. அயோத். 90: 13.) போன்ற பரத்துவாச முனிவருடைய வார்த்தைகளைத் திருவுள்ளம்பற்றி.

5. அடிச்சேரி - அடியாருடைய குப்பம். வெளிறு - சாரம் இல்லாதது. காழ்ப்பு - சாரம். என்றது, வினயமும் ஆண்மையும் தோன்றச் சொல்லி என்ற

சொல்லி, தாய் வழியை நினைத்து அசிர்த்தார் அன்றோ ஸ்ரீகுகப்பெருமாளும்.

அப்படியே, இவளும் தன் வயிற்றிற் பிறந்த சுத்தியே காரணமாகத் '**திருக்கோளூரிலே புகும்**' என்று அறுதியிடுகிறாள். [1]இராமபாணம் இலக்குத் தப்புமோ! என்மகள் புகும் ஊர் அதுவே என்கிறாள். இளமான் - [2]இப்பருவத்தில் இவளைத் தலக்கு அறுக்கும்போது அவ்வூரில் அவனேயாகவேண்டாவோ? என் இளமான் - கிரமத்திலே அடைவதைப் பொறுக்காதவள். தன் மிருதுத்தன்மை பாராமல் பதறிக்கொண்டு போனாள். புகுமூர்- [3]காட்டுத் தீயிலே அகப்பட்டவன் பொய்கையும் பொழிலும் தேடிப் புகுமாறுபோலே, சம்சாரமாகிற பாலை நிலத்தில் காட்டுத் தீயிலே அகப்பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய்கையும் பொழிலும் போலே அன்றோ. **புகும் ஊர்** என்கையாலே, புக்கார் போகும் ஊர் அன்று என்கை. [4]**எம்பெருமானார்** தெற்கே எழுந்தருளாநிற்க, எதிரே வருகிறாள் ஒரு பெண்பிள்ளையைக் கண்டு 'எங்கும் நின்றும்?' என்ன, 'திருக்கோளூரில் நின்றும்' என்ன, 'அவ் வூரில் புக்க பெண்களும் போகக்கடவராய் இருப்பர்களோ?' என்று அருளிச்செய்தார். 'என் இளமான் மண்ணினுள் புகும் ஊர் திருக்கோளூரே இது திண்ணம்' - இவள் போய்ப் புகும் ஊர் திருக்கோளூரே, இது நிச்சயம். [5]**இவ்வூரில் பிள்ளைகளைக் காணவிட்டால், கோயிலுக்குள் தேடுமத்தனை அன்றோ.** (1)

---

படி. அசிர்த்தார் - ஐயப்பட்டார். இங்கு, கம்பராமாயணம் குகப்படலம் 14-முதல் 32-முடிய உள்ள செய்யுட்களைப் படித்து அறிதல் தகும்.

1. "என்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இராமபாணம்' என்று தொடங்கி.

2. "இளமான்" என்பதற்கு மூன்று வகையாக, பாவம் அருளிச்செய்கிறார் 'இப்பருவத்தில்' என்று தொடங்கி. தலக்கு - நாணம்.

3. "புகும் ஊர்" என்பதற்கு, சுவாபதேசத்திலே பாவம் அருளிச்செய்கிறார் 'காட்டுத் தீயிலே' என்று தொடங்கி.

4. 'போகும் ஊர் அன்று' என்றதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'எம்பெருமானார்' என்று தொடங்கி.

5. எந்த ஊர் சென்றாள் என்பதனை அறியாத இவள் "திண்ணம்" என்கிறது, எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வூரில்' என்று தொடங்கி.

## 620.

ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய
பேரும் தார்களு மேபிதற் றக்கற்பு வான் இடறிச்
சேரும் நல்வளம் சேர்பழ னத்திருக் கோளூர்க்கே
போருங் கொல்? உரை யீர்கொடி யேன்கொடி பூவைகளே!

**பொ - ரை :**—ஊரிலுள்ளவர்களும் நாட்டிலுள்ளவர்களும் உலகத்துள்ளவர்களும், தன்னைப்போலவே, அவனுடைய திருப்பெயர்களையும் திருமாலைகளையும் பிதற்றும்படியாக, சிறந்த கற்பினையும் காற்கடைக் கொண்டு, நல்ல வளப்பங்கள் சேர்ந்திருக்கின்ற வயல்களையுடைய திருக்கோளூர் என்னும் திவ்வியதேசத்திற்குச் சென்று சேர்கின்ற, கொடியேனுடைய பூங்கொடி போன்ற என்மகளானவள் மீண்டு வருவாளோ? சொல்லுங்கோள் என்கிறாள்.

**வி - கு :**—பூவைகாள்! ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றத் திருக்கோளூர்க்குச் சேரும் கொடியேன் கொடி போருங்கொல்? உரையீர் என்க. கற்பு வான் இடறித் திருக்கோளூர்க்குச் சேரும் கொடி என்க. பூவை - ஒருவகைப் பறவை. போரும் - போதருதல்.

**ஈடு :**—இரண்டாம்பாட்டு. [1]திருக்கோளூர்க்கே போய்ப் புக்க என் பெண்பிள்ளை மீண்டு வருமோ? சொல்லீர்கோள்! என்று பூவைகளைத் திருத்தாயார் கேட்கிறாள்.

ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற - [2]இந்த இருப்பில் என்ன குறை உண்டு? இங்கே ஒரு குறை உண்டாய், அங்கே அது தீரப் போனளோ? இங்கே, போதயந்தஃ பரஸ்பரம் பண்ணுகைக்கு ஆள் இல்லாமை "எங்குப் பழையர்களாய் விளங்குகின்ற சூரிகள் வசிக்கின்றார்களோ" என்று ஓதப்படுகிற ஒருதேச விசேடம்

1. "திருக்கோளூர்க்கே போருங்கொல்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "போருங்கொல்" என்பதற்கு அருளிச்செய்யும் மூன்றாவது அர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றி இந்த அவதாரிகையை அருளிச்செய்கிறார்.

2. "ஊரும்......பிதற்ற" என்பதற்குக் கருத்துரையாக அருளிச் செய்கிறார் 'இந்த இருப்பில்' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார் 'இங்கே' என்று தொடங்கி. போதயந்தஃ பரஸ்பரம் பண்ணுதல் - ஒருவருக்கு ஒருவர் அறிவித்தல். "யத்ர பூர்வே ஸாத்யாஃ ஸந்தி தேவாஃ" என்பது, புருஷசூக்தம்.

தேடிப் போனுளோ? [1]"குற்றமற்றவனாய்ப் பூர்ண சாம்யத்தை அடைகிறான்" என்று அவன் அங்குள்ளாரைத் தன்னோடு ஒத்தவர்களாயிருக்கும்படி செய்தாற்போலே அன்றோ, இங்குள்ளாரை இவள் தன்னோடு ஒக்கப் பண்ணினபடி. ஊரும் நாடும் உலகமும்-[2]தான் இருந்த ஊரும் அதனோடு தோள்தீண்டியான நாடும் அதனோடு சேர்ந்த உலகமும். ஸ்ரீராமாவதாரத்திலும் ஓர் ஊரேயன்றோ திருந்திற்று; இங்குச் சம்சாரமாகத் திருந்திற்றுக் கண்டீர்! என்கை. [3]இன்று நம்மளவும் வர வேறிப் பாயும்படி அன்றோ இவள் சம்பந்தம் வெள்ளம் இட்டபடி. [4]"பகவத் பக்திக்கு மேட்டுமடையான சம்சாரத்திலே ஈசுவர அவதாரம் போலே ஸ்வயம் பிரயோஜனமாக அவதரித்தவராய்ப் பரமப் பிரயோஜனரூபமாய் நிறைவுற்றிருக்கின்ற பக்தி யோகத்தையுடையவர்" என்னும்படியே, எல்லா மேடுகளிலும் ஏறிற்று என்கை.[5]காலை எழுந்திருந்து கரிய குருவிக்கணங்கள் மாலின் வரவு சொல்லி - சிற்றஞ் சிறுகாலையிலே பறவைகளுங்கூட எழுந்திருந்து, அவன் இவள்பக்கல் பிச்சு ஏறி வரும்படி

1. "தன்னைப்போல்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'குற்றமற்றவனாய்' என்று தொடங்கி.

"புண்ய பாபே விதூய நிரஞ்சநঃ பரமம் ஸாம்யம் உபைதி"

என்பது, முண்டகோபநிடதம். 3: 1.

2. "ஊரும் நாடும்.........பிதற்ற" என்பதற்குத் தாத்பர்யத்தாலே சித்தித்த பொருளை 'இவ்விருப்பில்' என்று தொடங்கி மூன்று வாக்கியங்களால் அருளிச்செய்து, சொற்களுக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'தான் இருந்த ஊரும்' என்று தொடங்கி. இதனினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறார் 'ஸ்ரீ ராமாவதாரத்திலும்' என்று தொடங்கி.

3. அப்படித் திருந்திற்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இன்று நம்மளவும்' என்று தொடங்கி.

4. இப்படிச் சம்சாரம் முழுதும் திருந்துகையாலே ஆழ்வார் கிருபைக்கு மேட்டு மடையாய் இருப்பார் இலர் என்னுமதனைப் பிரமாணத்தோடு அருளிச்செய்கிறார் 'பகவத் பக்திக்கு' என்று தொடங்கி.

"லோகே அவதீர்ண பரமார்த்த ஸமக்ர பக்தி
யோகாய நாதமுநயே யமிநாம் வராய"

என்பது, தோத்திரரத்நம். 3.

5. திருந்தியதன் சரமாவதியை (முடிவின் எல்லையை)க் காட்டுகிறார் 'காலை எழுந்திருந்து' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி. 9: 8. இதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'சிற்றஞ்சிறு காலையிலே' என்று தொடங்கி. "மால்" என்பதற்கு, வியாமோகத்தையுடையவன் என்றும், அறப் பெரியவன் என்றும் இரண்டு பொருள். முதற்பொருளின் விவரணம் 'அவன் இவள்பக்கல்' என்று தொடங்கும் வாக்கியம். இரண்டாவது பொருளின் விவரணம், 'தான் இருந்த இடத்தே' என்று தொடங்கும் வாக்கியம்.

யைச் சொல்லாநின்றன. தான் இருந்த இடத்தே செல்ல வேண்டுமவன் இவள் இருந்த இடத்து ஏற வரும்படியைச் சொல்லி.

தன்னைப் போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற-அவன் மயர்வுஅற மதிநலம் அருள வந்த பிதற்றே அன்றோ இவளது! இவள்தான் அடியாக வந்த பிதற்றே அன்றோ இவர்களது! பிதற்றுதலாவது, நினைத்துச் சொல்லுகை அன்றியே, பகவானுடைய குணங்களிலே மூழ்கி உணர்த்தி அற்றுச் சொல்லுதல். [2]"இந்த அர்த்தமானது ஜமதக்னியின் பிள்ளையான பரசுராமனுடைய பிதற்றுதலில் நின்றும் கேட்கப்பட்டது" என்கிறபடியே. அவனுடைய பேரும் தார்களும் பிதற்றுதலாவது[3], "சங்கென்னும் சக்கரமென்னும் துழாயென்னும்" என்பது, "தேவதேவபிரான்" என்பது, "விரைமட்டு அலர் தண் துழாய்" என்பதாகை. வான்கற்புஇடறி-[4]வானன கற்பை இடறி. ஒருவரால் கடக்க ஒண்ணாத மரியாதையைக் கடந்து. மலைபோலே இருக்கிற மரியாதையை, காற்கீழே அகப்பட்டதொரு சிறிய கல்லை இடறுமாறு போலே இடறி. [5]பெரு வெள்ளமானது, சிறிய கரைகளோடு பெரிய கரைகளோடு வாசி அற ஏறுமாறுபோலே, நாணம் மடம் அச்சம் தொடக்க

---

1. மயர்வற மதிநலம் அருளப்பெற்ற தன்னைப் போல், ஊரும் நாடும் உலகமும் பிதற்றக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் மயர்வற' என்று தொடங்கி. இதனால், அவன் மயர்வற மதிநலம் அருளினது இவள் ஒருத்தி அளவிலே சுவறிவிட்டது; இவள் மயர்வற மதிநலம் அருளினது எல்லார்க்குமாய்விட்டது என்பதனைத் தெரிவித்தபடி.

2. உணர்த்தி அற்றுச் சொல்லுகைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'இந்த அர்த்தமானது' என்று தொடங்கி.

"ஶ்ருதோயம் அர்த்தோ ராமஸ்ய ஜாமதக்ந்யஸ்ய ஜல்பதஃ" என்பது, பாரதம் மோக்ஷதர்மம். 34.

3. "பேரும் தார்களும்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் "சங்கென்னும்" என்று தொடங்கி. "சங்கென்னும்" என்பது, திருவாய். 4. 2: 9. "தேவ தேவபிரான்" என்பது, திருவாய். 6. 5: 2. "விரைமட்டு" என்பது, திருவாய். 2. 4: 9.

4. வானன - வலியதான. கற்பு - மரியாதை. கற்பிற்கு வலிமை ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒருவரால்' என்று தொடங்கி. அதனை ஓர் எடுத்துக்காட்டுமூலம் விளக்குகிறார் 'மலைபோலே' என்று தொடங்கி.

5. கடக்கமுடியாததான மரியாதையை மீறியதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'பெருவெள்ளம்' என்று தொடங்கி.

மானவற்றை மதியாதே போதல். [1]அன்றிக்கே, கற்பு வான் இடறி என்பதற்கு, வலிய அறிவினை இடறி என்றும் சொல்லு வர்கள். அப்போது, கற்பு என்று கல்வியாய், அதனாலே அறி வினைச் சொல்லி, வான் என்று வலியைச் சொல்லிற்றாகிறது. அன்றிக்கே, பெரிய ஞானத்தை இடறி என்றும் சொல்லுவர் கள். அப்போது, கற்பு என்று கல்வியாய், அதனாலே ஞான மாய், வான் என்று பெருமையாய், பெரிய ஞானத்தை என்ற படி.[2] ஆசைக்கு ஓர் அளவு உண்டாகில் அன்றோ ஓர் அளவிலே தடைநிற்பது. [3] "காவலும் கடந்து" என்னக் கடவதன்றோ. "யயள ச காசித் ப்ரேமாந்தா - ஒருத்தி புறப்பட்டுப் போனாள்; இவளைக்கொண்டு போனார் யார்? என்னில், அன்பினாலே வந்த இருட்சி வழிகாட்டப் போனாள்." [4]"குரவः கிங்கரிஷ்யந்தி தக் தாநாம் விரகாக்நிநா - குருக்கள் கண்டீர் என்ன, வெந்து விழு வதற்கு ஒரு குடநீர் சொரியவல்லர்களோ?"

சேரும் நல்வளம் சேர்பழனம் திருக்கோளூர்க்கே போரும் கொல் - [5]இங்கே அசலைக் காக்க இருக்கிறவள் அங்கே தன் வயிறு வளர்க்கப் போவதே! இங்கே பிறர் திருந்தும்படி இருக் கிற இவள் அங்கே திருந்தின இடம் தேடிப் போவதே! தன் னைக் கண்டு பிறர் வாழ இருக்கிற இவள், தான் அவனைக்கண்டு வாழப் போவதே! ஒத்தவையான நல்ல செல்வங்கள் சேர்ந் திருப்பதாய், நீர் நிலங்களையுமுடைத்தாயிருக்கிற திருக்கோளூ

---

1. "கற்பு" என்பதற்கு, மரியாதை என்று மேலே பொருள் அருளிச் செய்து, அறிவு என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

2. மரியாதையை மீறுதல் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'ஆசைக்கு' என்று தொடங்கி.

3. மரியாதையைக் கடந்து சென்றதற்குச் சம்வாதம் இரண்டு காட்டு கிறார் "காவலும் கடந்து" என்றும், 'யயௌ' என்று தொடங்கியும். "காவ லும் கடந்து" என்பது, பெரியாழ்வார் திருமொழி. 3. 6: 1.

"யயௌச காசித் ப்ரேமாந்தா தத்பார்ஶ்வம் அவிலம்பிதம்"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 13: 19. இச்சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஒருத்தி புறப்பட்டு' என்று தொடங்கி.

4. காவலைக் கடந்த பிரகாரத்தைக் காட்டுகிறார் "குரவः" என்று தொடங்கி. "குரவ கிம் கரிஷ்யந்தி" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 18: 22.

5. "ஊரும் நாடும்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து, "போருங்கொல்" என்கிறவளுடைய மனோபாவத்தை இரண்டு வகையாக அருளிச்செய்கிறார் 'இங்கே அசலை' என்று தொடங்கி. அவற்றை விவரணம் செய்கிறார் 'தன்னைக்கண்டு' என்று தொடங்கி.

ராதலின் '**சேரும் நல்வளம்சேர்**' என்கிறாள்.[1] போருங்கொல் என்றது, புகுங்கொல் என்றபடி. அன்றிக்கே, இவளுக்குமுன்னே தன்னெஞ்சு முற்பட்டபடியாய், அங்கே இருந்து வழியில் ஒரு குறையும் இன்றியிலே அவள் வருமோ? என்கிறாளாகவுமாம். அன்றிக்கே, நல்வளம் சேர் பழனம் திருக்கோளூர்க்கே சேரும் கொடி போருங்கொல்? என்று கூட்டி, பூவைகாள் உரையீர் என்னலுமாம். என்றது, மீண்டு புறப்பட்டு வரவல்லளோ? சொல்லீர்கோள் என்கிறாள் என்றபடி.

கொடியேன்-இவளைப் பெறுகைக்குப் புண்ணியம் செய்து வைத்து, இவள் அளவினை உங்களைக் கேட்கவேண்டும்படியான பாவத்தைச் செய்துள்ளேன். கொடி-கொள்கொம்பை ஒழியில் தறைப்படும். [2] 'கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே மால் தேடி ஓடும் மனம்' அன்றோ. அன்றிக்கே, [3]பெற்ற என்னையும் விட்டு வேறேயும் ஒரு பற்றுக்கோடு உண்டாம்படியான பாவத்தைச்செய்துள்ளேன் என்பாள் '**கொடியேன் கொடி**' என்கிறாளாகவுமாம். [4]பெற்ற தாயாரை விட்டு அகலுதல் குடியின் தன்மை போலே காணும். பூவைகாள் போருங்கொல் உரையீர் - பெற்ற தாயரை விடலாம்; அத்தனை அல்லது, பிறந்தாரைக் கைவிடப் போகாது என்றிருக்கிறாள் காணும் தன்னை இட்டு. போக்குவரத்து எனக்கு அன்றோ சொல்லலாகாது, உங்களுக்கு ஒதுக்காதே சொல்லுமே; வயிற்றிற் பிறந்தார்க்கு ஒளிப்பார் இலரே: உரையீர் - [5]அவள் சொல்லிப் போகச் செய்தே இவைசொல்லாது இருக்கின்றன என்று இருக்கிறாள்

1. "போருங்கொல்" என்றதற்கு, மூன்று வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'போருங்கொல் என்றது' என்று தொடங்கி. ஆக, புகுங்கொல் என்றும், வருங்கொல் என்றும், மீண்டு புறப்பட்டு வரவல்லளோ என்றும் மூன்றுவகையாகப் பொருள் அருளிச்செய்தபடி.

2. 'கொள்கொம்பு ஒழியில் தறைப்படும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'கோல்தேடி' என்று தொடங்கி. இது, இரண்டாந் திருவந். 27.

3. "கொடி" என்பதற்கு, வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'பெற்ற என்னையும்' என்று தொடங்கி.

4. பெற்ற தாயான தனக்குச் சொல்லாளோ? இவற்றைக் கேட்கிறது என்? என்ன, 'பெற்ற தாயரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'தன்னை இட்டு' என்றது, தன்மகளுக்குத் தான் மறையாதே சொல்லுமாறுபோலே, தன்னாலே வளர்க்கப்பட்ட இவற்றுக்கு மறையாதே சொல்லிப் போம் என்று கேட்கிறாள் என்றபடி. கருத்துப் பொருள், 'போக்குவரத்து' என்று தொடங்கும் வாக்கியம்.

5. "உரையீர்" என்று நியமிக்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவள் சொல்லிப் போக' என்று தொடங்கி.

காணும். [1]போருங்கொல் என்ற ஐயத்துக்குக் காரணம், பாவியான நான் இருக்கையாலே மீளாது ஒழியவும் கூடுமே, நீங்கள் இருக்கையாலே மீளவும் கூடும் அன்றோ என்ற எண்ணம் என்க. என்றது, பாவமே பிரபலமாய் வாராது ஒழியுமோ? உங்களைப் பார்த்து வருமோ? சொல்லீர்கோள்! என்கிறாள் என்றபடி. [2] அறிவித்துப் போனானாகில் ஸ்ரீராமாவதாரத்தைப் போலே உலகமாகப் பின்தொடரும் அன்றோ; சுற்றமெலாம் பின்தொடர அன்றோ போயிற்று! (2)

## 621.

பூவைபைங் கிளிகள் பந்து தூதைபூம் புட்டில்கள்
யாவையும் திருமால்திரு நாமங்களே கூவி எழும்என்
பாவை போய்இனித் தண்பழ னத்திருக் கோளூர்க்கே
கோவைவாய் துடிப்ப மழைக்கண்ணொடு என்செய் யுங்கொலோ?

**பொ - ரை :**—பூவையும் பசிய கிளிகளும் பந்தும் தூதையும் அழகிய பூக்கூடையுமாகிய இவை எல்லாவற்றாலும் உண்டாகும் இன்பமுழுதும் திருமால் திருநாமங்களைச் சொல்லுவதனாலே உண்டாகும்படி அவன் திருநாமங்களைச் சொல்லி அதனாலே வாழ்வு பெறுகின்ற என் மகள், குளிர்ந்த வயல்களையுடைய திருக்கோளூர்க்கு இனிச் சென்று, கோவைக்கனி போன்ற வாய் துடிக்கும்படி தண்ணீர் நிறைந்த கண்களோடு நின்று என்ன செய்கிறாளோ? என்கிறாள்.

**வி - கு :**—பெண்கள் பந்து விளையாடுதல் மரபு. தூதை - விளையாட்டுக்குரிய சிறிய மரப்பானை. புட்டில் - பூங்கூடை. போய் என் செய்யுங்கொலோ? என்க.

**ஈடு :**—மூன்றாம்பாட்டு. [3]திருக்கோளூர் அண்மையிலிருந்ததாகில் எங்ஙனே உடைகுலைப்படக்கடவள் என்கிறாள்.

---

1. "போருங்கொல்" என்று ஐயப்படுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'போருங்கொல்' என்று தொடங்கி.

2. மகள்தான் அறிவித்துப் போகாது ஒழிவான் என்? என்ன, 'அறிவித்துப் போனானாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

சுற்றமெலாம் பின்தொடரத் தொல்கானம் அடைந்தவனே!
அற்றவர்கட் கருமருந்தே! அயோத்திநகர்க் கதிபதியே!
கற்றவர்கள் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே!
சிற்றவைதன் சொற்கொண்ட சீராமா! தாலேலோ.

என்பது, பெருமாள் திருமொழி.

3. "கோவை வாய் துடிப்ப மழைக்கண்ணொடு என்செய்யுங்கொலோ" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

பூவை.......எழும் என்பாவை - [1]வேறு ஒன்று கொண்டு பொழுதுபோக்கும் பருவத்திலும் திருநாமத்தையே கொண்டு ஜீவித்திருக்குமவள் கண்டீர் போனாள்! இங்கு இருந்த நாள் மற்றொன்று தாரகமாய், அங்கே சென்று அவனாலே தரிக்கப் போனாளோ. [2]பூவைதொடக்கமான லீலையின் உபகரணங்களால் பிறக்கும் உவகை எல்லாம் துவயத்திற் படியே ஸ்ரீயஃபதி (திருமகள் கொழுநன்) என்கிற திருநாமத்தைச் சொல்ல அதனாலே உண்டாகாநின்றது. [3]" 'ஊரும்நாடும் உலகமும் தன்னைப் போல்' என்கிறபடியே, இவைதாம் திருநாமத்தைச் சொல்லினவாறல் ஆகாதோ " என்று, பெற்றி, நம்பிள்ளையைக் கேட்க, " அதற்குக் குற்றம் உண்டு, 'பந்து தூதை புட்டில்' என்கிறவிடத்தில் தட்டுப் பிறக்கும்" என்ன, 'அங்ஙனேயோ' என்று இசைந்து போனார். நன்று; அவன் திருநாமங்களை இவற்றிற்கு இட்டு அழைத்ததாகக் கொண்டாலோ? என்னில், " உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் " என்றிருக்கிற அளவுகடந்த ஈடுபாட்டிற்கு[4] இதுசேராது.[5]அன்றிக்கே, பூவை பைங்கிளிகள்......எழும் என்பதற்கு, திருநாமச் சுவடு அறிந்தபின்பு விளையாட்டுக்குரிய கருவிகளைப் பார்த்தல்

---

1. கருத்துப்பொருள் அருளிச்செய்கிறார் 'வேறு ஒன்று கொண்டு' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'இங்கு இருந்த' என்று தொடங்கி.

2. " பூவை......என்பாவை " என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பூவை தொடக்கமான' என்று தொடங்கி. யாவையும் - எல்லாவற்றாலும் பிறக்கும் மகிழ்ச்சி எல்லாம். எழும் என் பாவை - உண்டாகாநின்றுள்ள என் பாவை என்றபடி.

3. பெற்றி என்னும் பெரியார் ஒருவருடைய நிர்வாகத்தையும், அவர் கூறும் நிர்வாகம் பொருந்தாமையையும் காட்டுகிறார் 'ஊரும் நாடும்' என்று தொடங்கி. பெற்றி நிர்வாகத்தில், " கூவி " என்பதற்குக் கூவும்படிசெய்து என்றும், " எழும் " என்பதற்குச் சந்தோஷிக்கும் என்றும் பொருள்.

4. 'இது சேராது' என்றது, வேறு ஒன்றால் காலக்ஷேபம் பண்ணுகை என்பது சேராது என்றபடி.

5. " பூவை......என்பாவை " என்பதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, திருமால் திருநாமங்களைக் கூவி, " மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு " என்கிறபடியே, பூவை தொடக்கமான எல்லாவற்றையும் இகழும் என் பாவை என்றபடி. இங்கே, " எழும் " என்பதற்கு, அவற்றை விட்டு எழும் என்று பொருள் கொள்க.

இவளுக்குப் பொறுக்கக் கூடாததாயிருக்கும் என்னுதல். [1]ஸ்ரீ பரதாழ்வானுடைய ராஜ்யதரிசனம் அவனுக்குப் பொறுக்க முடியாமற்போனது போலே.[2] சக்கரவர்த்திக்குச் சாஸ்திரார்த்தங்கள் செய்த அன்று நாயிறு பாடு, 'கைகேசி செய்த குற்றத்துக்கு நாமும் கீழோலை இட்டோம் என்று நாட்டார் நினைத்திருப்பது ஒன்று உண்டு; அந்தக் குற்றம் நமக்கு இல்லை என்று அறிவிக்கவேணும்' என்று சபையை அடைந்தான். அரசர் கூட்டம் அடங்கலும் திரண்டு 'கர்த்தாவானவனை இழந்தோம்; பின்பு அதற்குரியவர் காடு ஏறப்போய்க் கொடு நின்றார்; இனி, சக்கரவர்த்தி புத்திரர்களில் நின்றாரைக் கொண்டு நிர்வஹிக்கும் அத்தனை அன்றோ' என்று பார்த்து, மங்களத்தைக் கொடுக்கிற பல்லியங்களை முழக்கிக் கொண்டிருந்தார்கள்.

இந்த முரசஒலி செவிப்பட்டபோது "கருமாணிக்கமலை" என்னும் திருவாய்மொழியில் பிராட்டியின் சுயம்வரத்துக்கு மணமுரசு அறைந்தபோது தோழி பட்டவெல்லாம் பட்டான். விலலாப சபா மத்யே-தனி இடத்தில் அன்றோ பறிகொடுப்பது. தனக்குச் சேஷத்துவம் அன்றோ சொரூபம்; சொரூபத்தையன்றோ கொள்ள நினைக்கிறது! ஜகர்ஹே ச-சந்தியாவந்தனத்துக்குப் பிற்பட்டாரைப் பெரியோர்கள் பழிக்குமாறுபோலே. புரோஹிதம் - இந்தக் குடிக்கு நாங்கள் கைவாங்கியிருக்க, நீ முன்னேடிக் காரியங்கள் நடத்தக் கடவதாகச் சமைந்தபடி சால அழகியதாய் இருந்தது. சபாமத்யே ஜகர்ஹே - [3]"நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத்-தவறுன செயலைத் தனிமையில்

---

1. இரண்டாவதாக மேலே கூறிய பொருளுக்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஸ்ரீ பரதாழ்வானுடைய' என்று தொடங்கி.

2. ஸ்ரீ பரதாழ்வானுக்குப் பொறுக்கமுடியாததற்குப் பிரமாணம் காட்டுவதற்குத் தொடங்கி, அதற்கு அவதாரிகையும் பிரமாண சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'சக்கரவர்த்திக்கு' என்று தொடங்கி. சாஸ்திரார்த்தங்கள் - உத்தரக்கிரியைகள்; இறுதிக்கடன்கள். நாயிறுபாடு - சிற்றஞ் சிறுகாலே.

"ஸபாஷ்ப கலயா வாசா கல ஹம்ஸ ஸ்வரோ யுவா
விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம்."

"கதம் தசரதாஜ் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரகஃ
ராஜ்யம்ச அஹம் ச ராமஸ்ய தர்மம் வக்தும் இஹார்ஹஸி"

என்பன, ஸ்ரீராமா. அயோத். 82: 10, 12.

3. "ப்ரமாதாத் ஆசார்யஸ்ய புத்திபூர்வம்வா நியமாதிக்ரமம்
ரஹஸி போதயேத்"

என்பது, ஆபஸ்தம்ப தர்மம்.

தெரிவிக்கவேண்டும்" என்கிற நிலையைக் குலைத்தான். புரோஹிதத்வமாகிற காரணம் கழிகையினாலே. ராஜ்யஞ்ச அஹஞ்ச ராமஸ்ய-சேஷவஸ்துக்களில் ஒன்றனை ஒன்று ஆளுமோ? அங்ஙனேயாமன்று, இராச்சியந்தான் என்னை ஆண்டாலோ? தர்மம் வக்தும்இஹார்ஹஸி-உலகத்தில்தமப்பன்மாரையும் தமையன்மாரையும் அழியச்செய்து தாம்தாம் இராச்சியத்தைக் கைக்கொண்டு போருவது ஒன்று உண்டு; 'அதனை இவனும் செய்வான்' என்று இராதேகொள்; என்தன்மை அறிந்து அதற்குத் தகுதியாக வார்த்தை சொல்லப் பாராய். கதம் தசரதாஜ் ஜாதோ பவேத் ராஜ்யஅபஹாரகஃ-அவர்பிரிந்தஉடனே முடியவல்லவன் வயிற்றிலே பிறந்தேனும்படி எங்ஙனே? அவர் பொகட்டுப்போன இராச்சியத்தை நான் அபஹரித்தால். [1] நமஸ்யாமி க்ருதாஞ்ஜலிஃ - தகுதி இல்லாத வார்த்தைகளை அவன் சொல்லச் செவிதாழ்த்ததனால் அபவாதத்துக்குப் பிராயச்சித்தம் செய்கிறான்.

என்பாவை இனிப்போய்-[2]என்புத்திக்கு வசமான செயல்களையுடையவள் கண்டீர் என்னை ஒழியப் புறப்பட்டுப்போனாள். அன்றிக்கே, நிருபாதிகமான பெண்மையையுடையவள் என்னலுமாம். [3]விளையாட்டுப் பொருள்களால் கொள்ளும் காரியமும் அவனேயாம்படியான இந்த ஈடுபாட்டிற்கு மேலே அங்குப் போய்ப் பெறுவது என்னாகப் போனாளோ? என்பாள் '**இனிப்போய்**' என்கிறாள். தண் பழனம் திருக்கோளூர்க்கே-சிரமத்தைப் போக்கக்கூடிய நீர் நிலங்களையுடைய திருக்கோ

---

1. நீர் நம்மை வெறுக்கிறது என்? உம்முடைய தாயார் 'உமக்கு' என்று ராஜ்யத்தை வாங்கிப் பெருமாளைக் காட்டிலே போகும்படி செய்ய, என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நமஸ்யாமி' என்று தொடங்கி.

"யத்ஹிமாத்ராக்ருதம் பாபம் நஅஹம் தத‌பி ரோசயே
இஹஸ்தோ வனதுர்க்கஸ்தம் நமஸ்யாமி க்ருதாஞ்ஜலிஃ"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 82 : 15.

அபவாதத்துக்குப் பிராயச்சித்தமாவது, 'தன்னிடத்தில் பாவம் இல்லாவிட்டாலும் உலகத்தில் அபவாதம் உண்டானால் பிராயச்சித்தம் செய்யவேண்டும்' என்று சாஸ்திரம் சொல்லுகையாலே பிராயச்சித்தம் செய்வது.

2. "பாவை" என்று மரப்பாவையாய், அதுபோன்று பரதந்திரப்பட்டவள் என்ற கருத்திலே அருளிச்செய்கிறார் 'என்புத்திக்கு' என்று தொடங்கி.

3. "பூவை...என்பாவை" என்றதற்கு, அருளிச்செய்த முதற்பொருளினைக் கடாக்ஷித்து "இனி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'விளையாட்டுப்பொருள்களால்' என்று தொடங்கி.

ளூர்க்கே. கோவை வாய் துடிப்ப - கோவைப்பழம் போன்ற சிவப்பையுடைத்தான அதரமானது துடிக்க. [1] "'பிரியேன்' என்று பிரிந்தாய்; 'வருகிறேன்' என்று வந்திலே; என்னைத் தனியே இட்டுவைத்தாய்; நான் வருமளவும் இருந்தாய்" என்பனபோலே இருக்கச் சில சொல்ல நினைக்குமே; அது தோற்றும்படி உதடு நெளிக்கிறபடி. கோவைவாய் துடிப்ப மழைக் கண்ணொடு- [2] நினைத்தது சொல்லித் தலைக்கட்ட வொட்டாநின்றதோ கண்ணநீர்! உடைகுலைப்பட்டுக் கண்ணநீராலே தலைக்கட்டாநின்றாள். [3] "தசரதபுத்திரனை ஸ்ரீபரதாழ்வான் தீனசுரத்தோடு ஒருதடவை ஆர்யா என்று சொல்லிப் பின்பு வேறு ஒருவார்த்தையும் சொல்லவில்லை" என்பது போன்று.

என் செய்யும் கொலோ - சொல்லமாட்டாள், தவிரமாட்டாள், அழாதொழியமாட்டாள்; எங்ஙனே படுகிறாளோ? நம்மையும் பிறரையும் விட்டு அவன் திருநாமங்களை அநுபவிக்கிற போதை அழகு காணப்பெற்றோம்! அவனையே கண்டு அநுபவிக்கிற போதை அழகு காணப்பெற்றிலோமே. [4] நினைக்கும் வேளையில்போலே அன்று, கண்டால் பிறக்கும் விகாரங்கள்; [5] "காமன்உடல்கொண்ட தவத்தாற்கு உமை உணர்த்த வண்டு அலம்பும் தார் அலங்கல் நீண்முடியான்தன் பெயரே கேட்டிருந்து அங்கு ஆரலங்கல் ஆனமையால் கண்டு வணங்கினார்க்கு என்னாங்கொல்" என்றேயன்றோ இருப்பது. [6] அலாபத்தோடே

---

1. துடிப்பதற்குரிய காரணங்களை அருளிச்செய்கிறார் 'பிரியேன்' என்று தொடங்கி.

2. ஆனால், அதனைச் சொல்லாமல் உதடு நெளிக்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நினைத்தது சொல்லி' என்று தொடங்கி. 'உடை குலைப்பட்டு' என்றது, அவன் எதிரே வந்ததற்கு ஈடுபட்டு என்றபடி.

3. சொல்ல ஒட்டாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தசரத புத்திரனை' என்று தொடங்கி.

"துக்காபிதப்தோ பரதோ ராஜபுத்ரோ மஹாபலஃ
உக்த்வா ஆர்யேதி ஸக்ருத்தீனம் புநஃ நோவாச கிஞ்சந"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 99 : 38.

4. அநுசந்தான நிலையைக் காட்டிலும் அநுபவ வேளைக்கு ஏற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நினைக்கும் வேளையில்' என்று தொடங்கி.

5. இதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'காமன் உடல்கொண்ட' என்று தொடங்கி. இது, நான்முகன் திருவந். 78.

6. 'நம்மையும் பிறரையும்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'அலாபத்தோடே' என்று தொடங்கி.

இருக்கும் இருப்புக்கண்டேன்; இலாபத்தோடே இருக்கும் இருப்புக் காணப்பெற்றிலேன் என்கிருள். (3)

622.

கொல்லைஎன் பர்கொலோ? குணம்மிக் கனள்என் பர்கோலோ?
சில்லைவாய்ப் பெண்டுகள் அயற்சேரி உள்ளாரும் எல்லே!
செல்வம் மல்கி அவன்கி டந்ததிருக் கோளூர்க்கே
மெல்லிடை நுடங்க இளமான் செல்ல மேவினளே.

பொ - ரை :—தோழியே! செல்வம் மிகும்படி அவன் சயனித்திருக்கின்ற திருக்கோளூர் என்ற திவ்ய தேசத்திற்கு, என் இளமான் மெல்லிய இடையானது அசையும்படியாகச் செல்லுதற்கு ஒருப்பட்டாள்; பலவாறு பேசுகின்ற வாய்களையுடைய பெண்டுகளும் அயல் ஊரிலுள்ள பெண்டுகளும் வரம்பு அழிந்த செயலையுடையள் என்பர்கொலோ? குணத்தாலே மேம்பட்டவள் என்பர்கொலோ?

வி - கு :—கொல்லை - வரம்பு அழிந்த செயலையுடையவள்; உடையவன்: உயர்திணை இருபாற்கும் பொதுப்பெயர். சில்லை - பழிச்சொல். மல்கிக் கிடந்த திருக்கோளூர் என்க. மல்கி-மல்க. நுடங்க மேவினள் என்க.

ஈடு :—நாலாம்பாட்டு. [1] இவளைக் கண்ட நாட்டார், குணம் இல்லாதவள் என்பர்கொலோ? குணங்களால் மேம்பட்டவள் என்று கொண்டாடுவர்களோ? என்கிருள்.

கொல்லை என்பர்கொலோ - [2]இவள் வாசல் கடந்து புறப்படக்கடவதல்லாத மரியாதையைக் குலைத்தாள்: இவள் விலக்கிய செயலை மேற்கொண்டாள்: இவள் வரம்பு அழிந்த செயல்களைச் செய்தாள் என்பர்களோ? கொல்லை என்பது, வரம்பு இல்லாததற்குப் பெயர். குணம் மிக்கனள் என்பர்கொலோ - [3]குணாதிக விஷயத்துக்குப் போரும்படி செய்தாள் என்பர்

1. திருப்பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. "கொல்லை" என்பதற்கு, வரம்பு அழிந்த செயல்களைச் செய்கிறவள் என்று பொருளாகையாலே, அதனைத் தெளிவாக அருளிச்செய்கிருர் 'இவள் வாசல் கடந்து' என்று தொடங்கி.

3. 'குணாதிக விஷயத்துக்குப் போரும்படி செய்தாள்' என்றது, குணாதிக விஷயத்துக்குத் தகுதியாகப் பிராவண்யத்தாலே மிக்காள் என்றபடி.

களோ? கொல்லை என்பர் கொலோ குணம் மிக்கனள் என்பர் கொலோ - [1]இவள் விதியை மீறினள் என்பர்களோ: அல்லது [2]சித்தாந்தம் தன்னையே சொல்லுவர்களோ? [3]ஓர் அளவிலே நின்று விலக்கியவற்றைக் கொண்டு, இது தகுதி இல்லாதது என்பர்களோ; [4]ருசி சுபாவத்தாலும் விஷய சுபாவத்தாலும் இது தக்கது என்பர்களோ? [5] சாதன விதியளவிலே நின்று தடுமாறுவர்களோ: ஆத்மசொரூபத்தைப் பார்த்துத் தெளிவர்களோ? [6] உபாய அம்சத்தைப் பற்றி நின்று, இது கடவது அன்று என்பர்களோ: ஆத்மாவின் சொரூபத்தையும் பேற்றின் சொரூபத்தையும் பார்த்து, இது கடவது என்பர்களோ?

---

1. "கொல்லை என்பர்கொலோ, குணம் மிக்கனள் என்பர்கொலோ" என்பதற்குச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார் 'இவள் விதியை' என்று தொடங்கி. 'இவள் விதியை மீறினள்' என்றது, அவனையே உபாயமாகக் கொண்டிருத்தற்கு மாறுபட்ட தன் முயற்சியால் உண்டாகின்ற வேறுஉபாயங்களை விடும்படி விதிக்கின்ற "பரித்யஜ்ய - அடியோடு விடு" என்கிற விதியை மீறினள் என்றபடி.

2. 'சித்தாந்தம் தன்னையே சொல்லுவர்களோ?' என்றது, 'ருசி சுபாவத்தாலும், விஷய சுபாவத்தாலும், ஆத்ம சொரூபத்தைப் பார்த்தாலும்' என்று சொல்லப்படுகின்ற இவளுடைய பிராவண்யத்தின் மிகுதி, விஷய வைலக்ஷண்யம், சேஷத்வ சொரூபம் ஆகிற காரணம் மூன்றாலும் இது தக்கது என்கிற சித்தாந்தந்தன்னையே என்றபடி.

3. அவன் இருந்த தேசத்து ஏறப்போதலாகிற இது, விதியை மீறுதலும், சித்தாந்தத்தைச் சொல்லுதலும் ஆகிறபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஓர் அளவிலே' என்று தொடங்கி. 'ஓர் அளவிலே' என்றது, அவனையே உபாயமாகக் கொள்ளுதலும், அவனாலே ரக்ஷிக்கப்படும் பொருள் என்று எண்ணுதலும் போன்றவைகளிலே என்றபடி. 'விலக்கியவற்றைக் கொண்டு' என்றது, தன் முயற்சி, ஆத்ம சொரூபத்திற்கு முரண்பட்டது என்று விலக்குகிற "அதபாதகபீதஸ்த்வம்" (இந்தச் சுலோகத்தை 5-ஆம் பத். 221-ஆம் பக்கத்திற் காணல்தகும்) என்பது போன்ற பிரமாணங்களைக் கொண்டு என்றபடி.

4. 'ருசி சுபாவத்தாலும்' என்றது, விஷயத்தில் உண்டான ஆசையின் மிகுதியைக் குறித்தபடி.

5. 'ஓர் அளவிலே' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியங்களை விவரணம் செய்கிறார் 'சாதனவிதி அளவிலே' என்று தொடங்கி. என்றது, சாதனவிதி அளவிலே நின்று விலக்கியவற்றைக் கொண்டு என்றபடி. 'ஆத்ம சொரூபத்தைப் பார்த்து' என்றது, சேஷத்வம், சேஷியாகிய இறைவனுக்கு அதிசயத்தைக் கொடுக்கக் கூடியதாகையாலே அதனைப் பார்த்து என்றபடி

6. 'சாதனவிதி' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த இரண்டு வாக்கியங்களையும் விவரணம் செய்கிறார் 'உபாய அம்சத்தை' என்று தொடங்கி. 'ஆத்மாவின் சொரூபத்தையும்' என்றது, இறைவனிடத்தில் கொள்ளவேண்டிய பிராவண்யமே வடிவான ஆத்மசொரூபத்தையும் என்றபடி.

[1]பிற சாதனங்களை விலக்குதலை முன்னாகக்கொண்ட சொரூப ஞானம் பிறந்தால் புறப்படத் தகுதி இல்லை; சொரூபத்திற்குத் தகுதியான கைங்கரியத்தினை நினைத்தால், போய்ப் புக்கு அல்லது நிற்க ஒண்ணாது. [2]விதியைப் பார்த்து நிந்திப்பர்களோ: [3]காமவசனத்தைப் பார்த்து நன்று என்பர்களோ? [4]"விரக்தரான நீர் காமத்துக்குப் பரவசப்பட்டிருக்கின்ற எங்களை என் படுத்துகிறீர்" என்றாள் அன்றோ தாரை இளையபெருமாளைப் பார்த்து.

சில்லை வாய்ப் பெண்டுகள் - [5]சிலுகு சிலுகு என்னும் பெண்டுகள். விஷயத்திற்கு உட்பட்டு வருமதனையும் வசன சித்தம் என்றிருக்குமவர்கள். [6]உபாயபுத்தியினாலே வருமவற்றில் அன்றோ விதிக்கு விஷயமுள்ளது; குணங்களால் தூண்

---

1. ஆக, மேலே கூறிப் போந்தவற்றால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'பிறசாதனங்களை' என்று தொடங்கி.

2. மீண்டும் அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார் 'விதியைப் பார்த்து' என்று தொடங்கி. இங்கு, கீழ்வருவனவற்றை உணர்தல் தகும்.

எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை இன்மை யான. (தொல். பொருள். 35.)

கடலன்ன காம முழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில். (குறள். 1137.)

3. 'காமவசனம்' என்றது, "காந்தார்த்திநீ து யாயாதி ஸங்கேதம் ஸாபிஸாரிகா" என்ற வாக்கியத்தை. காமவசனம் - காமசாத்திரம்.

4. காமசாஸ்திரத்தைப் பார்த்தால் நன்று என்று தோற்றுமோ? என்ன, 'விரக்தரான நீர்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"ந காம தந்த்ரே தவ புத்திரஸ்தி
த்வம் வை யதா மந்யுவசம் பரபந்நஃ
ந தேசகாலௌ ஹி நசார்த்த தர்மௌ
அபேக்ஷதே காமரதிர் மநுஷ்யஃ"

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 33 : 55. இளையபெருமாளைப் பார்த்துத் தாரை கூறியது. என்றது, நீர் காமசாஸ்திரத்தை அறிந்திருந்தால் அன்றோ நான் செய்தது நன்று என்று நினைப்பீர் என்றபடி.

5. சிலுகு சிலுகு என்னும் பெண்டுகள் - பலவாறாகத் தூற்றிப் பேசும் பெண்கள். அவர்கள் யார்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விஷயத்திற்கு' என்று தொடங்கி. என்றது, விரும்பத்தக்கனவாய் வருமவற்றையும் "த்யாயீத - தியானிக்கக்கடவன்", "உபாஸீத-உபாசிக்கக் கடவன்" என்பன போன்ற வசனங்களால் சித்திக்கின்ற உபாயத்திலே சேரும் என்று இருப்பவர்கள் என்றபடி.

6. அப்படி நினைத்திருக்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உபாயபுத்தியினாலே' என்று தொடங்கி.

டப்பட்டுப் போமிடத்தில் விதி விஷயமாகாதே. அயல் சேரியுள்ளாரும் - இவள் இருந்த ஓர் ஊர் வாசியும்கூட இல்லாதவர்கள். எல்லே - [1]கீழில் அவர்களை விளிக்கிறாளாதல்; இஃது ஓர் ஆச்சரியம் இருந்தபடி என்! என்கிறாளாதல். செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே-[2]அவன் வரவை வாராமைக்குச் சமம் ஆக்கினாள். 'முற்பாடனாய் வந்தவனை, தான் நாலடி இட்டுப் பிற்பாடனாம்படி செய்தாள். அவன் சொரூபத்தை அழித்தாள். பரத்துவம் வியூகம் முதலியவைகளை விட்டு இங்கு வந்து கிடக்கிறது இவளுக்கு முற்பாடனாய உதவுகைக்கு அன்றோ. [3]தனக்குமேல் ஒன்று இல்லாததான செல்வமானது கரைபுரளும்படியாக அவன்வந்து திருக்கண்வளர்ந்தருளுகிற திருக்கோளூர்க்கே. [4]பாதுகாக்க வேண்டிய பொருள்களினுடைய பாதுகாத்தலைத் தொடங்கினாலன்றோ நியமிக்கின்றவனுடைய செல்வம் பிரகாசிப்பது! [5]அவன் வரவு பார்த்து இவள் இருக்கை அன்றிக்கே, இவள் வரவு பார்த்து அவன் காலம் பார்த்துக்கொண்டு கிடக்கிறான் ஆதலின் '**அவன் கிடந்த**' என்கிறாள்.

மெல் இடைநுடங்க-[6]அவன் சொரூபஞானம் இல்லாவிட்டால், தன்னுடைய சொரூபஞானமோதான் இவளுக்கு உண்

1. 'கீழில் அவர்களை' என்றது, மேற்பாசுரத்திற் கூறிய பூவை முதலானவற்றையாதல்; தோழியையாதல்; சில்லைவாய்ப் பெண்டுகள் முதலானாரையாதல். "சில்லைவாய்ப்பெண்டுகள் அயற்சேரியில் உள்ளார்" என்றதற்கு, அத்யவஸாய நிஷ்டர் என்பதும், இவர்களுக்கு அயலாரான த்வராநிஷ்டர் என்பதும் சுவாபதேசப் பொருள்.

2. "திருக்கோளூர்க்கே செல்ல மேவினள்" என்கிற திருத்தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவன் வரவை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'முற்பாடனாய்' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளினை அருளிச்செய்கிறார் 'அவன் சொரூபத்தை' என்று தொடங்கி. அவன்தான் இவளுக்கு முற்பாடனாகைக்கோ வந்தது என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரத்துவம்' என்று தொடங்கி.

3. "செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'தனக்குமேல்' என்று தொடங்கி.

4. பரமபதத்திலும் செல்வம் உண்டாயிருக்க, இங்கே கரைபுரளுகையாவது எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பாதுகாக்க வேண்டிய' என்று தொடங்கி.

5. "அவன் கிடந்த" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவன்வரவு' என்று தொடங்கி.

6. "மெல்லிடை நுடங்க" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவன் சொரூபஞானம்' என்று தொடங்கி. இது, சுவாபதேசப் பொருள். அவன் சொரூப ஞானமாவது, அவனுடைய நிருபாதிக ரக்ஷகத்வ

டாயிருக்கிறது. இவளுக்கு விழுக்காடு அறியாமை [1]எங்கும் ஒத்தது கண்டீர்! தன் இடையை அறிந்தாளாகில் தான் புறப்பட்டுப்போமோ? நடுவே அறியாமல் புகுந்த பிழை அன்றோ. மிருதுவான இடையானது துவளும்படியாக. [2]இந்த இடையைக்கொண்டு இவள் நடக்கப் புக்கால் எதிரே புறப்பட்டு வர வேண்டாவோ? இளமான் - போகிறவழியில் மிறுக்கும், தன் தன்மையும் அறிந்து மீளவல்ல பருவம் அன்று கண்டீர். செல்ல மேவினளே-போக ஒருப்பட்டாள். [3]இவள் கையிலும் இவர்கள் கைகளிலும் அன்றே பேறு கிடப்பது; அது அவன் கையதன்றோ; [4]இத்தலையில் துணிவே யன்றோ உள்ளது. [5]மேலே "**போனாள்**" என்றாள்; இங்கே, "**போக்கிலே ஒருப்பட்டாள்**" என்னாநின்றாள்; இது, சேரும்படி என்? என்னில், இவள் போகையில் ஒருப்பட்டபோதே போய்ப்புக்காள் அன்றோ? என்கிறாள்.

இளமான் செல்ல மேவினள், கொல்லை என்பர்கொலோ? குணம் மிக்கனள் என்பர்கொலோ? - [6]அவள் கைகழிந்து

---

ஞானம். தன்னுடைய சொரூபஞானமாவது, தன் முயற்சியைப் பொறாத பாரதந்திரிய ஞானம்.

1. 'எங்கும் ஒத்தது' என்றது, அவன் சொரூபத்திற்போலே தன் சொரூபத்திலும் ஒத்தது என்றபடி. அதுஎப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன்னிடையை' என்று தொடங்கி. 'நடுவே' என்பது, சிலேடை.

2. "மெல்லிடை நுடங்க, செல்ல மேவினள், அவன் கிடந்த" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இந்த இடையை' என்று தொடங்கி. 'புறப்பட்டு வரவேண்டாவோ' என்றது, செல்வக் கிடப்பாலே கிடந்தான் என்பதனைத் தெரிவித்தபடி.

3. போனாள் என்னாமல், "செல்லமேவினள்" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் கையிலும்' என்று தொடங்கி. என்றது, சேதனனுகையாலே இவனிடத்தில் முயற்சிமாத்திரமே வேண்டுவது; பேற்றுக்கு உபாயம் அவன் நினைவு ஆகையாலே, இவனுக்கும் பிறர்க்கும் சம்பந்தம் இல்லை என்றபடி.

4. ஆனால், இவனுக்குச் செய்யத்தக்கது ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இத்தலையில்' என்று தொடங்கி.

5. 'மேலே போனாள்' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, பாதிவழி போனாள் என்பது. அது எங்ஙனே? என்னில், இத்திருவாய்மொழியின் முன்னுரையிலே 'படுக்கையைப் பார்த்தவிடத்தில் வெறும்படுக்கையாய்க் கிடந்தது' என்கையாலும், "பொன்னுலகாளீரோ" என்ற திருவாய்மொழியின் முன்னுரையிலே, 'புறச்சோலையிலே கிடந்து தூது விடுகிறாள்' என்கையாலும், 'ஒருப்பட்டாள்' என்பதற்கு, பாதிவழி போனாள் என்பது பொருளாகக் கொள்க.

6. மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவள் கைகழிந்து' என்று தொடங்கி.

கொடுநின்ருள்: இனி இருந்த நாம் என்கேட்கிறேமோ?[1] இங்கு இருந்த நாள் நம்முடைய நல்வார்த்தையைக் கேட்கில் அன்றோ வழியிலுள்ளார் பழிகேட்பது அவள்.[2] இவள் வழிப்பட்டால் நல்வழியிலுள்ளார் வார்த்தை கேட்குமது ஒழியப் பெருவழியானுர் வார்த்தை கேளாள். (4)

623.

மேவி நைந்து நைந்து விளை யாடலுறுள் என்சிறுத்
தேவி போய்இனித் தன்திரு மால் திருக்கோளூரில்
பூவியல் பொழிலும் தடமும் அவன்கோ யிலும்கண்டு
ஆவிஉள் குளிர எங்ஙனே? உகக்குங்கொல் இன்றே?

**பொ - ரை:**—என்னுடைய இளமைபொருந்திய பெண்ணனவள், அவனை மனத்தாலே அடைந்து அதனாலே மனமும் சரீரமும் உருக் குலைந்து விளையாடுதலைச் செய்யாள்; இனிச் சென்று, தனது திருமால் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோளூர் என்னும் திவ்விய தேசத்தில் இருக்கின்ற பூக்கள் நிறைந்த சோலைகளையும் குளங்களையும் அவனுடைய கோயிலையும் உயிர் குளிரும்படியாகக் கண்டு இன்று எப்படி மகிழ்கின்றுளோ?

**வி - கு:**—என் சிறுத்தேவி மேவி நைந்து நைந்து விளையாடல் உறுள்; இன்று போய் ஆவி உள் குளிரக் கண்டு எங்ஙனே உகக்குங் கொல்? என்க.

**ஈடு:**—ஐந்தாம்பாட்டு. [3] திருக்கோளூரில் சோலைகளையும் அங்குள்ள பொய்கைகளையும் அவன் திருக்கோயிலையும் கண்டால் எங்ஙனே உகக்குமோ? என்கிறுள்.

மேவி-பகவானுடைய குணங்களிலே நெஞ்சினை வைத்து. நைந்துநைந்து-[4]தான் பற்றியிருக்கும் பொருள்களை அழிக்கும்

---

1. வழியிலுள்ளார் கூறுகின்ற பழியைக் கேட்கில் மீளாளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இங்கு இருந்தநாள்' என்று தொடங்கி.

2. ஆனுல், யார் வார்த்தையைத் தான் கேட்பாள்? என்ன, 'இவள்வழிப் பட்டால்' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிருர். 'நல்வழியிலுள்ளார்' என்றது, சில்லைவாய்ப்பெண்டுகளை. 'பெருவழியானுர்' என்றது, அயற்சேரியிலுள்ளாரை.

3. "திருக்கோளூரில் பூவியல்பொழிலும்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

4. மேவினுல் நையவேண்டுமோ? என்ன, 'தான்பற்றியிருக்கும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

நெருப்புப்போலே குணங்கள்தாம் அழிக்குமே:[1]"நினைதொறும் சொல்லுந்தோறும் நெஞ்சு இடிந்துகும்" என்பதேயன்றோ மறைமொழி.[2] இவள் மேவியது நிர்க்குணமாய் இருப்பது ஒருவிஷயத்தோடு அன்றே; உயர்வற உயர்நலமுடையவனோடே அன்றோ. மேவி -[3]இங்கு இருந்த நாளும் எங்களோடே பொருத்தம் இல்லை கண்டீர். நைந்து நைந்து -[4]நைந்து மீளமாட்டாள்; தரித்திருக்கமாட்டாள். விளையாடல் உறாள் - பருவத்துக்குத் தக்கதான விளையாடலை விட்டாள்.[5] விளையாடுகையைத் தவிர்ந்து மேவி நைந்தாள் அன்று கண்டீர்;[6]இந்த விஷயத்திலே மூழ்கி, புறம்புள்ளவற்றை விட்டாளத்தனை. "மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" - பகவானுடைய குணங்கள் கொண்டு மூழுக, புறம்புள்ளது கைவிட்டாள்.[7] நல்லதும் தீயதுமானல், தீயது போல் அன்றே நல்லது பண்ணிக் கொள்ளும்படி. [7]"எவன் ஒருவன் பரம்பொருளிடத்தில்மிகுந்த பக்தியையுடையவனாய், பரம்பொருளுக்கு வேறான விஷயங்களில் அன்பில்லாதவனாயிருக்கிறானோ அவன் எல்லா ஆசை

---

1. குணங்கள் அழிப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நினைதொறும்' என்று தொடங்கி. இது, திருவாய்.

2. "மேவி" என்றால் ஈசுவரனோடு ஒழிய, குணங்களோடும் மேவி என்ற பொருளைக் காட்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் மேவியது' என்று தொடங்கி.

3. "மேவி" என்பதற்கு, எதிர்மறை முகத்தால் சித்திக்கும்பொருளை அருளிச்செய்கிறார் 'இங்கு இருந்த' என்று தொடங்கி. என்றது, அவனோடு மேவி என்கையாலே, இங்கிருந்த நாளும் எங்களோடு பொருத்தம் இல்லை என்றபடி.

4. "நைந்து நைந்து" என்ற அடுக்குத் தொடருக்குப் பொருள் அருளிச் செய்கிறார் 'நைந்து மீளமாட்டாள்' என்று தொடங்கி.

5. உலகத்துப் பெண்களினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்குத் தொடங்குகிறார் 'விளையாடுகையை' என்று தொடங்கி.

6. பின்னர் எப்படி இருந்தாள்? என்ன, அதற்கு விடையும், விடைக்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'இந்த விஷயத்திலே' என்று தொடங்கி.

7. மற்றைப் படியாக ஆனாலோ? என்னில், 'நல்லதும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

8. மேலதற்கே வேறும் இரண்டு பிரமாணங்கள் காட்டுகிறார் 'எவன் ஒருவன்' என்று தொடங்கியும், 'மனைப்பால்' என்று தொடங்கியும்.

"பரமாத்மநி யோரக்தஃ விரக்தஃ அபரமாத்மநி
ஸர்வேஷணா விநிர்முக்தஃ ஸஃ பைக்ஷம் போக்தும் அர்ஹதி"

என்பது, பார்ஹஸ்பத்ய ஸ்மிருதி.

"மனைப்பால்" என்பது, இரண்டாந்திரு. 42.

களிலிருந்து விடுபட்டவனுய்ப் பிச்சை எடுத்து உண்பதற்குத் தகுந்தவனுகிருன்", "மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பம் எல்லாம், துறந்தார் தொழுதார் அத்தோள்" என்னுமாறுபோலே. மேவி நைந்து நைந்து விளையாடல் உறுள் - [1] இளமை மாறி முதியோளானுள் அல்லள். '**ஐம்புல இன்பங்கள் தாழ்ந்தவை**' என்று சாஸ்திரத்தாலே அறிந்து அவற்றை விட்டு, '**பகவத்விஷயம் நன்று**' என்று கைவைத்தாள் அல்லள்.

என் சிறுத்தேவி - தன் '**திருமால்**' என்று மேலே பெரிய தேவியைச் சொல்லுகையாலே, '**சிறுத்தேவி**' என்று விசேடிக்கிருள். அன்றிக்கே, பருவம் நிரம்பாதிருக்கச் செய்தேயும் பட்டம் கட்டின பெருந்தேவிகளோடு ஒக்கச் சொல்லலாயிருக்கையாலே '**சிறுத்தேவி**' என்கிருள் என்னுதல். [2]'**என்பெண் பிள்ளை**' என்கிற நினைவு இல்லைகாணும் இவளுக்கு. "பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுவரே" - இவளுக்கு நல் வார்த்தை சொன்ன நாக்கினைக் கழுவவேணும் என்கிருள். இனிப் போய் - [3]வேறே சில பொருள்கள் கொண்டு போது போக்கவேண்டும் பருவத்திலே, அவற்றை விடும்படியான பாகம் பிறந்த இதற்குமேலே ஓர் ஏற்றலைகம் உண்டாகப்போனுளோ? என்றது, [4]இங்கே இருக்கச்செய்தே "ஜனங்களின் சமீபத்தில் இருக்கிற இந்தச் சரீரத்தை நினைக்கிருன் இல்லை"

---

1. உலகத்துப் பெண்களினின்றும் வேறுபடுத்துகிருர் 'இளமை மாறி' என்று தொடங்கி. சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிருர் 'ஐம்புல இன்பங்கள்' என்று தொடங்கி. இதனுல், இதர முமுக்ஷுக்களில் வேறுபட்டவர் என்றபடி.

2. தன்வயிற்றில் பிறந்தவளைப் 'பெண்' என்று கூருமல், "தேவி" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'என் பெண் பிள்ளை' என்று தொடங்கி. இப்படி நினைத்த பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'பிள்ளையை' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 8. 2: 9. இதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'இவளுக்கு' என்று தொடங்கி.

3. "இனி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'வேறே சில' என்று தொடங்கி. ஏற்றலைகம் - ஏறினவிலை. என்றது, அதிசயமாக என்றபடி.

4. இதனைத் திருஷ்டாந்தத்தோடு விவரிக்கிருர் 'இங்கே இருக்கச் செய்தே' என்று தொடங்கி. "நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம்" என்பது, சாந்தோக்யம். 8. 12: 3. என்றது, சம்சாரத்தை விட்டுப் பரமபதத்துக்குச் சென்ற முக்தனுக்குப் பிறந்த ஞானம், இவளுக்கு இங்கே இருக்கச்செய்தே பிறந்ததாலுல், இனி அங்கே சென்று அநுபவிப்பது ஒன்று உண்டோ? என்றபடி.

என்ற நிலை பிறந்ததாகில், இனி, அங்குப் போய் அநுபவிப்பது உண்டோ? தன் திருமால் திருக்கோளூரில் - [1]அவள்பக்கல் இருக்குமாறுபோலே அன்றோ இவள்பக்கலிலும் அவன் இருக்கும்படி. [2]உலகத்தில் சேஷசேஷி பாவம்போல் அன்றே காதலிபக்கல் பரிமாற்றம். ஆதலாலே, "உலகத்திற்குத் தலைவன்" என்கிறபடியே, பிரமாணத்தைப் பார்த்துப் பரிமாற ஒண்ணாது அன்றோ காதலர் விஷயத்தில். தனக்கு எல்லாச் செல்வமான திருமால் திருக்கண்வளர்ந்தருளுகிற ஊரிலே.

பூ இயல் பொழிலும்-[3]தழையும் தண்டும் கொம்பும் கொடியுமாய்த் துரலாய் இராமல், வெறும் பூவேயாயிருக்கை. நித்திய வசந்தமான சோலை. தடமும்-அந்தப்பொழிலை வளர்ப்பதாய்ப் [4]பரப்பு மாறப் பூத்த தடாகமும். அவன் கோயிலும் கண்டு - [5]"மா மணிக் கோயிலே வணங்கி" என்கிறபடியே, அவனிலும் அவன் விரும்பி வாழ்கிற கோயிலையும் கண்களாரக் கண்டு. [6]திவ்யாத்ம சொரூபத்துக்குப் பிரகாசகமான திவ்வியமங்கள விக்கிரஹம்போலே, அவை இரண்டுக்கும் பிரகாசகமான கோயில். கோயிலைக் கண்டபோதே உள் உண்டான பொருளையும் அறுதியிடலாயிருக்கை. உள்ளில் பொன்னுக்குத் தக்க செப்பாயிருக்கும் அன்றோ. கண்டு - இங்கே இருந்து மானச

1. "திருமால்" என்பதற்கு, திருவினிடத்திற் போலே இவள் பக்கலிலும் வியாமுக்தனுயிருக்கிறவன் என்று பொருள்கூறத் திருவுள்ளம்பற்றி, பாவம் அருளிச்செய்கிறார் 'அவள்பக்கல்' என்று தொடங்கி. அவள் - பெரிய பிராட்டியார்.

2. அடியார்களிடத்திற் காட்டிலும் திருவினிடத்தில் மாலான படி எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உலகத்தில்' என்று தொடங்கி.

3. "பூவியல்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தழையும் தண்டும்' என்று தொடங்கி. "பூ இயல்பொழில்" என்பது, முக்காலவினைத்தொகையாகையாலே, அதற்குத் தகப் பொருளை அருளிச்செய்கிறார் 'நித்ய வசந்தமான சோலை' என்று.

4. "பூ இயல்" என்னும் அடைமொழியை, தடாகத்திற்கும் கூட்டுக.

5. கோயில் என்னுமல், "அவன் கோயில்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மாமணிக்கோயிலே' என்று தொடங்கி. இது, பெரிய திரு. 1. 1: 6.

6. "மணிக்கோயில்" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'திவ்யாத்ம சொரூபத்துக்கு' என்று தொடங்கி. இதனுல், பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'கோயிலைக் கண்டபோதே' என்று தொடங்கி. தாம் மேலே அருளிச்செய்த பொருளை உலக திருஷ்டாந்தத்திலே ஏறிட்டுக் காட்டுகிறார் 'உள்ளில்' என்று தொடங்கி.

அநுபவமாத்திரமேயாய்க் கிலேசப்பட்டவள் கண்ணாரக் கண்டு. [1] '**பிள்ளை திருநறையூர் அறையரும், பட்டருமாக** உள்ளே பிரதக்ஷணம் செய்யாநிற்க, இட்டஅடி மாறி இட மாட்டாதே கண்களாலே பருகுவாரைப் போலே பார்த்து வாழ்ந்துகொண்டு போகிறபடியைப் பின்னே நின்று கண்டு அநுபவித்தேன்' என்று **நஞ்சீயர்** அருளிச்செய்வர். **ஆச்சானும், ஆண்டானுமாகக்** கிழக்கே நடக்கிறபோது, திருப்பேர் நகருக்குக் கிழக்குப் போகவும் மாட்டாதே, ஏறித் திருவடி தொழவும் மாட்டாதே, திருப்பேர்நகரான் கோயிலைப்பார்த்துக் கொண்டு இருந்தார்களாம்.

ஆவி உள்குளிர-இவ்விடத்தைப் **பட்டர்** அருளிச்செய்யா நிற்கச்செய்தே மேல்எழ அருளிச்செய்தாராய், அங்கே இருந்த வரான [2] **சீராமப்பிள்ளை**, 'சீயா! **எம்பார்** அருளிச்செய்யும்போது '**ஆவி உள்குளிர**' என்று முகந்துகொண்டு அருளிச்செய்யும் படி கேட்டறிகை இல்லையோ?' என்று அருளிச்செய்தார். கமர் பிளந்த பரப்பு அடங்கலும் மறுநனையும்படியா யிருக்கை. எங்ஙனே உகக்கும்கொல் - [3] இவள் பருவம் நிரம்பாதிருக்கச் செய்தே புறம்புள்ளவற்றை விட்டு அவனை நினைத்து உருக்குலை கிறபோது அவ்வழகு கண்டு அநுபவிக்கப் பெற்றேன்; அவ

---

1. அவன் கோயிலைக் கண்களாலே காண்கையே புருஷார்த்தம் என்ப தற்கு இரண்டு ஐதிஹ்யங்கள் காட்டுகிறார் 'பிள்ளை திருநறையூர் அறையரும்' என்று தொடங்கியும், 'ஆச்சானும்' என்று தொடங்கியும். கிழக்கே நடக்கிற போது - திருக்குடந்தைக்கு எழுந்தருளுகிறபோது. ஏறி-சென்று. திருப்பேர் நகர் - ஒரு திவ்யதேசம்; திருவரங்கத்திற்குக் கிழக்கே இருப்பது.

2. சீராமப்பிள்ளை - பட்டருடைய திருத்தம்பியார். 'சீயர்' என்பது, பூஜ்யவார்த்தை.

"திருந்திய குணத்தினன் இறைஞ்சிச் சீய என்று"

என்று மேருமந்தர புராணத்து வரும் தொடருள் (638) இப்பொருளில் இச் சொல் வழங்குதல் இங்கு அறியத்தகும். இப்பெயர், வைணவ சந்நியாசிகட் குச் சிறப்புப் பெயராக வழங்குகிறது. ஆனால், முற்காலத்தே இப்பெயர் சிவா சாரியரான பிராமணர்கட்கும் பயின்று வந்தது என்பது "சோளகி மடத்து ஜீயர் சந்தானம்" புஷ்பகிரி ஜீயர், ஜீயர் விசுவேசுவர சிவாசாரியர் என்ற சாசனத் தொடர்களால் தெளிவாம். (M. E. R. 364 of 1916., S. I. I. vi, P. 193., புதுக்கோட்டைச் சீமைச் சாசனத் தொகுதி, பக். 111.) 'எம்பார்' பட்டருடைய ஆசாரியர்; எம்பெருமானாருடைய சிஷ்யர். முகந்துகொண்டு- மண்டி அநுபவித்துக்கொண்டு. முகந்துகொண்டு அருளிச்செய்த இத்தால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'கமர் பிளந்த' என்று தொடங்கி.

3. "எங்ஙனே உகக்கும் கொல்?" என்கிற திருத்தாயாருடைய மனோ பாவத்தை அருளிச்செய்கிறார் 'இவள் பருவம்' என்று தொடங்கி.

னைக் கண்டு அநுபவிக்கிறபோதை அழகு நான் கண்டு வாழப் பெற்றிலேன் என்கிருள். இன்றே - எனக்குச் சோகத்தாலே சூந்யமாய்க் கிடக்கிற இன்று அவளுக்கு அநுபவத்தால் அடிக் கழஞ்சு பெற்றுச்செல்லுகிறதே! ஒருநாளிலே இப்படி ஆவதே! [1]நாள்வாசி அற்று இருந்தபடி அன்றே விஷயாதீனமாய் வருகையாலே. (5)

## 624.

இன்று எனக்கு உதவாது அகன்ற இளமான் இனிப்போய்த்
தென்திசைத் திலத மனைய திருக்கோளூர்க்கே
சென்றுதன் திருமால் திருக்கண்ணும் செவ்வாயும் கண்டு
நின்று நின்று நையும் நெடுங்கண்கள் பனிமல்கவே.

**பொ - ரை :—** இன்றையதினத்தில் எனக்கு உதவாமல் நீங்கிய என்மகளானவள், இதற்குமேல் சென்று தென்திசைக்குத் திலதத்தைப் போன்று விளங்குகின்ற திருக்கோளூர் என்னும் திவ்வியதேசத்தை அடைந்து, தன் திருமாலினுடைய திருக்கண்களையும் சிவந்த திருவாயினையும் கண்டு, நீண்ட தனது கண்களில் தண்ணீர் நிறையும்படியாக நின்றுநின்று வருந்தாநிற்பாள்.

**வி - கு :—** இளமான் இனிப்போய்த் திருக்கோளூர்க்கே சென்று கண்டு பனிமல்க நின்று நின்று நையும் என்க.

**ஈடு :—** ஆரும்பாட்டு. [2] அவனுடைய சிநேகத்தின் மிகுதியைக் காட்டுகிற திருக்கண்கள் முதலாயினவற்றைக் கண்டு உவகையின் மிகுதியாலே உருக்குலைந்தவள் ஆவாள் அன்றே என்கிருள். இவள்தான் உகப்பது அங்கே புக்குத் தரித்து நிற்கவல்லவள் ஆனுல் அன்றே. அன்றிக்கே, "எங்ஙனே உகக்கும்கொல்" என்றுள் மேல் திருப்பாசுரத்தில்; இங்ஙனே

1. நாள்வாசி - நாளின் குணம். 'விஷயாதீனமாய் வருகையாலே' என்றது, தனக்குப் பிரியமான பெண்ணைப் பிரிகையாலும், அவளுக்கு விருப்பமான நாயகனை அவள் பெறுகையாலும் என்றபடி.

2. மேலே "எங்ஙனே உகக்குங்கொல்?" என்றதற்குச் சேர இருவகையாக அவதாரிகை அருளிச்செய்கிருர். முதல் அவதாரிகையில், 'இவள்தான் உகப்பது அங்கே புக்குத் தரித்து நிற்கவல்லள் ஆனுல் அன்றே' என்றதன் பின், 'அவனுடைய சிநேகத்தின்' என்று தொடங்கும் வாக்கியத்தைக் கொணர்ந்து கூட்டிப் பொருள் காணல் வேண்டும். "தன் திருமால் திருக் கண்ணும்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து, மேற்கூறிய இரண்டு அவதாரிகைகளையும் அருளிச்செய்தவாறு.

உகக்கும் என்கிறாள் இத் திருப்பாசுரத்தில் என்னுதல். [1]மகள் காணப்புகுகிற விஷயத்தை நினைப்பது, தன்மகள் தன்மையை நினைப்பதாய்த் திருத்தாயார் படுகிற பாடு என்தான்!

இன்று எனக்கு உதவாது அகன்ற - [2]பிள்ளை பெற்று வளர்க்கிறது ஆபத்துக்கு உதவுகைக்கு அன்றோ? தன்னைப் பிரிந்த இத் தனிமைக்கும், இந் நிலைக்கும் மேற்பட எனக்கு ஓர் ஆபத்து உண்டோ? இன்று எனக்கு உதவாது ஒழிவதே! [3]"இந்த நிலையை அடைந்த அந்த நான் இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்த ஸ்ரீராமபிரானை இங்குக் காண்கிறேன் இல்லை; இதைக் காட்டிலும் துக்கத்தைக் கொடுக்கக் கூடிய விஷயம் வேறு யாது?" என்றது, நான் நெடுங்காலம் கூடி வருந்தித் தம்மைப் பெற்றது, தம்மைப் பிரிந்து நான் இந்த நிலையை அடைந்த இற்றைக்கு அன்றோ? இன்று தம்மை நான் காணாது ஒழிவதே என்றான் அன்றோ! என்றபடி. எனக்கு உதவாது - சக்கரவர்த்தியில் தனக்கு உண்டான வாசி: [4]"நின்று தூங்குகின்

---

1. தாயாருடைய தன்மைகளை நினைத்து வியாக்யாதா ஈடுபடுகிறார் 'மகள் காணப்புகுகிற' என்று தொடங்கி.

2. "இன்று எனக்கு உதவாது அகன்ற" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பிள்ளைபெற்று' என்று தொடங்கி. ஆபத்தினை அருளிச்செய்கிறார் 'தன்னைப் பிரிந்த' என்று தொடங்கி.

3. 'தன்னைப் பிரிந்த இத் தனிமைக்கும், இந்த நிலைக்கும் உதவவன்றோ தன்னைப்பெற்றது' என்கை பொருந்துவதாகுமோ? என்ன, கலக்கம் அப்படிச் சொல்லுவிக்கும் என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'இந்தநிலையை' என்று தொடங்கி.

"அதோ நு கிம் துக்கதரம் ஸோऽஹம் இக்ஷ்வாகுநந்தனம்
இமாம் அவஸ்தாம் ஆபந்ந: நேஹ பஸ்யாமி ராகவம்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 59 : 26. இது, தசரதன் புலம்பல்.

4. சக்கரவர்த்தியைக் காட்டிலும் இவளுக்கு வேறுபாடு, பிரிந்தவுடனே அவன் முடிந்தான்; இவள் முடியவும் பெறாதே தரிக்கவும் பெறாதே இருத்தல். இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'நின்று தூங்குகின்றேன்' என்று தொடங்கி. என்றது, கொன்றைமாலையாகையாலே அழகர்க்கும் ஆகாது; அதுதான் திருமலையிலுள்ளதாகையாலே சைவரையும் பறிக்க ஒட்டார்கள்; ஆக, இரண்டு இடத்துக்கும் ஆகாமல் நாலுமாறுபோலே, நானும், தம்முடைய சம்பந்தமே காரணமாகப் பந்துக்களும் ஆகாமல், தாமும் அங்கீகரிக்கப் பெறாமல் நடுவே நின்று தடுமாறுகின்றேன் என்ற சூடிக்கொடுத்த சுடர்க்கொடியைப் போன்று, இவளும் தன்னோடேகூட இருக்கவும் பெறாமல் முடியவும் பெறாமல் நோவுபடுகிறேன் என்கிறாள் என்றபடி. மேலே காட்டிய திருப்பாசுரம், நாய்ச்சியார் திரு. 9 : 9.

றேன்" என்னுமாறு போலே; [1] அல்லாத தாய்மாரைப் போலேயோ நான் தனக்கு இருப்பது? [2] தன் உகப்பே எனக்கு உகப்பாக இருக்குமவளன்றோ நான். இவளுடைய காதலனுக்குக் கடகையும் தானே அன்றோ. "பிரான் இருந்தமை காட்டினீர்" என்கிறபடியே. [3] "அன்னையும் அத்தனும் என்று அடியோமுக்கு இரங்கிற்றிலள்" - பிள்ளைகாள்! பொகட நினைப்பார் பழி இட்டுப் போகவேணுமோ? அடியாரை நியமிக்கிறவர்கள் என்ன வேணுமோ? வழிக்குத் துணையாவாரை விலக்குகின்றவர்கள் என்று பொகடுவதே!

அகன்ற- [4] இப்படிக் கைகழியப் போவதே! [5] ஒருதேசத்தே நின்றுதான் உதவாது ஒழியப் பெற்றேனே? இளமான் - [6] 'பொகட்டது தாயை அன்றோ' என்று அறிந்து மீளமாட்டாத

1. "எனக்கு" என்றதற்கு, சக்கரவர்த்தியினின்றும் வேறுபடுத்திப் பொருள் அருளிச்செய்தார் மேல். மற்றைத் தாயரில் நின்றும் வேறுபடுத்திப் பொருள் அருளிச்செய்கிறார் 'அல்லாத தாய்மாரை' என்று தொடங்கி.

ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய் எனத் தாய்மார் ஐவராதலின் 'அல்லாத தாய்மார்' என்கிறார். "ஐவர் நலன் ஓம்ப" என்பது, சீவக சிந். 363.

2. மற்றைய தாய்மாரைக் காட்டிலும் இவளுக்கு விசேடம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன் உகப்பே' என்று தொடங்கி. அதற்குக் காரணத்தையும், பிரமாணத்தையும் அருளிச்செய்கிறார் 'இவளுடைய' என்று தொடங்கியும், 'பிரான் இருந்தமை' என்று தொடங்கியும். கடகை - சேர்க்கின்றவள்.

3. இப்படி, இவளை நாயகனோடே சேர்த்தவளாகத் தானிருந்தும், தனக்கு உதவாதே போவான் என்? என்ன, 'தாய் தந்தையர்களாவார், நம்முடைய விருப்பத்துக்குத் தடை செய்பவர்கள் அன்றோ' என்னும் அதிசங்கையாலே போனாள் என்று விடை கூறத் திருவுள்ளம்பற்றி, அதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'அன்னையும்' என்று தொடங்கி. இதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பிள்ளைகாள்' என்று தொடங்கி. "அடியோமுக்கு" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'அடியாரை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'வழிக்குத் துணை' என்று தொடங்கி. "அன்னையும்" என்பது, பெரிய திருமொழி. 3. 7 : 7.

4. 'இப்படிக் கைகழியப் போவதே' என்றது, நாம் இருக்கிற ஊரிலே இராமல் தூரதேசத்திலே போவதே என்றபடி. இது, "அகன்ற" என்ற சொல்லுக்குப் பொருள்.

5. தூரதேசத்தே சென்றதற்கு வருந்துவது என்? இருக்கிற ஊரிலே இருந்து உதவாதிருந்தால் நல்லதோ? என்ன, 'அது நல்லது அன்றோ' என்கிறாள் 'ஒரு தேசத்தே' என்று தொடங்கி. என்றது, ஓர் ஊரிலே இருந்தால் மீண்டு வருவாள் என்று தரித்திருக்கலாம்: அது இல்லாதபடி தூரதேசத்தை அடைந்தாளே என்றபடி.

6. மகள் என்னாமல் "இளமான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பொகட்டது' என்று தொடங்கி. அதனால் பலித்த பொருள், 'இவளை நான்' என்று தொடங்குவது.

பருவம் கண்டீர்! இவளை நான் வெறுக்கிறது என்? பருவம் அதுவானல் செய்யலாவது உண்டோ? இனிப் போய் - [1]உறவு முறையாரில் தாய்க்கு மேற்பட்டார் இலர் அன்றே! இப்படித் தாயுங்கூடப் புறம்பாம்படி அவன்பக்கலிலே பிறந்த பாவபந் தத்துக்கு மேலே 'அவ் வருகே ஒன்று உண்டு' என்னப் போனாளோ? [2]வந்தேறியைக் கைவிட்டால் எப்போழுதும் சித்தமா யிருப்பதற்குச் செய்யவேண்டுவது ஒன்று உண்டோ? தென் திசைத் திலதம் அனைய திருக்கோளூர்க்கே - [3]'**தெற்குத்திக்கு**' என்று கொண்டு, ஆரியர்கள் இகழ்ந்த மிலேச்சபூமி அன்றோ: இங்ஙனே இருக்கச்செய்தே, ஓர் ஆபரணம்தானே எல்லா ஆபரணங்களுக்கும் நிறம் கொடுக்குமாறு போலே, திருக்கோளூர் உண்டாகையாலே, திக்கு முழுதும் சிலாக்கியமானபடி. [4]"புண்ணியமான சரிதங்களையுடைய **அகத்திய முனிவராலே தெற்குத்திசையானது அனைவருக்கும் புகலிடமாகச் செய்யப் பட்டது**" என்னுமாறுபோலே. திருக்கோளூர்க்கே சென்று- [5]திருத்தாயார்க்கு அரிதாய்த் தோற்றுகிறபடி.அவளுக்கு வழிப்

---

1. "அகன்று இனிப் போய்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'உறவு முறையார்' என்று தொடங்கி.

2. பாவபந்தம் உண்டானலும் அநுபவத்திற்கும் கைங்கர்யத்திற்கும் போக வேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வந்தேறியை' என்று தொடங்கி. வந்தேறியை-காரணம் பற்றி வந்த தாய்தந்தையர் முதலானோரை.

3. "திலதம் அனைய" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தெற்குத்திக்கு' என்று தொடங்கி.

4. மேலே கூறியதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'புண்ணியமான' என்று தொடங்கி.

"தக்ஷிணா திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணா
தஸ்ய இதம் ஆஶ்ரமபதம் ப்ரபாவாத் அஸ்ய ராக்ஷஸை:
திக்இயம் தக்ஷிணா த்ராஸாத் த்ருஶ்யதே நோபபுஜ்யதே"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 11: 82.

இந்தச் சுலோகப் பொருளோடு "துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்கோடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டுபோந்து, காடுகெடுத்து நாடாக்கிப் பொதியின்கணிருந்து, இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கி" என்ற நச்சினார்க்கினியர் உரை வாக்கியம் ஒப்புநோக்கல் தகும் (தொல். எழுத். சிறப்புப்பாயிரம்.)

5. போய் என்னமல், "சென்று" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'திருத்தாயார்க்கு' என்று தொடங்கி. திருத்தாயார்க்கு அரிதாகத் தோற்றினல், பெண்ணுக்கும் அரிதாக இராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவளுக்கு' என்று தொடங்கி. என்றது, வழியே தொடங்கி உத்தேசியமாய் இருக்கும் என்றபடி.

போக்கோடு, ஊரில் புகுதியோடு, அவன்தன்னைக் காணுமத னேடு, அங்குப் புக்கால் எப்பொழுதும் தரிசனம் செய்யத்தக்க வனேடு வாசிஅற எல்லாம் உத்தேசியமாய் இருக்குமன்றே. [1] அர்ச்சிராதி கதியோடு, பரமபதத்தோடு, அங்குப் புக்கால் எப்பொழுதும் தரிசனம் செய்யத்தக்கவனேடு வாசியற பேற்றிலே சேர்ந்தனவாகக் கடவனவன்றே.

தன் திருமால்-[2]"உலகங்களில் இருக்கிற எல்லாப் பிராணிகளுக்கும் திருமாலானவர் தந்தையும் தாயுமாக இருக்கிறார்" என்கிறபடியே, இங்கு விட்ட உறவெல்லாம் அங்கே உண்டாயிருக்கிறபடி. [3]அவனுடைய பிராப்பிய வேஷந்தான் இலக்ஷ்மீ பதியாயன்றே இருப்பது. [4]விசிஷ்ட வேஷத்தில் அல்லது தன் எண்ணத்தைச் செலுத்த அறியாள். திருக்கண்ணும் செவ்வாயும் கண்டு-[5]'இவள் முற்படும்படி நாம் பிற்பாடர் ஆவதே!' என்று பொறைகொள்ளுகைக்குக் குளிரநோக்குகிற நோக்கும், சில சொல்லப் புக்குத் தடுமாறுகிற திருப்பவளமும் இருக்கிறபடி. அவனுடைய கோவைவாய் துடிப்ப மழைக்கண்கள் இருக்கிறபடி. நின்று நின்று நையும்-நாட்செல்ல நாட்செல்ல இற்று இற்று விழும். [6] கண்டால் முன்புத்தைப் பிரிவினை நினைக்க அறியாள்: எதிர்த்தலை படுகிறது கண்டு ஈடுபடுகிறபடி. "காணுங்கால் காணேன் தவருய காணக்கால், காணேன் தவ

---

1. வழியே தொடங்கி உத்தேசியமாகக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அர்ச்சிராதி கதியோடு' என்று தொடங்கி.

2. "திருமால்" என்று பிராட்டியையும் சேர்த்துக் கூறியதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உலகங்களில்' என்று தொடங்கி.

ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதாச மாதவ:
கச்சத்வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபா:

என்பது, பாரதம்.

3. "அகன்ற" என்ற பதத்தோடே கூட்டி, பாவம் அருளிச்செய்தார் மேல். இங்கு, "கண்டு" என்ற பதத்தைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'அவனுடைய' என்று தொடங்கி.

4. அவனே பிராப்பியன் ஆனல் ஆகாதோ? 'லக்ஷ்மீபதியாய்' என்கிற நிர்ப்பந்தம் எதற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விசிஷ்ட வேஷத்தில்' என்று தொடங்கி. விசிஷ்டம் - கூடியது.

5. திருக்கண்ணும் செவ்வாயும் கண்டால் உருக் குலைய வேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் முற்படும்படி' என்று தொடங்கி. இதனல், இவளிடத்தில் அவனுக்குண்டான வியாமோகத்தின் மிகுதி தோற்றுகிறது என்கிறார் 'அவனுடைய' என்று தொடங்கி.

6. விட்டுப் பிரிந்து சென்றவனைக் கண்டால் வெறுப்பு உண்டாகுமே தவிர, ஈடுபாடு உண்டாகுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்டால்' என்று தொடங்கி. "காணுங்கால்" என்பது, திருக்குறள்.

றல் லவை" என்றே அன்றோ இருப்பது. நெடும் கண்கள் பனி மல்கவே - இக்கண்களில் பரப்பு அடங்கலும் பரப்பு மாறும் படி தண்ணீர் உண்டாவதே! நின்று நின்று நையும்-மாறுமல் உருக் குலையாநின்றாள். கிண்ணகத்தில் இளகின கரைபோலே உடைகுலைப்படுகிறபடி. நெடும் கண்கள் பனி மல்கவே -[1]நெஞ்சுக்கு உருகுதல்போலே காணும் கண்களுக்குக் கண்ணநீர். [2]காணப்புகக்கொண்டு கண்ணநீர் பகை கொண்டாடாநின்றது. [3] ஆனந்தக் கண்ணீரோடு சோகக்கண்ணீரோடு வாசி இல்லை அன்றோ. விலக்குமவை எல்லாம் பாதகமாகக் கடவது; [4]"காணத்தக்கவன்" என்னும் விஷயத்தை நான் அநுபவிக்கப் பெற்றிலேன். (6)

## 625.

**மல்குநீர்க் கண்ணொடு மைய லுற்ற மனத்தினளாய்**
**அல்லும்நன் பகலும் நெடுமால் என்றழைத் தினிப்போய்ச்**
**செல்வம் மல்கி அவன்கி டந்த திருக் கோளூர்க்கே**
**ஒல்கி ஒல்கிநடந்து எங்ஙனே புகுங்கொல் ஒசிந்தே?**

**பொ - ரை :**—என்னுடைய இளமான், பெருகுகின்ற தண்ணீரை யுடைய கண்களோடு மயக்கம் பொருந்திய மனத்தினையுடையவளாகி நல்ல இரவும் நல்ல பகலும் நெடுமால் என்று அழைத்துக்கொண்டு, அதற்குமேல், செல்வம் மிகும்படி அவன் சயனித்திருக்கின்ற திருக்கோளூர் என்ற திவ்யதேசத்திற்கு, வருந்தித் தளர்ந்து நடந்து சென்று எங்ஙனே புகுவாள் என்க.

**வி - கு :**—அழைத்து மனத்தினளாய்த் திருக்கோளூர்க்கு ஒல்கி ஒல்கி ஒசிந்து நடந்து போய் எங்ஙனே புகுங்கொல்? என்க. செல்வம் மல்கக் கிடந்த திருக்கோளூர் என்ற இடத்தில் "மல்கி" என்பது, செய என் எச்சத்திரிபு.

---

1. "நையும்" என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'நெஞ்சுக்கு' என்று தொடங்கி.

2. "கண்டு, பனிமல்க" என்ற பதச்சேர்த்திக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'காணப்புக' என்று தொடங்கி.

3. ஆனந்தக் கண்ணீர் நல்லது அன்றோ? அதனைப் பகை என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆனந்தக் கண்ணீரோடு' என்று தொடங்கி.

4. "கண்டு" என்று தொடங்கி மகள் தன்மைகளைச் சொல்லுகிற தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'காணத்தக்கவன்' என்று தொடங்கி.

ஈடு:—ஏழாம்பாட்டு. [1]இவளுடைய உடலின் மிருதுத் தன்மையினையும் பிரிவினால் வந்த மெலிவினையும் நினைத்து, இவை எல்லாம் அவ்வளவும் செல்லப் போகவல்லள் ஆனால் அன்றோ என்கிறாள். என்றது, நாம் இலையகலப்படுக்கிறோமத்தனை ஒழிய, இவள்போய் முடியப்புகாநின்றாளோ? என்றபடி.

மல்கு நீர்க் கண்ணொடு மையல் உற்ற மனத்தினளாய் - [2]"என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேல் காணும்" என்னும் இரண்டும் ஒழிய, இவள் எங்ஙனே போனபடி? [3]கண்; மல்குநீர்க் கண்ணாயிற்று; மனம், மையல் உற்ற மனமாயிற்று. அகவாயும் இருண்டு புறவாயும் இருண்டு இருக்க, இவள் எங்ஙனே போனபடி? [4]கண்ணநீராலே கண்தோற்றாது, அன்பினாலே மூடப்பட்டதாகையாலே நெஞ்சு இருண்டு தோற்றாது. இரண்டற்கும் இரண்டும் நிரூபகமாயிருத்தலின் '**மல்கு நீர்க்கண் மையல் உற்ற மனம்**' என்கிறாள். மையல் உற்ற மனத்தினளாய் நெடுமால் என்று அழைத்து- [5]நெஞ்சு ஒழியவே தான் கூப்பிட்டது. நல் அல்லும் நல்பகலும் - [6]பகவத்விஷயத்திலே மூழ்கிக் கூப்பிடுகிற கால

---

1. "ஒல்கி ஒல்கி நடந்து ஒசிந்து" என்கையாலே, இவளுடைய உடலின் மிருதுத் தன்மையும், "மல்கு நீர்க்கண்ணொடு மையல் உற்ற மனத்தினளாய்" என்கையாலே, பிரிவில் வந்த மென்மையும் தோன்றும். 'இவையெல்லாம்' என்றது, மேல் திருப்பாசுரத்தில் கூறிய அநுபவம் முதலானவைகளை. "எங்ஙனே புகுங்கொல்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அவ்வளவும் செல்ல' என்கிறார். மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'நாம் இலையகல' என்று தொடங்கி.

2. "மல்கு நீர்க் கண்" என்றும், "மையல் உற்ற மனம்" என்றும் விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'என்றேனும்' என்று தொடங்கி. இது, பெரியதிருவந். 28. என்றது, ஒருவர் செல்லும்போது புறக்கண்களாலேயாதல், அகக்கண்ணாலேயாதல் பார்த்துக்கொண்டு செல்லவேண்டும்; இவை இரண்டும், போக ஒண்ணாதபடி இவளுக்குப் பரவசமானபின்பு, இவள் எங்ஙனே போகப் புகுகிறாள்? என்றபடி.

3. இரண்டும் போக ஒண்ணாமைக்கு இலக்கு ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண் மல்குநீர்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அகவாயும்' என்று தொடங்கி.

4. இரண்டும் இருண்டிருப்பதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்ணநீராலே' என்று தொடங்கி.

5. மனம் மயக்கத்தை அடைந்திருக்க, அழைக்கக்கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நெஞ்சு' என்று தொடங்கி. இங்கே, "முடியானே" என்ற திருவாய்மொழி அநுசந்தேயம்.

6. பிரிவினாலே கலங்கிக் கூப்பிடுகிற பகல் இரவுகளுக்கு நன்மை ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பகவத்விஷயத்திலே' என்று தொடங்கி.

மாகையாலே, '**நல் அல்லும் நல்பகலும்**' என்கிருள். [1]நாட்டார் க்ஷுத்ர விஷயங்களை ஆசைப்பட்டுக் கூப்பிடாநிற்க, '**எல்லாம் கண்ணன்**' என்று கூப்பிடுகிற நாள் அன்றே. நெடுமால் என்று அழைத்து - அவன் தன்பக்கல் பிச்சு ஏறியிருக்கும்படியைச் சொல்லிக் கூப்பிட்டு. இனிப்போய் - அவன் தன்பக்கல் செய்யும் வியாமோகத்தைச் சொல்லிக் கூப்பிடும் இதற்கு மேலே தன் வியாமோகம் காட்டப் போனளே. [2] அன்றிக்கே, கண்ணும் தோற்றுமல் நெஞ்சும் பறியுண்டிருக்கும் இதற்கு மேலே, இனிப் போய், வேறே ஒன்று உண்டோ அநுபவிப்பது? என்னுதல்.

செல்வம் மல்கி அவன்கிடந்த திருக்கோளூர்க்கே- [3]எதிரே பாதி வழி வந்து முகத்திலே விழித்து உடம்பிலே அணைத்துக் கொண்டு போகாதே ஒழிந்தது செல்வச்செருக்கே அன்றே; [4]செல்வத்தால் வந்த செருக்கு அன்றுகில் இவ்வரவு அவன் அன்றே வருவான்? [5]வழியே பிடித்து வாழ்ந்துகொண்டு போகலாயிருக்க, செருக்காலே இழந்தான் என்கிருள். [6]அன்றிக்கே, "சுகமாகத் தூங்கின ஸ்ரீமானுகிய அந்தப் பெருமாள் என்னுல் உணர்த்தப்பட்டார்" என்கிறபடியே, அழகு மிக்குக் கிடந்த என்னுதல். [7]"சுகமாகத் தூங்கினவன்" என்ற கிடை அழகு

---

1. அப்படி நல்ல நாளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'நாட்டார்' என்று தொடங்கி.

2. "மல்கு நீர்க் கண்ணேடு" என்றதனையும் கூட்டி, "இனி" என்றதற்கு, வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிருர் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

3. "அவன் செல்வம் மல்கிக் கிடந்த" என்பதனை, வெறுப்பாகக் கூறும் கூற்ருகக் கொண்டு, கருத்து அருளிச்செய்கிருர் 'எதிரே பாதிவழி' என்று தொடங்கி.

4. 'செருக்கு' என்பதற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'செல்வத்தால்' என்று தொடங்கி.

5. 'எதிரே பாதி வழி வந்து' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிருர் 'வழியே பிடித்து' என்று தொடங்கி.

6. "செல்வம்" என்பதற்கு, அழகு என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிருர் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

"ஸ மயா போதித꞉ ஸ்ரீமாந் ஸுகஸுப்த꞉ பரந்தப꞉"

என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 24. திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது.

7. "செல்வம்" என்றதற்கு அருளிச்செய்த இரண்டாவது பொருளுக்குச் சேர, பாவம் அருளிச்செய்கிருர் 'சுகமாகத் தூங்கினவன்' என்று தொடங்கி.

காணவாயிற்று இவள் ஆசைப்பட்டுப் போயிற்று: [1]"கிடந்த தோர் கிடக்கை" என்னக்கடவதன்றே. அவன் கிடந்த - [2]அவன் வரவு பார்த்து இவள் இருக்கை அன்றிக்கே, இவள் வரவு பார்த்து அவன் கிடக்கும்படி ஆவதே! ஒல்கி ஒல்கி நடந்து - [3] ஓர் அடியிலே பத்து அடி இடவேண்டும்படியா யிருக்கை. ஒசிந்து - துவண்டு. ஒல்கி ஒல்கி நடந்து ஒசிந்து எங்ஙனே புகுங்கொல் - ஒடுங்கி ஒடுங்கி நடந்து, அது பொறு மல் துவண்டு, எங்ஙனே புகக்கடவளோ? நடந்து எங்ஙனே புகுங்கொல் - [4] நடந்திலளாகில் போய்ப் புகலாம் என்றிருக்கி றாள் காணும். [5]அன்னமென்னடைப் பூங்குழலியாகையாலே, இவ்வன்ன நடைகொண்டு புகமாட்டாள் என்றிருக்கிறாள். (7)

## 626.

ஒசிந்த நுண்ணிடைமேல் கையை வைத்து நொந்துநொந்து
கசிந்த நெஞ்சினளாய்க் கண்ணநீர் துளும்பச் செல்லுங்கொல்?
ஒசிந்த ஒண்மல ராள்கொழு நன்திருக் கோளூர்க்கே
கசிந்த நெஞ்சினளாய் எம்மை நீத்தஎம் காரிகையே.

**பொ - ரை :**—இன்பத்தால் துவண்ட பெரிய பிராட்டியாருக்குக் கணவனுகிய எம்பெருமான் சயனித்திருக்கின்ற திருக்கோளூர் என்ற திவ்வியதேசத்திற்கு, அன்பு நிறைந்த நெஞ்சினையுடையவளாகி என்னை நீக்கிய என்பெண்ணானவள், தளர்ந்த நுண்ணிய இடையின்மேல் தன்

---

1. அவன் கிடக்கை மனக்கவர்ச்சியாக இருக்கும் என்பதற்குப் பிரமா ணம் காட்டுகிறார் 'கிடந்ததோர்' என்று தொடங்கி. இது, திருமாலை, செ. 23.

2. "செல்வம்" என்றதற்கு அருளிச்செய்த முதற்பொருளுக்குச் சேர, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் வரவு' என்று தொடங்கி.

3. "ஒல்கி ஒல்கி" என்ற அடுக்குத்தொடருக்கு, பாவம் அருளிச்செய் கிறார் 'ஓரடியிலே' என்று தொடங்கி.

பஞ்சி யடரனிச்ச நெருஞ்சி ஈன்ற பழமாலென்
றஞ்சு மலரடிகள் அரங்கண் டன்ன அருங்காட்டுள்
குஞ்சித் தசைந்தசைந்து குருதி கான்று வெய்துயிரா
வஞ்சி இடைநுடங்க மயில்கை வீசி நடந்ததே.

என்பது, சீவக சிந். 341.

4. "நடந்து எங்ஙனே புகுங்கொல்" என்பதற்கு, எதிர்மறை முகத் தால் பாவம் அருளிச்செய்கிறார் 'நடந்திலளாகில்' என்று தொடங்கி. 'நடந் திலளாகில் போய்ப் புகலாம்' என்றது, நடவாதபோது எப்படிப் புகப் போகாதோ, அப்படியே நடந்தாலும் சென்று சேரமாட்டாள் என்றபடி.

5. நடந்தால் போகமாட்டாளோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'அன்னமென்னடை' என்று தொடங்கி.

கையை வைத்துக்கொண்டு வருந்தி வருந்தி அன்பினால் நிறைந்த மனத் தினையுடையவளாகிக் கண்களிலே நீர் அலையும்படி சென்று சேர வல் லளோ? என்க.

**வி - கு:**—காரிகை கையை வைத்து நொந்து செல்லுங்கொல் என்க. காரிகை - பெண். எம்மை: தனித்தன்மைப்பன்மை. செவிலி முதலியோரையும் உளப்படுத்துமிடத்து உளப்பாட்டுத் தன்மைப் பன் மையாம்.

**ஈடு:**—எட்டாம்பாட்டு. [1]திருக்கோளூரில் அன்பினாலே என் னைப் பொகட்டுப் போன என் பெண்பிள்ளை, அந்த அன்பே துணையாகப் போய்ப் புகவல்லளேயோ? என்கிறாள்.

ஒசிந்த நுண் இடை - [2]இவள் நடவாதே இருந்தாலும், நினைத்தால் வயிறு எரியவேண்டும்படி காண் இடை இருப்பது! நுண்ணிடைமேல் கையை வைத்து - [3]நடு ஒன்று இல்லை என்று அறிகின்றிலள். தன்கையை வைக்கவும் பொறாதே அன்றோ தன் இடைதான்; "மின்னையும் வஞ்சியையும் வென்று இலங் கும் இடையாள்" என்று, அவன் கூடப் போகச்செய்தேயும் அஞ்சவேண்டும்படியான இடை அன்றோ. ஒசிதல்-துவளுதல். நுண்ணியதாய் நேரிதான இடை. [4]பல சொல்லி என்? இடை ஒன்று இல்லை என்கை. அதாவது, 'இற்றது, முறிந்தது இப் போது, பின்னை' என்று பயப்படவேண்டும்படியாய் இருக்கை.

---

1. திருப்பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

2. "ஒசிந்த நுண்ணிடை" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச் செய்கிறார் 'இவள் நடவாதே' என்று தொடங்கி.

3. "நுண் இடை" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய் கிறார் 'நடு ஒன்று' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளினை அருளிச் செய்கிறார் 'தன் கையை' என்று தொடங்கி. அதற்குக் காரணத்தை அருளிச் செய்கிறார் 'மின்னையும்' என்று தொடங்கி. இது, பெரியதிருமொழி. 3. 7 : 7.

4. "மின்னையும் வஞ்சியையும் வென்று" என்றதற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'பல சொல்லி என்' என்று தொடங்கி. ஆனால், இடை இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அதாவது' என்று தொடங்கி.

> நுண்டுகில் அகலல்குல் நொசித்த வெம்முலை
> உண்டிவண் நுசுப்பென உரைப்பி னல்லது
> கண்டறி கிலாவிடைக் காம வல்லியாழ்
> கொண்டவர் குழாத்திடைக் கொடியின் ஒல்கினாள்.

என்பது, சீவகசிந். 654.

ஒசிந்த நுண் இடைமேல் கையை வைத்து-[1] இப்படி விழுக்காடு அறியாதார் உளரோ! நாயகன் கை வைக்கப் பொறுக்குமத்தனை போக்கித் தன் கை வைக்கப் பொறுக்குமோ? தொடுங்கால் ஒசியும் இடைஅன்றோ.[2] அடியே பிடித்துக் கரோபத்ரவம் கனத்தே அன்றோ இருப்பது. 'கையை வைத்து' என்கிறாள், [3]மலையை வைத்து என்னுமாறுபோலே. நொந்து நொந்து-[4]கை வாங்கமாட்டாள்; நோவாதிருக்கமாட்டாள்; [5]ஸஹஜமான பகைவர்களோடே கூடி ஜீவித்துக் கிடக்கலாம்; வந்தேறிகள் கீழே பிழைக்க ஒண்ணாதே அன்றோ. நொந்து நொந்து - மிகவும் நொந்து. முதலிலே இல்லாமையிலே நிலையான இடையிலே தனபாரம்கொண்டு ஆற்ற ஒண்ணாதிருக்க, வந்தேறியான கை கொண்டு பொறுக்க ஒண்ணுமோ? கசிந்த நெஞ்சினளாய் - இடையினுடைய நொய்மை சொல்ல, நெஞ்சோதான் சாலப் பருத்திருக்கிறது? [6]நெஞ்சில் ஈரம் இருக்கிறபடி. கண்ணநீர்

---

1. "கையை வைத்து" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி. அப்படித் தன் கையைப் பொறுத்து இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தொடுங்கால்' என்று தொடங்கி. இது, திருவிருத்தம். பா. 37.

2. 'அடியே பிடித்து' என்று தொடங்கும் வாக்கியம் சிலேடை. 'அடியே பிடித்து' என்றது, "பொய்ந்நின்ற ஞானம்" என்ற திருப்பாசுரம் தொடங்கி என்றபடி.

3. "வைத்து" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மலையை' என்று தொடங்கி.

4. "நொந்து நொந்து" என்ற அடுக்குத்தொடருக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கைவாங்க' என்று தொடங்கி.

5. மாட்டாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'ஸஹஜமான' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'முதலிலே இல்லாமையிலே' என்று தொடங்கி.

நாமே இடையுள்ள வாறறி வாம் இனி நாங்கள் சொல்ல
லாமே மருதன் மருத வனத்தன்ன மன்னவரைப்
பூமே லணிந்து பிழைக்கச்செய் தார் ஒரு பொட்டு மிட்டார்
தாமே தளர்பவ ரைப் பாரம் ஏற்றுதல் தக்கதன்றே.

என்பது, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. (பட்டினத்தார்)

6. "கசிந்த" என்றதன்பொருள், 'நெஞ்சில் ஈரம் இருக்கிறபடி' என்பது.

துளும்ப - [1]இது தனக்கும் ஊற்றே அன்றே அது. செல்லும் கொல் - [2]இனி எப்படியும் மீளாளே அன்றோ. வழியில் மிறுக்குக்கள் கழித்துப் புகவல்லளோ?

ஒசிந்த ஒண்மலராள் கொழுநன் திருக்கோளூர்க்கே - [3]பிரிந்தார் துவட்சி சொல்லுகைக்குக் கலந்தாரோ தான் துவளாதே இருக்கிறார்? வண்டாலே எடுக்கப்பட்ட சாரத்தை யுடைய பூப்போலே காணும் நித்யசம்ஶ்லேஷத்தாலே துவண்டிருக்கும்படி. ஒண்மலராள் கொழுநன் உண்டு, அவளுடைய வல்லபன்: அவனுடைய திருக்கோளூர்க்கே. கசிந்த நெஞ்சினளாய்-அன்போடு கூடின மனத்தையுடையளாய்.[4]பற்றுகைக்கு அவ்வூரே ஆக அமையும், விடுகைக்குத் தாயாக அமையும். ஒண்மலராள் கொழுநன் திருக்கோளூர்க்கே கசிந்த நெஞ்சினளாய் என்பதற்கு, [5]அவனுடைய காதல் குணத்திலே அகப்பட்டவள் இனி மீளப் புகுகிறாளோ? என்னுதல். ஒண்மலராள் கொழுநன் என்று அவனுக்கு ஏற்றம் இருக்கிறபடிஎன்னுதல். [6]திருமகளார் தனிக்கேள்வன் என்னும் பெருமையுடைய பிரா

---

1. இது தனக்கும் - கண்ணநீர்க்கும். அது - மனம்.

2. மீளுதல் வேண்டத் தக்கதாக இருக்க, "செல்லுங்கொல்" என்கிறது என்? என்ன, 'இனி எப்படியும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கசிந்த நெஞ்சினள் ஆகையாலே மீளாள் என்றபடி.

3. பிராட்டியினுடைய துவட்சி சொல்லுகைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பிரிந்தார்' என்று தொடங்கி.

4. "திருக்கோளூர்க்கே கசிந்த நெஞ்சினளாய் எம்மை நீத்த" என்றதனால் பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார் 'பற்றுகைக்கு' என்று தொடங்கி. என்றது, பிராவண்யத்துக்கு அடி ததீயபர்யந்தம் செல்லுதல்; விரக்திக்கு அடி தாயாரையும் விடுதல் என்றபடி.

5. "ஒண்மலராள் கொழுநன்" என்பதற்கு, இரண்டு வகையாக, பாவம் அருளிச்செய்கிறார். முதலது, காதல் குணத்திலே நோக்கு; அதனை அருளிச்செய்கிறார் 'அவனுடைய' என்று தொடங்கி. இரண்டாவது, அறப் பெரியவனாந் தன்மையிலே நோக்கு; அதனை அருளிச்செய்கிறார் 'ஒண்மலராள் கொழுநன்' என்று தொடங்கி.

6. இவளுக்குக் கணவனாக இருத்தல் அவனுக்கு ஏற்றமோ? என்ன, 'ஏற்றமே' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'திருமகளார் தனிக்கேள்வன்' என்று தொடங்கி. இது, திருவாய். 1. 6: 9.

ஞரே அன்றே. எம்மை நீத்த எம்காரிகை-[1] அவளுக்கு இங்குள்ள எனது என்னும் செருக்குக் கழியக் கழிய, அதுதானே காரணமாகாநின்றது திருத்தாயார்க்குப் பற்றுகைக்கு. [2]பகவத்விஷயத்திலே இறங்கி மூழ்குதலும், வேறுபட்ட பொருள்களை விடுகைக்கு எல்லை இவ்வளவாகையும், இப்படி விட்டால் பின்பு அவர்கள் தாங்களே உத்தேசியர் என்னும் இடமும் சொல்லுகிறது. [3] புறம்பே உள்ளவற்றை விடப் பண்ணுவித்துக்கொண்ட விஷயத்தில் ஞானலாபமேயன்றே இவளுக்கு வேண்டுவது! இவள் சம்பந்தமே அன்றே திருத்தாயார்க்கு வேண்டுவது! [4]கசிந்த நெஞ்சினளாய் எம்மை நீத்த எம் காரிகை திருக்கோளூர்க்கே கசிந்த நெஞ்சினளாய்க் கண்ணநீர் துளும்பச் செல்லும்கொல்-[5] இவள் என்னை விடும்படி செய்துகொண்ட விஷயத்தில் ஈடுபாடானது அவ்வூரில் புகுதலையும் செய்து கொடுக்க வற்றே? [6]'எம்மை நீத்த' என்று நிச்சயித்தாள்; 'செல்லும் கொல்' என்று ஐயப்படாநின்றாள்; இதற்குக் காரணம் என்? என்னில், பிரேமம் இரண்டனையும் செய்து கொடுக்குமே

1. அவள், இவளை நீக்காநிற்க, இவள் "எம்காரிகை" என்னக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவளுக்கு' என்று தொடங்கி.

2. "எம்மை நீத்த எம்காரிகை" என்பதற்குச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார். 'பகவத் விஷயத்திலே' என்று தொடங்கி. உத்தேசியர் - விடப்பட்டவர்களுக்கு உத்தேசியர்.

3. 'விடப்பட்டவர்களுக்கு விட்டவர்கள் உத்தேசியர்' என்றுநின்றீர்; அவர்களுக்கு, பகவத் ஞானலாபம் வேண்டாவோ? என்ன, அது மகளுக்கே; தாயாருக்கு அவள் சம்பந்தமே வேண்டுவது என்கிறார் 'புறம்பே உள்ளவற்றை' என்று தொடங்கி.

4. "கசிந்த நெஞ்சினளாய்" என்று, இரண்டு முறை வந்திருப்பதற்குப் பிரயோஜனங் காட்டுவதற்குத் திருவுள்ளம்பற்றி அந்வயம் காட்டுகிறார் 'கசிந்த நெஞ்சினளாய்' என்று தொடங்கி.

5. இந்த அந்வயத்தால், தாயாரை விட்டுச் சென்றதற்கு ஒரு கசிவும், திருக்கோளூரில் செல்வதற்கு ஒரு கசிவும் என்று, பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'இவள் என்னை' என்று தொடங்கி.

6. நீத்தலை நிச்சயித்து, புகுதலை ஐயப்படுகிறதற்குப் பரிஹாரம் அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அது தன்னை அநுபாஷிக்கிறார் 'எம்மை நீத்த' என்று தொடங்கி. 'பிரேமம்' என்று தொடங்கி அதற்குப் பரிஹாரத்தை அருளிச்செய்கிறார்.

அன்றே: [1] பரவசப்படும் தன்மையை விளைத்து இடையிலே பொகடிலும் பொகடும்; அன்றிக்கே, கொண்டுபோய்ப் பொகடிலும் பொகடும் அன்றே. (8)

## 627.

காரியம் நல்லனகள் அவை காணில் என்கண்ண னுக்கு என்று
ஈரியா யிருப்பாள் இதெல்லாம் கிடக்க இனிப்போய்ச்
சேரி பல்பழி தூஉய் இரைப் பத்திருக் கோளூர்க்கே
நேரிழை நடந்தாள் எம்மை ஒன்றும் நினைத்திலளே.

**பொ - ரை:**—என்நேரிழை, சிறந்த பொருள்களைக் கண்டால் என் கண்ணபிரானுக்கு என்று சொல்லிக்கொண்டு அன்புள்ளவளாய் இருப்பாள்; இவை எல்லாம் கிடக்க, சேரியிலுள்ளார் எல்லாரும் பலவகைப்பட்ட பழிகளைத் தூற்றி இரைக்கும்படியாக இனிச்சென்று திருக்கோளூர்க்கே நடந்தாள்; என்னைச் சிறிதும் நினைத்தாள் இல்லை என்கிறாள்.

**வி - கு:**—நல்லனகள் காரியமவை என மாற்றுக. நல்லனகள் என்பதில் 'கள்' அசைநிலை. காரியம் - பொருள்கள். ஈரியாய் - அன்புள்ளவளாய். இது எல்லாம்: ஒருமை பன்மை மயக்கம். சேரி - தெருவு. தூஉய் - தூவி; தூற்றி. நேரிழை - பெண்; நேரிய ஆபரணங்களை அணிந்தவள்.

**ஈடு:**—ஒன்பதாம்பாட்டு. [2] அவன்பக்கலிலே மிக்க ஈடுபாடுடையவளாயிருக்கிற இவள், சேரியிலுள்ளார் சொல்லும் பழியே தோட்கோப்பாகத் திருக்கோளூர்க்கே போயினள் என்கிறாள்.

நல்லனகள் காரியம் அவை காணில் என் கண்ணனுக்கு என்று ஈரியாய் இருப்பாள் - முதலிலே காண்பது இல்லை; [3]பொருள்களில் நல்லது காணில், தன்னை எனக்காக ஒக்கி

---

1. மேலே 'இரண்டனையும்' என்றதனை விவரணம் செய்கிறார் 'பரவசப் படுந்தன்மையை' என்று தொடங்கி.

2. "கண்ணனுக்கு என்று ஈரியாய் இருப்பாள், சேரி பல்பழி தூஉய் இரைப்ப" என்பன போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. 'க்ரியத இதி காரியம்' என்ப ஆகையாலே, "காரியம்" என்ற சொல், ஈண்டுப் பொருள்களைக் காட்டுகிறது. ஒக்கிவைக்கை - ஆக்கிவைத்தல்.

வைத்த கிருஷ்ணனுக்கு என்னப்புக்கு அந்தநிலையிலேநெஞ்சு நெகிழ்ந்து, பின்பு அதுதானும் மாட்டாதே இருக்கும். [1]"பழத்தையாவது மலரையாவது மிகுதியாக மனத்தினைக் கவரக் கூடியதான வேறு பொருள்களையாவது பார்த்துப் பல தடவை ஓ பிரியையான சீதையே! என்று இவ்விதமாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு உம்மைப் பற்றியே பேசுகிறார்"என்கிற படியே, அவன் சொல்லுமவையெல்லாம் இவள் சொல்லுகிற படி. [2]நல்லது கண்டால், அவனுக்கு என்று இருக்குமதற்கு மேலே அவ்வருகே ஒன்று தேடிப் போனாளோ! [3]இவளுக்காகத் திருக்கோளூரிலே வந்து, தன்னை இவளுக்கு ஒக்கி வைத்தபடி. [4]இது எல்லாம் கிடக்க-"எல்லாப் போகங்களையும் விட்டு" என்னுமாறு போலே. அன்றிக்கே, உண்ணும்சோறு பருகுநீர்தின்னும் வெற்றிலையுமெல்லாம்கண்ணன் என்றலும், ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றக்கற்புவான் இடறுதலும்,பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள் யாவையும் திருமால்திருநாமங்களே கூவி எழுதலும்,காரியம் நல்லனகள் அவை காணில் என் கண்ணனுக்குஎன்று ஈரியாயிருத்தலும் இவைஎல்லாம் கிடக்க

---

1. "த்ருஷ்ட்வா பலம் வா புஷ்பம் வா யத்வா அந்யத் ஸுமனோஹரம்
பஹுஶ: ஹாப்ரியேதி ஏவம் ஶ்வஸந் த்வாம் அபிபாஷதே"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 45. இது, பிராட்டியைப் பார்த்துத் திருவடி கூறியது. 'அவன் சொல்லுமவையெல்லாம்' என்றது, அவன், தன்னைப் பிரிந்து சொல்லுமவை எல்லாம் என்றபடி.

2. "இனி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நல்லது கண்டால்' என்று தொடங்கி.

3. "என் கண்ணன்" என்கைக்கு, அவன் செய்த உபகாரம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவளுக்காக' என்று தொடங்கி.

4. "இது எல்லாம் கிடக்க" என்பதற்கு, இரண்டுவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருள், 'எல்லாப் போகங்களையும்' என்று தொடங்கி அருளிச்செய்வது. "ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய" என்பது ஸ்ரீராமா. சுந். 16 ; 19. என்றது, லீலோபகரணங்கள், போகோபகரணங்கள் முதலான பொருள்கள் எல்லாம் கிடக்க என்றபடி. இரண்டாவது பொருள், மேல் திருப்பாசுரங்களில் கூறிய பகவத் பிராவண்யம் எல்லாம் கிடக்க என்பது. இதனை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

என்னுதல். இது எல்லாம் கிடக்க - [1] இந்த எல்லை இல்லாத செல்வங்கள் கிடக்க.

இனிப்போய்-[2]'**தனக்கு**' என்கிற எண்ணத்தின் அளவிலே உண்டறுக்கமாட்டாதவனுக்கு ஒன்று கொடுத்துக் குறைதீரப் போனளே.[3]"தே பூயிஷ்டாம்-உனக்கு அதிகமான 'நமஃ'என்ற சொல்லைச் சொல்லுகிறோம்" என்றே அன்றோ அவன் இருப்பது. [4]அவன் படியை நினைத்தால் இவளுக்கு இங்கே இருக்க அமையாதோ? சேரி பல்பழி தூஉய் இரைப்ப - [5]பொகடும் வழித்துணை பெற்றவாறே போனளத்தனை. [6]ஒருவர் இருவர் அன்றே! இனி ஒருவர் சொல்லிற்று ஒருவர் சொல்லார்கள் அன்றோ. பல் பழி தூஉய் இரைப்ப - தன்னை அவனுக்கு ஆக்கிவைத்தாள்: பின்னை அதுதானும் மாட்டிற்றிலள்; புறப்பட்டுப்போனுள்; தாயைப் பார்த்திலள்; ஊரார் பழி பார்த்திலள்; இத்தனையும் செய்தால் அவன்தான் எதிரே வரப்பெற்றது இல்லை என்று இப்புடைகளிலே ஒரு கோடியன்றோ சொல்லுவன. [7]"அலர் எழில் ஆருயிர் நிற்கும்" என்கிறபடியே

1. "கிடக்க' என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இந்த எல்லை' என்று தொடங்கி.

2. "நல்லது கண்டால் அவனுக்கு என்று இருக்கும்" இவ்வளவே போதியதாமோ? அவற்றைக் கொடுக்கவேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தனக்கு' என்று தொடங்கி. 'உண்டறுக்கமாட்டாதவனுக்கு' என்றது, நிறைவுபெற்றவனுய், 'இவனுக்கு ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்று இழவுபட்டிருக்குமவனுக்கு என்றபடி.

3. இப்படி அவன் இருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "தேபூயிஷ்டாம்" என்று. இது, யஜுர்வேதம்.

4. இதனல் பலித்த பொருளினை அருளிச்செய்கிறார் 'அவன்படியை' என்று தொடங்கி.

5. "நடந்தாள்" என்றதனையும் கூட்டிக்கொண்டு, பாவம் அருளிச்செய்கிறார் 'பொகடும்' என்று தொடங்கி. என்றது, இவள் 'மறப்பேன்' என்ற அன்றும் மறக்க ஒண்ணுதபடி அவனை நினைப்பதற்குக் காரணமாகையாலே, பழிதூவுதல் இவளுக்கு வழித்துணையாய்ச் செல்லுதற்குக் காரணமாயிற்று என்றபடி. பொகடுதல் - கொண்டுபோய் விடுதல்.

6. "சேரி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒருவர்' என்று தொடங்கி. "பல்பழி" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இனி ஒருவர்' என்று தொடங்கி. ஒருவர் சொல்லிற்று ஒருவர் சொல்லாமையைக் காட்டுகிறார் 'தன்னை' என்று தொடங்கி.

7. பழி, வழிக்குத் துணையாமாற்றினைக் காட்டுகிறார் 'அலர்' என்று தொடங்கி. இது, திருக்குறள். "அலர் எழ" என்பது, இப்பொழுதுள்ள பாடம்.

வழிக்குத் தாரகமாமன்றே. நேர் இழை நடந்தாள் - [1] கடைப் பணிக்கூட்டம் கண்டு கொண்டு பின்னே போகவன்றோ இவள் ஆசைப்படுகிறது. நடந்தாள்- [2] தன் பெண்பிள்ளையே யாகிலும், 'திருக்கோளூரிலே போக' என்று நாலடி புறப்பட்ட இவளை இங்ஙனல்லது சொல்ல ஒண்ணாதே அன்றே. தன் மகளை எங்ஙனே கனக்க நினைத்திருக்கிறாள் தான்! வயிற்றிற் பிறக்கவுமாம், சிஷ்யர்களாகவுமாம்: பகவத் விஷயத்தில் தொடர்புடையவர்கள் உத்தேசியராமித்தனை.

[3] ஒருநாள் **நம்பிள்ளையை, சீயர்,** கோஷ்டியிலே வைத்துப் போரக் கொண்டாடியருளி, 'தன்சிஷ்யனைத் தான்கொண் டாடாநின்றான்' என்றிராதே கொண்மின்! "கணபுரம் கை தொழும் பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுவரே" என்று பண்டு சொன்னாரும் உளர் காணுங்கோள். என்று அருளிச்செய்தார். **அம்முணி ஆழ்வான்,** தன்சிஷ்யனைத் தான் தண்டன் இடாநிற்குமாம்; 'இது என்?' என்று கேட்க, 'அல் லாத வைஷ்ணவர்களைஒழுக்கத்தாலே அறியவேணும்; இவர் நான் அறிய வைஷ்ணவர் என்று ஆதரிப்பன்' என்றான். எம்மை ஒன்றும் நினைத்திலளே-[4] வழிக்குத் துணையாகத்தான் கொடு போகாவிட்டால், நினைக்கத்தான் ஆகாதோ? எதிர் கொள்வாரிலே சிலராகவாதல், வழித்துணையாவாரிலே சிலரா கவாதல், ஏதேனும் ஓர் ஆகாரத்தாலே தான் நினைக்கலாகா

---

1. "நேரிழை" என்று கூறியதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'கடைப் பணிக்கூட்டம்' என்று தொடங்கி. கடைப் பணிக்கூட்டம் - ஆபரணங் களினுடைய நுனி கூடின இடம்.

2. 'போனாள்' என்னாமல், "நடந்தாள்" என்று கௌரவமாகச் சொல்லு வான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன் பெண்பிள்ளையே யாகிலும்' என்று தொடங்கி. வியாக்யாதாவின் ஈடுபாடு: 'தன்மகளை எங்ஙனே' என்று தொடங்கும் வாக்கியம்.

3. சிஷ்யர்களை, பகவத் சம்பந்தம்கொண்டு உத்தேசியராகக் கொண் டாடுமதற்கு இரண்டு ஐதிஹ்யங்கள் காட்டுகிறார் 'ஒருநாள்' என்று தொடங்கியும், 'அம்முணியாழ்வான்' என்று தொடங்கியும். 'கணபுரம் கைதொழும்' என்ற திருப்பாசுரம், பெரிய திருமொழி. 8. 2: 9.

4. "நினைத்திலள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வழிக் குத் துணையாக' என்று தொடங்கி. "ஒன்றும்" என்றதற்கு, பாவம் அருளிச் செய்கிறார் 'எதிர்கொள்வாரிலே' என்று தொடங்கி. வழித் துணையாவார் - பழிசொல்லுவார்,

தோ? என்பாள் 'ஒன்றும் நினைத்திலள்' என்கிறாள். [1] 'அத்தலையில் நினைவே காரியகரமாவது' என்றிருக்கிறாள். பகவானிடத்தில் சம்பந்தமுடையாருடைய அபிமானமே உத்தேசியம். (9)

## 628.

**நினைக்கிலேன்** தெய்வங்காள்! நெடுங்கண் இளமான் இனிப்போய்
அனைத்துலகுமுடைய அரவிந்த லோசனனை
தினைத்தனையும் விடாள் அவன் சேர்திருக் கோளூர்க்கே
மனைக்குவான் பழியும் நினையாள் செல்ல வைத்தனளே.

**பொ-ரை:**—தெய்வங்களே! என்மகளுடைய தன்மைகளை என்னால் நினைக்க முடியவில்லை; நீண்ட கண்களையுடைய இளமைபொருந்திய மான்போன்றவளான என்மகள் இப்பொழுது சென்று, எல்லா உலகங்களையுமுடைய தாமரைக்கண்ணனாகிய எம்பெருமானைத் தினையளவு சிறிய பொழுதும் விடாதவளாகி, அவன் சேர்ந்திருக்கின்ற திருக்கோளூர் என்ற திவ்வியதேசத்திற்கே, குடிக்கு உண்டாகும் பெரிய பழியையும் நினையாதவளாகிச் சென்றாள் என்க.

**வி-கு:**—தெய்வங்காள்! நினைக்கிலேன்; இளமான் அரவிந்த லோசனனைத் தினைத்தனையும் விடாள்; மனைக்கு வான்பழியும் நினையாள்; திருக்கோளூர்க்கே இனிப்போய்ச் செல்லவைத்தனள் என்க. விடாள், நினையாள் என்பன: முற்று எச்சங்கள். தினை, பனை என்பனவற்றைச் சிறுமை பெருமைகட்கு எடுத்துக் கூறுதல் மரபு. "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்தெரி வார்" என்பது திருக்குறள்.

**ஈடு:**—பத்தாம்பாட்டு. [2] இந்தக் குடிக்கு வரும் பெரும் பழியை நினையாதே, திருக்கோளூரிலே புக்கு அவனை ஒருகாலமும் விடுகின்றிலள் என்கிறாள்.

---

1. அவள் நினைத்தால் தனக்குப் பயன் ஏது? என்ன, 'அத்தலையில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, சுவாபதேசப் பொருள். இதனை விவரணம் செய்கிறார் 'பகவானிடத்தில்' என்று தொடங்கி.

2. "மனைக்கு வான்பழியும் நினையாள், திருக்கோளூர்க்கே போய் அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாள்" என்பனவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

நினைக்கிலேன்-[1]கடலைக் கரை காண ஒண்ணாதே அன்றோ. [2]தன்னைப் பொகட்டுப் போனபடி, வழியில் மிறுக்குகள், அங்குப் புக்கால் இவள் படும் பாடுகள் எனப் பலவேயா மன்றோ. தெய்வங்காள் - [3]இதனை, 'கொல்லை' என்பார் முகம் பார்த்துச் சொல்ல ஒண்ணாதே. [4]பழி சொல்லாமையையும், சிறை உறவு போலே தன்னோடு ஒக்க உறங்காமையையும் பார்த்துச் சொல்லுகிறாள். தெய்வங்காள் நினைக்கிலேன் -[5]செயல் அற்றுக் கை வாங்கிச் சொல்லுகிற வார்த்தை அன்றோ. நெடும் கண் இள மான் இனிப்போய்-[6]விழுக்காடு அறியாமையாலே புறப்பட்டுப் போனளத்தனை கண்டீர்! [7] இந்தக் கண்ணுக்கு இலக்கானவர்கள், சர்ப்பயாகத்தில் சர்ப்பங்கள் சுருண்டு வந்து விழுமாறு போலே, தந்தாம் முதன்மையோடே வந்து விழவேணும் கண்டீர்! இனிப்போய் - [8]யார் செய்யக்கூடியதை யார்தான் செய்கிறார்? [9]கண்படைப்பாளும் தானாய்ப் புறப்பட்டுப் போவாளும்

1. நினைக்க ஒண்ணாமைக்கு அடி, இவள் தன்மை அளவிற்குட்படாதவை என்கிறார் 'கடலை' என்று தொடங்கி.

2. காண ஒண்ணாமைக்கு இவள் செயல்கள் கடல்போன்று அளவிட முடியாதனவோ? என்ன, 'தன்னைப் பொகட்டு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. வேறு தெய்வங்களை வணங்காத இவள் "தெய்வங்காள்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதனை' என்று தொடங்கி.

4. இவற்றைப் பார்த்துச் சொல்லுகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'பழி சொல்லாமையையும்' என்று தொடங்கி.

5. வேறு கதி இல்லாமையாலே சொல்லுகிறாள் என்று, அதற்கே வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'செயல் அற்று' என்று தொடங்கி.

6. "இளமான்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'விழுக்காடு' என்று தொடங்கி. விழுக்காடு - மேல் வரும் காரியம்.

7. "அனைத்துலகுமுடைய" என்றதனைத் திருவுள்ளம்பற்றி, "நெடுங்கண்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இந்தக்கண்ணுக்கு' என்று தொடங்கி. சர்ப்பயாகம் செய்தவன் - ஜநமேஜயன்.

8. "இனி" என்கையாலே, இவள் போதற்கு இடம் இல்லை, அவனுக்கே இடம் உள்ளது என்று கொண்டு பாவம் அருளிச்செய்கிறார் 'யார் செய்யக்கூடியதை' என்று தொடங்கி.

9. 'யார் செய்யக்கூடியதை' என்பான் என்? இவள் போகலாகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்படைப்பாளும்' என்று தொடங்கி.

தானவதே! [1]இத்தலை செல்லாதிருத்தற்குச் சொரூபஞானமே அமையுமேயன்றே. அனைத்து உலகுமுடைய அரவிந்தலோசனனை - [2]இவ்வளவே காண் அவன் கண்ணுக்குத் தோற்றிருப்பது. ஓர் உபய விபூதி மாத்திரம் கண்டீர் அவன் கண்ணுக்கு ஈடுபட்டிருப்பது; [3]அவன் தன்னையும் தோற்பிக்கும் கண் அன்றே இவளது. [4]அவன் அனைத்து உலகுமுடைய அரவிந்த லோசனன்; இவள் நெடுங்கண் இளமான். [5]அவன், தானும் தன்விபூதியும் இவள் கண்ணிலே ஒரு மூலையிலே அடங்கும்படியாயிருக்கை. [6]கண்ணில், அல்லாத பரப்பும் இவள் பருவமும் குமர்கிடந்து போமத்தனை.

தினைத்தனையும்விடாள்-[7]நெகிழ்த்து அணைக்கவும்பொறாள். இங்கு இருந்து பட்ட கிலேசத்தாலே 'நின்னைப் பிரியேன்' என்று சொல்லவும் நெஞ்சுகொடாள். [8]காரியப்பாட்டாலே பிரியிலும் நெஞ்சு ஒழிந்து கேட்கவேணுமே. மனைக்கு வான் பழி

---

1. "இனிப்போய்" என்பதற்கு, சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறார் 'இத்தலை' என்று தொடங்கி. "நெடுங்கண்" என்கையாலே, தன்முயற்சி நீங்கிய அத்யந்தபாரதந்திரிய ஞானத்தைச் சொல்லுகிறது என்றபடி.

2. இவள் கண்ணழகிலே உலகநாயகன் ஈடுபட்டிருக்கும் என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அவன் கண்ணழகினை எளிமைப் படுத்துகிறார் 'இவ்வளவே காண்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'ஓர் உபயவிபூதி' என்று தொடங்கி.

3. இவள் கண்களின் ஏற்றத்தை அருளிச்செய்கிறார் 'அவன் தன்னையும்' என்று தொடங்கி.

4. அவன் குறைவினையும் இவள் ஏற்றத்தினையும் பதங்களிலே ஏறிட்டுக் காட்டுகிறார் 'அவன் அனைத்துலகுமுடைய' என்று தொடங்கி.

5. "நெடுங்கண்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன்' என்று தொடங்கி.

6. ஒரு மூலையிலே அடங்கினால், மற்றை இடம் எங்ஙனம் இருக்கும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்ணில்' என்று தொடங்கி. 'குமர் கிடந்து போம்' என்றது, குமரி போலே அநுபவயோக்கியம் இல்லாமலே பயன் அற்றுப் போம் என்றபடி. குமர் - குமரி.

7. "தினைத்தனையும் விடாள்" என்பதற்கு, இரண்டு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார் 'நெகிழ்த்து' என்று தொடங்கியும், 'இங்கு' என்று தொடங்கியும்.

8. நெஞ்சு கொடுத்தால் தோஷம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'காரியப் பாட்டாலே' என்று தொடங்கி. என்றது, காரியம் காரணமாகப் பிரியப் பார்த்தாலும், 'பிரிதல் நல்லது' என்று இவள் நெஞ்சிலே படுத்தியே பிரியவேண்டுகையாலே, அநுபவத்தை விட்டு அதனைக் கேளாள் என்றபடி.

யும் நினையாள்-மனைக்கு வலியபழியும் நினைக்கின்றிலள். [1]விருப்பத்தைப் பெறுதற்குச் சாதனம் அல்லாத அளவே அன்று, விரோதி என்றிருக்கிறாள். [1]" இத்தலையாலே செல்லுமது பழி' என்றே இருந்தபடி பாரீர்!

[2]அதபாதக பீதஸ்த்வம் ஸர்வ பாவேந பாரத - [3] அடுத்து அடுத்து இராஜசூயமே செய்து போந்தவனுக்கு ஒருதடவற் பொய்க்காக நரக தரிசனம் பண்ணுமளவாய் நின்றவனை யன்றோ இப்படி உபதேசிக்கிறது.[4]நல்வினைகளோடு தீவினைகளோடு வாசிஅற விரோதியாய், கிருஷ்ணனே பற்றுக்கோடு என்னுமிடத்தைத்தோற்றுவிக்கிறது.விமுக்தாந்யஸமாரம்பஃ-அசேதனமான கர்மங்களைப் பற்றிக்கொண்டு நாலாதேகொள். நாராயணபரோ பவ - உனக்கு வகுத்தவன் தன்னையே பற்றப் பார். செல்ல வைத்தனள் - [5] போதலில் நெஞ்சினை வைத்தாள் என்னுதல்; நாம் எல்லாம் காண அங்கே ஆனாள் என்னுதல். அதாவது, தான் அங்கே செல்ல ஒருப்பட்டாள் என்னுதல்;

1. "பழியும்" என்ற உம்மைக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'விருப்பத்தை' என்று தொடங்கி. வியாக்யாதாவின் ஈடுபாடு: 'இத்தலையாலே' என்று தொடங்கும் வாக்கியம்.

2. தான்செய்யும் முயற்சி சொரூபத்திற்கு விரோதம் என்பதற்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'அதபாதக' என்று தொடங்கி.

"அதபாதகபீதஃ த்வம் ஸர்வபாவேந பாரத
விமுக்தாந்ய ஸமாரம்பஃ நாராயணபரோ பவ"

என்பது, பாரதம். இது, தருமபுத்திரனைப் பார்த்துத் தர்மதேவதை கூறியது.

3. "பாதகம்" என்ற சொல், தள்ளத்தக்கது என்ற பொருளைக் காட்டுமே ஒழிய, வேறு உபாயங்களைச் சொல்லுமோ? என்ன, இங்கு, "பாதகம்" என்ற சொல், தன்முயற்சியால் செய்யப்படுகின்ற உபாயாந்தரங்களையே சொல்லுகிறது; தள்ளத்தக்க காரியங்களைச் சொல்லவில்லை என்று கூறுவதற்குத் திருவுள்ளம்பற்றி அதற்கு உபபத்தி காட்டுகிறார் 'அடுத்து அடுத்து' என்று தொடங்கி. தடவற்பொய் - ஆபாசமான பொய்.

4. ஆயின், 'புண்யபீதோத' என்னுமல், "பாதக பீதஃ" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நல்வினைகளோடு' என்று தொடங்கி.

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார்.

5. தான் அங்கே போகையிலே தன் நெஞ்சினை வைத்தாள் என்னுதல்; நாம் அங்கே செல்லும்படி தன் நெஞ்சினை வைத்தாள் என்னுதல். முதற்பொருளில், நெடுங்கண் இளமான் இனிப்போய், மனைக்குவான்பழியும் நினையாதவளாய்க்கொண்டு, அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாதே இருக்கவேண்டும் என்று, அவன்சேர் திருக்கோளூர்க்கே செல்ல ஒருப்பாட்டாள்; தெய்வங்காள்! நினைக்கிலேன் என்று கூட்டிக்கொள்க.

தான் மீளாதபடி புகுகையாலே நாம் அங்கே செல்லும்படி வைத்தாள் என்னுதல். (10)

629.

**வைத்தமா நிதியாம் மதுசூ தனையே அலற்றிக்**
**கொத்தலர் பொழில்சூழ் குருகூர்ச்சட கோபன் சொன்ன**
**பத்து நூற்றுள் இப்பத்து அவன்சேர்திருக் கோளூர்க்கே**
**சித்தம் வைத்துரைப் பார்திகழ் பொன்னுல காள்வாரே.**

**பொ-ரை:**—சேமித்து வைத்த சேமநிதிபோன்ற மதுசூதனையே பற்றி, பூங்கொத்துக்கள் மலர்கின்ற சோலைகள் சூழ்ந்த திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபராலே அலற்றி அருளிச்செய்யப்பட்ட பத்து நூற்றுள் இந்தப் பத்துப் பாசுரங்களையும் அவன் சேர்ந்திருக்கின்ற திருக்கோளூரிலேயே சித்தத்தை வைத்து உரைப்பவர்கள் விளங்குகின்ற பரமபதத்தை ஆள்வார்கள் என்றபடி.

**வி - கு:**—அலற்றிச் சொன்ன பத்து என்க. இப் பத்தை உரைப்பார் ஆள்வார் என்க.

**ஈடு:**—முடிவில், [1] இப்பத்தும் கற்றார் இட்ட வழக்கு திருநாடு என்கிறார்.

வைத்த மா நிதியாம் - [2]இவள், தனிவழி போகைக்கும், தாயாரை விடுகைக்கும் காரணம் இருக்கிறபடி. [3]செல்வம் சேர்த்து வைத்ததாக இருக்க, எடுத்து அழித்துக் கெடுத்து ஜீவியாமல் ஆறி இருப்பார் இலரே. வைத்தமாநிதி - [4]"எய்ப்பினில் வைப்பினைக் காசினை மணியை" என்கிறபடியே, தளர்ந்தார் தாவளமாய், எய்ப்பினில் வைப்பாய், '**உண்டு**' என்ன,

---

இரண்டாவது பொருளில், நெடுங்கண் இளமான் இனி, அவன்சேர் திருக்கோளூர்க்கே மனைக்கு வான்பழியும் நினையாதவளாய்க்கொண்டு, போய், மீளுகைக்குத் தகுதியுங்கூட இல்லாதபடி அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாள்; நாம் அங்கே செல்லும்படி வைத்தாள்; தெய்வங்காள்! நினைக்கிலேன் என்று கூட்டிக்கொள்க.

1. "இப்பத்தும் சித்தம் வைத்து உரைப்பார்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "வைத்தமாநிதி" என்று இப்போது அவனுடைய இனிமையைச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவள், தனிவழி' என்று தொடங்கி.

3. நிதி இருந்தால் இப்படிப் போகவேண்டுமோ? என்ன, '**செல்வம் சேர்த்து**' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. "நிதி" என்கைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'எய்ப்பினில் வைப்பினை' என்று தொடங்கி. இது, பெரியதிருமொழி. 7. 10: 4. **தளர்ந்தார் தாவளம் - எய்ப்பினில் வைப்பு. 'உண்டு என்ன, உயிர் நிற்கும்படியாய்'**

உயிர் நிற்கும்படியாய், உடையவன் காலிலே எல்லாரும் விழும் படியாய், உடையவனுக்கு அறவிட்டு ஜீவிக்கலாய், 'அறவிட்டு ஜீவித்தான்' என்று ஏசாதபடியாய், [1]அவன் தனக்குப் பெரு மதிப்பைக் கொடுப்பதுமாய், உடையவனுக்கு ஒன்றுக்கும் கரைய வேண்டாதபடியாய், எல்லாம் தன்னைக்கொண்டே கொள்ளலாய், எல்லா ரசங்களும் போகங்களும் தன்னைக் கொண்டே கொள்ளலாய், இந்தவிதமான குணங்களையுடைத் தாயிருக்கையைப் பற்ற 'நிதி' என்கிறது. மாநிதி என்றது, அழியாத நிதி என்றபடியாய், அத்தால், தன்னைக்கொண்டே எல்லாம் கொள்ளாநின்ருல் தனக்கு ஒரு குறைஅற்று இருக் கை. அல்லாத நிதி மாண்டு நிற்குமே.

மதுசூதனையே அலற்றி-இந்த நிதியைக் [2]காத்து ஊட்டுவ தும் தானே என்கிறது. உத்தேசியமானதுதானே விரோதி யையும் போக்கிஅநுபவிப்பிக்கவற்ரு யிருக்கை.கொத்து அலர் பொழில் சூழ் குருகூர்ச் சடகோபன் சொன்ன-[3]"வீட்டில் எல் லாரும் சௌக்கியமாக இருக்கிருர்கள்" என்னுமாறுபோலே.

---

என்றது, செல்வம் என்ருல் சென்ற உயிரும் மீளுமாறுபோலே, 'ஈசுவரன் உளன்' என்ருல், போகும் தன்மையுள்ள ஆத்மசத்தையும் தரிக்கும் என்றபடி. 'அறவிட்டு ஜீவிக்கலாய்' என்றது, இவன் சர்வேசுவரனைப்பற்றி உபதேசிக்க,உபதேசத்தைப் பெற்ற சிஷ்யன்,தன்சக்திக்குத் தகுதியாகச் சிறிது செல்வத்தைக் கொடுக்க, அதனை ஏற்றுக்கொண்டு ஜீவிக்கலாய் என்றபடி. அறவிட்டு - விற்று. 'அறவிட்டு ஜீவித்தான் என்று ஏசாதபடியுமாய்' என்றது, புத்திரன் முதலானேர்களை விற்று ஜீவித்தால் பழியாநிற்பர்கள்; நிதியை விற்று ஜீவித்தால் பழிப்பாரில்லையே; அப்படியே, தங்கள் ஆதரத்தால் சிஷ்யர் கள் கொடுத்ததை வாங்கி ஜீவித்தால் நிந்தியாதபடியாயிருக்கும் என்கை.

1. 'அவன் தனக்குப் பெருமதிப்பைக் கொடுப்பதுமாய்' என்றது,செல்வம், தன்னையுடையவனுக்கு ஒருவருக்கும் அஞ்சவேண்டாதபடி பெருமதிப்பைக் கொடுக்குமாறுபோலே, சர்வேசுவரனும் தன்னையடைந்தவர்களுக்கு யமன் முதலானேர்கட்கும் அஞ்சவேண்டாதபடியான பெருமதிப்பை உண்டாக்கு வான் என்றபடி.

2. 'காத்து ஊட்டுவதும் தானே' என்றது, விரோதி வாராமல் காத்துப் புஜிப் பிக்குமதுவும் தானே என்றபடி. இதனை விவரணம் செய்கிருர் 'உத்தேசிய மானது தானே' என்று தொடங்கி. இதனல், பிராப்பியமானது தானே பிராபகமுமாக இருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி.

3. தாம் பிரிவினலே துக்கியாநிற்க, சோலை இப்படி மலர்ந்து நிற்றல் கூடுமோ? என்ன, அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிருர் 'வீட்டில்' என்று தொடங்கி.

"பங்கதிக்தஃ து ஜடிலஃ பரதஃ த்வாம் ப்ரதீக்ஷதே
பாதுகே தே புரஸ்க்ருத்ய ஸர்வஞ்ச குஶலம் க்ருஹே"

என்பது, ஸ்ரீராமா. யுத். 127 : 5.

ஸ்ரீபரதாழ்வான் பெருமாள்பக்கலிலே நெஞ்சினை வைக்க வைக்க, அதனைக்கண்டு, 'அவர் வரவு அணித்து' என்று திருவயோத்தியை தளிரும் முறியுமானாற்போலே, விரஹத்தை நினைக்க ஆற்றலில்லாதபடி அவன்பக்கலிலே ஏகாக்ரசித்தராகையாலே பிறந்த தோற்றத்தாலே, திருநகரியும்தளிரும் முறியுமானபடி.[1] இத்தலையிலே இத்தனை விரைவு உண்டானால் அத்தலையால் வருகிற பலத்துக்குக் கண்ணழிவு உண்டோ? [2]"மரங்களும் உலர்ந்தன" என்கை தவிர்ந்து "காலமல்லாத காலத்தும் மரங்கள் பலத்தைக் கொடுத்தன" என்னும்படியாயிற்று. பத்து நூற்றுள் இப்பத்து-கடலில் அமுதம் போலே, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்து. அவன் சேர் திருக்கோளூர்க்கே சித்தம் வைத்து - அவன் பொருந்தி வாழ்கின்ற திருக்கோளூர்க்கே நெஞ்சை வைத்து. உரைப்பார் - சொல்லுவார். திகழ் பொன்னுலகு ஆள்வாரே - [3]ஒருத்தி கூப்பிட, ஒருத்தி தனியே போகை அன்றிக்கே, நித்தியாநுபவம் பண்ணலாம் நிலத்திலே புகப்பெறுவர். தனிவழி போகாதே, அர்ச்சிராதி கணம் சேவிக்க, விலக்ஷணமான தேசத்தே போய்ப் புகப் பெறுவர். (11)

—

## திருவாய்மொழி நூற்றந்தாதி

**உண்ணும்சோறு ஒருமூன்றும் எம்பெருமான்**
**கண்ணனென்றே நீர்மல்கிக் கண்ணிணைகள்—மண்ணுலகில்**
**மன்னுதிருக் கோளூரில் மாயன்பாற் போமாறன்**
**பொன்னடியே நந்தமக்குப் பொன். (57)**

—

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

—

1. இவர்க்கு ஆற்றாமை உண்டானால்அவன் வரவு அணித்தாகவேண்டுமோ? என்ன, 'இத்தலையிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, யாதானும் பற்றி நீங்குகிறவன் அநுகூலித்தால், எதிர்சூழல் புக்குத் திரிகிறவனுக்குக் கண்ணழிவுண்டோ? என்றபடி. கண்ணழிவு - காலதாமதமும், குறையும்.

2. அவன் வரவு அணித்தானால் கொத்தலர் பொழில் ஆகைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மரங்களும்' என்று தொடங்கி.

"அபிவ்ருக்ஷா:" என்பது, ஸ்ரீராமா. அயோத். 59 : 5.

"அகால பலிநோ வ்ருக்ஷா:" என்பது, ஸ்ரீராமா. யுத். 127 : 19.

3. "திகழ்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒருத்தி' என்று தொடங்கி. அத்தை விவரணம் செய்கிறார் 'தனிவழி போகாதே' என்று தொடங்கி.

# எட்டாந் திருவாய்மொழி — "பொன்னுலகு"

## முன்னுரை

ஈடு:—[1]மேல் திருவாய்மொழிகள் இரண்டும், மோஹமும் உணர்த்தியுமாய், இதில் தூதுவிடுகிறதாக அன்றோ இருக்கிறது; [2]மயர்வற மதிநலம் அருளப்பெற்ற இவர்க்கு [3]"மரணத்தில் பாதி அவஸ்த்தை" என்னும் மோஹம் இல்லையே; [4]இனி இவர்க்கு மோஹமாவது, புறத்திலேயுள்ள பொருள்களை நினைத்தற்கும் இயலாதவராய் விஷயங்களினின்றும் அந்தக்கரணம் விடுபட்டதாய், மனத்திற்கு அவனே விஷயமாய், அவன் குணங்களையே அநுபவித்தல். அதாவது, ஆத்மாவாய் இருப்பவனே ஞானத்திற்கு விஷயமாய்த் தன்னை மறக்கை.

---

1. ஆழ்வாருடைய மோஹநிலையும் உணர்ச்சிநிலையும், நாட்டாருடைய மோஹநிலை உணர்ச்சிநிலைகளைக் காட்டிலும் வேறுபட்டன என்பதற்கு உறுப்பாக விஷயங்களை அருளிச்செய்யத் தொடங்குகிறார் 'மேல் திருவாய்மொழிகள் இரண்டும்' என்று தொடங்கி.

2. ஞானாதிகாரான இவர்க்கு, நனவு கனவு சுஷுப்தி என்பவைகளோடு சேர்த்துக் கூறப்படுகின்ற மோஹம் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மயர்வற' என்று தொடங்கி. என்றது, இவருடைய மோஹம், நனவு கனவு முதலியவைகளோடு சேர்த்துக் கூறப்படுகின்ற மோஹம் அன்று என்றபடி.

3. உலகத்திலே, ஒவ்வொருவருக்கும் நனவு கனவு சுஷுப்தி மூர்ச்சை மரணம் என்று சொல்லப்படுகின்ற ஐந்து அவஸ்த்தைகள் உண்டு; அவற்றுள், நனவாவது, புறக்கரணங்களும் அந்தக்கரணமும் தனதுதனது விஷயங்களை அறிந்து பற்றுகிற நிலை. கனவாவது, புறக்கரணங்கள் எல்லாம் அடங்க மனம் மாத்திரம் சஞ்சரித்துக்கொண்டிருக்க, இந்தச் சரீரத்தோடு ஒத்த வேறு சரீரங்களையும் பகலில் காண்கிற விஷயங்களோடு ஒத்த விஷயங்களையும் ஈசுவரன் உண்டாக்க, அதுகாரணமாக, முடிசூடுதல் முதல், தலை அறுப்புண்ணல் இறுதியாகக் காண்டல். சுஷுப்தியாவது, புறக்கரணங்களும் மனமும் அடங்க, உச்வாச நிஸ்வாசங்களாலே பிராணன் மாத்திரம் சஞ்சரித்துக் கொண்டிருக்க, நனவிலே தன்தன் விஷயங்களிலே இந்திரியங்கள் பரந்திருந்த காரணத்தால் வந்த இளைப்பெல்லாம் மாறும்படி, புரீதத் என்கிற நாடியிலே பரமாத்மாவின் சொரூபத்திலே சேர்ந்து சிரமம் எல்லாம் நீங்கி இருத்தல். மூர்ச்சையாவது, சூக்கும பிராணனோடும் சூக்கும சரீரத்தோடும் சம்பந்தப்பட்டிருக்கும் நிலை. மரணமாவது, எல்லாப் பிராணன்களும் தேக சம்பந்தத்தினின்றும் நீங்குதல். இப்படிப்பட்ட 'மரணத்துக்குப் பாதி அவஸ்த்தையாயிருக்கும் மூர்ச்சை' என்று வேதாந்தத்திலே சொல்லப்பட்டிருத்தலைத் திருவுள்ளம்பற்றி 'மரணத்தில் பாதி அவஸ்த்தை' என்கிறார். சாரீரகமீமாம்சை, அத். 3. பாதம். 2. சூத். 10. காண்க.

4. இவருடைய மோஹத்தின் தன்மையை அருளிச்செய்கிறார் 'இனி இவர்க்கு' என்று தொடங்கி.

[1]மேல் திருவாய்மொழியில் நிலே, "நான் மநு ஆகின்றேன்"என்றும், " அனந்தன் என்னும் திருநாமமுள்ள அப் பரம்பொருள் எங்கும் இருப்பதால் நான் அப் பரம்பொருளாகவே இருக்கிறேன்"என்றும் சொல்லுகிற நிலேபோலே.[2]உணர்த்தியாவது, " அந்தப் பிரஹ்லாதன் மீண்டும் ஆகாசம் முதலியவற்றேடு கூடிய உலகத்தைப்பார்த்துத் தனது தோற்றத்தால் தன்னேப் பிரஹ்லாதனுக நினேத்தார்" என்கிற பிரஹ்லாதனேப் போலே தம்மையும் உணரக்கூடியவராய் உலக விருத்தாந்தத்தையும் நினேக்கக் கூடியவராதல். [3] நிர்க்குணமான விஷயத்திலே அன்றே இவர் மூழ்கியது, குணுதிகவிஷயத்திலே யன்றே. சேஷிபக்கலிலே நினேவுண்டானல் சேஷபூதனை தன்னேயும் காணும் அன்றே. மேல், நெடும்போது அவன்குணங்களே நினேக்கையாலே தரித்து வலிமைக்குறைவும் நீங்கிப் புறத்திலேயுள்ள பொருள்களேயும் நினேக்கக்கூடிய நிலேயை அடைந்தார்; [4]அவ்வளவிலே, இவர் தரித்தவாறே பழைய அலாபமே தலே

---

1. " மாலுக்கு " என்ற திருவாய்மொழியிலும், " உண்ணுஞ்சோறும் " என்ற திருவாய்மொழியிலும் உண்டான மோஹத்தையும், உணர்ச்சியையும் திருஷ்டாந்தத்தோடு காட்டுகிருர் 'மேல்' என்று தொடங்கி. 'மேல் திருவாய்மொழியில்' என்றது, " மாலுக்கு " என்ற திருவாய்மொழியில் என்றபடி.

"அஹம் மனுரபவம்" என்பது, பிருகதாரண்யகம், 4-வது பிராஹ்மணம்.
" சர்வகத்வாத் அநந்தஸ்ய ஸ ஏவ அஹம் அவஸ்திதஃ "
என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 1. 19 : 85.

2. 'உணர்த்தியாவது' என்றது, " உண்ணும் சோறும் " என்ற திருவாய்மொழியில் உண்டான உணர்த்தியாவது என்றபடி.

" த்ருஷ்ட்வாஸச ஜகத் பூயோ ககநாத்யுபலக்ஷணம்
ப்ரஹ்லாதஃ அஸ்மீதி ஸஸ்மார புநஃ ஆத்மாநம் ஆத்மநா "
என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 1. 20 : 7.

3. " மாலுக்கு " என்ற திருவாய்மொழியிலே, விஷயம், தனக்கு மேல் ஒன்றில்லாததான இனிமையையுடையதாகையாலும், தாமும் எல்லேயில்லாத அன்பினேயுடையவராகையாலும் ஏகாக்ரமான அநுபவம் செல்லாநிற்க, " உண்ணும் சோறும் " என்ற திருவாய்மொழியில், தம்மை உணர்ந்து அநுசந்திக்கக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'நிர்க்குணமான' என்று தொடங்கி. என்றது, அவனுடைய சேஷித்வமும் குணமாகையாலே, அந்தச் சேஷித்வகுணத்தை அநுசந்தித்தால் சேஷித்வத்திற்கு எதிர்த்தொடர்புள்ள சேஷமாக இருக்கிற தம்மையும் காணலாம் என்றபடி.

4. ஆக, இப்படி மேல் திருவாய்மொழிகட்குச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்து, இத்திருவாய்மொழிக்குச் சுருக்கமாகச் சங்கதி அருளிச்செய்கிருர் 'அவ்வளவிலே' என்று தொடங்கி. 'அவ்வளவிலே' என்றது, தம்மையும் உலக விருத்தாந்தத்தையும் நினேக்கக்கூடியவரான அளவிலே என்றபடி.

யெடுத்து ஒரு பிராட்டியின் நிலையை அடைந்தவராய் அந்யாப தேசத்தாலே பேசுகிறார்.

[1]மேல் திருவாய்மொழியில், திருத்தாயார் "எங்ஙனே புகுங்கொல்?" என்று நொந்ததுவே பலித்து, [2] தன் சாபலத்தாலே புறப்பட்டாள் முடியப் போய்ப் புக மாட்டாமல் தன்னுடைய நகரத்தை அடுத்த உபவனத்திலே விழுந்து கிடந்து, அவ்வளவிலும் அவன் வரக் காணாமையாலே, கண்ட பறவைகளையெல்லாம் தூதுவிடுகிறாள். [3]தனிவழியே புறப்பட்டுப் போம்படியாய் விழுந்த இவளுக்குத் தூதுபோவார் இலரே; [4]உண்டானாலும் இவள் தனக்கு முன்னே ஈடுபட்டுக் கிடப்பர்களே; இனித் தன் பக்கத்தில் வசிக்கிற பறவைகளுக்கு மேற்படக் கால்நடை தந்து போகவல்லார் இலரே; இவ்வளவிலே நீங்கள் என்நிலையை அறிவிக்கவேணும் என்று அவற்றின் காலிலே விழுகிறாள். [5]"அஞ்சிறைய மடநாராய்" என்ற திருவாய்மொழியில் என்னை நினைத்தானத்தனை, தன்னை மறந்தான் என்றாள்; இத் தலையில் அபராதம் பாராதே, அத் தலையில் அபராதத்தைச் சகித்துக் கோடல் பற்றாசாக, அபராதத்தைச் சகித்துக்கொள்ளும் தன்மையைப் பார்த்து வருவது என்று ஆள்விட்டாள். "வைகல் பூங்கழி" என்ற திருவாய்மொழியில், [6]இருவரையும் அவ்வூரில்

---

1. இத் திருவாய்மொழியிற் கூறப்பட்ட பொருளை விரித்து அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியில்' என்று தொடங்கி.

2. ஒரு காரியத்துக்குப் போவார், தம்மை அறிந்து புறப்படவேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன் சாபலத்தாலே' என்று தொடங்கி. புறப்பட்டாள் - புறப்பட்டவள்; பெயர்.

3. பறவைகளைத் தூதுவிடுகிறது என்? வேறு சிலர் இலரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தனிவழியே' என்று தொடங்கி.

4. "மங்கைமார் முன்பு" என்று சொல்லப்படுகிற தோழிமார் இலரோ? என்ன, 'உண்டானாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இவ்வளவில் - தோழிமாரும் உதவாத நிலையில்.

5. மேலே, இருமுறை தூதுவிட்டாளே? அவற்றிற்கும் இதற்கும் வாசி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அஞ்சிறைய' என்று தொடங்கி. என்னை - பாபம்செய்த என்னை. தன்னை - அபராதங்களைப் பொறுக்கின்ற தன்னை.

6. "வைகல்பூங்கழிவாய்" என்ற திருவாய்மொழியின் முன்னுரையில், 'அவ்விடங்களிலே துன்புறுவார் பலர் உளராகையாலே அவர்கள் ரக்ஷணத்திலே ஒருப்பட்டு இத்தலையை மறந்தானித்தனை' என்றார்; இங்கு, 'இருவரையும் அவ்வூரில் உள்ள இனிமை மறக்கப்பண்ணிற்று என்றாள்' என்கிறார்; இதுவும் ஒரு நிர்வாகம் என்று கண்டுகொள்வது. 'இருவரையும்'

உள்ள இனிமை மறக்கப்பண்ணிற்று என்றாள்; விசேஷஜ்ஞனுகையாலே துன்பத்தை அறிவிக்க வரும் என்று ஆர்த்த ரக்ஷணம் பற்றாசாகத் தூதுவிட்டாள். இத்திருவாய்மொழியில், வாராமைக்கு அடி [1]பரப்பனுகையாலே என்று பார்த்தாள்; [2]"தன்மன்னு நீள்கழல்மேல் தண்துழாய் நமக்கு அன்றி நல்கான்" என்கிறபடியே, அசாதாரணமானது அன்றோ வடிவு; அடியார்களோடு ஏகரசன் ஆகையன்றோ என்று பார்த்து ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள் என்று பட்டர் அருளிச்செய்வர். "பல பாசுரங்களிலும் 'இதுவோ தக்கவாறு' என்கையாலே, உயிர்கள்மாட்டு அருளுடைமை பற்றாசாகத் தூது விடுகிறாள்" என்று **பிள்ளான்** பணிப்பர்.

[3]"இராகவனுடைய மனையில் அனைத்துப் பொருள்களையுமுடையவளாய்ப் பன்னிரண்டாண்டுதேவபோகங்களைநுகர்ந்தவளான நான்" என்கிறபடியே, பன்னிரண்டு ஆண்டு தண்ணீர்த்துரும்பு அறக் கலந்து பிரிந்த பிராட்டியைப் போலே, அங்கேபுக்கு நெடுங்காலம் அவனை அநுபவித்துப் பிரிந்து தூது விடுகிறாள் என்று **பிள்ளான்** பணிப்பர். [4]'புறப்பட்டவள் முடியப் போகமாட்டாதே நகரத்தை அடுத்த வனத்திலே கிடந்து

---

என்றது, பிரிந்தால் தரித்திருக்கப்போகாத வைலக்ஷண்யத்தையுடைய அவனையும், பிரிந்தால் தரித்திருக்க ஒண்ணாத துன்பத்தையுடைய தன்னையும் என்றபடி. 'விசேஷஜ்ஞனுகையாலே' என்றது, தன் வைலக்ஷண்யத்தையும் இவளுடைய துன்பத்தையும் அறியுமவனுகையாலே என்றபடி.

1. 'பரப்பனுகையாலே' என்றது, இத்திருவாய்மொழியில் வருகின்ற "மூன்னுலகங்கள் எல்லாம் படைத்த" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

2. "தன் மன்னு நீள்கழல்" என்பது, திருவாய். 6. 8 : 6. ஐகரஸ்யம் - ஒரே இன்பம். ஜீவாத்மா அநுபவிக்கிற இன்பத்தையே பரமாத்மாவும் தனக்கு இன்பமாகக் கொள்ளுகிறான் என்றபடி. மேலே 'ஏகரசன்' என்றதூஉம் இதுபற்றி.

3. "ஸமா த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே
புஞ்ஜாநா மாநுஷான் போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநீ"

என்பது, ஸ்ரீராமா. சுந். 33 : 18.

4. 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கும் மேலேயுள்ள பகுதியில் 'புறப்பட்டாள் முடியப் போய்ப் புகமாட்டாமல்' என்று அருளிச்செய்திருக்க, மீண்டும் இங்கு, 'புறப்பட்டவள் முடியப் போகமாட்டாதே' என்று அது தன்னையே அருளிச்செய்தது, பிள்ளான் நிர்வாஹத்திலும் பட்டர் நிர்வாஹமே சிறந்தது என்று தோன்றுகைக்காக.

தூதுவிடுகிருள்' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. [1] "கீர்த்தியையுடைய ஸ்ரீராமபிரான் என்னைப் பிழைத்திருக்கின்றவளாக எப்படிக் கௌரவிப்பாரோ அப்படியே உம்மால் வார்த்தை சொல்லத்தக்கது" என்கிறபடியே, பிறர் இழுக்கினைப் பொருத குடிப்பிறப்புடையவரன்ருே. அதிலே தமக்கு வந்த துக்கத்தை நீக்குவதற்குச் சொல்லவேண்டாவே. கடலை அணைசெய்து இராவணுதிகளை அழித்துத் தாம் வரக்கொள்ள, இத்தலைவெறுந்தறையாய்க் கிடவாமே செய்ய நினைத்தாராகில் ஏற்கவே நீக்கித் தம்புகழை நோக்கிக்கொள்ளச் சொல் என்று சொன்னுள் அன்ருே; அப்படியே இவளும் தன்நிலையை அறிவித்து விடுகிருளாயிருக்கிறது.

---

## 630.

**பொன்னுல காளீரோ? புவனி முழுதா ளீரோ?**
**நன்னலப் புள்ளினங் காள்!** வினை யாட்டியேன் நான்இரந்தேன்
**முன் னுல கங்க ளெல்லாம் படைத்தமுகில்** வண்ணன்கண்ணன்
**என்னலங் கொண்ட பிரான்தனக்கு** என்நிலைமை உரைத்தே.

**பொ - ரை:**—சிறந்த குணங்களையுடைய பறவைக்கூட்டங்களே! தீவினையேனுகிய நான் உங்களை இரக்கின்றேன்; ஆதிகாலத்தில் எல்லா

1. தலைவனுடைய பேர்அருளையே பற்றுசாகக்கொண்டு தூதுவிட்டபேர் உளரோ? என்ன, 'உளர்' என்று, அதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'கீர்த்தியையுடைய' என்று தொடங்கி. இது, பிள்ளான் நிர்வாஹத்தைப் பற்றியது.

"ஜீவந்தீம் மாம் யதா ராமஃ ஸம்பாவயதி கீர்த்திமாந்"
என்பது, ஸ்ரீராமா. சுந். 39 : 10.

சுலோகத்திலேயுள்ள "கீர்த்திமாந்" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'பிறர் இழுக்கினை' என்று தொடங்கி. "ஜீவந்தீம்" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'கடலை' என்று தொடங்கி.

"தினைத்தனையும் விடாள்" என்ற திருத்தாயாருடைய விருப்பமே பலித்தது; அங்கே புக்கு அநுபவித்தாள் என்பது, பிள்ளான் நிர்வாஹத்திற்குக் கருத்து. பட்டர் திருவுள்ளம், இத்திருவாய்மொழியின் முடிவிலே கலவி உண்டானல், "ஆடி ஆடி" என்ற திருவாய்மொழியின் ஈற்றிலே கலவி தோன்றஅருளிச்செய்து, "அந்தாமத்து" என்ற திருவாய்மொழியிலே அதனை விரித்து அருளிச்செய்தாற்போன்று, மேல் திருவாய்மொழியிலே கலவியை விளக்கி அருளிச்செய்வர்; அங்ஙனம் அருளிச்செய்யாமையாலே கலவி இல்லை என்பது. பட்டர் நிர்வாஹம் "எங்ஙனே புகுங்கொல்" என்றதனை நோக்காகக் கொண்டு எழுகின்றது. "செல்லவைத்தனள்" என்பதற்குச் செல்ல ஒருப்பட்டாள் என்பது பொருள்.

உலகங்களையும் படைத்த முகில்வண்ணனும் கண்ணபிரானும் என்னுடைய நலத்தைஎல்லாம் கொண்ட உபகாரகனுமான எம்பெருமானுக்கு, என்னுடைய நிலையைச் சொல்லுங்கோள் ; அவ்வாறு சொல்லி, நீங்கள் செய்த உதவிக்குக் கைம்மாறாகப் பரமபதத்தையும் மற்றுமுள்ள எல்லா உலகங்களையும் நான் கொடுக்க நீங்கள் ஆளுங்கோள் என்கிறாள்.

**வி - கு :**—புள்ளினங்காள் ! இரங்தேன் ; என்நிலைமை உரைத்துப் பொன்னுலகு ஆளீரோ ! புவனிமுழுது ஆளீரோ ! என்க.

**ஈடு :**—முதற்பாட்டு. [1] சில புள்ளினங்களைக் குறித்து, எம்பெருமானுக்கு என்நிலையை அறிவித்து இரண்டு உலகங்களையும் நான் தர நீங்கள் ஆளவேணும் என்று இரக்கிறாள்.

பொன் உலகு ஆளீரோ - [2]ஈசுவரனுடைய விபூதியானது பிரிவுநிலையில் அவனையும் தன்னையும் சேர்த்தார்க்குப் பரிசிலாகக் கண்டது என்று இருக்கிறாள். இரண்டு விபூதிகளும் ஒரு மிதுனத்துக்கு அடிமை அன்றோ. [3] அந்தநிலை பிறந்தால் சொல்லலாம் அன்றோ.[4]சர்வேசுவரன் இருக்க இவ்விடம் அராஜகமாய்க் கிடக்கிறது என்றிருக்கிறாள். [5]பிரகிருதி சம்பந்தம் அற்று ஒருதேச விசேடத்திலே போய் அநுபவிக்குமதனை இங்கே இருந்தே கொடுக்கிறாள். [6]பிரகிருதியோடே கொடுப்பா

1. "புள்ளினங்காள் ! பிரான் தனக்கு என் நிலைமை உரைத்து, பொன்னுலகு ஆளீரோ" என்பன போன்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. சர்வேசுவரனுக்குரியதான உலகங்களைக் கொடுப்பதற்கு இவளுக்குப் பிராப்தி உண்டோ ? என்ன, 'உண்டு' என்று திருவுள்ளம்பற்றி, இதற்கு மூன்றுவகையாக விடை அருளிச்செய்கிறார். 'ஈசுவரனுடைய விபூதியானது' என்று தொடங்கும் வாக்கியம், முதல் விடை. 'இரண்டு விபூதிகளும்' என்று தொடங்கும் வாக்கியம், இரண்டாவது விடை. 'காதலனைப் பிரிந்து' என்று தொடங்கும் வாக்கியம், மூன்றாவது விடை. விபூதி - உலகம். பரிசில் - உபகாரம். மிதுனம் - இரண்டு ; பெருமாளும் பிராட்டியும்.

3. இருவர்க்கும் சேஷமானால், பிராட்டியார் கொடுக்கலாமே ஒழிய, இவர் கொடுக்கலாமோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்த நிலை பிறந்தால்' என்று தொடங்கி. அந்த நிலை - பிராட்டி நிலை.

4. "ஆளீரோ" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி.

5. "பொன்னுலகு" என்ற பதத்துக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பிரகிருதி சம்பந்தம்' என்று தொடங்கி. 'இங்கே இருந்தே' என்றது, இங்கே இருக்கச்செய்தேயும் என்றபடி.

6. இப்படி இவள் கொடுத்தது போன்று, பெருமாளும் பெரியவுடையார்க்குக் கொடுத்தார் என்றுகொண்டு, அவரைக்காட்டிலும் இவளுக்கு வாசி அருளிச்செய்கிறார் 'பிரகிருதியோடே' என்று தொடங்கி, 'பிரகிருதியோடே கொடுப்பார்' என்றது, ஆழ்வாரை. 'அறுத்துக்கொடுப்பார்' என்றது, பெருமாளை.

ரும் பிரகிருதி சம்பந்தத்தை அறுத்துக்கொடுப்பாருமாய் இருக்கிறபடி. [1]ஒருவரை ஒருவர் பிரிந்து துழாவுகிற சமயத்திலே கொடுக்கை இருவர்க்கும் ஒக்கும்.[2]சேர்க்கைக்காக உடம்பு இழப்பாரும் உடம்போடே கூடி நின்று சேரவிடுவாருமாய் அன்றோ இவர்கள் இருப்பது. உங்கள் உலகமும் நான் பட்டது படவேணுமோ? என்பாள் '**ஆளீரோ**' என்கிறாள். [3] காதலனைப் பிரிந்துசேர்ப்பாரைத் தேடித்திரிகிற இவள், சேர்ப்பிப்பார்க்கு இரண்டு உலகங்களையும் கொடுக்கிறாள் அன்றோ, அவனை நினைத்திருந்த கனம். [4] கலந்தபோது தன்னுடைமையையும் தன்னையும் இவளுக்கு ஆக்கிப் பிரிந்தபோது மாறுவான் ஒரு புல்லியனோடு அன்றே இவள் கலந்தது. [5] தான் இல்லாத சமயத்திலும் இவள் தான் இப்படி இரண்டு உலகங்களையும் இஷ்ட விநியோகார்ஹமாக்கும்படி அன்றோ, அவன் தன்னையும் தன்னுடைமையையும் இவளுக்கு ஆக்கிவைத்தபடி.

[6]**அருளாளப்பெருமாள் எம்பெருமானார்** கோவிலே, பிள்ளையுறங்காவில்லிதாசரைக்கொண்டு ஆழ்வான் புக, 'ஆழ்வான்

---

1. கொடுப்பதில் வாசி இருப்பதைப் போன்று, கொடுக்கும் காலத்திற்கும் வாசி உண்டோ? என்ன, 'ஒருவரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். துழாவுகிற - தடுமாறுகிற.

2. இவர்கள் இப்படிக் கொடுக்கைக்குக் காரணம் யாது என்ன? அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சேர்க்கைக்காக' என்று தொடங்கி. என்றது, பெரியவுடையார் சேர்க்கைக்காக, உடம்பை இழக்கையாலே அதனை அறுத்துக் கொடுத்தார். இப்பறவைகள் உடம்போடே நின்று சேரவிடுகையாலே அதனோடே கொடுக்கிறாள் என்றபடி. இவர்கள் - பறவைகளும், பெரியவுடையாரும்.

3. ஈசுவரனுக்குரிய உலகத்தை இவள் கொடுப்பதற்குப் பிராப்தி ஏது? என்ற வினாவிற்கு மூன்றாவதாகக் கூறும் விடையை அருளிச்செய்கிறார் 'காதலனைப் பிரிந்து' என்று தொடங்கி. 'நினைத்திருந்த கனம்' என்றது, கலந்தபோது தன்னையும் தன்னுடைமையையும் கொடுத்ததை நினைத்தமையாலுண்டான கனம் என்றபடி.

4. கலக்குங் காலத்தில் சொன்னதைக் கொண்டு கொடுக்கலாமோ? என்ன, 'கலந்தபோது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. ஆனாலும், கொடுக்கும்போது அவன் இருக்க வேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தான் இல்லாத சமயத்திலும்' என்று தொடங்கி.

6. தன்னையும் தன்னுடைமையையும் இவர் இட்ட வழக்கு ஆக்கி இவர்க்கு அவன்பரதந்திரனாயிருக்கையாலே, இவர் கொடுக்கலாம்என்னுமதனை ஓர் ஐதிஹ்யமுகத்தால் விளக்குகிறார் 'அருளாளப்பெருமாள் எம்பெருமானார்' என்று தொடங்கி. அருளாளப் பெருமாள் எம்பெருமானார், பிள்ளையுறங்காவில்லிதாசர், ஆழ்வான் இம்மூன்று பெரியார்களும், எம்பெருமானார்க்கு மாணாக்கர்கள். ஆழ்வான் - கூரத்தாழ்வார். 'ஆழ்வான் செய்த நெஞ்சாறல்' என்றது,

செய்த நெஞ்சாறல் ஆறுவது ஆளவந்தார் ஸ்ரீபாதத்து ஏறப் போனால் அன்றோ' என்ற வார்த்தையை நினைப்பது. பொன்னுலகு ஆளீரோ புவனிமுழுது ஆளீரோ-[1]ஒருவில் எருதுகளைப் போன்று இரண்டு உலகங்களும் தன்னைச் சேர்ப்பார்க்கு என்று இருக்கிறாள். ஆளீரோ-[2]தன்னுடைமை ஒருவர் பண்ணிக்கொடுக்க வேண்டாதிருக்கிறபடி. [3]"என்னாலே இவனுக்கு அபயம் கொடுக்கப்பட்டது" என்றாரே அன்றோ பெருமாள். அப்படியே அவற்றுக்கும் 'தூதுபோக' என்று முகங்காட்டின போதே கொடுத்தற்றது. [4]அவன் காரியம்செய்கிற இவற்றுக்கு அவனை அறிவித்துக் கொடுக்கவேண்டாவே அன்றோ. [5]இவள் தானும் அவன் காரியம் அன்றோ செய்கிறது. [6]இவை தூது போகவே தான் உளளாம்; தான் உளளாகவே உலகத்தோடு

---

கூரத்தாழ்வார்க்குப் பரமபதத்தைக் கொடுக்கும் சக்தி இருந்தும், அருளாளப் பெருமாள் எம்பெருமானார்க்கு அதனைக் கொடாமல், அவர் படும் துன்பத்தை அவர் கண்டுகொண்டிருந்தமையால் வந்த மனோதுக்கம் என்றபடி. தம்முடைய ஆசாரியரான எம்பெருமானார் இங்கே எழுந்தருளியிருப்பதனால், 'ஆளவந்தார் ஸ்ரீ பாதத்து ஏறப்போனால்' என்கிறார். ஆளவந்தார் ஸ்ரீ பாதத்து ஏறப்போதலாவது, பரமபதத்தை அடைதல்.

1. இத் திருப்பாசுர வியாக்கியானத்தின் தொடக்கத்தில் 'ஈசுவரனுடைய விபூதியானது' என்று தொடங்கி அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'ஒரு வில் எருதுகளைப்போன்று' என்று தொடங்கி. என்றது, வில்லும் எருதுகளும் சீதாபிராட்டிக்கும் நப்பின்னைப்பிராட்டிக்கும் கன்யாசுல்கமானாற்போலே, இரண்டு உலகங்களும் சேர்ப்பார்க்குச் சுல்கம் என்று இருக்கிறாள் என்றபடி. சுல்கம் - பணமுடிப்பு.

2. 'ஆளீரோ' என்கைக்கு, எங்களுக்கு நீ கொடுத்தாயோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன்னுடைமை' என்று தொடங்கி.

3. அதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என்னாலே' என்று தொடங்கி. "தத்தம் அஸ்ய அபயம் மயா" என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 34. என்றது, "மற்றொரு பொருள் உளதென்னின் மாறிலாக் கொற்றவ! சரண்" என்ற போதே பெருமாளால் கொடுக்கப்பட்டது என்றபடி.

4. 'இரண்டு விபூதிகளும் ஒரு மிதுனத்துக்கு அடிமை' என்று முன்பு கூறிய இரண்டாவது சமாதானத்தில், 'அவனுக்கும் அடிமை' என்பது போதருகின்றதன்றோ? அங்ஙனமிருக்க, அவனுக்குத் தெரிவிக்காமல் கொடுக்கலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் காரியம்' என்று தொடங்கி.

5. நன்று; தன் காரியமாக அன்றோ தூதுபோகச் சொல்வது; அவன் காரியமோ இது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் தானும்' என்று தொடங்கி.

6. அது எப்படி? என்ன, 'இவை தூது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

கூடிய எம்பெருமான் உளனும். [1]இனி, இவள் தன் படுக்கைப் பற்றை அன்றோ கொடுக்கிறதும். ஆளீரோ-உங்கள் காரியமே செய்யவொண்ணாது : என்காரியமும் செய்யவேணும். இவள்காரியம் செய்கையாவது, இவற்றை ஆளுகை அன்றோ.'இவள்தான் உபயவிபூதியையும் கொடாநின்றாளாகில், அவன் வந்தால் தானும் அவனும் எங்கே இருப்பது?' என்ன, 'இக் குருவி காட்டின இடத்தே' என்று **அனந்தாழ்வான்** அருளிச்செய்வர்.

பொன்னுலகு ஆளீரோ புவனிமுழுது ஆளீரோ-[2]கைப் பட்டதனைக் கொடுத்தன்றோ மற்றொன்று தேடிக்கொடுப்பது. [3]தனக்கு ஆக்கின அடைவே கொடுக்கிறாள்.[4]நித்தியவிபூதியைக் கொடுத்தே அன்றோ லீலாவிபூதியைக் கொடுத்தது; [5]"அயர் வறும் அமரர்கள் அதிபதி" என்ற பின்பேயன்றோ, "இலன் அது உடையன் இது" என்று லீலாவிபூதியோகம் சொல்லிற்று.[6]இங்கே இருந்தாலும் ஞானம்பிறந்தால் அணித்தாகத் தோற்றுவது அவ்விடம்அன்றோ: [6]"அக்கரை என்னும் அனத்தக்கடலுள் அழுந்தி உன்பேரருளால்,இக்கரைஏறி இளைத்து" என்று அது இக்கரையாகவும், இது அக்கரையாகவும்

---

1. அவனுக்குத் தெரிவிக்காமல் கொடுக்கலாமோ? என்பதற்கே வேறும் ஒருவகையில் விடை அருளிச்செய்கிறார் 'இனி, இவள் தன்' என்று தொடங்கி. "என்று இவர் மூவர் ஆளும் உலகமும் மூன்றே" (திருவாய். 1. 9 : 4.) என்றதனைத் திருவுள்ளம்பற்றிப் 'படுக்கைப்பற்று' என்கிறார். படுக்கைப்பற்று - சீதனம்.

2. முதல் முன்னம் தான் இருந்த உலகத்தைக் கொடாமல், முற்படப் "பொன்னுலகாளீரோ" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'கைப்பட்டதனை' என்று தொடங்கி.

3. 'கைப்பட்டதனை' என்று மேலே கூறியதனை மூன்று வகையாக விளக்குகிறார். முதல்வகை, 'தனக்கு ஆக்கின' என்று தொடங்கும் வாக்கியம்.

4. தனக்கு ஆக்கின அடைவு யாது? என்ன, 'நித்திய விபூதியை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. 'அயர்வறும்' என்பது, திருவாய். 1. 1 : 1. 'இலன் அது' என்பது, 1. 1 : 3.

6. இரண்டாம் வகையை அருளிச்செய்கிறார் 'இங்கே இருந்தாலும்' என்று தொடங்கி. அவ்விடம் அணித்தாகத் தோற்றியதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அக்கரை' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திரு. 5. 3 : 7. அது - பரமபதம்.

சொல்லாநின்றார்கள் அன்றோ,[1] "மாகவைகுந்தம்காண்பதற்கு என்மனம், ஏகம் எண்ணும்" என்றே அன்றோ இருப்பது. [2]பிராப்தி தசையிலும் முற்பட்டிருப்பது அவ்விடமே அன்றோ. [3]அவன் உடைமை என்னும் தன்மையாலே ஒருகால் உத்தேசியமாமது அன்றோ இவ்விடம். [4]"முக்தன் ஜனங்களின் மத்தியில் இருந்த இந்தச் சரீரத்தை நினைப்பதில்லை" என்னுநிற்கச் செய்தேயும், அவனுடைய செல்வத்தில் குறைஅநுபவிக்க ஒண்ணாது என்று அவன் உடைமை என்னும் தன்மையாலே ஒருகால் பற்றத்தக்கது என்ற எண்ணம்உண்டு இத்தனை அன்றோ. [5]இல்லையாகில், வேறு ஒருவகையில் எண்ணம் உண்டாகில் 'புவனி முழுதாளீரோ!' என்று, கட்டடங்க உத்தேஸ்யமாய்த் தோற்றாதே அன்றோ. பொன்னுலகு ஆளீரோ புவனி முழுது ஆளீரோ- [6]அடிமைக்கு அடைத்து ஏற்றலாயன்றோ இவ்விடந் தான் இருப்பது; அவ்விடம் அடிமையால் அல்லது செல்லாத இடமாய் அன்றோ இருப்பது. அன்றிக்கே, [7]தூதுபோனாரது பரமபதம், அது உடையாரது லீலாவிபூதி என்னுதலுமாம்.

புவனிமுழுது ஆளீரோ-உத்தேசியமான நித்தியவிபூதியைக் கொடுத்தவள், தியாச்சியமான லீலாவிபூதியைக் கொடுப்பான்

---

1. அங்ஙனம் அணித்தாகத் தோற்றுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'மாகவைகுந்தம்' என்று தொடங்கி. இது, திருவாய். 9. 3 : 7. என்றது, பேற்றினைப் பெறும் விரைவாலே எப்போதும் அவ்விடத்தினையே நினைத்துக்கொண்டிருக்கையாலே அது அணித்தாய்த் தோற்றும் என்றபடி.

2. மூன்றாம் வகையை அருளிச்செய்கிறார் 'பிராப்தி தசையிலும்' என்று தொடங்கி.

3. பிராப்தி தசையில் இவ்விடம் உத்தேசியம் அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் உடைமை' என்று தொடங்கி.

4. 'ஒருகால்' என்கிறது என்? எப்பொழுதும் உத்தேசியமானாலோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முக்தன்' என்று தொடங்கி. "நோபஜநம் ஸ்மரந் இதம் சரீரம்" என்பது, சாந்தோக்யம். 8. 12 : 3.

5. 'அவன் உடைமை என்னும் தன்மையால் உத்தேசியம்' என்பது என்? இயல்பாகவே உத்தேசியம் என்றாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இல்லையாகில்' என்று தொடங்கி. "முழுது" என்றதனைத் திருவுள்ளம்பற்றிக் 'கட்டடங்க' என்கிறார்.

6. ஆக, 'கைப்பட்டதனை முந்தறக் கொடுக்கிறாள்' என்பதற்கு, இப்படி மூன்று வகையாகக் காரணத்தை அருளிச்செய்து, நான்காவதாக வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'அடிமைக்கு' என்று தொடங்கி. 'அடைத்து ஏற்றல்' என்றது, இங்கேயுள்ள மேட்டுமடை, விரோதி, ஆகந்துகம் என்னும் இவற்றைத் திருவுள்ளம்பற்றி.

7. 'தூதுபோனாரது பரமபதம்' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, பிரதானத்தைக் கொடுத்தால், அப்ரதானம் தன்னடையே அவற்றிற்கு அதீனமாம் என்பது.

என்? என்னில், இவைசெய்கிற உபகாரத்தை நினைத்து, 'இன்னது கொடுப்போம்' என்று அறியாமல் கலங்கி. [1]பண்டு கலங்கினாரும் இப்படியே செய்தார்கள்: [2]"திரும்புதலில்லாதவர்களுக்கும் பூமிதானஞ்செய்தவர்களுக்கும் எந்தஎந்த கதிகளுண்டோ அந்தஅந்த மேலானவுலகங்களை என்னால் நீவிர் அநுமதிக்கப்பட்டவராய் அடைவீராக" என்று சொன்னார்கள். [3]பிரீதி அளவுபட்டிருக்கிலன்றோ தெளிந்திருப்பது. [4]"வெள்ளி என்ன, தங்கம் என்ன, பலவிதமான இரத்தினங்கள் என்ன, மூன்று உலகங்களின் இராச்சியம் என்ன, ஆகிய இவைகள் எல்லாம், நீ பேசிய இனிய வார்த்தைகளுக்குத் தக்கவையல்ல" என்று கலங்கினாள் அன்றோ. [5] இருவரும் கொடுக்கலாம்படி ஒரு மிதுனத்துக்கு அடிமையாக அன்றோ உபயவிபூதியும் இருப்பது.

நல் நலம் புள் இனங்காள்-[6]அவனிலும் உங்களுக்கு உண்டான நீர்மையில் ஏற்றம் இருந்தபடி என்? [7]இவ்வளவில் ஆள்

---

1. இப்படிக் கலங்கிக் கொடுத்த பேர் உளரோ? என்ன, 'உளர்' என்று அதற்கு இரண்டு உதாரணம் காட்டுகிறார் 'பண்டு' என்று தொடங்கி.

2. "யாகதிః யஜ்ஞஶீலாநாம் ஆஹிதாக்நேః ச யா கதிః
அபராவர்த்திநாம் யாச யாச பூமிப்ரதாயிநாம்
மயா த்வம் ஸமநுஜ்ஞாதః கச்சலோகாந் அநுத்தமாந்"
என்பது, ஸ்ரீராமா. ஆரண்ய. 68 : 29, 30. பெரிய உடையாரைக் குறித்துப் பெருமாள் அருளிச்செய்தது.

3. இப்படிக் கலங்குகைக்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரீதி' என்று தொடங்கி.

4. "ஹிரண்யம்வா ஸுவர்ணம்வா ரத்நாநி......அர்ஹதி பாஷிதம்" என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 20. இது, இராவணனைக் கொன்றபின் வந்து வெற்றியைக் கூறிய திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. இச்சுலோகத்தில், "திரிஷு லோகேஷு ராஜ்யம்" என்றதிலே, வெள்ளி முதலானவை அடங்கியிருக்கவும், பிரித்துச் சொன்னது கலக்கத்தின் காரியம் என்றபடி. கம்பராமாயணம் யுத்தகாண்டம் மீட்சிப்படலம் 20-முதல் 29-முடியவுள்ள செய்யுட்களைக் காணல் தகும்.

5. மூன்று உலகங்களையும் கொடுப்பதற்கு இவளுக்குப் பிராப்தி உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இருவரும்' என்று தொடங்கி. மிதுனம் - இரட்டை; இங்கே, பெருமாளும் பிராட்டியும்.

6. "நலம்" என்பதற்கு, கிருபை, கொடை, குணங்களின் தொகுதி, சிநேகம் என நான்குபொருள் அருளிச்செய்கிறார். 'கிருபை' என்ற பொருளில், "நல்" என்ற அடைமொழியால் சர்வேசுவரனுடைய கிருபையைப் பிரிக்கிறது என்கிறார் 'அவனிலும்' என்று தொடங்கி.

7. அவன் கிருபையைக் காட்டிலும் எங்கள் கிருபைக்கு ஏற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வளவில்' என்று தொடங்கி. 'ஆள் இட்டு அழைக்கும்படி' என்றது, இளையபெருமாளை இட்டு மஹாராஜரை அழைப்பித்தாற்போலே அழைப்பிக்கும்படி இராதே என்றபடி.

இட்டு அழைக்கும்படி கடக்க இராதே நீங்கள் முன்னம் கிட்ட நின்று முகங்காட்டப் பெறுவதே! [1]உங்கள்படி இருந்தபடி கண்டேனுக்கு எல்லாச் செல்வங்களையும் எனக்குத் தந்து தூது போம்படியாய் இருந்ததே! [2]'அவனுக்குக் குணங்களில் ஏற்றம் ஆஶ்ரயத்தாலே' என்று இருந்தோம்; அது உங்கள் பக்கலிலே அன்றோ என்கிறாள்.

[3]"பிரதாபம் என்ன, பொறுமை என்ன, ஒளி என்ன, ஒரு நிலை என்ன, வணக்கம் என்ன, ஆகிய இவைகளும், மற்றும் பலவான குணங்களும் உன்னிடத்தில்தான் விளங்குகின்றன; இதில் ஐயமில்லை" என்னப்படுமவனும் புறம்பானுன், உங்களைப் பார்க்க. [4]உங்கள் நீர்மை அறியாதே, என் செல்லாமையாலே 'அதனைக்கொள், இதனைக்கொள்' என்று நலிந்தேன் அன்றோ! [5]'உங்கள் தரத்துக்கு அது ஓர் அறுகும் தாளிப்பூவும் அன்றோ' என்பராம் **பிள்ளையமுதனர்.** [6]உங்களுக்கு நான் சில செய்தேனே! வெறும் உங்கள் நீர்மையாலே செய்தது அன்றோ. [7]பாண்

---

1. 'கொடை' என்ற பொருளை அருளிச்செய்கிறார் 'உங்கள்படி' என்று தொடங்கி.

2. 'குணங்களின் தொகுதி' என்ற பொருளை அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி "நல்" என்ற அடைமொழி, ஈசுவரகுணத்தையும், திருவடி குணத்தையும் பிரிக்கிறது என்கிறார் 'அவனுக்கு' என்று தொடங்கியும், 'பிரதாபம் என்ன' என்று தொடங்கியும். 'ஆஶ்ரயத்தாலே' என்றது, சர்வேசுவரன் ஆஶ்ரயம் ஆகையாலே என்றபடி.

3. "தேஜஃ க்ஷமா த்ருதிஃ ஸ்தைர்யம் விநீதத்வம் ந ஸம்ஶயஃ
ஏதேச அந்யேச பஹவோ குணாஃ த்வய்யேவ ஶோபநாஃ"

என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 28. இராவணனைக் கொன்றபின் வந்து சேர்ந்த திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. என்னப்படுமவன் - திருவடி.

அறிவு மீதே உருவீதே ஆற்ற லீதே அரும்புலத்தின்
செறிவு மீதே செயலீதே தேற்ற மீதே தேற்றத்தின்
நெறியு மீதே நினைவீதே நீதி யீதே நினக்கென்றால்
வெறிய ரன்றோ குணங்களால் விரிஞ்சன் முதலா மேலானோர்.

என்பது, கம்பராமாயணம். உருக்காட்டுப்படலம். 111.

4. "நலம்" என்பதற்கு, கிருபைபரமாக மேலே அருளிச்செய்த அர்த்தத்தை விவரணம் செய்கிறார் 'உங்கள் நீர்மை' என்று தொடங்கி.

5. 'இரண்டு உலகங்களையும் ஆளுங்கோள்' என்றது, நல்லதன்றோ, நலிவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உங்கள் தரத்துக்கு' என்று தொடங்கி. அறுகு - அறுகம்புல். தாளிப்பூ - நீர்த்தாளிப்பூ.

6. மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'உங்களுக்கு' என்று தொடங்கி.

7. "நலம்" என்பதற்கு, 'சிநேகம்' என்ற பொருளை அருளிச்செய்கிறார் 'பாண்டவர்களுக்கு' என்று தொடங்கி.

டவர்களுக்குத் தூதுபோன கிருஷ்ணன்படியும், ஆளவந்தார்க்குப் பச்சையிட்ட [1]மணக்கால் நம்பிபடியும் போலே இருந்ததே உங்கள்படி! நன்னலம் புள்ளினங்காள் - [2]அழகிய நீர்மையையுடைய புள்ளினங்காள் என்னுதல், மிக்க சிநேகத்தையுடைய புள்ளினங்காள் என்னுதல்.

[3]'இருவருமான சேர்த்தி ஒழிய வேறும் ஒன்றைத் தரவோ?' என்று சிரித்திருந்தன. [4]"பகைவர்களைக் கொன்றவரும் வெற்றியோடு கூடியவரும் இப்படி இருப்பவருமான ஸ்ரீராமபிரானைப் பார்க்கிறேன் என்பது யாது ஒன்று உண்டோ, பார்க்கிற அந்தப் பிரயோஜனத்தினால் தேவராஜ்யம்முதலான மேன்மைகள் என்னால் அடையப்பட்டன" என்றான் திருவடி. நல் நலம் - [5]"அஹம்ச - 'கணநேரமும் சீதையைப் பிரிந்து பிழைத்திருக்கமாட்டேன்' என்னும் யானும், ரகுவம்ச: ச - என்னை ஒழிய ஜீவியாதபடி இருக்கிற பிள்ளை பரதனும், மஹா

1. மணக்கால் நம்பி-ஆளவந்தாருடைய ஆசாரியர். 'பச்சை இட்ட' என்றது, ஸ்ரீ ஆளவந்தாருக்குப் பிரியமான தூதுவளை கீரையை நாடோறும் கொண்டு வந்து கொடுத்து உபசரித்ததனைக் குறித்தபடி.

2. "நலம்" என்பதற்கு, சிநேகம் என்றும், கிருபை என்றும் கூறிய பொருள்களை விவரிக்கிறார் 'அழகிய நீர்மையையுடைய' என்று தொடங்கி.

3. சிநேகம் என்ற பொருளில் "நன்னலம்" என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இருவருமான' என்று தொடங்கி.

4. அப்படி இருவருமான சேர்த்தியே உத்தேசியமாய் 'வேறு ஒன்று வேண்டா' என்று சொன்னபேர் உளரோ? என்ன, 'உளர்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பகைவர்களைக் கொன்றவரும்' என்று தொடங்கி.

"அர்த்ததஶ்ச மயா ப்ராப்தா தேவராஜ்யாதய: குணா:
ஹதசத்ரும் விஜயிநம் ராமம் பஶ்யாமி ஸுஸ்திதம்"

என்பது, ஸ்ரீராமா. யுத். 116: 24. பிராட்டியைப் பார்த்துத் திருவடி கூறியது.

5. நலம் என்பதற்கு, கிருபை என்ற பொருளில், இப்படிப் போற்றிய பேர் உளரோ? என்ன, 'உளர்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அஹம்ச' என்று தொடங்கி.

"அஹம்ச ரகுவம்ஶ: ச லக்ஷ்மணஶ்ச மஹாபல:
வைதேஹ்யா தர்ஶநேந அத்ய தர்மத: பரிரக்ஷிதா:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 1 : 11. இது, திருவடியைப் பார்த்துப் பெருமாள் கூறியது. உழைக்கும்படி - தடுமாறும்படி.

தீவினை யாம்பல செய்யத் தீர்விலா
வீவினை முறைமுறை விளைய மெய்ம்மையாய்!
நீஇவை துடைத்துநின் றளிக்க நேர்ந்ததால்
ஆயினும் அன்பினுய் யான்செய் மாதவம்.

என்பது, கம்பராமாயணம். மீட்சிப்படலம். 330.

பலஃ லக்ஷ்மணஶ்ச-இருவர்க்கும் உஜ்ஜீவனத்திற்கு ஏதுவான பிள்ளை இலக்குமணனும், வைதேஹ்யாஃ - இவைஎல்லாம் தரும் என்கைக்காக, தர்மதஃ பரிரக்ஷிதாஃ - நீ செய்ததற்கு ஒருபிரதி உபகாரம் செய்யலாமோ? வெறும் அறவனுகையாலே செய்தாயத்தனை;" 'உனக்கு என்செய்தேன்' என்று காலம் என்னும் ஒருபொருள் உள்ளதனையும் உழைக்கும்படி அன்றோ நீ செய்தது என்றார் பெருமாள். புள் - [1]இந் நீர்மையில் ஏற்றமுடைய உங்களுக்கே பறப்பதற்குச் சாதனமான பக்ஷபாதம் உண்டாகப் பெறுவதே! [2]பிரிந்தாரைச் சேர்க்கை திர்யக்குக்களின் காரியம் என்று இருக்கிறாள், இராமாவதாரத்தில் வாசனையாலே. [3]"குற்றம் செய்யாதார் யாவர்" என்பாரும்கூட உண்டாயிருக்கிறபடியைத் தெரிவிப்பாள் '**இனங்காள்**' என்கிறாள். அன்றிக்கே, உடலும் உயிரும்கூடக் கிடக்கப் பெறுவதே! என்பாள் '**இனங்காள்**' என்கிறாள் என்னுதல். [4] "ஓ இராகவனே! செல்ல அரிதான காட்டிற்கு உமக்கு முன்பு செல்வேன்" என்று முன் நடப்பாரும்கூட இருக்கிறபடி. அன்றிக்கே, [5]"எல்லாத் திக்குக்களிலும் தேடுகின்றார்கள்" என்கிறபடியே, எல்லாத் திக்குக்களிலும் போகவிடலாம்படி திரள் இருக்கிறபடி என்றுமாம்.

---

1. "புள்" என்றதற்கு, கருத்து அருளிச்செய்கிறார் 'இந்நீர்மையில்' என்று தொடங்கி.

2. வார்த்தை சொல்லமாட்டாத பறவைகள் சேர்க்கக்கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரிந்தாரை' என்று தொடங்கி.

3. "இனம்" என்பதற்கு, இங்கு, இருவர் என்றும், கூட்டம் என்றும் பொருள் அருளிச்செய்கிறார். இருவர் என்ற பொருளில், தனக்குப் புருஷகாரம் உண்டு என்பதும், தன்னைப்போல் பிரிந்திருத்தலின்றி ஒன்றனோடு ஒன்று கூடியிருக்கப் பெறுவதே! என்பதும் கருத்து. இவ்விருவகையான கருத்துக்களையும் முறையே அருளிச்செய்கிறார் 'குற்றம் செய்யாதார்' என்று தொடங்கி. "நகஶ்சித் நாபராத்யதி" என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 44.

4. அதனை விவரணம் செய்கிறார் 'ஓ இராகவனே!' என்று தொடங்கி.
"அக்ரதஃதே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குஶகண்டகாந்"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 27 : 9. இது, பெருமாளைப் பார்த்துப் பிராட்டி கூறியது.

5. "இனம்" என்பதற்கு, கூட்டம் என்ற பொருளில் பாவம் அருளிச்செய்கிறார் 'எல்லாத் திக்குக்களிலும்' என்று தொடங்கி.
"திக்ஷு ஸர்வாஸு மார்கந்தே ஸேய மாஸாதிதா மயா"
என்பது, ஸ்ரீராமா. சுந். 30 : 3.

விணையாட்டியேன் - [1]கைப்புகுந்தவனைக் கைகழிய விட்டு உங்கள் காலிலே விழும்படியான பாவத்தைச் செய்துள்ளேன். [2] உங்களுக்குக் குணங்கள் சொரூபமானாற்போலே யன்றோ எனக்குப் பாவம் சொரூபமானபடி. நான் - [3]"தர்மத்தால் காப்பாற்றப்பட்டோம்" என்று இருப்பான் அவன் கண்டீர்! நான் இரந்தேன் - அத் தலை இத் தலையானபடி. [4]ஸ்ரீஜனகராஜன் திருமகளான வேண்டற்பாட்டோடே அன்றோதான் தூதுவிடுகிறது இவள்! இரந்தேன் - [5]மேலே, அவன் திருவடிகளிலே நான்குமுறை சரணம் புக்கார்; இப்போது அவன் அடியார்கள் பக்கலிலே சரணம் புகுகிறார்: [6]அது தப்பினும் இது தப்பாதே அன்றோ. [7]இதற்கு வேறு விலக்கடி இல்லையே. [8]பிரார்த்தித்தலாகிற புத்தியன்றோ சரணாகதி ஆகிறது. [9]தப்புதல் இல்லாத உபாயத்தைப் பற்றுகிறாள். இனங்காள் இரந்தேன் -

---

1. "இரந்தேன்" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'கைப்புகுந்தவனை' என்று தொடங்கி.

2. "நன்னலம்" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'உங்களுக்கு' என்று தொடங்கி.

3. "நான்" என்றதற்கு, அவனினின்றும் வேறுபடுத்திப் பொருள் அருளிச்செய்கிறார் 'தர்மத்தால்' என்று தொடங்கி. "தர்மதః பரிரக்ஷிதாః" என்பது. இதனை விவரணம் செய்கிறார் 'அத்தலை இத்தலையானபடி' என்று.

4. "நான்" என்று தன்னைப் போரப்பொலிய அபிமானிக்கிறது, ஸ்ரீ ஜனகமஹாராஜன் திருமகளான பெருமையை நினைத்தன்றோ என்று வியாக்யாதா ஈடுபடுகிறார் 'ஸ்ரீ ஜனகராஜன்' என்று தொடங்கி.

5. "இரந்தேன்" என்பதற்குச் சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறார் 'மேலே' என்று தொடங்கி. "வைகல் பூங்கழிவாய்" என்ற திருவாய்மொழியின் முன்னுரையையும், அதன் குறிப்புரையையும் காண்க.

6. அதனைக் காட்டிலும் இதற்கு ஏற்றம் யாது? என்ன, 'அது தப்பினும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. தப்பாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இதற்கு' என்று தொடங்கி. என்றது, பகவத் விஷயத்துக்குச் சுவாதந்திரியமாகிற விலக்கடி உண்டு; அடியார்களுக்கு அது இல்லை என்றபடி. விலக்கடி - தடை.

8. "இரந்தேன்" என்றால், சரணாகதியைக் காட்டுமோ? என்ன, 'பிரார்த்தித்தலாகிற' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

9. பக்தி முதலான உபாயங்களைவிட்டு, பிரபத்தியில் இழிகைக்குக் காரணம், பிரபத்தி அமோகமாயிருக்கையாலே என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் 'தப்புதல் இல்லாத' என்று தொடங்கி.

[1]மிதுனமாயிருப்பார்க்கு இரங்தார்வாசி தெரியுமன்றே.[2]சரணாகதி செய்தவர்கட்குத் தன் உயிரைக் கொடுக்குமவையே. நல்[3] நலம் புள் இனங்களுக்கு அன்றியே படுகொலைக்காரர்க்கும் இரங்க வேண்டும்படி அன்றே என்னுடைய நிலை. நல் நலம் புள்ளினங்காள் இரங்தேன் - [4]சரணாகதி அடைதற்குஉரிய குணங்கள் உங்களிடம் குறைவற்றிருந்தபடி என்தான்! நான் இரங்தேன் - [5]அவன் அன்றே "சுக்கிரீவனைச் சரணமாக அடைந்தார்" என்று குரங்கின்காலில் முற்பட விழுந்தான்; பின்பே அன்றே இவள், [6]"என்னிடத்தில் அப்படி அருளைச் செய்யும்" என்றது. வினையாட்டியேன் நான் இரங்தேன்-[7]எல்லாம் கொடுத்தாலும் அவற்றுக்கு ஒன்றும் செய்ததாகத் தோற்றாதே பல்காட்டுகிறாள். [8]அவர்கள்செய்கிற உபகாரம் அளவுபட்

1. "இனங்காள்" என்று இருவரை விளித்து, "இரங்தேன்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'மிதுனமாய்' என்று தொடங்கி.

2. தெரிகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'சரணாகதி செய்தவர்கட்கு' என்று தொடங்கி.

3. "நன்னலப் புள்ளினங்காள்! இரங்தேன்" என்ன, அமைந்திருக்க, "வினையாட்டியேன்" என்று தன் குறைவினைச் சொல்லுகிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'நல்நலப் புள்ளினங்களுக்கு' என்று தொடங்கி.

4. இவள் செய்யும் சரணாகதிக்கு, இவைகள் தாம் தக்கவைகளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சரணாகதியடைதற்குரிய' என்று தொடங்கி. 'சரணாகதி அடைதற்குரிய குணங்கள்' என்றது, "நலம்" என்ற சொல், வாத்சல்யம் முதலிய குணங்களையும், "புள்" என்ற சொல், (இருசிறகு) ஞான அநுஷ்டானங்களையும், "இனம்" என்ற சொல், புருஷகாரத்தையும் கூறுகின்றன என்றபடி.

5. மேலே, 'அத்தலை இத்தலையானபடி' என்று கூறிய வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'அவன் அன்றே' என்று தொடங்கி.

"பிதாயஸ்ய புராஹி ஆஸீத் சரண்யஃ தர்மவத்ஸலஃ
தஸ்யபுத்ரஃ ஶரண்யஸ்ய ஸுக்ரீவம் ஶரணம்கதஃ"

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 4 : 19.

6. "ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா குரு தயாம் மயி"

என்பது, ஸ்ரீராமா. சுந். 40 : 3.

7. "பொன்னுலகாளீரோ" என்றதன்பின், "வினையாட்டியேன்" என்று தன்குறைவினைச் சொல்லுகையாலே போதரும் ஓர் அர்த்தவிசேடத்தை அருளிச்செய்கிறார் 'எல்லாம் கொடுத்தாலும்' என்று தொடங்கி.

8. பல் காட்டுவது என்? ஒத்ததான கைம்மாறு ஒன்றனைச் செய்யலாகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவர்கள் செய்கிற' என்று தொடங்கி.

டிருக்கில் அன்றோ ஒப்பாக ஒன்று தேடிக் கொடுக்கலாவது. [1]எல்லாம் கொடுத்தாலும் "பணிவிடை செய்யக்கடவன்; உலக முழுதினையும் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஆசாரியன் செய்த உபகாரத்திற்குக் கொஞ்சமும் ஒப்பாகமாட்டாது" என்று 'செய்தது போராது' என்னும் இதுவே அன்றோ நெஞ்சில் பட்டுக் கிடப்பது. [2]"அவருக்குத் துரோகம் செய்யக்கூடாது" என்னுமளவில் நிற்குமதன்றே; [3]"இவனுடைய உபகாரத்தை அறிந்தவனாய்" இருக்கவேண்டும்.

[4]அங்கு நின்றும் மீண்டாலன்றோ அதுதான் வேண்டுவது; என்றது, அவன் செய்த உபகாரத்தினின்றும் மீண்டாலன்றோ துரோகம்கூடாது என்று சொல்லவேண்டும் என்றபடி. இவை எல்லாம் சொல்லவேணுமோ? அவன்தான் வரும் சுபாவனாகில் அன்றோ நாங்கள் அறிவிப்பது? என்னில், என் பாவத்தாலே இழந்தேனாகத் தனைபோக்கி, அவன்படியைப் பார்த்தால் இழக்க வேணுமோ? என்கிறாள்: முன்உலகங்கள் எல்லாம் படைத்த முகில்வண்ணன் - [5]அழிந்தனவற்றை அடியே பிடித்து உண்டாக்குமவன் கண்டீர்! இத்தலையும் அழிந்தன்றோ கிடக்கிறது. [6]யார்பிரிவுக்குச் சளைத்துத் தளர்ந்து தூதுவிட, இவற்றை உண்

1. இதனால், அவைகள் பக்கல் இவளுக்குண்டான செய்ந்நன்றியறிவு பிரகாசிக்கிறது என்னுமதனைப் பிரமாண பூர்வகமாக அருளிச்செய்கிறார் 'எல்லாம் கொடுத்தாலும்' என்று தொடங்கி.

"யோ தத்யாத் பகவத்ஜ்ஞானம் குர்யாத் தர்மோபஸேசனம்
க்ருத்ஸ்நாம் வா ப்ருதிவீம் தத்யாத் ந தத்துல்யம் கதஞ்சந"
என்பது, பாரதம்,

2. இதனால், பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'அவருக்கு' என்று தொடங்கி.

"யஸ்மாத் தர்மாந் ஆசிநோதி ஸ ஆசார்ய:
தஸ்மை ந த்ருஹ்யேத் கதாசந"
என்பது, ஆபஸ்தம்ப தர்ம சூத்.

3. "க்ருதம் அஸ்ய ஜாநந்"
என்பது, பாரதம் உத்யோகபர். திருதராஷ்டிரனைப் பார்த்துச் சனத்சுஜாதர் கூறியது.

4. "முன்னுலகங்கள் எல்லாம்" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அங்கு நின்றும்' என்று தொடங்கி. 'மீண்டாலன்றோ' என்றது, போனகாரியத்தைச் செய்து அங்கு நின்றும் மீண்டால் அன்றோ என்றபடி.

5. அவன்படி யாது? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அழிந்தனவற்றை' என்று தொடங்கி.

6. "உலகம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'யார் பிரிவுக்கு' என்று தொடங்கி.

டாக்கிற்று? வெறும் தன் கிருபையாலே செய்தானித்தனை அன்றோ! [1]பண்டு இவனுக்கு ஆர்த்த ரக்ஷணம் செய்வதற்குத் தூது விடவேண்டா கண்டீர்![2] தண்ணீர் தறை என்ற வேறுபாடு பாராதே "பல பொருள்களாக ஆகக்கடவேன்" என்கிற சங்கல்பத்தாலே ஏற்கவே இவற்றை உண்டாக்கினவன். தரம் இட்டாலும் விட ஒண்ணாத வடிவு என்பாள் 'முகில்வண்ணன்' என்கிறாள். அன்றிக்கே, தன்பேறாகக் கொடுக்குமவன் என்னலுமாம். முகில்வண்ணன் கண்ணன் - [3]உலகத்திற்குக் காரணமாயிருக்குந் தன்மைக்கும் அவதாரத்துக்கும் அடியான ஔதார்யம் முதலான குணங்களைச் சொல்லுகிறது. [4]அன்றிக்கே, பிரகிருதி சம்பந்தம் இல்லாத திவ்ய திருமேனியோடே வந்து அவதரித்தபடியைச் சொல்லிற்றாகவுமாம். என் நலம் கொண்ட பிரான் - [5]இது ஒரு பழங்கிணறு கண்வாங்குகிறது என்? என்னுடைய எல்லாச்செல்வங்களையும் கவர்ந்த உபகாரன்; [6]உங்கள் காலிலே விழும்படி செய்தவன். இப்போது அகல இருந்தது ஒழியப் பண்டு செய்தவை எல்லாம் சால நன்று கண்டீர்!

---

1. "முன்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பண்டு இவனுக்கு' என்று தொடங்கி. ஆர்த்தரக்ஷணம் - துன்புறுகின்றவர்களைக் காத்தல்.

2. "எல்லாம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தண்ணீர் தறை' என்று தொடங்கி. "பஹுஸ்யாம்" என்பது, சுருதி.

3. "வண்ணன்" என்றதற்கு, கொடுக்குமவன் என்று பொருள் சொன்னதற்குச் சேர, "மூன்னுலகங்கள் எல்லாம் படைத்த" என்றதனோடும் கூட்டி, "கண்ணன்" என்ற பதத்துக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உலகத்திற்குக் காரணமாயிருக்கும்' என்று தொடங்கி.

4. "வண்ணன்" என்றதற்கு, வடிவு என்ற பொருளுக்குச் சேர, "கண்ணன்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

5. அவன் வருவான் என்பதற்கு, 'உலகத்தை எல்லாம் படைத்தவன்' என்று முன்புசெய்தது ஒன்றனைச் சொல்லவேண்டுமோ? என்னைத் தனக்கு ஆக்கினதே போராதோ 'அவன் வருவான்' என்று நிச்சயிப்பதற்கு? என்கிறாள் 'இது ஒரு பழங்கிணறு' என்று தொடங்கி. கண்வாங்குகை - தூர் எடுத்தல்.

6. அவனைப் பிரிந்து வருந்துகிற நிலையிலே 'உபகாரகன்' என்கிறவளுடைய மனோபாவத்தை இரண்டு வகையாக அருளிச்செய்கிறார் 'உங்கள் காலிலே' என்று தொடங்கியும், 'இப்போது' என்று தொடங்கியும். என்றது, உலகத்தார் தன்னை மறந்து உண்டு உடுத்துத் திரியாநிற்க எனக்குத் தன்பக்கல் பிராவண்யத்தை உண்டாக்கி, உங்கள் காலிலே விழச்செய்த உபகாரகன் என்கிறாள் என்பது, 'உங்கள் காலிலே' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து. இப்போது அகல இருந்தானேயாகிலும், உலகத்தைப் படைத்து, அவதரித்து என்னை வசீகரித்து என்னோடே கலந்து இப்படிப் பல உபகாரங்களைச்செய்தவன் என்பது, பின்வாக்கியத்துக்குக் கருத்து.

[1]எங்களோடு கலப்பதற்கு முன்பு போர நீர்மையுடையான்; இப்போதி வடிவழகே கண்டீர் உள்ளது. என் நலம் கொண்ட முகில்வண்ணன்-[2] அம் மேகம் பெய்யும் இடமாகாமல், முகக்கும் இடமானேன்....

தனக்கு என் நிலைமை - அவன் வருவானுகிலும், நாங்கள் சொல்லுவது ஏது? என்னில், 'என் நிலைமை' என்று தன் வடிவைக் காட்டுகிருள். [3]" இந்த எங்களுடைய சரீரத்தைப் பார்த்தருளவேண்டும்" என்னுமாறுபோலே. [4]என்னைக் கண்ட நீங்களே பாசுரமிட்டுச் சொல்லுமத்தனை.[5] உலகத்திற்குக் காரணனுயிருத்தல், அவதாரம், தன்பக்கல் செய்த விசேஷகடாக்ஷம், இவை எல்லாம் கண்ணழிவறச் சொன்னுள்; அவனுடைய குணங்களிலே மூழ்கின தன்படிகள் தன்னுலும் பேசப் போகிறதில்லை; தனக்கும் தன் தன்மை அறிவரியானைப் போலே. உரைத்து - [6]தனக்குங்கூட நிலமல்லாத தன்படியை இவை பாசுரமிட்டுச்சொல்லவற்றுகக்கொண்டிருக்கிருள்.[7] கரைமேலே நிற்கையாலே அவற்றுக்குச் சொல்லலாமன்றே. 'உரைத்துக் கொண்டு வாருங்கோள்' என்னுது ஒழிவான் என்? என்னில், ஈசுவரன் செயல் நமக்குப் பரமோ' என்று இருக்கையாலே;

1. 'இப்போது அகல இருந்தானேயாகிலும்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிருர் 'எங்களோடு கலப்பதற்கு' என்று தொடங்கி. கலப்பதற்கு முன்பு - கலந்து பிரிவதற்கு முன்பு.

2. "முகில் வண்ணன்" என்பதற்கு, ஒள்தார்யபரமாக அருளிச்செய்த பொருளைத் திருவுள்ளம்பற்றி வெறுப்பாக, ப்ாவம் அருளிச்செய்கிருர் 'அம் மேகம்' என்று தொடங்கி.

3. வடிவைக் காட்டினதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிருர் 'இந்த எங்களுடைய' என்று தொடங்கி. "ஏஹி பஶ்ய சரீராணி முநீநாம் பாவிதாத்மநாம்" என்பது, ஸ்ரீராமா. ஆரண். ஸ்ரீராமனைப் பார்த்து முனிவர்கள் கூறியது.

4. அவனுக்கு நாங்கள் சொல்ல வேண்டியது யாது? என்றதற்கு, வடிவைக் காட்டினுல் போதியதாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'என்னைக்கண்ட' என்று தொடங்கி.

5. நீங்களே பாசுரமிட்டுச் சொல்லுமத்தனை என்பது என்? தன்னுல் சொல்ல ஒண்ணுதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'உலகத்திற்குக் காரணனுயிருத்தல்' என்று தொடங்கி.

6. தன்னுலும் சொல்ல முடியாததனை இவற்ருல் சொல்லமுடியுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'தனக்குங்கூட' என்று தொடங்கி. என்றது, இவளுடைய எண்ணத்தின் விசேடம் இருக்கிறபடி என்பது கருத்து.

7. அதற்கே, வேறும் ஒரு பரிகாரம் அருளிச்செய்கிருர் 'கரைமேலே' என்று தொடங்கி. என்றது, தன்னைப்போன்று இவைகள் பகவத் குணங்களில் மூழ்காமையாலே சொல்லலாம் என்பது கருத்து.

[1]இவனுக்குப் பணி குறையை அறிவிக்கையே அன்றோ: மேல் உள்ளனஎல்லாம் அவன்பணி அன்றோ.என் நிலைமை உரைத்துப் பொன்னுலகு ஆளீரோ-[2]துயர ஒலி கேளாமல் ஜீவிக்கப் பாருங்கோள்! [3]சக்கரவர்த்தி பெருமாளை முடிசூட்டப் பாரித்த போது, இருடிகள் இராக்கதர்களாலே நோவுபடுகையாலே, இராச்சியம் திருவுள்ளத்தில் பொருந்தாமை புறப்பட்டுப் போனார் அன்றோ; அப்படியே, பெண்கொலையும் துயர ஒலியும் கேட்டால் இவை உபயவிபூதியையும் ஆளமாட்டா என்று இருக்கிறாள். (1)

## 631.

மையமர் வாள்நெடுங்கண் மங்கைமார் முன்புஎன் கைஇருந்து
நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ?
கையமர் சக்கரத்துஎன் கனிவாய்ப்பெரு மானைக் கண்டு
மெய்யமர் காதல் சொல்லிக் கிளிகாள்!விரைந் தோடிவந்தே.

**பொ - ரை :**—கிளிகாள்! திருக்கையிலே பொருந்தியிருக்கின்ற சக்கரத்தையும் கோவைக்கனி போன்ற திருவாயினையுமுடைய என் பெருமானைக் கண்டு திருமேனியிலே அணையவேண்டும்படியான காதலைச் சொல்லி விரைந்து ஓடி வந்து, மைபொருந்தியிருக்கின்ற வாள்போன்ற நீண்ட கண்களையுடைய பெண்களுக்கு முன்னே என்கையிலே தங்கியிருந்து, நெய்யோடுகூடிய இனிய உணவினைப் பாலோடுகூட நாள்தோறும் இருந்து உண்ணவேண்டும்.

**வி - கு :**—கிளிகாள்! பெருமானைக் கண்டு காதலைச் சொல்லி ஓடி வந்து என்கை இருந்து அடிசிலைப் பாலோடு மேவீர் என்க. 'மேவீரோ' என்பதிலுள்ள ஓகாரம் அசைநிலை.

---

1. ஆனால், செய்ய அடுப்பது யாது? என்ன, அதற்குச் சுவாபதேசப் பொருளில் விடை அருளிச்செய்கிறார் 'இவனுக்கு' என்று தொடங்கி.

2. "என் நிலைமை உரைத்துப் பொன்னுலகு ஆளீரோ" என்று, காரியம் செய்து சமைந்தால் கைக்கூலி கொடுப்பாரைப்போலே கூலி கொடுக்கிறாளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'துயரஒலி கேளாமல்' என்று தொடங்கி.

3. துயர ஒலி கேட்டால் ஆளமாட்டாதோ? என்ன, ஆளமாட்டாமையைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் 'சக்கரவர்த்தி' என்று தொடங்கி.

ஈடு:—இரண்டாம்பாட்டு. [1]சில கிளிகளைக் குறித்து என் ஆற்றாமையை அவனுக்கு அறிவித்து வந்து, நானும் என் தோழிமாரும் கொண்டாட அதனை அங்கீகரிக்கவேணும் என்கிறாள்.

[2]முதற்பாசுரத்தில், அவன்பதம் கொடுத்தாள்; அதற்கு மேலே ஒருபதம் தேடிக்கொடுக்கிறாள் இப்பாசுரத்தில். அவன் பதமாகிறது, உபயவிபூதியையும் கொடுக்கை அன்றோ; அதற்கு மேலான பதமாகிறது, அவனாலே விரும்பப்படும் தன்னைக் கொடுக்கை. தன்னைக் கொடுக்குமிடத்திலும், 'பின்னை முன்னே' என்னாதே, எல்லாரும் காணக் கைமேலே அன்றோ கொடுக்கப் புகுகிறது. மை அமர் வாள் நெடும் கண் மங்கைமார் முன்பு என் கைஇருந்து-[3]அவன்பாடு தரம்பெற்றாரைக்கொண்டாடுவாரைப்போலேயோ, என்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுவார் இருப்பது! [4]அந்தப்புரத்தில் வசிப்பவர் எல்லாரும் ஒருபடிப்பட்டிருக்கிறபடி: [5]ஒருகண் பார்வையாய் இருக்கிறபடி. [6]"தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்

1. "கிளிகாள்! மெய்யமர் காதல் சொல்லி, வந்து மங்கைமார் முன்பு" என்பன போன்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மேற்பாசுரத்தில் "பொன்னுலகாளீரோ" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றி, இந்தப் பாசுரத்திற்கு ஓர் ஏற்றம் அருளிச்செய்கிறார் 'முதற்பாசுரத்தில்' என்று தொடங்கி. அவன் பதமாவது, உபய விபூதிகட்கும் நாதனாக இருத்தல். "மங்கைமார் முன்பு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தன்னைக் கொடுக்குமிடத்திலும்' என்று தொடங்கி.

3. "மையமா வாள் நெடுங்கண் மங்கைமார்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன்பாடு' என்று தொடங்கி. 'அவன்பாடு தரம்பெற்றார்' என்றது, திருவடியை. 'கொண்டாடுவார்' என்றது, வானரங்களை. கொண்டாடுதலைக் கம்பராமாயணம் சுந்தரகாண்டம், திருவடி தொழுத படலத்தில் முதல் 6-செய்யுட்களில் காண்க. 'என்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுவார் இருப்பது' என்றது, இவள் கறுத்த கண்களையுடையவளாகையாலே, இவளோடு ஒப்புமையுடையவர்களாயிருப்பார்கள் என்றபடி. 'என்பாடு தரம்பெற்றார்' என்றது, கிளி முதலாயினவற்றை.

4. தன்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுகின்றவர்கட்கு ஏற்றம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்தப்புரத்தில்' என்று தொடங்கி.

5. ஒருபடிப் பட்டிருத்தலை விவரணம் செய்கிறார் 'ஒருகண் பார்வையாய்' என்று தொடங்கி. 'ஒருகண் பார்வையாய்' என்றது, எல்லாரும் கறுத்த கண்களையுடையவர்களாய் இருத்தலைக் குறித்தபடி. எல்லாரும் ஒரு கண்ணாலே பார்க்கலாம்படி இருப்பார்கள் என்பது வேறும் ஒருபொருள்.

6. எல்லார் கண்களும் இவள் கண்களைப்போன்று இருக்கக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தம்மையே' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 11. 3: 5.

மையே ஒக்க அருள்செய்வர்" என்கிறபடியே, இவளும் தன்னோடு எல்லாவகையாலும் ஒப்புமை கொடுத்து வைத்தபடி. மை அமர் - [1]" கறுத்த கண்களையுடையவள் ", "கருந்தடங்கண்ணி" என்று சொல்லுகிற ஏற்றமெல்லாம் இவளுக்கும் உண்டே அன்றோ. தன்னைப்போலே கண்ணில் இயல்பாகவே அமைந்த கறுப்பைச் சொல்லிற்றாதல்; அன்றிக்கே, மங்களத்தின் பொருட்டு இடும் மையைச் சொல்லிற்றாதல். [2] இவள், கணவனைப் பிரிந்திருக்கிற காலத்தில் இவர்கள் மை எழுதி இருக்கக் கூடாதே அன்றோ; நீங்கள்வந்தால் இவர்கள் கண்களில் இருக்கும்படி பாரீர்கோள்! வாள் - ஒளி. அதுவும் அழிந்தன்றோ கிடக்கிறது. [3] இவள் வடிவு புகர் அழிந்து கிடக்க, இவர்கள் கண்களில் ஒளி உண்டாகக் கூடாதே. நெடும் கண் - [4] கண்ணில் பரப்பு அடங்கலும் பிரயோஜனத்தோடுகூடி இருப்பது அப்போதே அன்றோ. இல்லையாகில், தலைச்சுமையைப் போன்றதேயாம் அன்றோ. [5]" காணாதார் கண் என்றும் கண்ணல்ல" என்கிறபடியே. மை அமர் வாள் நெடும் கண்- [6] உங்கள் வரவால் வந்த பிரீதியாலே 'அவன்வரவு தப்பாது' என்று நான் அலங்கரிக்க, அத்தாலே அலங்கரித்து ஒளியையுடைத்தாய்ப் பெருத்திருந்துள்ள கண்களையுடையவர்கள் என்னுதல். மங்கைமார் -

1. தன்னை ஒத்த தன்மையைக் கொடுத்தற்கு, தன் தன்மை யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கறுத்த' என்று தொடங்கி. "அஸிதேக்ஷணா" என்பது, ஸ்ரீராமா. சுந். 6. 5 : 4. "கருந்தடங்கண்ணி" என்பது, திருவாய். 6. 5 : 8.

2. "மையமர்கண்" என்பதற்குக் கூறிய இரண்டாவது பொருளில், தலைவி தளர்ந்திருக்க, இவர்களுக்கு இந்த அலங்காரம் கூடுமோ? என்ன, 'இவள், கணவனை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. அழிந்து கிடப்பான் என்? என்ன, 'இவள் வடிவு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. மையும் ஒளியும், தூதுபோய் மீண்டபின் உண்டாகலாம், நெடுமை உண்டாம் என்கிறது கூடாதே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கண்ணில் பரப்படங்கலும்' என்று தொடங்கி. 'அப்போதே அன்றோ' என்றது, தூதுபோய் மீண்டுவந்த உங்களைக் கண்டபோது அன்றோ என்றபடி. 'இல்லையாகில்' என்றது, இவைகள் வராவிட்டால் என்றபடி.

5. அப்படித் தலைச்சுமை ஆகுமோ? என்ன, 'காணாதார்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, கண்களால் பிரயோஜனம் இல்லை என்றபடி. இது, பெரிய திரு. 11.7 : 1.

6. 'நீங்கள் வந்தால்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'உங்கள் வரவால்' என்று தொடங்கி.

[1]அவனுக்குத் தன்னேராயிரம் பிள்ளைகளைப்போலே இவளுக்குத் தன்பருவத்தில் தோழிமார் உண்டாயிருக்கிறபடி. [2]முக்தர் இருபத்தைந்து வயதினர்களாய் இருக்குமாறுபோலே இவர்களும் எப்பொழுதும் மங்கைப்பருவத்தினராய் இருத்தலைத் தெரிவித்தபடி. மங்கைமார் முன்பு-[3]பின்பு இருக்க ஒட்டார்களே! [4]ஒருவர் இருவர் அன்றே. எல்லாரும் தனித்தனியே 'என்முன்பே, என்முன்பே' என்பர்களே! [5]"மஹாத்மாவான அநுமாரை மற்றை வாநரோத்தமர்கள் சூழ்ந்துகொண்டு நின்றார்கள்" என்கிறபடியே, ஓலக்கமாக இருந்து திருவடியைக் கொண்டாடினாற்போலே. மஹாத்மாநம் - நான்குபேர் சூழ இருந்து கொண்டாடினார்கள் என்கிற இதுதான் தரமோ இவனுக்கு? [6]உபாயநாநி உபாதாய மூலாநி ச பலாநி ச-என்று கனி கிழங்கு முதலானவற்றைக் கொடுத்துப் பெருமைப் படுத்தினார்கள் அல்லவோ முதலிகள்; அப்படியே, நெய்யமர் இன்னடிசில் என்று இங்கும் எல்லாம் உண்டாயிருக்கிறபடி. [7]"பேஜிரே விபுலாநநா: - பருத்த முகமுள்ளவர்களானார்கள்" உண்டே அன்றோ அங்கு; இங்கு மை அமர் வாள் நெடும் கண் எல்லார்க்கும் உண்டாயிருக்கிறபடி.

---

1. "மங்கைமார்" என்ற பன்மைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவனுக்கு' என்று தொடங்கி. இங்கே, இறையனார் களவியல் சூத். 2. உரை பார்த்தல் தகும். (பக். 351.)

2. "மங்கை" என்று, பருவப்பெயரால் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'முக்தர்' என்று தொடங்கி.

3. "முன்பு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பின்பு இருக்க ஒட்டார்களே' என்று.

4. "மங்கைமார் முன்பு" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒருவர்' என்று தொடங்கி.

5. இப்படிக் கொண்டாடின பேர் உளரோ? என்ன, 'உளர்' என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மஹாத்மாவான' என்று தொடங்கி.

"தத: தே ப்ரீதமநஸ: ஸர்வே வாநர புங்கவா:
ஹநூமந்தம் மஹாத்மாநம் பரிவார்ய உபதஸ்திரே"

என்பது, ஸ்ரீராமா. சுந். 57 : 31. சுலோகத்தில், "மஹாத்மாநம்" என்றதற்கு, விசேடவுரை அருளிச்செய்கிறார் 'நான்குபேர்' என்று தொடங்கி.

6. "உபாயநாநி உபாதாய மூலாநி ச பலாநி ச
ப்ரத்யர்சயந் ஹரிஶ்ரேஷ்டம் ஹரயோ மாருதாத்மஜம்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 57 : 33.

7. "தத: அங்கதம் ஹநூமந்தம் ஜாம்பவந்தம் ச வாநரா:
பரிவார்ய ப்ரமுதிதா பேஜிரே விபுலாநநா:"

என்பது, ஸ்ரீராமா. சுந். 57 : 47.

என் கை இருந்து - [1]"சுகதுக்கங்கள் நம் இருவர்க்கும் ஒன்றே" என்று, ஒத்த சுகதுக்கங்களையுடையவர்களாய் இருந்தார்களேயாகிலும் பசித்தாரே உண்ணவேணும் அன்றோ! அப்படியே, அவர்கள் ஓலக்கமிருக்குமத்தனை; இருப்பிடம் என் கையாகவேணும். [2]அவன் திருமுடிக்கு ஆபரணமான என்னுடைய கையை உங்களுக்குப் பாதபீடம் ஆக்குகிறேன். [3]"கிருஷ்ணனுடைய தோளில் கொடிபோன்ற தனது கையைக் கொடுத்தாள்" என்னுமாறுபோலே, அவனுக்கு எல்லாப்பொருள்களையும் கொடுக்கும் கை. [4]பரியங்க வித்யையிற் சொல்லும் படுக்கையிலே இருப்புப் போலும் அன்றே, இவள் கையில் இருப்பு. [5]இவள் "அணி மிகு தாமரைக் கை" என்னுமது அவனுக்கும் உண்டே அன்றோ. மெய் அமர் காதல் சொல்லி, கிளிகாள்!

---

1. "என் கை இருந்து" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சுகதுக்கங்கள்' என்று தொடங்கி.

"ஏகம் துக்கம் சுகம்ச நௌ" என்பது, ஸ்ரீ ராமா. கிஷ்கிந். 5: 18.

என்றஅக் குரக்கு வேந்தை இராமனும் இரங்கி நோக்கி
உன்றனக் குரிய இன்ப துன்பங்கள் உள்ள முன்னாள்
சென்றன போக்கி மேல்வந் துறுவன தீர்ப்பல் அன்ன
நின்றன எனக்கு நிற்கு நேரென மொழியும் நேரா.

என்பது, கம்பராமாயணம். மராமரப்படலம். 64.

2. "என் கை" என்று விசேடிப்பது எற்றிற்கு? அல்லாதார் கைகளைக் காட்டிலும் இவள் கைக்கு ஏற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் திருமுடிக்கு' என்று தொடங்கி.

3. அவன் சிரசாவஹிக்கும்படி விரும்பத் தக்கதாக இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கிருஷ்ணனுடைய' என்று தொடங்கி.

"ததௌ பாஹுலதாம் ஸ்கந்தே கோபீ மதுநிகாதிந:"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 13. 54. என்றது, வைத்தாள் என்னாமல், "ததௌ" என்கையாலே, பலகாலம் ஆசைப்பட்டவனுக்கு எல்லாச் சொத்துக்களையும் தானம் செய்தாள் என்பது போதரும்.

4. "என்கையிருந்து" என்று, இவற்றுக்கு, இதனைப் பெரிய பிரயோஜனமாகச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் பரியங்கவித்யை' என்று தொடங்கி. திருவாய்மொழி 2-ஆம் பத்து, 8-ஆம் திருவாய்மொழி, முதல் பாசுரம் வியாக்கியானம் பார்க்கவும்.

5. "அணிமிகு தாமரைக்கை" என்கிறபடியே, அவன் கை அன்றோ இவளுக்கு ஆபரணம்; இவள் கை அவன் தலைக்கு ஆபரணமாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள்' என்று தொடங்கி. என்றது, "அணிமிகு தாமரைக்கை" என்கிற பாசுரத்திலே அவன் கையைத் தன் தலைக்கு ஆபரணமாக பிரார்த்தித்தால், அவனும் இவள்கையைத் தன் திருமுடிக்கு ஆபரணமாகப் பிரார்த்திக்கும் என்னுமது பொருளாற்றலால் போதரும் என்றபடி,

விரைந்து ஓடி வந்து, என்கை இருந்து நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ! என்கிறுள். [1]அது என்? போகிற போதே லாலநம் பண்ணிவிட்டாலோ? என்னில், [2]அதற்குக் கைம்முதல் உண்டாகவேணுமே? "துக்கத்தால் மிக இளைத்திருக்கிற அவயவங்கள்" என்றும், "இட்டகால் இட்டகையளாயிருக்கும்" என்றும் அன்றோ இவள் கிடக்கிறது; இனித்தான் கொண்டாடுகைக்கு ஓலக்கம் இருப்பாரும் வேணுமே! "எம்மின்முன் அவனுக்கு மாய்வராலோ" என்றே அன்றோ அவர்களும் கிடக்கிறது.

நெய் அமர் இன் அடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ - [3]"இந்த உடலின் சேர்க்கை எல்லாப் பொருளுமாம்" என்று கொடுக்கைக்கு உடல் இல்லையே இவளுக்கு. நெய்யோடே கூடின இனிய அடிசிலை நாள்தோறும் பாலோடேகூட நான் தர, அதனை உண்டு நீங்கள் என்னை உஜ்ஜீவிப்பிக்கவேணும். [4]"உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்று இருக்கக்கூடிய இவள், இவை உகப்பது தேடி இடுகிறுள் அன்றோ. [5]இதனால், என் சொல்லியவாறே? எனின், பகவத்விஷயத்தில் உபகாரபராயிருப்பார்க்கு,'உண்பதில் ஒருகை பகுந்திட்டோமாகில் செய்யலாவது உண்டோ?'

1. இனி, மேலே சொல்லப்படும் பொருளில் சங்கையை அநுவாதம் செய்கிறுர் 'அது என்?' என்று தொடங்கி. லாலனம் பண்ணுதல் - பாராட்டுதல்.

2. இவள் "இட்ட கால் இட்ட கை" என்னும்படி தளர்ந்திருக்கையாலே, அவற்றிற்கு இருப்பிடமாக்கச் சக்தி இல்லை என்னுமிடத்தை ரசோக்தியாக அருளிச்செய்கிறுர் 'அதற்குக் கைம்முதல்' என்று தொடங்கி.

"யதா தம் புருஷவ்யாக்ரம் காத்ரை: சோகாபிகர்சிதை:" என்பது, ஸ்ரீராமா. சுந். 40 : 3.

"இட்டகால்" என்பது, திருவாய். 7. 2 : 4.

"எம்மின்முன்" என்பது, திருவாய். 9. 9 : 5. அவர்களும் - தோழிமார்களும்.

3. நாயகனைப் போன்று சரீரத்தைக் கொடாமல் நெய்யமர் இன்னடிசில் முதலானவற்றைக் கொடுப்பான் என்? என்ன, 'இந்த உடலின்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர். "ஏஷ ஸர்வஸ்வ பூதஸ்து" என்பது, ஸ்ரீராமா. சுந். 4. 5 : 6. என்றது, அவன் ஸ்வதந்திரனுகையாலே கொடுத்தான்; இவள் பரதந்திரப்பட்டவள் ஆகையாலே நாயகனுக்கு ஒழியப் பிறர்க்குச் சரீரத்தைக் கொடுக்கப் போகாதே அன்றோ என்றபடி.

4. 'தாரக போஷக போக்கியங்கள் எல்லாம் அவன் என்று இருக்குமவள் இப்படிச் சொல்லக்கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'உண்ணும் சோறு' என்று தொடங்கி.

5. இதற்குச் சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறுர் 'இதனால் என் சொல்லியவாறே? எனின்,' என்று தொடங்கி,

என்று கைவாங்குமதன்று; அவர்கள் விரும்பினவற்றையே தேடி இடவேணும் என்னும் விசேடப் பொருளைத் தெரிவித்தபடி. [1]"எந்தப் புருஷன் எதனை அன்னமாக உடையவனாயிருக்கிறானோ அவனுடைய தெய்வமும் அதனையே அன்னமாகவுடைத்தாயிருக்கிறது" என்னலாவது அவன்பக்கல். நிச்சல்-சேர்ப்பது ஒருநாளே, இவர்களுக்குப் பின்பு அநுபவம் நித்தியமாயிருக்கிறபடி. [2]"எந்த நாதமுனிகளுடைய இரண்டு திருவடிகள் இம்மை மறுமை என்னும் இரண்டு உலகங்களிலும் எப்போதும் என்னைக்காப்பாற்றும் பொருள்களோ"என்னுமாறு போலே. கை அமர் சக்கரத்து என் கனிவாய்ப் பெருமானைக் கண்டு - [3]உண்டாரை உண்ணுவிக்கத் தேடுகிறாள் அன்றோ. [4]இதனால் என் சொல்லியவாறோ? எனின், இவர்க்கு முன்னே இவர் விரும்பிய பொருள்,இவரைப் பற்றினார்க்கு முற்பட்டிருக்கிறபடியைத்தெரிவித்தபடி.[5]"வேறாக ஏத்தி இருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சார்த்தி இருப்பார் தவம்."எப்போதும் கைகழலா நேமியானாய்இருத்தலின்'**கையமர் சக்கரம்**' என்கிறது. என் சக்கரத்து கனிவாய்-[6]கையும் திருவாழியுமான அழகினைக்

---

1. மக்கள் எதனை உண்ணுகிறார்களோ அதனையே தேவர்களும் உண்ணுகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறதே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'எந்தப் புருஷன்' என்று தொடங்கி.

"இதம் புங்க்ஷ்வ மஹாராஜ ப்ரீதோ யதஶநாவயம்
யதந்ந: புருஷோ பவதி ததந்நா: தஸ்ய தேவதா:"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 103: 30.

2. அநுபவம் நித்தியமாய் இருக்கைக்குக் காரணம், இவளுடைய செய்ந்நன்றியறிதல் இவ்வுலகோடு அவ்வுலகோடு வாசிஅற எப்போதும் உண்டு ஆகையாலே என்கிறார் 'எந்த நாதமுனிகளுடைய' என்று தொடங்கி.

"நாதாய நாதமுநயே அத்ரபரத்ர சாபி
நித்யம் யதீய சரணௌ ஶரணம் மதீயம்"

என்பது, தோத்திர ரத்தினம். 2.

3. "கண்டு" என்ற பதத்தோடு "நெய்யமர் இன்னடிசில்" என்றதனையும் கூட்டி, அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'உண்டாரை' என்று தொடங்கி. கண்டபோதே திருப்தி பிறக்கையாலே 'உண்டாரை' என்கிறார்.

4. "கண்டு" என்றதற்குச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார் 'இதனால்' என்று தொடங்கி.

5. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'வேறாக' என்று தொடங்கி. இது, நான்முகன் திருவந். 18.

6. "என்" என்றதனை,சக்கரத்தோடும் கனிவாயோடும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'கையும் திருவாழியுமான' என்று தொடங்கி.

காட்டுவது, முறுவலைக் காட்டுவதாய் என்னைத் தனக்கே உரிமை ஆக்கினவன்.[1] பிரிந்துபோகிறபோது 'இவள் சத்தை கிடக்கவேணும்' என்று நினைத்துச் செய்த புன்முறுவலுக்கா யிற்று இவள் தோற்றது. என் கனிவாய் - [2] திருவாழிக்கு முற்றூட்டு ஆயிற்றுத் திருக்கை : தமக்கு முற்றூட்டு திருப்பவளம். [3] அவன் ஜீவனத்தை நித்யமாக்கினான், என் ஜீவனத்தைக் காதாசித்கமாக்கினான். [4] அவனுக்கே கையடைப்பு ஆயிற்றே. கைமேலே இடுமே. [5] கண்டு - எனக்குப் போலே நினைப்பிற்கு விஷயமாமளவு அன்றே உங்களுக்கு. அன்றிக்கே, இவற்றின் கண்களாலே காணுதல் என்னுதல். அன்றிக்கே, இவற்றைக் காணுதல் அன்றோ இவளுக்கு என்னுதல்; [6] தொட்டாரைத் தொடுதல், கண்டாரைக் காணுதல் அன்றோ இவளுக்கு.

மெய் அமர் காதல் சொல்லி-அவன் திருமேனியிலே நான் அணையவேண்டும்படியான காதல் என்னுதல்; என்னுடம் போடே அவன் அணையவேண்டும்படியான காதல் என்னுதல்.

---

1. "என்" என்றதனை, "கனிவாய்" என்றதனோடு கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'பிரிந்து போகிறபோது' என்று தொடங்கி.

2. "கையமர் சக்கரம், என்கனிவாய்" என்று விசேடிக்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'திருவாழிக்கு' என்று தொடங்கி. முற்றூட்டு - பூர்ண அநுபவம்; முழுவதும் உண்ணல்.

3. "அமர் சக்கரம்" என்ற வினைத்தொகையைக் கடாக்ஷித்து, "என்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவன் ஜீவனத்தை' என்று தொடங்கி. அவன் - சக்கரத்தாழ்வான். கர்தாசித்கம் - ஒருகாலத்தில் கிடைப்பது.

4. "கையமர்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி ரசோக்தியாக அருளிச் செய்கிறார் 'அவனுக்கே' என்று தொடங்கி. 'கையடைப்பாயிற்றே' என்பதற்கு, முற்றூட்டு ஆக்கினான் என்பது நேர்பொருள். கையிலே அடைக்கப் பட்டது என்பது வேறும் ஒருபொருள்.

5. "கண்டு" என்பதற்கு, மூன்று விதமாகப் பொருள் அருளிச்செய் கிறார். 'இவற்றின் கண்களாலே காணுதல்' என்றது, இவை இங்கு நின்றும் சென்று அவனைக் கண்டால் தான் கண்டது போன்று இருக்கும் என்றபடி. 'இவற்றைக் காணுதல்' என்றது, அவனைக் கண்ட இவற்றைக் காணுதல் என்றபடி.

6. இரண்டாவது வகையாக அருளிச்செய்த பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தொட்டாரை' என்று தொடங்கி.

"வாஹி வாத யதஃ காந்தா தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ
த்வயி மே காத்ர ஸம்ஸ்பர்சஃ சந்த்ரே த்ருஷ்டி ஸமாகமஃ"

என்பது, ஸ்ரீராமா. யுத். 5 : 9. என்றது, பிராட்டியினுடைய ஸ்பரிசம் காற்று மூலமாக ஸத்வாரகமானாற்போலே, காட்சியும் ஸத்வாரகம் என்றபடி.

[1]"துக்கத்தால் அதிகமாக இளைத்திருக்கிற அவயவங்களால் நன்றாகத் தொடும்படி" என்னக்கடவதன்றோ. [2]'நம் சத்தை கிடக்கக் கிடக்கும் அன்றோ' என்றுதல், 'குணஞானத்தாலே தரித்திருக்கிறாள்' என்றுதல் நினைத்திருக்குமது அல்ல என்று சொல்லுங்கோள். [3]அங்ஙனேயும் தரித்திருந்தார் உண்டேயன்றோ; மாயா சிரசைக் காட்டினஅன்றும், பிராட்டி, உலகத்தாரோடு ஒக்கக் கண்ணநீர் விழவிட்டு, 'அதுவேயானாலும் அவர் உளராகில் அல்லது நம்சத்தை கிடவாது' என்று தன்னைக் கொண்டுஅறுதியிட்டுத் தரித்திருந்தாள்அன்றோ. [4]"சூரியனிடத்துள்ள ஒளியைப் போன்று, நான் இராகவனை விட்டு நீங்கேன்" என்றாள் அன்றோ. சூரியன் உண்டாகில் அல்லது ஒளியும் இல்லை அன்றோ. [5]இங்ஙனே இருக்கச்செய்தே சிலகாரணங்களாலேவரும் கூடுதல் பிரிதல்களே அல்லவோ உள்ளன. [6]திரவியமாயிருக்கச் செய்தேயும் பிரகாரமாகின்ற தன்மைஉண்டே;

---

1. "மெய்யமர் காதல்" என்பதற்கு அருளிச்செய்த இருவகைப் பொருள்களுள் இரண்டாவது பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'துக்கத்தால்' என்று தொடங்கி. இப்பொருளையுடைய சுலோகத்தை மேலே காண்க.

2. மேலே கூறிய இருவகைப் பொருள்களாலும் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'நம் சத்தை' என்று தொடங்கி. இங்கே, பக். 78. 5-ஆம் பத். குறிப்புப் பார்க்கவும்.

3. அவன்சத்தை கிடக்கத் தரித்திருந்த பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அங்ஙனேயும்' என்று தொடங்கி. 'அதுவேயானாலும்' என்றது, அந்தத் தலையேயானாலும் என்றபடி.

4. அப்படி அவன் உண்டானபோது உண்டாய் அவன் இல்லையானபோது இல்லையாம்படியாதற்குப் பிரிக்கப்படாதவளோ! என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சூரியனிடத்துள்ள' என்று தொடங்கி.

"ஶக்யா லோபயிதும் ந அஹம் ஐஶ்வர்யேண தநேந வா
அநந்யா ராகவேண அஹம் பாஸ்கரேண ப்ரபா யதா"

என்பது, ஸ்ரீராமா. சுந். 21 : 15. "பாஸ்கரேண ப்ரபாயதா" என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'சூரியன் உண்டாகில் அல்லது' என்று தொடங்கி.

5. ஒளிபோன்று பிரிக்க முடியாமல் இருப்பவளுக்குப் பிரிவு வரக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்ஙனே இருக்கச் செய்தே' என்று தொடங்கி. என்றது, பிரியாதவளாக இருப்பினும் தேவமாதர்கள் சிறையை விடுவிக்கைக்காக அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே பிரிவாகத் தோற்றின இத்தனை; பொருளின் உண்மையை நோக்குமிடத்துப் பிரிவு இல்லை என்றபடி.

6. ஜாதி குணங்களுக்கு ஒழிய, பொருளுக்கு, பிரியாத என்ற விசேடணம் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திரவியமாயிருக்கச்செய்தேயும்' என்று தொடங்கி. ஆக, இத்துணையும் அவன்சத்தை கிடக்கக் கிடக்கும் என்றதனை விரிவாக எடுத்துக்கூறி, பிராட்டியைக் காட்டி

அப்படி அன்றே இங்கு; [1]உடம்பிலே அணைந்து பிரிந்தார்க்கு உடம்பை அணைத்து அல்லது நிற்கவொண்ணாதே அன்றோ. மெய் அமர் காதல் - [2]'தம்மைப்போலே பொய்யுமாய் நிலைநில்லாதது மான காதல்அன்றுஎங்களதுஎன்றுசொல்லுங்கோள்'என்று பிள்ளான் அருளிச்செய்வர். சத்தியமான காதல்என்றபடி. அன்றிக்கே,[3] ஆத்மாவோடே ஒன்றுபட்டிருக்கின்ற காதல் என்றுமாம். மெய் என்று ஆத்மாவாய், ஆத்மாவோடே பொருந்தின காதல் என்றபடி. "மெய்ம்மையே மிக உணர்ந்து" என்கிற இடத்தில், மெய் என்றது, ஆத்மாவை அன்றோ சொல்லிற்று. சொல்லி - [4]தந்தாமுக்கு இல்லாதவை பிறர்வாயிலே கேட்டறிய வேணுமித்தனை அன்றோ.[5] தமக்கு உண்டாகில் இப்படித் தூது விடப் பார்த்து இரரரே. [6]காட்சிக்கு மேலே ஓர் ஏற்றம்போலே காணும் தன்நிலையை அவனுக்கு அறிவித்தல்.

கிளிகாள் விரைந்து ஓடி வந்து - [7]பிராட்டியைக் கண்டு மீண்ட பின்பு முதலிகள் வந்து பெருமாளை உகப்பித்தாற் போலேயும், பெருமாள்மீண்டு எழுந்தருளுகிறபோது திருவடி முன்னே வந்து ஸ்ரீபரதாழ்வானை உகப்பித்தாற்போலேயும், நீங்கள் முன்னே வரவேணும். கிளிகாள் விரைந்து ஓடி வந்து-

லும் ஆழ்வார் நாயகிக்குண்டான வேற்றுமையை அருளிச்செய்கிறார் 'அப்படி அன்றே இங்கு' என்று. 'அப்படி அன்றே' என்றது, அவன் சத்தையாலே ஜீவித்தல்,குணஞானத்தாலே ஜீவித்தல் செய்யும்படி அன்றே இங்குஎன்றபடி.

1. 'திருமேனியோடு அணைந்தே சத்தை தரித்திருக்க வேண்டும்படி இருக்கைக்கு அடி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உடம்பிலே' என்று தொடங்கி.

2. "மெய்யமர் காதல்" என்பதற்கு, மூன்றாவதாக வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'தம்மைப்போலே' என்று தொடங்கி. தம்மைப் போலே - தம்முடைய காதலைப்போலே.

3. நான்காவதாக வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'ஆத்மாவோடே' என்று தொடங்கி. 'மெய்ம்மையே' இது, திருமாலை. 38. 'மெய்மையை' என்பதும் பாடம்.

4. "என்காதல் சொல்லி" என்கையாலே, 'அவர்க்கு அது இல்லை' என்பது போதருமாதலின் அதனை அருளிச்செய்கிறார் 'தந்தாமுக்கு' என்று தொடங்கி.

5. அவர்க்கு இல்லை என்னுமதற்குக் காரணம் காட்டுகிறார் 'தமக்கு உண்டாகில்' என்று தொடங்கி.

6. "என்காதல் சொல்லி" என்பதற்கு, வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'காட்சிக்கு மேலே' என்று தொடங்கி. என்றது, "கண்டு" என்ற காட்சிக்குமேலே, அவனோடே பேசுதலும் இவற்றுக்கு ஏற்றம் என்றபடி.

7. விரைந்தோடி வருதற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'பிராட்டியைக் கண்டு' என்று தொடங்கி.

[1]அறிவித்துக் கூட வர இராதே கொள்ளுங்கோள். [2]திருவடி பிராட்டியைத் தேடிப் போகிறபோது மஹாராஜரோடே செய்த காலவரையறையை இக் கரையிலே கழித்துப் பின்பு இலங்கையிலே போய்ப் புக்கு எங்கும் தேடி, அவளைக் கண்டு, பின்னர் 'இக்காட்சியால் பிரயோஜனம் உள்ளது அவ் வுடம்பு உள்ளபோதே சென்று அறிவிக்கில் அன்றோ' என்று ஒரு நாளே வந்தான் அன்றோ. அதற்குக் காரணம், போகிறபோது இவர் ஆற்றாமையைக் காண்கையாலே, 'நாம் வருமளவும் இவர் உயிர் தரித்திருத்தல் அரிது' என்று இருந்தான்; பெருமாள் தாமும், 'பிள்ளாய்! நீ இருக்கிறபோதைத் தரிப்புக்கொண்டு நீ போனாலும் இப்படி இருப்பன் என்று இராதேகாண்; என் அளவு அறிந்து காரியம் செய்' என்றார் அன்றோ. அன்றிக்கே, விரைந்து ஓடி வந்து என்பதற்கு, நீங்கள் முற்பட வந்த பிரீதி பொறுத்தால், பின்பு அவன் வரவாகவேணும் என்னுதல். அன்றிக்கே, அவனுடனே கூட வரில் [3]வாய்புகுநீராய் உங்களைக் கொண்டாட ஒண்ணாது; ஆன பின்பு, நான் முறைகெடாமல் அநுபவிக்கும்படி வாருங்கோள்! என்னுதல். [4]உபகாரகரான உங்கள்காலிலே முற்பட விழுந்தபின்பு அவன்காலிலே விழும்படி பண்ணுங்கோள். [5]ஆகையால் அன்றோ, **நம்முதலிகள்** குருபரம்பரைமுன்னாகத் த்வயத்தை அநுசந்தானம்செய்கிறது.

---

1. விரைந்து ஓடி வருவான் என்? அவனோடே கூட வந்தாலோ? என்ன, கூடவரின், 'அதற்கு முன்னே இவள் சத்தை அழியும்' என்னுமதனைக் கூறத் திருவுள்ளம்பற்றித் தொடங்குகிறார் 'அறிவித்துக் கூடவர இராதே கொள்ளுங்கோள்' என்று.

2. நீங்கள் அவனோடே வந்தால் வருவதற்குள் என் சத்தை அழியும்; ஆனபின்பு, நான் தரித்திருப்பதற்காக விரைவில் வாருங்கோள் என்றதனைத் திருவுள்ளம்பற்றி அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'திருவடி, பிராட்டியை' என்று தொடங்கி.

3. வாய்புகுநீர் - உன்மஸ்தக அநுபவம்.

4. 'முறைகெடாமல்' என்கைக்கு, முறையாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உபகாரகரான' என்று தொடங்கி.

5. "விரைந்து ஓடி வந்து" என்றதற்கு அருளிச்செய்த மூன்றுவகையான பொருள்களில், மூன்றாவது பொருளுக்கு இரண்டுவகையாகச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஆகையால் அன்றோ' என்று தொடங்கியும், 'இனித்தான்' என்று தொடங்கியும். குருபரம்பரை முன்னாகச் சர்வேசுவரனைச் சேவிக்க வேண்டுகையாலே முன்னே வரச் சொல்லுகிறான் என்பது முதல் கருத்து. பகவானை அடைந்தபின்னர் ஆசாரியனுக்கு அடிமைசெய்ய முடியாமையாலே, உங்களுக்கு நான் அடிமை செய்யும்படி முன்னே வரவேண்டும் என்பது இரண்டாவது கருத்து.

இனித்தான், சிஷ்யனானவன் ஆசாரியனுக்குத் தொண்டுசெய்யலாவது, அவன் சரீரத்தோடு இருக்கிற நாட்களிலே அன்றோ; பின்பு உள்ளன எல்லாம் பகவானுடைய அநுபவத்திலே சேருமே அன்றோ இருவருக்கும். அவன் 'எனக்கு' என்னும் நாளிலே அன்றோ, இவன் 'உனக்கு' என்று கொடுக்கலாவது? (2)

632.

ஓடிவந்து என்குழல் மேல்ஒளி மாமலர் ஊதீரோ?
கூடிய வண்டினங் காள்!குரு நாடுடை ஐவர்கட்காய்
ஆடிய மாநெடுந் தேர்ப்படை நீறுஎழச் செற்றபிரான்
சூடிய தண்துள பம்உண்ட தூமது வாய்கள்கொண்டே.

**பொ - ரை :—** சேர்ந்திருக்கின்ற வண்டுக்கூட்டங்களே! குருநாட்டினையுடைய பாண்டவர்களுக்காக, வெற்றிபொருந்திய குதிரைகள் பூட்டிய நீண்ட தேரினாலே சேனைகள் சாம்பலாகும்படி அழித்த கண்ணபிரான் அணிந்துகொண்டிருக்கின்ற குளிர்ந்த திருத்துழாயிலேயுள்ள தேனைப் புசித்த பரிசுத்தமான தேன்பொருந்திய வாய்களைக்கொண்டு, ஓடிவந்து என் கூந்தலின்மேல் உள்ள ஒளிபொருந்திய சிறந்த பூக்களில் ஊதுவீர்களாக.

**வி - கு:—** வண்டு இனங்காள்! ஐவர்கட்காய்ப் படை நீறு எழச் செற்றபிரான் துளபம் உண்ட மது வாய்கள் கொண்டு ஓடி வந்து குழல் மேல் மா மலர் ஊதீர் என்க. வாய்கள்கொண்டு - வாய்களால்.

**ஈடு :—** மூன்றாம்பாட்டு. [1]சில வண்டுகளைக் குறித்து, அவனுக்கு என்நிலையை அறிவித்து என் தலைமேலே பொருந்தி வாழுங்கோள் என்கிறாள்.

ஓடி வந்து-கடுக வரவேணும். என் அளவு கண்டு போகிற நீங்கள், நான் உள்ள போதே வந்து உதவவேணும். அன்றிக்கே,[2] அவற்றை அநுபவிக்கையில் உண்டான விரைவாலேயாதல், சடக்கென வரவேணும் என்கிறாள் என்னுதல். என் குழல்மேல் -[3]பேரளவுடையார்படும் ஈடுபாட்டினைக் கண்டு, தன்

1. "வண்டினங்காள்! பிரான் சூடிய தண் துளபம் உண்ட தூ மது வாய்கள் கொண்டு ஓடிவந்து என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. அவற்றை - அளகங்களை.

3. "என் குழல்மேல்" என்று, தன்குழலைத் தானே கொண்டாடலாமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பேரளவுடையார்' என்று தொடங்கி. பேரளவுடையார் - சர்வேசுவரன். என்றது, "தோகைமா மயிலார்கள்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

குழலின் வீறு தான் அறிந்திருக்குமே. 'சூடிய தண் துளபம் உண்ட தூ மது வாய்கள் கொண்டு ஓடி வந்து என் குழல்மேல் ஒளி மா மலர் ஊதீரோ?' என்பான் என்? காரியம் செய்து சமைந்தால் கைக்கூலி கொடுப்பாரைப்போலே? என்னில், இவற்றுக்கு இவள் குழலிலே [1]விஷயம் உண்டாகவேணுமே. இப்போது மது மாறிச் சருகாய் அன்றோ கிடக்கிறது; இவை மீண்டால் அன்றோ இத் தலையில் செவ்வி பிறப்பது. என்குழல் மேல்-[2]அவனுக்குத் தூதுபோய் வந்தாரிற் காட்டிலும் இவளுக்குத் தூதுபோனார்க்கு உண்டான தன்னேற்றம் இருக்கிறபடி. [3]அங்கு மஹாராஜருடைய மதுவனம் அன்றோ அழிந்தது; இங்கு அவன் காவற்காட்டினை உங்களுக்குத் தருகிறேன் என்கிறாள். அளகாடவி அன்றோ.[4]தலையான பரிசில் அன்றோ இது தான். [5]ததிமுகன் முதலாயினோர்களுடைய விலக்குகையும் இல்லை அன்றோ இங்கு. [6]சாந்தனை திருவடி அன்றோ "நான் உங்களுடைய பகைவர்களைத் தடுக்கிறேன்" என்றான். [7]பிராட்டியைக் கண்டு வந்தமை அறியாதிருக்கச்செய்தேயும் மதுவனம் அழிந்தமையைக் கண்டு, மஹாராஜருடைய வால்

---

1. விஷயம் - தேன். 'இத்தலையில்' என்றது, சிலேடை.

2. "என்குழல்மேல் ஒளி மா மலர் ஊதீரோ" என்றதனால், பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'அவனுக்கு' என்று தொடங்கி.

3. அந்த ஏற்றத்தை அருளிச்செய்கிறார் 'அங்கு' என்று தொடங்கி. இங்கு, கம்பராமாயணம் திருவடிதொழுத படலம் 12-முதல் 26-முடியவுள்ள செய்யுட்களைக் காணல் தகும்.

4. ஏற்றத்தினை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'தலையான' என்று தொடங்கி. பரிசில் - உபகாரம்.

5. வேறும் ஒருவகையால் இதற்கு உண்டான ஏற்றத்தினை அருளிச் செய்கிறார் 'ததிமுகன்' என்று தொடங்கி. ததிமுகன் - மதுவனத்தைக் காவல் புரிந்திருந்த காவலாளன்.

6. மதுவனத்தில் விலக்கினார் உண்டோ? என்ன, 'சாந்தனை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, மஹாராஜருடைய காவற்காட்டினை உண்பதற்குத் தடை உண்டு; இங்கு அது இல்லை என்றபடி.

"அவ்யக்ரமநஸோ யூயம் மது ஸேவத வாநரா:
அஹம் ஆவாரயிஷ்யாமி யுஷ்மாகம் பரிபந்திந:"

என்பது, ஸ்ரீராமா. சுந். 62: 2.

7. பிராசங்கிகமாக (இடைப்பிறவரல்) அருளிச்செய்கிறார் 'பிராட்டியை' என்றது முதல் 'பட்டர் அருளிச்செய்வர்' என்றது முடிய.

ருசியமூகமலையிலே அறைந்ததே அன்றோ. 'நம்மோடு செய்து போன காலம் கடந்திருக்கச் செய்தேயும் மதுவனம் அழிக்கும் போது பிராட்டியைக் கண்டார்களாகவேணும்' அன்றோ. 'பிராட்டியைக் கண்டதனுலுண்டான உவகை, நடுவில் மது வனம் இன்றாகில் இராஜபுத்திரர்கள் முதுகோடே போம்' என்று பட்டர் அருளிச்செய்வர்.

என் குழல் மேல் ஒளி மா மலர் ஊதீரோ - [1]என்றும் இவள் குழலில் மதுபானம் செய்வன வண்டுகளே அல்லவோ. [2]தூவி அம் புள்ளுடைத் தெய்வ வண்டாதல், இவையாதல். [3]அவ னேயோ ஒத்த தரத்தைத் தரவல்லான், நானும் உங்களுக்கு அவனோடு ஒத்த தன்மையைத் தருகிறேன் என்கிறாள். என்றது, "ஸோஸ்நுதே - அந்தமுக்தன் பரமாத்வோடு அநுபவிக் கிறான்" என்கிறபடியே, உங்களையும் அவனையும் ஒருகலத் திலே ஊட்டுகிறேன் என்கிறாள் என்றபடி. தலையான ஊண் அன்றோ. என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீரோ - உங்கள் வர வாலே தளிர்த்திருக்கிற என்னுடைய குழலில், ஒளியையுடைத் தாய்ச் சிலாக்கியமான மலரில் மதுவைப் பானம் செய்வீரோ? மதுவின் நிறைவாலே, கிண்ணகத்தில் இழிவாரைப் போலே தனித்து இழியமாட்டாமல் நின்று பறக்கிறபடியைத் தெரிவிப் பாள் 'ஊதீரோ' என்கிறாள். [4]உங்கள் காரியமும் பிறரைப் பாது காப்பதுமானல் ஆறி இருக்கிறது என்? என்கை. கூடிய வண் டினங்காள் - [5]மஹாராஜரைப்போலே படைதிரட்டவேண்டா

---

1. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'என்றும்' என்று தொடங்கி.

2. இவள் குழலில் என்றும் மதுபானம் பண்ணுவன வண்டுகளே என்பதனை அருளிச்செய்கிறார் 'தூவியம்புள்ளுடை' என்று தொடங்கி. இது, திருவாய். 9. 9 : 4.

3. 'தலையான பரிசில்' என்று மேலே அருளிச்செய்ததனை விவரணம் செய்கிறார் 'அவனேயோ' என்று தொடங்கி. 'அவனோடு ஒத்த தன்மையை' என்றது, சமமான போகத்வம். என்றது, அவனுக்குப் போக்கியமான குழலை நீங்களும் அநுபவிக்கும்படி செய்கிறேன் என்றபடி.

4. "ஊதீரோ" என்ற ஒகாரத்திற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உங்கள் காரியமும்' என்று தொடங்கி. உங்கள் காரியம் - அங்கே சென்று அறிவித்தல். பிறரைப் பாதுகாப்பது - தேன் குடித்தல்.

5. "கூடிய" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மஹாராஜரை' என்று தொடங்கி.

அன்றோ உங்களுக்கு. என்னுடைய ரக்ஷணத்திலே ஒருப்பட்டு முன்பே திரண்டிருக்கப்பெற்றது அன்றோ. [1]இளையபெருமாள் கிஷ்கிந்தா நகரத்தின் கோட்டைவாசலிலே சென்று குணகீர்த்தனம்செய்த பின்பன்றோ படை திரட்டிற்று.

குருநாடுடை ஐவர்கட்காய்-[2]பாண்டவருடைய மனைவி குழல் பேணுமையைக் கண்டு வருந்துமவன் கண்டீர். [3]"மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித்து அவர்களையே மன்னராக்கி" என்கிறபடியே, [4]இராச்சியமுடையார் பாண்டவர்களே; நாம் அவர்களுக்கு ஏவல் தேவை செய்து நிற்கிறோம் என்றாயிற்று அவன் நினைத்திருப்பது. குருநாடுடை ஐவர்-[5]துரியோதனாதியர்கள் கிடந்தானை கண்டு ஏறினதைப் போன்றது அன்றோ. [6]"நாடுடை மன்னர்" என்கிறபடியே, இராச்சியம் அவர்களுடையதே, 'துரியோதனாதியர்கள் இராச்சியம் பண்ணுகை வல்லடி' என்றிருக்கும் பகவானுடைய அபிப்பிராயத்தாலே சொல்லுகிறார்.

---

1. படை திரட்டுமிடத்தில் பின்னையும் ஒரு விளம்பம் உண்டு என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இளையபெருமாள்' என்று தொடங்கி. குணகீர்த்தனம் செய்தல் - அவனுடைய குணங்களைச் சொல்லிப் புகழுகை என்றும், சிறு நாண் ஒலியை உண்டாக்குதல் என்றும் பொருள்.

2. நாங்கள் அறிவித்தால் வருவானோ? என்ன, 'பாண்டவருடைய மனைவி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, தன் மனைவி விஷயத்தில் சொல்லவேண்டா அன்றோ என்றபடி.

3. அப்படி அவன் வருந்தியதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மைத்துனன்மார்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி. 4. 9 : 6.

4. "நாடுடையவர்" என்றும், "குருநாடுடையவர்" என்றும், பிரித்துக்கொண்டு, முதலில் "நாடுடையவர்" என்பதற்குப் பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி நாடுடையவர், பாண்டவர்களோ? கிருஷ்ணன் அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இராச்சியமுடையார்' என்று தொடங்கி.

5. குருநாடுஉடையவர்கள், துரியோதனாதியர்கள் அல்லரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'துரியோதனாதியர்கள்' என்று தொடங்கி. 'கிடந்தானை கண்டு ஏறினதைப் போன்றது' என்றது, பாகன் அநுமதியில்லாமலே கிடந்த யானையின்மேலே ஒருவன் ஏறினால், அதனாலே தள்ளப்படுமாறு போலே, அவர்களும் முறையின்றி இராஜ்யம் பண்ணுகையாலே தள்ளப்பட்டவர்கள் ஆவர் என்றபடி. கிடந்த ஆனை; கிடந்தானை.

6. அவர்கள், இராஜ்யம் எங்களது என்று நினைத்திருக்க, 'கிடந்தானை கண்டு ஏறினதைப் போன்றது' என்றால் பொருந்துமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நாடுடை மன்னர்' என்று தொடங்கி. 'நாடுடை மன்னர்' என்பது, திருவாய். 6. 6 ; 4.

[1]அவன் நினைவேயன்றோ இவர்க்கு நினைவு. ஆடிய மா நெடும் தேர்-மனோகரமாம்படி சஞ்சரிக்கின்ற குதிரை பூண்ட பெரும் தேரினை உபகரணமாகக் கொண்டு. என்றது, [2]"பெரியதான தேரில் இருந்தார்கள்" என்னும்படி இருக்கிற தேரைக் கொண்டு என்றபடி. படை நீறு எழச் செற்ற பிரான்-[3]ஆயுதம் எடாமைக்கு அநுமதிபண்ணுகையாலே,தேர்க்காலாலேசேனையைத் துகள் ஆக்கினான். தன்னை அழிய மாறியும் பரோபகாரம் செய்தலையே சுபாவமாகவுடையவன் ஆதலின் '**செற்றபிரான்**' என்கிறாள். [4]இதனால், தாழ்த்தது ஔபாதிகம் என்று இருக்கிறாள் என்றபடி. [5]அருச்சுனன் முதலாயினோர்களும் சஸ்திரங்களைப் போன்றவர்களேயாவர்; "ஏ அருச்சுனா! இவர்கள் முன்பே என்னாலேயே கொல்லப்பட்டுவிட்டார்கள்; நீ எனக்கு ஒரு ஆயுதம் போலே நிமித்தமாக இரு" என்று தானே அருளிச்செய்தான் அன்றோ.

சூடிய தண் துளபம் உண்ட - [6]சாரதியாய் நின்று தேரினை ஓட்டுகிறபோது வைத்த வளையத்திலே மதுவைக் குடிக்கிற வண்டுகள். [7]அவதாரங்களில் ஏதேனும் ஒன்றாலே வளையம்

1. செய்து தலைக்கட்ட வல்ல சர்வேசுவரன் நினைத்திருந்தாலும், அவர்கள் ஆளாநிற்க, இவர் அப்படி அருளிச்செய்யலாமோ? என்ன, 'அவன் நினைவே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. "நெடுந்தேர்" என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பெரியதான' என்று தொடங்கி.

"ததைஃ ஶ்வேதைஃ ஹயைஃ யுக்தே மஹதி ஸ்யந்தநே ஸ்திதௌ" என்பது, ஸ்ரீ கீதை. 1: 14.

3. தேரைக்கொண்டு அழித்தது என்? திருவாழி இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆயுதம்' என்று தொடங்கி.

4. இப்போது வாராதிருக்கப் "பிரான்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதனால்' என்று தொடங்கி.

5. செற்றது இவனோ? அருச்சுனன் முதலானோர்கள் அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அருச்சுனன் முதலாயினோர்களும்' என்று தொடங்கி.

"தஸ்மாத் த்வம் உத்திஷ்ட யஶோலபஸ்வ
ஜித்வா ஶத்ரூந் புங்க்ஷ்வராஜ்யம் ஸம்ருத்தம்
மயைவ ஏதே நிஹதாஃ பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந்"

என்பது, ஸ்ரீ கீதை. 11: 33.

6. "செற்றபிரான் சூடிய தண்துளபம் உண்ட" என்கையாலே, பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார் 'சாரதியாய் நின்று' என்று தொடங்கி.

7. அவதாரத்தில் திருத்துழாய் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவதாரங்களில்' என்று தொடங்கி.

வைத்தாலும், அந்த நிலையை அடைந்து அநுகூலிக்கிறது திருத்துழாயாகக்கடவது. தூ மது வாய்கள் கொண்டே-[1] அவ்வளையத்தில் மதுவைக் குடித்துச் சுத்தமாய் இனிதான வாய்களைக் கொண்டு. அன்றிக்கே, வாய்கள்கொண்டே என்பதற்கு, இனிதான பேச்சினைக் கொண்டு என்னலுமாம். தூ மது வாய்கள் கொண்டு ஓடி வந்து என்குழல்மேல் ஒளி மா மலர் ஊதீரோ - [2]"வாஹிவாத - பார்க்கப்படாமையாலே நீ பெற்ற பேறு என்? த்வயி மே: காத்ர ஸம்ஸ்பர்ஸ: - நம்முடைய கரணங்களுக்குப் பரிசம் உன்பக்கலிலே ஆயிற்றே. நமக்குத் தொட்டாரைத் தொட்டாயிற்றே. சந்த்ரே த்ருஷ்டி ஸமாகம: - காணுதலோடு ஒத்ததன்றோ எனக்கு ஸ்பரிசமும்" [3]அற்றது பொருந்தும்படி

---

1. "சூடிய தண்துளபம் உண்ட தூ மது வாய்கள் கொண்டு" என்பதற்கு, இருவகையாகப்பொருள் அருளிச்செய்கிறார். அவற்றுள் முதற்பொருள், 'அவ்வளையத்தில்' என்று தொடங்குவது. என்றது, திருத்துழாய் மதுவைக் குடிக்கையாலே பரிசுத்தமாய் இனிதான வாய்களைக் கொண்டு என்றபடி. இந்தப் பொருளில், "உண்ட" என்பதற்கு, உண்கையாலே என்பது பொருள். "மது" என்றது, இனிதான என்றபடி. இரண்டாவது பொருள், 'அன்றிக்கே' என்று தொடங்குவது. இப்பொருளில், "வாய்கள்" என்பதற்கு, வார்த்தைகள் என்பது பொருள். அவன் வரவுக்குச் சூசகமான வார்த்தைகள் என்றபடி.

2. மேலே அருளிச்செய்த இருவகைப் பொருள்களுள், முதற்பொருளுக்குச் சம்வாதம் காட்டுகிறார் 'வாஹிவாத' என்று தொடங்கி.

"வாஹி வாத யத: காந்தா தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஸ
த்வயி மே காத்ர ஸம்ஸ்பர்ச: சந்த்ரே த்ருஷ்டி ஸமாகம:"

என்பது, ஸ்ரீராமா. யுத் 5 : 6.

சுலோகத்திலுள்ள "வாத" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பார்க்கப்படாமையாலே' என்று தொடங்கி. என்றது, பார்க்கப்படாமையாலே அச்சமின்றி வேண்டின இடத்துக்குப் போகலாம் என்றபடி. "த்வயி மே காத்ர ஸம்ஸ்பர்ச:" என்கையாலே, பிராட்டியை நேரே அநுபவிக்கப் பெறாமையால் வந்த இழவு தோற்றுகிறது என்கிறார் 'நம்முடைய' என்று தொடங்கும் வாக்கியத்தாலே. "வாத" என்று காற்றினை விளித்து வைத்து, "சந்த்ரே த்ருஷ்டி ஸமாகம:" என்பான் என்? என்னில், 'காணுதலோடு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, சந்திரதரிசனம், தாரகமாமாறு போன்று உன்னுடைய ஸ்பரிசமும் தாரகம் என்கைக்காக என்றபடி.

3. "வாய்கள்கொண்டு" என்பதற்குக் கூறிய இரண்டாவது பொருளில், வார்த்தைகளுக்குத் தூய்மை யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அற்றது பொருந்தும்படி' என்று தொடங்கி. அற்றது பொருந்தும்படி வார்த்தை சொல்லுதலை, வில்லிபாரதத்துப் பழம்பொருந்து சருக்கத்தால் உணர்க.

வார்த்தை சொல்ல வல்ல வாயைக் கொண்டு. [1]"காணப்பட்டாள் சீதை" என்றாற்போலே. என்னையும் மதுபானம் பண்ணுவித்து நீங்களும் மதுபானம் பண்ணுங்கோள். (3)

## 633.

தூமது வாய்கள் கொண்டுவந்து என்முல்லைகள்மேல் தும்பிகாள்!
பூமது உண்ணச் செல்லில் வினையேனைப் போய்செய்தகன்ற
மாமது வார்தண் துழாய்முடி வானவர் கோனைக்கண்டு
[2]நாம்இதுவோ தக்கவாறு? என்னவேண்டும் கண்டீர் நுங்கட்கே.

**பொ - ரை :**—நான் வளர்க்கிற முல்லைகளின்மேலே தங்கியிருக்கின்ற தும்பிகளே! பூக்களிலேயுள்ள மதுவினை உண்ணுவதற்குச் சென்றால், பரிசுத்தமான இனிய வார்த்தைகளோடு சென்று, தீயவினைகளையுடைய என்னிடத்தில் பொய்யான கலவிகளைச்செய்து நீங்கிய, சிறந்த மதுவானது ஒழுகுகின்ற குளிர்ந்த திருத்துழாய்மாலையைத் தரித்த திருமுடியையுடைய நித்தியசூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானை நீங்கள் கண்டு, உமக்கு இதுவோ தக்கவாறு என்று கூறவேண்டும்.

**வி - கு :**—தும்பிகாள்! நுங்கட்குச் செல்லில், வாய்கள் கொண்டு சென்று கண்டு நாம் இதுவோ தக்கவாறு என்ன வேண்டும் என்க. மது - இனிமை. வாய்கள் - வார்த்தைகள். [3]வந்து, என்பது, இடவழுவமைதி; சென்று என்பது, பொருள். [4]நாம்: ஈண்டு, முன்னிலைக்கண் வந்தது. நுங்கட்கு என்பதற்கு, நீங்கள் என்பது பொருள். கண்டீர்: முன்னிலையசைச்சொல்.

---

1. "த்ருஷ்டா ஸீதா" என்பது, ஸ்ரீராமா. சுந். 65 : 10.

2. "யாம் இதுவோ" என்பது முன்புள்ள பாடம்.

3. இதனை,

"செலவினும் வரவினும்" (தொல். சொல். சூ. 28.) என்னும் பொதுச் சூத்திரத்தாற் கொள்க.

4. செங்கயல்போல் கருநெடுங்கண் தேமருதா மரைஉறையும்
நங்கைஇவ ரெனநெருநல் !நடந்தவரோ நாம்என்னக்
கொங்கைகளும் குழைக்காதும் கொடிமூக்கும் குறைத்தழித்தால்
அங்கணர சே ஒருவர்க் கழியாதோ அழகென்றாள்.

என்றவிடத்து "நாம்" என்பது முன்னிலைக்கண் வந்துள்ளமை காண்க. "காமரைவென்ற கண்ணோன்" (திருக்கோவையார் செய். 164.) என்ற செய்யுளின் உரையில், 'நாம் என்னும் முன்னிலை யுளப்பாட்டுத் தன்மை உயர்வுதோன்ற முன்னிலைக்கண் வந்தது' என்றார் பேராசிரியர்.

ஈடு :—நான்காம்பாட்டு. [1]என்னை நோவுபடுத்திச் சென்று எட்டாநிலத்திலே ஓலக்கம் இருக்கை தக்கோர்மையோ?என்று திருநாட்டிலே சென்று சொல்லுங்கோள்! என்று சில தும்பிகளைக் குறித்துச் சொல்லுகிருள்.

தூமது வாய்கள்கொண்டு வந்து-[2]பரிசுத்தமாய் இனிதான பேச்சையுடைய வாயைக் கொண்டு சென்று. வந்து என்றது, சென்று என்றபடி. அன்றிக்கே, துக்கத்தையுடையவர்களுக்கு உஜ்ஜீவனத்திற்குக் காரணமாய் இனிதுமான பேச்சினைக்கொண்டு என்னுதல். என் முல்லைகள்மேல் தும்பிகாள் - [3]உடன்கேடராய் ஒக்கப் பட்டினிவிட்டுக் கிடப்பாரைப்போலே அன்றே நீங்கள் கிடக்கிறது.[4]இவள்குழலில் பூவைப்போன்று, உத்தியானத்திலுள்ள பூக்களும் சருகாயன்றே கிடப்பது; [5]"மரங்கள்எல்லாம் உலர்ந்து கிடந்தன" என்னுமாறுபோலே. பூமது உண்ணச் செல்லில்-[6]மதுவையே உண்பவைகள் ஆகையாலே பூக்கள்உள்ள இடம் தேடி மதுபானம் செய்யப்போகக் கடவீர்கோள் அன்றே.[7] இவள் பக்கத்தில் உள்ளவை அன்றே உருவிக் கிடப்பன; அங்கு உள்ளவை எல்லாம் செவ்விபெற்

1. "தும்பிகாள்! வினையேனைப் பொய்செய்தகன்ற வானவர்கோனைக் கண்டு நாம் இதுவோ தக்கவாறு என்னவேண்டும் கண்டீர்" என்பனவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர். தக்கோர்மை - அருள். தும்பி வேறு, வண்டு வேறு; "தும்பி" என்பது, வண்டுகளில் ஒருவகை. "கலித்தொகை செய்யுள். 30. காண்க.

2. தூய்மையும் இனிமையும் வாய்க்கு இல்லாமையாலே, 'பரிசுத்தமாய் இனிதான பேச்சையுடைய' என்கிருர். "பூமது உண்ணச் செல்லில்" என்று இருக்கையாலே 'வாயைக்கொண்டு சென்று' என்கிருர். "இதுவோ தக்கவாறு?" என்றதற்குத் தகுதியாக "வாய்" என்பதற்கு 'வார்த்தை' என்று பொருள் அருளிச்செய்கிருர் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

3. முல்லைகள்மேல் என்னுமல் "என் முல்லைகள்மேல்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'உடன்கேடராய்' என்று தொடங்கி.

4. ஒக்கப் பட்டினி விடுவான் என்? இவள் முல்லையில் மது இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவள் குழலில்' என்று தொடங்கி.

5. இவள் மலர்கள் சருகானல், உத்தியானத்திலுள்ள மலர்களும் சருகாக வேண்டுமோ? என்ன, 'மரங்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" என்பது, ஸ்ரீராமா. அயோத். 59: 4.

6. மது உண்ணச் செல்ல வேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'மதுவையே' என்று தொடங்கி.

7. அவனுக்கும் விரஹ துக்கம் உண்டாகையாலே, அங்கும் மதுவற்றிருராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவள் பக்கத்தில்' என்று தொடங்கி.

றிருக்குமன்றே;[1]மாமதுவார்தண்துழாய் முடி வானவர்கோன் அன்றே.[2]அவர்களில் இவனுக்கு வேற்றுமை, கவித்தமுடியும் இட்ட மாலையுமே அன்றே. [3]இங்கு உள்ள வண்டுகள்போலே பட்டினி கிடக்கவேண்டா அன்றே அங்கு உள்ளார்க்கு. மது வார் தண் துழாய் - [4] விரஹத்திலும் ஊற்றுமாருத இடம் காணும் அவ்விடம்.

பூ மது உண்ணச் செல்லில் - [5] இவள், தன்குழலிற் பூவும் வாடி மதுவும் வற்றினபின்பு இனி இந்த உலகில் உண்டாக மாட்டாது என்றிருக்கிறுள்; இனி உலகத்தையுடைய சர்வேசு வரன்பக்கலிலே உண்டாகில் உண்டாமத்தனை என்று இருக் கிறுள். வினையேனை-அவன் என்பக்கல் [6]பேசின பேச்சுக்களை யும் வியாமோகத்தையும் 'மெய்' என்று இருக்கும்படியான பாவத்தைச்செய்த என்னை. வினையேனைப் பொய்செய்து-[7]"கடு கப் பிரியில் இடிவிழுந்தாற்போலே இவள் முடியும்' என்று பார்த்து, 'நின்னைப்பிரியேன், பிரியிலும் ஆற்றேன்' என்றாற் போலே இருக்க, அவன் பிரிவினை உணர்த்தினன்; அதற்கு நான் கருத்து அறியாமல் கெட்டேன். அறிந்தேனுகில்போகா

1. செவ்விபெற்றிருக்கும் என்பதற்குக் காரணம் காட்டுகிறுர் 'மாமது வார்' என்று தொடங்கி.

2. "தண்துழாய்முடி" என்ற விசேடணங்கட்கு, பாவம் அருளிச் செய்கிறுர் 'அவர்களில்' என்று தொடங்கி. என்றது, முடியுடையவராலும் திருத்துழாயோடு கூடின முடி இல்லை என்றபடி.

3. "மாமதுவார்" என்றதனைக் கடாக்ஷித்து, "வானவர்கோன்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'இங்குள்ள வண்டுகள் போலே' என்று தொடங்கி.

4. "வார்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'விரஹத்திலும்' என்று தொடங்கி. வார்தல் - ஒழுகுதல்.

5. அவன்பக்கல் செல்லுகிறது என்? இவள் பரிசரத்தில் இல்லையாகில், இந்த உலகிலும் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'இவள், தன்குழலில்' என்று தொடங்கி.

6. பேசின பேச்சுக்கள் - 'பேதை! நின்னைப் பிரியேன்' என்பது போன்று பேசின பேச்சுக்கள். 'வியாமோகம்' என்றது, கையைக் காலைப் பிடித்துப் பரிமாறின வியாமோகத்தைக் குறித்தபடி.

7. பேசின பேச்சுக்களையும், அவற்றை மெய் என்று இருக்கும் பிரகாரத்தையும் விவரியாநின்றுகொண்டு, பிரிய நினைக்கிறவன், வறிதே போக ஒண்ணுதோ? இப்படிச் சொல்லிப் பிரியவேண்டுமோ? என்கிற சங்கையையும் நீக்குகிறுர் 'கடுகப்பிரியில்' என்று தொடங்கி.

தபடி காற்கட்டலாயிற்றுக் கண்டீர்! பொய்செய்து-[1]கலவிக் காலத்தில் குறைவு இருக்கிறபடி. [2]பலகாலம்ஜீவிக்கச்செய்தேயும் 'ஒரு கனவாய்ப் போயிற்று' என்பர்களே அன்றோ, பிரிவோடே முடிவு பெறுகையாலே. [3]கனவு என்றும், இந்திரஜாலம் என்றும், பொய் என்றும் முடிவுபெறாத போகத்தைச் சொல்லக்கடவது. பொய்செய்து அகன்ற - [4]அகன்று போவதற்கு இட்ட வழி இருக்கிறபடி. என்றது, 'கலவி' என்று பெயரை இட்டு, முடிவு போகக் கலவாதே வஞ்சித்து அகன்றான் என்றபடி. மா மதுவார் தண்துழாய் முடி-[5]இங்கு உள்ளதும் அங்கே ஆகையாலே மது இரட்டித்திருக்கும் அன்றோ. தலையான மதுவுமே அதுதான். கலவியிலும் பிரிவிலும் ஒரு படிப்பட்டிருக்குமவனைக் கண்டு. வானவர்கோனைக் கண்டு - [6]தந்தாமைப் பேணுவார்க்கு உடம்பு கொடுத்திருக்குமவனைக் கண்டு. என்றது, "நீ சிறிது ஆபத்தை அடைந்தாயாயின்

---

1. "பொய் செய்து" என்பதற்கு, மேலே அருளிச்செய்த பொருளைத் தவிர, நிறைவுபெறாத கலவி என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'கலவிக் காலத்தில்' என்று தொடங்கி.

2. நிறைவுபெறாத கலவி என்பதனை விளக்குகிறார் 'பலகாலம்' என்று தொடங்கி. இங்கு,

> குக்கூ என்றது கோழி அதனெதிர்
> துட்கென் றன்றென் தூய நெஞ்சம்
> தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்
> வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே. (குறுந். 157.)

என்ற செய்யுள் ஒரு புடை ஒப்பு நோக்கலாகும்.

3. "பொய்" என்பது, நிறைவுபெறாத கலவியைச் சொல்லுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கனவு என்றும்' என்று தொடங்கி.

4. ஆயின், கலத்தல் எற்றிற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அகன்று போவதற்கு' என்று தொடங்கி. என்றது, கலந்தால் ஒழியப் பிரிவு கூடாமையாலே, துக்கப் படுத்துகைக்கு இட்டவழி என்றபடி. அதனை விவரணம் செய்கிறார் 'கலவி' என்று தொடங்கி.

5. "மாமது" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இங்குள்ளதும்' என்று தொடங்கி. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'தலையான' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'கலவியிலும்' என்று தொடங்கி.

6. "வானவர்கோன்" என்கிறவனுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'தந்தாமை' என்று தொடங்கி. தந்தாமைப் பேணுகையாவது, அவன் இங்கு வந்தால் தங்கள் அநுபவத்திற்குப் பிரிவு வரும் என்று இருத்தல். அதனை விவரணம் செய்கிறார் 'நீ சிறிது' என்று தொடங்கி.

> "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம"

என்பது, ஸ்ரீராமா. யுத். 41; 4. 289-ஆம் பக்கம் கீழ்க் குறிப்புப் பார்க்கவும்.

சீதையால்தான் எனக்குப் பயன் யாது?" என்றமை தவிர்ந்து பழைய உறவு கொண்டாடி இருக்குமவனைக் கண்டு என்றபடி.

நாம் - குற்றத்தையுடையவனாகையாலே தன்குற்றத்தை நினைத்து, ஓலக்கம் இருக்கிறானாகைப் பராக்கடித்து நெருங்குவதற்கு அரியவனாயிருப்பான்; முதன்மை கண்டு கூசாதே நின்று உம்மைக்காணும் என்பது; இப்படி விளித்தவாறே முகம் பார்க்கவேண்டிவரும்; அவன் பார்த்த முகம் மாறுதற்கு முன்னே,'இதுவோ தக்கவாறு'என்பது.[1]"பிறர் துக்கத்தைப் பொறாமையாகிற மிக உயர்ந்த தர்மமானது தேவரீரிடமிருந்தே என்னால் கேட்கப்பட்டது" என்னும்படி சிலர்க்குச் சொல்லிவைத்தீரே. [2]"காட்டுஈக்களையும், கொசுக்களையும், பாம்புகளையும் சரீரத்திலிருந்து ஓட்டமாட்டார்", [3]"மாம்சத்தையும் புசிப்பது இல்லை, மதுவையும் குடிப்பது இல்லை" என்றவை எல்லாம் வடிவிலே கண்டோம் அன்றோ. இதுவோ தக்கவாறு - [4]பெண்கொலை புரிந்து வளையம்வைத்து ஓலக்கங் கொடுத்திருக்கையோ தக்கோர்மையாவது? என்னவேண்டும் கண்டீர் - [5]இந்த ஓலக்கத்தையும் இவன் மேன்மையையும் கண்டு 'இதனை எங்ஙனே அழிக்கும்படி?' என்று நீங்கள்

1. இவர் பேரருளாளர் என்னுமிடம் யாங்ஙனம் அறிந்தாள்; என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிறர் துக்கத்தை' என்று தொடங்கி.

"ஸ குருஷ்வ மஹோத்ஸாஹ க்ருபாம் மயிநரர்ஷப
ஆந்ருஶம்ஸ்யம் பரோ தர்மஃ த்வத்தஏவ மயாஶ்ருதஃ"

என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 41. திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. சிலர்க்கு - பிராட்டிக்கு.

2. "தக்கவாறு" என்றதனைச் சுபாவபரமாக்கி, "மா மது வார் தண் துழாய்முடி" என்றதனைக் கடாக்ஷித்து, உன் காதல் தன்மை இதுவோ? என்கிறான் என்கிறார் 'காட்டு ஈக்களையும்' என்று தொடங்கி.

"நைவ தம்ஶாந் ந மஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந்"

என்பது, ஸ்ரீராமா. சுந். 36 : 42.

3. "அருந்து மெல்லட காரிட அருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோ என்று விம்மும்"

என்பது, கம்பராமாயணம்.

'வடிவிலே கண்டோம் அன்றோ' என்றது, மாமதுவார் தண்துழாய் முடியனாயிருக்கையைத் திருவுள்ளம்பற்றி.

4. "தக்கவாறு" என்பதனைக் கிருபாபரமாக்கி, "வினையேனை" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றி, வேறும் ஒருபாவம் அருளிச் செய்கிறார் 'பெண்கொலை' என்று தொடங்கி.

5. என்னுங்கோள் என்னாமல், "என்னவேண்டும் கண்டீர்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இந்த ஓலக்கத்தையும்' என்று தொடங்கி,

கிருபைகொள்ளலாகாது; அவ்வளவில் என்னைப் பார்த்துச் சொல்லுங்கோள். நுங்கட்கே - [1]அவன் அல்லாத உங்களுக்கு இத்தனையும் செய்ய வேணும். இல்லையாகில், இவ்வளவிலே முகங்காட்டின உங்களுக்கும் அவனுக்கும் வாசி இல்லை. நுங்கட்கே-[2]என் முல்லைகள்மேல் தும்பிகள் அன்றோ! உங்கள் ஜீவனம் நீங்களே நோக்கிக்கொள்ளவேணும்: அவன் பெண் கொலை புரிந்து சொரூபஹாநி பாராமல் ஓலக்கம் கொடுத்திருந் தான்; நான் பாடோடிக் கிடந்தேன்; இனி உங்கள் சொரூப ஹாநி நீங்களே போக்கிக் கொள்ளுங்கோள். (4)

634.

நுங்கட்கு யான்உரைக் கேன்வம்மின் யான்வளர்த்த கிளிகாள்!
வெங்கட் புள்ளூர்ந்து வந்து வினையேனை நெஞ்சம்கவர்ந்த
செங்கட் கருமுகிலைச் செய்யவாய்ச் செழுங்கற் பகத்தை
எங்குச்சென் றாகிலும் கண்டுஇதுவோ தக்கவாறு என்மினே!

பொ - ரை:—யான் வளர்த்த கிளிகாள்! உங்களுக்கு யான் ஒன்று சொல்லுகிறேன் வாருங்கோள்; கொடிய கண்களையுடைய பெரிய திருவடியை ஊர்ந்து வந்து, தீவினையேனாகிய என்னுடைய நெஞ்சினைக் கவர்ந்த சிவந்த திருக்கண்களையுடைய கரிய மேகம் போன்றவனை, சிவந்த திருவாயினையுடைய செழுமைபொருந்திய கற்பகம் போன்ற வனை எங்கே சென்றாகிலும் கண்டு, தகுதி இதுவோதான் என்று சொல் லுங்கோள்.

வி - கு:—வெங்கண்-தறுகண்மையுமாம். ஊர்ந்து வந்து கவர்ந்த கருமுகில் என்க.

---

1. "நுங்கட்கே" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் அல்லாத' என்று தொடங்கி. என்றது, நிர்க்குணனானவனைப் போலன்றிக்கே, தயையோடுகூடிய உங்களுக்கு என்றபடி. அதனை விவரணம் செய்கிறார் 'இல்லையாகில்' என்று தொடங்கி.

2. "என் முல்லைகள்மேல் தும்பிகாள்" என்பதற்கு, இரண்டாவதாக ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'என் முல்லைகள்மேல்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அவன் பெண்கொலை' என்று தொடங்கி. என்றது, என் முல்லைகள்மேல் வாழ்கின்ற தும்பிகள் ஆகையாலே, என்விஷய மான உங்கள் பாரதந்திரியத்திற்குக் கேடுவாராமல் உங்களுக்கு ஜீவனமான என்னை நோக்குங்கோள் என்றபடி. பாடோடிக் கிடத்தல் - ஒரு புறமாகப் படுத்திருத்தல்.

ஈடு :—ஐந்தாம்பாட்டு. [1]தன்னுடைய கிளிகளைக் குறித்து, எங்கேனும் சென்றாகிலும் அவனைக் கண்டு இதுவோ உம்முடைய தக்கோர்மை இருக்கும்படி! என்னுங்கோள் என்கிறாள்.

நுங்கட்கு யான் உரைக்கேன் - [2]யாருக்குச் சொல்லும் வார்த்தையை யாருக்குச் சொல்லுகிறது? [3]தனக்கு முன்னே ஆற்றாமையோடே அன்றோ அவைதாம் இருக்கின்றன; [4]ஆற்றாமை சொல்லுவியாதது இல்லையன்றோ. நுங்கட்கு யான் உரைக்கேன் - [5]உங்களுக்குச் சொல்லுமது அன்று; நான் சொல்லுமது அன்று. வியசனத்துக்கு உரியவர்கள் இருக்க, வேறே சிலர் வார்த்தை சொல்லுமாறு போலே. வம்மின் - [6]'இவளைப் பிழைப்பித்தோமாம் விரகு ஏதோ?' என்று சிந்திக்கிற உங்களுக்கு ஒருவிரகு சொல்ல வாருங்கோள். யான் வளர்த்த கிளிகாள் - [7]என்வயிற்றிலே பிறந்த உங்களுக்கு அவன் பரிகரம்போலே செருக்கு அடித்திருக்கக் காலம் உண்டோ? செருக்கு அடித்திருக்கப் பிறந்தீர்கோளோ! நுங்

1. "எங்குச் சென்றாகிலும் கண்டு" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "நுங்கட்கு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'யாருக்குச் சொல்லும்' என்று தொடங்கி. என்றது, என் ஆற்றாமையைக் கண்டு என் காரியத்தில் ஒருப்படாதிருப்பார்க்குச் சொல்லுமதனை, அதிலே ஒருப்பட்டிருக்கிற உங்களுக்குச் சொல்லவேண்டுமோ? என்றபடி.

3. அப்படிச் சொல்லுகைக்கு அவற்றுக்கு ஆற்றாமை உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தனக்கு முன்னே' என்று தொடங்கி.

4. ஆனால், சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆற்றாமை' என்று தொடங்கி.

5. 'யாருக்குச் சொல்லும் வார்த்தையை யாருக்குச் சொல்லுவது?' என்று மேலே அருளிச்செய்த வாக்கியத்தை அநுவதித்துக்கொண்டு, "யான் உரைக்கேன்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உங்களுக்கு' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'வியசனத்துக்கு', என்று தொடங்கி. 'சிலர்' என்றது, சிலர்க்கு என்றபடி.

6. கிளிகள் வியசனத்தை அறிந்திருப்பவை ஆகையாலே சொல்லாமல் தாமே காரியம் செய்யுமாகில் "வம்மின்" என்று அழைப்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவளை' என்று தொடங்கி.

7. "யான் வளர்த்த" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'என் வயிற்றிலே' என்று தொடங்கி. 'அவன் பரிகரம்போலே' என்றது, "வெங்கட்புள்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

கட்கு - [1]"சுகமும் துக்கமும் நமக்குச் சமம்" என்றிருக்கிற உங்களுக்கு. யான்-[2]உங்கள்மேலே என்னுடைய எல்லாப் பாரங்களையும் வைத்திருக்கிற நான். உரைக்கேன்-[3] நீங்கள் அறியாதது உண்டாய்ச் சொல்லுகிறேன் அல்லேன்; ஆற்றாமையாலே சொல்லுகிறேன். வம்மின்-[4]முன்கை மூன்று காதமாய் இருக்கிறபடி. யான் வளர்த்த - நெய்யமர் இன் அடிசில் நிச்சல் பாலொடும் ஊட்டி வளர்த்த. கிளிகாள்-[5]"வளர்த்ததனால் பயன் பெற்றேன்" என்கிறபடியே, அவன் திருநாமங்களை நீங்கள் சொல்லக் கேட்டிருக்கவும் அமையும் அன்றோ; [6]அதுதானே "கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்" என்கிறபடியே, ஆற்றாமைக்குக் காரணமாகையாலன்றோ உங்களை அவன்பக்கல் போகவிடத் தேடுகிறது.

வெம்கண் புள் ஊர்ந்து வந்து - வெவ்வியவான கண்களையுடைத்தான புள்ளை நடத்திக்கொண்டு வந்து. வருகிறபோதே வழியில் விரோதிகளைப் போக்குகையிலே சினத்த கண்களையுடையவனாதலின் '**வெம்கண்**' என்கிறது. அன்றிக்கே, பிரித்துக்கொண்டு போகிறபோது கண்பாராதே பிரித்துக்கொண்டு

---

1. 'உங்களுக்குச் சொல்லுமது அன்று, நான் சொல்லுமது அன்று' என்று மேலே அருளிச்செய்ததற்குக் காரணம் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி, மீளவும், பதங்கட்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'சுகமும் துக்கமும்' என்று தொடங்கி.

"ஏகம் துக்கம் சுகஞ்ச நௌ"
என்பது, ஸ்ரீராமா. கிஷ். 5: 18.

2. 'உங்களுக்குச் சொல்லுமது அன்று' என்றதற்குக் காரணத்தை அருளிச்செய்து, 'நான் சொல்லுமது அன்று' என்றதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'உங்கள்மேலே' என்று தொடங்கி.

3. 'ஆற்றாமை சொல்லுவியாதது இல்லையன்றோ' என்று மேலே அருளிச்செய்ததனை "உரைக்கேன்" என்ற பதத்திலே ஏறிட்டுக் காட்டுகிறார் 'நீங்கள்' என்று தொடங்கி.

4. கிளி கையின்மேலேயன்றோ இருக்கிறது; ஆயிருக்க, "வம்மின்" என்கிறது என்? என்ன; 'முன்கை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. "யான் வளர்த்த கிளிகாள்!" என்று அழைக்கின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'வளர்த்ததனால்' என்று தொடங்கி. இது, திருநெடுந்தாண்டகம். 14.

6. கேட்டிருத்தலே அமைந்ததாகில், போகவிடுகிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அதுதானே' என்று தொடங்கி. 'கண்ணன் நாமமே' என்பது; திருவாய். 9. 5: 8. அதுதானே - திருநாமந்தானே.

போனவனாதலின் '**வெம்கண்**' என்கிறது என்னுதல். [1]" அக்குரூரன் கொடிய மனமுடையவன்" என்னுமாறு போலே. **வெம்கண் புள் ஊர்ந்து வந்து** - [2]பட்டம் கட்டின யானையிலே ஏறிக் காதலியைக் கிட்டும் இராஜபுத்திரனைப் போலே. [3]"அருளாழிப் புட் கடவீர் அவர் வீதி ஒருநாள்" என்றே அன்றோ அடியிலே தூதுவிட்டது, அப்படியே வந்தபடி. **வினையேனை** - [4] அவனைப் போலே இரண்டு மனம் படைக்கப் பெறாத பாவத்தைச் செய்தேன்; புணர்ச்சிக் காலத்தில் அழிதற்கும், பிரிவு காலத்தில் தரித்திருக்கைக்குமாக இரண்டு மனம் உண்டாகப் பெற்றிலேன். **நெஞ்சம் கவர்ந்த** - நாட்டார்க்கு மனம் மலர்தற்குக் காரணமான விஷயம் என்மனத்தை அழிக்கும்படி ஆவதே! [5]சாரத்தை எடுத்துக்கொண்டவனாய்க் கோதை இட்டு வைத்துப்போனான்; பூக்கொண்டு புட்டில் பொகடுவாரைப் போலே. [6]அறமணத்தன்றோ இவர் மனம் இருப்பது; "பூசும் சாந்து என் நெஞ்சம்" என்னும்படி. **செம் கண் கருமுகில்** - கண்களாலே குளிர நோக்கி,வடிவினை முற்றூட்டு ஆக்கிநின்ற நிலை. அன்றிக்கே, இத் தலையோடே வந்து கலந்த பின்பு,அத் தலைக்கு வந்த நிறைவினைச் சொல்லவுமாம். அன்றிக்கே, பிரிவினைப் பற்றிப் பேசிக் கண்களாலே குளிர நோக்கி, அவன் விளைநீர் அடைத்துக்கொண்டு நின்றபடி.

**செய்ய வாய்**-நூற்றுக்கணக்கில் புனைந்துரைகளைச் சொல்லப்புக்குப் புன்சிரிப்பினைச் செய்கிற திருவாய். **செழும் கற்பகத்தை** - விலக்ஷணமான கற்பகத்தை; வைலக்ஷண்யமாவது, தானே விரும்பித் தன்னைக் கொடுக்கை. கற்பகம், தன்னைக் கொடுக்கவும்மாட்டாது விரும்பவும்மாட்டாதே; இவன், தன்

---

1. "அக்ரூர: க்ரூரஹ்ருதய:" என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 18: 30.

2. "புள்ளூர்ந்து வந்து நெஞ்சம் கவர்ந்த" என்று சேர்த்து, பாவம் அருளிச்செய்கிறார் 'பட்டம் கட்டின' என்று தொடங்கி.

3. புள்ளூர்ந்து வரவேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'அருளாழி' என்று தொடங்கி. இது, திருவாய். 1. 4: 6.

4. "வினையேன்" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவனைப்போலே' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'புணர்ச்சிக் காலத்தில்' என்று தொடங்கி.

5. சரீரத்தைவிட்டு மனத்தினைக் கவருவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சாரத்தை' என்று தொடங்கி. புட்டில்-பூப்பெட்டி.

6. இவர் மனம் பூ ஆயினமைக்குக் காரணமும், அதற்குப் பிரமாணமும் காட்டுகிறார் 'அறமணத்தன்றோ' என்று தொடங்கி. 'பூசுஞ்சாந்து' என்பது, திருவாய். 4. 3: 2.

னைக் கொடுக்க வல்லவன் அன்றோ. அன்றிக்கே,[1] தான் கடக்க இருந்தாலும் தன் இரண்டு உலகத்தின் செல்வங்களையும் நான் நினைத்தார்க்குக் கொடுக்கும்படி எனக்குத் தந்தவனை என்னுதல். எங்குச் சென்றாகிலும் கண்டு - [2]'ஆள் வாராநின்றது' என்று கேட்டு ஒலக்கத்தைக் கிளப்பாக் கடக்கப் போய்த்திரை வளைத்துக்கொண்டிருப்பர். அன்றிக்கே, புகை புக்க இடம் எங்கும் புகுங்கோள் என்னுதலுமாம். என்றது, பரத்துவம் வியூகம் விபவம் அர்ச்சாவதாரம் ஆகிய இவற்றைக் குறித்த படி."அந்தப் பரமாத்வை ஆத்மா அறிகிறான் இல்லை" என்கிற படியே, ஒளித்திருக்கும் இடம் எங்கும் புக்கு. [3]"இலங்கையில் அந்த ஜானகியைக் கண்டிலேனாகில் இந்த வேகத்தோடு கூடவே சுவர்க்கலோகத்திற்குச் செல்லுவேன்" என்கிறபடியே, '**பரமபதத்தில் கண்டிலோம்**' என்று மீள ஒண்ணாதே. இதுவோ தக்கவாறு என்மின்-[4] இடபேதம் உண்டானாலும் பாசுரம்

---

1. "செழுங்கற்பகம்" என்பதற்கு, புணர்ச்சிக் காலத்தில், தானே விரும்பினவனாய்த் தன்னைக் கொடுப்பான் என்று மேலே பொருள் அருளிச் செய்து, பிரிந்திருக்கும் நிலையில், இரண்டு உலகங்களையும் நான் நினைத்தார்க்குக் கொடுக்கும்படி எனக்குத் தந்தவன் என்று வேறும் ஒரு கருத்து அருளிச் செய்கிறார் 'தான் கடக்க இருந்தாலும்' என்று தொடங்கி.

2. "எங்குச் சென்றாகிலும்" என்றதற்கு, இருவகையில் கருத்து அருளிச்செய்கிறார். அவற்றுள், முதல் கருத்து, 'ஆள்வாராநின்றது' என்று தொடங்கும் வாக்கியம். என்றது, பரமபதத்தில் ஒலக்கத்தில் இராமல் அந்தப்புரத்திலே இருந்தால் அங்கே சென்றாகிலும் என்றபடி; இந்தக் கருத்து, மேல் திருப்பாசுரத்தில் "வானவர்கோனைக் கண்டு" என்றதற்கு மிகப் பொருந்துவதாம். இரண்டாவது கருத்து, 'அன்றிக்கே' என்று தொடங்கும் வாக்கியம். புகைபுக்க இடம் - ஈசுவர சம்பந்தமுள்ள இடம். அதனை விவரணம் செய்கிறார் 'பரத்துவம்' என்று தொடங்கி.

3. மேல் திருப்பாசுரத்தில் "வானவர்கோனைக் கண்டு" என்று கூறி, இங்கு "எங்குச் சென்றாகிலும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இலங்கையில்' என்று தொடங்கி.

"நஹி த்ரக்ஷ்யாமி யதி தாம் லங்காயாம் ஜனகாத்மஜாம்
அநேநைவ ஹி வேகேந கமிஷ்யாமி ஸுராலயம்"

என்பது, ஸ்ரீராமா. சுந் 1: 40.
என்றது, திருவடி கூறியது போன்று, 'பரமபதத்திலே கண்டிலோம்' என்று மீளாமல், நீங்களும் அவன் இருக்கிற இடங்கள் எங்கும் செல்லுங்கோள் என்றபடி.

4. இடம் வேறுபட்டால் சொல்லக்கூடிய வார்த்தையில் வேறுபாடு உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இடபேதம் உண்டானாலும்' என்று தொடங்கி.

இதுவே. [1] பிறர் மனத்தினையும் கவர்ந்து தன் மனத்தையும் கொண்டு கடக்க இருக்கையோ தக்கோர்மையாவது? [2] அவனுக்கு அருள் இல்லை என்கையாவது, தர்மியை இல்லை என்கை அன்றோ. தர்மியைச் சேர்ந்துள்ளதான கிருபையும் எங்கள் பக்கல் காணாமையாலே தமக்கு அதுவும் இல்லை என்று சொல்லுங்கோள். நீர்மை கொண்டாடி இருப்பார்க்கு இது அல்லது மர்மம் இல்லை; இதனையே சொல்லுங்கோள். (5)

## 635.

**என்மின்னு நூல்மார்வன் என்கரும் பெருமான்என் கண்ணன்**
**தன்மன்னு நீள்கழல்மேல் தண்துழாய் நமக்கன்றி நல்கான்**
**கன்மின் கள்என்றுஉம்மையான் கற்பியா வைத்தமாற் றம்சொல்லிச்**
**சென்மின்கள் தீவினை யேன்வ ளர்த்த சிறுபூ வைகளே!**

**பொ - ரை:**—தீவினையேன் வளர்த்த சிறிய பூவைகளே! என் மின்னுநூல் மார்பன், என் கரும்பெருமான், என்கண்ணன், தன்னுடைய நீண்ட திருவடிகளின்மேலே பொருந்தியிருக்கின்ற குளிர்ந்த திருத்துழாயினை நமக்கு அன்றிக் கொடான்; கற்றுக்கொள்ளுங்கோள் என்று உங்களை யான் கற்பித்து வைத்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு செல்லுங்கோள்.

**வி - கு:**—மின்னுநூல் - பூணுநூல். நமக்கு: தனித் தன்மைப் பன்மை. உளப்பாட்டுப் பன்மையுமாம். கன்மின்கள், சென்மின்கள் என்பனவற்றில் 'கள்' அசைநிலை. சிறுபூவைகளே சொல்லிச் சென்மின்கள் என்க.

**ஈடு:**—ஆறும்பாட்டு. [3] அடியார்களோடு ஏகரசன் ஆகையாலே நம் விருப்பத்தை முடித்துவைக்குமவன்பாடேசென்று,

1. "நெஞ்சம் கவர்ந்த" என்றதனைக் கடாக்ஷித்து, "இது" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பிறர் மனத்தினையும்' என்று தொடங்கி.

2. பல திருப்பாசுரங்களிலும் "இதுவோ தக்கவாறு" என்பதற்கு இருவகையாக, பாவம் அருளிச்செய்கிறார் 'அவனுக்கு' என்று தொடங்கியும், 'நீர்மை' என்று தொடங்கியும். விவரணம் செய்கிறார் 'தர்மியைச் சேர்ந்துள்ளதான' என்று தொடங்கி. தர்மி - சர்வேசுவரன்.

3. "தண்துழாய் நமக்கு அன்றி நல்கான்" என்றதனைத் திருவுள்ளம் பற்றி 'அடியார்களோடு' என்று தொடங்கியும், "கற்பியாவைத்த" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இதுவோ தக்கவாறு' என்று தொடங்கியும் அவதாரிகை அருளிச்செய்கிறார்.

இதுவோ தக்கவாறு என்னுங்கோள் என்று சில பூவைகளைக் குறித்துச் சொல்லுகிருள்.

என் மின்னு நூல் மார்வன் -[1] தன் திருமேனியிலே சாத்தச் செய்தே என்மனத்திலே இட்டாற்போலே பிரகாசிக்கிற பூணு நூலைக் காட்டி என்னைத் தனக்கே உரியவளாக்கினவன்.[2]என் சரக்கானவன் கடக்க இருக்குங்காட்டில் என் சரக்கைப் பிறர்க்கு ஆக்குமோ? [3] பூணுநூலின் அழகினை நினைவூட்டி என் நெஞ்சில் இருளை அறுத்தவன். [4]தன் திருமேனியில் சாத்தின நூலைக் காட்டி என்னை நூலிலே வரச்செய்தான். என் கரும் பெருமான் - [5]மேகத்திலே மின்னினாற்போலே அந்தப் பூணு நூலுக்குப் பரபாகமான வடிவை எனக்கு ஆக்கி என்னை அடிமைகொண்டவன். என் கண்ணன் - [6]இப்படிகளாலே என்னைச் சேர்த்துத் தன்னை எனக்கு ஆக்கினவன். என், என், என் என்று பதங்கள்தோறும் சொல்லுகையாலே, ஒப்பனை அழகிலும், வடிவழகிலும், சௌலப்யத்திலும் தனித்தனியே ஈடுபட்டபடி. தன் மன்னு நீள் கழல்மேல் தண்துழாய் நமக்கு அன்றி நல்கான் - [7] எல்லாம் செய்தாலும் "அவன் திருமேனியும் பக்தர்களுக்காகவே இருக்கிறது" என்று இருக்கிற திரு

1. "என்" என்றதனை மின்னு நூலோடு கூட்டி, பாவம் அருளிச்செய்கிருர் 'தன் திருமேனியிலே' என்று தொடங்கி.

2. "என்" என்றதனை, மார்வன் என்ற பதத்தோடு கூட்டி, பாவம் அருளிச்செய்கிருர் 'என் சரக்கானவன்' என்று தொடங்கி. என் சரக்கை - திருத்துழாயை.

3. "மின்னு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'பூணுநூலின்' என்று தொடங்கி.

4. சிலேடையாக அருளிச்செய்கிருர் 'தன் திருமேனியில்' என்று தொடங்கி. நூலிலே வரச்செய்தான் - சாஸ்திரவஸ்யனுக்கினுன்.

5. மேலே உள்ள பதத்தையும் கூட்டிக்கொண்டு "என் கரும் பெருமான்"என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'மேகத்திலே' என்று தொடங்கி.

6. 'இப்படிகளாலே' என்றது, ஒப்பனை அழகு, வடிவழகுகளாகிறபடிகளாலே என்றபடி.

7. தன்னை உபேக்ஷித்திருக்கிறவனை, "நமக்கு அன்றி நல்கான்" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'எல்லாம் செய்தாலும்' என்று தொடங்கி.

"நதேரூபம் நசஆகாரஃ நஆயுதாநி நசாஸ்பதம்
ததாபிபுருஷகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஶஸே"

என்பது, ஜிதந்தா, 5.

மேனியைப் பிறர்க்கு ஆக்கான்.[1] இத்திருவாய்மொழிக்கு, நிதானமான பாட்டு அன்றோ இது. [2] அடியார்கட்குப்பரதந்திரப்பட்டவனுகையாலே, '**அடியார்கட்குச்செல்வமான பின்பு அறிவிக்க வரும்**' என்று ஐகரஸ்யம் பற்றுசாகத் தூதுவிடுகிருள். தன் நீள் கழல்மேல் மன்னு தண்துழாய் நமக்கு அன்றி நல்கான்-இனிமை அளவிறந்த திருவடிகளிலே பொருந்திச் சிரமத்தைப் போக்கக்கூடிய திருத்துழாயை எவ்வகையிலும் பிறர்க்கு ஆக்கான்.

[3] "ஓ நீண்ட கையையுடைய அநுமாரே! மஹாத்மாவாகிய ஸ்ரீராமனுக்கும் அவருடைய தம்பிமார்கட்கும் அந்த அரச குலத்திற்கும் பிராணனனது என் அதீனமாக இருக்கிறது" என்ருள். என்றது, என்சொல்லியவாறோ? எனின், தம்மையும் தம் முடைமையையும் எனக்கு ஆக்கினவர் என்பதனைக் கூறியபடி. இதுதான் தன் சுபாவம்கொண்டு சொல்லுகிருள் அல்லள்; அவருடைய சுபாவ அநுசந்தானத்தாலே சொல்லுகிருள். [4] "'ஓ வானரங்களுக்குத் தலைவனை சுக்கிரீவனே! அந்தப் புரு

1. 'இத்திருவாய்மொழிக்கு' என்று தொடங்கும் வாக்கியம், பிராசங்கிகமாக வந்தது.

2. 'அவன் திருமேனியும்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிருர் 'அடியார்கட்கு' என்று தொடங்கி.

3. 'அடியார்கட்குப் பரதந்திரப்பட்டவன்' என்று மேலே அருளிச்செய்த வாக்கியத்திற்குச் சம்வாதம் காட்டுகிருர் 'ஓ நீண்ட கையையுடைய அநுமாரே!' என்று தொடங்கி.

> "மயி ஜீவிதம் ஆயத்தம் ராகவஸ்ய மஹாத்மந:
> ப்ராத்ரூணுஞ்ச மஹாபாஹோ தஸ்ய ராஜகுலஸ்ய ச"

என்பது, ஸ்ரீராம. சுந். 37 : 57. திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. சுலோகத்துக்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'தம்மையும்' என்று தொடங்கி. "மஹாத்மந:" என்றதற்குப் பொருள், 'இதுதான்' என்றுதொடங்கும் வாக்கியம். அவருடைய சுபாவமாவது கிருபையும், காதலும்.

4. அடியார்கட்குக் கிருபையாலே பவ்யனாய் இருப்பான் என்பதற்குச் சம்வாதம் காட்டுகிருர் 'ஓ வானரங்களுக்குத் தலைவனை சுக்கிரீவனே' என்று தொடங்கி.

> "ஸஹிதம் ப்ரதிஜக்ராஹ பார்யா ஹர்த்தாரம் ஆகதம்
> கபோதோ வானரச்ரேஷ்ட கிம்புந: மத்விதோ ஜந:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 25.

> பேடையைப் பிடித்துத் தன்னைப் பிடிக்கவந் தடைந்த பேதை
> வேடனுக் குதவி செய்து விறகிடை வெந்தீ மூட்டிப்
> பாடுறு பசியை நோக்கித் தன்னுடல் கொடுத்த பைம்புள்
> வீடுபெற் றுயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமி தன்றோ.

என்பது, கம்பராமாயணம், விபீடணனடைக். 112.

வானது தன் மனைவியை அபஹரித்தவனைத் தன்னைக்கொடுத்துக் காத்தது; என்னைப் போன்றவர்கள் சரணாகதி செய்கிறவனைக் கைக்கொள்ளவேணும் என்பது சொல்லவும் வேணுமோ?" என்ற இடத்தில் சொல்லுவது ஒருவார்த்தை உண்டு. அது, **அருளாளப்பெருமாள் எம்பெருமானாருடைய** அந்திம தசையிலே, 'திருவுள்ளத்தில் ஓடுகிறது என்?' என்ன, '**ஒரு பறவை பெருமாளுடைய திருவுள்ளத்தைப் [1]புண்படுத்திய படி என்! என்று கிடந்தேன்** என்றார்' என்பது. இதற்குக் கருத்தாக **நம்பிள்ளை** அருளிச்செய்யும் வார்த்தை: [2]'**நாம் பண்ணின சரணாகதி, ஆகையாலே பலத்தோடு அவ்யபிசாரியாக மாட்டாது; இனி, சரண்யன் நீர்மையின் ஏற்றத்தாலே நமக்கு ஒருகுறை இல்லை என்கிறது**' என்பது.

நமக்கு அன்றி நல்கான் -[3]தனித்து, இனியது அடியார்களை ஒழிய அநுபவிக்கமாட்டான். கன்மின்கள் என்று உம்மை யான் கற்பியாவைத்த மாற்றம்-[4]நெஞ்சு ஒழிந்தபோது, தனக்குத் தாரகமானவற்றைக் கற்பித்துவைக்கும். நம் முதலிகள் ஓரோ சந்தானங்களாகச் '**சிறியார், பெரியார்**' என்னாதே துவயத்தைக் கற்பித்து வைக்குமாறு போலே. பாதுகாக்கப்படுகின்ற பொருள்களான உங்களைப் பாதுகாக்கின்ற நான் கற்பித்துவைத்த மாற்றம்.[5]மாற்றமாவது,'**நமக்கு அன்றி நல்கான்**' என்று எல்லாநிலைகளிலும் உங்களுக்கு நான் சொல்லிவைத்த

1. 'புண்படுத்தியபடி' என்றது, ஒருபறவை தன்னை அழிய மாறி இப்படி ரக்ஷித்தால், நாம் "பிராணனை விடுதல்" என்னுமது ஒழிய, சேதனன் ஆன வாசிக்கு ஏற்றமாக ஒன்றும் செய்யப்பெற்றிலோம் என்று புண்படுத்தினபடி என்றவாறு.

2. 'நாம்பண்ணின' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, வேடுவனது சரணாகத ஆநுகூல்யாதிகளால் அன்றிக்கே சரண்யமான புறாவினது குணாதிக்யத்தாலே பலம் சித்தித்தது போன்று, நம்முடைய ஆநுகூல்ய சங்கல்பாதிகளாலன்றிக்கே சரண்யனான சர்வேசுவரனுடைய குணாதிக்யத்தாலே பலிக்கும் என்பது. அவ்யபிசாரியாகமாட்டாது - பலத்தோடே கூட்டுவிக்கமாட்டாது.

3. மேலே அருளிச்செய்த ஐகரஸ்யத்தை விவரணம் செய்கிறார் 'தனித்து' என்று தொடங்கி.

4. இவனுக்குக் கற்பிப்பதற்குக் காலம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நெஞ்சு ஒழிந்தபோது' என்று தொடங்கி. நெஞ்சு ஒழிந்தபோது - மனம் தன்னிலையில் நின்றபோது. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'நம்முதலிகள்' என்று தொடங்கி.

5. "மாற்றம்" என்றது, ஐகரஸ்யமாதல், கிருபையாதல். இவற்றையே அருளிச்செய்கிறார் 'மாற்றமாவது' என்று தொடங்கி,

தாதல்; 'இதுவோ தக்கவாறு என்று சொல்லுங்கோள்' என்ற தாதல். சொல்லிச் சென்மின்கள் - [1]அது வழிக்குப் பாதேயம் காணும். அங்கே போனல் சொல்லப் பார்த்திராமல் போகிற போதே சொல்லிக்கொடு போங்கோள். தீவினையேன்-[2]அவை கிடக்கிடுங்கோள்; என்னுடைய பாபம் இருந்தபடி பாருங்கோள்; புத்திரனை விற்கின்றவர்களைப் போன்றவர்கள் ஆனேன். [3]அவனும் நானும் கூட இருந்து உங்களைக் கொண்டாடுகை அன்றிக்கே, உங்களைக்கொண்டு காரியம் கொள்ளும் படியான பாவத்தைச் செய்துள்ளேன். வயிற்றிற் பிறந்தாரை இடுவித்துக் காதலனை அழைத்துக்கொள்ளுதலைப் போன்ற புன்மை இல்லையே. (6)

## 636.

பூவைகள் போல்நிறத்தன் புண்டரீகங்கள் போலும்கண்ணன்
யாவையும் யாவரு மாய்நின்ற மாயன்என் னுழிப்பிரான்
மாவைவல் வாய்பிளந்த மதுசூ தற்குஎன் மாற்றம்சொல்லிப்
பாவைகள்! தீர்க்கிற்றி ரேவினை யாட்டியேன் பாசறவே.

**பொ-ரை:**—பாவைகளே! காயாம் பூவைப்போன்ற திருநிறத்தை யுடையவன், செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையவன், அஃறிணைப்பொருளும் உயர்திணைப்பொருளுமாகி நின்ற மாயவன், என் ஆழிப்பிரான், குதிரைவடிவம்கொண்டு வந்த கேசியினது வலிய வாயினைப் பிளந்த மதுசூதனன் ஆன எம்பெருமானுக்கு நான்சொல்லிய வார்த்தையைச் சொல்லி வினையாட்டியேனுடைய துக்கத்தைத் தீர்க்கின்றீர்களா? என்கிறாள்.

---

1. "சொல்லிச் சென்மின்கள்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அது வழிக்கு' என்று தொடங்கி. பாதேயம் - தோட்கோப்பு. அதற்கே, வேறும் ஒருபாவம் அருளிச்செய்கிறார் 'அங்கேபோனல்' என்று தொடங்கி. என்றது, அவன் வைலக்ஷண்யங்களைக் கண்டால் வாய் எழாதே போகிலும் போம்; ஆதலால், இங்கிருந்துகொண்டே சொல்லிக்கொண்டு போங்கோள் என்றபடி.

2. 'அவை கிடக்கிடுங்கோள்' என்றது, நீங்கள் அங்கே செல்வது, நான் சொன்ன வார்த்தையைச் சொல்லுவது, அவன் வருமது, இவையெல்லாம் கிடக்கட்டும் என்றபடி.

3. "தீவினையேன்" என்பதற்கு, வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'அவனும் நானும்' என்று தொடங்கி. 'புத்திரனை விற்கின்றவர்களைப் போன்றவர்கள் ஆனேன்' என்ற வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'வயிற்றிற் பிறந்தாரை' என்று தொடங்கி.

வி - கு :—பூவை-காயாம்பூ. பாவைகள் : அண்மை விளி. பாசறவு - நிறத்தின் பசுமை அழிதல் ; துக்கம்.

ஈடு :—ஏ ழ ா ம் ப ா ட் டு. [1]"பரமசேதனன் பொகட்டுப் போனுன் ; சிறிது அறிவுள்ள பறவைகள், பறந்துபோவனவும் வேறுஒன்றிலே நோக்குள்ளனவுமாயின; இதற்குக் காரணம், அறிவுள்ளவைகள் ஆகையோ ?' என்று பார்த்து, அறிவு இல்லாததான பாவையை இரக்கிருள். அறிவில்லாத பொருளும் கூட எழுந்திருந்து காரியம் செய்யவேண்டும்படி காணும் இவள்நிலே.

[2]பூவைகள்போல் நிறத்தன்-[3]ஆண் பெண்ணும்படியான நிறம்படைத்தவன். [4]"பார்க்கின்ற ஆடவர்களுடைய கண்ணேயும் மனத்தையும் கவர்கின்றவன்" என்னும்படியே.[5]பேற்றுக்குப் பாவையின் காலிலே விழும்படியான வடிவுபடைத்தவன். பூவைப்பூ போன்ற வடிவையுடையவன். பு ண் ட ரீ க ங் க ள் போலும் கண்ணன் - [6]ஒருபூ ஒருபூவினைப் பூத்தாற்போலே காணும் வடிவும் கண்ணும் இருக்கும்படி ; காயாம்பூ தாமரை பூத்தாற்போலே இராநின்றது.[7]அறிவுடைப்பொருள் அறிவில்

1. மேல் திருப்பாசுரங்களில் எல்லாம் அறிவினையுடைய பறவைகளை இரந்தவள், இத்திருப்பாசுரத்தில் அறிவில்லாத பாவையை இரப்பது என் ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'பரமசேதனன்' என்று தொடங்கி. அறிவில்லாத பொருள் காரியத்தைச் செய்ய மாட்டுமோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அறிவில்லாத பொருளும்' என்று தொடங்கி. பரமசேதனன் - சர்வேசுவரன்.

2. "மாயோன் மேய மன்பெரும் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்" (தொல். பொருள்.)
என்னும் துறையை இங்கு நினைவு கூர்தல் தகும்.

3. இப்போது வடிவழகினைச் சொல்லுதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'ஆண் பெண்ணும்படியான' என்று தொடங்கி.

4. பெண்ணுக்குவதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'பார்க்கின்ற' என்று தொடங்கி. "பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்பது, ஸ்ரீராமா.

5. வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிருர் 'பேற்றுக்கு' என்று தொடங்கி.

6. வடிவிற்கும் கண்ணிற்கும் மலர்களை ஒப்புமை சொல்லுவதற்கு, ரசோக்தியாக அருளிச்செய்கிருர் 'ஒருபூ' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிருர் 'காயாம்பூ' என்று தொடங்கி.

7. திருக்கண்களின் அழகினைச் சொல்லுவதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'அறிவுடைப்பொருள்' என்று தொடங்கி. எல்லாம், தன் காற்கீழே விழும்படியான கண்ணழகு படைத்தவன் என்றபடி. அன்றிக்கே, எல்லாப் பொருள்களின் காற்கீழே தலைவியாகிய தான் விழவேண்டும்படியான கண்ணழகு படைத்தவன் என்னலுமாம்.

லாப்பொருள் என்ற வேறுபாடு அறக் காற்கீழே விழும்படியான திருக்கண் படைத்தவன். யாவையும் யாவருமாய் நின்ற மாயன் - [1] சிலரோடு கலக்கும்போது அவர்கள்தாங்களாய்க் கலக்குமவன். சேதன அசேதனங்களுக்கு ஆத்மாவாய் நின்றவன். [2]"அவற்றை அநுப்பிரவேசித்துச் சேதனமாயும் அசேதனமாயும் ஆனுர்" என்கிறபடியே. [3]புணர்ச்சிக் காலத்தில் ஒரே பொருள் என்னலாம்படி கலக்கவல்லவன்.

மாயன் - அவர்களாய்க் கலவாநிற்கச்செய்தே, தனக்கு அங்கு ஒரு தொற்று அற்றுப் போருமவன். [4]சர்வாந்தர்யாமியாய் இருக்கச்செய்தே, "கர்மபலத்தை அநுபவிக்காமல்வேறுபட்டு நிற்கிற ஈசுவரன் விளங்கிக்கொண்டிருக்கிருன்" என்கிறபடியே, இவற்றின் குற்றங்கள் தன் பக்கல் தட்டாதபடி இருக்கை. [5]உலகமே உருவமாய்க்கொண்டு இவர்களோடு பிரித்து எண்ண ஒண்ணுதபடி நிற்கச்செய்தே, அசித்தினுடைய பரிணமமாதல், சித்தினுடைய இன்பதுன்பங்களாதல் தட்டாதபடி நிற்கை. என்னேடே பரிமாறுமாறு போலே கண்டீர் எல்லாரோடும் கலந்துநின்றே ஒட்டுஅற்று இருக்கும்படி. என்கைக்காக '**யாவையும் யாவருமாய் நின்ற மாயன்**' என்கிருள்; இல்லையாகில், இப்போது இவ்விடத்திற்கு இது தேட்டம் அன்றே. [6]அழுக்குப் பதித்த உடம்பைக் காட்டில் பரஞ்சுடர் உடம்புக்கு உண்டான வாசி சொல்லுகிறது மேல்: என் ஆழிப் பிரான் - [7] தன்னுடைய அசாதாரணமான விக்கிரஹத்தை

---

1. "ஆய்நின்ற" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'சிலரோடு' என்று தொடங்கி. சொற்களுக்குப் பொருள் அருளிச்செய்கிருர் 'சேதந அசேதநங்களுக்கு' என்று தொடங்கி.

2. இதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'அவற்றை' என்று தொடங்கி. "தத்அநுப்ரவிஶ்ய ஸச்ச த்யச்ச அபவத்" என்பது, தைத்திரீய ஆனந். 6.

3. இப்போது, "யாவையும் யாவருமாய்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'புணர்ச்சிக் காலத்தில்' என்று தொடங்கி.

4. "மாயன்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிருர் 'சர்வாந்தர்யாமியாய்' என்று தொடங்கி. "அநஶ்நந் அந்ய: அபிசாகஶீதி" என்பது இருக்குவேதம்.

5. அதனை விவரணம் செய்கிருர் 'உலகமே உருவமாய்க் கொண்டு' என்று தொடங்கி.

6. "ஆழிப்பிரான்" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிருர் 'அழுக்குப் பதித்த' என்று தொடங்கி.

7. "என்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'தன்னுடைய' என்று தொடங்கி.

எனக்கு ஆக்கினவன். [1]'யாவையும் யாவருமாய் நின்ற மாயன்' என்று உலகமே உருவமாய்க்கொண்டு நின்ற நிலையைச் சொல்லிவைத்து, 'என் ஆழிப்பிரான்' என்கிறார் அன்றே: அசாதாரணமான வடிவுக்குத் தாம் ஈடுபட்டபடி. [2]"நீராய் நிலனாய்" என்று வைத்து, "கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்" என்றாரே அன்றே. [3]அவனுக்குப் புறம்பாய் இருப்பது ஒன்று இல்லை என்று சொல்லுவதற்காக, ஜகச்சரீரன் என்ற அளவிலே அதனைப் போன்று இது உத்தேசியமாமோ? [4]"பரஞ்சுடர் உடம்பாய்" என்றும், "அழுக்குப் பதித்த உடம்பாய்" என்றும் ஒன்றைக் குற்றங்கட்கெல்லாம் எதிர்த்தட்டானதாகவும், ஒன்றைக் குற்றம் கலந்ததாகவும் சொல்லிற்று அன்றே.

மாவை வல் வாய் பிளந்த மதுசூதற்கு - [5]இவ்வடிவழகை அநுபவிப்பிக்கைக்கு விரோதிகளை அழியச்செய்தலானது இவனுக்கு எப்பொழுதும் உள்ளது ஒன்று கண்டீர். புழுக்குறித்தது எழுத்தாமாறுபோல் அன்றிக்கே, விரோதிகளை அழித்தல் நித்தியமாயிருத்தலின் '**மதுசூதற்கு**' என்கிறது. என்மாற்றம் சொல்லி - கன்மின்கள் என்று உங்களுக்குச் சொன்னதைச் சொல்லி. பாவைகள் தீர்க்கிற்றிரே-[6]பரமசேதநன்போகட்டுப் போனான், சிறிது அறிவையுடைய இவை போகிறன இல்லை; இனி, நீங்கள் என் துக்கத்தைப் போக்கவல்லீர்கோளோ?

---

1. எனக்கு ஆக்கினவன் என்கைக்கு, இவள் அதிலே ஈடுபட்டவளாய் இருப்பாளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'யாவையும்' என்று தொடங்கி.

2. உலகமே உருவமாயிருக்கும் தன்மையைக் காட்டிலும், அசாதாரண விக்கிரஹம் அநுபவிக்கத் தகுந்தது என்கைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நீராய்' என்று தொடங்கி.

3. அசாதாரண விக்கிரஹத்தைப் போன்று உலகமே உருவமாயிருக்கும் தன்மை உத்தேசியம் இன்றே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவனுக்குப் புறம்பாய்' என்று தொடங்கி.

4. 'பரஞ்சுடர் உடம்பாய்' என்பது, திருவாய். 6. 3: 7.

5. விரோதிகளை அழித்த தன்மையைச் சொல்லுவதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவ்வடிவழகை' என்று தொடங்கி. "மதுசூதன்" என்று உடம்படு புணர்த்திச் சொன்னதன் பாவத்தை அருளிச்செய்கிறார் 'புழுக்குறித்தது' என்று தொடங்கி.

6. சர்வேசுவரன் இருக்க, பறவைகள் இருக்க, பாவையைப் பார்த்துச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரமசேதநன்' என்று தொடங்கி.

[1]விலக்குதல் இல்லாத மாத்திரத்தைக்கொண்டுஇவற்றைக்காரியம் கொள்ளப் பார்க்கிறாள். வினையாட்டியேன் - உங்களைக் கொண்டாடுகை தவிர்ந்து, காரியம் கொள்ளும்படியான துக்கத்தை அடைந்தவளானேன். [2]"மாசுசः" என்று சொன்னவன் விளைத்த சோகத்தை, அசேதனங்கொண்டு தீர்க்க இருக்கிற மஹாபாபியானேன். பாசறவு - துக்கம். (7)

## 637.

பாசற வெய்தி இன்னே வினையேன்எனை ஊழிநைவேன்?
ஆசறு தூவிவெள் ளைக் குருகே![3] அருள் செய்தொருநாள்
மாசறு நீலச் சுடர்முடி வானவர் கோனைக்கண்டு
ஏசறும் நும்மைஅல் லால்மறு நோக்கிலள் பேர்த்துமற்றே.

**பொ - ரை:**—குற்றம் நீங்கிய சிறகுகளையுடைய வெண்மைநிறம் பொருந்திய குருகே! உறவினர்கள்பக்கல் பற்று அற்று, இப்படியே எத்தனை ஊழிக்காலம் வருந்துவேன் வினையேன்? குற்றம் நீங்கிய நீலச் சுடரையுடைய முடியைத் தரித்த நித்தியசூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானைக் கண்டு, குற்றம் நீங்கிய நும்மை அல்லாமல் பின்னர் வேறு ஒரு பொருளை மதித்துப் பார்ப்பது இல்லாதவளானாள் என்று என் மாட்டு அருள்செய்து ஒருநாள் கூறவேண்டும் என்கிறாள்.

**வி - கு:**—குருகே! வானவர்கோனைக் கண்டு நும்மை அல்லால் பேர்த்து மற்று மறு நோக்கு இலள் என்று ஒருநாள் அருள்செய்து கூறுக என்று 'கூறுக' என்னும் வினையைக் கொணர்ந்து கூட்டிப் பொருள் முடிவு காண்க.

**ஈடு:**—எட்டாம்பாட்டு.[4]முன்பே நின்ற குருகினைக் குறித்து, நித்தியசூரிகளைப்போலே உம்மால் அல்லது செல்லாதே, உம்மைப் பிரிந்து நோவுபடுகிறாள் என்று சொல் என்கிறாள்.

---

1. அறிவில்லாத பொருளைப் பார்த்துக் கூறினால் அவை காரியம்செய்யுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விலக்குதல் இல்லாத' என்று தொடங்கி.

2. "வினையாட்டியேன்" என்றதற்கு, வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் "மாசுசः" என்று தொடங்கி.

3. "அருள்செய் யொருநாள்" என்பதும் பாடம்.

4. "வானவர்கோனை" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

பாசறவு எய்தி இன்னே எனை ஊழி வினையேன் நைவேன்- [1]' இன்னம் சிலகாலம் கழிந்தபின்னர் அறிவிக்கிறோம்' என்னும் அளவாக இருந்ததோ என் நிலை? பாசறவு எய்தி - பாசு என்று பசுமையாய், அதனால் நினைக்கிறது நீர்மையாய், அது அறுகையாவது, பசலை நிறத்தோடே முடிந்து நிற்றல். இன்னே -'எப்படிப் பசலை நிறத்தை அடைந்தது?' என்னில், என்னைக் கண்ட உனக்குச் சொல்ல வேண்டாவே அன்றோ. [2]விஷயத்திற்கு முடிவு இருந்தால் அன்றோ இது அளவுபட்டிருப்பது? இதற்கு ஒரு பாசுரமிட்டுச் சொல்லப் போகாது; உடம்பைக் காட்டுமித்தனை.பாசுரமிட்டுச்சொல்லப்போகாமையாலே படி எடுத்துக் காட்டுகிறாள். வினையேன் - பிரிவும் கலவியைப் போன்றதாகப் பெற்றிலேன். என்றது, [3]கலவி ஒவ்வொரு காலத்தில் நிகழ்ந்து கழிவதாக இருக்க, இது எப்பொழுதும் நீடித்து நிற்கிறதே என்றபடி. அன்றிக்கே, வினையேன் - கலக்கப் பெறாவிட்டால் மீண்டு கை வாங்க ஒண்ணாதபடியானபாவத்தைச் செய்துள்ளேன் என்னலுமாம். எனை ஊழி நைவேன் - வருத்தத்தோடே எத்தனை கல்பம் சென்றது? முன்பு பிரிந்தார், பதினாலாண்டு ஆதல்,பத்துமாதம்ஆதல்.[4] ஆசு அறு தூவி வெள்ளைக் குருகே - பழிப்பு அற்ற சிறகையுடைத்தாய், பிறருடைய துக்கத்தைப் பொறாமைக்கு உறுப்பான மனத்திலே குற்றமற்ற தன்மையையுடைத்தாயிருக்கிறபடி. அவன் பிரிகைக்கு, புறத்தைப்போலவே உள்ளும் கரியன் ஆறுபோலே

---

1. "எனையூழிநைவேன்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இன்னம் சிலகாலம்' என்று தொடங்கி. என்றது, பசலை நிறத்தை அடைந்திருக்கையாலே 'மெள்ளச் செய்கிறோம்' என்று ஆறி இருக்கப்போகாது என்றபடி.

2. "இன்னே" என்றதற்கு, வடிவினைக் காட்டுவதாக மேலே அருளிச்செய்து, வேறும் ஒருபாவம் அருளிச்செய்கிறார் 'விஷயத்திற்கு' என்று தொடங்கி. 'படி எடுத்துக் காட்டுகிறாள்' என்றது, ரசோக்திः 'சரீரத்தைக் காட்டுகிறாள்' என்பது நேர்பொருள். ஆபரணங்களின் கூட்டம் என்பது வேறும் ஒரு பொருள்.

3. 'கலவி' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, கலவி பிரிவினை முடிவாகவுடைத்தாய் இருத்தலைப்போன்று, பிரிவும் கலவியை முடிவாகவுடைத்தாயிராதபடியான பாபத்தைச் செய்துள்ளேன் என்றபடி. 'நீடித்து நிற்கிறதே' என்றது, நீடித்து நிற்கும்படியான பாவத்தைச் செய்துள்ளேன் என்றபடி.

4. "ஆசறுதூவி, வெள்ளை" என்ற பதங்களால், உள்ளும் புறம்பும் உள்ள தூய்மையைச் சொல்லுகிறது. திருஷ்டாந்தத்தோடு விவரணம் செய்கிறார் 'அவன் பிரிகைக்கு' என்று தொடங்கி.

அன்றோ நீங்களும் கூட்டுகைக்கு உள்ளும் புறம்பும் நிர்மலமா யிருக்கிறபடி என்பாள் '**வெள்ளைக்குருகே**' என்கிறாள்.

அருள்செய்து ஒருநாள் - ஒருபோது கிருபைசெய்து.[1] இவ்வளவில் முகம்காட்டுகையாகிற இதுக்கு மேற்பட அருள் இல்லையன்றோ; வெறும் உங்கள் கிருபையாலே செய்தீர்கோள் இத்தனை அன்றோ. மாசு அறு நீலம் சுடர்முடிவானவர்கோனைக் கண்டு - பழிப்பு அற்று நெய்த்திருந்துள்ள மயிர்முடியையுடையனாய், அம் மயிர்முடியை நித்தியசூரிகள் பேண இருக்கிறவனைக் கண்டு.[2] ஒரு நீர்ச்சாவி கிடக்கக் கடலிலே மழைபெய்கிறவனைக் கண்டு. ஏசறும் - கிலேசப்படாநின்றாள் என்னுதல், நாட்டார் ஏசும் நிலையைக் கடந்தாள் என்னுதல். அன்றிக்கே, ஏசறுவாய் - வடிவைக் காட்டுவாய் என்னலுமாம். [3]என்றது, என்னுடைய பசலைநிறத்தை நீ உன்னுடைய உடம்பிலே ஏறிட்டுக் காட்டுவாய் என்றபடி.

நும்மை அல்லால் [4] மறுநோக்கு இலள் - உம்மை ஒழிய வேறு குளிர்ந்த விழி இல்லை. நடந்ததைச் சொல்லிக்கொள்ளுவதற்கும், உம்மை ஒழிய வேறு ஒருவரையுடையள் அல்லள். "தோழிமாருடன் சுகமாக விருப்பாய்" என்னும் நிலையும் குலைந்தது. அன்றிக்கே, நும்மை அல்லால் - 'வாரா நின்றோம்' என்று, ஸ்ரீ பரதாழ்வானைப் போலே ஆள் வரவிடத் தரியாது என்னுதல். அன்றிக்கே, சொரூப குணங்களை நினைத்துத் தரித்திருக்

---

1. அருளுடையார்க்கு அன்றோ கிருபைசெய்யும் குணம் உண்டாகும்? அதன் அருளுடைமை இவள் அறிந்தவாறு யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வளவில்' என்று தொடங்கி. வெறும் உங்கள் கிருபையாலே அன்றோ முகம் காட்டினது? ஆகையாலே, மேலுள்ளதும் கிருபையாலே செய்யவேண்டும் என்பது கருத்து.

2. "வானவர்கோனை" என்பதற்கு, வெறுப்பிலே பாவம் அருளிச்செய்கிறார் 'ஒரு நீர்ச்சாவி கிடக்க' என்று தொடங்கி.

3. ஏசறுதல்: ஒருசொல். வருந்துகிறாள் என்பது பொருள். "ஏசறுதல்" என்பது, துக்கப்படுதலைக் காட்டுமே ஒழிய, வடிவினைக் காட்டுவாய் என்னும் பொருளைக் காட்டுமோ? என்ன, 'என்றது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'அதாவது, விரகத்தாலுண்டான பசலைக்கு எல்லை வெளுப்பு ஆகையாலே, உன் உடம்பில் வெளுப்பைக் காட்டி, இப்படி இருக்கிறாள் என்று சொல்லுங்கோள் என்றபடி. வெள்ளைக் குருகே அன்றோ.

4. "மறுநோக்கு இலள்" என்பதற்கு, உம்முடைய கடாக்ஷம் ஒழிய வேறு ஒருவருடைய நோக்கினையுடையவள் அல்லள் என்பது பொருள். "மறுநோக்கு இலள்" என்பதற்கு நான்கு வகையாக, பாவம் அருளிச்செய்கிறார். தோழிமார் இலரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தோழிமாருடன்' என்று தொடங்கி,

கும் அளவல்லள் என்னுதல்; அன்றிக்கே, உம்மை ஒழிய, பந்துக்களை நோக்கும் நிலைகழிந்தது என்னுதல். இப்பாசுரத்திற்கு முடிபு சென்ற பாசுரத்திலேயாதல், மேல் வரும் பாசுரத்திலே யாதல் கொள்க. தமிழர், வினை, எச்சமாய்க் கிடக்கிறது என்று சொல்லுவர்கள். என்றது, 'மறுநோக்கிலள் பேர்த்து மற்று என்று சொல்லுவாய்' என்னுமித்தனையும் இட்டுச் சொல்ல வேண்டும் என்றபடி. (8)

638.

பேர்த்து மற்றோர் களைகண் வினையாட்டியேன் நானொன்றிலேன்
நீர்த்தி ரைமேல் உலவி இரைதேரும் புதாஇனங்காள்!
கார்த்திரள் மாமுகில்போல் கண்ணன் விண்ணவர் கோனைக்கண்டு
வார்த்தைகள் கொண்டருளி யுரையீர் வைகல் வந்திருந்தே.

**பொ - ரை:**—தீவினையேனாகிய நான் உங்களை ஒழிய வேறே ஒப்பற்ற பற்றுக்கோடு ஒன்றனை உடையேன் அல்லேன்; தண்ணீரின் அலைகளின்மேலே சஞ்சரித்து இரையைத் தேடுகின்ற பெருநாரைக் கூட்டங்களே! கார்காலத்தில் எழுந்த திரண்ட பெரிய மேகம்போன்ற நிறத்தையுடைய கண்ணனாகிய விண்ணவர்கோனைக் கண்டு அவன் கூறுகின்ற வார்த்தைகளைக் கேட்டு, என்பக்கல் கிருபைசெய்து இங்கே வந்திருந்து எப்பொழுதும் சொல்லிக்கொண்டே இருங்கோள்.

**வி - கு:**—வினையாட்டியேன் நான் பேர்த்து மற்று ஓர் களைகண் ஒன்று இல்லேன் என்க. புதா - பெருநாரை. அருளி வந்திருந்து வைகல் உரையீர் என்க.

**ஈடு:**—ஒன்பதாம்பாட்டு. [1]சில புதா இனங்களைக் குறித்து நீங்கள் சென்றால் அவன் வந்திலனாகிலும் அங்குத்தை வார்த்தையைக் கொண்டுவந்து என்னை எப்பொழுதும் பிழைப்பிக்க வேண்டும் என்கிறாள்.

பேர்த்து மற்று ஓர் களைகண் வினையாட்டியேன் நான் ஒன்று இலேன் - தன் பரிகரங்களிலே ஒன்றைக்கொண்டு போதுபோக்குகிறாள் என்னும் நிலையும் குலைந்தது. [2] வெறுமையை முன்னிடுமத்தனை அன்றோ ததீயர்பக்கலிலும். உங்களை ஒழிய வேறு ஒரு ரக்ஷகரையுடையேன் அல்லேன். பிராட்டிக்கு

1. "வார்த்தைகள் கொண்டருளி உரையீர்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. சர்வேசுவரன் விஷயத்திலே அன்றோ ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்கள் வேண்டுவன; ஆசாரியன் பக்கலிலும் வேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வெறுமையை' என்று தொடங்கி.

இலங்கைக்குள்ளே ஒரு திரிசடையாகிலும் இருந்தாள்; காட்டிலே விட்டுப் போந்த தனிமையிலே ஒரு வால்மீகி பகவானுகிலும் இருந்தான்; [1]கணவன் பொகட்டால் ஒரு தந்தையாகிலும் உண்டாகவேணுமன்றோ? அங்ஙனம் ஒருவரும் இலர் என்பாள் '**ஓர் களைகண்**' என்கிருள். வினையாட்டியேன் - [2]நாயகன் தானே ரக்ஷகனுயிருக்குமன்றோ; அப்படிப்பட்டவன் கைவிட்டுப்போம்படியான பாபத்தைச் செய்தேன். நீர்த் திரைமேல் உலவி-[3] ஆவரணஜலம், விரஜை இவற்றைஎல்லாம் கடந்து ஏற வற்றாயிருக்கை. நிலத்திலே சஞ்சரிப்பதைப் போன்று நீரிலே சஞ்சரிக்கின்றனவாதலின் '**திரைமேல் உலவி**' என்கிறது. இரைதேரும் - [4]இவற்றின் நடையோடு ஒக்க இதுவும் ஒரு பௌஷ்கல்யமன்றோ இவளுக்கு. [5]நான் உபவாசத்தினுல் இளைத்திருக்க உங்களுக்கு மிடற்றுக்குக் கீழ் இழியாதன்றோ; [6]என்னையும் உங்களைப் போலே ஆக்கினுலே அன்றோ ஜீவித்ததாவது. புதா - பெருநாரை.

கார்த் திரள் மா முகில்போல் கண்ணன்-[7]எல்லாவிடாயும் ஆறுங்கண்டீர் அவ் வடிவைக் காணப்பெறில்! [8]இவள் கண்களுக்குக் கறுப்பாயிருக்கிறதன்றோ. கருமையெல்லாம் திரண்

---

1. 'கணவன் பொகட்டால் ஒரு தந்தையாகிலும் உண்டாக வேணுமன்றோ' என்றது, நளனுல் நீக்கப்பட்ட தமயந்திக்குத் தந்தை இருந்து உதவினமையைத் திருவுள்ளம்பற்றி.

2. பிறரால் நலிவுபடுகிற இடங்களிலே, கணவனுல் காப்பாற்றப்படும் தன்மையைத் திருவுள்ளம்பற்றி 'நாயகன்தானே' என்று தொடங்கி அருளிச்செய்கிருர்.

3. பரமபதத்திற்குத் தூதுவிடுகிருள் ஆகையாலே அருளிச்செய்கிருர் 'ஆவரணஜலம்' என்று தொடங்கி.

4. இவற்றின் நடையைப்போன்று, இவை இரை தேடுகிறதும் தன்காரியத்திற்குச் சாதகம் என்று கொண்டு அருளிச்செய்கிருர் 'இவற்றின் நடையோடு' என்று தொடங்கி. பௌஷ்கல்யம் - குறைவற்றிருத்தல்.

5. இரைதேடுகிறது தன்காரியத்துக்குச் சாதகமானபடியைக் காட்டுகிருர் "நான் உபவாசத்தினுல்' என்று தொடங்கி.

6. நாங்கள் இப்போது இரைதேட இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'என்னையும்' என்று தொடங்கி.

7. இப்போது வடிவினைச் சொல்லுவதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'எல்லா விடாயும்' என்று தொடங்கி.

8. வடிவிலே கருமையைச் சொன்னதற்கு, ரசோக்தியாக அருளிச்செய்கிருர் 'இவள் கண்களுக்கு' என்று தொடங்கி. கருமையாலே குளிர்ச்சியைச் சொல்லுகிறது என்பது நேர்பொருள். சகிக்கமுடியாமல் இருக்கிறது என்பது மற்றொரு பொருள்.

டாற்போலே இருக்கிற மஹாமேகம்போன்ற வடிவையுடைய வன்; கார்காலத்தில் திரண்ட மஹாமேகம் என்றுமாம். அன்றிக்கே, மாமுகில்-மாறாதே கொடுக்க வல்ல முகில் என்றுமாம். கண்ணன்-[1]அவ் வடிவுபோல் அன்று கண்டீர் அகவாயில்தண்ணளி இருக்கும்படி! விண்ணவர்கோனைக் கண்டு[2]-விடாய்த்தார் இருக்க,மீனுக்குத் தண்ணீர் வார்த்து இருக்கிறவனை. பிரிவதற்குச் சம்பாவனை இல்லாதார்க்குத் தன்னைக் கொடுத்துக் கொடு நிற்கிறவனைக் கண்டு.வார்த்தைகள் கொண்டு-[3]வந்திலனாகிலும் சில வார்த்தைகள் சொல்லக்கடவன் அன்றோ. [4]காட்சிக்கு மேலே வார்த்தையும் கேட்க அன்றோ நீங்கள் புகுகிறது.[5]"பாவி நீ என்று ஒன்று சொல்லாய்" என்னுமவரன்றோ. [6]இப்போது இவர்க்கு 'மாட்டேன்' என்னும் வார்த்தையும் அமையும். வார்த்தைகேட்கைக்கும் முடியப் போய்த் திரியவோ? என்னில்: வார்த்தைகள் கொண்டருளி வந்திருந்து வைகலும் உரையீர் - ஒருகால்போய் அவன் வார்த்தையைக் கேட்டு என்பக்கலிலே கிருபையைச்செய்து வந்திருந்து, அதனை எனக்கு எப்போதும் சொல்லி என்னை உஜ்ஜீவிப்பியுங்கோள்! அன்றிக்கே, விண்ணவர்கோமானுன கண்ணனைக்கண்டு,வார்த்தைகள்கொண்டு- "மாசுச:" என்று பலத்தோடே முடிவுபெற்றிருக்கிற வார்த்தைகளைக் கொண்டு, என்பக்கலிலே கிருபையைச் செய்து வந்திருந்து வைகலும் உரையீர் என்றுமாம். (9)

1. "கார்த்திரள்" என்பது போன்றவைகளால் வடிவைக் கூறியதன் பின், "கண்ணன்' என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவ்வடிவு' என்று தொடங்கி.

2. "விண்ணவர்கோன்" என்பதற்கு வெறுப்பாக, பாவம் அருளிச் செய்கிறார் 'விடாய்த்தார்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'பிரிவதற்கு' என்று தொடங்கி.

3. அவனைக்கொண்டு என்னுமல், "வார்த்தைகள் கொண்டு" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வந்திலனாகிலும்' என்று தொடங்கி.

4. "கண்டு" என்றதனோடு "வார்த்தைகள்" என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'காட்சிக்கு மேலே' என்று தொடங்கி.

5. 'வருவேன்' என்பது போன்ற வார்த்தைகள் என்னுமல், வறிதே "வார்த்தைகள்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பாவி நீ' என்று தொடங்கி. இது, திருவாய். 4. 7 : 3.

6. இதனால், பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'இப்போது' என்று தொடங்கி. 'இப்போது இவர்க்கு மாட்டேன் என்னும் வார்த்தையும் அமையும்' என்றது, அவனைப் பிரிந்து முடியும் நிலையில்,"அவர்பக்கல் உள்ளது ஒன்று" என்கிறபடியே, தன்சத்தை தரிப்பதற்காக 'மாட்டேன்' என்னும் வார்த்தையும் அமையும் என்றபடி.

639.

வந்திருந் து உம்மு டைய மணிச்சேவலும் நீருமெல்லாம்
அந்தரம் ஒன்றுமின்றி அலர்மேல் அசையும் அன்னங்காள்!
என் திரு மார்வற்கு என்னை இன்ன வாறிவள் காண்மின்என்று
மந்திரத் தொன்று ணர்த்தி உரையீர்மறு மாற்றங்களே.

பொ - ரை:—உம்முடைய அழகிய சேவலும் பெண்ணாகிய நீரும் உம்முடைய உறவு முறையினரும் எல்லாருங்கூட இடையூறு சிறிதும் இல்லாமல் பூவின்மேலே தங்கியிருக்கின்ற அன்னங்காள்! இங்கே வந்திருந்து, என்னுடைய, திருவை மார்பிலேயுடைய எம்பெருமானுக்கு என்னை இவள் இன்னவாறு ஆனாள் என்று தனி இடத்தில் ஒருவார்த்தை அறிவித்து அவர் கூறும் மறுமாற்றங்களை எனக்குச் சொல்லுங்கோள்.

வி-கு:—வந்திருந்து அலர்மேல் அசையும் அன்னங்காள் என்க. அன்றிக்கே, வந்திருந்து மறுமாற்றங்கள் உரையீர் என்றுமாம். அந்தரம் - வேறுபாடுமாம். மந்திரம் - இரகசியம்.

ஈடு:—பத்தாம்பாட்டு. [1]ஆணும் பெண்ணும் கூடியிருக்கிற அன்னங்கள் சிலவற்றைக் குறித்து, பிராட்டியும் அவனுமான ஏகாந்தத்திலே என்னிலையை விண்ணப்பம் செய்து மறுமாற்றம் வந்து சொல்லவேணும் என்கிறாள்.

வந்து இருந்து - [2]இது என்ன ஆபத்திற்குத் துணையாகும் தன்மைதான்! உங்களுடைய நல்லெண்ணம் இருந்தபடி என்தான்! [3]இளையபெருமாளை இடுவித்து வெதுப்பி அழைப்பிக்க வேண்டாதிருக்கை. வந்திருந்து - [4]மஹாராஜருடைய இடரைப் பெருமாள் வினவிக்கொண்டு சென்று தீர்த்தாற்போலே என்

1. "மந்திரத்து ஒன்று உணர்த்தி உரையீர்" என்றது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "வந்திருந்து" என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இது என்ன' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'உங்களுடைய' என்று தொடங்கி. இதனால், இவள் அழையாதிருக்க ஆபத்திலே வந்து உதவுகையும், அதற்கு அடியான நல்லெண்ணமும் கூறுகிறது என்றபடி.

3. இதனால் போதரும் வேறுபாட்டினைக் காட்டுகிறார் 'இளையபெருமாளை' என்று தொடங்கி. வெதுப்பி - பயப்படுத்தி. இங்கு, கம்ப. கிட்கிந்தைப் படலம், 3-முதல் 8-முடிய உள்ள செய்யுட்களைக் காணல்தகும்.

4. தாங்களே வந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'மஹாராஜருடைய' என்று தொடங்கி. சுக்கிரீவனை 'மஹாராஜர்' என்பது, வைணவப் பெருமக்கள் மரபு.

துன்பத்துக்கெல்லாம் உடன்கேடராயிருந்து. உம்முடைய மணிச்சேவலும் நீரும் எல்லாம் - [1]பரமபதத்தில் ஆண்களும் பெண்களுமாக இருந்தாலும் அடிமைக்கு உறுப்பாக இருக்குமாறுபோலே, இவற்றினுடைய இந்தப் பேதமும் தன்னுடைய காரியத்துக்குக் காரணம் என்றிருக்கிறாள். மணிச்சேவல் - [2]இதுவும் ஒரு சேவலேதான்! [3]தன்னுடைய மணிச்சேவல் கடக்க இருந்து இவளை உடம்பு வெளுப்பித்துத் தான் குறியழியாதேயன்றோ இருக்கிறது. எல்லாம் - [4]"புத்திர பௌத்திரர்களோடு மற்றுமுள்ள கூட்டத்தோடு" என்னுமாறு போலே. [5]மனைவி புத்திரர்கள் முதலாயினார்களோடே கூடப் பிறர் காரியம்செய்ய ஒருப்பட்டிருப்பாரைப் போலே. அந்தரம் ஒன்றும் இன்றி - [6]என்னைப்போலே பிரிவோடேகூடி இருக்கிற கலவி அன்றிக்கே இருக்கப் பெறுவதே. [7]கலவியை வளர்க்கக்கூடியதான பிரிவும் இன்றிக்கே. அலர்மேல் அசையும் அன்னங்காள் - [8]ஆணும்பெண்ணுமாகச் சேர்ந்திருப்பார்க்குப் பூவிலும் கால் வைக்கலாமன்றோ. [9]பூவிலே கால் பொருந்தும்படியான

1. "உம்முடைய மணிச்சேவலும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பரமபதத்தில்' என்று தொடங்கி.

2. "மணிச்சேவல்" என்று வர்ணித்ததற்கு, பாவம் 'இதுவும் ஒரு சேவலேதான்' என்பது.

3. தனக்கு மணிச்சேவல் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன்னுடைய மணிச்சேவல்' என்று தொடங்கி. மணிச்சேவல் - ஈசுவரன்.

4. "மணிச்சேவலும் நீரும்" என்பது, கணவன் மனைவி இவர்களைச் சொல்லுகையாலே "எல்லாம்" என்பது, புத்திரர் முதலானவர்களைக் கூறுகிறது என்றுகொண்டு, அதனைப் பிரமாணத்தோடு அருளிச்செய்கிறார் 'புத்திர பௌத்திரர்களோடு' என்று தொடங்கி. "ஸபுத்ரபௌத்ரஸ்ஸகணஃ" என்பது, ஸ்ரீராமா. பால. 1: 99.

5. அதனை விவரணம் செய்கிறார் 'மனைவி புத்திரர்கள்' என்று தொடங்கி.

6. "அந்தரம் இன்றி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'என்னைப்போலே' என்று தொடங்கி.

7. "ஒன்றும் இன்றி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கலவியை வளர்க்கக்கூடியதான' என்று தொடங்கி.

8. "உம்முடைய மணிச்சேவலும்" என்பதனையும் கூட்டி "அலர்மேல்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஆணும் பெண்ணுமாக' என்று தொடங்கி.

9. "அசையும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பூவிலே' என்று தொடங்கி.

செருக்கு அன்றோ உங்களது? [1]குறைவு அற்றார் இருக்கும்படி இதுவன்றோ.

என் திருமார்வற்கு - [2]எனக்கு அங்கு ஓர் அடி இல்லாமை மிறுக்குப்படுகிறேனே?[3]"பிராட்டி சந்நிதியில் ஸ்ரீராமபிரானைப் பார்த்து இந்த வார்த்தையைச் சொன்னார்" என்கிறபடியே, சொன்ன வார்த்தை விலைபோமவள் முன்னால் சொல்லுங்கோள்; [4]நான் பற்றின அடைவே பற்றுங்கோள் என்கிறாள். என்னை இன்னவாறு இவள் காண்மின் என்று - [5]பேச்சுக்கு நிலமன்று போலே காணும். என்னை - அச்சேர்த்தியிலே அடிமைசெய்ய ஆசைப்பட்டிருக்கிற என்னை. 'இப்படிச் சீர்கேட்டினை அடைந்தாள் இவள் என்று [6]இவள் பசலை நிறத்தைத் தம்முடம்பிலே காட்டவும் வற்றாகாதே இவை' என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். [7]அன்றிக்கே, உம்முடைய தேவாரமோ! இவள் அந்தப்புர பரிகரம் அன்றோ என்னுங்கோள்

1. 'ஆணும் பெண்ணுமாக' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'குறைவற்றார்' என்று தொடங்கி.

2. "என் திரு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எனக்கு' என்று தொடங்கி. மிறுக்கு - கிலேசம்.

3. "என் திருமார்வற்கு உணர்த்தி" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'பிராட்டி சந்நிதியில்' என்று தொடங்கி.

"ஸீதா ஸமக்ஷம் காகுத்ஸ்தம் இதம் வசனம் அப்ரவீத்"
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15; 6.

4. "என்" என்பதனைத் "திரு"வோடே கூட்டி, மேலும் ஒருகருத்து அருளிச்செய்கிறார் 'நான்பற்றின' என்று தொடங்கி. என்றது, 'மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்" என்றும், "நம் திருவுடையார்" என்றும் நான்பற்றின அடைவே என்னுதல். "உம்முடைய மணிச்சேவல்" என்று உங்களைப் புருஷகாரமாகக் கொண்டு, சேவலை நான் பற்றிய முறையே, நீங்களும் பிராட்டி புருஷகாரமாக அவனைப் பற்றுங்கோள் என்னுதல்.

5. "இன்னவாறு" என்கிறது என்? பேசலாகாதோ? என்ன, 'பேச்சுக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. 'கேண்மின்' என்னாமல், "காண்மின்" என்ற பதத்துக்கு வேறும் ஒருவகையில் கருத்து அருளிச்செய்கிறார் 'இவள் பசலை நிறத்தை' என்று தொடங்கி. என்றது, அன்னம் வெண்மையாக இருக்கும் ஆகையாலே, அதனைக்கொண்டு இப்படி வெளுத்த பிரகாரத்தையுடையவள் என்பதனைக் காட்ட வற்றாயிருத்தலைக் குறித்தபடி.

7. பெரியபிராட்டியார் பரிகரத்வமாகிற பிரகாரத்தையுடையவள் என்று, மூன்றாவதாக ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'உம்முடைய தேவாரமோ' என்றது, அர்ச்சக பரதந்திரமான வீட்டில் உள்ள அர்ச்சாவதாரம்போலே உமக்குப் பரதந்திரமோ? என்றபடி. தேவாரம் - வீட்டில் அர்ச்சிக்கும் இறைவனுடைய வடிவு.

என்னுதல். அர்ச்சை - அர்ச்சகர்கட்கு வசப்பட்டதன்றே. மந்திரத்து ஒன்று உணர்த்தி - ஓலக்கத்திற் சொல்லாதே கொள்ளுங்கோள்; [1]"கொல்லத்தக்கவன்" என்பார் இருக்கவும் கூடும். [2] அன்றிக்கே, அவள் சொல்லே கேட்குமிடத்தே சொல்லுங்கோள் என்னுதல். உரையீர் மறுமாற்றங்களே-[3]அவன் கிரமப்பிராப்திதோற்ற வார்த்தை சொல்லவும், அதுதான் ஒண்ணாது என்று "குற்றம் செய்யாதார் எவர் தாம்"என்று விரைவுபடுத்துமவர் முன்னே சொல்லுங்கோள்.

[4]மந்திரம் - பிரணவம்: ஒன்று - அதில் நடுப்பதம்: அதிற் சொல்லுகிறபடியே அநந்யார்ஹதையை விண்ணப்பம்செய்து. உரையீர் மறுமாற்றங்களே - முன்பு செய்துபோந்த குற்றங்களைப் பார்த்து அவன் சொல்லுகிற வார்த்தைகளையும், சம்பந்தத்தையும் நம் நிலையையும் பார்த்து அவள் சொல்லும் வார்த்தைகளையும் கேட்டு வந்து சொல்லுங்கோள். (10)

## 640.

**மாற்றங்கள் ஆய்ந்து கொண்டு மதுசூத பிரான் அடிமேல்**
**நாற்றங்கொள் பூம்பொழில் சூழ் குருகூர்ச்சட கோபன்சொன்ன**
**தோற்றங்க ளாயிரத் துள்இவை யும்ஒரு பத்தும்வல்லார்**
**ஊற்றின்கண் நுண்மணல் போல்உரு கா நிற்பர் நீராயே.**

**பொ - ரை :**—வாசனையைக் கொண்டுள்ள அழகிய சோலைகள் சூழ்ந்த திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீசடகோபர், சிறந்த வார்த்தைகளை ஆராய்ந்துகொண்டு மதுசூதபிரானுடைய திருவடிகள்மேல் அருளிச்செய்த தாமே தோன்றிய ஆயிரம் திருப்பாசுரங்களுள் ஒப்பற்ற

1. 'கொல்லத்தக்கவன்' என்று கூறியவன், சுக்கிரீவன். ஸ்ரீராமா. யுத். 17 : 27.

2. "மந்திரத்து" என்றதற்குத் தனியிடம் என்று பொருள் அருளிச் செய்தார் மேல். 'போக தசையிலே' என்று பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, கேவலம் தனி இடமானால், மறுக்கவும் கூடும்; போக தசையானால், அவள் விரும்பாதிருக்கவும் தானே விரும்பிக் கேட்பான் என்றபடி.

3. "உரையீர் மறுமாற்றங்கள்" என்ற பதங்களை எடுத்துக்கொண்டு "உரையீர்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் கிரமப்பிராப்தி' என்று தொடங்கி. கிரமப்பிராப்தி - கிரமத்திலே அடைதல். "நகஶ்சித் நஅபராத்யதி" என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 44.

4. நான்காம் அடிக்கு, மூன்றாவதாக வேறும் ஒரு பொருள் அருளிச் செய்கிறார் 'மந்திரம்-பிரணவம்' என்று தொடங்கி, நடுப்பதம்-உகாரம். அவள், பெரிய பிராட்டியார்.

பத்துப் பாசுரங்களாகிற இவற்றையும் வல்லவர்கள் நீர் ஊறுகின்ற ஊற்றிலேயுள்ள நுண்ணிய மணல்போன்று நீராக உருகாநிற்பர்.

வி - கு:—நாற்றம் - வாசனை; "பொன்மலர் நாற்றமுடைத்து" என்றார் பிறரும். சடகோபன் பிரான் அடிமேல் சொன்ன ஆயிரம் என்க. வல்லார் நீராய் உருகாநிற்பர் என்க.

ஈடு:—முடிவில், [1] இத்திருவாய்மொழியில் ஆழ்வாருடைய துன்பத்தை நினைத்தவர்கள் தாமும் உருகுவர் என்கிறார்.

மாற்றங்கள் ஆய்ந்துகொண்டு-[2]சுரம் ஏறுவாரைப்போலே, பக்திபரவசராயிருப்பார்க்கு அடைவுபடப் பாசுரமிட்டுச் சொல்லப் போகாதன்றே; இவ்வளவிலும் அவன் நினைவு மாறாமையாலே, சொற்கள் நேர்பட்டபடி: நல்ல சொற்களைத் தெரிந்துகொண்டு. மதுசூதபிரான் அடிமேல் - [3]விரோதிகளை அழித்தலையேநிரூபகமாகவுடையவன் திருவடிகளிலே. நாற்றம்கொள் பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் சொன்ன-[4]'தனி இடத்திலே ஆள்விடுகையினாலே வரவு தப்பாது' என்று இவர் தரித்தவாறே, சோலைகளும் நித்திய வசந்தமானபடி. வாசனையை மிகுதியாகக்கொண்ட பூவையுடைத்தான பொழில்கள் சூழ்ந்த திருநகரி. தோற்றங்கள் ஆயிரத்துள் இவையும் ஒருபத்தும் - [5]"மனம் முன்னே வார்த்தை பின்னே" என்கிற அடைவால் சொன்னவையல்ல. என்றது, இவர் கலங்கிச்சொல்லச்செய்தேயும், பகவானுடைய அவதாரம்போலே தோன்றின என்றபடி. தோற்றம் - தோன்றுதல்.

---

1. "உருகா நிற்பர் நீராய்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. இத்திருவாய்மொழியில் இவருடைய பக்தி பாரவஶ்யத்தை அநுசந்தித்துச் சங்கிக்கிறார் 'சுரம் ஏறுவாரைப்போலே' என்று தொடங்கி. சுரம் - மலையின்மேல் ஏறுதற்குரிய அரியவழி. 'சொல்லப் போகாதன்றே' என்றதன் பின், ஆயிருக்க, "மாற்றங்கள் ஆய்ந்து" என்பது என்? என்னும் வினாவைச் சேர்த்துக் கொள்க. அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வளவிலும்' என்று தொடங்கி.

3. "மதுசூதன்" என்று நிரூபகமாகச் சொல்லுகையாலே, 'விரோதிகளை அழித்தலையே நிரூபகமாகவுடையவன்' என்கிறார்.

4. நாற்றம் கொள் பூம் பொழிலாக இருக்கக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தனி இடத்திலே' என்று தொடங்கி.

5. 'தாமாகவே தோன்றின' என்பதற்கு வேறுபாடு காட்டுகிறார் 'மனம்முன்னே' என்று தொடங்கி. இப்படிச் சொன்னதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'இவர்கலங்கி' என்று தொடங்கி.

[1]மந்திரங்களை இருடிகள் காணுமாறுபோலே. [2] "சொல் பணி செய் ஆயிரம்" என்று ஆழ்வாருடையதிருவாக்கிலேபுக்கு 'அங்கிட்டுப் பிறந்து நாம் தூயராய் அடிமை செய்யவேணும்' என்று அச்சொற்கள்தாம் 'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று வந்து அடிமைசெய்கிறபடி.[3]வைதிகர் அல்லாதாருடைய வாக்கில் புக்க தோஷம் தீர்ந்தது இப்போதேயன்றோ சொற்களுக்கு.[4]"போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்கிறபடியே, ஆழ்வார் திருவாக்கிலே பிறக்கையாலே முன்புள்ள தோஷமும் பின்புள்ள தோஷமும் தீர்ந்தது காணும் சொற்களுக்கு. ஊற்றின்கண் நுண்மணல்போல் நீராய் உருகாநிற்பர்-[5]இவை கற்கப்படாதன என்கிறார். அதாவது, என் துயர ஒலியைக் காட்டி நாட்டினை அடைய அழித்தேன் என்கிறார். [6]இவர் கிலேசம் அவன் முகம்காட்டத் தீரும்; இப் பாசுரம் நித்தியமாகையாலே, கேட்டார் தரிக்கமாட்டார்; ஊற்றிடத்து உண்டான நுண்ணிய மணல்போலே உருகுகின்ற மனத்தையுடையராய் நீராய் உருகாநிற்பர். இதற்குப் பலமாகச் சொல்லப்பட்டது என்? என்னில், பகவானுடைய

---

1. ஆயின், "குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்றது, சேருமாறு யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மந்திரங்களை' என்று தொடங்கி.

2. 'மனம் முன்னே வார்த்தை பின்னே' என்று மேலே அருளிச்செய்ததனை விவரணம் செய்கிறார் 'சொற் பணிசெய் ஆயிரம்' என்று தொடங்கி. இது, திருவாய். 1. 10: 11.

3. சொற்கள் ஆழ்வார் திருவாக்கிலே புக்கு வந்ததனால் வந்த ஏற்றம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வைதிகர் அல்லாதார்' என்று தொடங்கி.

4. இப்போது தோஷம் தீர்ந்தால்,மேலுள்ள தோஷத்திற்கு வழி என்? என்ன,அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'போயபிழையும்' என்று தொடங்கி. இது, திருப்பாவை. 5.

5. "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவை கற்கப்படாதன' என்று தொடங்கி.

6. "உருகாநிற்பர்" என்ற நிகழ்காலத்துக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவர் கிலேசம்' என்று தொடங்கி.

குணங்களிலே ஈடுபட்டவர்கள் பாசுரம் கேட்டு அழிகையும் பேற்றிலே சேர்ந்ததாகையாலே இதுதானே பலம் என்கிறது. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

பொன்னுலகு பூமியெல்லாம் புள்ளினங்கட் கே வழங்கி
என்னிடரை மாலுக் கியம்புமென—மன்னுதிரு
நாடுமுதல் தூது நல்கிவிடு மாறனையே
நீடுலகீர்! போய்வணங்கும் நீர்.

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

# ஒன்பதாந் திருவாய்மொழி — " நீராய் "

## முன்னுரை

---

ஈடு :—[1] " எங்குச் சென்றாகிலும் கண்டு " என்றும், " வானவர்கோனைக் கண்டு " என்றும் தூதுபோகச்சொன்னார் ; அவை போகமாட்டாதபடி தம்முடைய துயர ஒலியாலே அழித்தார் ; [2] " மரங்களும் இரங்கும்வகை " என்று அறிவில்பொருள்கள் இரங்காநின்றால், சிறிது அறிவையுடைய பறவைகள் அழியக் கேட்க வேண்டா அன்றோ ;[3] "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராய்" என்றது, தூதரை ஒழிய அல்லவே. ஆகையாலே, தம் பக்கத்திலே கால்நடைதந்து போவார் இல்லையே. [4] "அறிவில்பொருள்களுங்கூட அழிகிற இடத்தில், பரம சேதனனானவனுக்குச் சொல்லவேணுமோ ?" என்று பார்த்து, தம் மிடற்று ஓசையை இட்டு அழைத்துக்கொள்ளப் பார்க்கிறார். [5] தம்முடைய துயரத்தைக் காட்டுகின்ற ஓசை கிடக்க, வேறு ஒருவர் போகவேண்டும்படியாய் இருந்ததோ?[6] கலங்காப் பெருநகரமான ஸ்ரீவைகுண்டத்திலும் தரிக்க ஒண்ணாதபடி, கால் குலைந்து வரும்படி பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார். [7] இனித் தான், தூதுபோவார்க்குக் காலாலேயாதல் சிறகாலேயாதல்

---

1. மேல் திருவாய்மொழியில் கூறியவற்றை அநுவதித்துக்கொண்டு இயைபு அருளிச்செய்கிறார் ' எங்குச் சென்றாகிலும் ' என்று தொடங்கி.

2. பறவைகள் ஈடுபடக்கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ' மரங்களும் ' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 5 : 9.

3. பறவைகள் இரங்கும் என்கைக்கு, சூசகம் யாது? என்ன, 'ஊற்றின் கண் ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, திருவாய். 6. 8 : 11.

4. ஆயின், இவர் செய்தது யாது ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் ' அறிவில் பொருள்களும்கூட ' என்று தொடங்கி. பரமசேதனன்—சர்வேசுவரன்.

5. வியாக்யாதாவின் ஈடுபாடு ' தம்முடைய ' என்று தொடங்கும் வாக்கியம்.

6. இவருடைய துயர ஒலியின் உறைப்பினை அருளிச்செய்கிறார் 'கலங்காப் பெருநகரமான ' என்று தொடங்கி.

7. கால்நடை தந்து போவார் இல்லாமையாலே கூப்பிடுகிறார் என்றார் மேல் ; கால்நடை தந்து போவாருளரானாலும் தம் கூப்பீடே அவன் வருவதற்குச் சிறந்த சாதனம் என்கிறார் ' இனித்தான் ' என்று தொடங்கி.

போகவேண்டுகையாலே தடை உண்டு; இவர் மிடற்று ஓசைக்குத் தடை இல்லை அன்றோ! [1] இவர் படுகிற வியசனத்துக்குக் காரணம் சொல்லப் போகாது, பிராட்டி சிறை இருந்தமைக்குக் காரணம் சொல்லப் போகாதவாறு போலே. [2] அவள் இருப்பு பிறர்மேல் வைத்த திருவருளாலே ஆனாற் போலே, இவருடைய வியசனமும் பிறர்மேல் வைத்த திருவருளுக்குக் காரணமாய் இருக்கிறபடி. [3] அவள் சிறையிருந்தபடியை ஸ்ரீ வால்மீகி பகவான் எழுதிவைக்க இன்று நாடு எல்லாம் வாழுமாறு போலே, அன்று இவர்தாம் வியசனப்பட்டாரேயாகிலும் இவர் அருளிச்செய்த பிரபந்தங்கள் உலகத்திற்குத் தண்ணீர்ப்பந்தலாயிற்றது. [4] திருக்குழல் ஓசையாலே திருவாய்ப்பாடியில் பெண்கள் எல்லாம் பட்டனவற்றைத் தம்மிடற்று ஓசையாலே அவன் படும்படி பண்ணுகிறார்.

[5] "வாரீர்! நீர் நம்மை இருந்த இடத்தே இருக்க ஒட்டாமல் இங்ஙன் படுத்துகிறது என்? நாம் உம்மை விட்டுத் தூரப்போனோமோ? ஏதேனும் ஒன்றைப் பற்றினாலும் அது நம்மைப் பற்றிற்று என்று சொல்லலாம்படி இருக்கிற உலகமே உருவ

---

1. "பக்கம் நோக்கறியான் என்பைந்தாமரைக் கண்ணனே" என்கிறபடியே, பக்கம் நோக்கறியாதவன் இப்படிக் கூப்பிட இவரை விடுகைக்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்படுகிற' என்று தொடங்கி.

2. ஆயின், கர்மத்தைக் காரணமாகக் கூறினாலோ? எனின், 'அவள் இருப்பு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, பிராட்டி, ஆஸ்ரிதார்த்தமாக இலங்கையிலே இருந்தாற்போலே, இவரும், ஆஸ்ரிதார்த்தமாகத் துக்கப்பட்டாரேயாகிலும் சிலகாலம் இந்த உலகத்திலே இருந்தால் 'நாடாகத் திருந்தும்' என்று இட்டுவைத்தானாகையாலே, 'கர்மம்' என்ன ஒண்ணாது என்றபடி.

3. அதனை விவரணம் செய்கிறார் 'அவள் சிறை இருந்தபடியை' என்று தொடங்கி.

4. மிடற்றோசையாலே ஈடுபடக் கூடுமோ? என்ன, சிம்ஹாவலோகந நியாயத்தாலே, (சிங்கநோக்கு) திருஷ்டாந்தத்தோடு விடை அருளிச்செய்கிறார் 'திருக்குழல் ஓசையாலே' என்று தொடங்கி. இந்த வாக்கியத்தை, 'இவர் மிடற்றோசைக்குத் தடை இல்லை அன்றோ' என்று மேலே கூறிய வாக்கியத்தோடே கூட்டுக.

5. ஆனால், முதல் பாசுரத்தில், உலகமே உருவமாக இருக்கும் தன்மையைச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "வாரீர்" என்று தொடங்கி. 'உலகமே உருவமாக இருக்கும் தன்மையைக் காட்டினோமே' என்றது, மேலே "யாவையும் யாவருமாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

மாக இருக்கும் தன்மையைக் காட்டினேமே" என்று அவன் திருவுள்ளமாக; அதில் குறை என்? நீ உலகமே உருவமாய்க் கொண்டிருக்கிற இந்த ஞானம் எனக்கு இல்லையோ? இந்த ஞானந்தானே அன்றோ "**அசாதாரண ஆகாரத்தையும் காண வேணும்**" என்னப் பண்ணுகிறது; ஆதலால், எனக்குப் பேறானது கிடக்க, அல்லாதனவற்றைக் காட்டினால் பிரயோஜனம் இல்லை என்கிறார். [1]அதுவும் உன் ஐசுவரியத்திற்குப் புறம்பு அல்லாமையாலே வேணுமாகில் அறிதல் செய்கிறேன்; அதனால் வந்தது உன்ன தானவற்றை '**என்னது**' என்று இருக்கிற மயக்கம் நீங்குகிறது. [2]அருச்சுனனும் ஸ்ரீ விசுவரூபம் கண்ட உடனே "உம்மைக் கிரீடத்தையுடையவராயும் கதாயுதத்தை யுடையவராயும் கையில் சக்கரத்தையுடையவராயும் பார்ப்பதற்கு நான் விரும்புகிறேன்; பல கைகளையுடையவரே! விசுவரூபத்தையுடையவரே! நான்கு கைகளுடன்கூடின அந்த உருவமாக ஆகக்கடவீர்" என்கிறபடியே, அசாதாரணமான வடிவை எனக்குக் காட்டவேணும் என்றான் அன்றோ. [3]என்னுடைய துயர ஒலியைக் கேட்டு இரங்கி வந்திலையாகிலும், உன்னுடைய விபூதி அழியாமல் நோக்கவேணுமாகில் வா என்கிறார் என்றுமாம். [4]இவருடைய துயர ஒலிதான் அவனுக்கு உபய விபூதியிலும் குடி இருப்பு அரிதாய்க்காணும் இருக்கிறது.

---

1. ஆனால், ஜகதாகாரதை உத்தேசியம் அன்றோ? என்ன, 'அதுவும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'இந்த ஞானம்தானே அன்றோ அசாதாரண ஆகாரத்தையும் காண வேணும் என்னப் பண்ணுகிறது' என்று மேலே அருளிச்செய்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'அருச்சுனனும்' என்று தொடங்கி.

"கிரீடினம் கதினம் சக்ரஹஸ்தம் இச்சாமி த்வாம் த்ருஷ்டும் அஹம்ததைவ
தேனைவ ரூபேண சதுர்புஜேந ஸஹஸ்ரபாஹோ பவ விஸ்வமூர்த்தே"

என்பது, ஸ்ரீகீதை. 11 : 46.

3. "கொடியேன்பால் வாராய்" என்னுமளவும் கடாக்ஷித்துச் சங்கதி அருளிச்செய்தார் இதுகாறும். இனி, "மண்ணும் விண்ணும் மகிழ" என்றதனைக் கடாக்ஷித்து வேறும் ஒருசங்கதி அருளிச்செய்கிறார் 'என்னுடைய துயர ஒலியை' என்று தொடங்கி.

4. அவன் வாராவிட்டால் அழியுமோ? என்ன, 'இவருடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

## 641.

நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயனானாய்!
கூரார் ஆழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால்
வாராய்! ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே.

**பொ - ரை:**—தண்ணீராகிப் பூமியாகி நெருப்பாகிக் காற்றாகி நீண்ட ஆகாசமாகிச் சிறப்புப் பொருந்திய சூரிய சந்திரர்களாகிச் சிவனாகிப் பிரமன் ஆனாய்; மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் மகிழும்படியாகக் கொடியேனாகிய அடியேனிடத்து, கூர்மைபொருந்திய சக்கரத்தையும் வெண்மைபொருந்திய சங்கையும் கைகளிலே ஏந்திக்கொண்டு ஒருநாள் வரவேண்டும்.

**வி - கு:**—உலகமே உருவகமாக இருக்கும் தன்மை, முதல் இரண்டு அடிகளில் கூறப்பட்டது. மகிழ ஏந்தி வாராய் என்க. வாராய் - வரவேண்டும்; விதிவினை. இத்திருவாய்மொழி, கலிநிலைத்துறை.

**ஈடு:**—முதற்பாட்டு.[1] "உலகமே உருவமாயிருக்கும் தன்மையைக் காட்டித் தந்தோம் அன்றோ" என்ன, அது போராது; அசாதாரணமான வடிவைக் காணவேண்டும் என்கிறார்.

நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீர் ஆர் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயன் ஆனாய் - [2] "இது அறியாமல் அவ் வருகே ஆசைப்படுகிறார்" என்று கொள்ள ஒண்ணாதபடி, தாம் அறிந்தமை தோற்ற விண்ணப்பம் செய்கிறார். நீராய் - [3] நாராயணன் ஆவது பண்டே அறிவன் என்கிறார்.

---

1. "கூராராழி வெண் சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்" என்னுமவும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. உலகமே உருவமாக இருக்கும் தன்மை உத்தேசியம் அன்றாகில், "யாவையும் யாவருமாய் நின்ற மாயன்" என்பது போன்று திரளச்சொல்லாமல், "நீராய் நிலனாய்" என்று தொடங்கி விவரித்துச் சொல்லுவான் என்? என்ன, 'இது அறியாமல்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. "நீராய்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நாராயணனாவது' என்று தொடங்கி. என்றது, தண்ணீர்க்குக் காரணமாய் அதனைச் சரீரமாகவுடையனாயிருக்கும் இருப்பைப் பண்டே அறிவன் என்றபடி. அறிந்தமைக்குச் சூசகம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீர்தொறும்' என்று தொடங்கி. இது, திருவாய். 1. 1 : 10. "ஆபோ நாரா இதி ப்ரோக்தா: - நீர்கள் நாரம் என்று சொல்லப்பட்டன" என்பது, ஈண்டு அநுசந்தேயம்.

"நீர்தொறும் பரந்துளன்" என்றரேயன்றோ மேல்.[1]"அந்தப் பரமாத்மா முதலில் தண்ணீரையே படைத்தார்" என்கிற படியே, முதல் முதல் தண்ணீரைப் படைத்துப் பின்னர் மண் முதலான பூதங்களை உண்டாக்கி, [2] இவற்றைக்கொண்டு காரி யம் கொள்ளுமிடத்தில் ஒன்றில் ஒன்று அதிகமாக வேண்டி இருக்குமன்றோ; [3]"ஐம்பெரும் பூதங்களும் ஒன்றில் ஒன்று கலத்தல் பெற்றன; ஒன்றுக்கு ஒன்று சம்பந்தம் பெற்றுள் ளன" என்றே அன்றோ படைக்கும் முறைதான் இருப்பது;

---

"நின், தோற்றமும் அகலமும் நீரினுள" (4. 30.)

என்ற பரிபாடற் பகுதியும், 'நாராயணன் என்னும் திருநாமம் நீரின்கட் காணப் படுதலாகிய இக்காரணம்பற்றி வந்தது' என்னும் பரிமேலழகர் உரையும் இங்குக் காணத்தகும்.

1. ஐம்பெரும் பூதங்களையும் சொல்லுகிறவர், முதலில் தண்ணீரைச் சொல்லுவதற்குப் பிரமாணத்தைக் காட்டுகிறார் 'அந்தப் பரமாத்மா' என்று தொடங்கி.

"அபஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யம் அபாஸ்ருஜத்"

என்பது, மனுஸ்மிருதி. 1 : 8.

2. ஐம்பெரும் பூதங்களைச் சொன்னது, அவற்றின் காரியமான அண்ட சிருஷ்டிக்கும் உபலக்ஷணம் என்று கொண்டு, பஞ்சீகரணத்தால் அல்லது அண்ட சிருஷ்டி கூடாமையாலே பஞ்சீகரணத்தைக் காட்டுகிறார் 'இவற்றைக் கொண்டு' என்று தொடங்கி.

நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை யைம்பால் இயல்நெறி வழாமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்

என்பது, தொல்காப்பியம் மரபியல், 31.

காரியம் கொள்ளுமிடத்தில் - அண்டரூபமான கார்யத்தைச் செய்யுமிடத் தில். 'ஒன்றில் ஒன்று அதிகமாக வேண்டியிருக்குமன்றோ' என்றது, பிரிக்கப் படுகின்ற ஒருபாதியைக் காட்டிலும், பிரிக்கப்படாத ஒருபாதி பிரதானமாக வேண்டியிருக்கும் என்றபடி.

3. 'ஒன்றில் ஒன்று அதிகமாக' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ஐம்பெரும் பூதங்களும்' என்று தொடங்கி.

"ஸமேத்ய அந்யோந்ய ஸம்யோகம் பரஸ்பர ஸமாஶ்ரயாঃ"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 2 : 54.

இந்தச் சுலோகத்தில் "பரஸ்பர ஸமாஶ்ரயாঃ" என்றதனால், ஆஶ்ரய ஆஶ்ரயி பாவத்தாலும், ஆதார ஆதேய பாவத்தாலும் ஒன்றில் ஒன்று அதிக மாக இருக்கவேண்டும் என்பது போதரும்.

இவைதாம் ஒருபொருளும் அன்றே; பலபொருள்களாக இருக்கச்செய்தே ஒரே பொருளாக்கி ஒருகாரியம் கொள்ள வேணும் அன்றோ:[2] அது செய்யும்போது,குலாலனானவன் மண்ணும் நீரும் செதுகும்கூட்டிச் சேரத் துகைத்துக் குடம் முதலானபொருள்களாய்க்கொண்டு தோற்றுவிக்குமாறு போலே, தண்ணீரை உண்டாக்கி, [3] அது நீர்ப்பண்டமாகையாலே அதனோடு கடினமான பொருளைக் கூட்டி,பின்னையும் நெகிழ்ந்திருக்கையாலே அதனைச் சிறிது வலிக்கைக்காக ஒளிப்பொருளை உண்டாக்கி, அது தான் மிகைத்துத் தீயுமளவானவாறே அதனை ஆற்றுகைக்குக் காற்றினை உண்டாக்கி, அதுதனக்குச் சஞ்சரிக்கைக்காக இடத்தைக்கொடுக்கின்ற ஆகாசத்தை உண்டாக்கி. இவ்வளவும் முதலில் சங்கல்பந்தன்னையே கொண்டு அண்டசிருஷ்டியைப் பண்ணிநின்றது;[4] இனி, பெரியதொரு மாளிகையைச் சமைத்து இருள் உறைய விட்டுவைக்க ஒண்ணாதே அன்றோ; அதற்கு இரண்டு விளக்குகள் இட்டாற்போலே சந்திரசூரியர்களை உண்டாக்கி.[5] நீர்க்களிப்பு அறுகைக்கும் வளர்ச்சி பெறுகைக்குமாக இருவரையும் உண்டாக்கினபடி. அண்டங்களுக்குள்ளே வாழ்கின்றவர்களாய்க் கொண்டு நின்று, ஒருவன் மனைந்து கொண்டுவர ஒருவன் அழித்துக் கொடுவரும்படி பிரம ருத்திரர்களை உண்டாக்கி.

---

1. ஒன்றில் ஒன்று அதிகமாயிருத்தலைப் படைக்கும் கிரமமாக வேண்டுவான் என்? சமப்பிரதானமாயிருத்தல் சிருஷ்டிக் கிரமம் ஆனாலோ? எனின், "நாநா வீர்யா: ப்ரதக் பூதா:" (ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 2 :) என்ற சுலோகத்தைத் திருவுள்ளம்பற்றி 'இவைதாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. பலபொருள்களை ஒரு பொருளாக்கிக் காரியம் கொள்ளவேண்டும் என்னுமதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'அது செய்யும்போது' என்று தொடங்கி. செதுகு - கூளம்.

3. ஐம்பெரும் பூதங்களைச் சொல்லுமிடத்து, படைப்பு முறையிலேயாதல், அழிக்கு முறையிலேயாதல் கூறாமல், முறைபிறழக் கூறியதற்குக் காரணம் அருளிச்செய்கிறார் 'அது நீர்ப்பண்டமாகையாலே' என்று தொடங்கி.

4. அண்ட சிருஷ்டியைச் சொன்ன பின்னர், சந்திரசூரியர்களை அருளிச்செய்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இனி, பெரியதொரு' என்று தொடங்கி.

5. இருவரில் ஒருவரைப் படைத்தால் போதியதாமே? இருவரையும் படைப்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீர்க்களிப்பு' என்று தொடங்கி.

ஆயின், சிவனை முற்படச்சொல்லுவான் என்? என்னில், அழித்தலை முன்னாகக் கொண்டேயன்றோ படைத்தல் தான் இருப்பது. [1] '**நீராய் நிலனாய்**' என்றதனோடு ஒக்க, '**சீரார் சுடர்கள் இரண்டாய்**' என்கையாலே, [2] "யாதொருவனுக்கு ஆத்மாக்கள் எல்லாம் சரீரமோ, யாதொருவனுக்கு மண்முதலியவை சரீரமோ" என்கிறபடியே, சேதன அசேதனங்கள் இரண்டும் அவனுக்குச் சரீரத்தைப் போன்று பரதந்திரப்பட்டவை என்னுமிடம் சொல்லுகிறது. '**சீரார் சுடர்கள் இரண்டாய்**' என்றும், '**சிவனாய் அயனாய்**' என்றும் ஒற்றுமைப்படுத்திச் சொல்லுகையாலே, [3]நியமிக்கப்படுகின்ற பொருளோடு நியமிக்கின்றவர்களாக அபிமானித்திருக்கிறவர்களோடு வாசி அற அவனுக்குப் பரதந்திரப்பட்டவர்கள் என்னுமிடம் சொல்லிற்று; [4] உலகத்தைப் படைத்தது உன்னை அடைவதற்காக அன்றோ? உன்னை அடைதலைப் பண்ணித் தந்தால் அன்றோ நீ ஒருகாரியம் செய்தாயாவது? படைப்புக்குப்பிரயோஜனமாவது, எப்பொழுதும் துக்கத்தை அடைந்துகொண்டிருக்கிற ஒருவனை அந்தமில் பேரின்பத்தே கொடுபோய் வைக்கை அன்றோ. அதுகிடக்க, இதனை உண்டாக்கியதற்குப் பிரயோஜனத்தை நீ பெறவேண்டாவோ? [5]'நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீரார் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயன் ஆனாய்' என்று, இவர் தமக்கு ஈசுவர வியாபாரம் அடங்

---

1. "நீராய் நிலனாய்" என்றதன்பின் சந்திர சூரியர்களைக் கூறியதற்கும், சந்திர சூரியர்களைக் கூறியதன்பின் சிவனையும் பிரமனையும் கூறியதற்கும் பாவம் அருளிச்செய்கிறார் 'நீராய் நிலனாய்' என்று தொடங்கி.

2. "யஸ்யாத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீசரீரம்" என்பது, பிருஹ. உப.

3. நியமிக்கப்படுகின்ற பொருள் - சந்திரசூரியர்கள்.

4. "நீராய்......அயனானாய்" என்றதற்கு, இரண்டு கருத்து அருளிச்செய்கிறார். முதல் கருத்து, உலகமே உருவமாக இருக்கிற இருப்பைக் காட்டினால் மாத்திரம் போதாது, அசாதாரண விக்கிரஹத்தையும் காட்டவேண்டும் என்பது. இரண்டாவது கருத்து, படைப்புக்குப் பயன் எல்லாரும் முத்தியைப் பெறுதலே அன்றோ? அதனைப் பெற வேண்டாவோ? என்பது. இவற்றுள், முதல் கருத்தை, இத்திருப்பாசுரத்தின் அவதாரிகையாலும், 'இது அறியாமல்' என்று தொடங்கும் வாக்கியத்தாலும் அருளிச்செய்து, இரண்டாவது கருத்தை அருளிச்செய்கிறார் 'உலகத்தைப் படைத்தது' என்று தொடங்கி. 'உலகத்தைப் படைத்தது' என்றது முதல் 'நீ பெறவேண்டாவோ? என்றது முடிய உள்ள வாக்கியங்கள், ஒன்றனை ஒன்று விவரணம் செய்கின்றன. 'அது கிடக்க' என்றது, என்னுடைய துயரைப் போக்குதல் கிடக்க என்றபடி.

5. நேரே காணல்வேண்டும் என்பது மாத்திரமே அல்லாமல், படைத்தல் முதலிய செயல்களையும் அருளிச்செய்கையாலே, இவருடைய ஞானத்தின் தெளிவினை நினைத்து வியாக்யாதா ஈடுபடுகிறார் 'நீராய்' என்று தொடங்கி.

கலும் மனை அடைவே எண்ணுவாரைப்போலே மிக்க பிரகாச மாய் இருக்கிறபடி.

கூர் ஆர் ஆழி வெண் சங்கு ஏந்தி-[1]ஸ்ரீ பாஞ்சஜன்யத்தில் வெண்மைபோன்று திருவாழியில் கூர்மையும் இவர்க்குக் கவர்ச்சியாயிருக்கிறபடி.[2]பகைவர்களைத் துணிக்கத் துணிக்கச் சாணையில் ஏறிட்டாற்போலேகூர்மைமிக்கிருத்தலின்'கூர் ஆர் ஆழி'என்கிறது. [3]அசாதாரண விக்கிரஹத்துக்கு லக்ஷணமோ தான் கையும் திருவாழியுமாயிருக்கை! கொடியேன்பால் - [4]எனக்கு இங்ஙனே ஒரு நிர்ப்பந்தம் உண்டாவதே! என் சொரூபத்திற்கு விரோதங்காண் நான் பண்ணுகிறது! [5]ஸ்ரீ பரதாழ்வானைப்போலே பொகட்ட இடத்தே கிடக்க வல்ல தன்மையனாகப் பெற்றிலேன்; இளையபெருமாளைப் போலே, 'நில்' என்ன, "என்னை அடியவனாகக் கொள்" என்று நிர்பந்திக்கும் தன்மையனானவதே! வாராய்-[6]ஆசைப்பட்டாலும் நடக்கவல்லார் வருமித்தனை அன்றோ; '**வாராய்**' என்ற அளவிலே வந்து கொடு திரியப்போமோ? என்னில், ஒருநாள்-விடாயர் 'ஒரு கால் நாக்கு நனைக்கத் துளிதண்ணீர்' என்னுமாறு போலே '**ஒரு நாள்**' என்கிறார். மண்ணும் விண்ணும் மகிழவே - [7]எனக்காக வந்திலையாகிலும் உன் விபூதி அழியாமைக்கு வா என்கிறார். [8]'மானவிச்சோலைபோலே ஆவது அழிவதான இதுபோனல்

1. "வெண்சங்கு" என்பது போன்று, அழகிற்குக் காரணமான அடைமொழியைக் கூறாமல், கூர்மையைச் சொல்லுவது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீபாஞ்சஜன்யத்தில்' என்று தொடங்கி.

2. "ஆர்" என்ற சொல்லிற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பகைவர்களை' என்று தொடங்கி.

3. அசாதாரண விக்கிரஹத்தை ஆசைப்படுகிறவர் "கூராராழி வெண் சங்கேந்தி" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அசாதாரண' என்று தொடங்கி.

4. "கொடியேன்" என்று தம்மைச் சொல்லுவதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எனக்கு இங்ஙனே' என்று தொடங்கி. சொரூபத்திற்கு - பாரதந்திரிய சொரூபத்துக்கு.

5. 'திருஷ்டாந்தத்தோடு விவரணம் செய்கிறார் 'ஸ்ரீபரதாழ்வானைப் போலே' என்று தொடங்கி. "குருஷ்வமாம்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 31: 22.

6. வரவேண்டும் என்று ஆசைப்படுகிறது என்? இவர் போக ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆசைப்பட்டாலும்' என்று தொடங்கி.

7. "மண்மகிழ வாராய்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எனக்காக' என்று தொடங்கி. எனக்காக - என்சத்தை அழியாமைக்காக.

8. மானவிச்சோலை - மஹா நவமியில் செய்யும் அலங்காரம்.

என்செய்யவேணும்?' என்று இருக்கிருயாகில், அவ் விபூதியும் அழியுங்காண்; இது அழியவே [1] அதுவும் அழிந்ததாமன்றே. அதுவும் இருக்கச்செய்தே அன்றே, இது அழிய [2] "அந்தப் பரமாத்மா தனித்து இருக்கும்போது சந்தோஷத்தை அடைய இல்லை" என்றது. [3] இனித்தான், பிரளயத்துக்கு அழியாது என்ற அளவில், துன்பத்துக்கும் அழியாது என்றதாகாதே! மகிழவே - அழிகை தவிர்ந்து தரிக்கைக்காக. (1)

## 642.

**மண்ணும் விண்ணும் மகிழக் குறளாய் வலங்காட்டி**
**மண்ணும் விண்ணும் கொண்ட மாய அம்மானே**
**நண்ணி உனை நான் கண்டு உகந்து கூத்தாட**
**நண்ணி ஒருநாள் ஞாலத் தூடே நடவாயே.**

**பொ - ரை :**—மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் மகிழும்படியாக வாமனாவதாரமாகி வலியைக் காட்டி மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் அளந்துகொண்ட ஆச்சரியத்தையுடைய அம்மானே! நான் உன்னை அடைந்து கண்டு மகிழ்ந்து கூத்தாடும்படியாக நீ தானே வந்து கிட்டி இந்தப் பூமியிலே ஒருநாள் நடந்துவரல் வேண்டும்.

**வி - கு :**—மகிழக் குறளாய்க் காட்டிக் கொண்ட அம்மான் என்க. நான் கூத்தாட நடவாய் என்க. நடவாய் : விதிவினை. நடக்கவேண்டும் என்பது பொருள்.

**ஈடு :**—இரண்டாம்பாட்டு. [4]"வாராய் என்று நிர்ப்பந்தித்து அன்றுகாணும் நம்மைக்காண்பது! உம்மை ஒருதேச விசேடத்தே அழைத்துக்காணும் காட்டுவது" என்ன, அவ்வடிவு தன்னையே இங்கேகொடுவந்து இதர சஜாதீயமாக்கிக் காட்டிற்றிலையோ? என்கிருர்.

---

1. நித்தியவிபூதி அழியக்கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அதுவும்' என்று தொடங்கி.

2. "ஸைகாகீ ந ரமேத" என்பது.

3. மேலதற்கே வேறு வகையாகவும் ஒருவிடை அருளிச்செய்கிருர் 'இனித்தான்' என்று தொடங்கி. அந்த உலகம் அழிதலாவது, இல்லாததற்குச் சமமாதல்.

4. "ஞாலத்தூடே நடவாயே" என்பதனைக் கடாக்ஷித்து ஈசுவர அபிப்பிராயத்தை அருளிச்செய்கிருர் "வாராய்" என்று தொடங்கி. "மண்ணும் விண்ணும் மகிழ" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அவ்வடிவு தன்னையே' என்று தொடங்கி.

மண்ணும் விண்ணும் மகிழக் குறளாய் - [1] இவ்வளவில் ஸ்ரீ வாமனனாய் வந்து தோற்றிற்றிலையாகில், உபய விபூதியும் அழியுமாகாதே; ஒரு பாட்டம் மழை விழுந்தால் பொருள்களெல்லாம் செவ்வி பெறுமாறு போலே. அன்றிக்கே, உகவாதாரும் மகிழும்படியன்றோ வந்து தோற்றிற்று என்னுதல். வலம் காட்டி - [2] கொடை என்ற குணம் சிறிது கிடக்கையாலே இராவணன் முதலியோர்களைப் போலே அம்பாலே அழிக்கப் போகாதே; அழகாகிற பலத்தைக் காட்டி வாய்மாளப் பண்ணினபடி. [3] சுக்கிரன் முதலானோருடைய தடை உண்டாயிருக்கச் செய்தே அன்றோ அழகுக்குத் தோற்றுக் கொடுத்துக்கொண்டு நின்றபடி. குறளாய் - [4] கோடியைக் காணி ஆக்கினாற்போலே முகந்துகொள்ளலாயிருக்கை. மண்ணும் விண்ணும் கொண்ட - பூமி ஆகாசம் முதலானவற்றைக் காற்கீழே இட்டுக்கொண்ட. இந்திரனுக்குக் கொடுத்த என்னாமல், 'கொண்ட' என்கிறது, அவன் அசுரத்தன்மை வாய்ந்தவனாகையாலே அவன்பக்கல் தானே கொண்டானாகக் கொண்டபடியும், தன்னையடைந்தவனான இந்திரனுடைய வேறுபாடில்லாத ரசத்தாலும் என்க.

---

1. "மண்ணும் விண்ணும் மகிழ" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவ்வளவில்' என்று தொடங்கி. 'இவ்வளவில்' என்றது, மஹாபலி கையிலே அகப்பட்ட இவ்வளவிலே என்றபடி. "மகிழ" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒருபாட்டம்' என்று தொடங்கி. இங்ஙனம் அருளிச்செய்வதனால், "மகிழ" என்பது, ஈண்டு தரித்திருத்தலைச் சொல்லுகிறது.

2. வலம் காட்டுவது எற்றிற்கு? அவனைக் கொல்லுதல் ஆகாதோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கொடை என்ற குணம்' என்று தொடங்கி.

3. 'வாய்மாளப் பண்ணி' என்கிறது என்? 'வஞ்சனை' என்று அறியாமலே கொடுத்தான் என்றாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சுக்கிரன் முதலானோருடைய' என்று தொடங்கி.

> கண்ட திறத்திது கைதவம் ஐய!
> கொண்டல் நிறக்குறள் என்பது கொள்ளேல்
> அண்டமு முற்றும் அகண்டமு மேனாள்
> உண்டவ னாமிது ணர்ந்துகொள் என்றான்.

என்பது, கம்பராமாயணம், வேள்விப் பட. 26.

4. "குறளாய்" என்று சொல்லாநிற்க, 'அழகினைக் காட்டினான்' என்னக் கூடாதே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கோடியைக் காணி' என்று தொடங்கி.

மாய அம்மானே - [1]திருமகள் கேள்வனானவன் இரப்பவனான படியும், வடிவழகைக் காட்டி வாய்மாளப் பண்ணின படியும், "கொள்வன் நான் மாவலி" என்றாற் போலே சில மழலைச் சொற்களைப் பேசினபடியும், சிறுகாலைக் காட்டிப் பெரிய காலாலே அளந்தபடியும் தொடக்கமான ஆச்சரியங்களைச் சொல்லுகிறது. [2]"தேவர்களுக்கும் தானவர்களுக்கும் பொதுவான தெய்வம்" என்கிற ஸ்வாமித்வமன்றோ அங்ஙன் செய்யவேண்டிற்று என்பார் '**அம்மானே**' என்கிறார். நான் உன்னை நண்ணி உகந்து கூத்தாட - இந்திரன் [3]முதலானோர்களைப் போன்று எனக்கு இராஜ்ய அபேக்ஷை இல்லைகாண்! நீ செய்து தந்த ஞானத்தாலே நிறைவுபெற்றவன் ஆகிறிலேன். நான் உன்னைக் கிட்டிக் கண்டு உகந்து கூத்தாடும்படி வரவேணும். வருகைக்கு உண்டான வியாபாரம் அவன் தலையது; வந்தால் உகக்கைதான் இவரது செயல். நான் கண்டு உகந்து கூத்தாட-[4]மஹாபலியைப் போலே ஒன்று கொடுக்க இருக்கிறேன் அல்லேன்; இந்திரனைப் போலே ஒன்றுகொள்ள இருக்கிறேன் அல்லேன்; '**எனக்கு**' என்று இருப்பாரோடும், '**என்னது**' என்று இருப்பாரோடுமோ நீ கொடுத்துக்கொண்டு பரிமாறுவது? உன்னையே கண்டு உகப்பார்க்கு உன்னைக் காட்டலாகாதோ? [5]"கிருஷ்ணா! எங்களுடைய பரபரப்பினால்

---

1. "மாயன்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'திருமகள்கேள்வனானவன்' என்று தொடங்கி.

2. "தேவாநாம் தாநவாநாஞ் ச ஸாமாந்யம் அதிதைவதம்" என்பது, ஜிதந்தா. 'அங்ஙன் செய்ய வேண்டிற்று' என்றது, வலங்காட்டி வாங்கவேண்டிற்று என்றபடி.

3. 'முதலானோர்கள்' என்றதனால் மஹாபலியைக் கொள்க. 'இராஜ்ய அபேக்ஷை இல்லைகாண்' எனின், விருப்பம் வேறு யாதினிலோ? எனின், உகந்து கூத்தாடுகையிலே விருப்பம் என்க. "கண்டு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நீ செய்து தந்த' என்று தொடங்கி. "உகந்து" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வருகைக்கு' என்று தொடங்கி. என்றது, நீ வருகைக்கு ஒருசாதனத்தைச் செய்கிறவன் அல்லேன், நீ வந்தால் கண்டு மகிழ்வதுதான் நான் செய்யும் காரியம் என்றபடி.

4. "நான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மஹாபலியைப் போலே' என்று தொடங்கி.

5. அப்படி உகப்பாரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கிருஷ்ணா!' என்று தொடங்கி.

"ஸம்ப்ரமை: துஷ்ய கோவிந்த ஏதந்ந: பரமம் தநம்
அந்யதா வா விசேஷேண க: த்வாம் அர்ச்சயிதும் க்ஷம:"

என்பது, பாரதம் உத்யோ. ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து விதுரன் கூறியது.

மாத்திரம் சந்தோஷமடையும்; இதுதான் எங்களுக்குப் பெரிய செல்வம்" என்கிற இதிலே அன்றோ இவர்க்குச் சம்பந்தம். நண்ணி-நான் இருந்தஇடத்தே நீ வந்து கிட்டி. ஒருநாள்-பின்பு ஒருநாள் [1]அச்செயல் செய்யலாகாதோ? மண்ணும் விண்ணும் மகிழ நடக்கலாவது, அசுரன் முன்பேயோ? வேறு பிரயோஜனங்களைக் கருதாதவர்கள் முன்பு நடக்கலாகாதோ? ஞாலத்தூடே நடவாய்-நடை அழகில் வாசிகண்டு அதிலே ஈடுபடாதே கொடையைக் கொண்டாடி இருக்கும் அவன் முன்னேயோ நடக்கலாவது? [2]நடை அழகில் உள்மானம் புறமானம் கண்டு அதுவே ஜீவனமாயிருக்கிற என்முன்னே நடக்கலாகாதோ?

## 643.

ஞாலத் தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும்
சாலப் பலநாள் உகந்தோறு உயிர்கள் காப்பானே!
கோலத் திருமா மகளோடு உன்னைக் கூடாதே
சாலப் பலநாள் அடியேன் இன்னும் தளர்வேனோ?

**பொ - ரை:**—யுகங்கள்தோறும் பூலோகத்திலே நடந்தும் நின்றும் கிடந்தும் இருந்தும் மிகப் பலநாட்களாக உயிர்களைப் காப்பாற்றுகின்றவனே! அழகிய பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருக்கின்ற உன்னை அடியேன் அடையாமல் மிகப் பலநாள் இன்னம் தளர்வேனோ?

**வி - கு:**—ஞாலத்தூடு-பூமியிலே. அடியேன் உன்னைக் கூடாதே இன்னும் தளர்வேனோ? என்க. சால: மிகுதியைக் காட்டும் உரிச்சொல்.

**ஈடு:**—மூன்றாம்பாட்டு. [3]உலகமே உருவமாக இருக்கிற வடிவு காட்டினது போராது; அசாதாரணமான விக்கிரஹத்தைக் கொடுவந்து காட்டவேணும் என்றார் முதற்பாசுரத்தில்;

---

1. அச்செயல் - முன்பு மஹாபலியினுடைய யாகசாலைக்கு எழுந்தருளின அச்செயல். அதனை விவரணம் செய்கிறார் 'மண்ணும் விண்ணும்' என்று தொடங்கி.

2. அவன்முன் நடந்தோம், உம்முன் நடந்திலோம் என்று வெறுப்பது? என்? அவனைக் காட்டிலும் உமக்குள்ள வாசி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நடையழகில்' என்று தொடங்கி. உள்மானம் புறமானம் - உள்ளிற் சிவப்பும், புறத்திற் கறுப்புமான பரபாக ரசம்.

3. மேலே போந்த திருப்பாசுரங்களின் அவதாரிகைகளை நிகமித்துக் கொண்டு இத்திருப்பாசுரத்திற்கு அவதாரிகை இடுகிறார் 'உலகமே உருவமாக' என்று தொடங்கி. "உகந்தோறு உயிர்கள் காப்பானே" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'யுகந்தோறும்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். "காப்பானே" என்றதனைக் கடாக்ஷித்து 'சுபாவமாக' என்கிறார்.

அது உமக்குக் காட்டுவது ஒரு தேசவிசேடத்தே கொடுபோய்க் காணும் என்ன, அது தன்னை இங்கே கொடுவந்து இதர சஜாதீயமாக்கிக் காட்டிற்றிலேயோ என்றார் இரண்டாம் பாசுரத்தில்; அது ஒருநாள் சற்றுப்போது காட்டாறு பெருகினாற்போலே செய்தோம் என்ன, 'அது ஒரு காலத்திலே நிகழ்வது' என்ன ஒண்ணாதபடி யுகந்தோறும் இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைச் செய்து காப்பாற்றுதல் உன்னுடைய சுபாவமாக இருக்க, நான் நோவுபடக் கடவேனோ என்கிறார்.

ஞாலத்தூடே நடந்தும் - [1]எப்பொழுதும் காணக்கூடியவர்கள் முன்னே நடக்கக்கடவ நடையை, யாதானும் ஒரு காலத்தில் வந்தாலும் பாராதவர்கள்முன்னே காணும் நடப்பது! குருடர்களுக்கு முன்னே நடக்குமாறு போலே. [2]"ஸ்ரீராமபிரான் முன்னே நடந்து சென்றார்" என்றும், [3]"பின்னர் விஷ்ணுவானவர் மனிதஉருவத்தோடு சக்கரவர்த்தித் திருமகனாய் வீரனாய் மஹாபலமுள்ளவனாய் இராமன் என்ற பிரசித்தியுடையவராக இந்தப் பூமியில் சஞ்சரித்தார்" என்றும் சொல்லுகிறபடியே, நடந்தும். [4]வடதேசத்தினின்றும்பேர்ரப்பாடவல்லராயிருப்பார் ஒருத்தர் 'பெருமாளைத் திருவடிதொழவேணும்' என்று வர, ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையர் ஒரு தீர்த்தத்தின் அன்று இருந்து திருமாலையைப் பாடிச் சமைந்து, பெருமாளை

---

1. "ஞாலத்தூடே" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எப்பொழுதும்' என்று தொடங்கி. பாராதவர்கள்முன்னே நடந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'குருடர்களுக்கு' என்று தொடங்கி.

மூடர்முன்னே பாடல் மொழிந்தால் அறிவரோ
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா—ஏடாகேள்
செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னல்.

என்ற பாடல் இங்கே நினைக்கத்தகும்.

2. "நடந்தும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஸ்ரீராமபிரான்' என்று தொடங்கி. "அக்ரதஃ ப்ரயயௌராமஃ" என்பது, ஸ்ரீராமா. ஆரண். 11 : 1.

3. "அத தாஸரதிஃ வீரஃ ராமோ நாம மஹாபலஃ
விஷ்ணுஃ மாநுஷரூபேண சசார வஸுதாதலே"

என்பது, பாரதம் ஆரண்யபர்வம். வீமனைப் பார்த்து அநுமான் கூறியது.

4. அடியார்கட்காக நடந்து வந்ததற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'வடதேசத்தினின்றும்' என்று தொடங்கி. திருமாலை - ஒருபிரபந்தம்; தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிச்செய்தது. சமைந்து - முடித்து. கணிசம் - சபதம். என்றது, 'சொன்னபடி செய்கிறோம்' என்று சூளுறவு செய்வித்துக்கொண்டு என்றபடி.

ஒருமத்தகஜத்தைக் கைவசப்படுத்துமாறுபோலே, ஏத்தி வசமாக்கிக் கணிசம்கொண்டு, "நாயந்தே! தேவரீர் திருவடிகளுக்குப் போர நல்லான் ஒருவன் தேவரைத் திருவடிதொழ நெடுந்தூரமுண்டு வந்திருக்கிறது; இவனை அழைத்துக்கொண்டு சம்பாவனைபண்ணி யருளவேணும்" என்ன, அவரைப் பெருமாள் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக்கீழ் நின்றும் அவர் நின்றவிடத்தே திருக்கைத்தலத்தே எழுந்தருளி, விண்ணப்பஞ்செய்வார்களை அருளப்பாடிட்டு, "வாரீர்கோள்! நாம் இவன் வந்த தூரத்துக்கு எல்லாம் போருமோ செய்த தரம்?" என்று திருவுள்ளமானார்; [1] அப்படியே அன்றோ நம் இழவுகளும் திருவுள்ளத்தேபட்டு, அவை எல்லாம் ஆறும்படி முகம் தந்தருளும்படியும்.

நின்றும்- [2] "கம்பீரமான வில்லைப் பிடித்துக்கொண்டு நிற்கின்ற இராமனையும் இலக்ஷ்மணனையும் தன் கணவனுக்குத் தம்பியாகிய சுக்கிரீவனையும் நல்ல எண்ணமுள்ள தாரை கண்டாள்" - தன் கணவனைக் கொன்ற பெருமாளைத் 'தப்பச்செய்தீரே' என்கையன்றிக்கே, இவரது குற்றமுண்டோ? தம்மையடைந்தவர்களுடைய பகையைப் போக்கத் தவிர்வர்களோ? இவனும் அநுகூலித்தானாகில் ரக்ஷியாரோ? தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே தலைகீழதாக விழுந்து சாவாரைப்போலே தன் குற்றத்தால் கெட்டானத்தனைகாண் வாலி என்றாள் அன்றோ! இப்படி உகவாதாருடைய பெண்களுக்கும் கவர்ச்சிகரமாம்படியன்றோ கையும்வில்லுமாய் நிற்கும்நிலை இருப்பது! கிடந்தும்- [3] "பாம்பின் உடல்போலே இருக்கிற திருக்கையைத்

1. 'அப்படியே' என்று தொடங்கி அருளிச்செய்யும் வாக்கியம் பிராசங்கிகம். 5-ஆம் பத்து 439, 440. பக். காண்க.

2. நிற்கிற நிலையாவது இன்னது என்றும், அதுதான் கவர்ச்சிகரமாக இருக்கும் என்னுமதனையும் அருளிச்செய்கிறார் 'கம்பீரமான' என்று தொடங்கி.

"அவஷ்டப்ய ச திஷ்டந்தம் ததர்ச தநுரூர்ஜிதம்
ராமம் ராமாநுஜம் சைவ பர்துஶ்சைவ அநுஜம் ஶுபா"

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 19: 25. சுலோகத்திலேயுள்ள "ஶுபா" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தன் கணவனை' என்று தொடங்கி. கூறிய பொருளுக்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'தண்ணீர்' என்று தொடங்கி. தசரதன்பெற்ற மரகத மணித்தடமன்றோ இவரும்.

3. "கிடந்தும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பாம்பின் உடல்' என்று தொடங்கி.

தலைக்கு அணையாகக்கொண்டு பகைவர்களை அழிக்கும் பெருமாள் கிழக்குமுகமாகக் கையைக் கூப்பிக்கொண்டு சமுத்திரத்திற்கு நேர்முகமாகப்படுத்தார்" என்கிறபடியே, கடலை வேண்டி நின்று கிடக்கிற கிடைதானே இலங்கை குடிவாங்க வேண்டும்படி இருக்கை. "பிரதிசிஸ்யே-எதிராகப் படுத்தார்" என்கிறதாயிற்று, கடல்தன்னைப் போர அளவு உடைத்தாக நினைத்திருக்குமாயிற்று, அதற்காக, ஒருகடல் ஒருகடலோடே பொருமை கொண்டு கிடந்தாற்போலே இருக்கை; "கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி" என்னும்படி அன்றோ. இருந்தும் - [1]"அலங்காரஞ்செய்து உட்கார்ந்திருக்கிறவரை" என்றும், [2]"பர்ணசாலையில் எழுந்தருளியிருக்கிற சடையோடு கூடிய இராமனை" என்றும் சொல்லுகிறபடியே இருக்கை. [2]"திருவயோத்தியி லிருக்கும் பேரோலக்கம் சிறியது" என்னும்படியன்றோ தனியிடத்தில் ஓலக்கம் இருந்தபடி. அந்த ஓலக்கத்தில் கிட்டும் தம்பிக்கும் கிட்ட ஒண்ணாதபடி அன்றோ இந்த ஓலக்கம் இருந்தபடி; "சுற்றிலும் நெருப்புப்போல் இருக்கிறவரை"-என்கிறபடியே, நெருப்பு எரியாநின்றால் கிட்டப்போகாதவாறு போலே கிட்டுதற்கு அரியராயிருந்த இருப்பு.

---

"அஞ்சலிம் ப்ராங்முகஃ க்ருத்வா ப்ரதிசிஸ்யே மஹோததேஃ
பாஹும் புஜகபோகாபம் உபதாய அரிஸூதநஃ"

என்பது, ஸ்ரீராமா. யுத். 21 : 1.

சுலோகத்திலேயுள்ள "அரிஸூதநஃ" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கடலை' என்று தொடங்கி. "பிரதி" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கடல் தன்னை' என்று தொடங்கி. "மஹோததேஃ" என்ற சொல்லைத் திருவுள்ளம்பற்றிப் 'போர அளவுடைத்தாக' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். ஆயின், இவர் கடலோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கருணையங்கடல்' என்று தொடங்கி. "கருணையங்கடல்" என்பது, கம்பராமாயணம் வருணனை வழிவேண்டு படலம், செய். 5.

1. "இருந்தும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அலங்காரம்' என்று தொடங்கி. "உபவிஷ்டம் ஸ்வலங்கிருதம்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 16 : 8.

2. உடஜேராமமாஸீநம் ஜடாமண்டலதாரிணம்
க்ருஷ்ணாஜிநதரம் தம்து சீரவல்கலவாஸஸம்
ததர்ஸ ராம மாஸீநம் அபிதஃ பாவகோபமம்"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 99 : 25.

இச்சுலோகத்திலுள்ள "அபிதஃ பாவகோபமம்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'திருவயோத்தியிலிருக்கும்' என்று தொடங்கி. அது எங்ஙனே? என்ன, விவரித்து அருளிச்செய்கிறார் 'அந்த ஓலக்கத்தில்' என்று தொடங்கி. திருவுள்ளம்பற்றிய பதங்களை எடுத்து அருளிச்செய்கிறார் 'சுற்றிலும்' என்று தொடங்கி.

சாலப்பலநாள்-[1]உன்னுடைய ரக்ஷணம் அநாதி அன்றோ? அன்றிக்கே, நூறு ஆண்டு,பதினோராயிரம் ஆண்டு என்றுமாம். உகந்தோறும்-[2]"யுகங்கள்தோறும் பிறக்கிறேன்" என்னு மாறுபோலே. உயிர்கள் - [3]ஒரு திருவடி, திருவனந்தாழ்வான், பிராட்டி இவர்களுக்காக அன்று கண்டீர், எல்லா ஆத்மாக் களையும் ரக்ஷிப்பது அன்றோ உன்னது! காப்பானே - [4]இவர் களுக்கு அழித்துக்கொள்ளுகை பணியானாற்போலே அன்றோ அவனுக்கும் நோக்குகை பணியானபடி. [5]நான் கைவாங்கி னேன், இனிக் காவற் சோர்வுபடாமல் வேணுமாகில் நோக்கிக் கொள். [6]"இராமபிரானாலும் இலக்ஷ்மணனாலும் காப்பாற்றப் பட்டது, சுக்கிரீவனோடு கூட்டியுள்ள அந்தச் சேனை" - கடற் கரையிலே விட்டபோது பெருமாளை நோக்குகைக்கு, தம்பி

---

1. "கல்பந்தோறும் செய்தருளும்படியைத் திருவுள்ளம்பற்றியாதல், இராமகிருஷ்ணாதி அவதாரங்களிலே பலகாலம் எழுந்தருளியிருத்தலைத் திரு வுள்ளம்பற்றியாதல் "சாலப்பலநாள்" என்கிறார் என்று இரண்டுவகையாகக் கருத்து அருளிச்செய்கிறார் 'உன்னுடைய' என்று தொடங்கியும், 'நூறு ஆண்டு' என்று தொடங்கியும்.

2. "பரித்ராணாய ஸாதூநாம்...ஸம்பவாமி யுகேயுகே" என்பது, ஸ்ரீ கீதை. 4: 8.

3. "உயிர்கள்" என்ற பன்மைக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'ஒருதிருவடி' என்று தொடங்கி.

4. "காப்பானே" என்று நிரூபகமாகச் சொன்னதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இவர்களுக்கு' என்று தொடங்கி.

5. "காப்பானே" என்ற விளிக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'நான் கைவாங்கினேன்' என்று தொடங்கி.

6. ஒருவன், தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுவதில் நின்றும் கை வாங்குவானேயானால், அக்கணத்திலிருந்தே அவன் பாதுகாப்பான் என்ப தற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'இராமபிரானாலும்' என்று தொடங்கி.

"ராமலக்ஷ்மண குப்தா ஸா ஸுக்ரீவேண ச வாஹிநீ
பபூவ துர்தர்ஷதரா ஸர்வை: அபி ஸுராஸுரை:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 25: 33.

இந்தச் சுலோகத்திற்கு விரிவுரை அருளிச்செய்கிறார் 'கடற்கரையிலே' என்று தொடங்கி. கண் சோர்ந்த அளவிலே - தூங்கின அளவிலே. சுலோகத் திலேயுள்ள "லக்ஷ்மண" என்ற சொல்லுக்குப் பொருள், 'தாம் கையும் வில்லு மாய்க்கொண்டு' என்பது. "ராமஸ்யதக்ஷிணோபாஹு:" என்றது, இங்கு நினைத்தல்தகும். 'கண்சோர்ந்த அளவிலே உலாவினார்' என்கையாலே, ஒரு வன், தன்முயற்சியைக் கைவிடுகையே அவன் காப்பதற்குக் காரணம் என் கிறார் 'அவன் நோக்குகைக்கு' என்று தொடங்கி. கண் செம்பளித்தல் - கண் மூடுதல்; என்றது, தன்முயற்சியைக் கைவிடுதலைக் குறித்தபடி.

மார் மஹாராஜர் மைந்தர் துவிவிதர்கள் உள்ளிட்ட முதலிகள் எல்லாரும் இலங்கையிலே கிட்ட, ஆகாசம் எல்லாம் வெளிக் காவல் அடைத்து, நிதி நோக்குவாரைப் போலே பெருமாளை நோக்கிக்கொண்டு கிடக்க, இவர்கள் இத்தனைவரும் கண் சோர்ந்த அளவிலே, பெருமாள், தாம் கையும் வில்லுமாய்க் கொண்டு இவர்களுக்குப் புறம்பேநின்று உலாவினர் அன்றோ. அவன் நோக்குகைக்கு இத்தலை கண்செம்பளிக்குமத்தனை யன்றோ வேண்டுவது. நாம் அவனுக்கு ரக்ஷகராக நினைத்திருக் குமது [1] மயக்கம் அன்றோ: உணர்ந்து பார்த்தால் ரக்ஷகனுக வல்லான் அவனே அன்றோ. கோலம் திருமாமகளோடு உன் னைக் கூடாதே - [2] தாயும் தமப்பனும் கூட இருக்கக் கிட்டப் பெறாதே, பால் குடிக்கும் குழந்தை நாக்கு ஒட்டிக் கிடந்து துடிக்குமாறுபோலே இருக்கிறது காணும்! [3] "வேறாகாதவள்" என்கிறபடியே, அவனும் அவளுமான சேர்த்தியன்றோ இவர்க் குப் பேறு.

இன்னும் தளர்வேனோ [4] - முன்னம் அநாதிகாலம் இழந்த நான் இன்னம் பலகாலம் இழக்கவோ? அடியேன் - [5] அது கிடக்க, "உன்னாலே இழந்தாய்" என்று சொல்லிக் கைவிட லாம் என்று இருக்கிறாயோ? இன்னும் தளர்வேனோ - [6] "ஒரு மிதுநம் எனக்குப் பேறு" என்று அறிந்தபின்பும் தளருமத்

1. 'மயக்கம் அன்றோ' என்றது, மஹாராஜர் முதலாயினோர் பெரு மாளைப் பாதுகாப்பதாக நினைத்தது, பக்திபாரவஶ்யமடியாக வந்த மயக்கம் என்றபடி.

2. பிராட்டியும் அவனும் அண்மையில் இருக்கத் தளர்வதற்குத் திருஷ் டாந்தம் காட்டுகிறார் 'தாயும் தமப்பனும்' என்று தொடங்கி.

3. 'உன்னைக்கூட' என்னுமல், "கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடாதே" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வேறாகாதவள்' என்று தொடங்கி.

4. "இன்னும்" என்றதற்கு, "சாலப்பலநாள்" என்றதனைக் கடா க்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'முன்னம்' என்று தொடங்கி.

5. "அடியேன்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'அது கிடக்க' என்று தொடங்கி. என்றது, உன் ரக்ஷணத்திலே நீ நாட்டம் வையா மலே இழந்தாய் என்றபடி. அன்றிக்கே, சேஷத்வஞானம் உண்டானபின்பு 'ஸ்வதந்திரன்' என்று கைவிடப் போகாது என்கிறார் என்னுதல்.

6. "கோலத் திருமாமகளோடு" என்றதனைக் கடாக்ஷித்து "இன்னும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒரு மிதுனம்' என்று தொடங்கி.

தனையோ? [1]"நீ ரக்ஷகன்' என்று அறியாதொழிதல், 'வேறு எனக்கு ரக்ஷகமுண்டு' என்றிருத்தல், 'நான் எனக்கு ரக்ஷகன்' என்றிருத்தல், 'லக்ஷ்மிக்கு நாயகனுயுள்ள வஸ்து பிராப்யம்' என்று அறியாதொழிதல், 'எனக்கு நான் உரியேன்' என்று இருத்தல் செய்தேனே இழக்கைக்கு; ருசி பிறந்த பின்பு இழக்கவோ?

[2] இப்பாசுரத்தால், அகாரத்தின் பொருளை முறைப்படி வியாக்கியானம் செய்கிருர்: "அவ-ரக்ஷணே" அன்றோ தாது. ரக்ஷிக்குமிடத்தில், எல்லாவகையாலும் ரக்ஷிக்கவேண்டும்; அது தான் எல்லாக் காலமும் ரக்ஷிக்கவேண்டும்; அப்படி ரக்ஷிக்குமிடத்தில் எல்லாரையும் ரக்ஷிக்கிறவனுகவேண்டும்; இப்படி வரையாதே ரக்ஷிக்குமிடத்தில், "குற்றம் செய்யாதார் ஒருவரும் இலர்" என்னுமவளும், "என்னடியார் அதுசெய்யார்" என்னுமவனும்கூட ஆயிற்று; ஆகையாலே, அகாரம், மிதுநத்துக்கு வாசகமாயிற்று. "ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும் காப்பானே" என்கையாலே, எல்லாவகையாலும் ரக்ஷகத்வம் சொல்லிற்று; "சாலப் பலநாள் யுகந்தோறும்" என்கையாலே, எல்லாக் காலத்திலும் ரக்ஷகத்வம் சொல்லிற்று; "உயிர்கள்" என்கையாலே, சர்வரக்ஷகத்வம் சொல்லிற்று; 'கோலத் திருமாமகளோடு உன்னைக்கூட' என்கையாலே, திருமகள்கேள்வனே பிராப்யம் என்றது. அகாரத்தின் விவரணமான திருமந்திரத்தின் பொருளும் சொல்லுகிறது: [3]"கோலத் திருமாமகளோடு உன்னை" என்கையாலே பிரஹ்மசொரூபம் சொல்லிற்று; "அடியேன்" என்கையாலே, ஜீவாத்மசொரூபம் சொல்லிற்று; 'உயிர்கள் காப்பான்' என்கையாலே, உபாயம் சொல்லிற்று; 'உன்னைக்கூட' என்கையாலே, பலம் சொல்லிற்று; 'உன்னைக்கூடாதே-தளர்வேனே' என்கையாலே, விரோதி சொரூபம் சொல்லிற்று. (3)

---

1. மேலேயுள்ள பதங்களை எல்லாம் கடாக்ஷித்து, "தளர்வேனே" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'நீ ரக்ஷகன்' என்று தொடங்கி. "இன்னும்" என்றதனை நோக்கி 'ருசி பிறந்தபின்பு இழக்கவோ?' என்கிருர்.

2. அகாரத்தின் பொருள் இத் திருப்பாசுரம் என்கிருர் 'இப்பாசுரத்தால்' என்று தொடங்கி.

3. 'திருமந்திரத்தின் பொருளும் சொல்லுகிறது' என்று அருளிச்செய்து, 'கோலத்திருமாமகளோடு' என்று தொடங்கி அர்த்தபஞ்சகத்தை (ஐம்பொருள்) அருளிச்செய்கிருர்; திருமந்திரம், ஐம்பொருள்களையும்பற்றிச் சொல்லுகையாலே.

## 644.

**தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர் உடல்வேறு
பிளந்து வீயத் திருக்கா லாண்ட பெருமானே !
கிளர்ந்து பிரமன் சிவன்இந் திரன்விண் ணவர்சூழ
விளங்க ஒருநாள் காண வாராய் விண்மீதே.**

**பொ - ரை :**—சகடாசுரனுடைய உடலானது கட்டுக்குலைந்தும் நடுவே முறிந்தும் வேறாகும்படி பிளந்து உருமாயத் திருவடியால் காரியம்கொண்ட பெருமானே! பிரமன் சிவன் இந்திரன் மற்றைத்தேவர்கள் இவர்கள் கிளர்ந்து சூழ்ந்து சேவிக்க, உன் முதன்மைதோன்றும்படி நான் காண விண்மீதே ஒருநாள் வாராய் என்க.

**வி - கு :**—அசுரர் : இகழ்ச்சியின்கண் வந்தது. வீய ஆண்ட பெருமான் என்க. வீய - இறக்க. கிளர்ந்து சூழ விளங்க விண்மீதே காண ஒருநாள் வாராய் என்க. வாராய் : விதிவினை; வரவேண்டும் என்பது பொருள்.

**ஈடு :**—நான்காம்பாட்டு. [1]'தளரக்கடவீர் அல்லீர் : உம்முடைய தளர்த்தியை நீக்கக்கடவோம் ஆனாலும், தடைகள் கனத்திராநின்றனகாணும்' என்ன, 'ஓம், அப்படியே; சகடாசுரனைக் காட்டிலும் வலியதன்றோ என்னுடைய விரோதி ?' என்கிறார். 'உன்கால் கண்டபோதே போகாதோ ?' என்கிறார். 'அடிபடின் செய்வதுஎன் ?' என்று சும்மெனாதே கைவிட்டோடும் அன்றோ.

சகடஅசுரர் உடல் தளர்ந்தும் முறிந்தும் வேறு பிளந்து வீய - சகடாசுரன் கட்டுக் குலையா, முறியா, உடல்வேறாகப் பிளந்து வீய;[2]"ஸ்ரீராமபிரானால்,அறுக்கப்பட்டதாகவும்பிளக்கப்பட்டதாகவும் பாணங்களால் கொளுத்தப்பட்டதாகவும்

---

1. "தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'ஓம், அப்படியே' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, சகடாசுரனை அழித்த உனக்கு என் தடைகளைப் போக்குவதில் அருமை உண்டோ ? என்பது. "திருக்கால் ஆண்ட" என்பதற்கு, ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'உன்கால்' என்று தொடங்கி. கால் - காற்றும், திருவடியும். 'அடிபடின்' என்பதற்கு, திருவடிகள் படின் என்பது நேர்பொருள். 'சும்மெனாதே' என்பது, பெரியாழ்வார் திருமொழி. 5. 4 : 3.

2. இங்ஙனம் ஆனதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ஸ்ரீராமபிரானால்' என்று தொடங்கி.

"சிந்நம் பிந்நம் ஶரை: தக்தம் ப்ரபக்நம் ஶஸ்த்ரபீடிதம்
பலம் ராமேண தத்ருஶு: நராமம் ஶீக்ரகாரிணம்"

என்பது, ஸ்ரீராமா. யுத். 94 : 22.

முறியடிக்கப்பட்டதாகவும் கத்தி முதலிய ஆயுதங்களால் வெட்டப்பட்டதாகவும் அரக்கர் சேனையைக் கண்டார்கள்" என்கிற படியே,[1] பின்பு, துகளும் காணவொண்ணுதபடியாகை. சகடாசுரனைக் கொன்ருன் என்று திரளச்சொல்ல அமைந்திருக்க, '**தளர்ந்தும், முறிந்தும்**' என்று தனித்தனியே சொல்லுகிருரன்ஞே, பகைவர்களைக் கோறல் ஆகையாலே அந்த அந்த நிலைகள் தமக்கு இனியவாயிருக்கையாலே. திருக் கால் ஆண்ட-[2]அடியார்களை ஆண்டால் ஆபத்துக்கு உதவுவர்கள் அன்றே. [3]இவன் இளமையாலே ஒன்றும் அறியாதே கிடக்க, திருவடிகள் காண் நம்மை நோக்கிற்று! என்கிருர். [4]"பால் வேண்டினவனுய் அழுதான்" என்கிறபடியே, முலைவரவு தாழ்த்தவாறே அனந்தலிலே திருவடிகளை நிமிர்த்தான்; அவ்வளவிலே பொடி பட்டானித்தனை: [5]"உருளச் சகடமது உறக்கில் நிமிர்த்தீர்" என்று இவனும் அறிந்துசெய்தானல்லன். [6]தன்னை உணர்ந்து பரிமாறும்போது திவ்விய ஆயுதமும், அவை உதவாதபோது கையும், அதுவும் உதவாதபோது திருவ்டிகளுமாய் இருக்கிற படி.[7] நம்முடைய ஆபத்துக்களுக்கே அன்றிக்கே, அவனுடைய ஆபத்துக்கும் திருவடிகளே காணும் உதவுவன! [8]திருமேனி தான் அடியார்களுக்காக ஆகையாலே, அவர்கள் விரோதி போகைக்கும் அதுதானே உறுப்பாயிருக்கை.

---

1. "வீய" என்றதன்பொருள், 'பின்பு' என்று தொடங்கும் வாக்கியம்.

2. காலாலே அழித்த என்னுமல் "திருக்கால் ஆண்ட" என்பதற்கு, ரசோக்தியாக அருளிச்செய்கிருர் 'அடியார்களை' என்று தொடங்கி.

3. ஈசுவரன் அழித்திருக்க, திருவடி அழித்தது என்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவன் இளமையாலே' என்று தொடங்கி.

4. மேலே அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'பால் வேண்டினவனுய்' என்றுதொடங்கி. "ஸ்தந்யார்த்தீ ப்ரருரோத ஹ" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 6 : 1.

5. தூக்கமயக்கத்தாலே திருவடியை நிமிர்த்தியதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'உருளச்சகடம்' என்று தொடங்கி. இது, பெரிய திரு. 10. 8: 3.

6. திவ்வியாயுதங்கள் இருக்க, திருவடிகளாலே அழித்தது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'தன்னை உணர்ந்து' என்று தொடங்கி.

7. திருவடிகள் உதவிசெய்தல் நமது ஆபத்துக்கு அன்றே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'நம்முடைய' என்று தொடங்கி.

8. அவன் திருமேனிக்கு வந்த ஆபத்தைப் போக்கியது, அடியார்களுடைய விரோதியைப் போக்கியவாறு யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'திருமேனிதான்' என்றுதொடங்கி. என்றது, திருமேனி

பெருமானே-[1]அன்று சேஷியை உண்டாக்கின உனக்கு, இன்று சேஷவஸ்துவை உண்டாக்குகை பெரிய பணியோ? [2]அவன் பிரகாரியானால், பிரகாரமாயுண்டாமது அன்றோ இது. பிரமன் சிவன் இந்திரன் விண்ணவர் கிளர்ந்து சூழ விளங்க ஒருநாள் காண விண்மீதே வாராய் - [3]"கும்பிடு நட்டமிட்டாடி" என்கிறபடியே, வேறு பிரயோஜனத்தைக் கருதாதவரைப் போலே, தம்வசம் அற்றவர்களாய்க்கொண்டு பிரமன் சிவன் முதலானோர்களால், பிரதாநரோடு பிரதான மில்லாதாரோடு வாசியறக் கிண்ணகம் சுழித்தாற்போலே சூழச் சூழப்பட்டு, [4]இருட்டில் விளக்குப்போலே [5]"ஒளிகளின் திரள்" என்கிற படியே தேஜஸ்ஸே வடிவான திருமேனியைக் கொண்டு, ஒரு நாள் யானைக்கு வந்து தோற்றினாற்போலே, ஆகாசமடங்கலும் இடம் அடைக்கும்படி வந்து தோற்றவேணும் என்கிறார். இவன் சந்நிதியில் பிரமன் முதலானோர்களுடைய ஒளிகள் 'இருட்டு' என்னும்படி இருத்தலின் '**விளங்க**' என்கிறார். 'நூறு ஆண்டுகள், பதினோராயிரம் ஆண்டுகள்' என்று விரும்பினேனோ! என்பார் '**ஒருநாள்**' என்கிறார். [6]நீள்நகர் நீள்எரி வைத்தருளாய் என்கிறேனோ! என்பார் '**காணவாராய்**' என்கிறார். இங்கே வந்து அவதரிக்கச் சொல்லுகிறேனோ! என்பார் '**விண்மீதே**' என்கிறார். (4)

645.

**விண்மீ திருப்பாய்! மலைமேல் நிற்பாய்! [7]கடற்சேர்வாய்!**
**மண்மீ துழல்வாய்! இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்!**
**எண்மீ தியன்ற புறஅண் டத்தாய்! எனதாவி**
**உண்மீ தாடி உருக்காட் டாதே ஒளிப்பாயோ!**

---

யானது அடியார்களுடைய செல்வமாகையாலே, அந்தத் திருமேனிக்கு வந்த ஆபத்தைப் போக்குகையே அடியார்களுடைய ஆபத்தைப் போக்கியவாறு என்றபடி.

1. "பெருமான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அன்று' என்று தொடங்கி.

2. பெரிய பணி அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் பிரகாரியானால்' என்று தொடங்கி.

3. "கும்பிடுநட்டமிட்டாடி" என்பது, திருவாய். 3. 5: 4.

4. "விளங்க" என்கையாலே, 'இருட்டில் விளக்குப்போலே' என்கிறார். இதனால், பிரமன் சிவன் முதலாயினோர்களுடைய ஒளி இருளுக்குச் சமம் என்பது போதரும்.

5. "தேஜஸாம் ராஸிமூர்ஜிதம்" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 1. 9: 67.

6. "நீள்நகர்" என்பது, திருவிருத்தம். 92.

7. "கடற்சேர்ப்பாய்" என்பது, முன்னுள்ள பாடம்.

**பொ - ரை :**—பரமபதத்தில் வீற்றிருக்கின்றவனே! திருமலைமேல் நிற்கின்றவனே! திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கின்றவனே! பூவுலகத்தில் பல அவதாரங்களைச் செய்கின்றவனே! இந்தப் பொருள்கள் எல்லாவற்றினுள்ளும் மறைந்து வசிக்கின்றவனே! எண்ணுக்கும் அப்பாற்பட்ட புறத்தேயுள்ள அண்டங்களிலும் இருக்கின்றவனே! என்னுடைய உயிருக்குள் அதிகமாக நடையாடிவிட்டு கண்களுக்கு இலக்கு ஆகாமல் மறையக் கடவையோ?

**வி - கு :**—முதல் இரண்டு அடிகளில் இறைவனுடைய [1]ஐவகை வடிவுகள் கூறப்பட்டுள்ளமை காண்க.

**ஈடு :**—ஐந்தாம்பாட்டு. [2] எல்லாவிடங்களிலும் அண்மையிலிருப்பவனாய் என் மனத்திலும் தெளிவாகப் பிரகாசித்து வைத்து, என்கண்களுக்கு விஷயமாகாது ஒழிந்தால் நான் தளரேனோ? என்கிறார்.

விண்மீது இருப்பாய் - [3] எப்பொழுதும் காணும்படியான பாகம் பிறந்தவர்களுக்குக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கும்படி. [4] இவர்க்கு இங்குத்தையிற் காட்டிலும் பரமபதத்தில் இருப்புக்காணும் முற்படத்தோற்றுகிறது. மலைமேல் நிற்பாய்- [5]நித்தியசூரிகளையும் நித்தியசம்சாரிகளையும் ஒரு துறையிலே நீர் உண்ணப் பண்ணுகிற இடம். என்றது, இங்குள்ளாரும்தன் நிலையின் வாசி அறியும்படி ருசி உண்டாக்குமவனாய் நின்றபடி. வேங்கடத்து ஆடுகூத்தன் அல்லனோ. கடல்சேர்வாய் - கால்

1. "ஐவகை வடிவாய் எங்குமாய் நின்ற அச்சுதன் அமலன் ஆனந்தன் செய்யொளி திகழும் பங்கயக்கண்ணன் திருமகள் கொழுநன்"
என்பது, வில்லிபாரதம்.

2. திருப்பாசுரம் முழுதினையும் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. "விண் மீதிருப்பாய்" என்பதற்குக் கருத்துப் பொருள் அருளிச்செய்கிறார் 'எப்பொழுதும்' என்று தொடங்கி.

4. இங்கே அண்மையில் இருக்கிற அர்ச்சாவதாரம் தொடங்கி அருளிச்செய்யாமல், முற்பட "விண்மீதிருப்பாய்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்க்கு' என்று தொடங்கி.

5. "மலை" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நித்தியசூரிகளையும்' என்று தொடங்கி. "நிற்பாய்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இங்குள்ளாரும்' என்று தொடங்கி. திருமலையில் நின்ற நிலை ருசியை உண்டாக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வேங்கடத்து' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி, 2. 1 : 9.

நடைதந்து போகவல்ல பிரமன் சிவன் முதலாயினோர்களுக்காகத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தபடி.[1] '**விண்மீது இருப்பாய்**' என்று இருப்பில் வீறு சொன்னார். '**மலைமேல் நிற்பாய்**' என்று நிலையில் வாசி சொன்னார். '**கடல்சேர்வாய்**' என்று திருப்பாற்கடலிலே கிடை அழகு நிரம்பப்பெற்றது. **மண்மீது உழல்வாய்**-அவ்வளவு போகமாட்டாத சம்சாரிகளுக்காக அவதரித்து, அவர்கள் கண்வட்டத்தில் திரியுமவனே![2] "தாம்பால் ஆப்புண்டாலும் அத் தழும்புதான் இளகப் பாம்பால் ஆப்புண்டு பாடற்றாலும்" என்கிறபடியே, அநுகூலராய்க் கட்டுவாரும் பிரதிகூலராய்க் கட்டுவாருமான சம்சாரமாதலின் '**உழல்வாய்**' என்கிறார்.

**இவற்றுள் எங்கும் மறைந்து உறைவாய்** - [3]கண்ணாலே காணில் சிவிட்கு என்னுமவர்களுக்கு, அவர்கள் காண ஒண்ணாதபடி மறைந்து வசிக்கின்றவனே! சிற்றின்பத்திலே ஈடுபாடுடைய ஒருவன் 'தாய் முகத்திலே விழியேன்' என்றால், தான் மறைய நின்று அவன் உகந்தாரைக்கொண்டு ரக்ஷிக்கும் தாயைப்போலே. [4] அதாவது, சிசுபாலன் முதலாயினோர் நறுகுமுறுகு என்றால், அவர்கள் கண்களுக்குத் தோற்றாதபடி அந்தர்யாமியாய்நின்று நோக்கும்படி. **எண்மீது இயன்ற புற அண்டத்தாய்** - எண்ணுக்குமேலே இருக்கிற மற்றுள்ள அண்

---

1. "இருப்பாய், நிற்பாய், சேர்வாய்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'விண்மீதிருப்பாய்' என்று தொடங்கி.

2. அவதாரம் எடுத்துச் சஞ்சரித்தலைத் 'திரிவாய்' என்னாமல், "உழல்வாய்" என்று துக்கம்தோற்றச் சொல்லலாமோ? என்ன, 'தாம்பால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, பெரிய திருவந். 18. பிரதிகூலர் - இங்கே, காளியன் என்னும் பாம்பு.

3. "மறைந்து" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கண்ணாலே காணில்' என்று தொடங்கி. சிவிட்கு என்னும் - கோபிக்கும்; அல்லது, அருவெறுப்படும். மறைந்து உறைதல் உபகாரம் என்னுமதனை உலக திருஷ்டாந்தத்தாலே காட்டுகிறார் 'சிற்றின்பத்திலே' என்று தொடங்கி.

4. திருஷ்டாந்தத்தாலே பலித்த பொருளைத் தார்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் 'அதாவது' என்று தொடங்கி. நறுகுமுறுகு - பொறாமை; ஒலிக்குறிப்பு.

டங்களிலும் [1] இப்படி வசிக்கின்றவனே! [2]" இப்படிப்பட்ட அண்டங்கள் கோடி நூறு கோடியாக இருக்கின்றன " என்பது ஸ்ரீவிஷ்ணுபுராணம். எனது ஆவியுள்மீது ஆடி - [3]என் மனத்தினுள்ளே குறைவறச் சஞ்சரித்து. அன்றிக்கே, என் ஆத்மாவுக்குள்ளும் புறம்பும் சஞ்சரித்து என்னுதல். உருக் காட்டாதேஒளிப்பாயோ-வடிவுகாணப்பெருவிட்டால்,[4]மறந்து பிழைக்கவும் பெருது ஒழிவதே. [5]குணஞானத்தாலே தரிப்பார்க்கே அன்ருே வடிவுகாணுது ஒழிந்தாலும் தரிக்கலாவது? (5)

## 646.

பாயோர் அடிவைத்து அதன்கீழ்ப் பரவை நிலமெல்லாம்
தாயோர் அடியால் எல்லா உலகும் தடவந்த
மாயோன்! உன்னைக் காண்பான் வருந்தி எனைநாளும்
தீயோடு உடன்சேர் மெழுகாய் உலகில் திரிவேனே?

**பொ - ரை :**—ஒரு திருவடியைப் பாப்பிக் கடலால் சூழப்பட்ட உலகங்கள் எல்லாம் அத் திருவடியின் கீழே ஆம்படி தாவி அளந்து, மற்றொரு திருவடியால் மேல் உலகங்கள் எல்லாவற்றையும் தடவின மாயோனே! உன்னைக் காணும்பொருட்டு வருந்தி எல்லாக் காலத்திலும் தீயின் அருகில் சேர்ந்த மெழுகைப் போன்று உலகத்தில் திரியக்கடவேனே?

---

1. 'இப்படி வசிக்கின்றவனே' என்றது, பரத்துவம் முதலான ஐவகை வடிவாய்க்கொண்டு வசிக்கின்றவனே என்றபடி.

2. அண்டங்கள் பலப்பல என்பதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'இப்படிப்பட்ட' என்று தொடங்கி.

" அண்டாநாம் து ஸஹஸ்ராணும் ஸஹஸ்ராணி அயுதாநி ச
ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடி கோடி ஶதாநி ச "

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 2. 7 : 27.

3. "எனது ஆவிமீது" என்பதற்கு, இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிருர். முதற்பொருள்: " மீது " என்பது, மிகுதியாய், குறைவறுதியைச் சொல்லுகிறது. இதனையே, 'என்மனத்தினுள்ளே' என்று தொடங்கி அருளிச்செய்கிருர். இரண்டாவது பொருள் : " மீது " என்பது, மேலாய், புறத்திலே என்றபடி. இதனையே, 'என் ஆத்மாவுக்குள்ளும்' என்று தொடங்கி அருளிச்செய்கிருர்.

4. "ஆவியுள்மீதாடி" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'மறந்து' என்று தொடங்கி.

5. வடிவு காணவிட்டால் குணங்களின் அநுசந்தானத்தாலே தரிக்க ஒண்ணுதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'குண ஞானத்தாலே' என்று தொடங்கி,

**வி - கு :**—ஓர் அடி பாய் வைத்து என்க. பாய் - பரப்பி. பாய், தாய் என்பன : வினையெச்சங்கள். தீயோடு - தீயின் ; வேற்றுமை மயக்கம்.

**ஈடு :**—ஆறும்பாட்டு. [1]"உம்முடைய அபேக்ஷிதம் செய்யக் கடவோம். அதில் ஒரு குறைஇல்லை ; ஆனாலும், பிரயோஜனம் உம்மதானபின்பு நீரும் சில முயற்சிகளைச் செய்யவேணும் காணும்' என்ன, இந்த மரியாதை என்று தொடங்கிக் கட்டிற்று என்கிறார். அன்றியே, காண்கைக்குத் தாம் தக்கவரல்லர் என்று உபேக்ஷித்தானாக நினைத்து, தகுதி தகுதிஇன்மைகளைப் பாராதே எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்த உன்னாலே இழக்கப்படுவோர் உளரோ? என்கிறார் ஆகவுமாம்.

ஓர் அடி பாய் வைத்து-[2]சேதனர்தலைகளிலே திருவடியை வைக்கிறபோது, அவர்கள் எவ்வளவு வருந்தினார்கள்?[3]வசிஷ்ட சண்டாள விபாகம் பாராதே வெறும் உன்கிருபையாலே செய்தருளினாய் அத்தனை அன்றோ ! ஓர் அடியைப் பரப்பிவைத்து. அதன் கீழ் - அத் திருவடியின் கீழே. பரவை நிலம் எல்லாம் தாய் - கடல்சூழ்ந்த பூமிப்பரப்படங்கலும் அளந்து.[4]சங்கல்பத்தாலே செய்தானல்லனே, திருவடிகளைப் பரப்பிப் பின்பேயன்றோ அளந்துகொண்டது. [5]பரக்க வைத்து அளந்துகொண்ட பற்பபாதன் அன்றோ. ஓர் அடியால் எல்லா உலகும் தடவந்த - மற்றைத் திருவடியால் பிரமலோகத்தளவும் சென்று தீண்டிய. 'எல்லாஉலகும்' என்றது, நடுவே உள்ளஉலகங்களை. தென்றல் உலாவினாற் போலே இருத்தலின் '**தடவந்த**' என்கிறார். மாயோன் - தன்னுடைமையைத் தீண்டுதற்குத் தான் வியாமோகம் செய்யுமவன். உன்னைக் காண்பான்

1. இப்போது தாம் அவனைப் பெறுமல் கூப்பிடுகிற இவர், திருவுலகு அளந்தருளின செயலைச் சொல்லுகிறதற்குத் தகுதியாக அவதாரிகை அருளிச் செய்கிறார் ' உம்முடைய ' என்று தொடங்கி.

2. "பாய் ஓர் அடி வைத்து" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச் செய்கிறார் ' சேதநர் ' என்று தொடங்கி. ' எவ்வளவு வருந்தினார்கள் ' என்றது, எந்தச் சாதநங்களைச் செய்து வருந்தினார்கள் என்றபடி.

3. "எல்லாம்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் ' வசிஷ்ட சண்டாள ' என்று தொடங்கி.

4. "பரப்பி வைத்து" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் ' சங்கல்பத்தாலே ' என்று தொடங்கி. என்றது, பத்தும் பத்தாகச் செய்தான் என்கைக்காக விசேடிக்கிறது என்றபடி.

5. பரப்பி அளந்துகொண்டதற்குப் பிரமாணம் காட்டுகிறார் ' பரக்க வைத்து ' என்று தொடங்கி. இது, திருச்சந்தவிருத். 32.

வருந்தி-[1]என்னளவில் வந்தவாறே என்னை இரப்பாளன் ஆக்கு கிறுயோ? அத்தலை இத்தலை ஆயிற்றே? எனைநாளும் - அநேக காலம். [2] மயர்வற மதிநலம் அருளியபின்பு பேற்றின் அளவும் செல்ல இடையில் உண்டான நான்கு நாட்களும், அவன் எதிர் சூழல் புக்குத் திரிந்த நாட்களைப் போன்று பரப்பாகத் தோற்றுகிறபடி. தீயோடு உடன்சேர் மெழுகாய்-[3]நெருப்பிலேபட்டுக் கரிந்துபோகவும் பெறுதே, தூர இருந்து அழியாதிருக்கவும் பெறுதே, உருகுவது வலிப்பது ஆகிறபடி. மானச அநுபவத்தாலே உருகுவது வலிப்பது, புறத்திலே காணுதல் பெறுமை யாலே உருகுவது வலிப்பதாய்ச் செல்லுகிறபடி. [4]நசை வலிக்கப்பண்ண, ஆசை உருகப்பண்ணச் செல்லுகிறபடி. உலகில் திரிவேனே - ஒன்றில் ஜீவித்தல், ஒன்றில் முடிதல் செய்யப் பெறுதே, குளிர்ந்த வழியில்லாத தேசத்திலே [5]யாதநாசரீரம் போலே நான் ஒருவன் இங்ஙனே திரிவதே! (6)

## 647.

உலகில் திரியும் கரும கதியாய் உலகமாய்
உலகுக்கேஓர் உயிரும் ஆனாய்! புறஅண்டத்து
அலகில் பொலிந்த திசைபத் தாய அருவேயோ!
அலகில் பொலிந்த அறிவி லேனுக்கு அருளாயே.

---

1. பின் இரண்டு அடிகளில் தம்முடைய துயரத்தை அருளிச்செய்வதற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'என்னளவில்' என்று தொடங்கி.

2. சிலகாலம்தானே இங்கு எழுந்தருளியிருந்தார்; "எனைநாளும்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'மயர்வற' என்று தொடங்கி. என்றது, பிரிவுத்துன்பத்தால் பலகாலமாகத் தோற்றுகிறது என்றபடி.

3. 'தீயோடுசேர்' என்னுமல், "உடன்சேர்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறுர் 'நெருப்பிலேபட்டு' என்று தொடங்கி. 'உருகுவது வலிப்பது' என்றதனை விவரிக்கிறுர் 'மானச அநுபவத்தாலே' என்று தொடங்கி. என்றது, ஒருகுணத்தை அநுபவித்தால், அது வேறு குணங்களிலே ஆசையைப் பிறப்பிக்கும்; அப்போதே அந்தக் குணங்களை அநுபவிக்கப் பெறுமையாலே உருகுவது; அது கிடைத்தவாறே தரிப்பது என்றபடி. புறத்திலே திருமேனியோடு கலவி பெறுமையால் உண்டான ஆசையாலே உருகுவது; 'ஒருகால் காணலாமோ' என்னும் நசையை விளைத்து விக்கிரஹ வைலக்ஷண்யம் முடிய ஒட்டாமையாலே வலிப்பது என்றபடி.

4. இதனை விவரணம் செய்கிறுர் 'நசை' என்று தொடங்கி. நசை யாவது, கிடைக்குமோ என்னும் சாபலம். ஆசையாவது, அநுபவம் இல்லாத காலத்தில் தரியாமை விளைக்கும் அபிநிவேசம்.

5. யாதநாசரீரம் - நரக அநுபவத்திற்குரிய சரீரம்

**பொ-ரை :**—உலகத்திலே சஞ்சரிக்கின்ற கருமங்களாகிற உபாயங்களாய், அந்த உபாயங்களைச் செய்கின்றவர்களுமாய், உலகத்திலேயுள்ள எல்லாப்பொருள்கட்கும் ஓர் உயிர் ஆனவனே! அண்டத்துக்கு மேலே உள்ள கணக்கு இல்லாதவர்களாய் விளங்குகின்ற பத்துத் திக்குக்களிலும் பரந்திருக்கின்ற முக்தர்களைப் பிரகாரமாகவுடையவனே! எண்ணிறந்து விளங்குகின்ற அறிவில்லாத எனக்குத் திருவருள்புரிய வேண்டும்.

**வி - கு :**—கதி - உபாயம்; கருமமாகிய உபாயம். உலகம் - உயர்ந்தோர். உலகு - சராசரங்கள். அரு - முக்தாத்மாக்கள்.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [1]'"உலகில் திரிவேனோ?" என்ற உறைப்பால் உண்டான சுவாதந்திரியம் உம்முடைய தலையிலே கிடந்ததே!' என்ன, 'சாதனங்களும் அவற்றைச் செய்கின்றவர்களும் உனக்கு அதீனமானபின்பு, இவ்ஆற்றாமை எனக்குச் சொரூபமாய்ச் சேருமித்தனை அன்றோ?' என்கிறார். அன்றியே, 'பேறு உம்மதானபின்பு நீரும் சிறிது முயற்சிசெய்ய வேணும் காணும்' என்ன, 'எல்லாமும் உனக்கு அதீனமாயிருக்க, அவற்றிற்குப் புறம்போ நான் என்காரியம் செய்கைக்கு?' என்கிறார் என்னலுமாம்.

உலகில் திரியும் கரும கதியாய் - உலகத்தில் பரிமாறுகிற கர்மமாகிற சாதனமாய். [2]உன்னை ஒழியப் பலத்தைக் கொடுக்கக் கூடியது ஒன்று உண்டோ? உலகமாய்-அவற்றைச் செய்

---

1. முதல் அடியைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். உறைப்பால் உண்டான ஸ்வாதந்திரியம் - ஆற்றாமையால் உண்டான பதற்றம். 'கிடந்ததே' என்றது, அது சாதனம் ஆகாதோ? என்றபடி. 'சாதனங்களும் அவற்றைச் செய்கின்றவர்களும்' என்கிறார் "கருமகதியாய் உலகமாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. மேற்பாசுரத்தில், சாதனத்தை அநுஷ்டிக்க வேண்டாவோ? என்ற சங்கையை அநப்யுபகம்யவாதத்தாலே (உடன்படாத வாதம்) நீக்கினார். இப்பாசுரத்தில் அப்யுபகம்யவாதத்தாலே (உடன்பட்டுப் பேசும் வாதம்) பரிஹரிக்கிறார் என்று திருவுள்ளம்பற்றி, வேறும் ஓர் அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அன்றியே' என்று தொடங்கி. 'எல்லாமும் உனக்கு அதீனமாயிருக்க' என்றதற்குக் கருத்து, உன்னுடைய கிருபையைப் பார்த்தால் சாதனம் அநுஷ்டிக்கவேண்டுவது இல்லை என்றார் மேல்; அப்படி அநுஷ்டிக்கவேண்டிற்றேயாகிலும், சாதனத்தை அநுஷ்டிக்கின்றவர்களும் அநுஷ்டிக்கிற சாதனங்களும் உன் அதீனமாகையாலே எனக்கு ஒரு சுவாதந்திரியம் இல்லை; நான் பரதந்திரனானபின்பு சாதனம் அநுஷ்டிக்கத் தகுதி இல்லை என்கிறார் என்பது.

2. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'உன்னை ஒழிய' என்று தொடங்கி.

கின்றவர்கள் தாம் சுவதந்திரர்களாய் இருக்கிறார்கள்? [1]உலகம் என்பது உயர்ந்தோர்மாட்டு அன்றோ ; உலகத்திலுள்ளார்க்கு என்றும் வரும் அன்றோ. உலகுக்கே ஓர் உயிரும் ஆனாய் - [2]ஒருதேகத்தை ஒருசேதனன் ஆத்மாவாய் அபிமானித்திருக்கு மாறுபோலே, எல்லாப் பொருள்களுக்கும் ஒரே ஆத்மா ஆன வனே! "சேதனர்களுடைய உள்ளே வியாபித்தவனாய் நியாமகனாயும் சேதன அசேதனங்களுக்கு ஆத்மாவாயும் இராநின்றான்" என்பது உபநிடதம். பலமாக இருக்கிற தானே கர்த்தாவும் கர்மமும் உபகரணங்களுமாயிருக்கை. [3]இரண்டும் உன் தலையிலே கிடந்தால் உன்னை ஒழிய எங்ஙனே நான் ஜீவிக்கும்படி.

புற அண்டத்து - அண்டத்துக்கு வெளியிலே என்றபடி. அலகு இல் பொலிந்த [4]திசை பத்தாய அருவேயோ - கணக்கு இல்லாதவர்களாய்,எம்பெருமான்சொரூபத்தாலே வியாபிக்குமாறுபோலே ஞானத்தாலே பத்துத் திக்குக்களிலும் வியாபித்திருப்பாராய், உருவப்பொருள் போன்று கண்களுக்கு விஷயம் அன்றிக்கே அருவாக இருக்கிற ஆத்மாக்களுக்கு நிர்வாஹகன் ஆனவனே! இதனால், முக்தரோதாம் சுவதந்திரராய் இருக்கிறார்கள் என்றபடி. பரமபதத்திலும் பத்துத் திக்குக்களாய் இருக்குமோ? என்னில், இங்கே இருந்து நினைக்கிற இவர்க்குச் சொல்லத் தட்டில்லையே. அங்ஙன் அன்றிக்கே,

---

1. "உலகம்" என்ற சொல் மக்களைக் காட்டுவதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'உலகம் என்பது' என்று தொடங்கி. இது, திவாகரம் மக்கட்பெயர்த் தொகுதி. உலகம் என்ற சொல், ஆகுபெயராய் மக்களை உணர்த்தும் என்பர் ஒரு சாரார். உலகம் என்பது மக்களை உணர்த்துமிடத்தும் உரிய பெயரே யாகலின் ஆகுபெயரன்று என்பர் சேனாவரையர். (தொ. சொல். சூ. 57.)

2. கர்மமும் அதனைச்செய்கிறவனும் அவன் ஆகைக்குக் காரணம் யாது? என்ன, 'சரீர சரீரி பாவம்' என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒரு தேகத்தை' என்று தொடங்கி. என்றது, எல்லாப் பொருள்கட்கும் தான் ஆத்மாவாகையாலே எல்லாப் பொருள்களும் தனக்கு அதீனமாய் இருக்கும் என்றபடி. "அந்தஃ பிரவிஷ்டஃ ஶாஸ்தா" என்பது உபநிடதம்.

3. "உலகுக்கே ஓர் உயிருமானாய்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இரண்டும்' என்று தொடங்கி. 'இரண்டும்' என்றது, கர்மத்தையும் கர்த்தாவையும் என்றபடி. 'உன் தலையிலே கிடந்தால்' என்றது, உன் அதீனமானால் என்றபடி. "உலகுக்கே ஓர் உயிர்" ஆகையாலே, "உலகமாய்" என்றபடி.

4. "திசை பத்தாய" - தர்மபூத ஞானத்தாலே பத்துத்திக்குக்களிலும் பரந்திருக்கின்ற. "அருவேயோ" - ஆத்மாக்களைப் பிரகாரமாக வுடையவனே.

முக்தர் லீலாவிபூதியை நினைக்கும்போது [1] இங்குள்ளபடியே நினைப்பார்கள் அன்றே. அலகு இல் பொலிந்த அறிவிலேனுக்கு-பகவானுடைய சொரூப ரூப குண விபூதிகளை அளவிடினும் தம் அறிவு கேடு எண்ணப் போகாது என்கிறார். [2] மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் வார்த்தை அன்றே. அருளாயே - [3] பரிகரம் உண்டானபின் அருளக் குறை என்? "பகவானே! உன்னுடைய பேரருளுக்கு உத்தமோத்தமமான பாத்திரமாக இந்த வஸ்துவானது இப்போது உனக்குக் கிடைத்தது" என்னுமாறுபோலே. (7)

## 648.

அறிவி லேனுக்கு அருளாய் அறிவார் உயிரானாய்!
வெறிகொள் சோதி மூர்த்தி! அடியேன் நெடுமாலே!
கிறிசெய்து என்னைப் புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ?
பிறிதொன்று அறியா அடியேன் ஆவி திகைக்கவே.

**பொ - ரை :**—ஞானிகளுக்கு உயிராக இருப்பவனே! வாசனையைக் கொண்டிருக்கிற ஒளிபொருந்திய விக்கிரஹத்தையுடையவனே! அடியேனுடைய நெடிய மாலே! விரகு அறியாத எனக்குக் கிருபைசெய்தருள்வாய்; வேறு ஒன்றனையும் அறியாத அடியேனுடைய உயிரானது திகைக்கும்படியாக வேறு உபாயங்களைச்செய்து என்னைப் புறத்திலே தள்ளி இன்னம் கெடுப்பாயோ? என்கிறார்.

**வி - கு:**—வெறி - வாசனை. கிறி - விரகு. ஆவி திகைக்கக் கெடுப்பாயோ என்க.

**ஈடு:**—எட்டாம்பாட்டு. [4] "அருளாய்" என்ற வாயோடே வந்து அருளக் கண்டிலர்; தன்பக்கல் நின்றும் பிரித்து என்னைக் கைவிடப் பார்த்தானாகாதே என்கிறார்.

---

1. இங்குள்ளபடியே - இங்கு உள்ளார் அநுசந்திக்கும்படியே.

2. இவர் முற்றறிவினராயிருக்க, "அறிவிலேனுக்கு" என்கிறது என்? என்ன, 'மயர்வற' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, சர்வஜ்ஞர் ஆகையாலே ஆகிஞ்சந்யம் தோற்றச் சொல்லுகிறார் என்றபடி.

3. "அறிவிலேனுக்கு அருளாய்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பரிகரம்' என்று தொடங்கி. பரிகரம் - ஆகிஞ்சந்யம். இதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'பகவானே' என்று தொடங்கி.

"பகவந் இதாநீம் அநுத்தமம் பாத்ரம் இதம் தயாயா:"

என்பது, தோத்திர ரத்நம். 24.

4. "இன்னம் கெடுப்பாயோ" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

அறிவிலேனுக்கு அருளாய் - [1]“நின்னருளே புரிந்திருந்தேன்” என்னுமாறுபோலே உன்னருள்ஒழிய வேறு ஒன்றை அறியாத எனக்கு அருளவேணும். [2]“அவ்வருள் அல்லன அருளும் அல்ல” என்றேயன்றோ இவர் இருப்பது. வையகத்துப் பல்லார் அருளும் பழுதே அன்றோ. அறிவார் உயிரானாய்-அறிவார்க்கு உயிர் ஆனவனே! என்னுதல்; அறிவாரை உயிராகவுடையவனே என்னுதல். [3]“ஞானியானவன் எனக்கு உயிர் போன்றவன் என்பது என்னுடைய மதம்” என்கிறபடியே, “என்னுடைய இரண்டாவது ஆத்மாவாக இருக்கிற உன்னை” என்கிறபடியே. வெறி கொள் சோதி மூர்த்தி-[4]அருளாது ஒழிந்தாலும் விடஒண்ணாத வடிவழகு. “சர்வகந்தஃ” என்னுமதன்றோ. பரிமளத்தையுடைத்தாய், எல்லையற்ற தேஜஸையுடைத்தான வடிவழகையுடையவனே! அடியேன் நெடுமாலே-எனக்கு இப்போது [5]எட்டாது இருக்கிறவனே! என்னுதல்; வடிவழகைக் காட்டி எனக்கு வியாமோஹத்தை விளைத்தவனே! என்னுதல். கிறிசெய்து-[6]நீ இப்போது உதவாமையாலே, முன்பு செய்தவையெல்லாம் விரகு அடித்தாய் என்று தோற்றாநின்றது காண்? என்னைப் புறத்திட்டு - பிராட்டியை அசோக வனத்திலே வைத்தாற்போலே, பகவத்குணங்கள் நடையா

1. “நின்னருளே” என்பது, பெரியாழ்வார் திருமொழி. 5. 4 : 1.

2. பிறருடைய அருள் சாதனம் அன்றோ? என்ன, சாதனம் அன்று என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘அவ்வருள் அல்லன’ என்று தொடங்கி. ‘வையகத்து’ என்பது, முதல் திருவந். 15.

3. அறிவாரை உயிராகவுடையவன் என்பதற்கு இரண்டு பிரமாணங்கள் காட்டுகிறார் ‘ஞானியானவன்’ என்று தொடங்கியும், ‘என்னுடைய’ என்று தொடங்கியும்.

“ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்” என்பது, ஸ்ரீ கீதை. 7 : 18.
“த்விதீயம் மே அந்தராத்மாநம் த்வாம் இயம்ஸ்ரீஃ உபஸ்திதா” என்பது, ஸ்ரீராமா. அயோத். 4 : 43.

4. “அருளாய்” என்றதன்பின் “சோதிமூர்த்தி” என்று வடிவழகினைச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் ‘அருளாது ஒழிந்தாலும்’ என்று தொடங்கி.

5. “மால்” என்பது பெருமையாய், “நெடு” என்பதும் பெருமையாய், அதனால் பலித்த பொருள் அறப்பெரியோன் என்றுகொண்டு ‘எட்டாதிருக்கிறவனே’ என்கிறார்.

6. வியாமோகத்தை விளைத்த நம்மைக் “கிறிசெய்து” என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘நீ இப்போது’ என்று தொடங்கி. ‘விரகு அடித்தாய்’ என்றது, எனக்குச் சம்சாரத்திலும் பொருந்தாமல் நீயும் முகம் காட்டாமல் துடிக்கும்படி செய்யப் பார்த்தாய் என்றபடி.

டாதே ஐம்புல இன்பங்கள் நடையாடுகிற சம்சாரத்திலே பொகட்டு. இன்னம் கெடுப்பாயோ - முன்பு இழந்தது போராதோ? [1]"சம்சாரம் தியாஜ்யம்" என்றும், "பகவத்குணங்கள் நன்று" என்றும் அறிந்த பின்பும் கெடுப்பாயோ? [2]"நினைவு கெடுவதனல் புத்தி கெடுகிறது, புத்தி கெடுவதனல் நாசத்தை அடைகிருன்" என்பது ஸ்ரீகீதை. பிறிது ஒன்று அறியா அடியேன் - வேறு கதியில்லாதவனய் வேறு ஒருவர்க்கு உரியன் அல்லாதவனய் இருக்கிற என்னுடைய. ஆவி திகைக்க - மனம் கலங்கும்படி. கிறிசெய்து என்னைப்புறத்திட்டுஇன்னம் கெடுப்பாயோ? (8)

649.

ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்
பாவி யேனைப் பலநீ காட்டிப் படுப்பாயோ?
தாவி வையம் கொண்ட தடந்தா மரைகட்கே
கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ.

**பொ - ரை:**—மனம் கலங்கும்படியாக ஐந்து இந்திரியங்களும் வருத்துகின்ற பலவகையான சிற்றின்பத்தை எனக்கு நீ காட்டிப் பாவியேனை அழிக்க நினைக்கின்ருயோ? பூலோகத்தை அளந்துகொண்ட தாமரைபோன்ற திருவடிகட்கு அழைத்துக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ? என்கிருர்.

**வி - கு:**—ஐவர் ஆவி திகைக்கக் குமைக்கும் சிற்றின்பம் என்க. ஐவர்: இகழ்ச்சிக் குறிப்பு. ஆவி - மனம். சிற்றின்பம் பல நீ காட்டி என்க. வையம் தாவிக் கொண்ட தாமரை என்க. தாமரை - உருவகம்.

**ஈடு:**—ஒன்பதாம்பாட்டு.[3]உம்மை இங்குக் கெடுத்தது என்? என்ன, கண்ட காட்சியிலே இழுத்துக் கொள்ளக்கடவனவான விஷயங்கள் பரிமாறுகிற இடத்தே வைத்தாயாகில்,

---

1. முன்னைய நிலையைக் காட்டிலும் இப்போது வந்த விசேஷம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'சம்சாரம்' என்று தொடங்கி.

2. விஷயங்கள் நடையாடுகிற சம்சாரத்தே வைத்தால் கேடு ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'நினைவு கெடுவதனல்' என்று தொடங்கி.

"த்யாயதோ விஷயாந் பும்ஸஃ ஸங்கஸ்தேஷூப ஜாயதே
ஸங்காத் ஸம்ஜாயதே காமஃ காமாத் க்ரோதஃ அபிஜாயதே"
"ஸ்மிருதி ப்ரம்சாத் புத்திநாசஃ புத்தி நாசாத் ப்ரணச்யதி"

என்பன, ஸ்ரீ கீதை. 2. 62: 63.

3. "பல நீ காட்டிப் படுப்பாயோ" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'உம்மை இங்கு' என்று தொடங்கி அருளிச்செய்கிருர்.

இனி, கெடுக்கை என்று ஒன்று உண்டோ? என்கிறார்.[1]என்னை இங்கே வைத்தபோதே, குழியைக் கல்லி மண்ணை இட்டு அமுக்கப் பார்த்தாயன்றோ? என்கிறார்.[2]"என்னைத் துவேஷிக்கிறவர்களும் கொடியவர்களும் மனிதர்களில் கெட்டவர்களுமான அவர்களை நான் பிறவிகளில் எப்பொழுதும் தள்ளுகிறேன்" என்னும்படியே.

ஆவி திகைக்க - இந்திரியங்களுக்கு மூலமான மனம் கலங்க. ஐவர் குமைக்கும் - 'ஐவர்' என்று உயர்திணையாகச் சொல்லுகிறார் நலிவின் மிகுதியாலே. பலமில்லாத [3]ஒருவனைப் பற்றி ஐந்துபடர் நலியுமாறுபோலே 'என்விஷயத்தைக் காட்டு காட்டு'என்று தனித்தனியே நலிகிறபடி.[4] இப்படி நலிந்தாலும் சுவைஉண்டாகில் ஆம் அன்றோ. சிற்றின்பம்-[5]முள்ளிப்பூவில் தேன்போலே. அற்பசாரங்கள் அன்றோ. என்றது, தேவரை அகற்ற வேண்டுவதுண்டாய், அநுபவிக்கலாவது ஒன்று இன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி. பாவியேனை-[6]அந்தமில் பேரின்பத்துக்கு இட்டுப் பிறந்த நான் சிற்றின்பத்தில்சேரும்படியாவதே! [7]"வீவில் இன்பம்மிக எல்லை நிகழ்ந்தனன்" என்றவரன்றோ இங்ஙனே சொல்லுகிறார். பல - ஒன்றிலே கால் தாழப்பண்ணவல்ல விஷயமில்லையே. நீ காட்டிப் படுப்பாயோ-

1. "பாவியேனை" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'என்னை இங்கே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. சம்சாரத்தில் வைத்திருத்தல், தண்டனைக்குரிய காரியமோ? என்ன, 'என்னை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"தாநஹம் த்விஷதঃ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்
க்ஷிபாமி அஜஸ்ரமஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு"

என்பது, ஸ்ரீ கீதை. 16 : 19.

3. தாம் ஒருவராக இருக்க, இந்திரியங்கள் ஐந்து நலிவதற்குத் திருஷ்டாந்த மூலமாக அவை குமைக்கும் பிரகாரத்தைக் காட்டுகிறார் 'பலமில்லாத ஒருவனை' என்று தொடங்கி.

4. "சிற்றின்பம்" என்பதற்கு, அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இப்படி நலிந்தாலும்' என்று தொடங்கி.

5. சுவை இல்லையோ? என்ன, 'முள்ளிப்பூவில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அல்பரசம் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அற்பசாரங்கள்' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 2 : 6.

6. "பாவியேனை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அந்தமில்' என்று தொடங்கி.

7. அந்தமில் பேரின்பத்துக்கு இட்டுப்பிறந்த இவர் சிலநாள் அநுபவித்தாரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வீவில் இன்பம்' என்று தொடங்கி. இது, திருவாய். 4. 5 ; 3.

ரக்ஷகனை நீ காட்டி முடிக்கப்பார்க்கிறாயோ?[1]நாட்டார்'காணு விடில் பிழையோம்' என்று இருக்கிற விஷயம் இவர்க்குக் கண்டமாத்திரத்திலேயே மோஹிக்கும்படியாக இருக்கிற தன்றோ; ஆகையால், 'காட்டிப் படுப்பாயோ' என்கிறார். [2]அசுணமா என்று சிலபறவைகள் உள்ளன; அவை பிடிகொடா ஒன்றுக்கும்; அவற்றைப் பிடிக்க நினைத்தார் முற்படப் பாடுவார்கள்; அதுகேட்டு நெஞ்சுநெகிழும்; பின்பு பறையை அடிப்பார்கள்; இதன் வன்மையாலே பட்டுக் கிடக்குமாம். அது போலே, இவர் பகவானுடைய குணங்களிலே நைந்தபடி, இதர விஷயங்களைக் கேட்டஅளவிலே முடியும்படி ஆனார். [3]நெடுநாள் அநுபவித்துப் போந்தாலும் கடக்க இருந்த அன்று 'நாம் இன்னது அநுபவித்தோம்' என்று நினைப்பதற்கு ஒன்று இன்றிக்கே இருக்கும் அன்றோ; [4]இங்ஙனே இருக்கச்செய்தேயும் அவற்றில் ஆசைசெலுத்துவது பாவத்தின் மிகுதி அன்றோ.

தாவி வையம் கொண்ட தடம் தாமரைகட்கே கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ-[5]வேறுஒன்றைக் குறிக்கும் வாக்கியத்திலே வைத்துப் பேற்றினை அறுதியிடுகிறார். 'தாவி வையம்கொண்டதடம் தாமரை' என்றதனால், நினைத்தது தலைக்

1. கண்ட அளவிலேயே அது நாசத்திற்குக் காரணமாம் என்கிறதனை அநுசந்தித்து வியாக்யாதாவின் ஈடுபாடு, 'நாட்டார்' என்று தொடங்கும் வாக்கியம்.

2. மற்றைய விஷயங்களில் சென்று சேர்ந்தால்தானே அவை நாசத்திற்குக் காரணமாம்; கண்டமாத்திரத்திலேயே அவை நாசத்திற்குக் காரணமாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அசுணமா' என்று தொடங்கி.

"மறக்குமீ பதந்தியும் சேலும் அசுணமும் வண்டினமும்
பறக்கும் பதங்கமும் போலவ ராற்கெடும் பாதகரே"

என்பது, திருவேங்கடத்தந்தாதி. 28.

"பறைபட வாழா அசுணமா" என்பது, நான்மணிக்கடிகை.

இதனைப் பறவை என்பர் ஒரு சாரார்; விலங்கு என்பர் மற்றொரு சாரார்.

3. "சிற்றின்பம்" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'நெடுநாள்' என்று தொடங்கி.

4. "பாவியேனை" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'இங்ஙனே' என்று தொடங்கி.

5. 'வேறு ஒன்றைக் குறிக்கும் வாக்கியத்திலே' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, "கூவிக்கொள்ளும் காலம்" என்பது போன்ற கால எல்லையைக் கேட்கிற பாசுரத்தாலே "தடந்தாமரைகட்கே" என்று திருவடிகளை அடையத்தக்கது என்று அறுதியிடுகிறார் என்றபடி.

கட்டவல்லன் என்னும் சத்தியோகம் கூறியபடி. பூமிப் பரப்பு அடங்கலும் வருத்தம்இன்றி அளந்து கொண்டபடி. இனிமை அளவிறந்த திருவடிகளாதலின் ' **தடம்தாமரை** ' என்கிறது. இதனால் **பிராப்யம்** சொல்லுகிறது. ' கூவிக்கொள்ளும் காலம் ' என்கையாலே, **பிராபகத்தின்** தன்மை சொல்லுகிறது. ' இன்னம் குறுகாதோ ' என்கையாலே, ருசியின்தன்மை சொல்லுகிறது.[1] இதர விஷயங்களின் காட்சி முடியும்படியாய், உன்திருவடிகளில் இனிமை அறிந்து விடமாட்டாத அளவு பிறந்த பின்பு இன்னம் தாழ்க்குமத்தனையோ? [2]**பிள்ளானுடைய** அந்திமதசையில் நோவுஅறிய **நஞ்சீயர்** புக்கு இருக்க, '**கூவிக்கொள்ளும்காலம் இன்னம் குறுகாதோ?**' என்று பலகால் சொல்ல, இதனைக்கேட்டுச் சீயர்அழ, ' சீயரே! நீர் கிடந்து அழுகிறது என்? அங்குப் போய்ப் பெறப் புகுகிற பேறு இதிலும் தண்ணிது என்று தோற்றி இருந்ததோ?' என்று பணித்தான். (9)

## 650.

குறுகா நீளா இறுதி கூடா எனை ஊழி
சிறுகா பெருகா அளவில் இன்பம் சேர்ந்தாலும்
மறுகால் இன்றி மாயோன்! உனக்கே ஆளாகும்
சிறுகா லத்தை உறுமோ? அந்தோ! தெரியிலே.

**பொ - ரை:**—மாயோனே! இயல்பாகக் குறைவதும் பெருகுவதும் இல்லாததும், முடிவு இல்லாததும், எத்தனைக் கற்பங்கள் சென்றாலும் கால வேறுபாட்டினால் குறைவதும் பெருகுவதும் இல்லாததும் அளவு இல்லாததுமான சிற்றின்பமாகிய ஆத்மஅநுபவம் சேர்ந்தாலும், தெளிந்து பார்க்குமிடத்து மறுபடியும் ஒருகாலம் இல்லாமல் உனக்கே கைங்கரியத்தைச் செய்கின்ற சிறிய காலத்தை அது ஒக்குமோ?

**வி - கு:**—முதல் இரண்டு அடிகளில் கைவல்யம் கூறப்படுகிறது. குறுகா, நீளா, கூடா, சிறுகா, பெருகா என்பன: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்; குறுகா இன்பம் எனத் தனித்தனியே கூட்டுக. அந்தோ: இரக்கத்தின்கண் வந்த இடைச்சொல்.

---

1. "இன்னம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் ' இதர விஷயங்களின் ' என்று தொடங்கி.

2. இப்படிக் கூப்பிட்ட பேர் உளரோ? என்ன, ' பிள்ளானுடைய ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1]"செல்வம் முதலானவை அல்பமானவை நிலை அற்றவை' என்று 'வேண்டா' என்றீராகில், அவ்வளவினது அன்றே; முடிவில்லாததுமாய் நிலைத்திருப்பதுமாய் இருக்குமன்றோ ஆத்மாநுபவம்! அதனை அநுபவித்தாலோ? என்ன, 'நீ சொன்னது பொருத்தமுள்ளதாயின் செய்யலாயிற்று; 'அவை அல்பம், நிலையற்றவை' என்ற இடம் சொரூபத்தைச் சொன்னேனத்தனை: உன்னுடைய இனிமையைச் சொன்னதும் சுவாபம் இருந்தபடி சொன்னேனத்தனை; 'அது தீது' என்று விட்டும், 'இது நன்று' என்று பற்றுகிறேனும் அல்லேன்; உன்னைப் பற்றிற்றும் நீ ஆகையாலே, அவற்றை விட்டதும் நீ அல்லாமையாலே' என்கிறார். வகுத்த விஷயத்திலே குணம் அழகு முதலானவைகளும் உண்டாகப் பெற்றேனித்தனை.

குறுகா நீளா-[2] தன் இயல்பிலே குறுகுதலும் நீளுதலும் இன்றிக்கே இருக்கை. இறுதிகூடா-[3] முற்றும் அழிவு இன்றிக்கே, இருக்கை. [4]எனை ஊழி சிறுகா பெறுகா-கால வேறுபாடுபற்றிக் குறைதலும் விரிதலும் இன்றிக்கே இருக்கை. அளவில் இன்பம் சேர்ந்தாலும்-[5]இங்ஙனே இருக்கையாலே

---

1. "உறுமோ" என்றதனைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார். 'நீ ஆகையாலே' என்றது, வகுத்தசேஷி ஆகையாலே என்றபடி. 'நீ அல்லாமையாலே' என்றது, அப்ராப்தங்கள் ஆகையாலே என்றபடி. பற்றுவதற்கும் விடுவதற்கும் இவையே காரணங்களானால் "மாயோன்" என்று, அழகு சீலம் முதலானவைகளைச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வகுத்த விஷயத்திலே' என்று தொடங்கி. "பல நீ காட்டிப் படுப்பாயோ" என்றதனால், செல்வம் முதலானவைகள் வேண்டா என்றது போதரும்.

2. 'தன் இயல்பிலே' என்றதனால், சம்சாரதசையில் இளமை முதலிய நிலைவேறுபாடுகளால் உண்டாகின்ற ஞானத்தின் சுருக்கம் பெருக்கங்களினின்றும் வேறுபடுத்தியபடி.

3. 'முற்றும் அழிவு இன்றிக்கே இருக்கை' என்றது, சரீரநாசம் இல்லாதிருத்தலைக் குறித்தபடி.

4. இப்போது இல்லாவிட்டாலும் வேறு காலத்திலேதான் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "எனை யூழி" என்று தொடங்கி. 'காலவேறுபாடுபற்றிக் குறைதலும் விரிதலும் இன்றிக்கே இருக்கை' என்றது, கல்பத்தின் ஆதியிலே தோன்றிக் கல்பத்தின் முடிவிலே அழியும் தன்மை இன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி.

5. 'இங்ஙனே' என்றது, மேலே கூறியவைகளைக் குறித்தபடி.

முடிவின்றிக்கே இருக்கிற ஆத்மஅநுபவ சுகத்தை அடைந்தாலும். மறுகால் இன்றி-[1]பகவானுடைய அநுபவமானது ஒருகால் அநுபவித்தால் மற்றைப்போது இன்றிக்கே இருப்பது. மாயோன்-மீண்டு இன்றிக்கே ஒழிந்தாலும் விடஒண்ணாத கல்யாணகுணயோகம் சொல்லுகிறது. உனக்கே ஆள் ஆகும் சிறுகாலத்தை உறுமோ - 'உன்திருவடிகளில் அடிமையே புருஷார்த்தம்' என்று இருக்குமது, [2]மறுத்து இன்றியிலே இருப்பது, அதுதான் கணநேரமாவது; இங்ஙனே இருந்தாலும் அளவில் இன்பம் சேருகை உறுமோ? இதனைப் பார்க்க. அந்தோ - பர்வதத்துக்கும் பரமாணுவுக்கும் இருந்த வேற்றுமையைச் சொல்லும்படி ஆவதே! தெரியிலே - தோற்றிற்றுச் சொல்லின் செய்யலாவது இல்லை: ஆராய்ந்து சொல்லுமன்று இங்ஙன் அல்லது இல்லை.[3] இந்தப்பொருளை உபதேசிக்க வேண்டுவது ஆவதே! (10)

## 651.

**தெரிதல் நினைதல் எண்ண லாகாத் திருமாலுக்கு**
**உரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்**
**தெரியச் சொன்ன ஓரா யிரத்துள் இப்பத்தும்**
**உரிய தொண்ட ராக்கும் உலகம் உண்டாற்கே.**

**பொ-ரை :**—தெளிதல் நினைத்தல் தியானித்தல் ஆகிய இவற்றால் அறியமுடியாத திருமாலுக்கு உரிமைப்பட்ட தொண்டர்களுக்குத் தொண்டரான ஸ்ரீசடகோபராலே தெளியும்படியாகச் சொல்லப்பட்ட ஒப்பற்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களும் உலகத்தையெல்லாம் உண்டவனான சர்வேசுவரனுக்கு உரிமைப்பட்ட தொண்டராகச் செய்யும்.

---

1. "உனக்கே ஆளாகும்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிப் 'பகவானுடைய அநுபவமானது' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். "மறுகால்" என்றதற்குப் பொருள், 'ஒருகால்' என்று தொடங்கும் வாக்கியம்.

2. 'மற்றைப்போது இன்றிக்கே இருப்பது' என்று மேலே அருளிச்செய்த வாக்கியத்தின் விவரணம், 'மறுத்தின்றியிலே இருப்பது' என்பது. "சிறுகாலம்" என்றதன்பொருள், 'அதுதான் கணநேரமாவது' என்பது.

3. "அந்தோ" என்றதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'இந்தப் பொருளை' என்று தொடங்கி.

மாயோன்! உனக்கே ஆளாகும் மறுகால் இன்றி, சிறுகாலத்தை, குறுகா நீளா இறுதிகூடா எனை ஊழி சிறுகா பெருகா அளவில் இன்பம் சேர்ந்தாலும், தெரியில் உறுமோ! அந்தோ! என்று கூட்டுக. உறுமோ - ஒப்பாகுமோ.

**ஈடு:**—முடிவில் [1] இப்பத்தும் கற்றவர்கள் சர்வேசுவரனுக்கு அந்தரங்கமான தொண்டராவர் என்கிறார்.

தெரிதல் நினைதல் எண்ணல் ஆகாத் திருமாலுக்கு-கேள்வி விமரிசம் பாவனை இவைகளால் அளவிடமுடியாத திருமகள்கேள்வனுக்கு. [2]"இந்தப் பரமாத்மாவானவன் மனனத்தாலும் தியானத்தாலும் கேள்வியினாலும் அடையத்தக்கவன் அல்லன்" என்கிறபடியே. [3] கேவலம் கேள்வி முதலானவைகட்கு அப்பாற்பட்டவனாயிருப்பான்; [4]அல்லாதபோது இவைதாம் அநுபவமாய்ச் சேருமன்றோ. இதற்கு அடி, திருமகள்கேள்வனாயிருத்தலாதலின் '**திருமாலுக்கு**' என்கிறார். [5]அதுவன்றோ சர்வாதிக வஸ்துக்கு அடையாளம். திருமாலுக்கு உரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் - திருமகள்கேள்வனை சர்வேசுவரனுக்கே அடிமைப்பட்ட ஆழ்வார். [6]சம்சாரத்தின்

---

1. "உரிய தொண்டராக்கும் உலகம் உண்டாற்கு" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. கேள்வி முதலானவைகளால் அளவிடமுடியாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'இந்தப் பரமாத்மாவானவன்' என்று தொடங்கி.

"ந அயம் ஆத்மா ப்ரவசநேந லப்ய:
ந மேதயா ந பஹுநா ஶ்ருதேந
யம் ஏவ ஏஷ: வ்ருணுதே தேந லப்ய:
தஸ்யஏஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்"

என்பது, முண்டகோபநிடதம்.

3. ஆயின், "காணத்தக்கவன், கேட்கத்தக்கவன், மனனம் செய்யத்தக்கவன்" என்னும் உபநிடத வாக்கியத்தோடு முரண் ஆகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கேவலம்' என்று தொடங்கி. என்றது, பிரீதியோடு கூடியதல்லாத கேள்வி முதலானவற்றிற்குக் காணமுடியாதவனாக இருப்பான் என்றபடி. ஈண்டு, 'கேவலம்' என்ற சொல் அன்பு இல்லாமையைக் காட்ட வந்தது.

4. நன்று; கேவலம் கேள்வி முதலானவற்றைக் கொள்ளாமல், பிரீதியோடு கூடிய கேள்வி முதலானவற்றைக் கொண்டாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அல்லாதபோது' என்று தொடங்கி. என்றது, கேவலம் கேள்வி முதலானவைகள் அன்றிக்கே, பிரீதிரூபமான கேள்விமுதலானவைகள் ஆனபோது, சாதனதசையே தொடங்கி போகரூபமாயிருக்கும் என்றபடி.

5. கேள்வி முதலானவற்றால் அளவிடமுடியாமைக்குத் திருமகள்கேள்வனாக இருத்தல் காரணமோ? என்ன, 'அதுவன்றோ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. இப்போது தம்மைச் சரமாவதி சேஷமாக அருளிச்செய்யும் கருத்து யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சம்சாரத்தின்' என்று தொடங்கி.

தன்மையை நினைத்த கொடுமையாலும், பகவத்விஷயத்திலே மூழ்கின கனத்தாலும், பெருவிடாயன் மடுவிலே விழுமாறு போலே, சேஷத்துவத்தினுடைய எல்லையிலே விழுகிறார் '**தொண்டர் தொண்டர் தொண்டன்**' என்று. [1]இது இவருடைய அகம் புத்தி இருக்கிறபடி. [2]தேக ஆத்ம அபிமானியாம்போது தேகத்திலே அகம்புத்தியைப் பண்ணுவான்; 'தேகத்திற்கு வேறுபட்டது ஒன்று உண்டு' என்று அறிந்தபோது ஆத்மாவிலே அகம் புத்தியைப் பண்ணுவான்; தன்னைப் பகவானுக்கு அடிமையாக நினைத்தபோது பிரகாரமாத்திரத்திலே நின்று செல்வம் முதலானவற்றைக்கொண்டு போவான்; 'அடிமையாக இருத்தலே பேறு' என்று அறிந்தபோது தன்னை அடியார்கட்கு அடியவன் என்னுமளவாக அநுசந்திக்கக் கடவன். [3]"பயிலும் சுடர் ஒளி" என்ற திருவாய்மொழிக்குப் பின்பு அடியார்கட்கு அடிமையாக இருத்தல் அளவாக ஆயிற்று, இவருடைய அகம் என்ற சொல்லுக்குப் பொருள் இருப்பது. [4]இவ்வளவு வருகை அன்றோ அநந்யார்ஹ சேஷத்வமாவது. தெரியச்சொன்ன ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் - பகவானுடைய வைலக்ஷண்யத்தையும், சம்சாரத்தினுடைய தோஷத்தையும் தெளிவாகச் சொன்ன இப்பத்தும். உலகம் உண்டாற்கு உரிய தொண்டர் ஆக்கும்-சர்வரக்ஷகனான சர்வேசுவரனுக்கு அநந்

---

1. இதனால், 'ஆத்மாவுக்கு நிரூபகம் அடியார்க்கு அடிமையாயிருத்தலே' என்று தோற்றுகிறது என்கிறார் 'இது இவருடைய' என்று தொடங்கி.

2. உலகத்தார் சரீரம் முதலானவைகளிலே அகம் புத்தியைச் செய்யாநிற்க இவர் இப்படி நினைப்பதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தேகாத்ம அபிமானியாம்போது' என்று தொடங்கி.

3. ஆயின், இங்ஙனம் ததீய சேஷத்வத்தை இட்டு நிரூபிக்கை மற்றைத் திருவாய்மொழிகளிற் காணோமே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பயிலும் சுடர்' என்று தொடங்கி.

4. ஆயின், ஈசுவரனுக்கு அடிமை என்று கூறுகின்ற பிரமாணங்களுக்கு விரோதம் வாராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வளவு' என்று தொடங்கி. இங்கு,

மற்றுமோர் தெய்வம் உளதென் றிருப்பாரோடு
உற்றிலேன்; உற்றதும் உன்னடியார்க் கடிமை
மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட் டெழுத்தும்
கற்று, நான் கண்ண புரத்துறை யம்மானே!

என்ற திருப்பாசுரம் நினைவு கூர்க. பெரிய திருமொழி.

யார்ஹசேஷமாக்கும் இத் திருவாய்மொழி. [1] சம்சாரம் நன்றுமாய், பகவத்விஷயம் தீதானாலும் அதனை விடமாட்டாதவர்களாதலின் 'உரிய தொண்டர்' என்கிறார். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய மாலுக்கும்
ஏரார் விசும்பில் இருப்பரிதால்—ஆராத
காதலுடன் கூப்பிட்ட காரிமா றன்சொல்லை
ஓதிடவே உய்யும் உலகு. (59)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. "உரிய" என்ற சொல்லுக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'சம்சாரம்' என்று தொடங்கி. என்றது, "குணங்கொடன்றே இராமன்மேல் நிமிர்ந்த காதல்" என்கிறபடியே, குணம் கண்டு செய்யும் அடிமையைக் காட்டிலும், சொரூபத்தோடுகூடியது அடிமை என்பதனை அறிந்து அதனைச்செய்தலே நன்று ஆதலின், அதனைச் செய்விக்கும் இப் பத்து என்றபடி. உரிய - தகுதியான. "குணக்ருத தாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமிறே பிரதானம்" என்பது, ஸ்ரீ வசனபூஷணம், பிரகரணம், 1. சூத். 111.

## பத்தாந் திருவாய்மொழி — "உலகமுண்ட"

## முன்னுரை

ஈடு :—[1]மேல் திருவாய்மொழியிலே, பிராப்பியத்தின் தன்மை இருக்கும்படி குறைவறச் சொன்னார்; இத்திருவாய்மொழியில் பிராபகத்தின் தன்மை குறைவறச் சொல்லுகிறார். [2]மேல் திருவாய்மொழியிலே உபாயத்தைப் பற்றிக் கூறுகின்ற வாக்கியங்கள் உண்டேயாகிலும், பிராப்யம் பிரதாநமாகக் கடவது; இத்திருவாய்மொழியில் உபேயத்தைப்பற்றிக் கூறுகின்ற வாக்கியங்கள் உண்டேயாகிலும், பிராபகம் பிரதாநமாகக்கடவது. [3]மேல் திருவாய்மொழி திருமந்திரம்போலே;

1. மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்குமுள்ள இயைபினைச் சுருக்கமாக அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி. என்றது, இத்திருவாய்மொழியில் சரணம்புகுகிறார் என்று சங்கதி சொல்லுகையாலே, சரணாகதனான சர்வேசுவரனுக்கு,பக்தனைக் காட்டிலும் ஏற்றம், பிராப்பிய பிராபகங்கள் என்னும் இரண்டும் அவனேயாக இருத்தலேயாதலின், சர்வேசுவரனுடைய அந்தப் பிராப்பிய பிராபகத் தன்மைகளை மேல்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியிலும் அருளிச்செய்கிறார் என்றபடி. "கோலத் திருமாமகளோடு உன்னைக் கூடாதே" என்றும், "தடந்தாமரைகட்கே" என்றும் மேல் திருவாய்மொழியில் அருளிச்செய்ததனைத் திருவுள்ளம்பற்றிப்'பிராப்பியத்தின் தன்மை...குறைவறச்சொன்னார்' என்கிறார். இத்திருவாய்மொழியில் வருகின்ற "அகலகில்லேன் இறையும்" என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றிப் 'பிராபகத்தின் தன்மை குறைவறச்சொல்லுகிறார்' என்கிறார். பிராப்பியம் - அடையத்தக்கது; பேறு. பிராபகம் - அதனை அடைதற்குரிய வழி. பிராப்பியம், உபேயம், சாத்யம் என்பனவும்; பிராபகம், உபாயம், சாதனம் என்பனவும் ஒருபொருட் சொற்கள்.

2. ஆயின், மேல் திருவாய்மொழியில் "காப்பானே" என்றதனால் உபாயத்தின் தன்மையையும், இத்திருவாய்மொழியில் "நாற்றோள் அமுதே" என்றதனால் உபேயத்தின் தன்மையையும் அருளிச்செய்துள்ளனரே? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி.

3. இரண்டும் உளவானாலும் ஒன்றே பிரதானமாக இருக்கும் என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'மேல் திருவாய்மொழி' என்று தொடங்கி. 'திருமந்திரம்' என்றது, பிராப்பியத்திலே பிரதானமான திருமந்திரத்திலே என்றபடி. 'சரமஶ்லோகம்' என்றது, பிராபகத்திலே பிரதானமான சரமஶ்லோகத்திலே என்றபடி. இங்கு,

> ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
> தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
> உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.

என்ற சூத்திரம் கருதற்பாலது. (தொல். சொல். 49.)

இந்தத் திருவாய்மொழி சரமஸ்லோகம்போலே. [1]இரண்டும் ஒன்றிலே உண்டே? என்னில், [2]அது சக்தியோகத்தாலே வருமது அன்றோ; வெவ்வேறு நிலைகளைப் பற்றி வரும் இரண்டும் இரண்டாயே இருக்கக்கடவன.

[3]மிகப்பெரிய துன்பத்தோடே பரமபதத்திலே கேட்கும்படி கூப்பிடச்செய்தேயும் சர்வரக்ஷகனானவன் வந்து முகம் காட்டாமையாலே மிகவும் தளர்ந்தவராய், திருமகள்கேள்வனாய் எல்லாவிருப்பங்களும் நிறைந்தவனாய் உபயவிபூதிகளோடு கூடினவனாய் எல்லாநற்குணங்களையுமுடையவனாய் [4]"நினைவிற்கும் எட்டாத சொரூபத்தையுடைய உலகநாதனான விஷ்ணுவானவர் பிராட்டியோடும் பத்தர்கள் பாகவதர்களோடுகூட ஸ்ரீவைகுண்டம் என்கிற சிறந்த உலகத்தில் எழுந்தருளியிருக்கிறார்" என்கிறபடியே, நித்தியசூரிகட்குக் காட்சிகொடுத்துக் கொண்டு இருக்கக்கூடிய சர்வேசுவரன், 'பலரும் நம்மை இழக்க நாம் நெடுங்கை நீட்டாக இருக்க ஒண்ணாது' என்று பார்த்தருளி,இராமன் கிருஷ்ணன் முதலான அவதாரங்களைச் செய்து அந்தக்காலத்திலே உள்ளவர்கட்குத் தன் குணங்களையும் செயல்களையும் காட்டி அநுபவிப்பித்தான்; அக்காலத்திலும் பிற்பாடரான சம்சாரிகளுக்கும் இழக்கவேண்டாதபடி ருசி உண்டாக்குகிறவனாய்க் கொண்டு வந்து திருமலையிலே

---

1. 'இரண்டும் ஒன்றிலே உண்டே?' என்பதற்குக் கருத்து, பிராப்பியத்வ பிராபகத்வங்கள் இரண்டும் நித்தியமாகையாலே, பால் மருந்தாமாறுபோலே, பிராப்பியத்வ நிலையிலும் பிராபகத்வம் சர்வேசுவரனிடத்தில் இருந்துகொண்டிருக்க, அது பிராப்பியத்தைச் சொல்லுகிறது, இது பிராபகத்தைச் சொல்லுவது என்று பிரிக்கக்கூடுமோ? என்பது.

2. 'அது சக்தியோகத்தாலே' என்று தொடங்கும் வாக்கியத்துக் கருத்து, பிராப்பியமே பிராபகமாக வல்ல சக்தியோகத்தாலே இரண்டும் ஒரு பொருளில் எப்போதும் உளவானாலும், சேதனன் பற்றுகிற நிலை என்றும், அடைந்து அநுபவிக்கிற நிலை என்றும் சொல்லப்படுகின்ற நிலை வேறுபாடுகளாலே,பிராப்பியத்வ பிராபகத்வங்கள் இரண்டும் முறைப்படி இருக்கவேண்டியன ஆகையாலே, இப்படிப் பிரிப்பதில் குற்றம் இல்லை என்பது. சக்தி-ஈசுவரனுடைய சக்தி. யோகம் - சேர்க்கை.

3. மேலே சுருங்க அருளிச்செய்ததனை விரித்து அருளிச்செய்கிறார் 'மிகப் பெரிய' என்று தொடங்கி.

4. "வைகுண்டே து பரேலோகே ஸ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:
ஆஸ்தே விஷ்ணு: அசிந்த்யாத்மா பக்தை: பாகவதை: ஸஹ"

நாய்ச்சிமாருடனேகூட நின்றருளினன் ; [1]அதிகாரிநியதி, காலநியதி, அங்கநியதி என்றாற்போலே சொல்லுகிற நிர்ப்பந்தங்கள் ஒன்றும் இன்றிக்கே அடையலாம்படி அங்ஙனம் நிற்கிற சௌசீல்யத்தைக் கண்டு, திருவேங்கடமுடையான் திருவடிகளிலே, பெரியபிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய வேறுகதி இல்லாமையை விண்ணப்பஞ்செய்து சரணம்புக்குத் தம்முடைய எண்ணத்தை அறிவிக்கிருர்.

[2]மேலேயும், பல இடங்களிலே சரணுகதி செய்தார் ; அந்த அந்த இடங்களிலே '**தர்மிபுக்க இடத்தே நிருபக தர்மங்களும் புகக் கடவன**' என்கிற நியாயத்தாலே, லக்ஷ்மீசம்பந்தம் சொன்னர் ; இங்கு அது தன்னையே வாய்விடுகிருர். [3]மேலேயுள்ள சரணுகதிகள் திருமந்திரம்போலே; இது துவயம்போலே. [4]திருமந்திரத்திலும் லக்ஷ்மீசம்பந்தத்துக்கு வாசகமான சொற்கள் உண்டாயிருக்கச் செய்தேயும், வெளிப்படையாகச் சொல்லிற்று துவயத்திலே அன்றே ; அதுபோலே இத்திருவாய்மொழி. [5]" தாவத் ஆர்த்திஃ - 'இழந்தது பெறவேணும்' என்னு

---

1. அதிகாரிநியதியாவது, தசரதன் வசுதேவன் முதலான அக்காலத்துள்ள அதிகாரிகளுக்கே என்ற நியதி. காலநியதியாவது, கிருதயுகம் துவாபரயுகம் என்பனபோன்ற காலங்களின் நியதி. அங்கநியதி - நீராடல் முதலான அங்கங்களின் நியதி.

2. மேலே நான்கு திருவாய்மொழிகளிலே நான்கு முறை சரணம் புக்காரே, அதற்கும் இதற்கும் வாசி என்? என்னில், 'மேலேயும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். வாய்விடுகிருர் - வெளிப்படையாகச் சொல்லுகிருர்.

3. அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிருர் 'மேலேயுள்ள' என்று தொடங்கி.

4. மேலேகூறிய திருஷ்டாந்தத்தை விவரணம் செய்கிருர் 'திருமந்திரத்திலும்' என்று தொடங்கி. 'வாசகமான' என்றது, பொருள் ஆற்றலால் அறிவிக்கின்ற என்றபடி. "உகார நார" பதங்களைத் திருவுள்ளம்பற்றி 'வாசகமான' எனப் பன்மை வாசகத்தால் அருளிச்செய்கிருர்.

5. சரணுகதியானது மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியதாமோ? என்ன, 'மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது மாத்திரமன்று ; மற்றைய பலன்களைப் பெறுதற்கும் இது சாதனமாம்' என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்குப் பிரமாணமும் பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிருர் 'தாவத் ஆர்த்திஃ' என்று தொடங்கி.

" தாவத்ஆர்த்திஃ ததாவாஞ்சா தாவந்மோஹஃ ததா ஸுகம்
யாவந் நயாதி ஶரணம் த்வாம் அஶேஷாக நாஶநம் "

என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. பகவானைப்பார்த்துப் பிரமன் கூறியது. இச்சுலோகம் நால்வகை அதிகாரிகளைக் கூறுகிறது.

மதுவும் [1]அவ்வளவே. [2]ததாவாஞ்சா - அப்ராப்த விஷயத்தில் செய்யும் சாபலமும் அவ்வளவே. [3]தாவந்மோஹஃ - சரீரத்தையும் ஆத்மாவையும் ஒன்றாக புத்திபண்ணுகை என்னும் அதுவும் அவ்வளவே. [4]ததாஸுகம் - "ஏஷஹ்யேவாநந்தயாதி- இவனேயன்றோ (சீவனுக்கு) ஆனந்தத்தைக் கொடுக்கிறான்" என்கிறதற்கு விரோதமாகவரும்சுகங்களும்அவ்வளவே.யாவந் நயாதிஶரணம் த்வாம்அஶேஷாகநாஶநம் - [5]செல்வம் ஆத்ம பிராப்தி பகவத்பிராப்தி விரோதி இவைஎல்லாம்உன்னைக்கிட்டுமளவேயன்றோ நிற்பது" என்கிறது. இப்படியே தம்முடைய எல்லா விரோதிகளும் போய்த் தம்முடைய எல்லா அபேக்ஷிதங்களும் கிடைக்கைக்கு ஒருகுறை இல்லை என்று, எப்பொழுதும் அண்மையில் இருக்கிற திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம்புகுகிறார்.

---

"சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஃ ஸுக்ருதிநோர்ஜுந
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுஃ அர்த்தார்த்தீ ஜ்ஞாநீச பரதர்ஷப"

என்ற ஸ்ரீகீதை இங்கு அநுசந்தேயம். 7 : 16.

1. 'அவ்வளவே' என்றது, அவனைப் பற்றுமளவே என்றபடி. 'இழந்தது பெறவேணும்' என்றதனால், ஆர்த்தனைச் சொல்லுகிறது. அதாவது, இழந்த செல்வத்தை மீண்டும் பெறவேண்டும் என்று விரும்புகிற ஐசுவரியகாமனைச் சொல்லுகிறது என்றபடி.

2. "வாஞ்சா" என்று செல்வத்தை விரும்புகிறவனுடைய ஆசையைச் சொல்லுகையாலே "ததாவாஞ்சா" என்பது, புதிதாகச் செல்வத்தைப் பெற விரும்புகிறவனைச் சொல்லுகிறது. 'அப்ராப்தவிஷயத்தில்' என்றது, முன்பு இல்லாத ஐசுவரியத்தை என்றபடி.

3. "தாவந்மோஹஃ" என்ற இது, ஆத்மபிராப்திகாமனைக் கூறுகிறது. "மோஹம்" என்றது, ஆத்மபிராப்திகாமனுக்கு, ஆத்ம அநுபவ விரோதியான தேஹாத்மாபிமான ரூபமான அஞ்ஞானத்தை. சர்வேசுவரன் திருவடிகளை அடைந்தால் அது போகையாலே, சர்வேசுவரனைப் பற்றுமளவே அவனுக்கு அந்த அஞ்ஞானம் இருக்கும் என்றபடி.

4. "ததா ஸுகம்" என்ற இது, ஞானியைச் சொல்லுகிறது. "ஸுகம்" என்றது, ஆத்மாநுபவ ஐசுவரிய அநுபவங்களை. இவை, பகவத்பிராப்திகாமனுக்குத் தடைகளாம். சர்வேசுவரனைப் பற்றினால், அந்தத் தடைகள் நில்லாவாதலின் அவனைப் பற்றுமளவே அந்தச் சுகங்கள் உள்ளனவாம் என்றபடி. 'விரோதமாக வரும் சுகங்கள்' என்றது, பகவத் அநுபவத்துக்குத் தடைகளான ஐசுவரிய ஆத்மாநுபவ சுகங்களைக் குறித்தபடி.

5. "அஶேஷாக நாஶநம்" என்றதன் பொருள், 'செல்வம்' என்று தொடங்கும் வாக்கியம். 'பகவத் ப்ராப்திவிரோதி' என்றதிலுள்ள 'விரோதி' என்ற பதத்தை, செல்வ விரோதி, ஆத்ம பிராப்திவிரோதி என மூன்றுள்ளனவற்றோடும் கூட்டுக.

[1]இனித்தான், சரணாகதி பலத்தைக் கொடுப்பதாகுமிடத்தில், சரண்யன்பக்கலிலே செய்யவும்வேணும்; தான் அதிகாரியாகவும் வேணும். [2]நற்குணங்கள் இல்லாதவர்களிடத்திலே செய்யுமிடத்தில் அது தானே கொல்லுதலுக்குக் காரணமாகக் காணாநின்றோம் அன்றோ. [3]இங்ஙனே இருக்கச்செய்தேயும் அந்தஅந்த இடங்களிலும் பலிக்கிற இது, இவ் விஷயத்தில் பலிக்கின்றது என்னுமிடம் கிம்புநர் நியாயத்தாலே சித்திப்பதாம். [4]இனி, அதிகாரியாமிடத்தில், மெய்யே வேறு கதிஅற்றவனாகவும் இருக்கவேணும்;[5]சரணம்புகா,பலித்தது இல்லைஎன்று, "இந்தக் கடல்,பொறுமையோடுகூடிய என்னைச்சக்தி இல்லாதவனாக அன்றோ நினைக்கிறது" என்பார் ஆகாது. [6]"மயர்வற மதிநலம் அருளினன்" என்று, உடனே மடல் எடுத்துக்

---

1. "உலகம் உண்ட பெருவாயா" என்பது போன்றவைகளால் சரண்யனான சர்வேசுவரன் சொரூபமும், "குலதொல் அடியேன்" என்பது போன்றவைகளால் அதிகாரி சொரூபமும் சொல்லப்படுகின்றன; சரணாகதியினாலே பலம்பெறுதற்கு இவ்விரண்டும் வேண்டுவன ஆகையாலே என்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி. 'சரண்யன்' என்றது, குணாதிகன் என்பதனைக் குறித்தபடி.

2. குணம் இல்லாதவர்களிடத்திலே சரணாகதிசெய்தால், பலம் கிடையாது; மேலும் கேட்டிற்குக் காரணமாம் என்கிறார் 'நற்குணங்களில்லாதவர்களிடத்தில்' என்று தொடங்கி. பலம் கிடையாமற்போதலை, பரசுராமனைச் சரணம்புக்க தசரத சக்கரவர்த்தியினிடத்தில் காணல்தகும். கம்பராமாயணம் பரசுராமப் படலம் 15-முதல் 25-முடிய உள்ள செய்யுட்களில் காண்க.

3. ஆயின், பகவானுக்கு வேறுபட்டவர்களான சிபிச்சக்கரவர்த்தி முதலாயினாரிடம் செய்த சரணாகதி பலம் கொடுத்துளதே? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்ஙனே இருக்கச்செய்தேயும்' என்று தொடங்கி. 'அந்தஅந்த இடங்கள்' என்றது, சிபி முதலாயினோரைக் குறித்தபடி.

4. 'தான் அதிகாரியாகவும் வேணும்' என்று மேலே அருளிச்செய்ததை விரித்து அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி அதனை அருளிச்செய்கிறார் 'இனி' என்று தொடங்கி.

5. வேறுகதியுடையவனுக்குச் சரணாகதி பலத்தைக் கொடுக்காது என்னுமதனைப் பிரமாண முகத்தாலே காட்டுகிறார் 'சரணம்புகா' என்று தொடங்கி.

"க்ஷமயா ஹி ஸமாயுக்தம் மாமயம் மகராலயః
அஸமர்த்தம் விஜாநாதி திக்க்ஷமாம் ஈத்ருஸே ஜநே"

என்பது, ஸ்ரீராமா. யுத். 21 : 20.

6. ஆயின், அதிகாரிகளாவார் யாவர், என்ன, ஆழ்வார்போல்வாரே யாவர் என்று விடை அருளிச்செய்கிறார் 'மயர்வற' என்று தொடங்கி. என்றது, "அருளினன்" என்கிறபடியே, அவனுடைய திருவருளையே உபாயமாக அறுதியிட்டு, உடனே பலியாவிட்டாலும் தம்முயற்சி என்பது சிறிதும் இல்லாமலே, 'மடல் எடுக்கிறேன்' என்று அச்சம் உறுத்தி அவனாலேயே

கொண்டு புறப்படுவார் வேணும். [1]செய்த சரணகதிக்குப் பலம் தாழ்த்தது என்ன வேறே போக்கடியுடையார்க்குக் காரியகரம் ஆகாதே அன்றே. [2]"சமுத்திரத்தை வற்றும்படி செய்யப் போகிறேன்; வானரவீரர்கள் கால்களால் நடந்து செல்லட்டும்" என்று அவன் தாழ்த்ததுவே காரணமாக, சமுத்திரராஜனை அழித்துப் பொகட்டு மற்றை நான்குபொருள்களையும் கொண்டு காரியம் கொள்ளுகிறேன் என்றாரே அன்றே. "க்ஷமயாஹி ஸமாயுக்தம் - [3]'ஒரு பெண்பெண்டாட்டி எனக்கு என்றதனை நாம் விரும்புவது என்?' என்று இராஜ்யத்தைப் பொகட்டுப் பொறுத்துப் போந்தார்; இங்கே வருணனை வழிவேண்டி அவன் முகங்காட்டிற்றிலன் என்ன, சீறிக் காலைக் கையைக் கட்டாநின்றார்; இது இருந்தபடி என்?" என்றாற்போலே இருந்தார்கள் முதலிகள்.

---

காரியங்கொள்ளுவாராக வேண்டும் என்றபடி. மடல் எடுத்தல் சொரூபத்திற்கு விரோதமானாலும், அவனைக்கொண்டே தம்முடைய காரியத்தை முடித்துக் கொள்ளுகையாலே அநந்யகதித்வத்திற்குக் குற்றம் இல்லை என்று திருவுள்ளம் பற்றி 'மடல் எடுத்துக்கொண்டு புறப்படுவார் வேணும்' என்கிறார்.

1. "அஸமர்த்தம் விஜாநாதி - ஆற்றல் இல்லாதவனாக அன்றோ என்னை நினைக்கிறது" என்பார் அதிகாரிகள் ஆனால் வரும் குற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'செய்த சரணகதிக்கு' என்று தொடங்கி.

2. வேறே போக்கடியுடையார் யார்? என்ன, 'இன்னார்' என்கிறார் 'சமுத்திரத்தை' என்று தொடங்கி.

"சாபம்ஆநய ஸௌமித்ரே ஶராம்ச ஆஶீவிஷ உபமாந்
ஸாகரம் ஶோஷ யிஷ்யாமி பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 21 : 22.

3. "க்ஷமயாஹி" என்ற சுலோகத்திலேயுள்ள "திக்ஷமாம்" என்ற சொற்றொடரிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஒருபெண் பெண்டாட்டி' என்று தொடங்கி. என்றது, பரிபவித்தது இருவர்க்கும் ஒத்திருக்க, கைகேசியினிடத்தில் பொறுமை காட்டியது என்? இங்குப் பொறுமை வேண்டாம் என்கிறது என்? அங்குப் பொறுமை காட்டினால்,இங்கும் பொறுமை காட்டவேண்டாவோ? என்றபடி. 'காலை' என்றது, வில்லின்காலை. 'கை' என்றது, விரற்சரட்டை. 'இருந்தார்கள் முதலிகள்' என்றதன்பின், அவர்களுடைய சங்கைக்கு விடையைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். அதாவது, கைகேசி, கடலைப்போன்று தம்மை ஆற்றல் இல்லாதவராக நினைக்க இல்லை; அபலையாகையாலே இராச்சியத்தை ஆசைப்பட்டாளித்தனை; ஆகையாலே, அங்குப் பொறை கொள்ளப்பட்டது; வருணன், தம்மை ஆற்றல் இல்லாதவராக நினைக்கையாலே இங்குப் பொறை கொள்ளப்பட இல்லை என்றபடி,

[1]"இவன் வந்திலன்' என்று நாம் சீற ஒண்ணாதபடி, வாலி புறப்படுகிறபோது தாரை வந்து காற்கட்டினதைப் போன்று, பொறைவந்து நம்மைக் காற்கட்டாநின்றது என்றார்:- [2]"மாம்- "தூங்கினவன் மதங்கொண்டவன் கோபித்தவன் இவர்களுக்கு இயற்கை உணர்வு வெளிப்படும்" என்கிறபடியே, கோபம் விளைந்தபின்னர் ஜன்மத்தை உணர்ந்தார். '**பிறர்கை பார்த்திருக்கும் குடிப்பிறப்பு அன்று**' என்று இருக்கிறது இல்லை; நம்மை '**ஐயர்மகன்**' என்று அறிகிறது இல்லை. அயம் - மஹோததி என்னும் பெருமையை நினைத்திராநின்றது; தன்னைச் சிறுங்கித்திருக்கிற நம்மை அறிகிறது இல்லை. மகராலய:- ஓர் அயோத்யாதிபதி கோசலாதிபதிகளோடு ஒக்கக்காணும் தன்னை நினைத்திருக்கிறது; தன்னை மீன்படுகுட்டமாக அறிகிறது இல்லை. அஸமர்த்தம் விஜாநாதி - செவ்வை கெடப் பரிமாறினாரையும் ஒக்கவிட்டுக் காரியம் கொள்ளவல்லோம் என்று அறிகிறது இல்லை. இவ்வளவில் செய்ய அடுப்பது என்? என்னில், திக்க்ஷமாம் - இப்போது பொறையை வேண்டோம். [3]விநியோகமுள்ள இடத்தே அன்றோ காரியம் கொள்ளுவது? கோபத்தைப்போன்று, காரியகாலத்தே அழைத்துக் காரியம் கொள்ளப் பார்த்தோம். அது என்? இக்ஷ்வாகு குலத்தினராயிருப்பார்க்குப் பொறைகொண்டு காரியம் கொள்ளவேண்

1. ஆயின், முதலிலேயே வலியைக்காட்டாமல், மூன்றுநாள் திருக்கண் வளர்ந்தருளிச் சரணம்புகுவான் என்? என்கிற முதலிகளுடைய அபிப்பிராயத்தைத் திருவுளத்தே கொண்டு அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவன் வந்திலன்' என்று தொடங்கி. இதற்கு, "க்ஷமயாஹி" என்ற சுலோகத்திலே உள்ள முதற்பதத்திலே நோக்கு.

2. அச்சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் "மாம்" என்று தொடங்கி. ஜன்மத்தை உணர்ந்தவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பிறர்கை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'நம்மை' என்று தொடங்கி. 'ஐயர் மகன்' என்றது, சம்பராந்தகனுடைய மகன் என்றபடி. "அயம்" என்றதனால், பரிச்சேதித்துக் காட்டுகிறார் என்று பாவம் அருளிச்செய்கிறார் 'மஹோததி' என்று தொடங்கி. "மகராலய:" என்றதற்கு, பாவம், 'தன்னை மீன்படுகுட்டம்' என்று தொடங்கும் வாக்கியம். செவ்வை கெடப் பரிமாறினார் - அநீதியிலே நடந்தவர்கள். ஒக்கவிட்டு - தண்டித்து அநுகூலராக்கி.

3. பின்னர் எப்பொழுது வேண்டும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விநியோகம்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'கோபத்தைப்போன்று' என்று தொடங்கி,

டாவோ? என்னில், ஈத்ருஶஜநே - அதனால் பெற்றது என்? அது இங்கு ஜீவிக்கிறது இல்லை. இதுக்கு [1]இங்குள்ளாருடைய சம்பந்தமே பலியாநின்றதே. [2]ஒன்பது பாசுரங்களாலும் சரண்யன்படி சொல்லி, பத்தாம்பாசுரத்தில் சரணம்புகுகிறார்.

---

## 652.

**உலகம் உண்ட பெருவாயா! உலப்பில் கீர்த்தி அம்மானே!**
**நிலவும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி! நெடியாய்! அடியேன் ஆருயிரே!**
**திலதம் உலகுக் காய்நின்ற திருவேங் கடத்தெம் பெருமானே!**
**குலதொல் அடியேன் உனபாதம் கூடு மாறு கூறாயே.**

**பொ - ரை:**—பிரளயகாலத்தில் உலகத்தை எல்லாம் புசித்த பெரிய திருவாயினையுடையவனே! அழிதல் இல்லாத கீர்த்தியை யுடைய அம்மானே! எப்பொழுதும் நிலைபெற்றிருக்கின்ற சுடர்கள் சூழ்ந்திருக்கின்ற ஒளியையுடைய மூர்த்தியே! நெடியோனே! அடியேனுக்கு அரிய உயிராக இருப்பவனே! உலகத்திற்கெல்லாம் திலதம் போன்று நிற்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம் பெருமானே! தொன்றுதொட்டே வருகின்ற தொண்டைக்குலத்திலே பிறந்த அடியேன் உன்னுடைய திருவடிகளைச் சேரும்வகை கூறியருள வேண்டும்.

**வி - கு:**—உலகுக்குத் திலதமாய் என மாற்றுக.

இத்திருவாய்மொழி அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

**ஈடு:**—முதற்பாட்டு. [3]உன்னை ஒழிய வேறுகதி இன்றிக்கே இருக்கிற என்னை உன் திருவடிகளிலே சேரும்படி செய்தருள வேண்டும் என்கிறார்.

உலகம் உண்ட பெருவாயா - [4]தேவர் திருவடிகளைக் கிட்டாத அன்று எனக்கு உண்டான தளர்த்தி பத்துப் பிரளய ஆபத்

---

1. 'இங்குள்ளாருடைய' என்றது கடல், இராவணன் முதலியோரைக் குறித்தபடி.

2. சரணம்புகுவது, பத்தாம் திருப்பாசுரத்திலே அன்றோ? நடுவே உள்ள ஒன்பது திருப்பாசுரங்களுக்கும் பயன் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒன்பது பாசுரங்களாலும்' என்று தொடங்கி.

3. "குலதொல் அடியேன்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. உலகத்துக்குப் பிரளயத்தால் ஆபத்து வந்தது காப்பாற்றினோம்; உமக்கு ஆபத்து ஒன்றும் இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தேவர் திருவடிகளை' என்று தொடங்கி.

தைப்போன்றதேயாமன்றே?[1]பாதுகாக்கப்படுகின்றபொருள்களின் அளவன்றிக்கே இருக்கும் பாரிப்பையுடையவனே! [2]உன் பாரிப்புக்கும் என் துயரத்துக்கும் என்னசேர்த்தி உண்டு? [3]நீ, அறிந்த சம்பந்தமும் ஆபத்துமே கைம்முதலாகக் காப்பாற்றுமவன் அன்றோ! [4]ஒரு விபூதிக்காக ஆபத்து வரிலோ நோக்கலாவது! விபூதிக்காக உண்டான ஆபத்து என் ஒருவனுக்கும் உண்டானல் நோக்கலாகாதோ? பிரளயார்ணவத்திலே அழுந்துவாரையோ நோக்கலாவது! சம்சார அர்ணவத்தில் அழுந்துவாரை நோக்கலாகாதோ? [5]அபேக்ஷிக்காதவர்களையோ நோக்கலாவது! அபேக்ஷித்தார்க்கு உதவலாகாதோ? [6]சரீரத்துக்கு வரும் ஆபத்தையோ நோக்கலாவது! ஆத்மாவுக்கு வரும் ஆபத்தை நோக்கலாகாதோ? ஜலப்பிரளயத்தில் அகப்படிலோ நோக்கலாவது! விரஹ பிரளயத்தில் அகப்பட்டாரை நோக்கலாகாதோ? பிறரால் வரும் ஆபத்தையோ நோக்கலாவது! உன்னால் வரும் ஆபத்தை நோக்கலாகாதோ? [7]'சரணம்புகாதாரை ரக்ஷிக்கவேண்டும்' என்கிற நியதி உண்டோ! சரணம்புக்காரை ரக்ஷிக்கலாகாதோ? [8]ரக்ஷித்துச் சமைந்து பின்னையும் 'ஒன்றும் செய்யப்பெற்றி

1. "பெரு" என்ற சொல்லுக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பாதுகாக்கப்படுகின்ற' என்று தொடங்கி. பெருமை, பாரிப்பின் மிகுதியைச் சொல்லுகிறது.

2. இப்பாரிப்பை இட்டு அவனை விளிக்கின்றவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'உன்பாரிப்புக்கும்' என்று தொடங்கி.

3. காப்பாற்றும்போது ஒரு கைம்முதல் வேண்டாவோ? என்ன, 'நீ, அறிந்த' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. "உலகம்" என்றதனைக் கடாக்ஷித்து, ஒருவருக்காக ஒருகாரியம் செய்யப்போமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒருவிபூதிக்காக' என்று தொடங்கி.

5. "உலகம்" என்ற அஃறிணைச்சொல்லை நோக்கி, பாவம் அருளிச்செய்கிறார் 'அபேக்ஷிக்காதவர்களையோ' என்று தொடங்கி.

6. பிரளயார்ணவத்திலே அழுந்துவார்க்கு வந்த ஆபத்தையும், சம்சார அர்ணவத்தில் அழுந்துவார்க்கு வரும் ஆபத்தையும் விவரணம் செய்கிறார் 'சரீரத்துக்கு' என்று தொடங்கி.

7. 'அபேக்ஷிக்காதவர்களையோ' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'சரணம்புகாதாரை' என்று தொடங்கி.

8. 'பாதுகாக்கப்படுகின்ற பொருள்களின் அளவன்றிக்கே' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'ரக்ஷித்துச் சமைந்து' என்று தொடங்கி.

லோம்' என்று இருக்கக்கடவ உனக்கு என்னுடைய ரக்ஷணத்தில் கலவாமல் கைவாங்கி இருத்தல் போருமோ? [1] பிரளயாபத்தை ரக்ஷித்துப் பின்பும் 'நாம் இவற்றுக்குச் செய்தது ஒன்று உண்டோ?' என்று உடன்கிடந்தாரை மடிதடவி, பின்னர் 'என்செய்தோமானோம்' என்று தபிக்கின்றவர்களைப் போலே இழவுபட்டிருப்பான் ஒருவன் அன்றோ நீ!

[2]பெருவாயா-பாதுகாக்கப்படுகின்ற பொருள்களின் அளவு அல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பு இருக்கிறபடி. என்றது, [3]அவற்றின் பக்கல் உண்டான ரக்ஷணத்தில் பாரிப்போபாதியும் போரும் தம்பக்கல் உபேக்ஷை என்றிருக்கிறார் என்றபடி. பெருவாயா-[4]திரௌபதி '**சரணம்**' என்ற வார்த்தை இத்தனையும் திருவுள்ளத்தே கிடக்க, சபையில் துச்சாதனன் உண்டாக்கின மானபங்கத்தையும் நீக்கி, துரியோதனாதியர்களையும் அழித்து, இவள் கூந்தலையும் முடிப்பித்து, தருமபுத்திரன் தலையில் முடியையும் வைத்துப் பின்பும் [5] "வட்டிக்கு வட்டி ஏறின கடனைப்போன்று என்மனத்தினின்றும் நீங்கவில்லை" என்று குறைவாளனாய், பரமபதத்துக்கு எழுந்தருளுகிற போதும் "நாதிஸ்வஸ்த்தமநா: - நிம்மதியடையாத மனமுடையவனாய்" என்று திருவுள்ளத்தில் புண்ணோடேயன்றோ எழுந்தருளினன்.

---

1. ரக்ஷித்துச் சமைந்து பின்னையும் 'ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்றிருந்த பிரகாரம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரளயாபத்தை' என்று தொடங்கி. மடிதடவி - மடியிலுண்டான பொருளைக் கொள்ளைகொண்டு.

2. 'ரக்ஷித்துச் சமைந்து' என்று தொடங்கிக் கூறிய பொருள், "பெருவாயா!" என்றதனைக் கடாக்ஷித்து என்னுமிடம் தோற்ற, மீளவும் பதத்தை எடுத்து அதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் "பெருவாயா!" என்று தொடங்கி.

3. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'அவற்றின்பக்கல்' என்று தொடங்கி. பாரிப்போபாதியும் - பாரிப்பைப்போலவும்.

4. ரக்ஷித்த பின்பும் 'ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்றிருக்குமென்னுமதனை ஒரு திருஷ்டாந்தத்தின் மூலம் காட்டுகிறார் 'திரௌபதி' என்று தொடங்கி. இதற்காக, மீளவும் பதத்தை எடுக்கிறார் "பெருவாயா!" என்று.

5. "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நஅபஸர்பதி"

என்பது, மஹாபாரதம். உத். 58; 22.

உலப்பு இல் கீர்த்தி அம்மானே - [1]இவனுக்குக் காக்குந் தன்மை வந்தேறியாய்ப் போய், பழையதுகொண்டு விளைப்பிடுகிறேன் அல்லேன்; இப்படி உலகத்தைக் காப்பாற்றி ஈட்டிய புகழுக்கு முடிவில்லை என்கிறது. [2]பொழில்ஏழும் காவல்பூண்ட புகழே அன்றோ.[3] இப்படிகளால் வந்த குணங்களுடைமையால் வந்த பிரசித்தியையுடைய சர்வேசுவரனே! [4]"அந்தப் பரமாத்மாவின் கீர்த்தி பெரியது" என்றும், [5]"கீர்த்திக்குத் தானே இருப்பிடமாக இருப்பவர்" என்றும், உபதேசத்தால் அறிய வேண்டும்படி அன்றிக்கே, [6]"எல்லாராலும் அறியப்பட்டவர்" என்று பகைவர்கள் கூட்டத்திலும் இப்படிப் பிரசித்தமாய் அன்றோ உன் புகழ் இருப்பது! [7]பாதகத்தின் சந்நிதியிலே பாதிக்கப்படும்பொருளும்ஜீவிக்கும்படி அன்றோ உன்னுடைய ஆணை இருப்பது!அவன்நினைத்தஅன்றுபாதகந்தானேபாதிக்கப்படுகிறபொருளுக்குப் பால்ஊட்டி வளர்த்தாநிற்குமன்றோ. உலப்பு இல் கீர்த்தி அம்மானே - [8]"குணங்களுக்கெல்லாம்

---

1. பிரளய ஆபத்தில் துணைபுரிந்தமையைக் கூறியபின் "உலப்பில் கீர்த்தி அம்மானே" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவனுக்கு' என்று தொடங்கி. 'இப்படி உலகத்தைக் காப்பாற்றி' என்றது, ஒரு காலத்திலே அல்லாமல் எப்பொழுதும் பாதுகாத்து என்றபடி.

2. பாதுகாத்தலால் வந்த புகழுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பொழிலேழும்' என்று தொடங்கி. இது, திருநெடுந்தாண்டகம், 10.

3. 'இப்படிகளால்' என்றது, மேலே கூறிப்போந்த ஆபத்சகாயனாயிருத்தல் முதலாயினவற்றால் என்றபடி.

4. அதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'அந்தப் பரமாத்மாவின்' என்று தொடங்கி. "தஸ்ய நாம மஹத்யஶ:" என்பது.

5. "யஶஸ: ச ஏகபாஜனம்" என்பது, ஸ்ரீராமா. கிஷ். 15: 19.

6. "விதித: ஸஹி தர்மஜ்ஞ: ஶரணாகத வத்ஸல:" என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 20.

7. ரக்ஷகத்தின் முடிவின் எல்லையைக் காட்டுகிறார் 'பாதகத்தின்' என்று தொடங்கி. பாதகம் - பெரியதிருவடி. பாதிக்கப்படும்பொருள் - சுமுகன்.

"பொருதுறைசேர் வேலினாய் புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையின் நீருண்ண உலகாண்டோன் உளன்ஒருவன்"
(கம்பரா. குலமுறை. 5.)

"மாதர், அருகூட்டும் பைங்கிளியும் ஆடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ உலகு" (நளவெண்பா.)

என்பன, ஈண்டு ஒருபுடை ஒப்புநோக்கலாகும்.

8. "குணாநாம் ஆகரோ மஹாந்" என்பது, ஸ்ரீராமா. கிஷ். 15 : 21.

நிலையமாக இருப்பவன்" என்றும், [1]"அப்படியே அளவற்ற வை இறைவனுடைய குணங்கள்" என்றும், [2]"ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கல்யாணகுணங்கள் உலகமெல்லாம் சேர்ந்து கொண்டு பதினாயிரம் வருடங்கள் கூறினாலும் முடிவுபெறுவன அல்ல" என்றும், [3]"ஓ அரசனே! உன்னுடைய புதல்வனான ஸ்ரீராமபிரானுக்கு மங்களகரமான குணங்கள் பல இருக்கின்றன" என்றும் சொல்லுகிற குணங்களுக்கு முடிவு இன்றிக்கே இருக்கை. இவற்றை எல்லைகாண நினைத்தால் கரை கண்டு மீளவொண்ணாது. மதிக்குறைவாலே மீளுமத்தனை.

நிலவும் சுடர் சூழ் ஒளிமூர்த்தி - [4]பாதுகாப்பவன் அன்றிக்கே கொலைஞன் ஆனாலும் விடவொண்ணாத வடிவழகு இருக்கிறபடி. ஒரு கருமம் காரணமாக வந்து அது வற்றவற்றுவது அன்று ஆதலின் 'நிலவும்' என்கிறது. [5]உள்ளு மண்பற்றாய்ப் புறம்பு ஒளிஊட்டியிருத்தல் அன்றிக்கே, "ஒளிகளின்திரள்" என்கிறபடியே, ஒளிப்பொருள்களைத் திரட்டிப் பிடித்தாற் போலே இருத்தலின் 'சுடர்சூழ்' என்கிறது. இராசத தாமதங்களால் கலந்தது அன்றிக்கே, சுத்தசத்துவமயமாய் நிரவதிக தேஜோரூபமாய், நெய்திணுங்கினாற்போலே உள்ளும்புறம்பும் ஒக்க ஒளியேயாய் இருக்கையைத் தெரிவித்தபடி. "உயர்

1. "ததா குணாஹி அநந்தஸ்ய" என்பது, மாத்ஸபுராணம்.

2. "வர்ஷாயுதைஃ யஸ்ய குணா ந ஶக்யாஃ
வக்தும் ஸமேதைரபி ஸர்வ லோகைஃ
மஹாத்மநஃ ஶங்க சக்ராஸிபாணேஃ
விஷ்ணோஃ ஜிஷ்ணோஃ வஸுதேவாத்மஜஸ்ய"

என்பது, மஹாபாரதம் கர்ணபர்வம்.

3. "பஹவோ ந்ருப கல்யாணகுணாஃ புத்ரஸ்ய ஸந்தி தே" என்பது, ஸ்ரீராமா. அயோத். 2: 26.

"தாவா விழுப்புகழ்" என்று தொல்காப்பியனார் கூறுவதும், "பொருள் சேர்புகழ்" என்று திருவள்ளுவர் கூறுவதும், சங்க இலக்கியங்கள் எல்லாம் 'புகழுடையான் இவன் ஒருவனே' என்று ஒரு முகமாகவே கூறிச் செல்லுவதும் இங்கு உளங்கோடல் தகும்.

4. மேல் அடியாலே, ரக்ஷகத்வத்தைச் சொன்னாராதலின், அதுதான் இல்லையேயாகிலும் வடிவழகு விடப்போகாது என்கிறார் 'பாதுகாப்பவன் அன்றிக்கே' என்று தொடங்கி.

5. "சுடர்" என்றும், "ஒளி" என்றும் அருளிச்செய்ததற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'உள்ளுமண்பற்று' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்து பிரமாணமும் காட்டுகிறார் 'இராசத தாமத' என்று தொடங்கி. 'உயர்வினையே' என்பது, திருவாய். 1. 7: 4.

வினையே தரும் ஒண்சுடர்க்கற்றை" என்னக்கடவதன்றோ. [1]திருமேனிதன்னைப் "**பஞ்ச சக்திமயம்**" என்றும் சொல்லா நின்றார்கள்; "**ஷாட்குண்ய விக்ரஹம்**" என்றும் சொல்லா நின்றார்கள்; ஆராய்ந்து பார்த்தால் பொருளின் நிலைமைதான் "**பஞ்சசக்திமயம்**" என்றே இருக்கும்; '**ஷாட்குண்ய விக்ரஹம்**' என்றது, திருமேனிதான் குணங்களுக்குத் திரோதாயகம் அன்றிக்கே பிரகாசகமாய் இருக்கையாலே. [2]"மன்மதன்போன்ற சுந்தரமான உருவமுடையவர்; கவர்ச்சிகரமான காந்தியுடையவர்" என்றும், [3]"மன்மதனுக்கும் மன்மதனாக இருக்கின்ற அந்தக் கண்ணபிரான் அந்தக் கோபஸ்திரீகளுக்கு மத்தியில் தோன்றினன்" என்றும் சொல்லுகிறபடியேயன்றோ இருப்பது.

நெடியாய்-[4]மேலேகூறிய குணங்களுக்கு எல்லை உண்டாலும், சௌந்தர்யம் லாவண்யம் முதலானவற்றிற்கு எல்லை காண ஒண்ணாதபடியா யிருக்கை. [5]"மஹாந்" என்கிறபடியே, தொட்டதொட்ட துறைதோறும் தறை காணஒண்ணாதிருக்கிற

---

1. திருமேனி, சுத்த சத்வமயமாயிருக்கிறது பஞ்சோபநிஷந்மயமாகையாலே என்று கொண்டு, "ஷாட்குண்யவிக்ரஹம்" என்று சொல்லாநிற்க, "பஞ்சோபநிஷந்மயம்" என்று சொல்லுகிறபடி எங்ஙனே? என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் 'திருமேனிதன்னை' என்று தொடங்கி. பஞ்ச சக்தியாவன: அப்ராக்ருதங்களான ஐந்து பூதங்கள். திரோதாயகம் - மறைப்பது.

2. "சுடர், ஒளி" என்னும் இரண்டனையும், 'குழிந்தாழ்ந்த கண்' என்பதுபோன்று மீமிசைச் சொல்லாகக்கொண்டு பொருள் அருளிச்செய்தார் மேல். இங்கு, வெவ்வேறு சொற்களாகக்கொண்டு, அழகு என்றும், லாவண்யம் என்றும் பொருள் அருளிச்செய்கிறார் 'மன்மதன்போன்ற' என்று தொடங்கி.

"ரூபவாந் ஸுபகஃ ஸ்ரீமாந் கந்தர்ப்பஇவ மூர்த்திமாந்"
என்பது, ஸ்ரீராமா. சுந். 34: 30.

3. "தாஸாம் ஆவிரபூத் சௌரிஃ......ஸாக்ஷாத் மந்மதமந்மதஃ" என்பது, ஸ்ரீபாகவதம். 10. 32: 2.

4. "ஒளிமூர்த்தி" என்றதன்பின், "நெடியாய்" என்கையாலே, அழகு முதலானவற்றிற்கு எல்லை காண ஒண்ணாதவன் என்றுகொண்டு, "உலப்பில் கீர்த்தி அம்மானே" என்றதனோடே இதற்கு இயைபு அருளிச்செய்கிறார் 'மேலே கூறிய' என்று தொடங்கி.

5. ஆயின், ஆத்மகுணங்கள் அளவிற்கு உட்பட்டனவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் '"மஹாந்" என்கிறபடியே,' என்று தொடங்கி. என்றது, "ஜ்ஞானவிஜ்ஞான" (ஸ்ரீராமா. கிஷ். 15: 20.) என்ற சுலோகத்தில், "குணநாம்" என்றதனால், குணங்களையும், "மஹாந்" என்றதனால், ஆத்மகுணங்களையும் சொல்லுகிறது என்றபடி.

படி. அடியேன் ஆர் உயிரே - [1]வடிவழகையும் குணங்களையும் காட்டி, என்னை, உன்னைவிட்டுப் பிரியின் ஜீவியாதபடி செய்தவனே! [2]'திருவேங்கடத்து எம்பெருமானே' என்றதனோடு ஒக்க இதனைக் கூட்டக் கடவது. திலதம் உலகுக்கு ஆய்நின்ற- பெண்களுக்கு நிறைந்திருக்கின்ற ஆபரணம்போலே ஆயிற்று பூமிக்குத் திருமலை. திருவேங்கடத்து எம்பெருமானே அடியேன் ஆர் உயிரே - திருமலையில் நின்று என்னுடைய சேஷத்வ முறையை அறிவித்து, உன்னால் அல்லது செல்லாதபடி செய்தவனே! இவ்வளவும் வர, அவனுடைய சொரூபம் சொன்னார்; இனி, தம் சொரூபம் சொல்லுகிறார்: குல தொல் அடியேன் - குலமாகப் பழையதான அடியேன். இதனால் தமக்கு ஓர் உயர்வு சொல்லுகிறார் அல்லர்; தம்முடைய அநந்யகதித்வம் சொல்லுகிறார். [3]ஒருவர்க்கேயாய் இருப்பாரை வேறு சிலர் நோக்குதல் இல்லை அன்றோ. உன பாதம் கூடுமாறு கூறாய்-[4]சொரூபம் இதுவானபின்பு, சொரூபத்திற்குத் தக்கதான பேற்றினைப் பெறும்படி செய்தருளாய். அடியேன் உன பாதம் கூடுமாறு - [5]அடியவன் உன்னைக்கூட என்னுமது 'உன பாதம் கூட' என்பதே அன்றோ. உன பாதம் கூடுமாறு-[6] இவருடைய சாயுஜ்யம் இருக்கிறபடி. கூறாய்-உனக்கு ஒருசொல்: எனக்குச் சொரூபலாபங்

---

1. "உலப்பில் கீர்த்தி", "ஒளிமூர்த்தி" என்பனவற்றைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'வடிவழகையும்' என்று தொடங்கி.

2. 'திருவேங்கடத்து எம்பெருமானே' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, "அடியேன் ஆருயிரே!" என்பதனை, "திருவேங்கடத்து எம்பெருமானே!" என்றதனோடும் கூட்டிப் பொருள்கோடல் வேண்டும் என்பது. அநந்யகதித்வம் - வேறுகதி ஒன்றும் இல்லாததன்மை.

3. "குலதொல் அடியேன்" என்றதனால் அநந்யகதித்வம் தோற்றுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒருவர்க்கேயாய் இருப்பாரை' என்று தொடங்கி.

4. "அடியேன்" என்பதனையும் கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார் 'சொரூபம் இதுவானபின்பு' என்று தொடங்கி.

5. உன்னைக்கூடுமாறு என்னாமல், "உனபாதம் கூடுமாறு" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அடியவன்' என்று தொடங்கி.

6. பெறுமாறு என்னாமல், "கூடுமாறு" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவருடைய' என்று தொடங்கி. சாயுஜ்யம் - மோக்ஷம்.

கண்டாய். [1]அவன் ஒருவார்த்தை அருளிச்செய்ய, தளப்பம் தீரும்அன்றோ இவர்க்கு. [2]"மாசுச :- துக்கப்படாதே" என்ன வேணும். (1)

## 653.

**கூறாய் நீறாய் நிலனாகிக் கொடுவல் லசுரர் குலமெல்லாம்**
**சீறா எரியும் திருநேமி வலவா! தெய்வக் கோமானே!**
**சேறார் சுனைத்தா மரைசெந்தீ மலரும் திருவேங் கடத்தானே!**
**ஆறா அன்பில் அடியேன்உன் னடிசேர் வண்ணம் அருளாயே.**

**பொ - ரை :—**கொடிய வலிய அசுரர் கூட்டமுழுதும் கூறு கூறு ஆகிச் சாம்பலாகி மண்ணோடு மண்ணாகும்படியாகச் சீறி ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற அழகிய சக்கரத்தை வலக்கையில் தரித்திருப்பவனே! நித்தியசூரிகளுக்குத் தலைவனே! சேறுபொருந்திய சுனைகளிலே தாமரை மலர்கள் சிவந்த நெருப்பினைப்போன்று மலர்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! குறைவுபடாத அன்பினையுடைய அடியேன் உனது திருவடிகளைச் சேரும்படி திருவருள்புரியவேண்டும்.

**வி - கு :—**அசுரர் குலம் எல்லாம் கூறுஆய் நீறுஆய் நிலனாகிச் சீறா எரியும் திரு நேமி என்க. 'ஆகி' என்பதனை 'ஆக' எனத் திரிக்க. ஆகச் சீறி எரியும் என்க. அன்பில் - அன்பினையுடைய.

**ஈடு :—**இரண்டாம்பாட்டு. [3]'கூடக்கடவீர்: அதற்கு ஒரு குறை இல்லை; ஆனாலும், தடைகள் கனத்து இராநின்றனவே' என்ன, 'உன்கையில் திருவாழி இருக்க, நீ இங்ஙன் சொல்லலாமோ? என்கிறார்.

கூறாய் நீறாய் நிலனாகிக் கொடு வல் அசுரர் குலம் எல்லாம் சீறாஎரியும்திருநேமிவலவா-[4]நீ கைகழலா நேமியானாய்இருக்கிற

1. "கூறாய்" என்கிறாரே, வார்த்தை மாத்திரம் போதியதாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் ஒருவார்த்தை' என்று தொடங்கி. தளப்பம் - தளும்புதலும், அலைச்சலும்.

2. கூறவேண்டிய வார்த்தையை அருளிச்செய்கிறார் "மாசுசஃ" என்று. "மாசுசஃ" என்றால், "ஸ்திதோஸ்மிகதஸந்தேஹஃ" என்று இருக்கலாம் என்றபடி.

3. "திருநேமி வலவா!" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. "கூறாய்......நேமிவலவா!" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நீ கை கழலா' என்று தொடங்கி.

தற்கும் என் தீவினைகள் கிடக்கைக்கும் என்ன சேர்த்தி உண்டு? [1]தடை இல்லாத சக்தியையுடைய திவ்விய ஆயுதங்களானவை இவனுடைய பாபங்கள் எல்லாவற்றையும் போக்கிக் காப்பாற்றக் கூடியனவாயிருக்கும்: [2]அவனாலே வருமவற்றையும் போக்கக் கூடியனவாயிருக்கும். "எல்லா ஆபத்துக்களினின்றும் காப்பாற்றுகின்றன" என்னப்படுவன அன்றோ. "ஸகல" என்ற சொல்லுக்குள்ளே இவனும் உண்டே. [3] இனித்தான், பாவங்கள், "ஸம்ஸாரங்களில் பாபிகளான மனிதர்களைத் தள்ளுகிறேன்" என்கிறபடியே, இவன்பக்கல் குற்றங்களைக் கண்ட அவனுடைய நிக்கிரஹத்தாலே வருமவை அன்றோ; அங்ஙனே வருமவற்றையும் போக்கக்கூடியனவாயிருக்கும் இவை. அதற்கு அடி, அவன் [4]அடியில் செய்த அநுக்கிரஹத்தையே நினைத்திருக்கையாலே. [5] இனித்தான், 'இவற்றின் தோஷங்களைக் கண்டு நாம் ஒரு காரணம்பற்றிச் சீறினபோதும் நீங்கள் கைவிடாமல், நாம் அடியிற்செய்த நம்முடைய இயல்பான அருளைப் பார்த்து நீங்கள் காப்பாற்றுங்கோள்' என்று அவன் பக்கல் பெற்றுடையர்களாய் இருப்பர்கள் அன்றோ. [6]அருளார்

1. திவ்விய ஆயுதங்கள் விரோதிகளைப்போக்கிக் காப்பாற்றும் என்பதற்கு, "அவ்யாஹததாரி" என்ற சுலோகத்தைத் திருவுளத்தே கொண்டு அருளிச்செய்கிறார் 'தடை இல்லாத' என்றுதொடங்கி. முதல்பத்து ஈட்டின் தமிழாக்கம், பக். 134. காண்க.

2. பிறரால் வரும் ஆபத்தை அன்றிக்கே, சர்வேசுவரனால் வரும் ஆபத்தையும் போக்கும் என்கிறார் 'அவனாலே' என்று தொடங்கி. 'அவனாலே வருமவற்றையும்' என்பதற்குச் சப்தம் யாது? என்ன, 'எல்லா ஆபத்துக்களினின்றும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "ரக்ஷந்தி ஸகல ஆபத்ப்யஃ" என்பது விஷ்ணுதர்மம். 70.

3. எல்லா ஆத்மாக்களுக்கும் நலத்தையே செய்யும் சர்வேசுவரன் ஆபத்தைச் செய்யலாமோ? என்ன, 'இனித்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "ஸம்ஸாரேஷு நராதமாந்...க்ஷிபாமி" என்பது ஸ்ரீகீதை. 16 : 19.

4. 'அடியில் செய்த அநுக்கிரஹம்' என்றது, அடியிலே சேதனரிடத்தில் செய்த சுபாவமான கிருபையை என்றபடி.

5. அதற்கே வேறும் ஒருகாரணத்தை அருளிச்செய்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி.

6. அவன் சீறினபோதும் ரக்ஷிக்கும்படி இவற்றுக்குக் கிருபை விஞ்சி இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அருளார்' என்று தொடங்கி. இது, திருவிருத்தம். 33.

திருச்சக்கரம் அன்றோ. [1]பண்டே அவனைக் கைகண்டிருப்பவர்கள் அன்றோ. அவன் அருள் மறுத்தபோதும் இங்குத்தை அருள் மாறாதே அன்றோ இருப்பது. ஆகையாலே, அவன் திருவருளைப் பெற்றவர்கள் திருவாழியில் கூர்மையை அன்றோ தங்களுக்குத் தஞ்சமாக நினைத்திருப்பது.

கூறாய் நீறாய் நிலனாகி-திருச்சரம்போலே "சிந்நம் பிந்நம்" என்கிற பரும்பணிக்கு விட்டுக்கொடாத திருவாழி. [2]திருச்சரத்துக்கு, இதனைநோக்க ஒரு குணத்தின் சேர்க்கை உண்டு என்கிறார்; [3] முற்பட, இருதுண்டமாக்கிப் பின்னை நீறாக்கிப் பின்னை அது காணவொண்ணாதபடி வெறும் தறையாக்கும். ஆகி - ஆக்கி. அல்லது, ஆகும்படி என்றுமாம். கொடு வல் அசுரர்[4]-சீறுகைக்குக் காரணம் இருக்கிறபடி. கொடிய செயல்களைச் செய்யக்கடவராய், ஒருவரால் வெல்ல ஒண்ணாதபடி வலியையுடையரான அசுரர். குலம் எல்லாம் - ஒருவன்செய்த குற்றமே ஜாதியாக முடிக்கவேண்டும்படி இருக்கையாலே, ஒருவரும் தப்பாமல் கோலி முடித்தபடி. [5]அநுகூலரோடு பிரதிகூலரோடு வாசி அற இவன் வளைவில் அகப்படாதார் இல்லை. [6]"வளைவாய்த் திருச்சக்கரத்து எங்கள் வானவனார்" என்று, அவன் வளைவிலே அகப்பட்டுப் பின்பேயன்றோ மேல்போயிற்று. கூறாய்

---

1. அவன் இவர்கள்பக்கல் செய்த திருவருளைத் திவ்வியாயுதங்கள் அறிந்தவாறு யாங்ஙனம்? என்ன, அதற்கு, ரசோக்தியாக விடை அருளிச்செய்கிறார் 'பண்டே' என்று தொடங்கி. "அருளார்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் அருள்' என்று தொடங்கி. அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'ஆகையாலே' என்று தொடங்கி.

2. திருச்சரத்துக்கு, பரும் பணி வருகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடையை 'திருச்சரத்துக்கு' என்று தொடங்கி ரசோக்தியாக அருளிச்செய்கிறார். குணம் - வில்லின்நாணும், கிருபாகுணமும். "சிந்நம்பிந்நம்" என்பது, ஸ்ரீராமா. யுத். 94 : 22.

3. பரும் பணிக்கு விட்டுக் கொடாதபடியை விளக்குகிறார் 'முற்பட' என்று தொடங்கி.

4. "கொடு வல்" என்ற அடைமொழிகட்குப் பயன் அருளிச்செய்கிறார் 'சீறுகைக்கு' என்று தொடங்கி.

5. "திரு" என்ற சொல் அழகைச் சொல்லுகையாலே, அநுகூலரும், "நேமி" என்கையாலே, பிரதிகூலரும் அகப்படுவர்கள் என்கிறார் 'அநுகூலரோடு' என்று தொடங்கி.

6. "அநுகூலர் திருவாழிக்கு அகப்படுவதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'வளைவாய்' என்று தொடங்கி. இது, திருவிருத்தம், 70. 'மேல் போயிற்று' என்றது, "வானவனார் முடிமேல்" என்கிறபடியே, மேல் சென்று ஈடுபட்டது என்றபடி.

நீராய் நிலனாகைக்குச் செய்த செயல் ஏது? என்ன, 'சீறு எரியும்' என்கிறார். என்றது, இவை முடிந்துபோகச்செய்தேயும் கொண்ட [1]குதை மாறாமல், இரைபெறாத பாம்புபோலே ஒளி விடாநிற்கும். திரு நேமி வலவா-[2]நீ வலவருகே திருவாழியைத் தரித்திருக்க, நான் துக்கத்தைத் தரித்திருப்பதே!

தெய்வக் கோமானே- [3]இப்படி அடியார்களுக்காக வந்து படுகிறவன் ஆள் இல்லாதவன் அல்லன் கண்டீர்! அயர்வறும் அமரர்கள் அதிபதி கண்டீர். [4]அங்குக் கையும் திருவாழியுமான அழகை அநுபவிப்பாரே அன்றோ உள்ளது; [5]இருதுண்டமாக விடுதற்கு ஆள் உள்ளது இங்கே அன்றோ. இரண்டு விபூதியையும் ஆளுவது திருவாழியாலே காணும்! 'அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்' என்கிறபடியே; [6]அழகாலே அங்குள்ளாரை ஆளும்; கூர்மையாலே இங்குள்ளாரை ஆளும். அங்குக் கூர்மை குமர் இருக்கும்; இங்கு அழகு குமர் இருக்கும். அங்குள்ளார்க்குக் கைமேலே ஜீவனமாயிருக்கும்; இங்குள்ளார்க்கு விரோதியைப்போக்கிப் பின்னையாயிற்று ஜீவனம் இடுவது. அங்குள்ளார் அவன்கையே பார்த்

1. குதை - உத்யோகம்; முயற்சி.

2. 'நீ கைகழலா நேமியானாய்' என்று தொடங்கி மேலே அருளிச் செய்த பொருள், "திருநேமிவலவா!" என்றதனை நோக்கிச் சொன்னோம் என்னுமிடம் தோற்ற அருளிச்செய்கிறார் 'நீ வலவருகே' என்று தொடங்கி.

3. "தெய்வக் கோமானே!" என்பதற்குப் பிரயோஜனம் அருளிச் செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

4. "தெய்வக் கோமான்" என்பதற்கு, திருநேமிவலவனான தன்மையை நித்தியசூரிகளை அநுபவிப்பிக்குமவன் என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அருளிச்செய்கிறார் 'அங்குக் கையும்' என்று தொடங்கி.

5. ஆயின், அங்கு விரோதிகள் இல்லையோ? என்ன, இல்லை என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இருதுண்டமாக' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளையும், அப்பொருளுக்குப் பிரமாணமும் காட்டுகிறார் 'இரண்டு விபூதியையும்' என்று தொடங்கி. 'அகல் விசும்பும்' என்பது, திருவிருத்தம், 33.

6. ஆளும் பிரகாரத்தைக் காட்டுகிறார் 'அழகாலே' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'அங்குக்கூர்மை' என்று தொடங்கி. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அங்குள்ளார்க்கு' என்று தொடங்கி. இவ்விரண்டுக்கும் காரணத்தை அருளிச்செய்கிறார் 'அங்குள்ளார்' என்று தொடங்கி. 'அவன் கையே பார்த்திருக்கையாலே' என்பதற்கு, அவன்கையும் திருவாழியுமான அழகைப் பார்த்திருக்கையாலே என்றும், தம்முடைய முயற்சியைவிட்டு அவன் கை பார்த்திருக்கையாலே என்றும் இருவகையாகப் பொருள் கொள்க.

திருக்கையாலே; இவர்களுக்கு அது இல்லையே. என்? நாம் இப்போது சேய்மையில் உள்ளோம் அல்லோமோ? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் மேல்: சேறு ஆர் சுனைத் தாமரை செந்தீ மலரும் திருவேங்கடத்தானே-சேறுகள் ஆர்ந்துள்ள சுனைகளிலே தாமரைகளானவை செந்தீப்போலே மலராநிற்கும்.[1] எண்ணெயாலே எரியும் விளக்கு ஒழிய, நீராலே எரியும் விளக்குக் கண்டு அநுபவிக்கக் காணும் இவர் ஆசைப்படுகிறது;[2] நீரிலே நெருப்பு எழுந்தாற்போலேகாணும் இருக்கிறது! ஆரா அன்பில் அடியேன் -[3] இவர்க்கு நிரூபகம் இருக்கிறபடி.[4] சுனைகளில் நீர்வற்றில் ஆயிற்று இவருடைய அன்பு வற்றுவது. மயர்வற மதிநலம் அருள அது அடியாக வந்த அன்பு அன்றோ.[5] ஊற்றுடைத்தே.[6] கிரமப் பிராப்தி பற்றாதபடியான பிரேமம் அன்றோ. உன் அடி சேர் வண்ணம் அருளாயே-உன் திருவடிகளிலே சேர்ந்து அடிமை செய்யும்படி என்பக்கலிலே

---

1. "சேறார்சுனைத் தாமரை செந்தீ மலரும்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'எண்ணெயாலே' என்று தொடங்கி. நமிநந்தியடிகள் நாயனார், திருவாரூரில் தியாகராஜப்பெருமான் சந்நிதியில் நீரால் விளக்கிட்டதாகப் பெரியபுராணம் கூறும்.

> ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப்
> பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
> ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
> நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே.

என்ற திருநாவுக்கரசு நாயனார் தேவாரமும் இங்கு அறிதல் தகும்.

2. நீராலே எரியும் விளக்கும் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீரிலே' என்று தொடங்கி.

3. "ஆரா அன்பில்" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவர்க்கு' என்று தொடங்கி.

4. "சேறார்சுனை" என்றதன்பின், "ஆரா அன்பில்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சுனைகளில்' என்று தொடங்கி. அன்பு வற்றாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'மயர்வற' என்று தொடங்கி.

5. "சுனை" என்றதனோடு சேர்த்தியாகச் சொல்லுவதற்குச் சுனை வற்றாதோ? என்ன, 'ஊற்றுடைத்தே' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. "ஆரா அன்பில்" என்பதற்கு, நித்தியமான அன்பு என்று மேலே பொருள் அருளிச்செய்தார். இங்கு, "மெய்யமர் காதல்" என்கிறபடியே, அவனை அநுபவித்தால் ஒழிய ஆறாத அன்பு என்று வேறு ஒருகருத்து அருளிச்செய்கிறார் 'கிரமப்பிராப்தி' என்று தொடங்கி.

கிருபைபண்ணிஅருளவேணும்.[1] நீ திருமலையிலே நிற்கிற நிலைக்குப் பிரயோஜனம் பெறப் பாராய்! [2]என் அன்புக்கு இரை இடப் பாராய்!! (2)

654.

வண்ண மருள்கொள் அணிமேக வண்ணா! மாய அம்மானே!
எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே! இமையோர் அதிபதியே!
தெண்ணல் அருவி மணிபொன்முத் தலைக்கும் திருவேங் கடத்தானே!
அண்ணலே! உன் னடிசேர அடியேற்கு ஆஆ என்னாயே.

**பொ - ரை :**—கண்டார் மனம் மயக்கத்தைக் கொள்ளுதற்குக் காரணமான வடிவையுடைய அழகிய மேகவண்ணா! ஆச்சரியத்தை யுடைய அம்மானே! மனத்திலே புகுந்து இனிக்கின்ற அமுதே! நித்திய சூரிகளுக்குத் தலைவனே! தெளிந்த நல்ல அருவிகளானவை மணிகளையும் பொன்னையும் முத்துக்களையும் கொழித்துக்கொண்டு வருகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! அண்ணலே! உன் திருவடிகளைச் சேர்வதற்கு, உனக்கு அடிமைப்பட்ட எனக்கு ஐயோ! ஐயோ!! என்று திருவுள்ளம் இரங்கியருள்வாய்.

**வி - கு :**—மருள்கொள்வண்ணம் என்க. "ஆஆ" என்பது, இரக்கக் குறிப்பு. என்னாய் என்பது, விதிவினை; இரங்கியருளவேண்டும்.

**ஈடு :**—மூன்றாம்பாட்டு. [3]"அருளாய்" என்றீர்; இங்ஙனே நினைத்தபோதாக அருளப்போமோ? என்ன: வேறுபட்ட சிற்றின்பங்களில் போகாதபடியான ஞானலாபத்தைப் பண்ணித் தந்த உனக்கு, பேற்றினைத் தருதல் பெரிய பணியோ? என்கிறார். என்றது, என்னால் வந்த குறைஅறுத்த உனக்கு, உன்னால் வரும் குறை அறுத்தல் பெரிய பணியோ என்றபடி.

---

1. "திருவேங்கடத்தானே" என்றதனோடே கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'நீ திருமலையிலே' என்று தொடங்கி.

2. "ஆரா அன்பில்" என்றதனோடே கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'என் அன்புக்கு' என்று தொடங்கி.

3. "எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே" என்றதனைத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார். அதனை விவரணம் செய்கிறார் 'என்னால் வந்த.' என்று தொடங்கி.

[1]வண்ணம் அருள்கொள் அணி மேகவண்ணா-வண்ணமானது - பிரகாரமானது, அருள்கொண்டிருப்பதாய், காண்பதற்கு இனிய மேகம்போன்ற வடிவையுடையவனே! அன்றிக்கே, வண்ணமானது - வடிவானது, கண்டார் நெஞ்சினை இருளப் பண்ணக்கூடியதாயிருக்கை என்றுமாம். [2]'மைப்படி மேனி' அன்றே. அங்ஙனம் அன்றிக்கே, [3]மேகத்தினுடைய அகவாய் கல் என்னும்படியாயிற்றுத் திருமேனியில் உண்டான திருவருளின் மிகுதி இருக்கிறபடி என்னலுமாம். மாய அம்மானே - வெறும் வடிவழகே அன்றிக்கே, ஆச்சரியமான குணங்களாலும் செயல்களாலும் பெரியன் ஆனவனே! எண்ணம் புகுந்து தித்திக்கும்அமுதே-[4]தெய்வப்பிறவியிலேபிறந்து ஒருசாதனத்தைச்செய்துஅதனாலேபெற்றுப் புஜிக்கும்போது இனிதாகைஅன்றிக்கே, [5] இன்னார்க்கு என்று அன்றிக்கே

---

1. "வண்ணமருள்கொள் அணிமேக வண்ணா" என்பதற்கு இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். "வண்ணம்" என்று, சுபாவமாய், கொள்கை - உடைத்தாகையாய், கிருபையோடு கூடின சுபாவத்தையுடையதாய்க் காட்சிக்கு இனியதான மேகம்போன்ற வடிவையுடையவனே என்பது முதற்பொருள். "அருள்கொள் வண்ணம்" என்பதனை, மேகத்திற்கு அடைமொழியாக்குதல்; அன்றிக்கே, அருளோடே கூடின சுபாவத்தையுடையவன் என்று எம்பெருமானுக்கு விசேஷணமாக்குதல். இரண்டாவது பொருள், "வண்ணம்" என்று, வடிவாய், வடிவாலே மருளை உண்டாக்கக்கூடியதாய்க் காட்சிக் கினியதான மேகம்போன்ற வடிவையுடையவனே! என்பது. மருள் கொள் வண்ணம் என்று கூட்டுவது. இப்பொருளிலும் "மருள்கொள் வண்ணம்" என்பதனை மேகத்துக்கும்,எம்பெருமானுக்கும் விசேஷணமாகக்கொள்க.

2. இரண்டாவது பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மைப்படி மேனி' என்று. இது, திருவிருத்தம், 94.

3. மூன்றாவதாக வேறும் ஒருகருத்து அருளிச்செய்கிறார் 'மேகத்தினுடைய' என்று தொடங்கி. இப்பொருளில், "அருள்கொள் வண்ணம்" என்பது,திருமேனிக்கு அடை. திருமேனியின் திருவருளின் மிகுதியைச் சொல்லுகையாலே மேகத்தின் அகவாய் கல் என்னும்படி இருக்கிறது என்பது கருத்து.

4. "எண்ணம்" என்றது, நினைத்த அளவிலே என்றபடி. "எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுது" என்கையாலே, தேவர்களின் அமுதத்தினின்றும் வேறுபடுத்துகிறார் 'தெய்வப் பிறவியிலே' என்று தொடங்கி.

5. இன்னாருடைய எண்ணத்திலே என்று விசேடிக்காமல் பொதுவாக "எண்ணம்" என்று அருளிச்செய்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இன்னார்க்கு' என்று தொடங்கி.

நினைத்த மாத்திரத்தாலே தானே வந்து புகுந்து இனிதாகை. [1] உள்ளுந்தொறும் தித்திக்கும் அமுது அன்றோ.

இமையோர் அதிபதியே - [2] மதுவிரதம் போலே, இந்த அமிருதமே ஜீவனமாக இருக்குமவர்கள். தெள்[3] நல் அருவி மணி பொன் முத்து அலைக்கும் திருவேங்கடத்தானே - தெளிந்து நன்றான அருவிகளானவை விலக்ஷணமான மாணிக்கங்களையும் பொன்களையும் முத்துக்களையும் கொழித்து ஏறட்டுகிற திருமலையிலே நின்றருளுகிற சர்வேசுவரனே! அண்ணலே - திருமலையிலே வந்து நின்று எனக்கு உன் சேஷித்வத்தை [4]உதறிப்படுத்தவனே![5] இமையோர் அதிபதியாயிருந்துவைத்து வண்ணமருள்கொள் அணிமேகவண்ணனாய் மாய அம்மானாய்த் தெள் நல் அருவி மணி பொன் முத்து அலைக்கும் திருவேங்கடத்தானாய் அண்ணலாய்க்கொண்டு, எண்ணம்புகுந்து தித்திக்கும் அமுதே! என்கிறார். உன் அடி சேர அடியேற்கு ஆஆ என்னாய்-[6]கிட்டிநின்று முறையை அறிவித்த நீ, பேற்றினையும் செய்து தாராய்! உன் திருவடிகளை அடையும்படி வேறுகதி இல்லாத எனக்கு ஐயோ! ஐயோ! என்று திருவருளைச் செய்தருளவேண்டும்! உன்னடி அன்றோ?[7] உபாயமுமாய் உபேயமுமாய்ப் போக்கியமுமான திருவடிகளைச்சேரும்படி கிருபைசெய்தருளாய். (3)

655.

**ஆவா! என்னாது உலகத்தை** அலைக்கும் அசுரர் வாணாள்மேல்
**தீவாய் வாளி மழைபொழிந்த சிலையா!** திருமா மகள்கேள்வா!
தேவா! சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே!
**பூவார் கழல்கள் அருவினையேன்** பொருந்து மாறு புணராயே.

---

1. நினைத்தவளவில் தித்திக்கும் அமுது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'உள்ளுந்தொறும்' என்று தொடங்கி.

2. "தித்திக்கும் அமுதே" என்றதன்பின், "இமையோர் அதிபதியே" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'மதுவிரதம்' என்று தொடங்கி.

3. "நல்" என்பதனை, "மணி" முதலானவற்றிற்கும் கூட்டுக.

4. 'உதறிப்படுத்தவனே' என்றது, ஐயம்அறச் செய்தவனே; உறுதிப்படுத்தியவனே என்றபடி.

5. அவதாரிகையில் அருளிச்செய்ததற்குத் தகுதியாக அந்வயம் காட்டுகிறார் 'இமையோர் அதிபதியாய்' என்று தொடங்கி.

6. "அண்ணலே உன்னடிசேர" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'கிட்டிநின்று' என்று தொடங்கி.

7. 'உன்னடியன்றோ' என்றதனை விவரணம் செய்கிறார் 'உபாயமுமாய்' என்று தொடங்கி.

**பொ - ரை :**—ஐயோ! ஐயோ! என்று இரங்காமல் உலகத்தி லுள்ளாரை வருத்துகின்ற அசுரர்களுடைய வாழ்நாளின்மேலே, நெருப்பினை வாயிலேயுடைய பாணங்களை மழையைப் போன்று பொழிந்த வில்லையுடையவனே! திருமகள் கேள்வனே! தேவனே! தேவர்களும் முனிவர் கூட்டங்களும் விரும்புகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளி யிருக்கின்ற எம்பெருமானே! போக்கற்கு அரிய வினைகளையுடைய அடியேன், உன்னுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைப் பொருந்துமாறு கற்பிக்கவேண்டும்.

**வி - கு :**—"வாணாள்மேல் தீவாய் வாளி பொழிந்த" என்றது, அவர்களைக் கொன்றமையைக் குறித்தபடி. பூவார்கழல்கள் - பூக்கள் நிறைந்திருக்கின்ற திருவடிகள் என்னலுமாம்.

**ஈடு :**—[1]உன்னை அடைவதற்கு உறுப்பாக நீ கண்டுவைத்த சாதனங்கள் எனக்கு ஒன்றும் உடல் ஆகின்றன இல்லை; ஆனபின்பு, தேவரை நான் அடைவதற்கு எனக்கு என்னத் தனியே ஒரு சாதனம் கண்டுதரவேணும் என்கிறார்.

[2]நஞ்சீயரை, நம்பிள்ளை ஒருநாள் "'**பஞ்சமோபாயம் என்று கொண்டு ஒன்று உண்டு**' என்று சொல்லாநின்றார்கள்; நாட்டிலேயும் அங்ஙனே இருப்பது ஒன்று உண்டோ?" என்று கேட்டருள, "நான் அறிகிலேன்; இனி நான்காவது உபாயந்தான் பகவானேயாயிருக்க,[3] ஆகாயமென்று கூறப்படுகிற நாராயணனுக்கும் அப்பால் ஒன்றுண்டு என்று சொல்லுவாரைப்போல

---

1. "பொருந்துமாறு புணராயே" என்றதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'தனியே ஒருசாதனம் கண்டுதரவேணும்' என்றதற்குக் கருத்து, நான் செய்த பாவங்கட்கு நீ வைத்துள்ள நரகங்கள் போரா; எனக்கு என்ன ஒருநரகம் கல்பிக்கவேண்டும் என்றால், உண்டாக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிறது அன்றே; அருட்பெருங்கடலாய் பேராற்றலையுடையனான நீ அதனைப் போக்கவேண்டும் என்பது கருத்தாமாறுபோன்று, சித்தோபாயமான நீயே காக்கவேண்டும் என்பது. 'ஒன்றும் உடல் ஆகின்றன இல்லை' என்கையாலே, கர்ம ஞான பக்திகள் போன்று, சித்தோபாயமும் சாதனமன்று என்று தோற்றினாலும், சித்தோபாயமான நீயே விரைவில் செய்யவேண்டும் என்று பதற்றம் சொல்லுகிறது.

2. இந்த விஷயத்திலே 'நான்காவது உபாயமான ஈசுவரனை ஒழிய வேறு உபாயம் இல்லை' என்கைக்குச் சம்வாதமாக ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் 'நஞ்சீயரை' என்று தொடங்கி.

3. 'ஆகாயம் என்று கூறப்படுகிற நாராயணனுக்கும் அப்பால் ஒன்று உண்டு என்று சொல்லுவாரைப்போலே' என்றது, "தத்ராபிதஹரம்" என்கிறபடியே, நாராயணனைச் சொல்லி, "தஸ்மின் யதந்தః" என்கிறபடியே, அவனுக்கு அந்தர்யாமியாக இருப்பவன் சிவன் என்று சொல்லுவாரைப்போலே என்றபடி. அங்ஙனம் சொல்லுபவர், சைவர், நாலாம்பத்து, பக். 386. காண்க.

**‘அவனுக்கும் அவ்வருகே ஒன்று உண்டு’** என்கை அன்றோ, அது நான் கேட்டு அறியேன்” என்று அருளிச்செய்தார். “ஆனால், ‘ஆவா’ என்கிற பாசுரம் அருளிச்செய்யும்போது, ‘எனக்குத் தனியே ஒருசாதனம் கண்டு தரவேணும் என்கிறார் என்று அருளிச்செய்கையாயிருக்குமே” என்ன: “அதுவோ! [1] அது உன்நினைவின் குற்றங்காண்; அதற்கு இங்ஙனேகாண் பொருள்: நீயும் உளையாயிருக்க, நான் இங்ஙனே இழப்பதே என்கிறார்காண்” என்று அருளிச்செய்தார். [2]“ஸாஹம் கேஶக் ரஹம் ப்ராப்தா த்வயி ஜீவித்யபி ப்ரபோ-நீயும்உளையாயிருக்க, என் மயிரைப் பிடித்துச் சிலர் நலியும்படி நான் மானபங்கம் செய்யப்பட்டவள் ஆவதே! உன்சத்தைக்கும் என்பரிபவத் துக்கும் என்ன சேர்த்தி உண்டு? ப்ரபோ - நீயும் என்னைப் போன்று பெண்ணாயாகில் நான் ஆறியிருக்க லாயிற்றே; நீ பரிபவத்தைப் போக்கக்கூடியவனாய்இருக்கச்செய்தே நான் நோவுபடுவதே! என்றாளன்றோ. [3] நஞ்சீயர் ஸ்ரீ பாதத்திலே அடைந்த ஒருவன், ‘எம்பெருமானே உபாயமாகில் சரணாகதி கொண்டு இங்குச் செய்கிறது ஒன்றும் கண்டிலேன்’ என்ன, செவியைப் புதைத்து ‘நாதமுனிகள் தொடங்கி இவ்வளவும் வர நம் ஆசாரியர்கள் பரம ரஹஸ்யமாக உபதேசித்து ஓரான் வழியாய்க் கொண்டு போந்த இதனை, இதன் சீர்மை அறியாத உனக்கு மஹாபாபியேன் இதனை வெளியிடுவதே!’ என்று திரு

1. ‘அது உன்நினைவின் குற்றம்காண்’ என்றது, அதன்கருத்து அறியாய்காண் என்றபடி. நீயும் உளையாயிருக்க நான் இங்ஙனே இழப்பதே என்று வெறுக்கிறாரித்தனை போக்கி, வேறோர் உபாயம் கண்டு தரவேண்டும் என்று கேட்கிறார் அல்லர் என்றபடி.

2. ஆயின், அவனை அங்ஙனம் வெறுத்த பேர் உளரோ? என்ன, உளர் என்று அதற்குத் திருஷ்டாந்தமும், திருஷ்டாந்தத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் ‘ஸாஹம்’ என்று தொடங்கி.

“ஸாஹம் கேஶக்ரஹம் பிராப்தா பரிகிலிஷ்டா ஸபாங்கதா
பஶ்யதாம் பாண்டுபுத்ராணும் த்வயி ஜீவத்யபி ப்ரபோ”

என்பது, மஹாபாரதம்.

கற்றைத் துகில்பிடித்துக் கண்ணிலான் பெற்றெடுத்தோன்
பற்றித் துகிலுரியப் பாண்டவரும் பார்த்திருந்தார்
கொற்றத் தனித்திகிரிக் கோவிந்தா! நீ அன்றி
அற்றைக்கும் என்மானம் ஆர்வேறு காத்தாரே.

என்பது, வில்லிபாரதம்.

3. நான்காவது உபாயம் ஈசுவரன் என்றார் மேல்; ஆனால், பிரபத்தியினால் காரியம் இல்லையோ? என்கிற சங்கையைப் போக்குவதற்காக ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார் ‘நஞ்சீயர்’ என்று தொடங்கி.

முடியிலே அடித்துக்கொண்டு திருப்பள்ளியறையிலே புக்கருளினர். [1]திவ்வியமங்களவிக்கிரஹமும் விக்கிரஹகுணங்களும் திவ்வியாத்ம சொரூப குணங்களும் நித்திய முக்தர்கட்குப் பிராப்யமானாற்போலே, முமுக்ஷுவாய்ப் பிரபந்நனை இவ்வதிகாரிக்குத் சரணாகதியே பிராப்பியமாய் இருக்கும் அன்றே.

ஆ ஆ என்னுது - [2]ஈசுவரனுக்குப்பிரியம்செய்கையாகிறது, அவன் விபூதியிலே கிருபைசெய்தலே அன்றே. நஞ்சீயர், "ஒருவனுக்கு, பிறர் துக்கத்தைக் கண்டால் சகிக்கமுடியாத தன்மை வந்ததாகில்,'நமக்குப் பகவத்சம்பந்தம் உண்டு'என்று அறுதியிடலாம்; 'அது தக்கது' என்றிருந்தானாகில், 'நமக்குப் பகவத்சம்பந்தம் இல்லை' என்று தனக்கே கைவாங்க அமையும்" என்று அருளிச்செய்தார். [3]பிறர் ஆகிறார் யார்? என்னில், தன்னினின்றும் வேறுபட்டவர். ஆனால், பிரதிகூலர்பக்கலிலும் கிருபையைச் செய்யவோ? என்னில், **அப்படியேயன்றே இவர்களுக்கு மதம்.**[4]'கெட்ட வாசனை கழிந்து அநுகூலராகப் பெற்றிலோம்' என்று இருக்க அன்றே அடுப்பது. [5]அவன் "இராவணனேயானாலும்" என்றால், அவன் உல

---

1. ஆனால், அவர் கேட்டதற்குப் பரிஹாரம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திவ்வியமங்கள விக்கிரஹமும்' என்று தொடங்கி. என்றது, உபாயம் சித்தமானாலும் ஸ்வீகாரம் வேண்டுகையாலே முதல்தசையிலே அதிகாரி விசேஷணமாய், உத்தரஉத்தர தசையிலே பிராப்பியமாயிருக்கும் என்றபடி. திருப்பள்ளி அறையிலே புக்கதற்குக் கருத்து, துக்கத்தையுடைய ஒருவன் ஆப்தபந்து உள்ள இடத்திலே போமாறுபோலே போனார் என்பது. அன்றிக்கே, இவனுக்கு நல்லபுத்தியைக் கொடுப்பதற்குப் பிரார்த்திக்கப் போனார் என்னுதலுமாம். திருப்பள்ளியறை - பெருமாளது.

2. "ஆ ஆ என்னுது" என்றது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஈசுவரனுக்கு' என்று தொடங்கி. ஈசுவரனுடைய பிரீதிக்காக மாத்திரமன்றிக்கே, பகவத் சம்பந்தம் உண்டாம்போது "ஆ ஆ" என்னவேண்டும் என்னுமதனை ஆப்தசம்வாதத்தாலே காட்டுகிறார் 'நஞ்சீயர்' என்று தொடங்கி.

3. 'பிறர் துக்கத்தைக் கண்டால்' என்ற இடத்தில், 'பிறர்' என்ற சொல் யாரைக் குறிக்கிறது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிறர் ஆகிறார்' என்று தொடங்கி.

4. ஆனால், பிராதிகூல்யம் தங்கியிராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கெட்ட வாசனை' என்று தொடங்கி.

5. பிரதிகூலனுக்கும் நன்மை உண்டாகவேண்டும் என்று எண்ணுவதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன்' என்று தொடங்கி. அவன் - சர்வேசுவரன்.

கத்திலேயுள்ள இவனுக்கு இத்தனையும்வேண்டாவோ? ஆனால், [1]"நண்ணா அசுரர் நலிவெய்த" என்ற இடத்தில், அது எங்ஙனே பொருந்தும்படி? என்னில், அதற்கு என்? நண்ணாமை நிலை நின்ற அன்று கொல்லத் தக்கவனாகிறான். [2]யாககாரியங்களில் செய்கிற கொலையைப் போன்று அதுதானே நன்மை ஆகக் கடவது அன்றோ. இவனுடைய தண்ணிய சரீரத்தைப் போக்கி நல்வழியே போக்குகின்றான் அன்றோ. ஆ ஆ என்னாது உலகத்தை அலைக்கும் - ஐயோ, ஐயோ, என்னவேண்டியிருக்க, அதற்குமேலே நலியாநிற்பார்கள். [3]ஒருவனோடே பகைத்திறம் கொண்டானாகில், 'பொருளை இச்சித்த காரணத்தால் அன்றோ இது வந்தது, இருவரும் சபலர்' என்றே அன்றோ இருக்கலாவது; அங்ஙன் அன்றிக்கே, உலகத்தை அலைப்பர்களாயிற்று. [4]தம்மோடு ஒக்க உண்டு உடுத்துத் திரிகிற இதுவே காரணமாக நலியாநிற்பர்களாயிற்று.

அசுரர் - அதற்குக் காரணம் அவர்கள் அசுரத்தன்மை வாய்ந்தவர்களாகையாலே. வாணாள்மேல் - [5] இவர்கள் வீரக் கோலத்தால் வந்த ஒப்பனை குறிஅழியாதே இருக்க, உயிரிலே நலிகை. என்றது, இவர்கள் வாழ்வதற்குக் காரணமான

---

"விபீஷணோவா ஸுக்ரீவ யதிவா ராவணஃ ஸ்வயம்"
என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 35.

இங்கே, "யச்சீலஃ ஸ்வாமீ தச்சீலோ தாஸஃ" என்றது, அநுசந்தேயம்.

1. "நண்ணா அசுரர்" என்பது, திருவாய். 10. 7 : 5.

2. நண்ணாமை நிலை நின்றாலும் நலிவு எய்தச் செய்தல் தக்கதாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'யாக காரியங்களில்' என்று தொடங்கி. என்றது, யாக காரியங்களில் கொலை உண்கிற பொருள்கட்குச் சுவர்க்கம் கிடைப்பது போன்று இவனும் அவனுக்கு நன்மை செய்தானே யாவன் என்றபடி.

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கு மஃதே துணை.

என்பது, திருக்குறள்.

நன்மை செய்தலாமாறு யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'இவனுடைய தண்ணிய' என்று தொடங்கி.

3. "உலகத்தை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒருவனோடே' என்று தொடங்கி.

4. பொருள் முதலானவை காரணம் அன்றாகில், நலிகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தம்மோடு ஒக்க' என்று தொடங்கி.

5. "வாணாள்மேல்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவர்கள்' என்று தொடங்கி.

காலத்தை நலிகை என்றபடி. தீ வாய் வாளி - [1] பெருமாள் தொடுத்து விடும்போதாயிற்று அம்பு என்று அறியலாவது; படும்போது நெருப்புப்பட்டாற்போலே இருக்கை. ஸ்ரீகோதண்டத்தில் நாணினின்றும் கழிந்து செல்லும்போது, காலாக்னி கவடுவிட்டாற் போன்று எரிந்துகொண்டு செல்லாநிற்கும். குணஹீநமானால் இருக்கும்படி அன்றோ இது. [2]"தீப்த பாவக ஸங்காஸை: - படும்போது நெருப்பைப் போன்றிருக்கும்படி. ஸிதை: - [3]பட்டமை தெரியாதே தொளை உருவி அவ்வருகே விழக் காணுமித்தனை. காஞ்சநபூஷணை: - இவற்றுக்கு [4]இருவகைப்பட்ட ஆகாரம் உண்டாயிருக்கிறபடி. [5]"சரங்கள் ஆண்ட தண் தாமரைக் கண்ணனுக்கு அன்றி என்மனம் தாழ்ந்து நில்லாது" என்கிறபடியே, அநுகூலர்க்கு அகப்படுகைக்கும் அநுதானேயாயிருக்கிறபடி. நத்வாம் இச்சாமி அஹம் த்ரஷ்டும் ராமேண நிஹதம் ஸரை:-இவ்வழகுக்கு இலக்காய் வாழ்ந்து போகலாயிருக்க, எதிரிட்டு முடிந்து போக நான் இச்சிக்கிறிலேன். [6]நீ எண்ணி இருக்கிறது நான் அறிகிறிலேன் அன்றோ.

---

1. "தீவாய்" என்பதற்கும், "வாளி" என்பதற்கும் பாவம் அருளிச்செய்கிறார் 'பெருமாள்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'ஸ்ரீகோதண்டத்தில்' என்று தொடங்கி. 'குணஹீநம்' என்றது, சிலேடை: குணம் - நாணும், குணமும்.

2. "தீ வாய் வாளி" என்பதற்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'தீப்தபாவக' என்று தொடங்கி.

"தீப்த பாவக ஸங்காஸை: ஸிதை: காஞ்சநபூஷணை:
நத்வாம் இச்சாமி அஹம் த்ரஷ்டும் ராமேண நிஹதம்ஸரை:"

என்பது, ஸ்ரீராமா.யுத். 16 ; 22. இராவணனைப் பார்த்து விபீடணன் கூறியது.

இந்தச் சுலோகப்பொருளோடு கம்பராமாயணம் கும்பகர்ணன் வதைப் படலம் 18-முதல் 28-முடியவுள்ளசெய்யுட்களின் பொருளை ஒப்பு நோக்கல் தகும்.

3. கொடுமையின் எல்லையை அருளிச்செய்கிறார் 'பட்டமை' என்று தொடங்கி.

4. 'இருவகைப்பட்ட ஆகாரம்' என்றது, "ஸிதை:" என்கையாலே, ஆயுதமாயிருக்கும் தன்மையையும் "காஞ்சனபூஷணை:" என்கையாலே, இனிமையாய் இருக்கும் தன்மையையும் திருவுள்ளம்பற்றி.

5. இனிமையாய் இருக்கும் தன்மை யாருக்கு? என்ன, 'சரங்கள் ஆண்ட' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, பெரிய திருமொழி. 7. 3: 4.

6. "அஹம் ந இச்சாமி" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'நீ எண்ணி' என்று தொடங்கி. என்றது, உன் எண்ணம் எனக்குத் தெரியாது என்றபடி.

[1]இருத்திப் பிடித்த வில்லும், தெரித்துப் பிடித்த பகழியுமாய்க் கொண்டு நிற்கும்போது அபிராமராய் அன்றே இருப்பது; அவ் வழகைக் கண்டு அநுபவிக்கமாட்டாமல், தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே தலைகீழதாக விழுந்து முடிவாரைப் போலே, தயரதன்பெற்ற மரகத மணித்தடத்தை எதிரிட்டு முடிந்துபோக நான் காணமாட்டுகிறிலேன்.

வாளி மழை பொழிந்த சிலையா-[2]"அம்பு மழையைப் பெய்தாரன்றே" என்கிறபடியே, பாட்டம்பாட்டமாகப் பெய்தபடி. திருமாமகள் கேள்வா - விரோதிகளைப் போக்கினது கண்டு உகந்து அணைக்குமவளைச் சொல்லுகிறது. [3]"கணவனைத் தழுவிக்கொண்டாள்" என்னுமவள். "தம் ஶத்ருஹந்தாரம் த்ருஷ்ட்வா - வெறும்புறத்தில் ஆலத்தி வழிக்கவேண்டும்படியான அழகினையுடையவரை, எதிரிகளை வென்ற வீரக்கோலத்தோடே கண்டாள். ஶத்ருஹந்தாரம் - [4]தம் திருமேனியிலே ஒரு வாட்டம் வாராமே, அவர்களைக் குற்றுயிராக்கிவிடுவதும் செய்யாதே, துண்டித்து அடுக்கினவரை. [5]முன்பு திருவயோத்யையில் இருந்த நாள், 'இவர் வேட்டைக்குச் சென்றவிடத்தே இன்னபடியும் இன்னபடியும் பொருதார்; இன்ன புலியைக் குத்தினர்; இன்ன சிங்கத்தைக் குத்தினர்' என்றாற்போலே உறவினர்கள் சொல்லக் கேட்கு மத்தனையன்றே; இங்குப்

---

1. "ராமேண" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இருத்திப் பிடித்த' என்று தொடங்கி. "ராமேண ஶரை: நிஹதம் த்ரஷ்டும் ந இச்சாமி" என்கையாலே, பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார் 'அவ்வழகை' என்று தொடங்கி.

2. "ஶரவர்ஷம் வவர்ஷ ஹ"
என்பது, ஸ்ரீராமா. யுத். 94: 18.

3. அப்படி அணைத்ததற்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார் 'கணவனை' என்று தொடங்கி.

"தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்தாரம் பரிஷஸ்வஜே"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 30: 39.

4. "சத்ரு ஹந்தாரம்" என்பதற்கு, எதிர்மறையில் பாவம் அருளிச்செய்கிறார் 'தம் திருமேனியிலே' என்று தொடங்கி.

5. "த்ருஷ்ட்வா" என்ற பதத்துக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'முன்பு திருவயோத்யையில்' என்று தொடங்கி.

பூசலுக்குப் புகுகிறபோதே பிடித்து மேலுள்ள செயல்கள் அடங்கலும் கண்டாள். மஹர்ஷீணாம் ஸஹாவஹாம் - இருடிகளுடைய விரோதிகளைப் போக்கி, அவர்களுக்குக் குடியிருப்புப் பண்ணிக் கொடுத்தவரை. [1]தங்கள் தவத்தின் வலிமையால் வெல்லலாயிருக்க, தங்கள் பாரத்தைப் பெருமாள் தலையிலே பொகட்டு முறைஉணர்ந்துகொண்டிருக்குமவர்களுக்கு. [2]கர்ப்ப பூதா: தபோதநா:-தந்தாம் கைம்முதல் அழிய மாறாதே இருக்குமவர்கள். தபோதனராய் இருக்கச்செய்தே கர்ப்ப பூதராயிருப்பர்கள். என்றது, தந்தாமுக்கென்ன இயற்றி உண்டாயிருக்கச்செய்தே கர்ப்பாவஸ்தையில் தாய் அறிந்து ரக்ஷிக்குமத்தனை அன்றோ; அப்படியே அவனே அறிந்து ரக்ஷிக்க இருக்குமவர்கள் என்றபடி. [3]அநுகூலர்களை ரக்ஷித்தலும் பிரதிகூலர்களை அழித்தலும் இவளுக்குப் பிரியமாகச் செய்யுமவை அன்றோ. பபூவ - [4]பதினாலாயிரம் முரட்டு இராக்கதர்களோடே தனியே நின்று பொருகிற இதனைக் கண்டு அஞ்சி, 'இது என்னாய் விளையுமோ?' என்று சத்தை அழிந்து கிடந்தாள்; இப்போது உளள் ஆனாள். பூ - ஸத்தாயாம். ஹ்ருஷ்டா - சத்தை உண்டானால் உண்டாமதுவும் உண்டாயிற்று. [5]வைதேஹீ - உபாத்தியாயர்கள் பெண்பிள்ளைகளுக்குச் செவிஏற்றாலே ஓத்துப்போயிருக்குமாறுபோலே: வீர

1. "ருஷீணாம்" என்ற பதத்திற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தங்கள்' என்று தொடங்கி. என்றது, "ருஷி தர்ஶநே" என்பது, தாதுவாகையாலே ஈசுவரனே ரக்ஷகன், நாம் ரக்ஷிக்கப்படும் பொருள் என்கிற ஞானத்தையுடையவர்கள் என்றபடி.

2. அப்படி அவர்கள் அவனிடத்தில் பாரத்தை வைத்தவர்களோ? என்ன, ஆம் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் "கர்ப்ப பூதா:" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. ஆரண். 1 : 21. கர்ப்பபூதராய் - கர்ப்பத்தில் இருப்பதைப் போன்றவர்களாய். இயற்றி - முயற்சி.

வேண்டின வேண்டினர்க் களிக்கு மெய்த்தவம்
பூண்டுள ராயினும் பொறையி னாற்றலால்
மூண்டெழு வெகுளியை முதலில் நீக்கினார்
ஆண்டுறை அரக்கரால் அலைப்புண் டாரரோ.

என்பது, கம்பராமா. அகத்தியப்பட. 8.

3. இப்படிப் பாதுகாப்பது யார்க்குப் பிரியமாக? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அநுகூலர்களை' என்று தொடங்கி.

4. "ஶத்ரு ஹந்தாரம் த்ருஷ்ட்வா பபூவ" என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'பதினாலாயிரம்' என்று தொடங்கி. "பபூவ" என்பது, உளளாகையைக் காட்டுவதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பூ-ஸத்தாயாம்' என்று.

5. இவள் வீரவாசி அறிகைக்குக் காரணம் யாது? என்ன, 'வைதேஹீ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

வாசி அறியும் குடியிலே பிறந்தவள் அன்றோ. அன்றிக்கே, [1]ஒரு வில்லு முறித்த இதற்கு உகந்து என்னைக் கொடுத்த எங்கள் ஐயர், பதினாலாயிரம்பேரைத் தனியே நின்று பொருது முடித்த இதனைக் கண்டால் என்படுகிறார்தான்! என்னுதல். பர்த்தாரம் - [2] முன்பு, இவர் சுகுமாரர் ஆகையாலே 'குழை சரக்கு' என்றும், 'ஐயர் நம்மை இவர்க்கு நீர்வார்த்துக் கொடுக்கையாலே நாம் இவர்க்குச் சேஷம்' என்றும் அணைத்தாளத்தனை; '**ஆண்பிள்ளை**' என்று அணைத்தது இப்போது: பரிஷஸ்வஜே-[3] இராவணனுக்கு ஒத்தவர்களாய், அவன்மதித்த வீரத்தையுடையராயிருப்பார் பதினாலாயிரம்பேரும் விட்ட அம்புகள் முழுதும் இவர் மேலே பட்டு, கண்ட இடமெல்லாம் யுத்த வடுவாய் அன்றோ திருமேனி கிடக்கிறது; அவ்வவ் விடங்கள்தோறும் திருமுலைத்தடத்தாலே வேது கொண்டாள்.

திருமாமகள்கேள்வா - [4]உன்னுடைய சக்திக்குக் குறைவு உண்டாய் இழக்கின்றேனோ? புருஷகாரம் இல்லாமல் இழக்கின்றேனோ? தேவா - [5]இவள் அணைத்தபின்பு திருமேனியிற் பிறந்த புகர். அன்றியே, விரோதிகளைப் போக்குகையாலே வடிவிலே பிறந்த காந்தியைச் சொல்லவுமாம். சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே - அநுகூலர் அடையத் திரண்டு [6]படுகாடு கிடக்கும்தேசம். பூவார்கழல்கள் - பூவால் அல்லது செல்லாத திருவடிகள் என்னுதல். பூவோடு ஒத்த திரு

---

1. 'வைதேஹீ' என்றதற்கு, வேறும் ஒருகருத்து அருளிச்செய்கிறார் 'ஒருவில்லு' என்று தொடங்கி. 'என்படுகிறார்தான்' என்றதன்பின் 'என்று ஐயரை நினைத்தாள்' என்பது எஞ்சிநின்றது.

2. "ஶத்ரு ஹந்தாரம்" என்றதன்பின் "பர்த்தாரம்" என்று கூறியதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'முன்பு' என்று தொடங்கி. குழை சரக்கு - காக்கப்படும்பொருள்.

3. "பரிஷஸ்வஜே" என்றதற்கு, பரிதஃ ஸஸ்வஜே என்றாக்கி, எங்கும் தழுவுகிறதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இராவணனுக்கு' என்று தொடங்கி.

4. "தீவாய்வாளி மழைபொழிந்த" என்றதனைக் கடாக்ஷித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'உன்னுடைய' என்று தொடங்கி.

5. "திருமாமகள் கேள்வா" என்றதனையும், "வாளி மழைபொழிந்த" என்றதனையும் கடாக்ஷித்துத் "தேவா" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் அணைத்த' என்று தொடங்கி.

6. படுகாடு கிடக்கும் தேசம் - ஈடுபட்டுக் கிடக்கும் தேசம். படுகாடு - வெட்டி வீழ்த்திய காடு.

வடிகள் என்னுதல். அருவினையேன் - [1]அவன் தடைகளைப் போக்கவல்லனாயிருப்பது, எனக்கு ஆசை கரைபுரண்டு இருப்பது, திருவடிகள் எல்லை இல்லாத இனியபொருளாக இருப்பது; இங்ஙனே இருக்கச்செய்தே, கிட்டி அநுபவிக்கப் பெறாத பாவத்தைப் பண்ணினேன். பொருந்துமாறு புணராயே - [2]அசோகவனத்திலே இருந்த பிராட்டியைப் போலே காணும் தம்மை நினைத்திருக்கிறது; புணராய் - உன்னைக்கிட்டும் வழி கல்பிக்கவேணும் என்னுதல்; நான் கிட்டும்படி செய்யவேணும் என்னுதல். (4)

656.

புணரா நின்ற மரமேழ்அன் றெய்த ஒருவில் வலவாவோ!
புணரேய் நின்ற மரமிண்டின் நடுவே போன முதல்வாவோ!
திணரார் மேக மெனக்களிறு சேரும் திருவேங் கடத்தானே!
திணரார் சார்ங்கத் துனபாதம் சேர்வ தடியேன் எந்நாளே?

**பொ - ரை:**—சேர்ந்து ஒன்றுபட்டிருந்த மாமரங்கள் ஏழனையும் சுக்கிரீவன் நிமித்தமாக அம்பு எய்த ஒப்பற்ற வில்வலவனே! சேர்ந்து பொருந்தி இருந்த இரண்டு மரங்களின் நடுவே சென்ற முதல்வனே! திண்மைபொருந்திய மேகமோ என்று ஐயப்படும்படியாக யானைகள்வந்து சேர்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! திண்மைபொருந்திய கோதண்டத்தையுடைய உனது திருவடிகளை அடியேன் சேர்வது எந்த நாளோ?

**வி - கு:**—வலவன் - வல்லவன்; எய்தவன் என்க. திணர் - திண்ணம். சார்ங்கம் - வில். ஓகாரங்கள் சேரப் பெறாததால் உண்டான துக்கத்தின் மிகுதியைக் காட்டுகின்றன.

**ஈடு:**—ஐந்தாம்பாட்டு. [3]நீர் இங்ஙனம் விரைகிறது என்? உம்முடைய அபேக்ஷிதம் செய்கிறோம் என்ன, அது என்று? என்கிறார்.

---

1. மேலேயுள்ள தொடர்களையும் கூட்டிக்கொண்டு பாவம் அருளிச்செய்கிறார் 'அவன்' என்று தொடங்கி. "ஆறு அன்பில் அடியேன்" என்று மேல் திருப்பாசுரத்தில் வந்துள்ளதனைத் திருவுள்ளம்பற்றி 'எனக்கு ஆசை கரைபுரண்டிருப்பது' என்கிறார்.

2. "பொருந்துமாறு" என்கையாலே, முன்பு கூடி இருந்து பிரிந்தவர் போலே இருக்கிறார் என்கிறார் 'அசோகவனத்திலே' என்று தொடங்கி.

3. "எந்நாள்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

புணரா நின்ற மரம் ஏழ் அன்று எய்த ஒரு வில் வல வாவோ -[1]க்ஷத்திரியர் விற்பிடிக்கிறது துயரஒலி கேளாமைக்கு அன்றோ?"வருந்துகிறார்கள் என்ற சப்தம் உண்டாகக்கூடாது என்று க்ஷத்திரியர்களால் வில் தரிக்கப்படுகின்றது" என்கிற படியே. [2]இலக்குக் குறிக்கப்போகாதபடி திரண்டு நின்ற ஏழு மராமரங்களை [3]முஷ்டியாலும் நிலையாலும் நேர் நிற்கச்செய்து எய்த தனிவீரனே! ஓ என்பது, துக்கத்தின் மிகுதியைக் காட்டும் இடைச்சொல்.[4]ரக்ஷணத்தில் ஐயப்பட்டாரையும் நம்பும்படி செய்து காரியம் கொள்ளும் நீ, ஆசைப்பட்ட எனக்கு உதவ வாராது ஒழிவதே! "மஹாராஜர் பெருமாள் விஷயத்தில் எப்பொழுதும் ஐயப்பட்டுக் கொண்டிருந்தார்" என்கிறபடியே, பெருமாளைக் கண்ட அன்றுதொடங்கி மராமரங்களைப் பிளக்க எய்யுந்தனையும், முடிய ஐயமுற்றே இருந்தான். அந்த ஐயத்தைப் போக்கிக் காப்பாற்றிய நீ, ஐயம் இல்லாமலே பற்றின என்னைக் காக்கவேண்டாவோ? புணர் ஏய் நின்ற மரம் இரண்டின் நடுவே போன முதல்வாவோ - ஒரு நிரையாகச் சேர்ந்து நின்ற மருதமரங்களை ஊடு அறுத்து, ஒன்றிலே வெளிகண்டு போவாரைப்போலேபோய்,[5]உலகத்திற்குவேர்ப்பற்றானஉன்னைத் தந்தவனே! பிரளயகாலத்தில் அன்று உலகத்தை உண்

1. "வில் வலவா!" என்றதற்கு, பாவமும், அதற்குப் பிரமாணமும் அருளிச்செய்கிறார் 'க்ஷத்திரியர்' என்று தொடங்கி.

"கிம்நு வக்ஷ்யாமி அஹம் தேவி த்வயைவ உக்தம் இதம் வச:
க்ஷத்ரியை: தார்யதே சாபம் ந ஆர்த்தஶப்த: பவேத்இதி"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 10 : 3.

2. 'இலக்குக் குறிக்கப் போகாதபடி' என்றது, அம்பு நேர்ஓட ஒண்ணாதபடி நெருங்கி நிற்றலைக் குறித்தபடி. புணர்தல் - திரட்சி.

3. இப்படிப்பட்ட மராமரங்களை எய்யும் விதம் எப்படி? என்ன, 'முஷ்டியாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. துக்கத்திற்குக் காரணத்தையும், அதற்குப் பிரமாணத்தையும் அருளிச்செய்கிறார் 'ரக்ஷணத்தில்' என்று தொடங்கி.

"ஸுக்ரீவ: ஶங்கிதஶ்ச ஆஸீத் நித்யம் வீர்யேண ராகவே"

என்பது, சங்க்ஷேபராமா. 63. சுலோகத்திலே உள்ள "நித்யம்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பெருமாளை' என்று தொடங்கி. 'ரக்ஷணத்தில் ஐயப்பட்டாரையும்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம்செய்கிறார் 'அந்த ஐயத்தை' என்று தொடங்கி.

5. "முதல்வா" என்றதன் பொருள், 'உலகத்திற்கு வேர்ப்பற்றான உன்னை' என்பது. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'பிரளய காலத்தில்' என்று தொடங்கி. அது எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்

டாக்கியது; இன்றுயிற்று. அற்றைக்கு இவன் தான் உளனாகை யாலே உண்டாக்கலாம்; இங்கு நிரந்வயவிநாசம்அன்றோ பிறக்கப் புக்கது. முதல்வாவோ - உலகத்தை உண்டாக்கினவனே! [1]உலகத்திற்கு வேர்ப்பற்றான தன்னையன்றோ நோக்கித் தந்தது; [2]"படைப்புக்குமுன் சத் என்று சொல்லக்கூடிய இதுவே இருந்தது; வேறுபொருள் ஒன்றும் இல்லை" என்கிறபடியே. தான் உளனாகவே உண்டாகுமது அன்றோ உலகம். இப்படி இருக்கிற [3]தன்னளவிலே வந்த ஆபத்தையோ நீக்கலாவது!

திணர் ஆர் மேகம் எனக் களிறு சேரும் திருவேங்கடத்தானே - திண்மை மிக்கிருந்துள்ள மேகம் என்னும்படி யானைகளானவை சேராநின்றுள்ள திருமலையிலே நின்றருளினவனே! [4]மேகங்களோடே எல்லாவகையாலும் ஒப்புமை உண்டாகையாலே, மேகங்களைக் கண்டபோது யானை என்னலாம்: யானைகளைக் கண்டபோது மேகம் என்னலாயிருக்கும். [5]"மத யானை போல் எழுந்த மாமுகில்காள்" என்னக்கடவது அன்றோ. [6]சமானதர்மத்தால் வந்த ஐயம் இரண்டிடத்திலும் உள்ளது அன்றோ! [7]விஷயங்களால் வரும் அந்யதாஞானத்தைக் கழித்து, அந்தத் தேசத்தே பிறக்கும் அந்யதாஞானத்தை

---

செய்கிறார் 'அற்றைக்கு' என்று தொடங்கி. நிரந்வயவிநாசம் - காரணபூதனான தான் அழிதல்.

1. உலகத்தை உண்டாக்கின படி எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உலகத்திற்கு' என்று தொடங்கி.

2. தன்னை நோக்கினால் உலகம் உண்டாகுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'படைப்புக்குமுன்' என்று தொடங்கி.

"ஸதேவ ஸோம்ய இதமக்ரஆஸீத் ஏகமேவாத்விதீயம்"
என்பது, சந்தோக்யம். 6. 2: 1.

3. 'தன்னளவிலே வந்த' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, என் ஆபத்தானால் போக்கலாகாதோ? என்றபடி.

4. யானைகளை மேகம் என்று மயங்குகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேகங்களோடே' என்று தொடங்கி.

5. மேகங்களைக் கண்டால் யானை என்னலாயிருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மதயானை' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி, 8: 9.

6. "மேகம் எனக் களிறு சேரும்" என்றேயன்றோ இருக்கிறது? 'மேகத்தைக் கண்டால் யானை என்னலாயிருக்கும்' என்பதற்குச் சொற்கள் இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சமான தர்மத்தால்' என்று தொடங்கி.

7. அதுவல்லாதது ஒன்றனை அதுவாக நினைக்கிற அந்யாதாஞானம் தியாஜ்யம் அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விஷயங்களால்' என்று தொடங்கி. கணிசித்தல் - விரும்புதல்.

அன்றே இவர் கணிசிக்கிறது. [1]அங்குள்ளவை எல்லாம் இனிய பொருள்களாகத் தோற்றுகிறபடி. திணர் ஆர் சார்ங்கத்து உனபாதம்-திண்மை மிக்கிருந்துள்ள ஸ்ரீ சார்ங்கத்தையுடைய உன்னுடைய திருவடிகளை. [2]"ரக்ஷகராய், சக்கரவர்த்தித் திரு மகனை பெருமாளை ரக்ஷகமாக அடைந்தன" என்கிறபடியே, ரக்ஷகமான திருவடிகளை. [3] சக்கரவர்த்திப் பிள்ளைகள் எடுக்கு மத்தனை காணும் வில்லு. திணர் ஆர் சார்ங்கம்-[4]தன் வளைவிலே விரோதிகளைத் தப்பாமல் அகப்படுத்திக் கொள்ளுகை. உன பாதம் - [5]அந்த வளைவுக்கு அகப்படாதாரை முதல் அடியிலே அகப்படுத்திக் கொள்ளுமது. சேர்வது அடியேன் எந்நாளே - [6]கையில் வில் இருக்க இழக்கவேண்டா, விரோதி உண்டு என்று; இனி உன்னைப் பெறும் நாளையாகிலும் சொல்லவேணும். (5)

## 657.

எந்நா ளே நாம் மண்ணளந்த இணைத்தா மரைகள் காண்பதற்கென்று
எந்நா ளும் நின் றிமையோர்கள் ஏத்தி இறைஞ்சி இனமினமாய்
மெய்ந்நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங் கடத்தானே!
மெய்ந்நான் எய்தி எந்நாள் உன் [7]னடிகள் அடியேன் மேவுவதே?

**பொ - ரை :**—உலகத்தை அளந்த இரண்டு திருவடிகளைக் காண் பதற்கு எந்த நாளையுடையோம் நாம் என்று தேவர்கள் கூட்டம்கூட்ட

---

1. இது உத்தேசியமாகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'அங்குள்ளவை' என்று தொடங்கி.

2. "சார்ங்கத்து உன பாதம்" என்று விசேடித்ததற்கு, பாவம் அரு ளிச்செய்கிறார் 'ரக்ஷகராய்' என்று தொடங்கி.

"ஶரண்யம் ஶரணம் யாதா ராமம் தஶரதாத்மஜம்"

என்பது, ஸ்ரீராமா. யுத். 94 : 17.

3. வில்லுக்குத் திண்மை யாது? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'சக்கரவர்த்திப் பிள்ளைகள்' என்று தொடங்கி.

4. "திணர்" என்பதற்கு, பாரம் என்று மேலே பொருள் அருளிச் செய்தார். 'மிடுக்கு' என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'தன் வளைவிலே' என்று தொடங்கி.

5. 'அந்த வளைவுக்கு அகப்படாதாரை' என்றது, அநுகூலரை.

6. விரோதியைப் போக்கவேண்டும் என்னாமல், "எந்நாளே" என்று சேரும் காலத்தை வினவுவது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய் கிறார் 'கையில் வில்' என்று தொடங்கி.

7. "அடிக்கண்" என்பதும் பாடம்.

மாக எப்பொழுதும் நின்றுகொண்டு துதித்து வணங்கிச் சரீரத்தாலும் நாக்காலும் மனத்தாலும் வழிபாடு செய்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! அடியேனாகிய நான் உண்மையாகவே உன்னை அடைந்து உன்திருவடிகளை அடைவது எந்த நாள்? என்கிறார்.

**வி - கு :**—இமையோர்கள், மண் அளந்த இணைத்தாமரைகள் காண்பதற்கு நாம் எந்நாளேம் என்று இனம் இனமாய் நின்று எந்நாளும் ஏத்தி இறைஞ்சி மெய்ந் நா மனத்தால் வழிபாடுசெய்யும் திருவேங்கடம் என்க. "மெய்ந் நா மனத்தால்" என்றதனால், மனம் வாக்குக் காயங்களைக் கூறியவாறு. அடியேன் நான் மெய் எய்தி உன்னடிகள் மேவுவது எந்நாள்? என்க.

**ஈடு :**—ஆறாம்பாட்டு. [1]"எந்நாள்" என்று ஐயுறுகிறது என்? அது ஒரு தேச விசேடத்திலேயே உள்ளது ஒன்று அன்றோ? என்ன, அங்குள்ளாரும் இங்கே வந்து அன்றோ உன்னைப் பெற்று அநுபவிக்கிறது என்கிறார். அங்ஙன் அன்றிக்கே, வேறு பிரயோஜனங்களைக் கருதுகின்ற தேவர்களும்கூட வேறு பிரயோஜனங்களைக் கருதாதவரைப் போன்று வந்து அடையும்படி நிற்கிற இடத்தே நான் இழந்து போவதே! என்கிறாராகவுமாம்.

மண் அளந்த இணைத் தாமரைகள் காண்பதற்கு நாம் எந்நாளேம் என்று - [2]"எந்நாள் யான் உன்னை இனி வந்து கூடுவனே" என்று இங்குள்ளார் அங்கே சென்று அடிமைசெய்ய ஆசைப்படுமாறுபோலேகாணும், அங்குள்ளாரும் இவனுடைய சௌலப்யத்தைக் கண்டு அநுபவிக்கவேணும் என்று ஆசைப்பட்டு வரும்படி. [3]எல்லாருக்கும் சுலபமான திருவடிகளை நாம் காணப்பெறுவது என்றோ? பூமியை யடங்கலும் வருத்தம் இன்றி அளந்துகொள்ளக் கண்ட காட்சியிலே தலைமேலே எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்படியான இனிமையை

1. "இமையோர்கள்" என்பதற்கு அருளிச்செய்யும் இருவகைப் பொருள்கட்கும் ஏற்ப அவதாரிகையும் இரண்டு விதமாக அருளிச்செய்கிறார்.

2. பரமபதத்தில் அவன் திருவடிகளை எப்போதும் ஒக்கக் கண்களாலே கண்டுகொண்டிருக்கிற நித்தியசூரிகள் "எந்நாளேம் காண்பது" என்று வேண்டுவதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'எந்நாள்' என்று தொடங்கி. இது, திருவாய், 3. 2 : 1.

3. "மண்ணளந்த" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'எல்லாருக்கும்' என்று தொடங்கி. "தாமரைகள்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'பூமியை யடங்கலும்' என்று தொடங்கி.

யுடைய திருவடிகளை. மற்றொருபோது வேறு ஒன்றனைப் பற்றிப் போகிறவர்கள் அல்லராதலின் 'எந்நாளும்' என்கிறார்.

இமையோர்கள் இனம் இனமாய் நின்று எந்நாளும் ஏத்தி இறைஞ்சி - நித்தியசூரிகள் காலமெல்லாம் நின்று துதிசெய்து பின்னைத் திருவடிகளிலே விழுந்து, கிண்ணகத்தில் இழிவாரைப் போலே திரள்திரளாய். மெய்ந் நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங்கடத்தான் - [1]மனம் வாக்குக் காயங்களாலே அடைந்து அடிமை செய்யாநிற்பர்கள். அன்றியே, மெய்யான நாவாலும் மனத்தாலும் வழிபடுவர்கள் என்றுமாம். வழிபடுதலாவது, வேறு பிரயோஜனங்களுக்கு உறுப்பாகாத கரணங்களைக் கொண்டு அடைந்து வணங்குதல். [2]நித்தியசூரிகளான போது, கைங்கரியமாகக் கொள்க. பிரமன் முதலான தேவர்களானபோது,உபாசனமாகக் கொள்க. மெய்ந் நான் எய்தி எந்நாள் உன் அடிகள் அடியேன் மேவுவதே - [3]குணங்களின் பிரகாசத்தாலே மாநசாநுபவத்தைப் பண்ணுவித்துப் பகட்ட ஒண்ணாது; நான் உன் திருவடிகளைப் பத்தும் பத்தாக வந்து கிட்டி, பின்னைப் பிரிவோடேகூடி இராதபடி பொருந்தப் பெறுவது என்றோ? என்கிறார். [4]ஓர் அடி விடில் சத்தை நீங்கி அன்றோ இவர் இருப்பது. (6)

658.

அடியேன் மேவி அமர்கின்ற அமுதே! இமையோர் அதிபதியே!
கொடியா அடுபுள் ளுடையானே! கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடியார் வினைகள் தீர்மருந்தே! திருவேங் கடத்தெம் பெருமானே!
நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலா தாற்றேனே.

---

1. "மெய்" என்பதற்கு, இருபொருள்: ஒன்று, சரீரம்; மற்றொன்று, உண்மை. இவ்விருபொருள்களையும் முறையே அருளிச்செய்கிறார் 'மனம் வாக்கு' என்று தொடங்கி.

2. அவதாரிகையில் அருளிச்செய்த இருவகையான் கருத்துக்களுக்குத் தகுதியாக "இமையோர்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'நித்தியசூரிகளானபோது' என்று தொடங்கி.

3. "நான் மெய் எய்தி" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'குணங்களின் பிரகாசத்தாலே' என்று தொடங்கி. "மேவுவது" என்பதற்குப் பொருள், 'பின்னைப் பிரிவோடே' என்று தொடங்கும் வாக்கியம்.

4. "அடிகள்" என்ற பன்மைக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'ஓர் அடிவிடில்' என்று தொடங்கி.

**பொ - ரை:**—அடியேன் அடைந்து அநுபவிக்கின்ற அமுதே! நித்தியசூரிகளுக்குத் தலைவனே! பகைவர்களைக் கொல்லுகின்ற கருடனைக் கொடியில் உடையவனே! அழகிய கோவைக்கனிபோன்ற திருவாயினையுடைய பெருமானே! தூறுமண்டிக் கிடக்கின்ற தீவினைகளைத் தீர்க்கின்ற மருந்தே! திருவேங்கடத்து எம்பெருமானே! ஒருசாதன அநுஷ்டானத்தைச் செய்யாதிருந்துங்கூட, உனது திருவடிகளைக் காண்பதற்குக் கணநேரமும் ஆற்றமாட்டேன்.

**வி - கு:**—அடுபுள் கொடியா உடையானே! என மாற்றுக. நோலாது உனபாதம் காண்கைக்கு நொடியார் பொழுதும் ஆற்றேன் என்க. நோற்றல் - அவனைக் காண்டற்குரிய சாதனங்களைச் செய்தல். நொடித்தல் - இரண்டு விரல் நுனிகளைச் சேர்த்துத் தெறித்தல்.

**ஈடு:**—ஏழாம்பாட்டு. [1] '"மெய்ந் நான் எய்தி" என்ற இந்த ஞானலாபம் உமக்கு உண்டாயிற்று அன்றோ; அது பலத்தோடேகூடியல்லது நில்லாதே அன்றோ; ஆனபின்பு, அவ்வளவும் நீர் ஆறி இருந்தாலோ?' என்ன, 'உன்னுடைய இனிமை, அத்துணை கிரமப்பிராப்தி பார்த்திருக்கப்போகிறது இல்லை' என்கிறார். உன்தனை ஆறிஇருக்க நான் மாட்டுகிறிலேன்.

அடியேன் மேவி அமர்கின்ற அமுதே!-[2]தேவஜாதிகளுடைய உப்புச்சாறு போலன்று; ஒருதிரளாய் அநுபவிக்குமது அன்று; வேறு பிரயோஜனத்தைக் கருதாதவர்கள் அநுபவிக்கும் அமிருதமாயிற்று! இமையோர் அதிபதியே - [3]இதனை உண்பதற்குக் கூட்டாவது ஒரு திரள் அங்கே உண்டாயிருக்கிறபடி. அடு புள் கொடியா உடையானே - விரோதிகளை அழித்த

---

1. "நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலாதாற்றேன்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'உன்னுடைய இனிமை' என்றது, "அமுதே" என்ற பதத்தைத் திருவுள்ளம்பற்றி. நீ திருவேங்கடமுடையானுயிருக்கச்செய்தேயும் என்னை அங்கீகரியாமல் ஆறி இருந்தாய்; இப்படி இருக்கிற உன்னைப்போல் நான் ஆறி இருக்கமாட்டேன் என்கிறார் 'உன்தனை' என்று தொடங்கி.

2. "அமுது" என்பதற்கு 'ஆராவமுது' என்று கொண்டு பாவம் அருளிச்செய்கிறார் 'தேவஜாதிகளுடைய' என்று தொடங்கி. "அடியேன்" என்ற ஒருமைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'ஒருதிரளாய்' என்று தொடங்கி. "அடியேன்" என்று சேஷத்துவம் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வேறு பிரயோஜனத்தை' என்று தொடங்கி.

3. "இமையோர்" என்று பன்மையாகக் கூறியதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இதனை உண்பதற்கு' என்று தொடங்கி. என்றது, இங்குள்ளார் வேறு பிரயோஜனங்களைக் கருதுகின்றவர்கள் ஆனாற்போன்று, அங்குள்ளவர்கள் வேறு பிரயோஜனங்களைக் கருதாதவர்கள் என்றபடி.

லேயே இயல்பாகவுடைய பெரிய திருவடியைக் கொடியாக உடையவனே! கோலம் கனிவாய்ப் பெருமானே - அழகியதாய்க் கனிந்திருந்துள்ள திருவதரத்தின் சிவப்பைக் காட்டி என்னை அடிமைகொண்டவனே! [1]வாய்க்கரையிலே தோற்றார்காணும். [2]அடியார்கட்கு இவ்வழகை அநுபவிப்பிக்கைக்குக் கொடிகட்டிக்கொண்டிருக்கிறபடி. செடியார் வினைகள் தீர் மருந்தே - [3]பாபத்தோடே பொருந்தின தீயவினைகளாலுண்டான துக்கத்தைப் போக்குகைக்கு மருந்தானவனே! செடி - பாவம். அது உண்பிக்கைக்கு விரோதிகளைப் போக்கும்படி. அன்றிக்கே, தூறு மண்டின பாவங்களைப் போக்குகைக்கு மருந்தானவனே என்னுதல். [4]அந்த அமுதந்தானே காணும் மருந்தாகிறது. "மருந்தும் பொருளும் அமுதமும் தானே" என்றும், "மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கு" என்றும் கூறுகிறபடியே, அவன் தன்னை ஒழிய வேறு மருந்தும் இல்லையே; மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணன் அன்றோ.

திருவேங்கடத்து எம்பெருமானே - [5]அவ் வமுதம், உண்பார்க்கு மலைமேல் மருந்து அன்றோ. அவ் வமுதம், உண்பார்க்குச் சாய்கரகம் போலே உயரத்திலே அணித்தாக நிற்கிறபடி.

---

1. "கனிவாய்" என்றதன்பின் "பெருமான்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'வாய்க்கரையிலே' என்று தொடங்கி. அதரத்திலே என்பது, நேர்பொருள். மேலெழ என்பது, வேறும் ஒருபொருள்.

2. பதச்சேர்த்திக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அடியார்கட்கு' என்று தொடங்கி.

3. "செடியார் வினைகள்" என்பதற்கு இரண்டு பொருள்: முதற்பொருளில், செடி-பாபம்; வினை-துக்கம். இதனையே அருளிச்செய்கிறார் 'பாபத்தோடே' என்று தொடங்கி. இரண்டாவது பொருளில், செடி - தூறு; வினை - பாபம். இதனையே அருளிச்செய்கிறார் 'தூறு மண்டின' என்று தொடங்கி.

4. "அமுதே" என்றதனைக் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'அந்த அமுதந்தானே' என்று தொடங்கி. 'அமுதந்தானே மருந்து' என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மருந்தும்' என்று தொடங்கியும், 'மருந்தே' என்று தொடங்கியும், 'மருத்துவனாய்' என்று தொடங்கியும். இவை, முறையே மூன்றாந்திருவந். 4. திருவாய். 9. 3: 4. பெரியாழ்வார் திரு. 5. 3: 6.

5. "அடியேன் மேவி அமர்கின்ற அமுதே" என்றதனைக் கூட்டி, "திருவேங்கடத்தெம் பெருமானே" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவ்வமுதம்' என்று தொடங்கி. சாய்கரகம் - தண்ணீர்ப் பந்தலில் தண்ணீர் வார்க்கிற கரகம்.

"இமையோர் அதிபதியாய், கொடியா அடுபுள் உடையானாய், செடியார் வினைகள் தீர் மருந்தாய், திருவேங்கடத்து எம்பெருமானாய், கோலக் கனிவாய்ப் பெருமானாய், அடியேன்மேவி அமர்கின்ற அமுதே!' என்கிறார். [2]பட்டர், "நித்தியத்திலே, 'அமுது செய்யப் பண்ணும்போது தோத்திரத்தை விண்ணப்பம்செய்வது என்று இருக்கின்றதே, என்ன தோத்திரத்தை விண்ணப்பம்செய்வது?" என்ன, "'அடியேன் மேவி அமர்கின்ற அமுதே', 'பச்சை மாமலைபோல் மேனி' என்பன போலே இருக்கும் திருப்பாசுரங்களை விண்ணப்பம் செய்வது" என்று அருளிச்செய்தார். நொடியார் பொழுதும் - நொடி நிறையும் அளவும். உனபாதம் காண நோலாது ஆற்றேன்-[3]உன் திருவடிகளைக் காண்கைக்கு ஒருசாதன அநுஷ்டானம் செய்யாதிருக்க, கணநேரமும் ஆற்றமாட்டுகிறிலேன். என்றது, சாதனத்தைக் கண்ணழிவுஅறச் செய்து பலம் தாழ்ப்பாரைப்போலே படாநின்றேன் என்றபடி. [4]அது இல்லாமை அன்றோ இவர் இங்ஙனே கிடந்துபடுகிறது. தனியே ஒருசாதனம் செய்யுமவனுக்கு, 'அது முடிவுபெற்றவாறே பெறுகிறோம்' என்றுதல், 'அதிலே சிலகுறைவுகள் உண்டானமையால் அன்றோ பலம் தாழ்த்தது' என்றுதல் ஆறி இருக்கலாம்; அவனே சாதனமான இவர்க்கு விளம்பித்தால் 'அவன் திருவருளும் ஏறிப்பாயாதபடியானேனே!' என்னும் அச்சம் அன்றோ தொடர்வது. (7)

---

1. பரத்துவத்தைச் சொல்லி, விரோதிகளை அழிப்பதற்கு உறுப்பான பரிகரத்தைச் சொல்லி, விரோதி நிரசனத்தைச் சொல்லி, சௌலப்யத்தைச் சொல்லி, அழகைச் சொல்லி, இனியனாய் இருக்கிறான் என்று சொல்லுகிறார் என்று இப்படி ஒரு கிரமம் சொல்லுகைக்காக அந்வயிக்கிறார் 'இமையோர்' என்று தொடங்கி.

2. 'பட்டர்' என்று தொடங்கும் வாக்கியம், பிராசங்கிகம். நித்தியத்திலே-உடையவரால் அருளிச்செய்யப்பட்ட நித்தியம் என்ற நூலிலே.

3. உனபாதம் காண நோலாதிருக்கச்செய்தேயும் இனிமையாலே நொடியார் பொழுதும் ஆற்றேன் என்கிறார் 'உன் திருவடிகளை' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'சாதனத்தைக் கண்ணழிவு அறச் செய்து' என்று தொடங்கி.

4. நோலாமையாலே காலதாமதத்திற்குக் காரணம் இல்லை; ஆகையாலே, ஆற்றேன் என்று வேறும் ஒருகருத்து அருளிச்செய்கிறார் 'அது இல்லாமையன்றோ' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார் 'தனியே ஒருசாதனம்' என்று தொடங்கி.

659.

நோலா தாற்றேன் உனபாதம் காண என்று நுண்ணுர்வின்
நீலார் கண்டத் தம்மானும் நிறைநான் முகனும் இந்திரனும்
சேலேய் கண்ணார் பலர்சூழ விரும்பும் திருவேங் கடத்தானே!
மாலாய் மயக்கி அடியேன்பால் வந்தாய் போலே வாராயே.

பொ - ரை :—உனது திருவடிகளைக் காண்கைக்குரிய சாதனம் ஒன்றையும் செய்யாமலே வைத்தும் ஆற்ற மாட்டுகின்றிலேன் என்று, நுண்ணிய அறிவினையும் விஷம்பொருந்திய கழுத்தினையுமுடைய சிவ பெருமானும் குணங்கள் நிறைந்த பிரமனும் இந்திரனும் ஆகிய தேவர்கள், சேல்போன்ற கண்களையுடைய பெண்கள் பலரும் தங்களைச் சூழ்ந்து நிற்க வழிபாடு செய்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! எல்லாரையும் மயக்கிக் கிருஷ்ணனாய் வந்தாற்போலே அடியேன் பக்கலிலும் வரவேண்டும்.

வி கு :—"நோலாது ஆற்றேன் உன பாதம் காண" என்பது, "நீலார்கண்டத்தம்மான்" முதலாயினோர்கட்கு அடைமொழி. அம்மானும் நான்முகனும் இந்திரனும் பலர்சூழ விரும்பும் திருவேங்கடம் என்க. மால் - கருமை; ஈண்டு, கரிய நிறத்தையுடைய கிருஷ்ணனுக்காயிற்று. மாலாய் வந்தாய்போலே அடியேன்பால் வாராய் என்க. வாராய்: விதிவினை.

ஈடு :—எட்டாம்பாட்டு. [1] 'உன்னைச்சேர்தற்கு என் தலையில் ஒருசாதனம் இல்லை' என்னுநின்றீர்; 'இது ஒரு வார்த்தையோ! சாதனத்தைச் செய்தார்க்குஅன்றிப் பலம்உண்டோ?' என்ன, 'அவர் அவர்களுடைய விருப்பங்களைப் பெறுதல், சாதன அநுஷ்டானத்தாலே என்றிருக்கும் பிரமன் முதலாயினோர்களுக்கும், கிட்டினால் பாசுரம் இதுவே அன்றோ?' என்கிறார். தந்தாமுடைய ஆகிஞ்சந்யத்தை முன்னிடுமத்தனைபோக்கி, ஒரு சாதனத்தைச் செய்து பெறலாம்படியோ நீ இருக்கிறது?

நோலாது ஆற்றேன் உனபாதம் காண என்று நுண் உணர்வின் நீலார்கண்டத்தம்மானும் நிறை நான்முகனும் இந்

1. "நோலாது ஆற்றேன்" என்பது போன்றவைகளால், தங்கள் வெறுமையை முன்னிடுகிற பிரமன் முதலாயினோர்களுடைய பாசுரத்தை அருளிச்செய்வதற்குத் தகுதியாக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'பாசுரம் இதுவே அன்றோ' என்றது, தாம் அருளிச்செய்த "உனபாதம் காண நோலாதாற்றேன்" என்றதனை. இதனால் என்சொல்லியவாறோ? எனின், அதனை அருளிச்செய்கிறார் 'தந்தாமுடைய' என்று தொடங்கி.

திரனும் விரும்பும் திருவேங்கடத்தானே - உன் திருவடிகளைக் காண்கைக்கு, சாதன அநுஷ்டானம் பண்ணுதே இருந்து வைத்து உன்னை ஒழிய ஆற்றமாட்டேன் என்றாயிற்று, அவர்கள் [1]தனித்தனியே சொல்லுவது. [2]ஒரு வாணுசுரனுடைய போரிலே தோற்றுப் போக்கடி அற்றவாறே இங்ஙனே வந்து விழுவர்கள்.[3] இராசத தாமதகுணங்கள் தலைஎடுத்தபோது '**ஈஸ்வரோஹம்**' என்று இருப்பர்கள்; முட்டினவாறே "கிருஷ்ண கிருஷ்ண! உன்னைப் பிறப்பில்லாதவனுகவும் எல்லார்க்கும் மேலானவனுகவும் புருடோத்தமனுகவும் அறிவேன்" என்று துதிசெய்யத் தொடங்குவர்கள்; [4]"ஓ நாதனே! அசுரசேனைகளால் வெல்லப்பட்ட எல்லாத் தேவர்களும் நமஸ்காரத்தைச் செய்கின்றவர்களாய் வந்து உன்னைச் சரண் அடைந்தார்கள்" என்கிறபடியே. விஷத்தைக் கண்டத்திலே தரித்த ஆற்றலுடையவனுய் அதனுலே உலகத்திற்குப் பிரதானனுக அபிமானித்திருக்கும் சிவனும், அவனுக்கும் தந்தையாய் அவனிலும்

---

1. 'நோலாதாற்ருேம்' என்னுமல், "நோலாதாற்றேன்" என்ற ஒருமைக்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'தனித்தனியே சொல்லுவது' என்று.

2. 'ஈஸ்வரோஹம்' என்னுமவர்கள், "நோலாதாற்றேன்" என்பர்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'ஒரு வாணுசுரனுடைய போரிலே' என்று தொடங்கி.

3. போர்செய்வது என்? பின் சரணம் புகுவது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இராசத தாமத' என்று தொடங்கி.

க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்
பரேஶம் பரமாத்மாநம் அநாதிநிதனம் பரம்.

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 33 : 41.

போதகத் தானும்வெண் போதகத் தானும் புராந்தகனும்
தீதகத் தானது தீர்தருங் காலைத் திருவரைசேர்
பீதகத் தாய் அழ கா அரு ளாய்என்பர் பின்னைஎன்ன
பாதகத் தான் மறந் தோதனி நாயகம் பாவிப்பரே.

என்பது, அழகரந்தாதி. 90.

4. பிரமன் முதலாயினேர் வெறுமையை முன்னிட்டுச் சரணம் புக்கதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'ஓ நாதனே' என்று தொடங்கி.

"ப்ரணம்ப்ரவணு நாத தைத்ய ஸைந்ய பராஜிதா:
ஶரணம் த்வாம் அநுப்ராப்தா: ஸமஸ்தா தேவதா கணு:"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 1. 9 : 65. இங்கு, கம்பராமாயணம் திருவவதாரப் படலம், 6-முதல் 24-முடிய உள்ள செய்யுட்களைக் காணல் தகும்.

ஞானத்திலும் சக்தியிலும் நிறைந்தவனை பிரமனும், மூன்று உலகங்கட்கும் அரசனை இந்திரனும்; [1]"அவன்பிரமன், அவன் சிவன், அவன் இந்திரன்" என்பது நாராயண அநுவாகம். [2]இங்ஙனே இருக்கச்செய்தேயும், அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையிலே இவர்களுடைய வாக்கியங்களைப் பிரமாணங்களாகக் கொண்டு போராநின்றோமே? என்னில், [3]"சத்துவம் தலையெடுத்தபோது சொல்லுமவை எல்லாம் கொள்ளக்கடவோம். இவை கைக்கொண்டோம் என்று, இவர்கள்தாம் உத்தேசியர் ஆகார்கள்; [4]'காக்கைவாயிலும் கட்டுரைகொள்வர்' என்று உண்டே" என்று பட்டர் அருளிச்செய்வர்.

---

1. பிரமன் சிவன் இவர்களோடு இந்திரனையும் சேர்த்து அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அவன் பிரமன்' என்று தொடங்கி. "ஸபிரஹ்மா ஸஶிவஃ ஸேந்த்ரஃ" என்பது, நாராயணநுவாகம், 11.

2. இப்படி அகங்காரமுடையவர்களாகில், இவர்கள் வாக்கியங்கள் பிரமாணமாகக் கூடுமோ? என்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் 'இங்ஙனே இருக்கச்செய்தேயும்' என்று தொடங்கி. இங்ஙனே இருக்கச்செய்தேயும் - இப்படி அகங்காரமுடையவர்களாக இருக்கச்செய்தேயும். அஹிர்ப்புத்ந்யசம்ஹிதை - இது, பாஞ்சராத்திர ஆகமத்தில் உள்ளதொரு பகுதி; சிவபெருமானால் கூறப்பட்டது. 'இவர்களுடைய வாக்கியங்களை' என்றது, "அஹமஸ்மி அபராதாநாம் ஆலயஃ" என்பது போன்றவைகளை.

3. அவர்கள் வாக்கியங்களைப் பிரமாணமாகக் கொண்டால் அவர்களை வணங்கவேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சத்துவம் தலை எடுத்தபோது' என்று தொடங்கி.

விலையான திலையென்று நீதந்த முத்தம்
வேய்தந்த முத்தாகில் வெற்பா வியப்பால்
இலையார் புனற்பள்ளி நாரா யணன்பால்
எந்தாய்! அரங்கா! இரங்காய் எனப்போய்த்
தலையால் இரக்கும் பணிப்பாய் சுமக்கும்
தன்தாதை அவர்தா மரைத்தாள் விளக்கும்
அலையாறு சூடும் புராணங்கள் பாடும்
ஆடும் பொடிப்பூசி ஆனந்த மாயே.

என்பது, திருவரங்கக்கலம்பகம். 61.

கம்பராமாயணம் நிகும்பலைப்படலம் 138-முதல், 143-முடிய உள்ள செய்யுட்களைக் காண்க.

4. உத்தேசியர் அல்லாதார் வார்த்தை கைக்கொள்ளலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'காக்கை வாயிலும்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி, 5. 1: 1.

[1]ஓர் ஆழ்வார், 'பிதிரும் மனம் இலேன் - பேதிக்கப்பட்ட நெஞ்சினையுடையேன் அல்லேன்; பிஞ்ஞகன் தன்னோடு எதிர்வன் - [2]சிவன் எனக்கு ஒத்தவன்; அவன் எனக்கு நேரான் - அவனும் எனக்கு ஒத்தவன் அல்லன்; அது என்? என்னில், அதிரும் கழல் கால மன்னனையே கண்ணனையே நாளும் தொழக் காதல் பூண்டேன் தொழில் - பகவத் விஷயத்தில் நெஞ்சை வைத்து அநுபவிக்கையே யாத்திரையான எனக்கு, அந்யபரனானவன் ஒப்பாகப் போருமோ?' [3]'குறைகொண்டு-தன் வெறுமையைக் கைதொடுமானமாகக் கொண்டு; நான்முகன் குண்டிகைநீர் பெய்து - நினைவறத் திருவடி சென்று கிட்டிற்று; உபகரணம் பெற்றிலன்; தர்மதேவதையானது தண்ணீராய் வந்து தங்கிற்று; அதனைக்கொண்டு, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி-வேதாந்தங்களில் பகவானுடைய பரத்துவத்தைச் சொல்லுகின்ற மந்திரங்களைக் கொண்டு துதி செய்து; கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேல் ஏறக் கழுவினான் - அடக்கமில்லாமல் செருக்குக்கொண்டு திரியும் பிள்ளைகள் தலைகளிலே ஸ்ரீபாத தீர்த்தம் கொண்டு தெளிப்பாரைப் போலே;' நுண்உணர்வில்-சத்துவம் தலையெடுத்தபோது [4]'சொல்லுவது இதுவே. சத்துவகுணத்தினால் ஞானம் நன்கு உதிக்கின்றது என்பதே அன்றோ பிரமாணம். நீலார்கண்டத்து அம்மானும் - விஷத்தைக் கண்டத்திலே தரிக்கையாலே ஈசுவரனு

---

1. உத்தேசியர் அல்லர் என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'ஓர் ஆழ்வார்' என்று தொடங்கி. ஓர் ஆழ்வார் - திருமழிசையாழ்வார்.

> பிதிரு மனமில்லேன் பிஞ்ஞகன் தன்னோடு
> எதிர்வன் அவன் எனக்கு நேரான்—அதிரும்
> கழற்கால மன்னனையே கண்ணனையே நாளும்
> தொழக்காதல் பூண்டேன் தொழில்.

என்பது, நான்முகன் திருவந்தாதி. 84.

2. 'சிவன் எனக்கு ஒத்தவன்' என்றது, ஞானத்தின் ஒப்புமையாலே என்றபடி. 'அது என்? என்னில்,' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, சர்வேசுவரனை ஏத்துதலையே நான் எப்பொழுதும் தொழிலாகக் கொண்டேன்; ஆதலால், யாதாயினும் ஒருகால விசேடத்திலே பகவத் ஞானத்தையுடையனாயிருக்கிற சிவன் எனக்கு ஒப்புஆகான் என்பது. அந்யபரன் - வேறு ஒன்றில் நோக்குள்ளவன்.

3. சிவனும் இந்திரன் முதலான தேவர்களும் வெறுமையை முன்னிட்டு அடைந்ததற்குப் பிரமாணம் காட்டி, பிரமன் வெறுமையை முன்னிட்டு ஆஸ்ரயித்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'குறைகொண்டு' என்று தொடங்கி. இது, நான்முகன் திருவந். 9. கைதொடுமானம் - சகாயம்.

4. 'சொல்லுவது இதுவே' என்றது, "நோலாதாற்றேன்" என்னும் வார்த்தையை.

கத்தன்னைமதித்துக்கொண்டிருக்கின்ற சிவனும். நிறை நான்முகனும்-அவனுக்குந் தமப்பனாய் நிறைந்த ஞானத்தையுடையனான பிரமனும். இந்திரனும்-இவர்களோடு ஒக்கப் படைத்தல் அழித்தல்களில் ஓர் இயைபு இன்றிக்கே இருக்கச்செய்தே "அவன்பிரமன், அவன் சிவன், அவன் இந்திரன்" என்று கொண்டு ஒக்க எண்ணலாம்படியான இந்திரனும்.

சேல் ஏய் கண்ணார் பலர் சூழ விரும்பும் திருவேங்கடத்தானே-[1]தந்தாமுக்கு ஓர் உயர்த்தி உள்ளபோது பெண்கள் முன்னிலையில் ஓர் எளிமை தோற்ற இரார்களே அன்றோ; ஆபத்து வந்தவாறே, மனாட்டிமார் கழுத்திலும் தங்கள் கழுத்திலும் கப்படம் கட்டிக்கொண்டு வந்து விழத் தொடங்குவர்கள். [2] "சிவபெருமான் இருகரங்களையும் கூப்பிக்கொண்டு விஷ்ணுவைப் பார்த்து விஷ்ணுவின் பெருமையைப் பார்வதியோடுகூடச் சொல்லுதற்கு விரும்பினான்" என்றும், [3]"ஜகந்நாத! நாசம் அடைகின்ற எனக்குக் கிருபைசெய்யும்; இந்தக் காளியன் உயிரை விடுகிறான்; எங்களுக்குக் கணவனுடைய பிச்சையானது கொடுபடவேண்டும்" என்றும், [4]"நதிகளுக்குப் பதியாகிய சமுத்திரராஜன் தன்னைக் காண்பித்தான்" என்றும், [5]"சக்கரவர்த்தியின் குமாரனே! கோபத்துக்குக் காரணம் என்ன?" என்றும் சொல்லுகிறபடியே வந்து விழுவர்களே அன்றோ. அவர்களுக்கு அடையலாம்படி சுலபனாய் வந்து

---

1. இவர்கள், பெண்களோடே வந்து பணிவதற்குப் பிரயோஜனம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தந்தாமுக்கு' என்று தொடங்கி. என்றது, பெண்களோடே வந்து பணிந்தால், அவன் இரங்குவன் என்று ஆஶ்ரயிக்கிறார்கள் என்றபடி. கப்படம் - வறுமைக்குச் சூசகமான உடை.

2. பெண்களை முன்னாகக் கொண்டு வந்து பணிவதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'சிவபெருமான்' என்று தொடங்கி.

"அஞ்சலிம் ஸம்புடம் க்ருத்வா விஷ்ணு முத்திஶ்ய ஶங்கர:
உமயா ஸார்த்தம் ஈஶானோ மாகாத்ம்யம் வக்துமைஹத"

என்பது, ஹரிவம்சம், 279 : 15½.

3. "தத: குரு ஜகத்ஸ்வாமிந் ப்ரஸாதம் அவஸீதத:
ப்ராணாந் த்யஜதி நாகோயம் பர்த்ருபிக்ஷா ப்ரதீயதாம்"

என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 5. 7 : 57.

4. "தர்ஶயாமாஸ ச ஆத்மாநம் ஸமுத்ர: ஸரிதாம்பதி:"

என்பது, சங்க்ஷேப ராமா. 79.

5. "கிம் கோபமூலம் மநுஜேந்த்ரபுத்ர" என்பது, ஸ்ரீராமா. கிஷ். 33 : 40. சமுத்திரராஜனும், மஹாராஜரும், காளியனும் என்னும் இவர்கள், இங்குப் பிரஸ்தாவம் இன்றிக்கே இருப்பினும், பெண்களை முன்னாகக்கொண்டு பற்றினார்கள் என்ற அளவுக்குப் பிரமாணங்கள்.

நிற்கிறானாதலின் '**திருவேங்கடத்தானே**' என்கிறார். மாலாய் மயக்கி - [1]"மயங்கல் கூடலும் கலவியும்". 'மாலாய் நான் மயங்கும்படிக்குத் தகுதியாக வரவேணும் என்கிறார் என்றும், அன்றிக்கே, மாலாம்படி மயக்கிக்கொண்டு வரவேணும் என்கிறார்' என்றும் சொல்லுவர்கள்; அவை அல்ல பொருள். மால் என்று கருமையாய், அதனால் நினைக்கிறது கிருஷ்ணனை என்கையாய், கிருஷ்ணனாய்க் கொண்டு உன் குணங்களாலும் செயல்களாலும் அந்த அவதாரத்தில் உள்ளாரைப் பிச்சு ஏற்றிக்கொண்டு வந்தாற்போலே எனக்காகவும் ஒருவரத்து வரவேணும் என்கிறார்; [3]"மாலாய்ப்பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்று சொல்லுகிறபடியே. (8)

## 660.

**வந்தாய் போலே வாராதாய்! வாரா தாய்போல் வருவானே!**
**செந்தா மரைக்கட் செங்கனிவாய்** நாற்றோ ளமுதே! எனதுயிரே!
**சிந்தா மணிகள் பகரல்லைப் பகல்செய்** திருவேங் கடத்தானே!
**அந்தோ அடியேன் உனபாதம் அகல கில்லேன்** இறையுமே.

**பொ-ரை:**—வந்தவனைப் போன்றிருந்து வாராமல் இருப்பவனே! வாராதவனைப் போன்றிருந்து வருகின்றவனே! செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையும் சிவந்த கொவைக்கனிபோன்ற திருவாயினையும் நான்கு திருத்தோள்களையுமுடைய அமுதம் போன்றவனே! என் உயிரானவனே! சிந்தாமணி என்னும் இரத்தினங்களின் ஒளியானது இருட்டினை நீக்கிப் பகலாகச் செய்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! ஐயோ! அடியேன் உன்னுடைய திருவடிகளைச் சிறிது பொழுதும் நீங்கமாட்டுகின்றிலேன்.

**வி - கு:**—சிந்தாமணி - ஒருவகை இரத்தினம். பகர் - ஒளி. அல் - இருள். இறையும் அகலகில்லேன் என்க. இறை - சிறிதுபொழுது.

---

1. "மயக்கி" என்பதற்குப் பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றித் தாம் கூறும் பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மயங்கல் கூடலும் கலவியும்' என்று.

2. மேலேகூறிய இருவகையான கருத்துக்களிலும் "வந்தாய்போலே" என்பதற்குப் பொருள் இல்லையாதலின் 'அவை அல்ல பொருள்' என்கிறார்.

3. அப்படிப் பிச்சு ஏற்றிக்கொண்டு வந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மாலாய்' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி. 14 : 3. மாலே செய்யும் மணாளனை - தன் வியாமோகத்தைக் காட்டி இத்தலைக்கு வியாமோகத்தை விளைக்குமவனை. மாலாய் - கிருஷ்ணனாய்.

ஈடு:—ஒன்பதாம்பாட்டு.[1] தாம் விரும்பியபோதே காணப் பெறுமையாலே இப்போதே உன்னைக் காணுவிடில் தரிக்க மாட்டேன் என்கிருர்.

வந்தாய்போலே வாராதாய் - [2]மானச அநுபவத்தில் உண்டான கரைபுரட்சிதான் 'புறத்திலே கலவியும் பெற்ருேம்' என்று கொண்டு மனநிறைவு பிறக்கும்படியாய், அதனை 'மெய்' என்று அணைக்கக் கணிசித்தால் கைக்கு எட்டாதபடியாயிருக்கை. வாராதாய் போல் வருவானே - ஒரு நாளும் கிட்டமாட்டோம் என்று இருக்கச்செய்தே கடுகக் கைப் புகுந்து கொடு நிற்கும் என்கை. அன்றிக்கே, அடியர்அல்லாதார்திறத்தில் 'கைப் புகுந்தான்' என்று தோற்றி இருக்கச் செய்தே புறம்பாய், அடியார்கட்கு 'இவன் கிட்ட அரியன்' என்று இருக்கச்செய்தே உட்புகுந்து இருக்கும்படியைச் சொல்லிற்ருகவுமாம். செந்தாமரைக்கண் செம்கனிவாய் நால் தோள் அமுதே - [3]தாபங்கள்எல்லாம் ஆறும்படி குளிர்ந்த திருக்கண்களையுடையவனுமாய், சிவந்த கனிந்திருந்துள்ள திருவதரத்தையுடையனுமாய், கல்பகதரு பணைத்தாற்போலே இருக்கிற நான்கு திருத்தோள்களையுடையனுமாய் இனியனுமானவனே! எனது உயிரே-[4] இந்த வடிவழகை என்னை அநுபவிப்பித்து, பிரிந்த நிலையில் நான் உளன் ஆகாதபடி செய்தவனே!

சிந்தாமணிகள் பகர் அல்லைப் பகல் செய் திருவேங்கடத்தானே-விலக்ஷணமான இரத்தினங்களினுடைய ஒளியானது அல்லைப் பகல் செய்யாநின்றதாயிற்று; என்றது, இரவு பகல் என்ற வேறுபாட்டினை அறுத்துக் கொண்டிருக்கையைத் தெரிவித்தபடி. [5]"மணிகளின் ஒளியால் விடிபகல் இரவு என் அறிவரிதாய" என்னக்கடவதன்ருே. இதனல் நினைக்கிறது,

1. "இறையும் அகலகில்லேன்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. "வந்தாய்போலே" என்றதற்கும், "வாராதாய்" என்றதற்கும் பொருந்த பொருள் அருளிச்செய்கிருர் 'மானச அநுபவத்தில்' என்று தொடங்கி.

3. "செந்தாமரை" என்று விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிருர் 'தாபங்கள் எல்லாம்' என்று தொடங்கி.

4. உயிரானபடியை அருளிச்செய்கிருர் 'இந்த வடிவழகை' என்று தொடங்கி.

5. 'மணிகளின் ஒளியால்' என்பது, பெரியதிருமொழி, 4. 10: 8.

6. "சிந்தாமணிகள் பகர் அல்லைப் பகல்செய்" என்றதனல், பலித்த பொருளை அருளிச்செய்கிருர் 'இதனல் நினைக்கிறது' என்று தொடங்கி.

[1]"அந்த விண்ணுலகில் காலமானது ஆட்சிபுரிவதாய் இல்லை" என்கிற தேசத்தே சென்று அநுபவிக்கும் அநுபவத்தை இங்கே அநுபவிக்கக் காணும் நினைவு. அந்தோ-[2]போக்கியமும் குறைவற்று, அவன்தானும் அண்மையனாய், எனக்கு ஆசையும் மிகுத்திருக்க, கிட்டி அநுபவிக்கப் பெறாது ஒழிவதே! என்கிறார். அடியேன் உனபாதம் அகலகில்லேன் இறையுமே - [3]என் சொரூபத்தைப் பார்த்து என் நிலையைப் புத்திபண்ணாய்; [4]காணநிற்கச் செய்தே, அது வளர்வதற்குக் கண்ணை மாற வைக்கிலும் பொறுக்கமாட்டேன். (9)

## 661.

**அகலகில்லேன்** இறையும்என்று அலர்மேல் மங்கை உறைமார்பா!
**நிகரில் புகழாய்! உலகமூன் றுடையாய்!** என்னை ஆள்வானே!
**நிகரில் அமரர் முனிக்கணங்கள்** விரும்பும் திருவேங் கடத்தானே!
**புகல்ஒன் றில்லா** அடியேன்உன் னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

**பொ - ரை:**—சிறிது நேரமும் விட்டுப் பிரியேன் என்று பெரிய பிராட்டியார் நித்தியவாசம் செய்கின்ற திருமார்பினையுடையவனே! ஒப்பில்லாத புகழையுடையவனே! மூன்று உலகங்களையுமுடையவனே! என்னை ஆள்கின்றவனே! ஒப்பில்லாத நித்தியசூரிகளும் முனிவர்கள் கூட்டங்களும் விரும்புகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே! வேறுகதி ஒன்றும் இல்லாத அடியேன் உனது திருவடியிலே பொருந்தி அடைந்தேன் என்கிறார்.

**வி - கு:**—அலர்மேல் மங்கை இறையும் அகலகில்லேன் என்று உறைமார்பா எனக் க அலர்மேல் மங்கை - தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற பெரியபிராட்டியார். அமரர் - தேவர்களுமாம்.

---

1. "ந காலஃ தத்ரவை ப்ரபுஃ"

2. "நாற்றோளமுதே, திருவேங்கடத்தானே" என்பனவற்றைத் திருவுள்ளம்பற்றி, பாவம் அருளிச்செய்கிறார் 'போக்கியமும்' என்று தொடங்கி. போக்கியம் - இனியபொருள்.

3. "அடியேன்" என்று கூறி வைத்து, "உனபாதம் அகலகில்லேன்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'என் சொரூபத்தை' என்று தொடங்கி. 'என் சொரூபம்' என்றது, தமக்கு வேறுகதி இல்லாமையை என்றபடி. புத்திபண்ணாய் - கிருபைசெய்தருளவேண்டும்.

4. "இறையும்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'காணநிற்கச்செய்தே' என்று தொடங்கி.

ஈடு:—பத்தாம்பாட்டு. [1]தம்முடைய அபேக்ஷிதம் சடக்கெனச் சித்திக்கைக்காகப் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக்கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம்புகுகிறார். [2] மேலே ஒன்பது திருப்பாசுரங்களாலும் சரண்யனான சர்வேசுவரனுடைய சொரூபத்தைச் சொன்னார். இதில் தம்முடைய சொரூபம் சொல்லிச் சரணம்புகுகிறார். [3] மேலே, "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும் தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும், சேஷத்துவத்தையும், அவனுடைய சரண்யதைக்கு உறுப்பாகச் சொல்லிக்கொடு போந்தார்; இங்கு, அது தன்னையே பேற்றுக்கு உடலாகச் சொல்லிச் சரணம் புகுகிறார்.[4] இத்திருப்பாசுரத்தை, துவயத்தில் பதங்

1. "அலர்மேல்மங்கை உறைமார்பா" என்று பெரியபிராட்டியாருடைய சேர்த்தியைச் சொல்லிச் சரணம் புகுகிறதற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'தம்முடைய' என்று தொடங்கி. இதனால், மேலே "நோற்ற நோன்பு" என்பது முதலான நான்கு திருவாய்மொழிகளிலும் செய்த சரணாகதியைக் காட்டிலும் இதில் செய்கிற சரணாகதிக்குள்ள வாசியைத் தெரிவித்தபடி.

2. இத்திருவாய்மொழிக்கு உயிர்நிலையான பாசுரம் இது என்று கூறத் திருவுள்ளம்பற்றி, மேல் ஒன்பது திருப்பாசுரங்களிலும் கூறிய பொருளுக்கும், இத்திருப்பாசுரத்திற் கூறிய பொருளுக்கும் வாசி அருளிச்செய்கிறார் 'மேலே ஒன்பது' என்று தொடங்கி.

3. மேல் திருப்பாசுரங்களில் "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும் கூறியவர், மீண்டும் இத்திருப்பாசுரத்தில் "புகல் ஒன்றில்லா அடியேன்" என்று கூறுவது, கூறியது கூறல் ஆகாதோ? எனின், ஆகாமையைக் காட்டுகிறார் 'மேலே, "அடியேன்" என்றும்' என்று தொடங்கி. "அருவினையேன்" என்றது, கைம்முதல் இல்லாமையைக் கூறியது. ஆகிஞ்சந்யம்-கைம்முதல் இல்லாமை. 'சரண்யதைக்கு உறுப்பாக' என்றது, பற்றிலார் பற்றுகிற பற்றுக்கு உறுப்பாக என்றபடி. 'அது தன்னையே' என்றது, மேலே கூறிய ஆகிஞ்சந்ய சேஷத்வங்களாகிற அதிகார சொரூபந்தன்னையே என்றபடி. 'பேற்றுக்கு உடலாக' என்றது, பேற்றுக்குக் காரணமான பிரபத்திக்குப் பொருத்தமாக என்றபடி.

4. இத்திருப்பாசுரத்திற் சொல்லப்படுகிற சரணாகதியினுடைய சீர்மையை அருளிச்செய்கிறார் 'இத்திருப்பாசுரத்தை' என்று தொடங்கி. என்றது, "அலர்மேல்மங்கை" என்கையாலே, "ஸ்ரீ" என்ற சொல்லின் பொருளும், "அகலகில்லேன்" என்கையாலே, "மத்" என்ற சொல்லின் பொருளும், "உறைமார்பா" என்கையாலே, நித்திய யோகமும், "நிகரில் புகழாய்" என்றது முதல் "திருவேங்கடத்தானே" என்றது முடிய "நாராயண" என்ற சொல்லின் பொருளும், "புகல் ஒன்றில்லா அடியேன்" என்கையாலே, உத்தமனால் (உத்தமன்-தன்மையிடம்) போதருகின்ற அதிகாரியும், "உன்னடிக்கீழ்" என்கையாலே, "சரணௌ" என்ற சொல்லின்பொருளும், "அமர்ந்து புகுந்தேனே" என்கையாலே, "பிரபத்யே", என்ற சொல்லின்பொருளும் கூறியுள்ளதைத் தெரிவித்தபடி, "சரணம்" என்ற சொல்லின்பொருளைத்

களோடு ஒக்க யோஜித்துத் தலைக்கட்டக்கடவது. [1]அதில் அர்த்தத்தால் போதருகின்ற அஹம் என்ற சொல்லின் பொருளை இங்கு '**அடியேன்**' என்கிறது.

அகலகில்லேன் இறையும் என்று-[2]இது, அகன்று இருந்து சொல்லுகிற பாசுரமும் அன்று; எப்பொழுதும் கூடியிருக்கச் செய்தேயாயிற்று 'இறையும் அகலகில்லேன், இறையும் அகல கில்லேன்' என்று உரைப்பது. [3]நித்தியாநுபவம் பண்ணுவார்க்கு எல்லாம் பாசுரம் இதுவே. [4]நாட்டாருடைய அகலகில் லேன் போல் அன்று, இவளுடைய அகலகில்லேன்; அது கர்மங் காரணமாக வருவது: இது விஷயங் காரணமாக விளையுமது. அலர்மேல் மங்கை-[5]அவனை, "பிரிந்து கணநேரமும் ஜீவித்திருக்கமாட்டேன்" என்னப் பண்ணவல்ல இனிமையையும் பருவத்தையுமுடையவள். [6]பரிமளந்தான் ஒருவடிவு கொண்

---

தெரிவிக்கும் பதம் திருப்பாசுரத்தில் இல்லையே? எனின், "புகுந்தேன்" என்றதனால் "சரணம்" என்ற சொல் கோல்விழுக்காட்டாலே வருவது ஒன்றும் ஆதலின், தனியே கூறிற்றிலர் என்க. இப்பொருள் தன்னையே விவரணம் செய்கிறார் '"அகலகில்லேன் இறையும்" என்று' என்றது முதல் 'பதத்தோடே சேர்க்கடவனவாம்' என்றது முடிய.

1. அந்தத் துவயத்தைக் காட்டிலும் இதற்கு வாசி அருளிச்செய்கிறார் 'அதில்' என்று தொடங்கி. என்றது, துவயத்தில் உள்ள "பிரபத்யே" என்ற தன்மை ஒருமைவினையால் போதருகின்ற 'அகம்' என்ற சொல்லின் பொருளான 'அதிகாரி சொரூபத்தை' என்றபடி.

2. "அகலகில்லேன்" என்கைக்கு, இவள் அகலுவதற்குக் காரணம் உண்டோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இது, அகன்றிருந்து' என்று தொடங்கி. 'பாசுரமும்' என்ற உம்மை, யோக்யதையையும் தழுவுகிறது.

3. இங்ஙனம் கூறுவது, இவள் ஒருத்திக்குமேயோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நித்தியாநுபவம்' என்று தொடங்கி. 'நித்தியாநுபவம் பண்ணுவார்க்கெல்லாம்' என்றது, "நச அஹம் அபி ராகவ-இராகவனே! உன்னைப் பிரிந்தால் நானும் இல்லை" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

4. உலகத்தாரும் இப்படிச் சொல்லலாமே? அதற்கும் இதற்கும் வாசி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நாட்டாருடைய' என்று தொடங்கி.

5. "அலர்மேல் மங்கை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவனை' என்று தொடங்கி. "நஜீவேயம்க்ஷணமபி" என்பது, ஸ்ரீராமா. சுந். 66 : 10. ஸ்ரீராமபிரான் கூறியது.

6. "அலர்மேல்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பரிமளந்தான்' என்று தொடங்கி.

டாற்போலே இருக்கை. உறை மார்பா - [1]இதனால், நித்திய யோகம் சொல்லுகிறது. எனக்கு ஒருகாலம் பார்த்துச் சரணம் புகவேண்டும்படியாயோ இருக்கிறது? என்றது, இத்தலையில் குற்றங்களையும் ஈசுவரனுடைய சுவாதந்திரியத்தையும் நினைத்துப் பிற்காலிக்க வேண்டாதபடியாயிருக்கையைத் தெரிவித்தபடி.

[2]"ஒருநாள் **பட்டர், பிள்ளை அழகிய மணவாள அரையர்க்குத் துவயம்** அருளிச்செய்கைக்காக 'எல்லாரும் செல்லுங்கோள்' என்ன, **நஞ்சீயரும்** எழுந்து சென்றுபோய், 'நம்மை 'இராய்' என்றருளிச்செய்திலர்' என்று வெறுத்திருக்க, அப்பொழுதே 'சீயர் எங்குற்றார்?' என்று கேட்டருளித் தேடி அழைத்துக் கூட வைத்துக்கொண்டிருந்து துவயத்தை அருளிச்செய்கையில் அருளிச்செய்த வார்த்தை" என்று **சீயர்** அருளிச்செய்வர். "இந்த ஆத்மவஸ்து சேஷமாகில் அவன் சேஷியாகில் இங்குப் பிராட்டி சம்பந்தத்தால் செய்கிறது என்?" என்று கேட்க, "அது இருக்கிறபடி கேளீர்! இராவணனுக்கும் காகத்துக்கும் சம்பந்தமும் செயலும் ஒத்திருக்க, இனி, இராவணன் சாபத்தாலே கிட்டமாட்டாதே இருப்பது ஒன்று உண்டே அன்றோ; அங்ஙன் அன்றிக்கே, தாய்பக்கல் குற்றத்தில் கைதொடனாயிருக்கத் தலைகொண்டு தப்பினான் அன்றோ, அவள் சந்நிதி உண்டாகையாலே. அவள் கடக்க இருக்கையாலே இராவணன் தலை அறுப்புண்டான்."போக்கு அற்றுச் செயல் மாண்டு நின்ற நிலை அவனுக்கும் ஒக்கும் அன்றோ; இங்ஙனே இருக்கச்செய்தேயும் காரியகரமாயிற்றது இல்லை அன்றோ, அவனுக்குப் பிராட்டி சந்நிதி இல்லாமையாலே. இனித்தான், தாயும் தந்தையுமானால் தந்தையைப் போல் அன்றே, மக்கள்பக்கல் தாய் இருக்கும்படி; இவன் செய்த குறைகளைத் தான் காணக்கண் இட்டிருக்கை அன்றிக்கே, தந்தையிடத்தும் மறைத்துக் காட்டுவாள் ஒருத்தி அன்றோ. ஆகையால் அன்றோ துவயத்தில் பின்பகுதியில்

---

1. "உறைமார்பா" என்பதனை, நிகழ்காலவினைத்தொகையாகக் கொண்டு பொருள் அருளிச்செய்கிறார் 'இதனால்' என்று தொடங்கி. நித்திய யோகத்தால் பலித்தபொருளை அருளிச்செய்கிறார் 'எனக்கு' என்று தொடங்கி. காலம் பார்த்தற்குக் காரணத்தைச் சொல்லுதல் முன்னாக மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'இத்தலையில்' என்று தொடங்கி.

2. பிராட்டியினுடைய புருஷகாரம் அவசியம் வேண்டும் என்கைக்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'ஒருநாள் பட்டர்' என்று தொடங்கி.

அவனோடு ஒப்புச்சொல்லி, முன்பகுதியில், புருஷகாரமாகை யாகிற நீர்மையில் ஏற்றம் சொல்லுகிறது. தொட்டாரைத் தொட்டு [1]"குற்றம் செய்யாதார் யாவர்" என்னக்கடவ இவள், 'நம்மை ஒரு காரியத்தில் ஏவுவது காண்' என்று காலத்தை எதிர்நோக்கி இருக்குமவனைப் பெற்றால் விடாளே அன்றோ. தன்வார்த்தை கேளாதார்க்கும் கூட [2]"ஆடவர்களுள் ஏறு போன்றவரான இந்த இராமபிரான், இராச்சியத்தை விரும்புகிறவனுயிருக்கிற உன்னால் சிநேகிதராகச் செய்து கோடற்குத் தக்கவர்" என்னக்கடவ இவள், தன்முகம் பார்த்து வார்த்தை கேட்குமவனைப் பெற்றால் விடாளே அன்றோ. [3]"பலம் இல்லாத நான் இங்கு இராவணனுடைய வேலைக்காரிகளுடைய குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளுகிறேன்" என்றாளே அன்றோ. என்றது, திருவடி, 'அரக்கியர்களை என்கையில் காட்டித் தர வேணும்' என்ன, 'பிறர் கண்குழிவு காணமாட்டாத துர்ப்பலை காண் நான்' என்றாள் அன்றோ என்றபடி. ஈண்டு, "துர்ப்பலை" என்றது, இராவணன் பட்டானாகில், பெருமாளும் வெற்றியோடே நின்றாராகில், திருவடி வந்து முன்னே நின்றானாகில், வேறு ஒரு வலி இல்லாத தன்மை இல்லையாதலின், பிறர்நோவு காண மாட்டாமையாகிற துர்ப்பலத்தையே குறித்தபடி. துர்ப்பலம் - வலி இன்மை.

நிகரில் புகழாய் - [4]அதற்கு அடுத்த பதத்தின் அர்த்தம் சொல்லுகிறது. தாமரையாளாகிலும் சிதகு உரைக்குமேல் '**என்னடியார் அது செய்யார்**' என்னும் குணதிக்கியம் சொல்லுகிறது. உலகம் மூன்றுடையாய் - தான் குணங்கள் இல்லாதவனேயானாலும் விட ஒண்ணாத சம்பந்தம் சொல்லுகிறது. என்னை ஆள்வனே-சம்பந்தத்தைக் கிரயம் செலுத்திக் கொடுக்கும்படி. [5]மோக்ஷத்தளவும் செல்ல நடத்திக் கொடு

1. நகஸ்சிந் ந அபராத்யதி" என்பது, ஸ்ரீராமா. யுத். 116: 44.

2. "மித்ரம் ஔபயிகம் கர்த்தும்ராமஃ ஸ்தாநம் பரீப்ஸதா
வதம்ச அநிச்சதா கோரம் த்வயாஅஸௌ புருஷர்ஷபஃ"
என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 19.

3. "தாஸீநாம் ராவணஸ்ய அஹம் மர்ஷயாமி இஹ துர்பலா"
என்பது, ஸ்ரீராமா. யுத். 116: 40.

4. 'அதற்கு அடுத்த பதம்' என்றது, துவயத்தில் "ஸ்ரீமத்" என்பதற்கு அடுத்துள்ள "நாராயண" பதத்தை. 'தாமரையாளாகிலும்' என்றது, பெரியாழ்வார் திருமொழி. 4. 9: 2.

5. ஆளுகைக்கு முடிவு ஏது? என்ன, 'மோக்ஷத்தளவும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

போந்து [1]நடுவுள்ள அபேக்ஷிதத்தைக் கொடுக்கின்றவனுதல் அன்ருே ஆளுகின்றவனுவது. நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே - [2]அப் பதத்தில் முடிகிற சௌலப்யம் சொல்லுகிறது. புகல் ஒன்று இல்லா அடியேன் - [3] ஆகிஞ்சந்யமும் சொரூபமும் சரணுகதிக்குப் பரிகரங்களே அன்ருே. உன்னடிக்கீழ் - "சரணௌ" என்ற பதத்தின் பொருள். அமர்ந்து - நடு ஓர் [4]இடையீடுஇன்றிக்கே இருக்கை. புகுந்தேனே - [5] இந்த உறுதியும் உபாயபாவத்தில் சேராமையாலும், [6]செய்ந்நன்றியறிதல் சொரூபமாகையாலும், பற்றுதலும் அறிவினைப் பற்றிய செயலாகையாலும் இவைஎல்லாம் அதிகாரிக்கு விசேஷணங்களாகச் சொல்லப்பட்டன அன்ருே. [7]இவையெல்லாம் துவயத்தில் முன்பாகத்தில் முடிகிற பதத்தோடே சேரக்கடவனவாம்.

---

1. 'நடுவுள்ள அபேக்ஷிதத்தைக் கொடுக்கின்றவனுதல்' என்றது, துவேஷம் இன்மை,எதிர்முகமாதல் முதலானவற்றை உண்டாக்குதலைக் குறித்தபடி.

2. அப்பதத்தில் - நாராயணபதத்தில். 'முடிகிற சௌலப்யம்' என்றது, "நிகரில்புகழாய்" என்பது போன்றவைகளாற் கூறிய வாத்சல்யம் ஸ்வாமித்வம் சௌசீல்யம் என்னும் இவற்றுக்குப் பின் "திருவேங்கடத்தானே" என்று சொல்லுகையாலே முடிகிற சௌலப்யம் என்றபடி.

3. ஆகிஞ்சந்யமும் சொரூபமும் இங்கே சொல்லுவது எற்றிற்கு? என்ன, 'ஆகிஞ்சந்யமும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். சொரூபமாவது, சேஷசேஷி பாவ ஞான காரியமான அநந்யகதித்வம். அநந்யகதித்வம் - வேறுபுகல் இல்லாத தன்மை.

4. 'இடையீடு இன்றிக்கே' என்றது, சரணுகதியில் உபாயபுத்தி இன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி.

5. இது உபாயம் அன்ருகில், இது எதிலே சேரும்? என்ன, 'அவனே உபாயம்' என்று அநுசந்திக்கிற இவனுக்கு உபகாரஸ்மிருதிபோன்று அதிகாரி விசேஷணத்திலே சேரும் என்கிருர் 'இந்த உறுதியும்' என்று தொடங்கி.

6. உபாயத்தில் உபகார ஸ்மிருதிவேண்டுமே அன்ருே, ஆதலால், அது தான் உபாயமானுலோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'செய்ந்நன்றியறிதல்' என்று தொடங்கி.

7. "புகல் ஒன்றில்லா அடியேன்" என்றும், "அமர்ந்து" என்றும் சொல்லுகிற இவையெல்லாம், சொற்கள் உருவத்தில் துவயத்தில் இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இவையெல்லாம்' என்று தொடங்கி. என்றது, "பிரபத்யே" என்ற வினையில் மறைந்து கிடக்கின்றனவாதலின் பொருளாற்றலால் போதருவனவாம் என்றபடி.

[1]அகலகில்லேன்........புகுந்தேன் - இதில் உபாயத்தன்மை சொல்லச்செய்தே, உபேயவிஷயமும் சூசகமுமாயிருக்கிறது. [2]அதாகிறபடி எங்ஙனே? என்னில், [3]இருவருமான சேர்த்தியிலே அன்றோ ஒருவன் அடிமைசெய்வது; அச் சேர்த்தி தன்னையே அன்றோ உபாயமாகப் பற்றுகிறதும். [4]இத்தால் சொல்லிற்றாகிறது, நித்தியப்பிராப்யத்வம் அன்றோ. [5]நித்யாபூர்வ விஷயமன்றோ நித்தியப்பிராப்யமாகவல்லது. அகலகில்லேன் இறையும் என்று-[6]இது அகன்று இருந்து சொல்லுகிற வார்த்தை அன்று. தனக்கு அகலுகைக்குக் காரணம் இன்றிக்கே இருக்கச்செய்தேயும், அங்குத்தை இனிமையை

1. இத்திருப்பாசுரத்திற்கு, இதுகாறும் சுருக்கமாக அருளிச்செய்த பொருளை விரித்து அருளிச்செய்வதற்காகவும், பின்னையும் சில அர்த்த விசேடங்களை அருளிச்செய்வதற்காகவும், இன்னமும் ஒருயோஜனை அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றித் தொடங்குகிறார் "அகலகில்லேன்...புகுந்தேன்" என்று. துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருளை, இத்திருப்பாசுரத்தில் வெளிப்படையாகச் சொல்லாநிற்கச்செய்தே, துவயத்தின் பின்வாக்கியத்தில் கூறப்பட்டுள்ள பொருளுக்கும் சூசகமாயிருக்கிறது இத்திருப்பாசுரம் என்கிறார் 'இதில்' என்று தொடங்கி. இதில் - இத்திருப்பாசுரத்தில். என்றது, துவயத்தின் பின்வாக்கியத்தில் சொல்லப்படுகின்ற உபேய விஷயத்துக்கும் சூசகமாக இருக்கிறது என்றபடி. இருவருமான சேர்த்தியே உபேயம் என்று கருத்து.

2. அதனைப் பொருந்தும் வகையால் சாதிக்கைக்காக, அது விஷயமான சங்கையை அநுவதிக்கிறார் 'அதாகிறபடி எங்ஙனே? என்னில்,' என்று.

3. பொருந்தும் வகையை அருளிச்செய்கிறார் 'இருவருமான' என்று தொடங்கி.

4. "அகலகில்லேன் இறையும்" என்றதனால் சித்திக்கிற அர்த்த விசேடத்தை அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்று தொடங்கி. இத்தால் - பிராட்டி "அகலகில்லேன் இறையும்" என்று வசிக்கிற இதனால். நித்தியப்பிராப்யத்வம் - எப்பொழுதும் அடையத் தக்கதாக உள்ள தன்மை.

5. "இறையும் அகலகில்லேன்" என்ற இதனால், நித்தியப்பிராப்யத்வம் தோன்றுகிறபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நித்யாபூர்வவிஷயம்' என்று தொடங்கி. நித்தியாநுபவம் பண்ணாநிற்கச்செய்தே "இறையும் அகலகில்லேன்" என்கையாலே, இவ்விஷயம் நித்ய அபூர்வம் என்று தோற்றுகிறது; நித்யாபூர்வம் ஆகையாலே, நித்தியப் பிராப்யம் என்றபடி. நித்ய அபூர்வ விஷயம் - எப்பொழுதும் புதிதாக உள்ள விஷயம்.

"எப்பொழுதும் நாள்திங்கள் ஆண்டு ஊழி ஊழிதொறும்
அப்பொழுதைக்கு அப்பொழுது என்னாராவமுதமே"

என்ற தமிழ்மறை அநுசந்தேயம். (2. 5 : 4.)

6. முன்னைய யோஜனையில், இனிமையின் மிகுதியினாலே "இறையும் அகலகில்லேன்" என்கிறாள் என்று சுருங்க அருளிச்செய்ததனை, இந்த யோஜனையில் தெளிவாக அருளிச்செய்கிறார் 'இது அகன்று இருந்து' என்று தொடங்கி.

நினைத்து, கணநேரமும் நான் அகலுகைக்குச் சக்தியுடையவள் ஆகிறிலேன் என்னும். [1]"வேறாகாதவள்" என்றும், "பிரியாதவள்" என்றும் சொல்லாநிற்கச்செய்தே சொல்லுகிற வார்த்தை அன்றோ இது! கணநேரமும் பிரியச் சக்தியுடையேனல்லேன் என்று. அலர்மேல்மங்கை - இங்ஙன் சொல்லுகிறவள் ஆர்? என்னில், தன்வடிவழகாலும் பருவத்தாலும் அவன் தனக்குங்கூட உத்தேசியமாயிருக்கிறவள். என்றது, [2]அவனை, "பிரியில் கணநேரமும் பிழைத்திருக்கமாட்டேன்" என்னப்பண்ணுமவள் என்றபடி.[3]உலகத்தார் அகலகில்லேன் என்பது போன்றதன்றே இவளுடைய அகலகில்லேன்; [4]அது கர்மங் காரணமாக வரும் அகலுதலேயன்றோ;[5]இவளுக்கு அது இல்லாமையாலும் அவன் தான் மேல்விழும் சுபாவன் ஆகையாலும், அவனால் வரும் பிரிவும் இல்லை; தன்னால் வரும் பிரிவும் இல்லை; ஆனால், இந்த வார்த்தை சொல்லுவதற்குக் காரணம் என்? என்னில், அவனுகையாலே வந்தது; [6]உலகத்தாருடைய பிரார்த்தனை கர்மம் அடியாக வருமது; இவளுடைய பிரார்த்தனை விஷயத்திற்குக் கட்டுப்பட்டதாக விளையுமது.

---

1. இனிமையை நினைத்து "அகலகில்லேன் இறையும்" என்கிருள் என்று கூறுவது என்? அகன்றிருந்து சொல்லுகிற வார்த்தை என்று கூறிஞலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வேறாகாதவள்' என்று தொடங்கி. "அநந்யா" என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 15. "அநபாயிநீ" என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 8: 17.

2. அவன்தனக்குங்கூட உத்தேசியமாயிருக்கிறவள் என்றதனால் பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார் 'அவனை' என்று தொடங்கி. "நஜீவேயம் க்ஷணமபி" என்பது, ஸ்ரீராமா. சுந். 66: 10.

3. "வேறு ஆகாதவள்" என்று தொடங்கும் வாக்கியத்தால், அகன்று இருந்து சொல்லுகிற வார்த்தை அன்று என்பதனைப் பொருந்த மெய்ப்பித்து நின்றார் மேல்; இனி, 'அகலுகைக்குச் சம்பாவனை இன்றிக்கே இருக்கச்செய்தேயும்' என்றதனை பொருந்தக் காட்டுவதற்குத் திருவுள்ளம்பற்றி, உலகத்தாரைக் காட்டிலும் இவளுக்கு உண்டான வேறுபாட்டினை அருளிச்செய்கிறார் 'உலகத்தார்' என்று தொடங்கி.

4. அந்த வேறுபாட்டினை அருளிச்செய்கிறார் 'அது கர்மங் காரணமாக' என்று தொடங்கி.

5. இவளுக்கும் தன் கர்மத்தாலேயாதல், பகவானுடைய சுவாதந்திரியத்தாலேயாதல் பிரிவு உண்டானலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவளுக்கு' என்று தொடங்கி. 'அவனுகையாலே' என்றது அவன் அமுதிலும் ஆற்ற இனியன் ஆகையாலே வந்தது என்றபடி.

6. மேலே அருளிச்செய்தவதனை விவரணம் செய்கிறார் 'உலகத்தாருடைய' என்று தொடங்கி.

உறை மார்பா - [1]முதற்பதத்தில் மதுப்பால் சொல்லுகிற நித்திய யோகத்தைச் சொல்லுகின்றது ; [2]இதுவும் இங்ஙனே பலிக்கக் கண்டோமித்தனை.[3] இச் சேர்த்திக்குப் பயன், அவனுடைய சுவாதந்திரியத்தையாதல், தான் பிறவிப்பெருங்கடலில் பிறந்து உழன்று திரிந்து வருதலையாதல் நினைத்துக் கைவாங்க வேண்டாதபடியாயிருக்கை. என்றது, அவனுடைய முற்றறிவினையும் தன்னுடைய குற்றமுடைமையையும் நினைத்து அஞ்ச வேண்டாதபடியாயிருக்கையைத் தெரிவித்தபடி. [4]அதாவது, இவனுடைய அபாரதகாலம் பார்த்து இருந்து எண்ணுவதற்கு அவனுக்குக் காலம்இல்லை: அவள் கூட இருக்கையாலே என்றபடி. [5]பிராட்டிபக்கல் அபராதம், காகத்துக்கும் இராவணனுக்கும் ஒத்திருக்கச்செய்தேயும், இவள் சந்நிதியாலே தலைபெற்றது காகம்; அத்தனை அபராதம் இன்றியிலே இருக்க, இராவணன் தலை அறுப்புண்டான் அன்றோ, இவள் சந்நிதி இல்லாமையாலே. [6]இத்தனை உண்டே அன்றோ இவள் அருகில் இருப்

---

1. "அலர்மேல் மங்கை" என்பது, துவயத்தில் உள்ள "ஸ்ரீ" என்ற சொல்லின் பொருளைச் சொல்லுகிறது. "உறைமார்பா" என்பது, துவயத்திலே உள்ள எப்பதத்தின் பொருளைச் சொல்லுகிறது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முதற்பதத்தில்' என்று தொடங்கி. 'மதுப்பால்' என்றது, "ஸ்ரீமந்" என்றதிலேயுள்ள "மத்" என்ற இடைச் சொல்லால் என்றபடி.

2. இந்த நித்யயோகத்தைச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இதுவும்' என்று தொடங்கி. இதுவும் - காலம் பார்க்கவேண்டாதபடியான புருஷகாரத்தினுடைய நித்யயோகமும். புருஷகாரமாயிருக்கிறவளுடைய சேர்த்தி நம்முடைய காரியசித்திக்குக் காரணமாயினாற்போன்று, இவளுடைய நித்யயோகமும் நம்முடைய காரியசித்திக்குக் காரணமாகக் கண்டோம் என்பார் 'இதுவும்' என்று உம்மை கொடுத்து அருளிச்செய்கிறார்.

3. மேலே கூறியதனை விரித்து அருளிச்செய்கிறார் 'இச்சேர்த்திக்கு' என்று தொடங்கி.

4. அவன் முற்றறிவினை நினைத்தால் அஞ்சவேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அதாவது' என்று தொடங்கி.

5. இவள் புருஷகாரம் அவசியம் வேண்டும் என்பதற்காக, இவள் அண்மையிலிருப்பதற்கும், அண்மையில் இராமைக்குமுள்ள வேறுபாட்டினை அருளிச்செய்கிறார் 'பிராட்டிபக்கல்' என்று தொடங்கி.

6. மேலே கூறிய அர்த்தத்தைத் தெளிவாக்குகிறார் 'இத்தனை உண்டே அன்றோ' என்று தொடங்கி.

பதற்கும் அருகில் இராமைக்கும் வாசி. [1]தமப்பன் பகையாக, தாய்அருகில்குழந்தையைஅழியச்செய்யமாட்டாமையும்ஒன்று உண்டே. [2]அவன்செய்த குற்றத்திற்குப் பிரஹ்மாஸ்திரத்தை விட்டு, அது தொடர்ந்து கொண்டு திரிந்தவாறே புகல் அற்று விழ, இவளை நோக்கி, பிரஹ்மாஸ்திரத்திற்கு ஒரு கண்ணழிவு சொல்லிவிட்டான் அத்தனை அன்றோ. [3]"அந்தக் காகாசுரன் தமப்பனாலும் முனிவர்களாலும் தேவர்களாலும் விடப்பட்டவனாய் மூன்று உலகங்களிலும் நன்றாகத் திரிந்து **அந்தப் பெருமாளையே சரணமாக அடைந்தான்**" என்றதுவும், [4]"நான் வணங்கேன்" என்றதுவும் இரண்டும் பயன் அற்றவை. அது என்?என்னில்,காகத்துக்கும் போகிறபோது மனத்தில்[5]நினைவு அதுவே அன்றோ. [6]அங்ஙன் அன்றாகில், "தன் இருப்பிடத்தை

---

1. அநுஷ்டானம் காட்டி, அது பொருந்துமாற்றையும் காட்டுகிறார் 'தமப்பன்' என்று தொடங்கி. இந்த வாக்கியத்தால், முன்னைய யோஜனையில், 'இனித்தான் மாதாவும்' என்று தொடங்கி அருளிச்செய்த வாக்கியத்தின் பொருளைத் தெளிவாக்குகிறார்.

2. இவள் அண்மையில் இருக்கச்செய்தேயும் காகத்திற்கு ஒரு கண் போயிற்றே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன்செய்த' என்று தொடங்கி. 'ஒரு கண்ணழிவு' என்றது, சிலேடை.

கம்பராமாயணம் சூடாமணிப் படலம் 77-முதல் 81-முடிய உள்ள செய்யுட்களை இங்குக் காண்க.

"காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஒருயிர் கண்டனம் யாம்"

என்பது, திருக்கோவையார், செய். 71.

3. இவள் அண்மையில் இருத்தலையும், இராமையையும் அவன் காத்தலுக்கும், காவாமைக்கும் காரணங்களாகக் கூறுதல் என்? காகம் சரணம்புகுகையாலே காப்பாற்றினன், இராவணன் சரணம்புகாமையாலே காத்திலன் என்று கொண்டாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்தக் காகாசுரன்' என்று தொடங்கி.

"ஸபித்ரா ச பரித்யக்தஃ ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபிஃ
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம்கதஃ"

என்பது, ஸ்ரீராமா. சுந். 38: 33.

4. "த்விதா பஜ்யேயம் அபி ஏவம் நநமேயம்து கஸ்யசித்
ஏஷ மே ஸஹஜோ தோஷஃ ஸ்வபாவஃ துரதிக்ரமஃ"

என்பது, ஸ்ரீராமா. யுத். 36: 11.

5. 'நினைவு அதுவே அன்றோ' என்றது, "நநமேயம் - நான் வணங்கேன்" என்றதே அன்றோ என்றபடி.

6. அதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அங்ஙன் அன்றாகில்' என்று தொடங்கி. "காகோ ஜகாம ஸ்வகமாலயம்" என்பது, ஸ்ரீராமா. சுந். 38: 32.

அடைந்தான்” என்கிறபடியே, போகப் பாரானே; [1]செயல் மாட்சியாலே விழுந்ததித்தனை அன்றோ. இது இராவண னுக்கும் உண்டாயிருக்கச்செய்தே காரியமாயிற்றது இல்லை அன்றோ, இவள் அருகில் இராமையாலே. [2]மேலே கூறிய அர்த்தவிசேடங்கள் எல்லாம் துவயத்தில் முதற்பதத்தோடே அற்றது.

இனி, 'நிகரில்' என்று தொடங்கி 'திருவேங்கடத்தானே' என்னுமளவும் வர, துவயத்தின் [3]அடுத்த பதத்தின் அர்த்தம் சொல்லுகிறது: நிகரில் புகழாய்-இப்படி இருக்கிறவள்தானே சிதகு உரைக்கும்அன்றும் அவளுடனே மன்றாடும் குணமிகுதி யின் விசேடம் சொல்லுகிறது. என்றது, [4]“என்னடியார் அது செய்யார்' என்று என்னைப் பற்றினர்க்கு அது இல்லை காண் என்கிறது என்றபடி. 'இல்லை,நான் இப்போது இன்ன குற்றம் செய்யக்கண்டேன்' என்று காட்டிக் கொடுத்தாலும், 'ஆனால் என்? தர்மம் அதர்மம் பரலோகம் என்னும் இவற்றை இல்லை என்று செய்கிறார்களோ? தங்களை அறியாதே நிகழும் குற்றங் கட்கு நாம் உளோம் என்றன்றோ செய்கிறது' என்கை. இவ ளுடைய உயர்வுக்கு அடி சொல்லும்போது அவனைப் பற்றிச் சொல்லலாம்; அவனுடைய உயர்வுக்கு ஒன்று தேடிச் சொல்ல லாவது இல்லையாதலின், 'நிகரில்' என்கிறது. [5]இதுவோ

1. பிற்பாடானாலும் சரணம் புகுந்தானே? என்ன, 'செயல் மாட்சி யாலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. இந்த அர்த்த விசேடங்கள்எல்லாம் துவயத்திலே எந்தப் பதத்திலே சொல்லப்பட்டன? என்ன, 'மேலே கூறிய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'அடுத்தபதம்' என்றது, நாராயணபதத்தை. 'இப்படி இருக்கிற வள்தானே' என்றது, “நகஶ்சித் நஅபராத்யதி” என்னுமவள்தானே என்ற படி. பாசுரத்திலுள்ள “செய்தாரேல் நன்று செய்தார்” என்ற வாக்கியத்திற் குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இல்லை, நான்' என்று தொடங்கி.

4. பெரியாழ்வார் திருமொழி, 4. 9: 2.

5. சர்வேசுவரனுடைய உயர்விற்குக் காரணம் பிராட்டி என்றும், பிராட்டியினுடைய உயர்வு இயல்பாகவே உள்ளது என்றும் சொல்லப்பட்டிருக் கிறதே? என்ன, அது காதல் காரணமாக வருவது; இது உண்மை நிலை என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதுவோதான்' என்று தொடங்கி. 'இதுவோதான்' என்றது, பிராட்டியின் உயர்வு ஈசுவர அதீனமாய், ஈசுவர னுடைய உயர்வு அவன்தன் அதீனமாகவேஇருக்கும் என்னும் இதுவோதான் என்றபடி.

தான் பொருளின் தன்மை இருக்கும்படி! [1] இத்தால் சொல்லிற்ருயிற்று, இவள் அவனுடைய சுவாதந்திரியத்தை நினைத்து 'இவற்றின்பக்கல் என்னை விலைகிறதோ?' என்றிருக்கையும், அவன் இவளுடைய மிருதுத்தன்மையையும் இளமையையும் நினைத்து 'இவற்றின் பக்கல் எவ்வளவாய் இருக்கிருளோ?' என்றிருக்கையும். ஆக, ஒருவரை ஒருவர் அதிசங்கைபண்ணி நோக்கும் இருவர் நிழலையும் பற்றி அன்றே உபயவிபூதியும் கிடக்கிறது என்றபடி.

உலகம்மூன்றுடையாய்-[2] தான் குணங்கள் இல்லாதவனுயினும் விடஒண்ணுத சம்பந்தத்தைச் சொல்லுகிறது. "சிதகுரைக்குமேல்" என்ற இடத்தில், அவளுக்குச் சொரூபத்திற்குத் தகுதியான குணங்கள் இல்லாதகாலத்திலே அன்றே அவள் அது சொல்லுவது; அப்படியே இவனுக்கும் இக்குணங்கள் இன்றிக்கே இருந்தாலும் விட ஒண்ணுத குடல்தொடக்கைச் சொல்லுகிறது. [3] அவன் 'அல்லேன்' என்று கைவிடுமன்றும் செங்கற்சீரைகட்டி வளைக்கலாம்படி அன்றே இச்சம்பந்தம் இருப்பது; இனி, இவன்தான் யாதாயினும் ஒரு காலத்து வணங்குதலைச் செய்து பின்பு கைகழியப் போகப் பார்க்கிலும், காலிலே விலங்கைத் தைத்துக் காரியம் கொள்ளலாம்படியான உரிமை சொல்லுகிறது மேல்: என்னை ஆள்

1. "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை யுறைமார்பா! நிகரில் புகழாய்!" என்றதனுல் பலித்த அர்த்த விசேடங்களை அருளிச்செய்கிருர் 'இத்தால்' என்று தொடங்கி.

2. மேலே கூறிய குணயோகத்தைக் காட்டிலும் சம்பந்தத்தால் உண்டான உறைப்பை அருளிச்செய்கிருர் 'தான்குணங்கள்' என்று தொடங்கி. 'விடஒண்ணுத' என்றதனை விவரணம் செய்கிருர் 'சிதகுரைக்குமேல்' என்று தொடங்கி. 'சொரூபத்திற்குத் தகுதியான குணங்கள்' என்றது, ஈசுவரனேடு ஆத்மாவைச் சேர்க்கின்ற சொரூபத்திற்குத் தகுதியான கிருபை முதலான குணங்களை. 'அப்படியே' என்றது, கிருத்வாசிந்தைசெய்து சொன்னுற்போலே என்றபடி. கிருத்வாசிந்தை செய்தலாவது, சம்பாவிதம் இல்லாததனை ஆரோபித்து நினைத்தல். 'குணங்கள்' என்றதனுல், "நிகரில் புகழாய்" என்பதற்கு, வாத்சல்ய குணத்தை மாத்திரம் கொள்ளாமல் குணசமூகத்தையே பொருளாகக் கொள்க.

3. இந்தச் சம்பந்தத்தைப் பார்த்தால், இருவராலும் விடஒண்ணுது என்கிருர் 'அவன் அல்லேன்' என்று தொடங்கி. 'செற்கற்சீரை கட்டி வளைக்கலாம்படி' என்றது, காஷாயவஸ்திரத்தை உடுத்து இரப்பதற்குப் புகுகிறேன் என்று கூறி வளைக்கலாம்படி என்றபடி.

வானே - [1]அடிமையைக் கிரயம் செலுத்திக் கொடிக்கும்படி. என்றது, [2]'அடிமையின் பொதுமையைப் பற்றிச் சொல்லுகிறீ ராகில் அவ்வளவே அன்றோ உமக்கும்' என்ன ஒண்ணுதபடி என்னை மயர்வற மதிநலம் அருளி இவ்வளவும் வர நிறுத்திப் பொகடப்போமோ? என்கிறார் என்றபடி.

நிகர் இல் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே-[3]அங்குள்ளாரும் விரும்பி வந்து அடிமைசெய்கிற தும் இங்கே அன்றோ.[4]"வைகுந்தத்தமரரும்முனிவரும்"என்று இரண்டு கோடியாயன்றோ இருப்பது, குணநிஷ்டரும் கைங் கரிய நிஷ்டரும். திருவேங்கடத்தானே - [5]அதற்கு முடிந்த பொருள், சௌலப்யம் என்னக்கடவதன்றோ;[6]குணயோகமும், சேஷித்வமும், விசேஷகடாக்ஷமும், சௌலப்யமும் இவை இத்தனையும் உண்டு அன்றோ இப்பதத்துக்கு. இவன் விரும்

---

1. மேலே கூறிய சம்பந்தத்தை அநுஷ்டான பரியந்தமாக நடத்தும் படி சொல்லுகிறது என்று "என்னை ஆள்வானே" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அடிமையை' என்று தொடங்கி. கிரயம்செலுத்திக் கொடுக்கையாவது, அநுஷ்டான பரியந்தமாக நடத்துகை.

2. சம்பந்தத்தை அநுஷ்டான பரியந்தமாக நடத்துகின்றமையைச் சொல்லுகிறாராகில், உலகம் மூன்றையும் ஆள்வானே என்று பொதுமையிற் சொல்ல அமைந்திருக்க, அதுசெய்யாமல், "என்னை ஆள்வானே" என்ற தற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அடிமையின் பொதுமையை' என்று தொடங்கி.

3. ஆயின், பரமபதத்திற்கு வாரும் என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'அங்குள்ளாரும்' என்று தொடங்கி.

4. "அமரர்" என்ன அமையாதோ? "முனிவர்" என்று விசேடிக் கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வைகுந்தத்தமரரும்' என்று தொடங்கி. இது, திருவாய். 10. 9 : 9.

5. "திருவேங்கடத்தானே" என்றது, நாராயண பதத்தின் அர்த்த மானபடி எங்ஙனே? என்ன, 'அதற்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதற்கு - நாராயணபதத்துக்கு.

6. 'முடிந்தபொருள்' என்கைக்கு, முதலில் கூறப்படும் பொருள்கள் யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'குணயோகமும்' என்று தொடங்கி. குணயோகம் - வாத்சல்யம். விசேஷகடாக்ஷம் - சௌசீல்யம். வேற் றுமைத்தொகையாலே, ஸ்வாமித்வமும், அன்மொழித்தொகையாலே வாத் சல்யம், சௌசீல்யம், சௌலப்யம் ஆகிய குணங்களும் சொல்லப்படுகின்றன. 'நாராயண' என்னும்தொகை, வேற்றுமைத் தொகையாகவும், அன்மொழித் தொகையாகவும் விரிக்கப்படும்.

பியவை அனைத்தையும்[1] இவனுக்குக் கொடுப்பதற்காக, அந்தராத்மாவாக நிலைபெற்றிருக்கிறான் என்றே அன்றோ நாராயணபதத்திற் சொல்லுகிறது; அந்தச் சௌலப்யம், இங்கு எப்பொழுதும் நிலைபெற்று இருப்பதாலே திருவேங்கடமுடையான் பக்கலிலே கிடக்குமன்றோ.[2] இந்தச் சௌலப்யம் உபாயமாகிற படி எங்ஙனே? என்னில், [3]"மாமேகம் - என்னையே" என்ற இடத்தில், சாரதியாயிருக்கும் வேடத்தைஅன்றோ காட்டுகிறது. [4]இன்னமும் அவ்வளவு அன்றே இங்கு: அதற்கு முன்பும் பின்பும் இல்லை அன்றோ அந்தச் சௌலப்யந்தான்; எப்பொழுதும் நிலைபெற்று இருக்கிற இடம் அன்றோ இவ்விடம். அங்குத்தானும் [5]"பார்த்தனே! என்னிடத்தில் வைத்த மனத்தினையுடையையாய்" என்று ஒரு தேவை இட்டன்றோ சொல்லிற்று; அதுவும் இல்லை அன்றோ இங்கு.

இனித் தம் படி சொல்லுகிறார்: புகல் ஒன்று இல்லா அடியேன் - [6]மேலே, "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும் தம்முடைய சேஷத்வத்தையும், ஆகிஞ்சந்யத்

1. நாராயண என்னும் பதத்தின்பொருள் அந்தர்யாமியின் சௌலப்யமாக இருக்க, அர்ச்சாவதார சௌலப்யத்தை அருளிச்செய்வான் என்? என்ன, 'இவனுக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, எப்பொழுதும் அண்மையில் இருத்தல் இரண்டு இடங்களிலும் ஒத்திருக்கையாலே சொல்லுகிறது என்றபடி.

2. இந்தச் சௌலப்ய குணமானது, பிரபத்தி செய்வதற்கு உபயோகமாக இருப்பது என்னுமிடத்தைக் காட்டுவதற்காக, அதனால் உண்டாகும் சங்கையை அநுவதிக்கிறார் 'இந்தச் சௌலப்யம்' என்று தொடங்கி. 'உபாயமாகிறபடி' என்றது, உபாயத்துக்கு உபயோகமாகிறபடி என்றபடி.

3. சௌலப்யம் பிரபத்தி செய்வதற்கு, உபயோகமாக இருக்கும் என்னுமிடத்துக்கு உதாஹரணம் காட்டுகிறார் 'மாமேகம்' என்று தொடங்கி. என்றது, சாரதியாக இருக்கும் வேடத்தைக் காட்டுகையாலே, சௌலப்யத்தோடு கூடியவன் உபாயமாகவேண்டும் என்றபடி.

4. சாரதி வேடத்தின் சௌலப்யத்தைக் காட்டிலும், அர்ச்சாவதார சௌலப்யத்துக்கு இரண்டு வகையாக ஏற்றம் அருளிச்செய்கிறார் 'இன்னமும்' என்று தொடங்கி ஐந்து வாக்கியங்களாலே. அதற்கு - அக்காலத்துக்கு.

5. "மயி ஆஸக்தமநா: பார்த்த" என்பது, ஸ்ரீகீதை. 7: தேவை - நிர்ப்பந்தம்.

6. மேலேயும், ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்களை அருளிச்செய்து வைத்து, மீளவும் அருளிச்செய்வான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேலே' என்று தொடங்கி. என்றது, மேலே சரண்யதைக்கு உறுப்பாக அருளிச்செய்தார். இங்கே, சரணாகதிக்கு அங்கமாக அருளிச்செய்கிறார் என்றபடி. சொரூபம் - வேறுகதியில்லாமை.

தையும் உருவச் சொல்லிக் கொடு போந்தார்; இனித்தான், வெறுமையும், சொரூபமும், இரண்டும் சரணுகதிக்குப் பரிகரங்கள் ஆதலின், அவற்றை இங்கேயும் அருளிச்செய்கிறார்; அவற்றைச் சரணுகதிக்கு அங்கமாகச் சொல்லவேணுமன்றே. அவற்றை [1]இங்கே சொல்ல வேண்டுகிறது என்? என்னில், அவனுக்கு உபாயத்தன்மை சொரூபமானதைப் போன்று, இவனுக்கும் இந்த நினைவு சொரூபமாகையாலே. [2]இவனுக்கு இது இல்லாதபோது சர்வமுக்தி பிரசங்கமாமே. அடியேன் - [3]துவயத்தில் "பிரபத்யே" என்ற சொல்லில், பொருளாலே கிடைத்த 'அஹம்' என்னும் சொல்லை, இங்கு 'அடியேன்' என்ற சொல்லாலே சொன்னதுவே வாசி. உன்னடிக்கீழ் - "சரணௌ" என்றது தன்னையே சொல்லுகிறது. [4]"அவர், தமையனுருடைய திருவடிகளை" என்றாற்போலே சொல்லக்கடவதன்றே. அமர்ந்து புகுந்தேனே - [5]"முமுக்ஷுவான நான் சரணம் அடைகிறேன்" என்னுமாறுபோலே. [6]அவனுக்கு ஒரு துணை வேண்

---

1. 'இங்கே சொல்ல வேண்டுகிறது என்? என்னில்' என்றதற்குக் கருத்து, பிரயாஜா, அநுயாஜா என்கிற கர்மங்களை அங்கமாகவுடைய ஜோதிஷ்டோமம் முதலிய கர்மங்களைப் போலே, இவை அங்கமானால் பிரபத்திக்குச் சாதனமாக இருக்கும் தன்மை வாராதோ? என்னில் என்பது. அங்கங்களோடு கூடி இருப்பவை எவை எவை உளவோ அவையெல்லாம் சாதனமாம் என்று பேசப்படுகிற நியதியும் இங்கு நினைவுகூர்தல் தகும். 'இந்த நினைவு' என்றது, ஆகிஞ்சந்ய அநந்யகதித்வ நினைவினை.

2. அவனுக்கு உபாய பாவம் சொரூபமானால் இவன் பிரபத்தி செய்வது எற்றிற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவனுக்கு' என்று தொடங்கி. 'சர்வமுக்தி பிரசங்கமாம்' என்றது, எல்லாரும் மோக்ஷத்திற்கு உரியவர்கள் ஆவர் என்றபடி.

3. "அடியேன்" என்றதற்குத் தக்க சொல், துவயத்தில் இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'துவயத்தில்' என்று தொடங்கி.

4. திருவடிகளையே பற்றவேண்டும் என்ற நிர்ப்பந்தம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவர், தமையனுருடைய' என்று தொடங்கி. "ஸ:ப்ராது:சரணௌ" என்பது, ஸ்ரீராமா. அயோத். 31 : 2.

திருக்குறள் கடவுள்வாழ்த்தில் 'திருவடிகளைப் பற்றினுர்' என்ற பொருளிலேயே அப்பெரியார் ஏழு குறள்கள் பாடியிருத்தலும் அறிதல் தகும்.

5. பிரபத்தி செய்யுமிடத்தில் 'நான்' என்ற சொல்லைக் கூறிய பேர் உளரோ? என்ன, உளர் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முமுக்ஷுவான நான்' என்று தொடங்கி. "முமுக்ஷுர்வை ஶரணம் அஹம் ப்ரபத்யே" என்பது, ஶ்வேதாஶ்வதரம்.

6. "அமர்ந்து" என்பதற்கு, இடையீடு விளம்பம் இல்லாமல் பொருந்தி என்று பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அவை இல்லாமைக்குரிய காரணங்களை அருளிச்செய்கிறார் 'அவனுக்கு' என்று தொடங்கி. என்றது,

டுதல், தம் தலையிலே ஓர் உபாயத்தன்மை கிடத்தல் செய்யில் அன்றோ நடுவே ஓர் இடையீடு விளம்பங்கட்குக் காரணம் உள்ளது என்பார் 'அமர்ந்து' என்கிறார். புகுந்தேன் - [1]போன எல்லை அளவுமன்றோ புகுருவதும்; முன்பும் அர்த்தத்தில் இழவு இல்லை அன்றோ. இவனுடைய மாறுன உணர்வு அன்றோ உள்ளது; அது பேரமித்தனை அன்றோ வேண்டுவது. அறுதியிட்டேன் என்கிறார். [2]துவயத்தில் உள்ள "பிரபத்யே" என்ற நிகழ்காலம், நினைவின் தொடர்ச்சி போல் அன்று; [2]ருசிகாரியமாய் வருகையாலே பேற்றினை அடையுமளவும் நிற்பது ஒன்றும்.

[3]எல்லாச்சாத்திரங்களிலும் பரந்திருப்பது ஒன்றாய், இச்சாத்திரங்களுக்கெல்லாம் அடியான வேதாந்தங்களுக்குக்

சரணுகதியில் உபாயபுத்தி கூடாதாகையாலே, இடையில் வேறு சாதனங்களாகிய இடையீடும், அவன் கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவனுகையாலே விளம்பமும் இல்லை என்றபடி.

1. "புகுந்தேன்" என்பதற்கு, அறுதியிட்டேன் என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி, அது என்? சரீரத்தால் செய்யும் பிரபத்தியைச் சொல்லிற்றுணுலோ? என்ன, அது ஒண்ணுது என்னுமிடத்தை அருளிச்செய்கிறார் 'போன எல்லை' என்று தொடங்கி. என்றது, எல்லாப் பொருள்களையும் சரீரமாகவுடைய சர்வேசுவரனை முன்பு பிரிந்து மீளவும் கூடுதல் அசம்பாவிதமாகையாலே, விபரீத எண்ணம் கழிந்து யதார்த்தரூப அத்யவசாயத்தைச் செய்தேன் என்கிறார் என்றபடி. 'அர்த்தத்தில் இழவு இல்லை அன்றோ' என்றது, சர்வேசுவரனுடைய சம்யோகமாகிற அர்த்தத்தில் இழவு இல்லை அன்றோ என்றபடி. இப்படியான பின்பு, மானசமான அத்யவசாயத்தையே சொல்லுகிறது என்னுமதனை இசைவிக்கிறார் 'இவனுடைய' என்று தொடங்கி.

2. துவயத்தில் "பிரபத்யே - அடைகிறேன்" என்று நிகழ்காலமாக இருக்க, இங்கு, "புகுந்தேன்" என்று இறந்தகாலமாகச் சொல்லுவான் என்? என்ன, அது போக்கிய புத்தியாய்ச் சொல்லுகிறதித்தனை; உபாயத்துக்கு ஒரு முறையே அமையும் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'துவயத்தில்' என்றுதொடங்கி. என்றது, நினைவின் தொடர்ச்சி போன்று, சாதனமாகச்சொல்லப்பட்டதன்று; இனிமையாலே நிகழ்காலமாகச் சொல்லப்பட்டது அங்கு என்றபடி. இவர் "ஸக்ருத்க்ர்த்தஃ ஶாஸ்த்தார்த்தஃ - ஒருவன் பிரபத்தியை ஒரு முறையே செய்யவேண்டும்" என்கையாலே, இறந்த காலமாகச் சொன்னார் என்றபடி. 'சாஸ்திரார்த்தம்' என்றது, பிரபத்தியை.

3. மூன்றாவதாக ஒருயோஜனை அருளிச்செய்கிறார் இத்திருப்பாசுரம் பிரபத்தியைக் கூறுகிறது என்று. பிரபத்தியிலே எல்லார்க்கும் ருசி பிறப்பதற்காக அதன் வைபவத்தை அருளிச்செய்கிறார் 'எல்லாச்சாத்திரங்களிலும்' என்று தொடங்கி. 'எல்லாச் சாத்திரங்களிலும்' என்றது, சுருதி இதிகாச புராணங்களை. 'இச்சாஸ்திரங்களுக்கெல்லாம்' என்றது, உபப்ரும்ஹணங்கள் பூர்வபாகங்களாகிற இச்சாஸ்திரங்களுக்கு எல்லாம் என்றபடி. 'வேதாந்தங்களுக்குக் கிழங்காய்' என்றது, கடவல்லியுபநிடதசித்தமான துவயத்தில் பிரபத்திவைபவத்தைச் சொல்லியிருத்தலைத் திருவுள்ளம்பற்றி. கிழங்காய் - சாரமாய்,

கிழங்காய், [1]நம் ஆசாரியர்கள் எல்லாரும் ஒக்க ஆதரித்துப் போருவது ஓர் அர்த்த விசேடத்தை இப்பாசுரத்தால் அருளிச் செய்கிருர். [2]ஆசாரியர்களுக்கெல்லாம் முதல்வருமாய், "மயர் வற மதிநலம் அருளினன்" என்கிறபடியே, பகவானுடைய திருவருளாலே அடைந்த ஞானத்தின் தெளிவையுடையவரு மான இவர் ஏற்றுக்கொண்டமையாலே வந்தது ஓர் ஏற்றமும் உண்டு இதற்கு. [3]இந்த உபாயத்தைப் பற்றி வேறு பிரயோ ஜனங்களைக் கொள்வாரும், வேறு சாதனங்களைப் பற்றி இவனையே பிரயோஜனமாகப் பற்றுவாருமாய் இருப்பர்கள் புறம்புள்ளார்; அங்ஙன் அன்றிக்கே, இவனையே பிராப்பிய மும் பிராபகமுமாக அறுதியிட்டு இருக்கிற ஏற்றம் உண்டு இவர்க்கு. [4]பிராப்பியம் இவனேயாகில், வேறுசாதனங்களை மேற்கொண்டால் வரும் குற்றம் என்? என்னில், அவை சாத் தியமுமாய்ப் பலவுமாய்ச் செய்யமுடியாதனவுமாய்ச் சொரூபத் துக்குத் தக்கன அல்லாதனவுமாய் இருப்பனவாம். [5]இப்படி இருக்கும் சாதனங்கள் பல. அவை யாவை? என்னில், கர்ம யோக ஞானயோக பக்தியோகங்கள். [6]கர்மயோகமாவது, ஆத்

---

1. ஆப்தபிரமாணமான வேதத்துக்கும் முன்னே எடுக்கலாம்படி சிஷ்டா சாரம் பிரபலமாகையாலே அருளிச்செய்கிருர் 'ஆசாரியர்கள்' என்று தொடங்கி. 'அர்த்தவிசேடத்தை' என்றது, பிரபத்தியை.

2. நம் ஆசாரியர்களுடைய ஆதரம் அன்றிக்கே, இவ்வாழ்வார் அங்கீ கரித்ததும் உண்டு என்கிருர் 'ஆசாரியர்களுக்கெல்லாம்' என்று தொடங்கி.

3. இவர் அங்கீகரித்ததாலே பிரபத்திக்கு ஏற்றம் உண்டு என்கைக்கு இவர்க்கு உண்டான ஏற்றம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய் கிருர் 'இந்த உபாயத்தை' என்று தொடங்கி.

4. இனி, வேறு சாதனங்களிலே இருக்கிற தோஷங்களையும், பிரபத்தி யில் தோஷம் இல்லாமை தொடக்கமாக இருக்கிற மேன்மைகளையும் காட்டு கிருர் 'பிராப்பியம் இவனேயாகில்' என்று தொடங்கி. 'சாத்தியமுமாய்' என்றது, ஒருவனுடைய முயற்சியால் சாதிக்கப்படுவதுமாய் என்றபடி. 'பலவு மாய்' என்றது, கர்மம் முதலான சாதனங்கள் ஒவ்வொன்றும் பலபல வகை யாக இருத்தலைக் குறித்தபடி. 'சொரூபத்துக்குத் தக்கன அல்லாதனவுமாய்' என்றது, பாரதந்திரிய சொரூபத்துக்குத் தக்கன அல்லாதனவுமாய் என்றபடி.

5. 'சாத்தியமுமாய்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்தன வற்றை விரித்து அருளிச்செய்கிருர் 'இப்படி இருக்கும்' என்று தொடங்கி.

6. கர்மயோகம் முதலானவைகளும், திருநாமசங்கீர்த்தனம் முதலா னவைகளும் வேதாந்த மரியாதைகளாலே அங்கங்களாகச் சாதிக்கப்படுவன அன்றிக்கே, இதிகாச புராணங்களின் கூற்றாலே ஸ்வதந்திர சாதனங்கள் என் கிருர் 'கர்மயோகமாவது' என்று தொடங்கி. ஆத்மாவை உள்ளபடி அறிகிற

மாவை உள்ளபடி அறிகின்ற ஞானம் முன்னாகத் தன் சாதிக்கும் தன் ஆஸ்ரமத்துக்கும் தக்கதாய் விதிக்கப்பட்ட கர்மத்தைப் பலத்தில் விருப்பமில்லாதவனாகியும் நாம் செய்கிறோம் என்ற எண்ணம் இல்லாதவனாகியும் பற்றையும் விட்டவனாகிப் பகவானுக்குச் செய்யப்படும் ஆராதனம் என்ற எண்ணத்தோடு செய்தல்வேண்டும்; அவ்வாறு செய்யவே விரோதியான பாபம் அழியும்; அது அழியவே மனம் மலம் அறும்; அது அறவே சொரூபப் பிரகாசமும் உண்டாம்; அது உண்டாகவே பகவானை அறிகின்ற ஞானமும், அவனிடத்தில் பிரேமமும் பிறக்கும்; பின்னர், பரபக்தி பரஞான பரமபக்தியாய்ப் பேற்றோடே சேர்ப்பிப்பது ஆம். ஞானயோகமாவது, இந்திரியங்களை நியமித்துக்கொண்டு சொரூபத்தை விஷயமாக்கினால் பகவானை அறிகிற ஞானமும் அவன் விஷயமான பிரேமமும் பிறக்கும்; அவை பிறக்கவே பரபக்தி பரஞான பரமபக்திகளும் பிறக்க, பின்பு பேற்றோடே சேர்ப்பிப்பது ஆம். அங்ஙன் அன்றிக்கே, மேலே கூறிய [1]கர்மஞானங்கள் இரண்டனையும் பகவத் விஷயத்திலே யாக்குவது, அங்ஙனமாக்கினால் "என்னிடத்தில் மனத்தைவைத்தவனாயும் என்னிடத்தில் பக்தி

ஞானமாவது, சரீர சரீரிபாவ ஞானம். 'பலத்தில் விருப்பமில்லாதவனாகியும்' என்றது, சுவர்க்காதி பலங்களில் ஆசை இல்லாதவனாய் என்றபடி. 'நாம் செய்கிறோம் என்ற எண்ணம் இல்லாதவனாகி' என்றது, சுவர்க்காதி பலங்களுக்குச் சுவதந்திர சாதனகர்த்தாக்களைப்போல் அன்றிக்கே, தலைவனாக இருத்தல் அவன் அதீனமாகையாலே ஈசுவரனைத் துணையாகக்கொண்டு தான் கர்த்தாவாக இருத்தல் என்பதனைத் தெரிவித்தபடி. 'பற்றையும் விட்டவனாகி' என்றது, புத்தித் தியாகத்தைக் குறித்தபடி. 'விரோதியான பாபம்' என்றது, ஞானம் தோன்றுவதற்குத் தடையாகவுள்ள பாபம் என்றபடி. 'சொரூபப் பிரகாசம்' என்றது, ஆத்மசொரூபம் நன்றாகத் தோன்றுதலைக் குறித்தபடி. பரபக்தியாவது, பகவானைச் சேர்ந்திருக்கும் காலத்தில் இன்பமும், பிரிந்திருக்கும் காலத்தில் துன்பமும் அடைதல். பரஞானமாவது, பகவானை நேரே தெளிவாக அறிதல். பரமபக்தியாவது, பிரிவில் சத்தைக்கே கேடு பிறக்கும்படியாயிருக்கை.

"ஒழுக்கத்து நீத்தார்பெருமை" (21) என்ற திருக்குறளின் விசேடவுரையில் 'தமக்குரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று துறத்தலாவது' என்று தொடங்கும் விசேடவுரை இங்கு நினைவுகூர்தல் தகும்.

1. 'கர்மஞானங்கள் இரண்டனையும் பகவத்விஷயத்திலே ஆக்குவது' என்றது, கர்மத்தைப் பகவானுடைய ஆராதனமாகவும், ஞானத்தை ஈசுவர விஷயமாகவும் ஆக்குவது என்றபடி. அன்றிக்கே, கர்மஞானங்களின் தானத்தில் பகவானுடைய கிருபையை ஆக்கி என்னுதல்.

"மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவ ஏஷ்யஸி யுக்த்வா ஏவம் ஆத்மாநம் மத்பராயணः"

என்பது, ஸ்ரீகீதை. 9: 34.

64

யையுடையவனையும் என்னை ஆராதிக்கிறவனையும் ஆகக்கடவாய்; என்னை நமஸ்காரம் செய்வாய்" என்கிறபடியே, செய்ய, பர பக்தி பரஞான பரமபக்திகள் பிறக்கும்; பின்பு, பேற்றோடே தலைக்கட்டுமது பக்தியோகம் எனப்படும்.

இவைபோல் செய்தற்கு அருமையுடையன அன்றிக்கே, திருநாமத்தை எளிதான உபாயமாக [1]விதித்தது; எங்கே? என்னில், வீடுமர் தருமபுத்திரனுக்குப் பல தருமங்களையும் சொல்ல, [2]"தருமங்கள் பலவற்றிலும் எந்தத் தருமம் உம்மால் மேலான தருமமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது; பிறவி எடுத்த வன் எதனை ஜபித்தால் பிறவியினின்றும் சம்சாரம் என்னும் தளையினின்றும் விடுபடுவான்" என்கிறபடியே, உம்முடைய நெஞ்சால் அறுதியிட்டிருக்கும் மேலான தருமத்தைச் சொல்ல வேணும் என்ன, [3]"இது, எல்லாத் தருமங்களிலும் மேலான தருமமாக என்னால் மதிக்கப்பட்டது; அது யாது? எனின், தாம ரைக் கண்ணனான நாராயணனைப் பக்தியுடன் மனிதன் தோத் திரங்களால் எப்பொழுதும் அருச்சனை செய்தல்" என்று மிக உயர்ந்த தருமம் திருநாமம் என்று சொன்னார் அன்றோ. நன்று, திருநாமம் சாதனத்திற்கு அங்கம் அன்றோ? அது, தானே சாதனமாமோ? என்னில், [4]"பிறவியினின்றும் சம்சாரமாகிற தளையினின்றும் விடுபடுகிறான்" என்று, விரோதி நீங்குதலையும், [5]"நித்தியமான பரம்பொருளை அடைகிறான்" என்று, பலத்தை அடைதலையும் சொல்லித் தலைக்கட்டுகையாலே, விரோதிகள் நீங்குதல் முன்னாக விரும்பப்படுகிற மோக்ஷத்தைப் பெறுதற் கும் திருநாமம் தானே சாதனமாம்.

---

1. 'விதித்தது' என்றது, மஹாபாரதத்தில் அநுசாசன பர்வத்தில் ஸஹஸ்ரநாமத்தைப் பேசுகிற இடத்தைத் திருவுள்ளம்பற்றி. அதனை விரித்து அருளிச்செய்வதற்காக, அது சம்பந்தமான சங்கையை அநுவதிக்கிறார் 'எங்கே? என்னில்,' என்று தொடங்கி.

2. "கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத:
கிம் ஜபந்முச்யதே ஜந்து: ஜன்ம ஸம்ஸாரபந்தநாத்"
என்பது, மஹாபாரதம் ஸஹஸ்ரநாம அத்.

3. "ஏஷமே ஸர்வதர்மாணாம் தர்ம: அதிகதமோ மத:
யத்பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவை: அர்ச்சேத் நர: ஸதா"
என்பது, மஹாபாரதம் ஸஹஸ்ரநாம அத். 'திருநாமம்' என்றது, திருநாம சங்கீர்த்தனத்தினை.

4. இந்தச் சுலோகத்தை மேலே காண்க.

5. "வாஸுதேவ ஆஶ்ரய: மர்த்ய: வாஸுதேவ பராயண:
ஸர்வபாப விஶுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம்"
என்பது, மஹாபாரதம் ஸஹஸ்ரநாம அத்.

[1]" இந்தத் தேசம் பரிசுத்தமானது, மிக உயர்ந்தது, புண்ணியகரமானது, விரும்பியவையனைத்தையும் கொடுக்கின்றது" என்று, விரும்பினவற்றை எல்லாம் பெறுதற்குச் சாதனமாகத் தேசவாசத்தைச் சொல்லிற்று. [2]"எல்லா ஆராதனங்களுக்குள்" என்று தொடங்கிப் "பாகவதர்களை ஆராதிக்கின்ற ஆராதனமானது மிகச் சிறந்தது என்று யாவராலும் கூறப்பட்டது" என்று முடிக்கையாலே, விரும்பியவை அனைத்தும் பாகவதர்களை ஆராதிக்கவே கிடைக்கும் என்று சொல்லிற்று; அப்படிச் சொன்ன செய்தற்கு அரியனவான [3]உபாயங்கள் எல்லாம் அகங்காரத்தின் சம்பந்தம் உடையனவாகையாலே தியாச்சியமாகச் சொல்லப்பட்டன. [4]ஒன்றாய் எப்பொழுதும் இருப்பதாய் செய்தற்கு எளியதாய்த் தக்கதாய்,தனக்கு அவ்வருகு ஒன்று இன்றிக்கே,[5]"ஆதலால்,மேலே கூறிய தவங்களுக்குள் பிரபத்தி என்னும் உபாயத்தை மிக மேம்பட்டதாகச் சொல்லுகிறார்கள்" என்கிறபடியே, சொல்லப்படுகிற பிரபத்தி உபாயத்தைச் சொல்லுகிறது இப் பாசுரத்தால். [6]மேல் ஒன்பது பாசுரங்களாலும் சரண்யனை சர்வேசுவரன் சொரூபத்தையும் அதிகாரி சொரூபத்தையும் சொல்லி, சரணகதியின் பிரகாரத்தைச் சொல்லுகிறார் இப்பாசுரத்தால்.

---

1. " பத்ரம் பத்ரப்ரதம் புண்யம் தீர்த்தாநாம் உத்தமம் விதுః
பவித்ரம் பரமம் புண்யம் தேஶః அயம் ஸர்வகாமதுக் "

என்பது காருடம்.

2. " ஆராதநாநாம் ஸர்வேஷாம் விஷ்ணோः ஆராதநம் பரம்
தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீயாராதநம் பரம் "

என்பது.

3. 'உபாயங்கள் எல்லாம்' என்றது, கர்மயோகம் ஞானயோகம் பக்தியோகம் திருநாமசங்கீர்த்தனம் தேசவாசம் ததீயாராதனை என்று மேலே அருளிச்செய்தனவற்றைக் குறித்தபடி. 'தியாச்சியமாகச் சொல்லப்பட்டன' என்றது, சரம ஶ்லோகத்திலே தியாச்சியமாகச் சொல்லப்பட்டன என்றபடி.

4. ஆக, இப்படி மற்றைச் சாதனங்களிலேயுள்ள தோஷங்களை அருளிச்செய்து, இனி பிரபத்தியினுடைய மேன்மையை அருளிச்செய்யாநின்றுகொண்டு, இதனை இத்திருப்பாசுரத்தால் அருளிச்செய்கிறார் என்கிறார் 'ஒன்றாய்' என்று தொடங்கி.

5. " தஸ்மாத் ந்யாஸம் ஏஷாம் தபஸாம் அதிரிக்தம் ஆஹுः "
என்பது, தைத். உப.

6. இனி, அர்ச்சாவதாரமே பிரபத்திக்கு நியதவிஷயம் என்னுமதனையும் காட்டவேண்டும் என்று திருவுள்ளம்பற்றி, பரத்துவம் முதலிய நிலைகளுக்குள்ள அருமையையும், அர்ச்சாவதாரத்தினுடைய எளிமையையும் அருளிச்செய்யத் தொடங்குகிறார் 'மேல் ஒன்பது பாசுரங்களாலும்' என்று தொடங்கி.

சரண்யன் சொரூபமாவது, [1] நிரதிசய போக்கியமுமாய் வகுத்த விஷயமுமாய் விரோதிகளைப் போக்கக்கூடியதுமாய்ச் சர்வ சுலபமுமாய் இருக்குமது. [2] அல்லாதவைபோல் அன்றிக்கே, பற்றுவதற்கு ஏகாந்தமாயிருப்பது சௌலப்யம். [3] பரத்துவம், சேதனனுக்கு ருசி பிறந்தபோதே பற்ற ஒண்ணாதபடி தூரதேசமாக இருக்கும். வியூகமும், பிரமன் சிவன் முதலான தேவர்களுக்காமத்தனை; ஆகையாலே பரத்துவத்தைப் போன்றதேயாம். அவதாரங்கள், புண்ணியம் மிக்கவர்களாய் அக்காலத்தில் உதவினார்க்கு ஒழியப் பிற்பாடர்க்கு உதவாமையாலே காலத்தாலே கழிந்தனவாய் இருக்கும். [4] அக்குறைகள் இரண்டும் இன்றிக்கே எல்லாக் காலத்திலும் எல்லார்க்கும் வந்து அடையலாம்படி, [5] "வானவர் வானவர்கோனொடும்" என்கிறபடியே, நித்தியசூரிகளோடு, இவ்வருகுள்ள பிரமன் முதலானோர்களோடு, இவ்வருகுள்ள மனிதர்களோடு கானமும் வானரமுமாய்க்கொண்டு மிக இழிந்த பிறவிகளிலே ஆனார்களோடு வாசி அற எல்லார்க்கும் பற்றுமிடம் திருவேங்கடமுடையான் திருவடிகளே. [6] விடாத சுபாவமுடையனாகையாலே விரும்பியவற்றைப் பெறுதற்குக் காரணங்களான ஞானம்

---

1. "நாற்றோள் அமுதே" என்றும், "அடியேன் மேவி அமர்கின்ற அமுதே" என்றும், "அண்ணலே" என்றும், "கூற்றாய்நீறாய்" என்றும், "திருவேங்கடத்தானே" என்றும் உள்ள பகுதிகளைத் திருவுள்ளம்பற்றி, 'நிரதிசயபோக்கியமுமாய்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். நிரதிசய போக்கியம் - தனக்குமேல் ஒன்றில்லாததான இனிமையையுடைய பொருள்.

2. பரத்துவம் முதலான நிலைகளில் உள்ள அருமையையும், அர்ச்சாவதாரத்தினுடைய எளிமையையும் அறிவிக்கைக்கு உறுப்பாக, மற்றைய குணங்களைக்காட்டிலும் அடைந்து பற்றுவதற்கு அவசியமாக விரும்பத்தக்கது சௌலப்யம் என்கிறார் 'அல்லாதவைபோல்' என்று தொடங்கி.

3. சௌலப்யமானது பரத்துவம் முதலான நிலைகளிலும் இல்லையோ? என்ன, அவை எல்லாம் தக்காரானார்க்கு அடைவதற்கு உறுப்புக்கள் ஆகையாலே சௌலப்யத்தின் ஆதிக்யம் இல்லை என்கிறார் 'பரத்துவம்' என்று தொடங்கி.

4. 'அக்குறைகள் இரண்டும்' என்றது, தேசத்தாலும் காலத்தாலும் தூரமாக இருக்கின்ற குறைகளைக் குறித்தபடி.

5. "வானவர்" என்பது, திருவாய். 3. 3: 2.

6. ஆஸ்ரயணீயனும்போது காரியத்தை முடிப்பதற்கு உபயோகமான ஞானம் சக்தி முதலான குணங்களோடு கூடியவனாக இருக்கவேண்டாவோ? என்ன, 'விடாத' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

சக்தி முதலான எட்டுக் குணங்களையுமுடையன்; ஆகையாலே, எல்லாக் குணங்களாலும் நிறைவுற்றிருக்கின்றவனான திரு வேங்கடமுடையான் சரண்யன்.

[1]அதிகாரி சொரூபமாவது, அநந்யகதித்வமும் பிராப்பிய ருசியும் சொரூபப்பிரகாசமும் என்கிற இவையேயன்றோ. [2]திர்யக்குகளுக்கு இப்படி அடைதல் கூடுமோ? என்னில், ஸ்ரீகஜேந்திராழ்வான் பகவானை ஆராதனை செய்தானாகத் துறைச்சுவடிகளிலே எழுதியிட்டு வைத்தும் சொல்லியும் கேட்டும் போரா நின்றோமே; [3]இங்கும், "வைப்பன் மணிவிளக்காம் மாமதியை மாலுக்கென்று, எப்பொழுதும் கைநீட்டும் யானையை" என்றும், "புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந் தருவி, உகுமதத் தால் கால்கழுவிக் கையால், மிகுமதத்தேன், விண்ட மலர் கொண்டு விறல்வேங் கடவனையே, கண்டு வணங்கும் களிறு" என்றும், வேறு இடத்திலே "புனத்தினைக் கிள்ளிப் புது அவி காட்டி உன்பொன்னடி வாழ்க என்று, இனக்குறவர் புதியது உண்ணும் எழில் மாலிருஞ்சோலை எந்தாய்" என்றும் ஆழ்வார்கள் அருளிச்செய்து வைத்தார்கள்.[4] இனி, அதைப்போலவாகி

---

1. சரண்யனுடைய சொரூபத்தை அறுதியிட்ட பின்னர், அதிகாரி சொரூபம் இன்னது என்னுமதனையும் காட்டுகிறார் 'அதிகாரி சொரூபமாவது' என்று தொடங்கி. அநந்யகதித்வம் சொரூபப்பிரகாசம் என்னும் இரண்டும், "புகல் ஒன்றில்லா அடியேன்" என்ற பதங்களிலே சித்தம். அநந்யகதித்வம்-வேறுகதி இல்லாமை. சொரூபப்பிரகாசமாவது, சேஷத்வஞானம். பிராப்ய ருசி என்பது, "ஆரு அன்பில்" என்றதிலே சித்தம்.

2. மேலே, 'கானமும் வானரமுமாய்' என்று தொடங்கி அருளிச் செய்த வாக்கியத்தாலே, திர்யக்குகளும் ஆஸ்ரயியாநிற்கும் என்றதனைச் சங்கித்து, உதாஹரண முகத்தாலே காட்டி விளக்குகிறார் 'திர்யக்குகளுக்கு' என்று தொடங்கி. துறைச்சுவடியாவது, சந்தியாமடத்தில் புராணம் சொல்லும் புஸ்தகம்.

3. ஆழ்வார்களும் அருளிச்செய்தமை உண்டு என்கிறார் 'இங்கும்' என்று தொடங்கி. 'வைப்பன்' என்பது, நான்முகன் திருவந். 46. 'புகுமதத்தால்' என்பது, மூன்றாந் திருவந். 70. 'புனத்தினை' என்பது, பெரியாழ்வார் திருமொழி. 5. 3 : 3.

4. ஸ்ரீகஜேந்திராழ்வான் ஆஸ்ரயித்தது ருஷிவசன சித்தமாகையாலே பிரமாணமாகிறது; ஆழ்வார்கள் அருளிச்செய்தவை பிரமாணங்கள் ஆதல் யாங்ஙனம்? என்னில், 'இனி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'அதைப்போலவாகிலும்' என்றது, ருஷிகள் வசனத்தைக் காட்டிலும் அருளிச்செயல்களில் அதிகமான நம்பிக்கை வேண்டும்; அது இல்லையாகிலும், அம்மாத்திரமாயினும் விஸ்வசிக்க வேண்டாவோ? என்றபடி. 'நமக்கு' என்றது, ஆழ்வார்கள் ஸ்ரீசூக்திகளைத் தஞ்சமாகப் பற்றின நமக்கு என்றபடி.

லும் இவற்றையும் நம்பவேண்டாவோ நமக்கு? [1] இனி, சரண்ய விஷயத்தில் செய்யப்படும் சரணகதி பலத்தோடு கூடியிருக்கும் என்பது போன்று, ஆநுகூல்யம் முதலான குணங்களோடு கூடின அதிகாரி சரணம் புக்கால் பலத்தோடே கூடி இருக்கும் என்கிற அர்த்தத்தையும் சொல்லுகிறது. [2] 'அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா!' என்கிற இதனாலே தம்முடைய வெறுமையை முன்னிட்டுக் கொண்டு பெரியபிராட்டியார் புருஷகாரமாக, சர்வசுலபனை திருவேங்கடமுடையான் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுகிறார்.

அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா - [3] நிரபேக்ஷமுமாய் ஸாபேக்ஷமுமாய் இருக்கும் இவ்வுபாயம்: தன்மை வேறுபாடுகளாலே. [4] நிரபேக்ஷமாகிற படி எங்ஙனே? என்னில், ருசியைப் பிறப்பிக்கையும், பிறந்த ருசியை வளர்க்கையும், விரோதிகளைப் போக்குகையும், ஒரு தேச விசேடத்து ஏறக்கொண்டுபோகையும், உரியதான அடிமையைக் கொள்ளுகையும் ஆகிற இந்த இடங்களில் நிரபேக்ஷமாகத் தானே செய்யும்; துணைவேண்டா. இனி, ஸாபேக்ஷமானபடி எங்ஙனே? என்னில், அதிகாரி வேண்டப்படுவதாயும் புருஷகாரம் வேண்டப்படுவதாயும் இருக்கையாலே. [5] இவ்வுபாயம் ஆர்க்கு? என்றால், அதிகாரிக்கு என்கையாலே, அதி

---

1. "புகல் ஒன்றில்லா அடியேன்" என்றதனைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் 'இனி சரண்யவிஷயத்தில்' என்று தொடங்கி. சரண்யவிஷயம் - சர்வேசுவரன். இதனால், சரண்யன்பக்கலிலே செய்யவும் வேண்டும்; அதிகாரி சரணம் புகவும் வேண்டும் என்பதனைத் தெரிவித்தபடி.

2. பாசுரம் முழுதிற்கும் அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அகலகில்லேன் இறையும்' என்று தொடங்கி.

3. சர்வேசுரன், வேறு ஒன்றனையும் விரும்பாத உபாயமாக இருக்க, புருஷகாரமும் அதிகாரமும் வேண்டுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நிரபேக்ஷமுமாய்' என்று தொடங்கி. நிரபேக்ஷம் - வேறு ஒன்றனையும் வேண்டாதது. ஸாபேக்ஷம் - வேறு ஒன்றனை வேண்டிக்கொண்டு நிற்பது. இவ்வுபாயம் - சித்தோபாயம். சித்தோபாயம் - வேறு ஒருசாதனத்தைக் கொண்டு சாதித்துக்கொள்ள வேண்டியிராமல், எப்பொழுதும் சித்தமாக இருக்கும் உபாயம்; சர்வேசுவரன்.

4. அதனை விரித்துரைக்கத் திருவுள்ளம்பற்றி, அது சம்பந்தமான சங்கையை அநுவதிக்கிறார் 'நிரபேக்ஷமாகிறபடி எங்ஙனே? என்னில்' என்று.

5. 'அதிகாரியும் புருஷகாரமும் வேண்டும்' என்றதனை விரித்து அருளிச்செய்கிறார் 'இவ்வுபாயம்' என்று தொடங்கி.

காரி வேண்டப்படுகிறது; அதிகாரி வேண்டப்படுவது போன்று புருஷகாரமும் வேண்டப்படுவதாம்; [1]எங்ஙனே? என்னில், இந்த அதிகாரி, முன்செய்த குற்றங்களையும் பார்த்து அவனுடைய சுவாதந்திரியம் முற்றறிவுடைமை முதலியவைகளைப் பார்த்துப் பிற்காலிக்க, 'அஞ்சாதே' என்று புருஷகாரமானவள் சொல்லவேண்டுகையாலே, [2]அதிகாரி வேண்டப்படுவதுமாய்ப் புருஷகாரம் வேண்டப்படுவதுமாய் இருக்கும். அகலகில்லேன் இறையும் - [3]ஒரு கணநேரமும் பிரிய ஆற்றலுடையவள் அல்லேன். [4]இப்படிச் சொல்லுகிறவள்தான் யார்? என்னில், மூன்றுவித சேதநர்கட்கும் தலைவியுமாய், உபயவிபூதிநாதனையும் நியமிக்கின்றவளுமாய் இருக்குமவள் கண்டீர்! மூன்றுவித சேதனர்கட்கும் தலைவி என்னுமதற்குப் பிரமாணம், [5]"எல்லா ஆத்மாக்களுக்கும் ஈசுவரியாய் இருப்பவளை" என்னக்கடவதன்றோ. உபயவிபூதி நாதனையும் நியமிக்கின்றவள் என்னுமதற்குப் பிரமாணம், [6]"பும்ப்ரதாந ஈஶ்வர ஈஶ்வரீம்" என்று, பிரதான புருஷர்களுக்கு ஈசுவரன் அவன், அவனுக்கு இவள் ஈசுவரி என்று சொல்லுகையாலே. ஆக, எல்லாரையும் நியமிக்கின்றவள் என்னுமிடம் சொல்லிற்று.

இவள் நியமிக்கும் பிரகாரம் என்? என்னில், மூன்றுவித சேதநர்களையும் தாயாந்தன்மையாலே நியமிக்கும்: ஈசுவரனைக்

---

1. புருஷகாரம் வேண்டப்படுதலை விரித்துப் பேசுவதற்குத் திருவுள்ளம்பற்றி, அது சம்பந்தமான சங்கையை அநுவதிக்கிறார் 'எங்ஙனே? என்னில்,' என்று.

2. மேலே கூறிய விஷயங்களை முடிக்கிறார் 'அதிகாரி வேண்டப்படுவதுமாய்ப் புருஷகாரம் வேண்டப்படுவதுமாய் இருக்கும்' என்று.

3. பதங்கட்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஒருகண நேரமும்' என்று தொடங்கி.

4. "அலர்மேல் மங்கை" என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இப்படிச் சொல்லுகிறவள்' என்று தொடங்கி. "அலர்மேல் மங்கை" என்பதற்குப் பொருளாகவுள்ள "ஸ்ரீ" என்ற சொல்லினுடைய 'ஸ்ரீயதே' என்கிற கர்மணிவ்யுத்பத்தியில், சேவிக்கிறவர்கள் இன்னார் என்று விசேடித்துச் சொல்லாமையாலே, மூன்றுவித சேதநரால் சொரூபம்காரணமாகவும், சர்வேசுவரனால் காதல் கார்ணமாகவும் ஆஶ்ரயிக்கத்தக்கவள் என்று கொண்டு அருளிச்செய்கிறார் 'மூன்றுவித சேதநர்கட்கும்' என்று தொடங்கி. மூன்றுவித சேதநர்கள்: பத்தர், முத்தர், நித்தியர் என்பவர்கள்.

5. "ஈஶ்வரீம் சர்வபூதாநாம்" என்றது, ஸ்ரீ சூக்தம்.

6. "பும்ப்ரதாந ஈஶ்வர ஈஶ்வரீம்" என்பது.

காதல் குணம் காரணமாக நியமிக்கும். தாயாந்தன்மை சொரூபத்தோடு கட்டுப்பட்டது : காதல் குணம் ஒவ்வொரு காலத்தில் உண்டாமது ஆகையாலே வந்தேறி ஆகாதோ? என்னில், ஆகாது. எங்ஙனே? என்னில், [1]உபாதி நித்தியமாகையாலே அதுவும் நித்தியம். [2]ஈசுவரன் படைத்தல் முதலாயினவற்றைச் செய்யும்போதும் இவள் நியமிக்கின்றவள் ஆவள்;"எவளுடைய முகத்தைப் பார்த்து அவளது கடைக்கண்ணின் நோக்கிற்கு வசப்பட்டவனாய் முழுவதையுஞ் செய்கிறான்" என்கிறபடியே, அவள் கடாக்ஷம் அடியாகப் புருவநெரிப்பிற்குட்பட்டவனாய்க் கொண்டு படைத்தல் முதலியனவற்றைச் செய்யும். அது என்? [3]"சரீர இந்திரியங்களோடு சேர்ப்பதற்குக் கருணையுள்ள மனத்தையுடையவன்" என்கிறபடியே, தன்திருவருள் அடியாக அன்றோ படைப்பது என்னில்? அவற்றின் செல்லாமை பார்த்துப் படைக்கில்அன்றோ திருவருள் காரணமாவது; [4]தன் செல்லாமையாலே அவள் கடாக்ஷம் காரணமாகத் தன் சத்தை உண்டாக, அவள் பிரேரிக்க அருள்பிறந்து, அந்த அருள் காரணமாக அன்றோ அவன் படைப்பது. [5]நியமிக்குமிடத்தில் [6]"இவ்

1. 'உபாதி நித்தியமாகையாலே' என்றது, சர்வேசுவரனுடைய காதலுக்குக் காரணமான பிராட்டி வைலக்ஷண்யம் நித்தியமாகையாலே என்றபடி. உபாதி - காரணம்.

2. இவள் நியமித்தலை எங்கே காணலாம்? என்ன, மோக்ஷத்தைக் கொடுத்தல் படைத்தல் முதலான தொழில்களைச் செய்யும்போது இவள் நியமித்தலைக் காணலாம் என்கிறார் 'ஈசுவரன்' என்று தொடங்கி. 'செய்யும் போதும்' என்ற உம்மை, மோக்ஷத்தைக் கொடுக்கும்போதும் என்பதனைத் தழுவுகிறது. இதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எவளுடைய' என்று தொடங்கி.

"யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேகிலம்"
என்பது, ஸ்ரீஸ்தவம்.

3. "கரண களேபரைːகடயிதும் தயமாநமநா:"
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம்.

4. 'தன் செல்லாமையாலே' என்றது, பிராட்டி வைலக்ஷண்யத்திலே ஈடுபட்டு அவள் சொன்னது செய்தன்றி நிற்க ஒண்ணாதபடியான தன் செல்லாமையாலே என்றபடி.

5. நன்று; இவள் சர்வேசுவரனை நியமித்தால் தன்னுடைய பாரதந்திரியத்துக்குத் தாழ்வு வாராதோ? எனின், 'நியமிக்குமிடத்தில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. "அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணு பத்நீ"
என்பது, நீளாசூக்தம்.

வுலகிற்குத் தலைவியாய் விஷ்ணுவுக்குப் பத்தினியாய்" என்றும், [1]"விஷ்ணுவை விட்டு நீங்காத பிராட்டி" என்றும் சொல்லுகிறபடியே, தன் சொரூபம் குலையாமேயன்றோ நியமிப்பது. [2]எங்ஙனே? என்னில், ஒளி, ஒளியையுடைய பொருளுக்குச் சேஷமாய் நின்றே அத்தலைக்கு நிறம் கொடுக்குமாறு போலவும், வாசனை, மலருக்குச் சேஷமாய் நின்று பெருவிலையன் ஆக்குமாறு போலவும், ஈசுவரன், சுவாதந்திரியம் குலையாமலே பரதந்திரன் ஆமாறு போலவும் அன்றோ இவளும் அத்தலைக்கு அநந்யார்ஹ சேஷமாய்க்கொண்டே நிறம் கொடுக்கும்படி. [3]பிரிவிற்குக் காரணம் கர்மம் அன்றோ? கர்ம சம்பந்தம் இன்றிக்கே இருக்க, இவள் 'அகலகில்லேன்' என்னப் போமோ? என்னில், கர்மத்தைப் போன்று, அவனுடைய வைலக்ஷண்யம் காரணமாகச் சொல்லுகிறாள். நன்று; வைலக்ஷண்யம் போக்கியமாமத்தனை அன்றோ? அது மேலும் மேலும் அநுபவிக்கும் இச்சையை விளைக்குமே ஒழிய "இறையும் அகலகில்லேன்" என்னப் பண்ணுமோ? என்ன, விலை உயர்ந்ததான இரத்தினம் ஒன்று கிடைத்தால் 'இது நமக்குத் தொங்குமோ!' என்று துணுக்குத் துணுக்கு என்னுமவனைப் போலே, 'அவன் மார்விலே இருந்து அகலிற் செய்வது என்?' என்று [4]அஸ்தாநேபயசங்கை பண்ணுகிறாள். [5]புணர்ச்சிக்கு அங்கமான பிரிவும் பொறுக்கமாட்டேன் என்பாள் '**இறையும் அகலகில்லேன்**' என்கிறாள். என்றது, அவன் உபாயமாமிடத்தில் அங்கத்தைச் சஹியாத சுணையுடைமை போன்று, புணர்ச்

1. "விஷ்ணோ: ஸ்ரீ: அநபாயிநீ"
என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 1. 8: 17.

2. 'எங்ஙனே? என்னில்,' என்றது, தன் சொரூபம் குலையாதபடி எங்ஙனே? என்னில் என்றபடி. அநந்யார்ஹசேஷம் - அவனுக்கே சேஷம்.

3. இனிமையின் மிகுதியினாலே அதிசங்கை கொள்ளுகிறாள் என்று மேலே இரண்டு யோஜனைகளிலும் விரிவாக அருளிச்செய்ததனைச் சங்காபரிஹார முகத்தால் சுருங்க அருளிச்செய்கிறார் 'பிரிவிற்குக் காரணம்' என்று தொடங்கி.

4. அஸ்த்தாநேபய சங்கை பண்ணுதல் - இடமல்லாத இடத்திலும் அச்சத்தாலே ஐயப்படுதல்.

5. "இறையும்" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'புணர்ச்சிக்கு' என்று தொடங்கி. புணர்ச்சிக்கு அங்கமான பிரிவு - இறுகத் தழுவுவதற்காக நெகிழ்த்து அணைக்கை. அதனைத் திருஷ்டாந்தத்தோடு விவரணம் செய்கிறார் 'அவன் உபாயமாமிடத்தில்' என்று தொடங்கி. 'அங்கத்தை' என்றது, ஆநுகூல்ய சங்கல்பம் முதலானவைகளை. சுணையுடைமை-அபிமாநம்.

சிக்கு அங்கமான பிரிவும் பொறாத மிருதுத் தன்மையைத் தெரிவித்தபடி.[1]அவன் மார்விலே இருந்து அவன் முகத்தை நோக்கி, 'உன்னைவிட்டு அகலச்சக்தியுடையவள் ஆகிறிலேன்' என்று அவன் வைலக்ஷண்யத்தை அவனுக்குச் சொல்லுகிறாள். தனக்குத் தானே முற்றறிவினனாயிருக்கிறவனுடைய வைலக்ஷண்யம் அவனுடைய ஞானத்துக்கு விஷயமாமே; இவள் சொல்ல அவன் அறியுமிடம் அவனுடைய ஞானத்துக்குக் குறைவு அன்றோ? என்னில், இவள் சொல்ல அறிந்திலனாகில் அவன் [2]காதல் குணத்திற்குக் கொத்தையாமே! அன்றிக்கே, [3]"தனக்கும் தன்தன்மை அறிவரியான்" என்றும் சொல்லாநின்றது அன்றோ என்னுதலுமாம். [4]உலகத்தைப் படைத்தல் முதலான செயல்கள் அல்லவோ ஞானத்துக்கு விஷயம்; "ஞானமலிதே கொண்டு எல்லாக் கருமங்களும் செய்" என்றதே அன்றோ.[5]'அகலகில்லேன் இறையும்' என்ற சொல்லும் சொல்லமாட்டாத நிலை அன்றோ அவன்நிலை. [6]அவன் வைலக்ஷண்யங் கண்ட இவளிலும் அவனுக்கு உண்டான ஏற்றம், பிரிந்திருக்கும் நிலையில் அவனுடைய சொற்களில் காணுமத்தனை அன்றோ."ஒருமாதத்துக்கு மேல் பிழைத்திருக்கமாட்

1. "இறையும் அகலகில்லேன்" என்று யாரைக் குறித்துச் சொல்லுகிறாள் என்ன, 'அவன் மார்விலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'காதல் குணத்திற்குக் கொத்தையாமே!' என்றது, காதலுக்குத் தாழ்வு வாராமைக்காக இவள் சொல்ல அறிந்தால், அவனுடைய முற்றறிவிற்குத் தாழ்வு வரவேண்டுமோ? என்றபடி. காதல் குணத்திற்குக் கொத்தையாவது, இவள் இந்த வார்த்தைகளைச் சொல்லாதபோது அவனுக்கு இவளிடத்தில் பிராவண்யம் ஒருதலைக்காமமாய் விடுதலைக் குறித்தபடி.

3. தன்னுடைய வைலக்ஷண்யம் தான் அறியாமையாலே இவள் சொல்லுகிறாள் என்று வேறு ஒரு வகையாகவும் விடை அருளிச்செய்கிறார் 'தனக்கும்' என்று தொடங்கி. இது, திருவாய். 8. 4 : 6.

4. அங்ஙனமாயின், இவனுடைய முற்றறிவிற்கு விஷயம் எங்கே? என்ன, அதற்கு விடையும், விடைக்குப் பிரமாணமும் அருளிச்செய்கிறார் 'உலகத்தை' என்று தொடங்கி. 'ஞானமலிதே' என்பது, திருவாய். 3. 10 : 8.

5. இவள் "அகலகில்லேன்" என்பதுபோன்று, அவனும் "அகலகில்லேன்" என்ன வேண்டாவோ ஒருதலைக்காமம் ஆகாமைக்காக? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அகலகில்லேன்' என்று தொடங்கி.

6. அந்த நிலையை எங்கே கண்டோம்? என்னில், 'அவன் வைலக்ஷண்யம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். சொற்களைக் காட்டுகிறார் 'ஒரு மாதத்துக்கு' என்று தொடங்கி. "மாஸாத் ஊர்த்வம் ந ஜீவிஷ்யே" என்பது, ஸ்ரீராமா. சுந். 40 : 10. பிராட்டி கூறியது. "நஜீவேயம் க்ஷணமபி" என்பது, ஸ்ரீராமா. சுந். 66 : 10. ஸ்ரீராமபிரான் கூறியது.

டேன்" என்றாள் இவள்; "ஒருகண நேரமும் பிழைத்திருக்க மாட்டேன்" என்றான் அவன். [1]பரதந்திரராயிருப்பார்க்கு உடையவன் வருந்தலையும் பொறுக்கவேணு மன்றோ; ஸ்வதந்திரனுக்கு அதுவேண்டாமே. [2] இப்படி இரண்டு இடமும் விலக்ஷணமாயிருக்கிற இருவரையும் உத்தேசியமாகக் கொண்டிருக்கிற முமுக்ஷுக்களுக்கு ஒருகுறை உண்டோ? [3]இவர்களைத் தனித் தனியே பற்றினார்க்கு ஸ்வரூபத்தின் அழிவே அன்றோ. 'மிதுனமே உத்தேசியம்' என்று இருப்பார்க்கு ஆத்ம உஜ்ஜீவனமன்றோ. இராவணாதிகள்பக்கல் இவ்வர்த்தம் காணவுமாம்.

அலர்மேல் மங்கை - மலரில் தள்ளத் தக்கனவான தாதும் சுண்ணமும் கழிந்த பரிமளமே வடிவானாற்போலே இருந்துள்ள மிருதுத்தன்மையும், எப்பொழுதும் அநுபவிக்கத் தக்கதான பருவமுமுடையவள். [4]அவனை 'அகலகில்லேன்' என்னச் செய்யவல்ல பரிகரத்தையுடைய இவள், 'அகலகில்லேன்' என்கிறாள் அன்றோ. [5]அவன் மார்வின் சுவடு அறிந்த பின்பு, பிறந்தகமான பூவும் நெருஞ்சி முள்ளினைப் போன்றதாயிற்றாதலின் '**உறைமார்பா**' என்கிறது. என்றது, [6]ஸ்ரீ ஜநக ராஜன் திருமகள் பெருமாளைக் கைப்பிடித்த பின்பு ஸ்ரீமிதி

1. நன்று; அவன் "ஒருகணநேரத்துக்குமேல் பிழைத்திருக்க மாட்டேன்" என்னுநிற்க, இவள் "ஒருமாதத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன்" என்னுதல் பிராவண்யத்துக்குத் தாழ்ச்சி அன்றோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரதந்திரராயிருப்பார்க்கு' என்று தொடங்கி.

2. இதுகாறும் கூறியவற்றால் பலித்தபொருளை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

3. இருவரும் உத்தேசியமாகப் பற்றாமல், 'தனித்தனியே பற்றினாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்களை' என்று தொடங்கி. 'ஆதி' என்றதனால், ஸ்ரீ விபீஷணாழ்வானையும் சூர்ப்பணகையையும் கொள்க.

4. வியாக்யாதாவின் ஈடுபாடு, 'அவனை அகலகில்லேன்' என்று தொடங்கும் வாக்கியம். 'பரிகரம்' என்றது, வைலக்ஷண்யத்தையும் பருவத்தையும்.

5. "உறைமார்பா" என்ற நிகழ்கால வினைத்தொகைக்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் மார்வின்' என்று தொடங்கி.

6. பலகாலம் பயின்றது ஒன்றனை, நினையாதிருக்கப்போமோ? என்ன, திருஷ்டாந்தத்தோடு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீ ஜநகராஜன்' என்று தொடங்கி.

லையை நினையாதவாறு போலவும், முக்தன் "சனங்களின் சமீபத்திலுள்ள இந்தச் சரீரத்தை நினைப்பதில்லை" என்கிற படியே, சம்சாரத்தை நினையாதவாறு போலவும், அவன் மார்வில் இனிமை அறிந்த பின்பு பூவினை நினைத்திலள் என்றபடி. [1]சுருக்கமற்ற ஞானத்தினையுடையரா யிருக்கச்செய்தே சம்சாரத்தைக் காணாத இடம் ஞானக் குறை அன்றே: இனிமையின் மிகுதி அன்றோ; இவளும் இனிமையாலே அன்றோ காணாது ஒழிகிறது. [2]இவள் பூவினைக் காணாதவாறு போன்று திருமார்விற்கு அவ்வருகே வேறு அவயவங்களைக் காணளாதலின் '**உறைமார்பா**' என்கிறது. மற்றுள்ள அவயவங்கள் குமர் கிடந்து போமத்தனை. இவ்வளவால் என் சொல்லியவாறோ? எனின், ஸ்ரீ என்ற சொல்லின் பொருளும், மதுப்பின் பொருளும் சொல்லியபடி. [3]ஸ்ரீ சப்தம், புருஷகாரம் வேண்டுகையாலே சொல்லிற்று; [4]மதுப்பில், எப்பொழுதும் சேர்ந்திருப்பதற்குப் பிரயோஜனம் என்? என்னில், பற்றுகிற அடியார்கட்குக் காலம் பார்க்கவேண்டாதபடி எப்பொழுதும் அண்மையில் இருத்தல் பயன்.

நிகர்இல் புகழாய் - நாராயண சப்தார்த்தம் சொல்லுகிறது. [5]உபயவிபூதிகளோடு கூடி இருத்தலும், "தத்துவங்கள் நரனிடமிருந்து உண்டாயின; ஆதலால், இவற்றை நாரங்கள் என்று அறிகிறார்கள்; அவையே அவனுக்கும் இருப்பிடம்; ஆதலால், அவன் நாராயணன் என்று சொல்லப்படுகிறான்"

---

1. முக்தன் அங்குள்ள இனிமையின் மிகுதியாலே சம்சாரத்தை நினைப்பது இல்லை என்ன வேண்டுமோ? ஞானக் குறைவாலே நினைப்பது இல்லை என்றாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சுருக்கமற்ற' என்று தொடங்கி.

2. "மார்பா" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் பூவினை' என்று தொடங்கி. குமர் கிடந்து போதல் - அநுபவ யோக்கியமின்றிக் கிடத்தல். குமர் - குமரி.

3. ஸ்ரீ சப்தம் - ஸ்ரீ என்ற சொல்லின் பொருள்.

4. 'மதுப்பில்' என்றது, துவயத்தில் "ஸ்ரீமத்" என்றதிலேயுள்ள "மத்" என்னும் இடைச்சொல்லினை.

5. மற்றைய குணங்களைக் காட்டிலும் இதற்கு ஒப்பு இல்லாமையைச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'உபய விபூதிகளோடு' என்று தொடங்கி.

"நராத் ஜாதாநி தத்வாநி நாராணீதி ததோவிதுঃ
தாந்யேவச அயநம் தஸ்ய தேந நாராயணঃ ஸ்ம்ருதঃ"

என்பது, பாத்மபுராணம்.

என்கிறபடியே, உலகத்திற்குக் காரணமாயிருத்தலும் இச் சொல்லுக்குப் பொருளாம். இங்ஙனமிருக்கச்செய்தே, நம் ஆசாரியர்கள் பற்றுவதற்கு அவசியமான சௌலப்யம் முதலான நான்கு குணங்களையும் அர்த்தமாகச் சொல்லிப் போருவர்கள்; அக்குணங்களுக்கு முறை அருளிச்செய்கிறார் இவர். அக்குணங்களைச் சொல்லுகிற இடத்தில், வாத்சல்யம் முன்னாகச் சொல்லுவான் என்? என்னில், இவன் குற்றங்களோடு கூடியவனாகையாலே, இக் குற்றங்களைப் பொறுக்கைக்கு, உறுப்பாகப் புருஷகாரம் வேண்டினால், உடனே இக் குற்றங்களைப் போக்கியமாகக் கொள்ளத்தக்கது ஒருகுணம் முன்னாக வேண்டுகையாலே. நன்று; 'நிகரில் புகழாய்' என்றால், வாத்சல்யத்தைக் காட்டுமோ? என்னில், [1]இதற்குப் பொருள், கத்தியத்திலே [2]"எல்லை இல்லாத காருண்யம் சௌசீல்யம் வாத்சல்யம் முதலிய குணங்களுக்கு இருப்பிடமானவனே!" என்று குணங்களோடு ஒருசேர எடுத்து, [3]"தன்னைச் சார்ந்தவனிடத்தில் வாத்சல்யத்திற்கு முக்கியமான சமுத்திரம் போன்றவனே!" என்று இந்தக் குணத்தை விசேடிக்கையாலே சொல்லிற்று.

உலகம் மூன்றுடையாய்-மேலே கூறிய வாத்சல்யத்துக்கு அடியான குடல் துடக்கைச் சொல்லுகிறது. [4]தன்வயிற்றிற் பிறந்த காரணத்தாலே அன்றோ தாய் வத்சலை ஆகிறாள். என்னை ஆள்வானே - இதனால் சௌசீல்யத்தைச் சொல்லுகிறது. வெறுமை முன்னாக அடைகிறவர் '**என்னை ஆள்வானே**' என்று கைங்கரிய தசைபோலே, [5]உபகாரம் தோற்றச் சொல்

1. 'இதற்குப் பொருள்' என்றது, இதற்குக் காரணம் என்றபடி. கத்யம் - எம்பெருமானார் அருளிச்செய்தது.

2. "அபார காருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய" என்பது, கத்யம்.

3. "ஆஶ்ரித வாத்ஸல்யைக ஜலதே" என்பது, கத்யம்.

4. வாத்சல்யத்துக் காரணம் குடல் துடக்கு என்னுமதனை உதாரண முகத்தால் காட்டுகிறார் 'தன்வயிற்றில்' என்று தொடங்கி.

5. 'உபகாரம் தோற்றச் சொல்லப் பெறுவரோ?' என்றது, "புகல் ஒன்றில்லா அடியேன்" என்று தன்வெறுமையை முன்னாகக்கொண்டு அடைகிறவர், "என்னை" என்று, தமக்கு என்று கைம்முதல் சில உண்டாக, அத்தாலே ஆளுகிறான் என்று சொல்லப் பெறுவரோ? என்றபடி. உபகாரம் தோற்ற - தாம் ஓர் உபகாரம் செய்தமை தோற்ற.

லப் பெறுவரோ? என்னில், [1] புருஷகாரத்தைப் பார்த்து வார்த்தை சொன்னூர் முதல்பதத்தில்; பின்னர், உபாயத்தைப் பார்த்து வார்த்தை சொன்னூர்; இதில், உலகத்தைப் பார்த்துச் சொல்லுகிறூர். என்றது, [2]உலக விஷயங்களினுடைய லாபா லாபமே பேறு இழவாக இருக்கிறவர்களிலே வேறுபட்டவரா யிருக்கிற தம்மை, '**கர்மம் முதலான உபாயங்கள் சொரூப விரோதிகள்**' என்று அறியும்தனையும் வர நிறுத்தி, பிராட்டி புருஷகாரமாகத் தானே உபாயமும் தானே உபேயமும் என் னும்படி செய்த உபகாரத்தைச் சொல்லுகிறூர் என்றபடி. இது, சௌசீல்யமானபடி எங்ஙனே? என்னில், [3]"சீலமென் பது, பெரியவனுக்குச் சிறியவர்களோடு கூட(உண்டான) நெரு ங்கிய கூட்டுறவு" என்கிறபடியே, தன் மேன்மையையும் இவர் சிறுமையையும் பாராமல் ஒருநீராகக் கலந்தான் ஆகையாலே என்க. 'நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே' என்றதனுல், சௌலப்யம் சொல்லுகிறது. [4]"வைகுந்தத் தமரரும் முனிவரும்" என்றும், [5]"பக்தர்களோ டும் பாகவதர்களோடும் கூட" என்றும் சொல்லப்படுகையாலே இருவகையாக '**அமரர் முனிக்கணங்கள்**' என்கிறது. '**நிகர் இல்**' என்பான் என்? என்னில், இவர்களுக்கு ஒருவரும் ஒப்பு அல்லர்; [6]பிரகிருதி சம்பந்தத்தாலே சம்சாரிகள் ஒப்பு அல் லர்; பிரகிருதி சம்பந்தத்தினின்றும் விடுபட்டவர்களாகை

---

1. தம்முடைய தகுதி இன்மையை நினைத்த நினைவாலே அருளிச்செய் கிறூர் என்கிறூர் 'புருஷகாரத்தை' என்று தொடங்கி. என்றது, பாவங்களைச் செய்து பாவியான சேதனனை ஈசுவரனோடே சேர்க்கும் புருஷகார வைபவத் தைப் பார்த்து "அகலகில்லேன்" என்று தொடங்கி அருளிச்செய்தார். புருஷ காரமே மிகையாம்படி இவ் வாத்மாவினுடைய தோஷத்தையே பச்சையாகக் கொண்டு காக்கும் உபாய வைபவத்தைப் பார்த்து "நிகரில் புகழாய்" என்று தொடங்கி அருளிச்செய்தார். இதில், உலகத்தாரில் வேறுபட்டவராயிருக்கிற தம்முடைய தகுதியின்மையைப் பார்த்து, சம்சாரிகளில் வேறுபட்டவராயிருக் கிற "என்னை" என்கிறூர் என்றபடி. இப்படி ஆனுல் அன்றோ சௌசீல்யம் தோற்றுவது.

2. மேலே அருளிச்செய்ததனை விவரணம் செய்கிறூர் 'உலக விஷயங் களினுடைய' என்று தொடங்கி.

3. "சீலம்ஹி நாம மஹதோ மந்தைஃ ஸஹ
நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷஃ"

4. திருவாய். 10. 9 : 9.

5. "பக்தைஃ பாகவதைஃ ஸஹ" இச்சுலோகத்தை மேலே காண்க.

6. 'ஒருவரும் ஒப்பு அல்லர்' என்றதனை விவரணம் செய்கிறூர் 'பிரகிருதி' என்று தொடங்கி.

யாலே முக்தர்கள் ஒப்பு அல்லர்; [1] உலகத்தைப் படைத்தல் முதலான செயல்கள் உண்டாகையாலே, ஈசுவரன் ஒப்பு அல்லன். "உலகத்தைப் படைத்தல் முதலான செயல்கள் நீங்க" என்று விலக்கி, "போகமாத்திரத்தில் ஒப்புள்ள அடையாளத்தாலும்" என்கிறபடியே, பகவானுடைய அநுபவத்தில் மாத்திரம் சம்பந்தம் சொல்லுகையாலே. இருட்டு அறையிலே விளக்குப்போலே, பரமபதத்திற் காட்டிலும் [2] "கானமும் வானரமும்" என்கிறபடியே, எத்தனையேனும் தாழ்ந்தார்க்கும் முகம் கொடுக்கிற சீலம் முதலான குணங்கள் இங்கே உள்ளன ஆகையாலே, அங்கே இல்லாததும் இங்கே பெறுகையாலே '**விரும்பும் திருவேங்கடத்தானே**' என்கிறது. [3]சௌலப்யமாவது, உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடு வாசிஅறச் சர்வசுலபமான அர்ச்சகபராதீனத்வம்.

[4]புகல் ஒன்று இல்லா அடியேன் - "பிரபத்யே" என்கிற இடத்தில், தன்மை இடத்தால் வந்த அதிகாரி சொரூபத்தைச் சொல்லுகிறது. அநந்யகதித்வமும், சொரூபப் பிரகாசமான அநந்யார்ஹசேஷத்வமும் சொல்லுகிறது. [5]'புகல் ஒன்று இல்லா' என்றும், 'அடியேன்' என்றும் இரண்டும் சொல்ல

1. ஆயின், இவர்களுக்கு உலகத்தைப் படைத்தல் முதலான செயல்கள் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உலகத்தை' என்று தொடங்கி.

"ஜகத்வ்யாபார வர்ஜம் ப்ரகரணாத் அஸந்நிஹிதத்வாத்ச"
என்பது, பிரம்ம சூத்திரம் உத்தரமீமாம்சை, 4. 4: 17.

"போகமாத்ர ஸாம்யலிங்காத்ச"
என்பது, பிரம்மசூத்திரம் உத்தரமீமாம்சை, 4. 4: 21.

2. நான்முகன் திருவந். 47.

3. "திருவேங்கடத்தானே" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'சௌலப்யமாவது' என்று தொடங்கி.

4. "புகல் ஒன்றில்லா" என்றதனால், பிரபத்திக்கு அங்கமான ஆகிஞ்சந்யமும், "அடியேன்" என்றதனால், அநந்யகதித்வமும், சொரூபப் பிரகாசமான அநந்யார்ஹசேஷத்துவமும் சொல்லுகிறது. "அடியேன்" என்ற சொல்லுக்கு நேர்பொருள், அநந்யார்ஹசேஷத்துவம். பொருளாற்றலால் போந்த பொருள், அநந்யகதித்வம். ஆகிஞ்சந்யமாவது, வேறு உபாயங்கள் இன்மை.

5. "புகல் ஒன்று இல்லா" என்று தொடங்கும் வினாவிற்குக் கருத்து, "புகல் ஒன்றில்லா" என்பதும், ஆகிஞ்சந்யம் சொரூபத்திலே பிரகாசிக்கும்படியான அநந்யார்ஹசேஷத்துவத்தைச் சொல்லுகையாலே, இவற்றுள், ஒன்றே போதியதாமே? இரண்டும் கூறல்வேண்டுமோ? என்பது.

வேணுமோ? என்னில், [1]பிரகிருதி சம்பந்தத்தில் பாரமார்த்தியத்தாலேயும், மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஞான வைபவத்தாலேயும் அருளிச்செய்கிருர். உன் அடிக் கீழ் - [2]"சரணௌ" என்ற பதத்தால் சொல்லப்படுகிற விக்கிரஹத்தைச் சொல்லுகிறது. யாங்ஙனம்? எனின், [3]எளிதில் பற்றக்கூடியதாய், உலக விஷயங்களிலே அருசி முன்னுகத் தன்பக்கல் ருசியையும் உண்டாக்கி, பிறந்த உருசியையும் வளர்த்து, பேற்றிற்கு விரோதமாயுள்ளனவற்றையும் தவிர்த்து, ஒருதேச விசேடத்திலே போனுல் நித்தியமாகக் கைங்கரியத்தைச் செய்வதற்கு எதிர்த்தொடர்புள்ளதுமாய், எப்பொழுதும் பார்த்துக்கொண்டே இருப்பதற்கு விஷயமுமாவது விக்கிரஹம் ஆகையாலே என்க. [4]முதல் முதலிலே, "துயர் அறு சுடர்அடி தொழுது எழு" என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்து, தாம் பற்றுகிற இடத்தில் "உனபாதம் கூடுமாறு

---

1. வேறு உபாயங்களை நீக்குதலாகிய ஆகிஞ்சந்யத்திலே, அஜ்ஞானமும் ஞாநுதிக்யமும் பக்திபாரவஸ்யமும் என்னும் மூன்று காரணங்களும் உண்டாகையாலே, அதனைத் தெரிவிப்பதற்கு இரண்டும் வேண்டும் என்கிருர் 'பிரகிருதி சம்பந்தத்தில்' என்று தொடங்கி. 'பாரமார்த்தியத்தாலே' என்றது, யாதானும் ஒருபயனைக் கொடுப்பதாலே என்றபடி. இதனுல், பிரகிருதிசம்பந்தமான அஜ்ஞானத்தாலே என்பதனைத் தெரிவித்தபடி. 'மதி' என்கையாலே, ஞாநுதிக்யமும், 'நலம்' என்கையாலே, பக்தி பாரவஸ்யமும் சொல்லப்பட்டன. "இம்மூன்றும் மூன்று தத்துவத்தைப் பற்றிவரும்" என்பது, ஸ்ரீ வசன பூஷணம்.

2. திருவடிகள், திருமேனியின் ஏகதேசமாகையாலே, திருவடிகளைச் சொன்னது திருமேனிக்கும் உபலக்ஷணம் என்று கொண்டு அருளிச்செய்கிருர் 'சரணௌ' என்று தொடங்கி. 'சரணௌ' என்பது, துவயத்தில் உள்ளது ஒருபதம்.

3. விக்கிரகமாகக்கொண்டு பொருள் அருளிச்செய்தற்குப் பயன் யாது? என்ன, 'எளிதில் பற்றக்கூடியதாய்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். 'பேற்றிற்கு விரோதமாயுள்ளனவற்றையும்' என்றது, அவித்யாதிகளை.

4. இவ்வாழ்வார், சொரூபத்தைக் காட்டிலும் குணங்களைக் காட்டிலும் விக்கிரஹத்திலே மண்டி இருப்பர் என்கிருர் 'முதல்முதலிலே' என்று தொடங்கி. இப்படியே, தெய்வப் புலமைத் திருவள்ளுவனுரும் தம் நூலில் கடவுள் வாழ்த்தில் ஏழு குறட்பாக்களில் விக்கிரஹத்தையே சிறப்பித்துப் பாடியிருத்தலால், அவரும் விக்கிரஹசௌந்தர்யத்திலே மண்டியிருக்கும் பெரியார் ஒருவர் என்பது போதரும். போதரவே, இவ்விஷயத்தில் இவ் விருபெரியார்களுடைய கருத்துக்களும் ஒன்றே என்பது தெளியப்படும்.

கூறாய்" என்றும், "உன்னடிசேர் வண்ணம் அருளாய்" என்றும், "உன்னடி சேர அடியேற்கு ஆஆ என்னாயே!" என்றும், "பூவார் கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராய்" என்றும், "உனபாதம் சேர்வது அடியேன் எந்நாள்" என்றும், "எந்நாள் உன்னடிக்கள் அடியேன் மேவுவதே?" என்றும், "நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலாதாற்றேன்" என்றும், "அடியேன் உனபாதம் அகலகில்லேன் இறையும்" என்றும், "உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்றும் இவர் அடிவிடாமல் அநுசந்தித்தபடி கண்டதே!

அமர்ந்து - அமருகையாவது, வேறு உபாயங்களை விட்டதைப் போன்று, வேறு பலன்களில் அருசியைச் சொல்லுகிறதோ? என்னில், அது இங்குச் சொல்லப்பட வேண்டியது இல்லாமையாலே பொருள் அன்று; இதற்குப் பொருள், [1]"எல்லாத் தர்மங்களையும் விட்டு" என்றும், "பற்றுக்கோடாகப் பற்று" என்றும் சொல்லச்செய்தே "ஏகம்" என்னும் சொல்லைச் சொன்னதைப் போன்று, திருவேங்கடமுடையான் திருவடிகளும் தம்முடைய தலையும் கொக்குவாயும் படுகண்ணியும் போலே இடைவெளி இல்லாமல் பொருந்தினபடி சொல்லுகிறது. புகுந்தேனே - பிரிந்துநிற்றல் முதலானவைகள் இல்லாதபடி சரீரத்தைப் போன்று சேஷமான தமக்கு அந்தர்யாமியாய் நிற்கிறபடியை அறிந்திருக்கிற இவர், '**புகுந்தேன்**' என்கிற இது, ஒருபோக்கு வரத்து உண்டாய் அன்று; அவனுடைய சர்வஜகத்காரணத்வத்தையும் ஸர்வாத்மபாவத்தையும் ஸர்வரக்ஷகத்வத்தையும் அறிந்து, '**அவனே உபாயம்**' என்று அறுதியிட்டிருக்கிற அத்யவஸாய ஞானத்தைச் சொல்லுகிறது. [2]"கதிவாசக சப்தங்கள்-புத்திவாசகங்கள்" என்கிறபடியே. புகுந்தேன்-[3]"பிரபத்யே-பற்றுகிறேன்" என்னும்

1. "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்பது, ஸ்ரீகீதை. 18 : 66.

2. "புகுந்தேன்" என்பதற்கு அருளிச்செய்த பொருள் அழகிது; ஆனால், அச்சொல், அப்பொருளைக் காட்டவேண்டுமே? எனின், "எதுஎது போதலைக் காட்டுகிற வினைச்சொல்லோ அது அது புத்தியைக் காட்டுகிற சொல்லாம்" என்கிற நியாயத்தாலே கூறினோம் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கதிவாசகசப்தங்கள் புத்திவாசகங்கள்' என்று. கதிவாசகசப்தங்கள் - வினைச்சொற்கள்.

3. துவயத்தில் "பிரபத்யே" என்று நிகழ்காலமாகச் சொல்லியிருக்க, "புகுந்தேன்" என்று இறந்தகாலமாகக் கூறலாமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரபத்யே' என்று தொடங்கி. என்றது, "ஸக்ருதேவஹி

நிகழ்காலம் முக்கியம் அன்று; **அடைந்தேன்** என்பதுபோன்று, '**புகுந்தேன்**' என்கிற இதுவே முக்கியம்.

[1]பாபாநாம் வா - [2]பிராட்டியினுடைய அபயப்பிரதானம் இந்தச் சுலோகம். [3]'இராவணனும் பட்டு, பெருமாளும் வெற்றியோடு கூடியவரானர்' என்று பெரிய பிரியத்தைப் பிராட்டிக்குத் திருவடி விண்ணப்பம் செய்ய, [4]பிராட்டியும் பிரீதியின் மிகுதியாலே விம்மல் பொருமலாய்ச் செயலற்றவளாயிருக்க, இவனும் விக்கலுக்கு வெம்மாற்றம்போலே [5]"ஏதேவி! எண்ணுவது யாது? தேவரீர் என்னேடு ஏன் பேசவில்லை" என்கிற படியே, பெரிய பிரியத்தை வந்து விண்ணப்பம்செய்த எனக்கு ஒரு மறுமாற்றம் சொல்லாமல் தேவரீர் எழுந்தருளியிருக்கிற இருப்பு என்தான்? என்று திருவடி விண்ணப்பம் செய்ய, பிராட்டியும் "உனக்கு ஒத்ததாகத் தரலாவது ஒன்று இல்லாமைகாண் நான் பேசாதிருந்தது" என்ன, இவனும் "இவ்வளவிலே நம் விருப்பத்தை விண்ணப்பம் செய்துகொள்ள வேணும்" என்று பார்த்து, "தேவரைச் சுற்றும் முற்றும் நலிந்த அரக்கியர்களாகிறர் கொடுமையுடையவர்களாய் அதற்குத் தக்க காரியங்களைச் செய்கிறவர்களாயிற்று: இராவணனுக்கு முன்னரே கொல்லப்பட வேண்டியவர்கள் இப்பெண் பிள்ளைகளாயிற்று: அவனும் இவர்களைப் போன்ற கேடன் அல்லன்; [6]இவர்கள் இப்போது பாம்பு படம் அடங்கினற் போலே இருக்கிறர்களித்தனையாயிற்று; இவர்களைப் பலவகை

---

ஶாஸ்த்ரார்த்த:-பரபத்தி ஒருமுறையே செய்யத்தக்கது" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

1. முதல் யோஜனையிலே "அகலகில்லேன்" என்ற பதத்திற்குப் பொருள் அருளிச்செய்யுங்கால் 'தொட்டாரைத் தொட்டு, நகஶ்சித் நாபராத்யதி' என்று மேற்கோளாக எடுத்த சுலோகத்திற்கு விரிவாகப் பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றிப் பதங்களை எடுக்கிறர் 'பாபாநாம்வா' என்று.

2. இதனுடைய சீர்மையை அருளிச்செய்கிறர் 'பிராட்டியினுடைய' என்று தொடங்கி.

3. சுலோகத்திற்கு அவதாரிகை அருளிச்செய்கிறர் 'இராவணனும் பட்டு' என்று தொடங்கி.

4. 'பிராட்டியும் பிரீதியின் மிகுதியாலே' என்று தொடங்கி அருளிச்செய்யுமிவ்விடத்தில், கம்பராமாயணம் மீட்சிப்படலம் 23-முதல் 36-முடியவுள்ள செய்யுட்களைப் படித்து அறிதல் தகும்.

5. "கிம்நு சிந்தயஸே தேவி கிம் த்வம் மாம் நாபிபாஷஸே" என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 15.

6. இவர்கள் இப்போது ஒன்றும் செய்ய இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறர் 'இவர்கள் இப்போது' என்று தொடங்கி,

யாக வருத்துவதற்கு எண்ணங்கொண்டுள்ளேன். [1]"கைக ளாலே குத்தியும் கால்களாலே துகைத்தும் நகங்களாலே பிளந்தும் பற்களாலே கடித்தும் துண்டித்தும்"[2]"சிந்நபிந்நம்" என்கிறபடியே, பெருமாள் திருச்சரங்கள் செய்தவை எல்லாம் நானே செய்ய எண்ணுகிறேன் ; பகவானுக்கு அபசாரம் செய் தவர்களையும் பாகவதர்களுக்கு அபசாரம் செய்தவர்களையும் தண்டிக்கும் முறையிலே தண்டிப்பதற்குக் கோலாநின்றேன்; [3]முன்பு வந்தபோது இடம் இல்லாமை விட்டுப் போனேன் இத்தனை; இப்போது எனக்கு எல்லாக் கைம்மாறுகளையும் பண்ணியருளிற்று ஆகலாம்; இவை இத்தனையும் திருவுள்ள மாகவேணும் என்தான்? என்ன, "பாபாநாம் வா" என்று அருளிச்செய்கிறான்.

பாபாநாம் வா ஶுபாநாம் வா- [4]இவர்கள் நீ நினைத்திருக் கிறபடியே பாவத்தைச் செய்தவர்கள் ஆகவுமாம். நான் நினைத் திருக்கிறபடியே நல்வினையைச்செய்தவர்கள் ஆகவுமாம்.[5] அது தானே அன்றோ உத்தேசியம்;[6]"அவனுக்குக்குற்றமிருந்தாலும் இருக்கட்டும்; நல்லோர்களுக்கு இது பழிக்கத்தக்கது அன்று"

---

1. "முஷ்டிபி: பாணிபி: சைவ சரணை: ச ஏவ ஶோபநே
இச்சாமி விவிதை: காதை: ஹந்தும் ஏதா: ஸுதாருணா:"
என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 33.

2. "சிந்நம் பிந்நம்" ஸ்ரீராமா. யுத். 94 : 22.

3. அப்போதே செய்யாது ஒழிந்தது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முன்பு வந்தபோது' என்று தொடங்கி.

4. "பாபாநாம்வா சுபாநாம்வா" என்கிற விகல்பம், புத்தி பேதத்தாலே என்கிறார் 'இவர்கள்' என்று தொடங்கி.

5. புண்ணியத்தைச் செய்தவர்கள் உத்தேசியராவரே ஒழிய, பாவிகள் உத்தேசியராவரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அது தானே அன்றோ' என்று தொடங்கி. என்றது, அவர்கள் பாபிகள் ஆனதுவே அன்றோ நாம் பாதுகாத்தற்குக் காரணம் என்றபடி.

6. பாபிகளைப் பாதுகாப்பார் உளரோ? என்ன, 'அவனுக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்"
என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 3.

இன்றுவந் தான் என் றுண்டோ எந்தையை யாயை முன்னைக்
கொன்றுவந் தானென் றுண்டோ புகலது கூறு கின்றான்
தொன்றுவந் தன்பு பேணும் துணைவனு மவனே பின்னைப்
பின்றுமென் றாலும் நம்பாற் புகழன்றிப் பிறிதுண் டாமோ.
என்றார் கம்பநாட்டாழ்வார். (விபீடணனடைக்கலப்படலம்)

என்றாற்போலே. [1]'அழுக்குடையவன் அன்றோ குளிக்கத் தகுதியுடையவன்: அவர்கள் பாபத்தைச் செய்தவர்களாகில் அன்றோ நாம் முகம் கொடுக்கவேண்டுவது. [2]நல்வினையராகில் உன் வால் வேணுமோ? அவர்கள் புண்ணியங்களே அவர்களுக்குக் கைகொடுக்குமே: கைம்முதல் இல்லாதார்க்குஅன்றோ நாம் கைம்முதல் ஆகவேண்டுவது' என்றாள். வதார்ஹாணும்-தண்டிக்க வேண்டியவர்களைத் தண்டிக்கவும் அல்லாதாரைத் தவிரவும் சொல்லுகிற தர்மசாஸ்திரம் தேவரைத் தொற்றிக் கிழித்துப் பொகடக்கடவதோ? என்ன, சரண் அடைந்தவர்கள் யாவரேயாயினும் அவர்கள் காப்பாற்றப்படவேண்டும் என்கிற விசேஷ சாஸ்திரம் உன்னைத் தொற்றிக் கிழித்துப் பொகடக்கடவதோ? என்கிறாள். [3]"ஶரணம்" என்று வந்த ஸ்ரீ விபீஷணாழ்வான் தோஷவானேயாகிலும் "நத்யஜேயம்-விடமாட்டேன்" என்று பெருமாள் கடற்கரையிற் சொன்ன வார்த்தை கடல் ஓசையாகக் கடவதோ? என்கிறாள். பிலவங்கம-[4]பின்னையும் இவன் புத்தியைத் திரியவிடாமையினாலே ஹரி! ஹரி! என்கிறாள். அன்றிக்கே, [5]வசிஷ்டர் முதலாயினோர் இருந்து ஆலோசனை சொல்லும் குடியான இக்ஷ்வாகு

---

1. இப்படிச் சொல்லுகிற பிராட்டியினுடைய மனோபாவத்தை இரண்டு வகையாக அருளிச்செய்கிறார் 'அழுக்குடையவன்' என்று தொடங்கி. என்றது, பாபிகள் தங்கள் பாபத்தைப் போக்கிக்கொள்ள விரும்புவராதலானும், நமக்கும் புண்ணியவான்களைக் காட்டிலும் பாபிகளைக் காத்தலே செய்யக்கூடிய காரியமாகையாலும், பாபிகளாய் இருப்பதுவே நமக்கு உத்தேசியம் என்றபடி.

2. ஆயின், புண்ணியவான்களுக்குத் தேவரீர் வேண்டாவோ? என்ன, அவர்களுக்கு நானும் வேண்டா, நீயும் வேண்டா; பாபிகளுக்கு இருவரும் வேண்டும் என்கிறாள் 'நல்வினையராகில்' என்று தொடங்கி. 'உன்வால் வேணுமோ?' என்றது, உயிர் உடலை விட்டுப் பிரியுங் காலத்தில் செய்யும் கோதானத்தின் பலத்தால் வைதரணி என்ற ஆற்றைக் கடக்கும்போது பசுவின் வாலைப் பிடித்துக்கொண்டு போமாறுபோலே உன்னுடையதயவு வேண்டுமோ? என்றபடி.

3. 'சரண் அடைந்தவர்களை ரக்ஷிக்கவேண்டும்' என்று சொன்ன இடம் உண்டோ? என்ன, 'ஶரணம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கம்பராமாயணம் விபீடணன் அடைக்கலப்படலம், 109-முதல் 120-முடியவுள்ள செய்யுட்களை இங்கு நோக்குக.

4. "வதார்ஹாணும்" என்றதன்பின் "பிலவங்கம" என்றதற்கு ரசோக்தியாக, பாவம் அருளிச்செய்கிறார் 'பின்னையும்' என்று தொடங்கி.

5. "வதார்ஹாணும்" என்றதன்பின், "பிலவங்கம" என்று விளிக்கிற பிராட்டியினுடைய மனோபாவத்தை வேறு வகையாகவும் அருளிச்செய்கிறார் 'வசிஷ்டர்' என்று தொடங்கி.

வம்சத்தில் பிறந்தாய் இல்லை; யோகியான ஜனகன் குலத்தில் பிறந்தாய் இல்லை; காட்டிலே பணையோடு பணை தத்தித் திரியும் ஜாதியிலே அன்றோ பிறந்தது! அங்ஙன் ஒத்தார்க்குச் சரணாகதியினுடைய தன்மை தெரியாதன்றோ என்பாள் '**பிலவங்கம**' என்கிறாள் என்னுதல். அன்றிக்கே, [1]நச்சினதை நச்சும் சாதியானமை கண்டோமே என்பாள் '**பிலவங்கம**'என்கிறாள் என்னுதல். அன்றிக்கே,[2]அரசருமாய் மூலையடியே நடக்கவுரியருமாயிருக்கிற பெருமாளும் எங்கள் முன் இத்தனை கோபித்து அறியார்; நீ வானரசாதியாயிருந்து வைத்து இங்ஙன் கோபிக்கக் கடவையோ? என்பாள் '**பிலவங்கம**' என்கிறாள் என்னுதல். [3]வாநரோத்தம-என்றவள் தானே அன்றோ ஹரி! ஹரி! என்கிறாள்.

**காரியம் கருணம்**-[4]இவர்கள் புண்ணிய பாவங்கள் கிடக்க; இப்போது ஒடுகிற தயைசெய்யத் தகுந்த தன்மையைப் பாராய். என்றது, [5]உன்கையிலே அகப்பட்டு 'நாம் என்படக் கடவோம்' என்று தியங்குகிறபடி பாராய் என்றபடி. [6]இவர்களுக்கு இரக்ஷகர் வேறு இலரே. இப்போது இவ்வளவில் நாம் இரங்கவேணுங் காண்! **ஆர்யேண**-[7]இவையெல்லாம்இப்போது நான் கற்பிக்க வேண்டும்படியாவதே உனக்கு! **ஆர்யேண** -

---

1. "பிலவங்கம" என்று விசேடித்ததற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'நச்சினதை' என்று தொடங்கி.

2. "பிலவங்கம" என்கிறவளுடைய மனோபாவத்தை வேறும் ஒரு வகையாக அருளிச்செய்கிறார் 'அரசருமாய்' என்று தொடங்கி. என்றது, சாஸ்திரங்கட்குக் கட்டுப்பட்டிருத்தல் இன்றிக்கே இருக்கிற நீ என்றபடி. அல்லது,பெருமாளைப் போன்று சுவதந்திரன் அன்றிக்கே பரதந்திரப்பட்டிருக்கிற நீ என்றபடியாகவுமாம்.

3. "பிலவங்கம" என்றால், நிந்தையாகத் தோற்றுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "வாநரோத்தம" என்று தொடங்கி.

4. பாதுகாத்தல் செய்யவேண்டிய காரியம் என்னுமல், "கருணம் கார்யம்" என்ற பதங்களைப் பிரயோகித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவர்கள்' என்று தொடங்கி.

5. தயைசெய்யத் தகுந்த தன்மைதான் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உன்கையிலே' என்று தொடங்கி. தியங்குகிறபடி-கலங்குகிறபடி.

6. "கார்யம்" என்று, அவசியம் செய்யத் தகுந்ததாகச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இவர்களுக்கு' என்று தொடங்கி.

7. "ஆர்யேண" என்ற பதத்தைப் பிரயோகிக்கிற பிராட்டியினுடைய மனோபாவத்தை இரண்டு வகையாக அருளிச்செய்கிறார் 'இவையெல்லாம்' என்று தொடங்கி.

ஐந்திரவியாகரணபண்டிதன் என்கிறது பொய்யோ? [1]அவற்றையும் எல்லாம் கற்றுக் கேட்டிருக்கச்செய்தேயும், இப்போது இராமகோஷ்டியில் பழக்கம் பின்னாட்டினபடியே யன்றோ. அக் கோஷ்டியிற் பழக்கமன்றோ நீ இங்ஙன் சொல்லவல்லை யாயிற்று, [2]நான் போந்த பின்பு அக்கோஷ்டி இங்ஙனே நீர் அற்றதே அன்றோ என்று கருத்து. ந கஶ்சித் நஅபராத்யதி-[3]சம்சாரத்தில் குற்றம் இல்லாதார் யார்! [4]திரை நீக்கிக் கடல் ஆடப் போமோ?[5]நற்குதிரையாகப் பாவித்திருக்கிற பெருமாள் தாம் குற்றவாளர் அல்லரோ! நான்தான் குற்றவாட்டி அல்லேனோ? நீ தான் குற்றவாளன் அல்லையோ?

பெருமாள் குற்றவாளரானபடி எங்ஙனே? என்னில், தாம் காடேறப் போந்தார்; அவர் பின்னே மடல் ஊர்வாரைப் போலே இளையபெருமாளும் போந்தார்; தம்மோடே ஏகாந்தமாக இன்பம் அநுபவிக்க வேண்டுமென்று இலையகலப்படுத்திக்கொண்டு நானும் போந்தேன்; என்னைப் பிரிந்து பத்து மாதங்கள் இருந்தார்; தாம் வாராவிட்டால் தம்மது ஓர் அம்பு இசங்கமாட்டாமை இல்லை அன்றோ இவ்வழி; இத்தனைநாள் பிரிந்திருக்க வல்லரானபோதே பெருமாள்பக்கலிலே யன்றோ குற்றம்? பாரதந்திரியத்திற்குத் தகுதியாகப் பேசாது இராமல், அதுதன்னைச் சொன்ன என்பக்கல தன்றோ குற்றம்? இனி, நாயகன் சொன்ன காரியம் செய்த அடியாரைத் தண்டிக்கப் பார்த்த அன்று, பெருமாள் அருளிச்செய்த காரியம் செய்யப் போந்த உன்னை முற்படத் தண்டித்துக் கொண்

---

1. இப்படி ஐந்திர வியாகரண பண்டிதனாய் இருக்கச்செய்தேயும் நீ இப்படிச் சொல்லுகைக்குக் காரணம், இராமகோஷ்டியில் பழகின பழக்கம் என்கிறாள் ‘அவற்றையுமெல்லாம்’ என்று தொடங்கி.

2. அக்கோஷ்டியில் பழக்கம் என்றதற்குக் கருத்து என்? என்னில், ‘நான் போந்தபின்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. குற்றமுடையாரைத் தள்ளிக் குற்றம் இல்லாதவர்களைக் கூட்டிக் கொண்டாளோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘சம்சாரத்தில்’ என்று தொடங்கி.

4. ‘குற்றவாளர்’ என்றதனை விசேடித்துக் காட்டுகிறாள் ‘திரை நீக்கி’ என்று தொடங்கி.

5, குற்றம் இல்லாதவர் யாவர்? என்பான் என்? பெருமாள், நான், நீர் என்னும் மூவரும் குற்றமில்லாதவர்கள் அல்லரோ? என்ன, மூவரும் குற்றமுடையவரே என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘நற்குதிரையாக என்று தொடங்கி. நற்குதிரையாக - ஒத்தார் இல்லாதவராக. நற்குதிரை - ஒப்பில்லாமையும், இறுமாந்திருக்கையும்.

டன்றோ இராவணன் சொன்ன காரியங்களைச் செய்த இவர் களைத் தண்டிப்பது? ஆகையால், நீ அன்றோ குற்றவாளன்! [1]'எல்லாப்படியாலும் பெருமாள் ஒரு விஷயத்தை முனிந்த அன்று ஆற விடுகைக்கு நான் உண்டு; நானும் அவர் வழி போக வேண்டி இருந்த அன்றைக்கு நீ உண்டு' என்றிருந் தேன்; நீயும் இங்ஙனேயானால் அபராதம் செய்தார்க்குப் புகு வாசல் உண்டோ? என்கிறாள். (10)

## 662.

அடிக்கீழ் அமர்ந்து புகுந்துஅடியீர் வாழ்மின் என்றென் றருள்கொடுக்கும்
படிக்கே ழில்லாப் பெருமானைப் பழனக் குருகூர்ச் சடகோபன்
முடிப்பான் சொன்ன ஆயிரத்துத் திருவேங் கடத்துக் கிவைபத்தும்
பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரிய வானுள் நிலாவுவரே.

**பொ-ரை:**—அடியீர்! திருவடிகளிலே பொருந்தி புகுந்து வாழுங் கோள் என்று திருவருள் செய்கின்ற, இப்படிக்கு ஒப்பு இல்லாத திரு வேங்கடமுடையானை, வயல்கள் சூழ்ந்த திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் முடிப்பதாக அருளிச்செய்த, ஆயிரத்திலே திருவேங் கடத்தைப் பற்றிய இப்பத்துத் திருப்பாசுரங்களையும் கற்றவர்களைப் பற்றியவர்கள் அந்தமில் பேரின்பத் தழிவில் வீட்டிலே சென்று பேரின் பத்தை அடைவார்கள்.

**வி - கு:**—அடியீர் புகுந்து அமர்ந்து வாழ்மின் என்று அருள் கொடுக்கும் பெருமான் என்க. முடிப்பான்: வினையெச்சம்.

**ஈடு:**—முடிவில், [2]இத் திருவாய்மொழி கற்றார், பரமபதத் திலே சென்று அடிமையிலே முடிசூடினவராய் அடிமைசெய் யப்பெறுவர்கள் என்கிறார்.

---

1. "நகஶ்சித் ந அபராத்யதி" என்றதனுடைய தாத்பரியசித்தமான பொருளை அருளிச்செய்கிறார் 'எல்லாப்படியாலும்' என்று தொடங்கி. 'நீ உண்டு என்று இருந்தேன்' என்றது, ஸ்ரீ விபீஷணாழ்வான் சரணம் புகுந்தபோது மஹாராஜரை உள்ளிட்ட முதலிகள் அனைவரும் 'இவன் கொல லத் தக்கவன்' என்னநிற்க, "தூயவர் துணிதிறன் நன்று தூயதே" என்று தொடங்கி, "ஆதலால் இவன் வரவு நல்வரவே என உணர்ந்தேன்" (கம். விபீ. பட. 89-105) என்பது இறுதியாகக் கூறிப் புருஷகாரம் செய்ததனைத் திருவுள்ளம்பற்றி என்க.

2. "வீற்றிருந்து பெரிய வானுள் நிலாவுவரே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "வீற்றிருந்து" என்ற பதத்தைத் திருவுள் ளம்பற்றி 'அடிமையிலே முடி சூடினவராய் என்கிறார்.

அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின் என்று என்று - [1]உங்கள் உத்தேசியம் கண்டீர்கோளே, இத்திருவடிகளைப்பற்றி ஆழ்ந்து கிருதக்கிருத்தியராய்ப் போங்கோள் என்று. அருள்கொடுக்கும் [2]படிக் கேழ் இல்லாப் பெருமானை - அடியார்கள் விஷயத்தில் அருள்கொடுக்கும் சுபாவத்துக்கு ஒப்பு இல்லாத சர்வேசுவரனை. [3]"மாஶுசः - துக்கப்படாதே" என்ற கிருஷ்ணனும் ஒவ்வான் இவன் படிக்கு. பழனம் குருகூர்ச் சடகோபன் - நல்ல நீர்நிலங்களையுடைய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். முடிப்பான் சொன்ன ஆயிரத்துத் திருவேங்கடத்துக்கு இவைபத்தும் - "பல நீ காட்டிப் படுப்பாயோ" என்கிற சம்சார விரோதத்தை முடிக்கையிலே திருவுள்ளத்தாலே உத்சாஹம்கொண்டு அருளிச்செய்த ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தும் திருமலைக்குச் சொல்லிற்றின. [4]" சுவாமி! இலக்ஷம் பசுவின் விலையை வாங்கிக்கொண்டு சபளை என்கிற காமதேநுவை எனக்குக் கொடுக்கவேண்டும்; இந்தக் காமதேநு பசுக்களில் இரத்தினம் என்பது பிரசித்தம்; தர்மசாத்திரப்படி இரத்தினத்தைக் கொள்ளுகிறவன் அரசன்" என்கிறபடியே.

---

1. அடியவர்கட்கு உத்தேசியம் திருவடிகள் ஆகையாலே 'உங்கள் உத்தேசியம் கண்டீர்கோளே' என்கிறார். அமர்ந்து - வேறு பயன்களைக் கருதாதவர்களாய். கிருதக்கிருத்யர் - செய்யவேண்டிய காரியங்களைச் செய்துமுடித்தவர்கள்.

2. படி - சுபாவம். கேழ் - ஒப்பு.

3. "கேழ் இல்லா" என்றது, யாரை நோக்கி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மாசுசः' என்று தொடங்கி. என்றது, கிருஷ்ணனைப் போன்று காலவிசேஷத்திலே அதிகாரியான அருச்சுனனுக்கு மாத்திரம் அருள் கொடுக்கை அன்றிக்கே, "அடியீர்" என்று கானமும் வானரமும் மானூர்க்கும், "பின்னூர் வணங்கும் சோதி" என்கிறபடியே, எல்லாக் காலத்திலும் எல்லார்க்கும் முகங்கொடுக்கையாலே, கிருஷ்ணனும் ஒப்பு அல்லன் என்றபடி. "அருள்கொடுக்கும்" என்ற நிகழ்காலத்தாலே எல்லாக் காலமும் கிருபைசெய்வான் என்று தோற்றுகிறது. "முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத் தானே" என்பது இலக்கணம். "அடியீர்" என்ற பன்மையாலே, எல்லார்க்கும் திருவருள் புரிதல் பெறுதும்.

4. "இவை" என்றதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'சுவாமி' என்று தொடங்கி. என்றது, 'நல்லன எல்லாம் அரசனுக்குரியன' என்கிறபடியே, இவற்றினுடைய நன்மையாலே, "இவை பத்தும் திருவேங்கடத்துக்கு" என்கிறார் என்றபடி.

" கவாம் ஶத ஸஹஸ்ரேண தீயதாம் சபளா மம
ரத்நம் ஹி பகவந் ஏதத் ரத்நஹாரீ ச பார்த்திவः"

என்பது, ஸ்ரீராமா. பால. 53 ; 9.

பிடித்தார் பிடித்தார் - பிடித்தவர்களைப் பிடித்தவர்கள்; பற்றினாரைப் பற்றினர். வீற்றிருந்து-[1]"அந்த முக்தன் சுவதந்திரனாகிறான், கர்மங்கட்குக் கட்டுப்படாதவனாக ஆகிறான்" என்கிறபடியே, இருவர்க்கும் ஒக்குமன்றோ வீற்றிருக்கை. [2]தன்னினின்றும் வேறுபட்ட எல்லாப் பொருள்களையும் சேஷமாகவுடையனாகையாலே வந்த ஆனந்தத்தையுடையனாயிருப்பான் அவன்: "இவனேயன்றோ ஆனந்திப்பிக்கப்படுகிறான்" என்கிறபடியே, அவன் ஆனந்திப்பிக்க ஆனந்தத்தையடைகின்றவனாக இருப்பான் இவன். பெரிய வானுள் நிலாவுவரே - [3]"மஹாகம்" என்றும், "பரமாகாசம்" என்றும் சொல்லப்படுகிற பரமபதத்திலே வாழப் பெறுவர்கள்.[4]இந்திரன் முதலானோர் வாழும் இவ்வருகில் வெளியில் அன்று;[5]மேல் வரும் அநுபவம்ஒழியப் பேற்றுக்குச் சரணம்புக வேண்டாத தேசத்திலே போய்ப் புகப்பெறுவர். [6]இவர் செய்த சரணாகதியே நமக்கும் எல்லாம்: தனித்து வேண்டா; இத் திருப்பாசுரத்தைச் சொல்லிப் பலத்திலே சேர்தல்அத்தனை. [7]நற்கன்றுக்கு இரங்கினது தோல் கன்றுக்கு இரங்குமாறுபோலே, இவரை நினைத்து இப்

---

1. அவன் அன்றோ வீற்றிருப்பான்? இவனை "வீற்றிருந்து" என்னலாமோ? என்ன, 'அந்த முக்தன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். வீற்றிருத்தல் - வேறுபாடுதோன்ற இருத்தல். "ஸஸ்வராட்பவதி" என்பது, சாந். உப. 7: 25.

2. ஆயின், ஈசுவரனுக்கும் இவனுக்கும் வாசி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன்னினின்றும்' என்று தொடங்கி.

3. "பெரிய வான்" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'மஹாகம்' என்று தொடங்கி.

4. "பெரிய வான்" என்பதற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'இந்திரன் முதலானோர்' என்று தொடங்கி.

5. பரமபதத்துக்குப் பெருமை யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேல்வரும்' என்று தொடங்கி. 'மேல்வரும் அநுபவம் ஒழிய' என்றது, மேலும் மேலும் அநுபவிக்குமது ஒழியச் சரணாகதி செய்ய வேண்டாம் என்றபடி.

6. பிடித்தாரைப் பிடித்தல் மாத்திரம் போதியதாமோ? தனியே இவன் சரணாகதி செய்யவேண்டாவோ? என்ன, 'இவர்செய்த' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. ஞான அநுஷ்டானங்கள் வேண்டாவோ நமக்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நற்கன்றுக்கு' என்று தொடங்கி.

பத்தும் கற்றார் பக்கலிலும் ஈசுவரன் பிரசந்நனும்.[1] ஸ்ரீவிபீஷணாழ்வானோடு வந்த நால்வர்க்கும் அவன்செய்த சரணாகதியே அமைந்ததே அன்றோ. [2]'இவன் உடையவன்' என்று எதிர்த்தலைக்குத் தோற்ற இருக்குமத்தனையே வேண்டுவது. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

உலகுய்ய மால்நின்ற உயர்வேங் கடத்தே
அலர்மகளை முன்னிட் டவன்தன்—மலரடியே
வன்சரணாய்ச் சேர்ந்த மகிழ்மாறன் தாளிணையே
உன்சரணாய் நெஞ்சமே உள். (60)

---

ஆறும்பத்து ஈட்டின் தமிழாக்கம்

முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

நம்பிள்ளை நற்றாள் வாழ்க.

வடக்குத் திருவீதிப் பிள்ளை மலரடி வாழ்க.

மாறன் மலரடி வாழ்க.



---

1. இங்ஙனம் ஒருவர் சம்பந்தங்கொண்டு ஏனையோரையும் அங்கீகரித்த இடம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீ விபீஷணாழ்வானோடு' என்று தொடங்கி.

2. ஆழ்வார் செய்த சரணாகதியே நமக்குஎல்லாம் போதியதாகில், ஞான அநுஷ்டானங்கள், பஞ்ச சம்ஸ்காராதிகள் வேண்டாவோ? திருவாய்மொழியை வறிதே கற்றிருக்க அமையுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவன் உடையவன்' என்று தொடங்கி. என்றது, இந்தப் பாகவதராலே அபிமானிக்கப்பட்டவன் இவன் என்று எதிர்த்தலையான சர்வேசுவரனுக்குத் தோற்றும்படி வாழ்வதிலே ஞான அநுஷ்டானங்கள் பஞ்ச சம்ஸ்காராதிகள் எல்லாம் உள்ளடங்கிக் கிடக்கின்றன என்றபடி.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

## பிற்சேர்க்கை I

—(௦)—

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

செய்யுள் அகராதி முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

ஸ்ரீ:

## பிற்சேர்க்கை II

—:(o):—

## வியாக்கியானத்தில் வந்துள்ள ஐதிஹ்யங்கள்

இவ்விடத்தே பட்டர் அருளிச்செய்வது ஒரு வார்த்தை உண்டு. அதாவது, "சமஸ்த கல்யாண குணத்மகனாய் உபய விபூதியுக்தனாய் ஸர்வாதிகனாய் ஸர்வநியந்தாவாயிருக்கிற சர்வேசுவரன் நான்கு இடைப்பெண்கள் இருந்த இடத்தே புக்கு அல்லது நிற்கமாட்டாத செல்லாமை விளைய, அவர்கள் 'நீ இங்குப் புகுராதே கொள்' என்ன, விலங்கு இட்டாற்போலே பேரவும் திரியவும் மாட்டாதே தடுமாறி நின்றான் என்கிற சௌசீல்யம் யார் அறிந்து கொண்டாட வியாசர் முதலாயினோர் எழுதியிட்டு வைத்துப்போனார்களோ?" என்பது. பக். 126.

இப்பாசுரத்தைச் சீயர் அருளிச்செய்யாநிற்கச்செய்தே, அங்கே இருந்தவரான ஆப்பான் 'இவர்கள் இவனைக் கடந்து போனார்களாகிற் செய்வது என்?' என்று கேட்க, 'அது யார் காரியம்? பின்னை இரண்டத்தில் ஒன்று சித்திக்கும் என்றன்றோ அவன்தான் கிடந்தது!' என்று அருளிச்செய்தார். பக். 135.

'நல்லாரும் நம்பிசேநாபதிதாசரும் கூடத் திருமலைக்குப் போகாநிற்க, ஸ்ரீ நம்பிசேநாபதிதாசர் ஒருகோலை இட்டுத் தூற்றை அடிக்க, நல்லார், அர்த்தகாம நிமித்தமான துவேஷம் இதனோடு இன்றிக்கே இருக்க, ஒரு காரணமும் இல்லாமல் ஈசுவரனுடைய விபூதியை நலிவதே!' என்ற வார்த்தையை நினைப்பது. பக். 163.

சீயர், இத் திருப்பாசுரத்தை அருளிச்செய்யப் புக்கால் "நோவ" என்று அருளிச்செய்யும் அழகு காணும். 'நோவ' என்கிறார் காணும் ஆழ்வார், தம் திருமேனியிலே கயிறு உறுத்தினாற்போலே. பக். 195.

ஒரு தீர்த்தத்தினன்று ஞாயிறுபோது ஆண்டானும் எம்பாரும் திங்களிலே சந்தித்து, 'யான் எனது என்னும் செருக்

கினால் மலினமாக்கப்பட்டவராய் இருப்பார் பத்துக்கோடிபேர் நடுவே, அதி சுகுமாரமான திருமேனியைக் கொண்டு பத்து நாள் எழுந்தருளி, அபாயம் இல்லாமல் புக்கருளப் பெற்றபடி கண்டதே! என்று ஒருவரை ஒருவர் தண்டனிட்டுத் தழுவிக் கொள்ளாநிற்கக் கண்டேன்' என்று சீயர் அருளிச்செய்வர். பக். 213.

ஆளவந்தார், மணக்கால்நம்பிபக்கல் எம்பெருமானைக் கேட்டவுடனே, 'உபாயம் இதற்குமேல் இல்லை; இவ்விஷயத்தை இப்போதே நேரே காண்டற்கு விரகு இல்லையோ?' என்றாராம். பக். 239.

எம்பாரை 'மரங்களும் இரங்கக்கூடுமோ?' என்று கேட்க' 'இது அருளிச்செய்த அன்று தொடங்கி எத்தனை பாவசுத்தி இல்லாதார் வாயிலே புக்கது என்று தெரியாது; இங்ஙனே இருக்கச்செய்தே, இயமம் நியமம் முதலிய யோக உறுப்புக்களாலே பதம்செய்யப் பார்த்தாலும் சுக்கான்பருக்கை போலே நெகிழாதே இருக்கிற நெஞ்சுகளும் இன்று அழிகிறபடி கண்டால் சமகாலத்தில் மரங்கள் இரங்கச் சொல்ல வேணுமோ?' என்று அருளிச்செய்தார். பக். 249.

நஞ்சீயர், 'பிள்ளை திருநறையூர்அறையரோடே மூன்று திருவாய்மொழி கேட்டேன், அதில் எனக்கு ஒரு வார்த்தையும் போகாது; ஒரு திருவாய்மொழியைச்சொன்ன அளவிலே அவர் சிதிலராய்க் கண்ணும் கண்ணநீருமாய் இருக்கும் இருப்பை நினைத்திருப்பன்' என்று அருளிச்செய்வர். பக். 287.

அனந்தாழ்வான் சோழகுலாந்தகனிலே பயிர்த்தொழில் செய்துகொண்டிருப்பவனை ஒரு ஸ்ரீ வைஷ்ணவனைக் கண்டு, 'உம்முடைய ஊர் எது?' என்று கேட்க, 'என்னுடைய ஊர் திருக்கோளூர்' என்ன, 'அங்கு நின்றும் போந்தது என்?' என்ன, 'தேகயாத்திரை நடவாமே போந்தேன்' என்ன, 'அவ்வூரில் கழுதையை மேய்த்து ஜீவிக்க மாட்டிற்றிலையோ? நிலைநின்ற ஜீவனத்தை விட்டுப் போந்தாயே!' என்றானும். பக். 287.

எம்பெருமானார் தெற்கே எழுந்தருளாநிற்க, எதிரே வருகின்றாள் ஒரு பெண்பிள்ளையைக் கண்டு 'எங்கு நின்றும்?' என்ன, 'திருக்கோளூரில் நின்றும்' என்ன, 'அவ்வூரில் புக்க பெண்களும் போகக் கடவர்களாயிருப்பர்களோ?' என்று அருளிச்செய்தார். பக். 291.

பிள்ளைதிருநறையூர்அறையரும் பட்டருமாக உள்ளே பிரதக்ஷணம் செய்யாநிற்க, இட்டஅடி மாறி இடமாட்டாதே கண்களாலே பருகுவாரைப்போலேபார்த்துவாழ்ந்துகொண்டு போகிறபடியைப் பின்னே நின்றுகொண்டு அநுபவித்தேன் என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். பக். 311.

ஆச்சானும் ஆண்டானுமாகக் கிழக்கே நடக்கிறபோது, திருப்பேர்நகர்க்குக் கிழக்குப் போகவும்மாட்டாதே, ஏறித் திருவடி தொழவும்மாட்டாதே, திருப்பேர்நகரான் கோயிலைப் பார்த்துக்கொண்டு இருந்தார்களாம். பக். 311.

ஒருநாள் நம்பிள்ளையை, சீயர், கோஷ்டியிலே வைத்துப் போரக் கொண்டாடியருளி, 'தன் சிஷ்யனைத் தான்கொண் டாடாநின்றான்' என்றிராதேகொண்மின்! "கணபுரம் கை தொழும் பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுவரே" என்று பண்டு சொன்னாரும் உளர் காணுங்கோள் என்று அருளிச்செய்தார். பக். 328.

அம்முணி ஆழ்வான், தன்சிஷ்யனைத் தான் தண்டனிடா நிற்குமாம்; 'இது என்?' என்று கேட்க, 'அல்லாத வைஷ்ண வர்களை ஒழுக்கத்தாலே அறியவேணும்; இவர் நான் அறிய வைஷ்ணவர் என்று ஆதரிப்பன்' என்றான். பக். 328.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் நோவிலே, பிள்ளை யுறங்காவில்லிதாசரைக்கொண்டு ஆழ்வான் புக, 'ஆழ்வான் செய்த நெஞ்சாறல் ஆறுவது ஆளவந்தார் ஸ்ரீபாதத்து ஏறப் போனால் அன்றோ என்ற வார்த்தையை நினைப்பது. பக். 343.

அருளாளப்பெருமாள்எம்பெருமானாருடைய அந்திமதசை யிலே, 'திருவுள்ளத்திலே ஓடுகிறது என்?' என்ன, 'ஒரு பறவை பெருமாளுடைய திருவுள்ளத்தைப் புண்படுத்தியபடி என்? என்று கிடந்தேன்' என்றார். பக். 385.

வட தேசத்தினின்றும் போரப் பாடவல்லராயிருப்பார் ஒருத்தர் பெருமாளைத் திருவடி தொழவேணும் என்று வர......போருமோ செய்த தரம் என்று திருவுள்ளமானார். பக். 416.

பிள்ளானுடைய அந்திமதசையிலே நோவு அறிய நஞ்சீ யர் புக்கு இருக்க, 'கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறு காதோ! என்று பலகால் சொல்ல, இதனைக் கேட்டுச் சீயர் அழ, 'சீயரே! நீர் கிடந்து அழுகிறது என்? அங்குப் போய்ப் பெறப் புகுகிற பேறு இதிலும் தண்ணிது என்று தோற்றி இருந்ததோ?' என்று பணித்தான். பக். 436.

நஞ்சீயரை, நம்பிள்ளை ஒருநாள் பஞ்சமோபாயம் என்று கொண்டு ஒன்று உண்டு என்று சொல்லுகின்றார்கள்; நாட்டிலேயும் அங்ஙனே இருப்பது ஒன்று உண்டோ? என்று கேட்டருள, நான் அறிகிலேன்; இனி நான்காவது உபாயந்தான் பகவானேயாயிருக்க, ஆகாயம் என்று கூறப்படுகிற நாராயணனுக்கும் அப்பால் ஒன்றுண்டு என்று சொல்லுவாரைப் போலே, அவனுக்கும் அவ்வருகே ஒன்று உண்டு என்கை அன்றோ, அது நான் கேட்டறியேன் என்று அருளிச்செய்தார். பக். 464.

நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலே அடைந்த ஒருவன், 'எம்பெருமானே உபாயமாகில் சரணாகதிகொண்டு இங்குச் செய்கிறது ஒன்றும் கண்டிலேன்' என்ன, செவியைப் புதைத்து 'நாத முனிகள் தொடங்கி இவ்வளவும் வர நம் ஆசாரியர்கள் பரம ரஹஸ்யமாக உபதேசித்து, ஓரான்வழியாய்க் கொண்டு போந்த இதனை, இதன் சீர்மை அறியாத உனக்கு மஹாபாபியேன் இதனை வெளியிடுவதே!' என்று திருமுடியிலே அடித்துக்கொண்டு திருப்பள்ளி அறையிலே புக்கருளினார். பக். 465.

நஞ்சீயர், ஒருவனுக்கு, பிறர் துக்கத்தைக் கண்டால் சகிக்கமுடியாத தன்மை வந்ததாகில் 'நமக்குப் பகவத்சம்பந்தம் உண்டு' என்று அறுதி இடலாம்; 'அது தக்கது' என்றிருந்தானாகில் 'நமக்குப் பகவத்சம்பந்தம் இல்லை' என்று தனக்கே கைவாங்க அமையும் என்றருளிச்செய்தார். பக்.466.

பட்டர், "நித்தியத்திலே, 'அமுதுசெய்யப்பண்ணும் போது தோத்திரத்தை விண்ணப்பம் செய்வது' என்று இருக்கிறதே, என்ன தோத்திரத்தை விண்ணப்பம் செய்வது?" என்ன, "'அடியேன் மேவி அமர்கின்ற அமுதே', 'பச்சைமா மலைபோல்மேனி' என்பன போலே இருக்கும் திருப்பாசுரங்களை விண்ணப்பம்செய்வது" என்றருளிச்செய்தார். பக். 480.

ஒருநாள் பட்டர், பிள்ளைஅழகியமணவாளஅறையர்க்குத் துவயம் அருளிச்செய்கைக்காக எல்லாரும் செல்லுங்கோள் என்ன, நஞ்சீயரும் எழுந்து சென்று போய், நம்மை 'இராய்' என்றருளிச்செய்திலர் என்று வெறுத்திருக்க, அப்பொழுதே 'சீயர் எங்குற்றார்?' என்று கேட்டருளித் தேடி அழைத்துக் கூட வைத்துக்கொண்டிருந்து துவயத்தை அருளிச்செய்த வார்த்தை என்று சீயர் அருளிச்செய்வர். பக். 491.

---

ஸ்ரீ:

பிற்சேர்க்கை III

—:o:—

# பெரியோர்கள் உரைத்த உரைநயங்கள்

## உள்ள இடங்கள்



———

